# அமுதசுரபி
## தீபாவளி மலர் '93

எங்கள் தமிழ் மொழி எங்கள் தமிழ் மொழி
என்றென்றும் வாழியவே — பாரதியார்

விலை ரு: 35/-

அமுதசுரபி 46ஆவது தீபாவளி மலர் நவம்பர் 1993 இதழின் சிறப்பு இணைப்பாக வெளிவருகிறது

ஆசிரியர் : கலைமாமணி விக்கிரமன்   பதிப்பாளர் : ஏ.வி.எஸ். ராஜா
கௌரவ இலக்கிய ஆலோசகர் : என்.வி. சுப்ரமணியன், த.ஆர்.டி.எஸ்
மலர் ஆப்செட் அமைப்பு : சிவகுமார்

அமரர் சில்பி கோட்டுச் சித்திரங்கள் நன்றி :
ஆனந்த விகடன் தீபாவளி மலர்

கவிதைகள்



வண்ண ஓவியங்கள் :



வண்ணப் போட்டோ :

## சிறுகதைகள்



## கட்டுரைகள்



மேலட்டை விளக்கம் : ஸ்ரீவேணுகோபாலன்

முகப்புச் சித்திர விளக்கம் : குன்றக்குடி பெரிய பெருமாள்

மலரை அலங்கரித்த ஓவியர்கள் : (அமரர்) சில்பி, கோபுலு, வீரு, ஸுபா, மாயா, ஜி.கே. மூர்த்தி, ஜெயராஜ், உமாபதி, மாருதி, ராமு, மணியம் செல்வன், ஆர்ஸ், கரோ, ஷ்யாம், வேதா, சுதர்ஸன், ராம், கலைமதி, கவி, சின்னச்சிறு கோபு, ஸ்கார்ப்பியோ.




ஓவியம் : சில்பி

ஸ்ரீ கற்பக விநாயகர் (பிள்ளையார்பட்டி)

# பாரதி வேண்டிய வரம்


பால கணபதி


பக்தி கணபதி


சக்தி கணபதி


வீர கணபதி


உச்சிஷ்ட கணபதி


விஜய கணபதி

கற்பக விநாயகக் கடவுளே, போற்றி!
சிற்பர மோனத் தேவன் வாழ்க,
வாரண முகத்தான் மலர்த்தாள் வெல்க,
ஆரண முகத்தான் அருட்பதம் வெல்க,
படைப்புக் கிறையவன் பண்ணவர் நாயகன்
இந்திர குரு என திதயத் தொளிர்வான்
சந்திர மவுலித் தலைவன் மைந்தன்
கணபதி தாளைக் கருத்திடை வைப்போம்;
குணமதிற் பல வாம்; கூறக் கேளீர்:
உட்செவி திறக்கும்; அகக்கண் ஒளிதரும்;
அக்கினி தோன்றும்; ஆண்மை வலியுறும்;
திக்கெலாம் வென்று ஜயக் கொடி நாட்டலாம்;
கட்செவி தன்னைக் கையிலே யெடுக்கலாம்;
விடத்தையும் நோவையும் வெம்பகை யதனையும்
துச்ச மென்றெண்ணித் துயரிலா திங்கு
நிச்சலும் வாழ்ந்து நிலை பெற்றோங்கலாம்;
அச்சந் தீரும்; அமுதம் விளையும்;
வித்தை வளரும்; வேள்வி யோங்கும்;
அமரத் தன்மையு மெய்தவும்
இங்கு நாம் பெறலாம்; இஃதுணர் வீரே.



எனக்கு வேண்டும் வரங்களை
யிசைப்பேன் கேளாய் கணபதி,
மனத்திற் சலன மில்லாமல்,
மதியிலிருளே தோன்றாமல்,
நினைக்கும் பொழுது நின் மவுன
நிலை வந்திட நீ செயல்வேண்டும்,
கனக்குஞ் செல்வம் நூறு வய
திவையுந்தர நீகடவாயே!

[விநாயகர் நான்மணி மாலை]





## மகாகவி பாரதி


சித்த கணபதி


விக்ன கணபதி


ஹேரம்ப கணபதி


க்ஷிப்ர கணபதி


துவிஜ கணபதி


நிருத்த கணபதி


ஊர்த்துவ கணபதி


லட்சுமி கணபதி


மஹா கணபதி


தருண கணபதி

# கற்பக விநாயகக் கடவுளே போற்றி!

ஓவிய மாமணி அமரர் 'சில்பி'யின் கைவண்ணக் கவின்மிகு முகப்போவியமாய், மலரில் ஓங்காரத் திருவுருவாக எழுந்தருளியுள்ள கற்பக விநாயகரைக் கண்டு தரிசிக்கிறோம்.

'கற்பக விநாயகர்' என்றும், 'தேசி விநாயகர்' என்றும், பொற்பதம் பணிந்து போற்றித் துதிக்கப் பெறும் அற்புதப் பிள்ளையார், பிள்ளையார் பட்டித் திருத்தலத்தில் வீற்றிருந்து, தெள்ளிய மனத்தினர்க்கெல்லாம் திருவருள் வழங்கி வருகின்றார்.

பிள்ளையார்பட்டி, பசும்பொன் தேவர் திருமகன் மாவட்டத்தில், திருப்புத்தூர் காரைக்குடிப் பெருவழியில் குன்றக்குடிக்கு அருகே உள்ளது. 'பிள்ளையார்பட்டி' என இந்தச் சிற்றூருக்கு இப்போது பெயர் வழங்கினும், 'எருகாட்டூர்', 'மருதங்குடி', 'திருவீங்கைக்குடி', 'திருவீங்கைச்வரம்', 'இராசநாராயணபுரம்' என வேறு ஐந்து பெயர்கள் இருந்ததைக் கல்வெட்டுகள் கூறுகின்றன.

மலையைக் குடைந்தமைத்துள்ள குடைவரைக் கோயிலுக்குள் புடைச் சிற்ப மூர்த்தியாகத் திகழும் கற்பக விநாயகப் பெருமான், 6 அடி உயர முள்ள கம்பீரமான தோற்றப் பொலிவுடன், இருந்த திருக்கோலம் கொண்டு காட்சி தருகின்றார்! பெருமானின் துதிக்கை வலம் சுழித்ததாக அமைந்துள்ளது. எல்லா இடங்களிலும் விநாயகப் பெருமான் நான்கு கரங்களைக் கொண்டிருப்பார் அல்லவா! துதிக்கை ஒன்று. ஆக, 'ஐந்து கரத்தனை ஆனைமுகத்தனை' என்று தானே போற்றி வழிபடுகிறோம்! பிள்ளையார்பட்டிப் பெருமான் இரண்டே கரங்களைத்தான் கொண்டுள்ளார்! அத்துடன், கரங்கள் அங்குச பாசங்கள் இல்லாமல் விளங்குகின்றன. வலக்கரத்தில் மோதகம் வைத்துள்ளார். இடக் கரத்தை இடையில் நாட்டிப் பெருமிதக் கோலம் பூண்டுள்ளார். பெரு வயிறு, ஆசனத்தில் படியாமல், ஆசனம் போன்று மடிந்திருக்கும் திருப்பாதங்களில் படிந்துள்ளது. திருமேனியில் ஆண், பெண் ஒன்றிப்பை எடுத்துக் காட்ட வலது தந்தம் நீண்டும், இடது தந்தம் குறுகியும் உள்ளன. பெரும்பான்மையும், தமிழ் நாட்டிலுள்ள பிள்ளையார், கிழக்கு நோக்கியே எழுந்தருள் செய்திருப்பதை அறிவோம். பிள்ளையார்பட்டி விநாயகப் பெருமானோ, வடதிசை நோக்கி எழுந்தருளி உள்ளார்.

"தத்துவமாகிய பிரணவமே" என்பதுவும், 'ஓமெனும் நிலையில் ஒளியாத் திகழ்வான்" என்பதுவும் 'விநாயகர் நான்மணி மாலை'யில் மகாகவி பாரதி போற்றித் துதிக்கும் திருவாக்குகள். ஆம், பிரணவத் திருமேனி பெற்ற பெருங்கருணைக் கடவுளராக விநாயகப் பெருமான் காட்சி தருகிறார்! ஓங்கார ஒலிக்குரிய வரிவடிவமான 'ஓம்', நம் கண்களில் தெரியக் காட்டப் புண்ணிய மூர்த்தியின் யானைத் தலையே, பெரிதும் பொருத்தமுடையது. குறிப்பாகப் பிள்ளையார்பட்டிப் பெருமானின் துதிக்கை, வலப் பக்கம் சுழித்து வலம்புரியாகத் திகழ்வதால், ஓங்கார சொருபத்தை நீங்காத திருமேனியாய்க் காட்சி தருகின்றது.



முகப்புச் சித்திர விளக்கம்

வலப்புறத் தந்தம் ஒடிந்த நிலையில் காணப்படுவதால், 'ஓ' என்ற எழுத்தின் தொடக்கச் சுழி உருவாகி விடுகிறது. அங்கிருந்து மேல்நோக்கி, வலஞ் சுழித்து இடக்காதுவரை சென்று, வளைந்த இடத் தந்தத்தின் வழியாகக் கீழ் நோக்கித் துதிக்கை நுனிவரைக் கோடிட்டுப் பார்த்தால், 'ஓ' என்ற வரிவடிவம் தோற்றம் தரும். பெருமானின் வலக்கரத்தில் உள்ள மோதகம் 'ம்' என்ற வடிவத்தைச் சுட்டுகிறது. ஆக, பிள்ளையார்பட்டி 'கற்பக விநாயகர்' என்ற தேசி விநாயகப் பெருமானின் ஞானத் திருமேனி 'ஓம்' எனும் பிரணவ ஒலிக்குரிய வரிவடிவத்தைக் கண்களில் புலப்படுத்தி விடுகின்ற கடவுளர் திருவுருவாக உருவாக்கம் பெற்றுள்ளது.

'பிள்ளையார் வழிபாடு' தமிழகத்தில் எப்போது தோன்றியதோ, அப்போதே இந்த அற்புத மூர்த்தியின் சிற்பத் திருமேனி தோற்றம் பெற்றிருக்கலாமென ஆய்வாளர் கருதுகின்றனர். இது போன்றதொரு விநாயகர் சிற்பம், வேறெங்கும் காணக்கிடைக்க இல்லையென்று தொல்பொருள் ஆய்வறிஞர் இரா. நாகசாமி குறிப்பிட்டுள்ளார்.

குடைவரைக் கோயிலில் வடக்கு நோக்கி எழுந்தருளியுள்ள பிள்ளையார் பட்டிப் பெருமானே, தமிழ்நாட்டின் 'மூத்த பிள்ளையார்', 'முதற் பிள்ளையார்' எனும் பெருமைக்குரியவர்! சிவமும் உமையும் பெற்ற முதற் பிள்ளையாகையால், விநாயகர் 'மூத்த பிள்ளையார்' என அழைக்கப் பெறுகின்றார். ஆனால் பிள்ளையார்பட்டிப் பெருமானை 'மூத்த பிள்ளையார்' எனக் குறிப்பிடுவது – தமிழகத்தில் முதன்முதலாகச் சிற்பத் திருமேனி கொண்ட சிறப்புக் கருதியே! பெருமான் கல்வெட்டுகளில், 'தேசி விநாயகப் பிள்ளையார்' என்றே குறிப்பிடப் பெறுகின்றார். 'தேசி' என்றால் 'அழகு ஒளிரும்' எனப் பொருள் தரும்; 'விநாயகர்' என்றால் 'ஒப்புயர் இல்லாத் தலைவர்'! ஆக, காலத்தாலும், கருத்தாலும் அருளுகின்ற கருணையாலும் ஒளிரும் ஒப்பற்ற தலைவராகத் திகழ்கிறார் பிள்ளைார் பட்டிக் கற்பக விநாயகக் கடவுளர்!

ஏறத்தாழ 1500 ஆண்டுகளுக்கு முன் தோற்றம் பெற்ற தேசி விநாயகப் பிள்ளையார் திருக்கோயில், 700 ஆண்டுகளுக்கு முன்னர், சிவ நலமும் செல்வ வளமும் பெற்ற நகரத்தார் சமுகத்திற்கு உரிமையுடைய திருத்தலமாகப் பாண்டிய மன்னரால் உவந்து அளிக்கப் பெற்றுள்ளது.

நகரத்தார்களின் குல மரபுக் கோயில்கள் ஒன்பதில், பிள்ளையார் பட்டியும் ஒன்று. குடைவரைக் கோயிலுக்கு முன்னே, சிற்ப அற்புதங்கள் நிறைந்த சீரிய கோயில் திருப்பணிகள், நகரத்தாரால் சிரத்தையுடன் எடுக்கப் பெற்றுள்ளன. 'கோயில் பரிபாலனம்' எத்தகைய முறையில் அமைய வேண்டுமென்பதற்கு அரிய எடுத்துக்காட்டாக உரிய நெறியில் நகரத்தார் பிள்ளையார் பட்டித் திருக்கோயிலை நிர்வகித்து வருகின்றனர்.

கற்பக மூர்த்தியாம் தேசி விநாயகத் தெய்வத்தின் பொற்பதம் வணங்குவோம். அற்புதக் கீர்த்தியும், ஆனந்த வாழ்வும் பெறுவோம்.

குன்றக்குடி
பெரியபெருமாள்

# கடல்மல்லை ஒரு கனவு



**1944** ஆம் ஆண்டு. என் உயர் நண்பர் நா. சுப்ரமண்யமும் (ஓவியர் ஸுபா) நானும் மாமல்லபுரம் சென்று முதல் முறையாக அந்தக் கனவு புரியைக் கண்டு வியந்து நின்றதை, 50 ஆண்டுகள் கழித்து இன்று மீண்டும் நினைவுப்படுத்திக் கொள்ளும்போது அந்தக் கலை யாத்திரை ஒரு கனவாக மாறி விடக் கூடாது என்று நினைக்கிறேன்.

இரண்டாம் உலகப் போர் நடந்து கொண்டிருந்த காலம். பயணம் என்பது ஒரு துன்பமாக இருந்த சூழ்நிலை.

'விட்ட குறை வந்து தொட்டாச்சு விதியின் எழுத்தைக் கிழித்தாச்சு' என்ற அமர வரிகளுடன், மாமல்லபுரம் எனும் சொப்பன உலகத்தைப் பற்றி, அமரர் 'கல்கி', 'ஆனந்த விகட'னில் எழுதிய கட்டுரைதான், மாமல்லபுரத்தைக் காண வேண்டும் என்ற பேராவலை என் இளம் உள்ளத்தில் துளிர்விடச் செய்தது. (இளம் உள்ளம் என்று சொல்லக் காரணம் அன்று வயது பதினாறு. இப்போது ஐந்து தலை முறைகளுக்குப் பிறகு பழைய சம்பவத்தை அசை போடுகிறேன். சைதாப்பேட்டை ஆட்சியாளர் அலுவலகத்தின் நூலகத்தினின்று, தட்டெழுத்துச் செய்யப்பட்ட பிரதி ஒன்றை நண்பர் வடபத்திரசாயி கொண்டு வந்து கொடுத்தார். ஆங்கிலத்தில் தட்டெழுத்து செய்யப்பட்ட கட்டுரைப் பிரதியின் ஐந்தாவது 'கார்பன்' நகல் அது. மின் விளக்கு இல்லா என் வீட்டில் சிம்மணி விளக்கில் மிகவும் கவனமாகப் படித்துப் பார்த்து, மாமல்லபுரத்தின் எழில் கொஞ்சும் சிற்பங்களைப் பற்றி ஓரளவுக்குத் தெரிந்து கொண்டேன். என் நண்பர் ஸுபாவுக்கும் அதுபோல் ஆவல் இருக்கிறது என்பதைப் புரிந்து கொண்டேன். இருவருக்கும் நட்பு உறுதியானது அந்தக் காலகட்டத்தில்தான்.

'மகாபலிபுரம்' என்று அந்த நாளில் அழைக்கப்பட்டு வந்த கனவு நகரத்தைப் பற்றி, அப்போது பல விதக் கதைகள் நிலவும்.

மகாபலிச் சக்ரவர்த்தியைத் தொடர்புப் படுத்தி மகாபலிபுரம் என்ற பெயர் வந்ததற்கான காரணம் கற்பிக்கப்பட்டிருந்தது. பரவலாக அந்தக் கதை மக்களிடையே நிலைத்திருந்தது.

'மகாபலிபுரம்' என்றே பேருந்துகளில் குறிக்கப்படும். செங்கல்பட்டு சந்திப்பில், 'திருக்கழுக்குன்றம், மகாபலிபுரம் சங்கு தீர்த்தத்திற்கு இங்கே



இறங்கவும்' என்றே பெயர்ப் பலகை எழுதப்பட்டிருந்தது.

'மகாபலிபுரத்தை' மாமல்லபுரம் என்று எங்கும் பேசப்படுவதற்கு, எழுதப்படுவதற்கு, வழிவகுத்தவர் கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி என்று இந்தத் தலைமுறையினருக்குச் சொல்லக் கடமைப்பட்டுள்ளேன்.

தமிழ்நாட்டு வரலாற்றில் ஏறத்தாழ ஐந்நூறு ஆண்டுக்காலகட்டத்தில் ஓர் உயர்ந்த இடத்தை நிலை நாட்டிக் கொண்டவர்கள் பல்லவர்கள்.

(பல்லவர்கள் என்ற பெயர் எப்படி ஏற்பட்டது. அவர்கள் பேசிய மொழி என்ன என்ற ஆராய்ச்சியைப் பற்றிப் பிறகு விவாதிப்போம்)

பல்லவ மன்னர்களுள் மிகப் புகழ்பெற்றவர் மகேந்திர வர்மன். அடுத்து அவர் மகன் நரசிம்மன். அவருக்கு மாமல்லன் என்ற புகழ்ப் பெயர் உண்டு. அவர் பெயரால் பிற்காலத்தில் வழங்கப்பட்டது மாமல்லபுரம். அதற்கு முன்பு 'கடல்மல்லை' என்று பெயர். பிற்காலத்தில் மருவி 'மகாபலிபுரம்' ஆகியது. மகாபலிபுரத்தை மாமல்லபுரம் என்று அழைக்கச் செய்ய நாற்பது ஆண்டுக்கால பிரசாரம் தேவைப்பட்டது.

'ஸெவன் பகோடாஸ்' அதாவது ஏழு கோபுரங்கள் நிறைந்த நகரம் என்று மேல் நாட்டவர்கள் அழைத்தனர். கப்பலில் மாமல்லபுரத்தைக் கடக்கையில் தொலைவில் தெரிந்த ஏழு கோபுரங்கள் அல்லது விமானங்களை வைத்துக் கொண்டு ஏழு கோபுர நகரம் என்று மேல்நாட்டு மாலுமிகள் பெயர் சூட்டினர்.

பஞ்சபாண்டவர் ரதம் எனப்படும் ஐந்து விதக் கோயில், கடற்கரைக் கோயிலின் இரண்டு விமானங்கள் இவற்றைத் தொலைவில் இருந்து அவர்கள் பார்த்து ஏழு கோபுரப் பட்டிணம் என்று பெயர் சூட்டியிருக்கலாம்.

விக்கிரமன்



மகாபலிபுரம். பஞ்சபாண்டவர் ரதம். திரௌபதி நீராடிய இடம். மகாபலி யாகம் செய்த இடம் என்று பல கற்பனைகள் நிலவக் காரணமாயிருந்த அந்தக் கனவு நகரத்தைக் காண வேண்டும் என்ற துடிப்பு எங்கள் இருவருக்கும் ஏற்பட்டதில் வியப்பில்லை.



இப்பொழுது மாமல்லபுரத்திற்கு ஏராளமான போக்குவரத்து வசதிகள். திருப்போரூர் செல்லாமலே பயணத் தொலைவை வெகுவாகக் குறைக்கக் கடற்கரையை ஒட்டிச் சாலை போடப் பட்டு விட்டது.

ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு, நண்பரும் நானும் முதன் முறையாக, விபரம் அதிகம் கேட்டறியாமலே, தாம்பரம் ரயில் நிலையத்திலிருந்து செங்கல்பட்டிற்குச் சென்றோம். அங்கிருந்து திருக்கழுக்குன்றம் (திருக்கழுக் குன்றம் அல்லது திருக்கழிக் குன்றம்?) செல்லப் பேருந்து நான்கு மணி நேரத்திற்கு ஒரு முறைதான் என்றறிந்து ஏறத்தாழ பத்து மைல் தொலைவை நடந்தே சென்று விட்டோம்.

திருக்கழுக் குன்றம் பாடல் பெற்ற திருத்தலம். மலைமீது உச்சி வேளைக்கு இரு கழுகுகள் வந்து பண்டா தரும் உணவைச் சாப்பிடுகின்றன என்று கேள்விப்பட்ட நாங்களும் செங்குத்தான படிக்கட்டுகளில் ஏறி உச்சியிலுள்ள கோயிலை அடைந்தோம்.

கழுகு வந்ததா! சாப்பிட்டதா வேறு கதை. பிறகு சொல்கிறோம் திருக் கழுக்குன்றத்துச் சிவன் கோயில் மிகப் பெரியது. பெரிய கோபுரம். உயரமான மதில் சுவர். திருச்சுற்றில் பயணிகள் ஆயாசப்படுத்திக் கொண்டிருந்தார்கள். சங்கு தீர்த்தம் திருக்குளம் பெரியது. மக்கள் குளித்துக் கொண்டும், துணி துவைத்துக் கொண்டும் இருந்தார்கள். குளத்தைச் சுற்றிலும் பலவிதப் பண்டங்கள் விற்கும் கடை. புழுதி, அழுக்கு, கூச்சல் குறைவில்லை.

திருக்கழுக்குன்றத்தில் இருந்து பேருந்து மகாபலிபுரம் செல்வதாகவும் மாலை நான்கு மணிக்குப் புறப்படும் என்றும் அறிந்தோம். காரி பஸ். 'நான்குமணி' பேருந்து நிற்குமிடத்தில் ஏராளமான கூட்டம். குத்துச் சண்டை தெரிந்திருந்தால் பஸ்ஸில் ஏறலாம் - எங்களுக்கு அந்த அனுபவம் இல்லை. நடராசா ஸர்விஸில் நடந்தோம்.

மாலைக் கதிரவன் எங்கள் முதுகுப் புறத்தைத் தடவிக் கொடுக்க மஞ்சள் வெயில் சாலையைக் குளிப்பாட்டிக் கொண்டிருக்க நாங்கள் இலட்சியத்துடன் நடந்தோம்.

நடந்தோம், நடந்தோம், நடந்து கொண்டே இருந்தோம். இருள்கவிழ்ந்தது. நல்ல வேளையாக நிலாக் காலம். சாலையில் சிறிது தூரம் வரை மக்கள் நடமாட்டம். பிறகு ஒரே அமைதி. தென்னந் தோப்புகள் வயல்கள். சவுக்குத் தோப்புகள். சவுக்குத் தோப்பிற்குள் காற்று நுழைந்து மற்றொரு கடலோசையை எழுப்பும்.

அந்த நடைப் பயண அனுபவத்தைத் தனியே விவரித்து எழுதினால் பத்துப் பன்னிரண்டு பக்கங்கள் வரும். இந்தக் கட்டுரை பயணக் கட்டுரை அன்று. அசை போடும் கட்டுரை.

வழிப்பயணக் களைப்பை மறக்க பேசிக் கொண்டே சென்றோம். தேசியப் போராட்டம், சிறுகதை ஆராய்ச்சி, அடுத்த தமிழ்ச் சுடரில் (கையெழுத்துப் பத்திரிகை') எழுத வேண்டியவைப் பற்றி எல்லாம் பேசினோம். பிறகு குரல் எடுத்துப் பாடினேன். எனக்குத் தெரிந்தது பாரதியார் பாடல்கள்தாம். ஆகா! என் குரலுக்கு எதிரொலியாக ஓரிரு குரல்கள்.

"ஸுபா! அங்கே யாரோ பாடுகிறார்கள்" என்றேன்.

"யாரும் பாடவில்லை, விழிகள் தணல் போல் ஜ்வலிக்க அதோ பார் நரி ஊளை இடுகிறது" என்றார் நண்பர்.

சற்றுக் கம்பீரமாக ஆலாபனம் செய்தேன். நரிகள் இருந்த இடம் தெரியவில்லை.

✧ ✧ ✧

இன்று மாமல்லபுரம் ஒரு பொழுது போக்கு நகரமாகி விட்டது. வார ஓய்வுக்கு உல்லாசமாகக் கழிக்க மாமல்லபுரம் செல்கிறார்கள். பெரிய பெரிய ஓட்டல்கள். ஆண்டுக்கு ஒரு முறை சுற்றுலாத் துறையினர் விழா நடத்துகின்றனர். சந்தடி மிகுந்த நகர



மாகி விட்டதாகக் கூறுகிறார்கள். நான் சென்று இருபது ஆண்டுகளுக்கு மேலாகிவிட்டன. பழைய அமைதி இல்லை என்று எண்ணுகிறேன். மாமல்லபுர எல்லையிலேயே பேருந்துகள், வண்டி வாகனங்களை நிறுத்தச் செய்ய வேண்டும், கடைகளை அப்புறப்படுத்த வேண்டும் என்று 1972–73இல் சட்ட சபையில் கேள்வி எழுப்புமாறு சட்ட சபை உறுப்பினர் வை. பாலசுந்தரம் அவர்களைக் கேட்டுக் கொண்டோம். செல்வாக்கு மிகுந்த உணவு விடுதி, கடைக்காரர்கள் ஆதாயத்தை இழப்பார்களா? இன்றும் இன்னும் கூச்சல், ஆரவாரம், கும்மாளம், கேளிக்கை • காதலர்களின் சொர்க்கம் என்று சொல்கிறார்கள். இருபதாண்டுகளில் மாமல்லபுரம் சந்தடி மிகுந்து பொழுது போக்கு நகரமாகிவிட்டதாகக் கூறுகிறார்கள்.

ஆனால் அங்குள்ள மகிஷாசுர மர்த்தனி சிற்பத்தைப் பார்த்தவர்கள் அந்தச் சிற்பத் தொகுதியை விட்டுப் பிரிய மாட்டார்கள். பெண்மையின் வெற்றியைக் கூறும் சிற்பம் அது.

மாமல்லபுரத்தை அடையும்போது நடுநிசியாகியிருந்தது. உயரமாக நான்கு தூண்களுடன் கம்பீரமாக நின்ற விஜயநகர அரசர் கால மண்டபம் ஒன்றில் படுத்தோம். அசதியில் தூங்கிவிட்டோம். கனவு–கனவு–கனவு.

மறுநாள் காலையில், கடற்கரையில் கதிரவன் உதயத்தைக் கண்டு மகிழ்ந்தோம். அந்தக் கடற்கரையில் அமர்ந்து கவிதை ஒன்றை எழுதினேன். (கவிதை எல்லாம் அப்பொழுது எழுதுவேன்) அந்த சொப்பன புரியை மிக ஆவலுடன் சுற்றிப் பார்த்தோம். ஆவல் தீரவில்லை. ஆசை நீங்கவில்லை. மீண்டும் மீண்டும் மாமல்லபுரம் சென்றோம். ஓவியர் சங்கருடன் சென்றோம். 'மாமல்லபுரம் – வழி குறிப்புப் புத்தகம்' என்று ஒரு சிறு நூல் 1948இல் வெளியிட்டேன். படங்கள், சித்திரங்கள் ஸுபா! அந்த இனிய காலம் மீண்டும் வருமா? பொய்யாய்ப் பழங்கதையாய் மெல்லப் போயினவே.

ஒருமுறை பிரபல எழுத்தாளர் (அமரர்) த.நா. குமாரஸ்வாமியுடன் நான்கைந்து எழுத்தாளர்கள் மாமல்லபுரம் சென்று ஒரு பௌர்ணமி இரவை அங்கே கழித்தோம்.

**கோடு கொண்டெழும் திரைகடற்**
**பவளமென் கொழுந்து**
**மாடு மொய்வரைச் சந்தனச் சினைமிசை**
**வளரு**
**நீடு நெய்தலும் குறிஞ்சியும் புணர் நிலம்**
**பலவால்**
**ஆடுநீள் கொடி மாடமல்லையே –**

என்று சேக்கிழார் கண்டுகளித்த மாமல்லபுரத்தை இன்று நினைத்துப் பார்க்கிறேன்.

**பிணங்களிடு காடதனுள் நடமாடு**
**பிஞ்சகனோடு**
**இணங்குதிருச் சக்கரத் தெம்பெருமானார்க்**
**கிடம் விசும்பில்**
**கலங்களியங்கு மல்லைக் கடல்மல்லைத்**
**தலசயனம்**
**வணங்கு மனத்தாரை வணங்கு என்றன்**
**மடநெஞ்சே**

என்று திருமங்கை ஆழ்வார் கண்டுகளித்த மாமல்லபுரத்திலுள்ள கடற்கரைக் கோயிலை மீண்டும் நினைத்துப் பார்க்கிறேன்.

குடைவரை மண்டபங்களிலுள்ள அதிசயச் சிற்பங்களும், பகீரதன் தவம் – பெரும் மதிள் போன்ற பாறையில் செதுக்கப்பட்ட புடைச்சிற்பங்களும், வராகப் பெருமாள் கோயிலிலுள்ள பல்லவ அரசர், பட்டத்தரசி சிற்பங்களும் ஓங்கி உலகளந்த உத்தமன் சிற்பமும் கம்பீரமான யானையும், மாடக் கோயிலும், கலங்கரை விளக்கமும் – அன்று கண்டவை இன்றும் கனவுக் காட்சியாக என் மனத்தில் நின்று நிலவுகின்றன.

மாமல்லபுரம் – கடல்மல்லைச் சிற்ப அற்புதங்கள் நிறைந்த ஓர் கனவு நகரம். கனவாகக் கரைந்து கேளிக்கை நகரமாகி விட்டதே!

# சென்னை ஸ்ரீ காளிகாம்பாள்

சர்வவியாபினியான அன்னை பராசக்தி பல்வேறு திருத்தலங்களில் பல்வேறு திருநாமங்கள் கொண்டு காட்சி தருகிறாள். காஞ்சி மாநகரில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ காமாட்சி தனது இச்சா சக்தியால் பன்னிரண்டு திருத்தலங்களில் காட்சி தந்து கருணை புரிகின்றாள். அவ்வண்ணம் அமர்ந்த திருத்தலங்களில் ஒன்றுதான் காளிகாம்பாள் காமடேஸ்வரர் திருத்தலமாகும். அன்னை காமாட்சிக்குச் சென்னையில் ஸ்ரீ காளிகாம்பாள் என்பது திருநாமமாகும்.

ஸ்ரீ காளிகாம்பாள் ஆதியில் பிரதிஷ்டையாகி அருள்புரிந்த இடம், தற்சமயம் அரசாங்க அலுவலகங்கள் அமைந்திருக்கும் செயின்ட் ஜார்ஜ் கோட்டை என்றும், சென்னைக் குப்பம் என்றும் வழங்கிய பகுதி என்பது வரலாறு. ஏறத்தாழ 400 ஆண்டுகளுக்கு முன்னால் கிழக்கிந்திய கம்பெனியார் இப்பகுதியைத் தம் வணிக நோக்கத்திற்காக வாங்கிப் பயன்படுத்திய போதும் ஆட்சியைப் பிடித்தபோதும் படிப்படியாய் இப்பகுதி இராணுவப் பகுதியாகிவிட்டது. தம்மிடம் பணியாற்றிய சுதேசிகள் மாகாளியைக் கோட்டையில் வைத்து வழிபடுவதில் இருந்த சிரமம் கருதி, வேறு இடத்திற்குக் கொண்டு செல்ல அனுமதித்ததோடு அனைத்து வசதிகளையும் பக்தர்களுக்குச் செய்து தந்தனர். அதன் பின்னரே விஸ்வகர்மா இனத்தவர் தாம் வழிபட்டு வந்த அன்னை ஸ்ரீ காளிகாம்பாளை தம்பு செட்டி தெருவில் ஸ்தாபித்து வழிபடத் தொடங்கினர்.

காளிகாம்பாளுக்குக் கோட்டையம்மன் என்ற பெயரும் வழங்கப்படுகிறது. அன்னையைப் பக்தர்கள் செந்தூரம் பூசி வழிபட்டதால், சென்னம்மன் என்றும் அழைக்கின்றனர். சென்னை என்கிற பெயர் கூட இத்திருநாமத்திலிருந்து வழங்கப்பட்டதாகும். சத்ரபதி சிவாஜி சென்னையில் காளிகாம்பாளை வழிபட்டுச் சென்ற வரலாறு கூட இருக்கிறது. மாக்கவி பாரதி அன்னை ஸ்ரீகாளிகாம்பாள் மீது ஆழ்ந்த பக்தி கொண்டவர். அன்னையின் சன்னிதியின் முன்னால் அடிக்கடி தோன்றி "யாதுமாகி நின்றாய் காளி எங்கும் நி நிறைந்தாய்" என்று பாடிப் பரவசம் கொள்வார்.

ஸ்ரீ அம்பாளின் பாதத்தில் ஸ்ரீசக்ரம் (அர்த்தமேரு) பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. சக்தி சொருபியாய்த் திகழும் அன்னையின் அருள் பெற்றுய்ந்தோர் அநேகர். இன்றும் எண்ணற்ற பக்தர்கள் குறிப்பாகப் பெண்கள் ஏராளமாக வழிபட்டுச் செல்வது கண்கொள்ளாக் காட்சியாகும். கன்னிப் பெண்களுக்குக் கல்யாணமும், குழந்தையில்லாதவர்களுக்குக் குழந்தைப் பேறும் அன்னை அருளுவதாய் மக்கள் நம்பி நிறைவு பெறுகின்றனர். ஸ்ரீ சக்கரரதம் எனப்படும் வெங்கலக் கின்னத் தேரில் அன்னை பவனி வருவது காட்சிக்கினியதாய் இருக்கும்

- அஸ்வின்

# உன் முகமே ஒரு தாமரை!

கம்பர், ஒட்டக்கூத்தர், காளமேகம் போல் பிரசித்திச் பெற்ற கவிஞர்களை சுற்றிப் பல கதைகள் உண்டாகி விடும்.

இது போல் வடமொழியில் பிரசித்தி பெற்ற மகாகவி காளிதாசரைச் சுற்றியும் கதைகள் உண்டு.

காளிதாசரை ஆதரித்தவர் போஜ மகாராஜர்! போஜன் சிறந்த ரசிகர்! அவர் சபையில் கவிஞர்கள் எப்போதும் குழுமி இருப்பார்கள். போஜனுக்குக் காளிதாசர்மீது உயிர்! அந்த மகாகவி இல்லை என்றால் எதையோ இழந்தவர் போல் சோர்ந்து விடுவார். முகத்தில் புன்னகைகூட வராது.

இந்த போஜனுக்கும் காளிதாசருக்கும் இடையே எப்படியோ ஒரு சண்டை மூண்டுவிட்டது. காளிதாசன் இரவுக்கு இரவே ஊரை விட்டுப் போய் விட்டார்.




அட்டை :
ஓவியம் :

போஜ ராஜாவால் அந்த வருத்தத்தைத் தாங்க இயலவில்லை. நாடெங்கும் காளிதாசரைத் தேட ஆட்களை அனுப்பினார். ஆனால் பாவம்! யாருமே அந்தக் கவியைக் கண்டு பிடிக்க முடியவில்லை.

போஜ ராஜா பின்னர் ஓர் உத்தி செய்தார். தமது கருத்துக்குக் கவிதை எழுதினால் லட்சம் பொன் தருவதாக வாக்களித்தார்.

தாமரைக்குள் இரு தாமரை என்பதை வைத்துக் கவிதை எழுத வேண்டும். அதுதான் நிபந்தனை.

யாரும் கண்டு பிடிக்காத ஓர் ஊரில் காளிதாசர் தலைமறைவாக இருந்தார். ஆனால் அதே ஊரில் ஒரு தாசி இருந்தாள். அவர் காளிதாசரைக் கண்டு பிடித்து விட்டாள். போஜ அரசர் அறிவித்த போட்டி அவளுக்கு ஆசையைக் கொடுத்தது. நேராகக் காளிதாசரிடம் சென்றாள்.

காளிதாசரைக் கண்டு பிடித்து விட்டாலும் அவரை அறிந்ததுபோல் அவள் காட்டிக் கொள்ளவில்லை.

"ஐயா! ஒரு தாமரை, அதற்குள் இரு தாமரைகள் என்று பொருள் வரும்படி ஒரு செய்யுள் கூறுங்கள்" என்று கூறினாள்.

காளிதாசர் அவளைப் பார்த்தார். தாசி வெகு அழகாக இருந்தாள். கண்கள் இரண்டும் வெகு கவர்ச்சியாக இருந்தன. அவளைப் பார்த்ததுமே காளிதாசருக்குக் கவிதை பிறந்தது.

"உன் முகமே ஒரு தாமரை! அதற்குள் இருக்கும் இரு கண்களுமே இரு தாமரைகள்" என்று பொருள் வரும்படி அற்புதமாக ஒரு கவிதை வடித்தார்.

தாசி மிகவும் மகிழ்ச்சி அடைந்தாள். போஜ ராஜன் சபைக்குச் சென்று அங்கே வாசித்தாள்.

எல்லோரும் அதை ரசித்தார்கள்.

போஜனுக்குத் தெரியும். அது போல் கவிதையை காளிதாசர் ஒருவர் தான் எழுதுவார் என்று!

தாசியை விசாரணை செய்ய அவள் உண்மையை ஒப்புக் கொண்டாள்.

காளிதாசர் இருக்கும் இடம் போஜராஜனுக்குத் தெரிந்து விட்டது. உடனே அவரை அழைத்து வர ஓடினார்.

தாமரை பற்றிய வர்ணிப்பு அந்த நாளில் மிக அதிகம்.

பெண்களின் முகமும் தாமரை, கண்களும் தாமரை, கால்களும் தாமரை என்று எல்லா அவயவங்களையும் தாமரையாக வர்ணிப்பார்கள்!

இங்கே ஒரு தாமரை அழகி தனது தாமரைக் கையில் இரு தாமரை மொக்குகளை வைத்துக் கொண்டு நிற்கிறாள்.

காளிதாசனாக இருந்தால் அந்த இரு தாமரை மொக்குகளும் அவளது மார்பகங்கள் என்று சொல்லியிருப்பார்.

ஓவியர் கோபுலு அவர்களின் சிறந்த கைவண்ணம் நம் மனங்களில் கவிதையாக விழுகிறது.

— ஸ்ரீவேணுகோபாலன்



மேதகு திரு ஆர். வெங்கட்ராமன்

(பாரதநாட்டு முன்னாள் குடியரசுத் தலைவர்)

# கடலிலிருந்து குடி நீர்



மேதகு ஆர். வெங்கட்ராமன்,
முன்னாள் குடியரசுத் தலைவர்

வீட்டு உபயோகத்துக்கும், தொழிற்சாலைப் பணிகளுக்கும் சென்னையில் கடுமையான தண்ணீர்த் தட்டுப்பாடு ஏற்பட்டுள்ளது. போதிய தண்ணீர் வசதி இல்லாததன் காரணமாகவே சென்னை நகரைச் சுற்றித் தொழில்கள் மேலும் பெருகுவது தடைப்படுகிறது. பாதுகாப்புத் துறைக்கும் இதர தொழில்களுக்கும் லட்சக்கணக்கான காலன்கள் தண்ணீர் வழங்குவதாக மாநில அரசு ஏற்கெனவே வாக்களித்துள்ளது. அதனை எப்படி நிறைவேற்றுவது என்பது தெரியாமல் அரசு தவித்துக் கொண்டிருக்கிறது. கோதாவரியிலிருந்தும் கிருஷ்ணாவில் இருந்தும் தண்ணீர் கொண்டு வருவது அல்லது காவிரியில் இருந்து நீரைத் திருப்பி விடுவது போன்ற திட்டங்கள் ஆழ்ந்த பரிசீலனையில் உள்ளன. இத்திட்டங்களை நிறைவேற்ற நிறையப் பணம் தேவைப்படும். என்றாலும், வேறு வழி எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. ரெட்ஹில்ஸ் மற்றும் இதர ஏரிகளைச் சுற்றிலும் உள்ள நிலங்கள், சென்னைக்குத் தண்ணீர் வழங்குவதைக் கூடுதலாக்குவதற்காக வாங்கப்பட்டு வருகின்றன.

தலைமைச் செயலகத்தில் உள்ள என்னுடைய பழைய அறையிலிருந்து ஜன்னல் வழியாகப் பார்க்கும்போது பரந்து விரிந்த வங்கக் கடல் என் பார்வையை நிறைக்கும். அப்போதெல்லாம், அது அப்படியே நன்னீராக மாறி விடாதா என்கிற ஆதங்கம் என்னுள் எழும். கடல்நீரைக் குடிநீராக மாற்றும் வழிமுறைகள், அவற்றுக்காகும் செலவு ஆகியவை பற்றிய தகவல்களைச் சேகரிக்கத் தொடங்கினேன். இந்த விவரங்களைப் பரிசீலனை செய்த பிறகு, அமெரிக்காவில் இவ்வாறு கடல்நீரைக் குடிநீராக மாற்றும் தொழிற்கூடங்கள் சிலவற்றைப் பார்வையிட்ட பிறகு என் கனவு நனவாக முடியும் என்கிற நம்பிக்கை பிறந்தது.

## புதிய கருத்து அன்று

கடல் நீரைக் குடிநீராக மாற்றுவது என்பது ஒன்றும் புதுமையான கருத்து அல்ல. உலகம் எவ்வளவு பழைமையானதோ, அவ்வளவு பழைமையானதுதான். மழையைத் தோற்றுவிக்கும் இயற்கை முறையைச் செயற்கையாகச் செய்து முடிக்கும் வழிமுறைதான் அது. இரண்டாவது உலகப்போர் வரை இத்தகைய வழிமுறை எதுவும் கண்டுபிடிக்கப்படவில்லை. ஆனால், போருக்குப் பின்னர் இத்தொழில்நுட்பத்தில் விரைவான முன்னேற்றம் ஏற்பட்டு, உலகின் பல பகுதிகளிலும் இதற்கான பல தொழிற்கூடங்கள் இயங்கி வருகின்றன. அரேபியா, ஆப்ரிக்கா, ஆஸ்திரேலியா, அமெரிக்கா ஆகிய நாடுகளில் கடல்நீரைக் குடிநீராக மாற்றுவது நடைமுறையில் இருந்து வருகிறது.

ஐ.நா.பொருளாதார, சமூக விவகாரங்கள் துறை இப்பிரச்னை குறித்து ஆராய்ந்து வருகிறது. ஒரு முதல் நிலை ஆய்வை மேற்கொள்வதற்காக உலகின் பல பகுதிகளுக்கும் நிபுணர்களை அனுப்பியுள்ளது. ஐ.நா. நிபுணர் திரு. வேமார்க் சில நாள்களுக்கு முன் சென்னைக்கு வந்திருந்தார். இப்பிரச்னை குறித்து என்னுடன் தொழில் அமைச்சர் என்ற முறையில் விவாதித்தார். இது சம்பந்தமான பொருளாதார - தொழில்நுட்ப அம்சங்கள் பற்றிய ஓர் அறிக்கையை அவர் ஐ.நா.விடம் சமர்ப்பித்துள்ளார். இவ்வறிக்கையை வெளியிட இன்னும் சில காலம் ஆகும் என ஐ.நா. நீர்வளத் துறை இயக்குநர் ரெவெரெண்ட் ஃபாதர் ரெவ்ரே அவர்களிடமிருந்து தெரிந்து கொண்டேன். மேலும் பல தகவல்களும் செய்திகளும் இவ்வறிக்கையில் இருந்து தெரியவரக் கூடும்.

## அமெரிக்கத் தொழிற்கூடத்தைப் பார்வையிட்டபோது...

கலிபோர்னியாவின் ஸான்டியா கோவிற்குத் தெற்கே சில மைல்கள் தொலைவில் மிகப்பெரிய தொழிற்கூடம் ஒன்று இருக்கிறது. அமெரிக்க அரசினால் நிறுவப்பட்டது இது. பாயின்ட் லோமா என்கிற இடத்தில் அமைந்துள்ள இத்தொழில் கூடத்தில் நாள்தோறும் குடிநீரை ஒரு மில்லியன் காலன் அளவில் உற்பத்தி செய்கிறார்கள். இதனைப் பார்வையிட எனக்கு உதவியவர்கள் அமெரிக்க அரசின் உள்ளாட்சித் துறையினர். தொழிற்கூட என்ஜினியர் பொறுப்பில் இருந்த திரு. முல்ஃபோர்டு அதன் முக்கிய அம்சங்களை நான் தெரிந்து கொள்ள உதவினார். இத்தொழிற்கூடம் வியாபார அடிப்படையில் நடத்தப்படவில்லை எனவும், ஓர் ஆய்வுக்கூடமாகவே இயங்குகிறது எனவும், தொழிற்கூடத்துக்காக ஆகும் செலவில் ஒரு பெரும் பகுதி ஆராய்ச்சி, பரிசோதனைகள் போன்றவற்றுக்காகவே செலவிடப்படுகிறது எனவும் அவர் விவரித்தார். பரிசோதனைகளுக்காகவே இத்தொழிற்கூட இயக்கம் அவ்வப்போது நிறுத்தப்பட்டு வந்தது. ஆராய்ச்சிப் பொறுப்பில் ஓர் உயர்நிலை என்ஜினியர் இருக்கிறார். வியாபார அடிப்படையில் நடைபெறும் ஒரு தொழிற்கூடத்துக்கு இத்தகைய ஒருவர் தேவைப்பட மாட்டார். இத்தொழிற்கூடத்தை நடத்துவதற்குத் தேவைப்படும் மூலதனம், அதனைச் செயல்படுத்துவதற்காகும் செலவு ஆகியவற்றை மதிப்பிடுவதற்கு இந்த அம்சங்களும் கணக்கில் எடுத்துக் கொள்ளப்படவேண்டும்.

## பல நிலை கொதி முறை

உள்ளே எடுத்துச் செல்லும் ஒரு குழாய் வழியாகக் கடல் நீர் ஒரு தொட்டிக்குக் கொண்டு செல்லப்படுகிறது. பின் ஒரு மின்சார மோட்டாரினால் மேலேற்றப்படுகிறது. இப்போது கடல்நீர் படிப்படியாகச் சூடேற்றப்பட்டுப் பின்

ஒரு பெரிய அறையினுள் செலுத்தப்படுகிறது. இந்த அறையினுள், உப்புநீரின் கொதிநிலைக்குச் சற்றே குறைவான அழுத்தம் நிலையாக இடம் பெற்றிருக்கும். உப்பு நீர் இந்த அறையினுள் புகுந்தவுடன் இக்குறைவான அழுத்தத்தின் பலனாகத் திரவத்தின் ஒரு பகுதி கொதிநிலை அடைந்து நீராவியாகி விடுகிறது. மீதமுள்ள உப்புநீர் இவ்வாறே பல அறைகளுக்குள் தொடர்ச்சியாகச் செலுத்தப்பட்டு நீராவியாக்கப்படுகிறது. இவ்வாறு செய்யப்படுவது 'பல நிலை கொதி முறை' என அழைக்கப் படுகிறது. பாயின்ட்லோமாவில் இத்தகைய 36 கொதி நிலைகள் பயன்படுத்தப்படுகின்றன. இவ்வாறு அடையப் படும் நீராவி பின்னர் குளிர்விக்கப்பட்டுக் குடிநீர் ஆகிறது. இதுதான் இவ்வழி முறையின் சுருக்கமான விவரம். இந்தத் தொழிற்கூடத்தை நிறுவியவர்கள் வெஸ்டிங்ஹவுஸ் எலெக்ட்ரிக் கார்ப்பரேஷன் நிறுவனத்தார். ஒப்பந்த முறை யில் ஒரு நிறுவனம் இதனை நடத்தி வருகிறது. ஒரு மில்லியன் காலன் உற்பத்தி செய்யும் இப்பரிசோதனை நிலையத்துக்கான முதலீட்டுச் செலவு 1,640,000 டாலர்கள், அல்லது ரூ. 50 லட்சம்.

இதனை இயக்குவதற்காகும் செலவு, இதற்குப் பயன் படுத்தப்படும் எரிபொருள் வகை மற்றும் அதற்காகும் செலவு ஆகியவற்றைப் பொறுத்தது என்று தெரிந்து கொண்டேன். சர்வதேச விலையில் ஃபர்னெஸ் எண் ணெயைச் சூடேற்றுவதற்காகப் பயன்படுத்தினால் செலவு குறைவாகவே இருக்கும். நாள்தோறும் 15 மில்லியன் காலன் உற்பத்தி செய்யும் விதத்தில் இத்தொழிற்கூடம் வடிவமைக்கப்பட்டால், தலா 1000 காலன்களுக்கு 60 சென்ட் (அமெரிக்க நாணயம்) செலவாகும் என்கிறார் தொழிற்கூட என்ஜினீயர். இதுவே ஒரு சிறிய தொழில்கூடமாக இருந்தால் தலா 1000 காலன்களுக்கு 1 டாலர் செலவாகும் என மதிப்பிடப்படுகிறது.

### மின் உற்பத்தி

இவ்வாறு கடல்நீரைக் குடிநீராக்கும் வழிமுறையை மின் உற்பத்தியுடன் இணைத்தால் செலவு மேலும் குறைவடை யும். ஒரு மில்லியன் காலன் உற்பத்தி செய்யும் தொழிற் கூடத்தில் நீராவியைப் பயன்படுத்தி 10,000 கி.வா. மின் சாரம் உற்பத்தி செய்ய முடியும் என்று கூறப்படுகிறது. 10,000 கி.வா. மின் சக்தியுடன் கூடிய பத்து மில்லியன் காலன் தொழிற்கூடம் என்பது சென்னைக்குப் பயனுள்ள ஒரு திட்டமாக இருக்கும்.

கலிபோர்னியாவில், லாஸ் ஏஞ்செலஸ் அருகில் உள்ள ஆக்ஸ்னார்டு என்கிற இடத்தில் அமைந்துள்ள ஒரு தொழிலகத்தையும் பார்வையிட்டேன். அக்வா-கெம் இன்கார்ப்பரேட்டட் நிறுவனத்தின் அமைப்பு அது. 100,000 காலன் உற்பத்தித் திறன் கொண்டது. குவைத்திலிருந்து பசிபிக் தீவுகள் வரை உலகின் பல பகுதிகளிலும் இத்தகைய தொழிலகங்களை நிறுவியிருப்பதாக இந் நிறுவனம் கூறுகிறது. மின்சக்தியைப் பயன்படுத்தி நாளொன்றுக்கு 15 முதல் 50 காலன்கள் வரை உற்பத்தி செய்யும் சிறிய யூனிட்டுகளையும் இந்நிறுவனம் வடிவமைத் துள்ளது. ஆக்ஸ்னார்டில், ஒரு சூப்பர் மார்க்கெட்டில் ஒரு குடிநீர் தயாரிக்கும் யூனிட்டைப் பார்த்தேன். உள்ளூரில் கிடைக்கும் குடிப்பதற்கு லாயக்கற்ற நீரிலிருந்து சுத்தமான தண்ணீரைத் தயாரிக்கும் இந்த யூனிட் ஒரு ரெஃப்ரிஜி ரேட்டரின் அளவில்தான் இருந்தது. அதன் விலை ரூ. 1,500 - ரூ. 2,000 என்று கூறப்பட்டது. அக்வா - கெம் நிறுவனத் தின் துணைத் தலைவர் திரு. ப்ருயிட். அவருடைய கருத்துப்படி, மின் உற்பத்தியுடன் இணைந்து குடிநீர் தயாரிப்பதுதான் மிகச் சிக்கனமான முறையாகும். அதாவது, மின்சாரத்தையும் குடிநீரையும் தனித்தனியே உற்பத்தி செய்வதற்காகும் செலவைவிட இரண்டையும் சேர்த்துக் குறைந்த செலவில் உற்பத்தி செய்யலாம். நான் சென்ற அன்று சனிக்கிழமையாக இருந்ததால் அந்தத் தொழிலகத்தில் 'கேர்-டேக்கர்' ஒருவர் மட்டுமே இருந்தார். ஆகவே அதன் விவரங்கள் எதையும் என்னால் பெற முடியவில்லை.

சென்னை நகரில் குடிப்பதற்குக் கூடப் போதிய அளவு தண்ணீர் வசதி இல்லை. பெருகிவரும் மக்களுடைய தேவைகளையும் தொழிற்சாலைகளின் தேவைகளையும் பூர்த்தி செய்ய நாம் முன்னதாகவே திட்டமிடாவிட்டால் நகரின் நிலைமை மோசமாகி விடும். கிருஷ்ணாவிலிருந்து தண்ணீர் கொண்டு வர ரூ. 75 கோடி செல வாகும் என்றும் காவிரியிலிருந்து கொண்டு வர ரூ. 35 கோடி செல வாகும் என்றும் மதிப்பிடப்பட்டுள்ளது. தண்ணீர், மின்சாரம் ஆகியவற்றின் விற் பனையிலிருந்து கிடைக்கும் வருமானம் தொழிலகத்தை நடத்துவதற்கான செலவுகளை ஈடுசெய்து விடும் என்று எடுத்துக் கொண்டால், 10 மில்லியன் காலன் தண்ணீர் உற்பத்திக்காக ரூ. 7 கோடி முதலீடு செய்வது பற்றி யோசிக்கத் தூண்டுகிறது. 100,000 கி.வா. மின் உற்பத்தியுடன் இணைந்த தாக அதைச் செய்ய முடியுமானால் நிச்சயம் அது வரவேற்கக் கூடிய தாகவே தெரிகிறது. இவற்றுக்கான சரியான செலவுத் திட்டங்களை அளிக்கக்கூடியவர்கள் இத்துறையில் உள்ள என்ஜினீயரிங் கண்ட்ராக்டர்கள் தாம். இப்போதுள்ள நிலையில் இத் திட்டம் மிகுந்த ஈடுபாட்டுடன் பரி சீலிக்கப்பட வேண்டிய ஒன்றாகவே தெரிகிறது. இத்திட்டம் நிறைவேற்றப் பட்டால் சென்னை நகர்வாசிகளுக்கு இது ஒரு வரப்பிரசாதமாக அமையும்.

நம் மேதகு முன்னாள் குடியரசுத் தலைவர் திரு. ஆர். வெங்கட்ராமன் அவர்கள் தமிழகம் தந்த தலைமகன் மட்டுமல்லர்; இந்தியாவின் மிகச்சிறந்த சிந்தனையாளர் வரிசையில் முன் நிற்பவர்.

அந்நாள் தமிழகத்தின் தொழில் துறை அமைச்சராக இருந்த போதே (1961) சென்னை மாநகரின் குடிநீர் பிரச்னையைத் தீர்க்க ஒரு மாபெரும் திட்டம்பற்றிக் கூறியுள்ளார்கள்.

அவர் அன்று கூறிய ஆலோசனை இன்றும் பொருத்தமாக இருக்கிறது. இதன்மேல் நடவடிக்கை எடுக்கப் பட்டால் பிரச்னைகள் தீர்ந்து விடும்.

(1961 ஆம் ஆண்டு 'ஹிந்து'வில் வெளிவந்த ஆங்கிலக் கட்டுரையின் தமிழாக்கம்)

# குறளில்: குற்றமும் கொற்றமும்

தமிழின் தலையார்ந்த நூல் திருக்குறள். அதை உலகப் பொதுமறை என்று கூறுவதில் நாம் உவகை கொள்கிறோம். காலத்தால் அழியாது என்பதில் பெருமை கொள்கிறோம். வாழ்க்கை நெறி என்று சொல்லும் பொழுது உயர்வு கொள்கிறோம்.

சட்டத் துறையில் நல்லொளி வீசும் கலங்கரை விளக்காய்த் திகழ்வதை எண்ணி எல்லையிலா மகிழ்வு எய்த வேண்டும். ஏனெனில் சட்டம் என்றும் நிலையானதில்லை. மனித எண்ணங்களுக்கு ஏற்ப, காலத்திற்கு ஏற்ப, மாறிக்கொண்டே இருக்கும். அப்படி உள்ள பொழுது எக்காலத்திற்கும் பொருந்தும் சட்டக் கருத்துகள் குறளில் மிளிர்கின்றன என்றால் வியப்பு கொள்ளத்தானே வேண்டும்! பெருமை எய்தத்தானே வேண்டும்!

அற நெறி அனைத்தும் சட்டமாகாது. அறக் கொள்கைகள் சிலவே சட்டமாக ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.

நீதியரசர் ச. மோகன்



அறம் வேறு; சட்டம் வேறு. அதே போன்று ஒழுக்கம் வேறு; சட்டம் வேறு. ஆனால் சட்டநெறியின் இதயம்தான் அறநெறி. இது போன்ற கருத்துகள் வைரமாய், மாணிக்க மாய் மிளிர்கின்றன திருக்குறளில்.

சமுதாயம் ஏன் குற்றங்களைக் கடிதல் வேண்டும்? ஒருவர் மற்றொருவருக்குத் தீங்கு விளைத்தால் சமுதாயம் ஏன் தலையிட வேண்டும்? நீதிமன்றங்கள் ஏன் தண்டனை வழங்க வேண்டும்? குற்றவாளிகளைத் தண்டிப்பது எப்படி அரசின் கடமை?

அரசிற்குத் தண்டிக்கத்தான் உரிமையுண்டா, இல்லை மன்னிக்க உரிமையில்லையா? மன்னிக்கும் தன்மை தனிப்பட்டவருக்கு இல்லையா? இவ்வளவு வினாக்களுக்கு விடை வள்ளுவர் அளிக்கின்றார்.

**'நோய் எல்லாம், நோய் செய்தார் மேலவாம், நோய் செய்யார்**

**நோயின்மை வேண்டுவர் பலர்'**

இதுதான் குறள் கூறும் நெறி. நோயின் பயன், அந் நோய் செய்தவரையும் சேரும்படி செய்தல் வேண்டும். இதுவே 'தண்டனை முறை' பிறருக்கு நோய், தீங்கு விளைக்கும் செயல்களை அவற்றை செய்தவர்களுக்கு நோய் விளைக்கும்படி செய்து தண்டனை முறை, குற்றங்களைத் தவிர்க்கிறது. குற்றம் களைதல் வேந்தன் தொழிலாகும். வலியோர் மெலியோருக்குக் குற்றம் இழைத்தால், அம் மெலியோர், வலியாரைத் தண்டிக்க இயலுமா? அது இயலாவிடில் வலியோர் மெலியோரை வாட்டவும், வதைக்கவும்தானே செய்வார்கள். வேல் எடுத்தவனுக்கே வெற்றி என்றால் வன்முறை தானே நாடெங்கும்? அமைதியும், நல்வாழ்வும் மறைந்து விடுமன்றோ?

மேற்கோளாக, ஒரு தனி மனிதனின் கையை மற்றொருவன் வெட்டி விடுகிறான். கையை இழந்தவன் துடிக்கிறான் துன்பத்தால் – கவலையுறுகிறான் கையை இழந்தோமே என்று. இதற்கும் சமுதாயத்திற்கும் என்ன உறவு? அவன் சமுதாயத்திற்குத் தீங்கு விளைக்க வில்லையே என்றால் அது தவறு. தனி மனிதர்களின் நலனே, சமுதாயத்தின் நலன். பொது நலன். கையை இழந்தவர் படும் துயரம் சமுதாயத்தின் துயராகின்றது. அதுபோன்றுதான் பிறர் பொருளைத் திருடினாலும், சமு தாயத்திற்கு விளைக்கின்ற தீங்காகிறது. தண்டிக்கப் பட்டால், அந்தத்தீங்கின் விளைவைக் குற்றமிழைத்தவன் அனுபவித்தால்தான் சமுதாயத்தைக் குற்றம் அற்ற சமுதாயமாக இருக்கச் செய்ய முடியும். இதற்கு மேலாக இன்று அங்கிங்கு எனாதபடி நீக்கமற நிறைந்திருக்கும் 'கலப்படம்' என்ற குற்றம் சமுதாயத்திற்கே விளைக்கின்ற குற்றம்; நாட்டின் பொது நலனுக்கு ஊறு விளைத்தல் ஆகும். இக் குற்றங்களை எல்லாம் களைதல் அரசின் கடமை. தனி உரிமையும்கூட.

வேடிக்கையும், வேதனையும் இழைந்த வழக்கு ஒன்று.

மாடு மேய்த்துக் கொண்டிருந்தான் ஓர் ஏழை, எட்டு வயதுச் சிறுவன். அந்தத்தொழில் அவனது "அடிப்படை உரிமை". 'பள்ளி முடித்தும் பட்டம் பெற்றும் வேலையா கிடைக்கப் போகிறது? அவன் மேய்த்துக் கொண்டிருந்த மாடு பக்கத்துத் தோட்டத்தில் புகுந்து, அங்கே பச்சை பசேலென்றிருந்த கீரையை அனுபவித்துக் கொண்டிருந் தது. அதைப் பார்த்த தோட்டக்காரன் மாட்டை விரட்டி னான். சிறுவனைப் பார்த்துச் சீறினான்.

"அறிவு கெட்ட கழுதை மாட்டைத் தோட்டத்திலே மேய விட்டு எங்கடா போனே?"

"ஐயா, தெரியாம நடந்து போச்சு மன்னிச்சுக்கங்க" பையன் பதில்.

"மாடு மேயற வரைக்கும் எங்கடா போயிருந்தேன்னா, எதிர்த்தா பேசறே?"... பையனின் பேச்சு எதிர்ப்பு!

பையனுக்குச் சிறிது கோபம். பதிலளித்தான்.

'ஆமா ஐயா 'போயிட்டேன் போகாத சீமைக்கு?"

"அங்கே போக வைக்கிறேன் பார்." தோட்டக்காரன் அங்குக் கிடந்த ஒரு பெரிய விறகுக் கட்டையால் சிறுவனின் மண்டையில் ஒரு போடு போட்டான். பையன் போயே விட்டான்,போனால் திரும்பி வராத சீமைக்கு.

வழக்கு வந்தது. சிறுவனின் தகப்பன் சொன்னன் : 'வழக்கு வேண்டாம். போன உசிரு, திரும்பியா வந்துறப் போகுது?' பையன் ஆயுசு முடிஞ்சு போச்சு" வேடிக்கை யான கூத்து. அரசு கதையை ஏற்றுக் கொள்ளவில்லை. கொலைக் குற்ற வழக்கிட்டு தோட்டக்காரனுக்குத் தகுந்த முறையில் தண்டனை பெற்றுத் தந்தது. குற்றவாளிகளுக்கு எதிராக வழக்கிடுவதும் வழக்கு நடத்துவதும், வழக்கு நடத்திட்டு தண்டனை பெறச் செய்வதும் அரசின் கடமை.

அண்மையில் உச்ச நீதிமன்றத்தில் எங்களிடம் வந்த ஒரு வழக்கு :

மலைப்பாங்கான ஒரு பகுதி. கமலா இருபத்திரண்டு வயது மங்கை – பருவ எழில் எல்லாம் அவளிடம் திரண் டிருந்தது. அவள் கணவன் போர்வீரனாகப் பணியாற்று கிறான். அவளுக்குத் துணை – வயதான மாமனார். அவளுக்கு ஒரு நாள் காய்ச்சல் அளவுக்கு அதிகமாக, அவளை மருத்துவரிடம் அழைத்துச் சென்றார் மாமனார். மருத்துவர் சொன்னார் : "இது மலைக் காய்ச்சல், ஒரு நொடியில் குணப்படுத்துகிறேன் என்னுடைய குருவை அழைத்து வந்து". எதிரில் கூட்டுறவுப்பண்டகசாலையில் பணிபுரியும் மேலாளர்தான் குரு. அந்தப் பெண்ணுக்கு இரண்டு மாத்திரைகள் கொடுத்தார் மருத்துவர். மாம னாரை ஓர் ஊசி மருந்து வாங்கி வரப் பணித்தார். மருந்து வாங்கச் சென்றுவிட்டார் மாமனார். மயக்கமடைந்தாள் மங்கை சிறிது நேரத்தில். மருத்துவர், குரு மங்கையின் எழிலைப் பருகத் திட்டமிட்டனர், 'பெண்ணின் ஆடை களையப்பட்டது. மருத்துவர், குரு இருவரும் அதே "கோலத்தில்" – இதற்குள் மாமனார் வந்துவிட்டார். கதறினார். மருத்துவரை நையப் புடைத்தார். குரு இருந்த இடம் தெரியாமல் ஓடிவிட்டார்.

மாவட்ட நீதிமன்றம் மூன்று ஆண்டுகள் சிறைத் தண் டனையும்,ஆயிரம் ரூபாய் அபராதமும் விதித்தது, உயர்நீதி அதை உறுதிப்படுததியது. உச்ச நீதி மன்றத்தில் வாதம் எழுப்பப்பட்டது. "குருவின்" சார்பாக. அந்த மனிதன் மட்டுமே உச்ச நீதி மன்றம் வரை வரத் துணிந்தான். "துணியில்லாமல் இருந்தால் குற்றமா? நான் குற்றம் ஏதும் செய்யவில்லையே, கற்பழிக்கவில்லையே?"

நீதி மன்றம் கூறியது : "சூழ்நிலையில் கணக்கிட்டால், ஆடையின்மை, "ஆயிரம் சான்றுகள்" போலாகும். கற்பழிக்க முயன்ற குற்றத்திற்கு மூன்று ஆண்டு தண்டனை சரி. அந்நிலையில் முயன்றால் முடியாததில்லை. முயற்சியே வினை."

எனவே குற்றம் செய்ய வேண்டுமென்பதில்லை. முயல்வதும் குற்றம். அதை இழைத்தால் கொடுமை.

பழம் வழக்கு ஒன்று நமக்குக் கடுமையான பாடம் புகட்டுகிறது. வழக்கின் வித்தாக ஓர் அழகான குறள் அமைந்திருக்கிறது.

**"தன்னுயிர் நீப்பினும் செய்யற்க, தான் பிறிது**

**இன்னுயிர் நீக்கும் வினை"**

தன்னுடல் வாடுகிறது. தாங்கொணாத வருத்தம் எய்து கிறது. உயிர் உடலில் இருந்து பிரியப் போகின்றது. அதைத்தடுப்பதற்கும்கூடப்பிறர் உயிரை நீக்கும் செயலைச் செய்தல் கூடாது என்பதுதான் குறள். தன் உயிர் போவதாக இருந்தாலும், பிறர் இன்னுயிர் நீக்கும் பணியில் ஈடுபடக் கூடாது என்பது வள்ளுவர் நெறி.

ராகம் : நாட்டைக்குறிஞ்சி தாளம் : ஆதி

# தமிழ்க் குமரா! தமிழ் முருகா!

பூவை எஸ். ஆறுமுகம்

எடுப்பு

★ தேமதுரத் தமிழோடு விளையாடும் தமிழ்க்குமரா!
நாமணக்க என்னுடனே பாடிமகிழ மயிலேறிவா – குருபரனே!

தொடுப்பு

★ தந்தையாம் ஈசனுக்கே ஞானகுருவான சுவாமிநாதா!
தந்தையாகி எந்தனுக்கு அருளுரைத்து ஆட்கொள்! – சண்முகா!

★ அருமைமிகு பாரதத்தின் தேசிய ஒருமை சீர்பெறவே – உமைபாலா!
அரக்கமனத் தீயசக்திகளைக் கருவறுத்து அழித்திடுவாய்! – சூரசம்ஹாரா!
பெருமையுடன் சமதர்மப்பண்பாடு ஒலிகூட்டி வழிகாட்ட – சிவபாலா!
புரட்சிமிகு பொன்விடியல்தனைப் பூத்திடச் செய்வாய்! – அறுமுகனே!



ஒரு சிறு கப்பல். புயலில் சிக்கி நடுக்கடலில் மூழ்கி விட்டது. மூன்று மாலுமிகளும், ஒரு சிறுவனும், சிறிய பட கொன்றில் ஏறிக் கொண்டு, உயிர் பிழைத்தனர். இருபது நாள்கள் கடல் அலைகள் நடுவே, இருந்த உணவெல்லாம் தீர்ந்து விட்டது. உணவில்லை. நீரில்லை. தவித்தனர், இக்கட்டான நிலையில் தள்ளாடினர். தங்கள் உயிர் போகும் நிலை. மாலுமிகளில் இருவர் சிறுவனைக் கொன்று, தங்கள் உயிரைக் காப்பாற்றிக் கொள்வது என முடிவு செய்து, சிறுவனைக் கொன்றனர். மற்ற மாலுமி தடுத்தும்கூடக்கேட்காமல்.அவன் புலாலைத் தின்று தங்கள் உயிர் வளர்த்தி, கரை சேர்ந்தனர். அந்த இரண்டு மாலுமிகள் மீதும் கொலைக் குற்றத்திற்கான வழக்குத் தொடரப்பட்டது.

வழக்கு ஐந்து நீதிபதிகளின் முன்னர் வந்தது. அளவு கடந்த பசியாலும் தாகத்தாலும், பத்து நாள்கள் மாலுமி கள் அனுபவித்த துன்பங்கள் உண்மைதான். இருப்பினும் தான் உயிர் வாழச்சிறுவனைக் கொன்றது, அவன் உயிர் போக்கியது கொலைச் செயல் என்று ஒரு மனதாகத் தீர்ப்புக் கூறினர் நீதிபதிகள். அதிலே தலைமை நீதிபதி கூறிய தீர்ப்பு நீதியின் உயர்வை உணர்த்துகின்றது.

தன் உயிர் பேணுதல் ஒருவன் கடமை. ஆனால் அதனிலும் உயர்வு அதைத் தியாகம் செய்தல். போரில் உயிர் நீப்பது வீரனின் கடமை, தன் உயிரைப் பெரிதாக எண்ணாமல். வீழ்வதுதான் வீரம் என்றால், அதற்கு மாறாக எப்படிச் செயல்பட முடியும்? பிறர் வாழ தன் னுயிரையும் நீப்பது தான் ஒழுக்கம். இந்த ஒழுக்கத்திற்கு ஒவ்வாது எந்த நாடும், குறிப்பாக இங்கிலாந்து நடக்கக் கூடாது. அவ்வாறு இதுவரை இந்த நாட்டில் நடந்த தில்லை".

"இந்த வழக்கிலுள்ள குற்றவாளிக்கு வாழ்க்கை மீது இருந்த வேட்கையை நாங்கள் மறந்து விடவில்லை. அவர்கள் கொடுந்துயர் பட்டனர். உணருகிறோம். அந்த இடர் மிகுந்த வேளையில் நேர்மை பேணுவது மிகக் கடினம். ஏனெனிலும் தங்கள் உயிரைக் காட்டிலும், ஒழுக் கம்தான் மேன்மையுடையது. தூண்டுதல் மிகுதியால் தூய செயலிலிருந்து விடுபடக்கூடாது. வேட்கையின் மிகுதியால் செய்த குற்றம் மன்னிக்கத்தக்கதோ, என்னவோ? இடுக் கண் மிகுதியான நிலையில் இரக்கத்தின் அடிப்படையில் சட்டம் வகுத்துள்ள இலக்கணத்தை மாற்றவோ அதன் கடுமையைக் குறைக்கவோ எவருக்கும் அதிகாரமில்லை" என மரண தண்டனை விதிக்கப்பட்டது. அதன் பின்னர் அரசு கருணை கொண்டு தண்டனையைக் குறைத்தது.

துன்பம் தாங்க முடியவில்லை. எனவே குற்றமிழைத் தேன் என்று கூறினால் ஏற்றுக் கொள்ள முடியுமா? துன்பத்திற்கு யாது பொருள்? தாங்கக் கூடிய துன்பம் எது. தாங்க முடியாத துன்பம், என்று வரையறுப்பது எவ்வாறு? துன்பத்தின் தன்மையை வைத்துக் காண்பதா? துன்பத் திற்கு உள்ளானவரின் நிலையை கணக்கிடுவதா? இப்படி எத்தனையோ சிக்கல்கள். தனக்குக் கொடுமை மிகும் பொழுது நிலை குலைவது இயற்கைதான். ஆனால் ஒழுக்க முற்றோர், உயர்வுள்ளோர் இழிசெயலைச் செய்யார். இதுவே குற்றமற்ற நெறி. வள்ளுவரின் திறம் செறிந்த வாதம்!

"குடிபுறம் காத்தோம்பி குற்றம் கடிதல்
வடுவென்று வேந்தன் தொழில்"

"மக்களாட்சியில் வேந்தன் இல்லை. குற்றம் களைதல் அரசின் தலையாய கடன். தனிப்பட்டவர்கள் தண்டனை வழங்குதல் முறையுமன்று. நடைமுறைக்கு நன்று அன்று. குற்றப் புலன் ஆய்வு, குற்ற வழக்கு விசாரணை, தண்டனை முறை இவை அனைத்தும் சட்டத்தின் முறைகள். அந்த முறையின் அடிப்படையில்தான் "குற்றம் கடிதல்" வேண்டும்."

இவ்வாறு தண்டனை கொடுத்து ஒறுத்தல் முறை மக்களுக்கு ஓர் அறிவிப்பு. அச்சுறுத்தல், மற்றவர்களுக்கு ஒரு படிப்பினை. தண்டனை பெற்றவன் தவிப்பானே, அவன் உடலும் உள்ளமும் வாடுமே என்று எண்ணாமல் குற்றங்கள் மலியாமல் இருக்க நினைக்க வேண்டுமன்றோ? ஒறுத்தல் முறையின் நோக்கமே அனைத்து மக்களின் நலன் கருதித்தான். திருக்குறளைக் காட்டிலும், எந்த நூலிலும், தெளிவுற, திறம்பட, திண்ணமாகக் கூறப்பட வில்லை, வள்ளுவர் வழி எவ்வளவு சீரியதென்று! இதோ குறள் :

'கொலையிற் கொடியாரை வேந்தறுத்தல் பைங்கூழ்
களை கட்டதனொடு நேர்.'

ஆம், கொடியவர்கள் செய்யும் கொலைக்குத் தண்டனை வழங்கி அவர்களை நீக்குதல், நற்பயிர்கள் நடுவே உள்ள களை நீக்குவது போன்று. அது செய்யப்படுகிறதா? செய்யப்படுமா? என்பதை வரலாறுதான் மறுமொழி கூறும்! குற்றம் கடிந்து, குடிபுறம் காத்து நலம் காணுமா அரசு, குறள்வழி நடப்போமா என்பதை நாட்டின் எதிர்காலம்தான் பதில் கூறும்!



# தமிழ் நெறியை வளர்த்துத் தமிழைக் காப்போம்

மாண்புமிகு இராம. வீரப்பன்
(உணவுத்துறை அமைச்சர்)

"என் கடன் பணி செய்து கிடப்பதே" என்று தொண்டின் சிறப்பை வலியுறுத்திய அருளாளர் அப்பர் சுவாமிகள், மனிதர்கள் வாழ்ந்தால் நல்ல குறிக்கோளுடன்தான் வாழ வேண்டும் என்பதையும் தேவாரப் பாடல் ஒன்றில் வற்புறுத்திக் கூறியிருக்கின்றார்.

"பாலனாய்க் கழிந்த நாளும், பனிமலர்க் கோதைமார்தம்
மேலனாய்க் கழிந்த நாளும் மெலிவொடு மூப்பு வந்து
கோலனாய்க் கழிந்த நாளும் குறிக்கோள் இலாது கெட்டேன்
சேலுலாம் பழன வேலித் திருக்கொண்டீச் சரத்து ளானே"

என்பது அப்பர் சுவாமிகளின் அருட்பாடல்.

நல்ல குறிக்கோளுடன் வாழ்ந்து, நாட்டிற்கு வழிகாட்டிய தமிழ் அடியார்களின் வரலாற்றை விவரிக்கும் நூல்தான் பெரியபுராணம். பெரியபுராணம் என்ற பெயரைக் கொண்டு இது ஒரு பழைமைக் கருத்துகள் கொண்ட அளவில் பெரிய நூல் என்பதாகக் கருதிவிடக் கூடாது. தமிழ்நாட்டின் ஒழுக்கத்தை, பண்பாட்டை, வரலாற்றைச் சொல்லுகிற தலைசிறந்த நூல்தான் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் சேக்கிழார் பெருமான் இயற்றிய 'திருத் தொண்டர் புராணம்' எனும் பெரியபுராணம் ஆகும். பெருமையில் சிறந்து, செயற்கரும் செயல்கள் புரிந்த திருத்தொண்டர் வரலாறுகூறும் நூல் என்பதாலேயே சேக்கிழார் அருளிய 'திருத்தொண்டர் புராணம்', 'பெரிய புராணம்' என்று போற்றப்படுகிறது.

உலகப் புகழ்மிக்க மாபெரும் கவிஞரான கம்பா, வடக்கில் நடைபெற்ற வரலாற்று நிகழ்ச்சிகளில் இருந்து அடிப்படைக் கருத்துகளை - அடிப்படைக் கருவை எடுத்துக்கொண்டு, தமிழ்நாட்டினுடைய பண்பை இழைத்து, கம்ப இராமாயணத்தை வழங்கியிருக்கிறார். அதைப்போல கந்தபுராணம் என்றாலும் சரி, வில்லி பாரதம், திருவிளையாடல் புராணம் என்று வேறுசில நூல்களை எடுத்துக் கொண்டாலும் சரி, அவற்றில் வரும் கதை நிகழ்ச்சிகள் - அடிப்படைக் கருத்துகள் தமிழ்நாட்டிற்கு உரியனவாக இல்லை. ஆனால், சேக்கிழார் இயற்றிய பெரிய புராணம்தான் தமிழ்நாட்டில் மட்டும் நடைபெற்ற நிகழ்ச்சிகளைக் கொண்டு உருவாக்கப் பெற்றிருக்கிற தமிழ்நாட்டினுடைய வரலாற்று இலக்கியம் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. அதனால்தான் மகாகவி மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் தாம் இயற்றிய 'சேக்கிழார்ப் பிள்ளைத் தமிழ்' நூலில்,

"இப்படி யார் பெற்றார் தமிழ் மான்மியம்?
எப்பாடைகளுக்கு உளது இப்பாக்கியம்?
நம் தவம்"

என்று தமிழ்மொழியில் தோன்றிய தலைசிறந்த நூல் பெரிய புராணமே என்பதைப் போற்றிக் கூறியிருக்கக் காண்கிறோம்.

இன்றைக்கு "ஆண்டவன் படைப்பில் அனைவரும் சமம்" என்ற சமதர்மத் தத்துவத்தை அரசியல் தலைவர்களும், சமுதாயச் சீர்திருத்தவாதிகளும் வற்புறுத்தி வருவதை நாம் அனைவரும் அறிவோம். இத்தகைய சமதர்மத் தத்துவத்தை - சகோதர நேசத்தைக் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டிலேயே இறைவன் பெயரால் வற்புறுத்திய சான்றோர்ப் பெருந்தகைதான் சேக்கிழார் பெருமான். "ஒன்றே குலம், ஒருவனே தேவன்" என்ற ஒப்பற்ற தத்துவத்தை வலியுறுத்திய புரட்சித் தமிழ்க் காப்பியம்தான் நம் சேக்கிழார் பெருமான் அருளிய பெரியபுராணம்.

அரசர்கள் முதலாக, தாழ்த்தப்பட்ட, ஒடுக்கப்பட்ட, அமுக்கி வைக்கப்பட்டிருக்கிற சாதாரண மக்கள் வரை அத்தனைப் பிரிவினரையும் தேர்ந்தெடுத்து 63 நாயன் மார்கள், அவர்கள் வேறு வேறு பிரிவினராக - வேறு வேறு வாழ்க்கை நிலையினராக இருந்தாலும், தொண்டு செய்தால் இறைவன் முன்னிலையில் அனைவரும் சமம் என்ற தத்துவத்தை மிகச் சிறப்பாகப் பெரியபுராணத்தில் சேக்கிழார் பெருமான் வற்புறுத்தியிருக்கக் காண்கிறோம்.

"எந்நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும்
மன்னியசீர் சங்கரன்தாள் மறவாமை பொருள்"

என்பதை வற்புறுத்துவதற்காகவே, கி.பி. மூன்றாம் நூற்றாண்டு முதலாக கி.பி. எட்டாம் நூற்றாண்டு முடிய ஒரு 600 ஆண்டுகாலம் தமிழ் மண்ணில் வாழ்ந்து விளங்கிய, வழிகாட்டிய தமிழ்ப் பெருமக்களுடைய வரலாற்றைத் தொகுத்து வழங்கியதன் வாயிலாகப் பெரிய புராணத்தை ஒரு தமிழ் வரலாற்றுக் காப்பியமாக உருவாக்கியிருக்கிறார், தொண்டர்சீர் பரவுவாரான நம் சேக்கிழார் பெருமான்.

ஆதிசைவ அந்தணரில் நால்வர், வேதியரில் பன்னிருவர், மாமாத்திரர் ஒருவர், முடிவேந்தர் அறுவர், குறுநில மன்னர் ஐவர், வணிகர் ஐவர், வேளாளர் பதின்மூவர், இடையர் இருவர், குயவர் ஒருவர், பாணர் ஒருவர், பரதவர் ஒருவர், வேடர் ஒருவர், சான்றார் ஒருவர், சாலியர் ஒருவர், செக்கார் ஒருவர், ஏகாலியர் ஒருவர், ஆதி திராவிடர் ஒருவர் என்று - இந்தச் சமுதாயத்தில் இருக்கிற அனைத்துப் பெருமக்களும் இக் காவியத்தில் நாயகர்களாக வருகின்றார்கள். இவர்கள் அனைவரும் இறைவனின் அடியார்கள். இறைநெறியை ஏற்றுச் சமு

தாயத்திற்கு "அன்பே சிவம்" என்று எண்ணித் தொண்டு புரிந்தவர்கள்.

இவர்களில் அரசன் என்றும், ஆண்டி என்றும் பேதமில்லை; ஏழையென்றும் பணக்காரன் என்றும் பேதம் இல்லை. வேதியரும் ஒன்றுதான் - வேடுவரும் ஒன்று தான்; வேளாளரும் ஒன்றுதான் - ஏகாலியரும் ஒன்றுதான். வேளாளர் குலத்துதித்த திருநாவுக்கரசரைத் தம் குருவாகக் கொண்டு அந்தணர் குலத்தில் தோன்றிய அப்பூதியடிகள் போற்றுவதையும் இப்பெரிய புராணத்தில் காண்கிறோம். அந்தணர் குலத்தில் அவதரித்தவரான திருஞானசம்பந்தர், தம் பாக்களுக்குப் பண் அமைத்து யாழில் வைத்துப் பாட, திருநீலகண்ட யாழ்ப்பாணரைத் தம் தோழராகக் கொண் டிருந்ததையும் இப் பெரிய புராணத்தில் காண்கின்றோம். சேரமான் பெருமான் நாயனார் எனும் முடிவேந்தர் கோயிலுக்குச் சென்று, பட்டத்து யானையில் அரண் மனைக்குத் திரும்பும் வழியில், உவர்மண் சுமந்து வந்த ஒரு சலவைத் தொழிலாளியை திருநீறு பூசிய சிவனடியாராக எண்ணி, யானையினின்றும் கீழிறங்கித் தொழுத சமத்துவத்தையும் பெரிய புராணத்தில் நாம் காண்கிறோம். வண்ணான், மன்னனை வணங்கி, "அடியேன் அடி வண்ணான்" எனக் கூற, முடிவேந்தரான சேரரும், "அடியேன் அடிச் சேரன்" என்று கூறிய இத்தகைய சமத்துவ சமதர்மத்தைப் பெரிய புராணத்தில்தானே காண முடியும்?

இன்றைக்கு 'ஐயர்' என்று பட்டப் பெயரால் அந்தணர் களைச் சிறப்பிக்கிறார்கள். 'ஐயர்' என்பது சமுதாயத்திலே உயர்ந்தவர்களைச் சுட்டுவதற்கான சிறப்புப் பெயராக விளங்கி வருகிறது. ஆனால், தமிழர் வரலாற்றுக் காவிய மான பெரிய புராணத்தில் சேக்கிழார் ஒரு பெரும் புரட்சி செய்திருக்கிறார் என்பதை இங்கே நான் பெருமையுடன் நினைவுபடுத்த விரும்புகிறேன். இறைவனே 'ஐயன்' என்பதும், இறையடியார்கள் அனைவரும் 'ஐயர்' என்பதும் சேக்கிழார் கருத்தாகும். 'ஐயர்' என்ற அந்த உயர்ந்த சிறப்புப் பெயரால், பெரிய புராணத்தில் அந்தணர் எவரையும் சேக்கிழார் சுட்டினார் இல்லை. ஒரு பாணரை யும், ஒரு வேடரையும், ஓர் ஆதி திராவிட நாயனாரையும் தான் சேக்கிழார் பெருமான் 'ஐயர்' எனச் சுட்டிக்காட்டி பெரும் புரட்சி செய்திருக்கக் காண்கிறோம்.

திருஞானசம்பந்தர், திருநீலகண்ட யாழ்ப்பாணரை விளித்துப் பேசும்போது,

"ஐயர் நீர் உளமகிழ இங்கணைந்த
உறுதி உடையோம்"

"ஐயர்நீர் அவதரித்திட இப்பதி
அளவில் மாதவம் முன்பு செய்தது"

என்று சுட்டிச் சிறப்பிக்கக் காண்கிறோம். தில்லை மறையவர்கள், திருநாளைப் போவாரை விளிக்கும்போது,

"ஐயரே! அம்பலவர் அருளால் இப்பொழுது அணைந்தோம்
வெய்ய அழல் அமைத்து உமக்குத் தர வேண்டி"

என்று 'ஐயர்' எனச் சுட்டுவதைக் காண்கிறோம். இதைப் போலவே சேக்கிழார் தம் திருவாக்கால் வேடுவராகிய கண்ணப்பரைச் சிறப்பித்து,

"பேணு தத்துவங்கள் என்னும் பெருகு சோபானம் ஏறி
ஆணையால் சிவத்தைச் சார அணைபவர் போல ஐயர்
நீணிலை மலையை ஏறி நேர்படச் செல்லும் போதில்"

என்று ஐயர் எனச் சுட்டி மாபெரும் புரட்சியைச் செய்து "ஆண்டவனின் அடியார்கள் அனைவரும் சமம்" என்பதைப் பெரிய புராணக் காவியத்தின் வாயிலாக நிலைநாட்டி யிருக்கக் காண்கிறோம்.

"ஆண்டவன் முன்னிலையில் அனைவரும் சமம்" என்ற கருத்தை வலியுறுத்துவது மட்டுமன்று;'மக்கள் தொண்டே



மகேசன் தொண்டு' என்று சமுதாயத்திற்குத் தொண்டு புரியும் தூய மனிதர்களைத் தேடிக் கடவுளே அவர்கள் வாழும் இடத்தைத் தேடி வருகிறார் என்ற மகத்தான தத்துவத்தைச் சொல்லுகிற மாபெரும் வரலாற்று இலக்கியமாகவும் பெரியபுராணம் விளங்குகிறது.

"வாழி திருத் தொண்டென்னும் வான்பயிர்தான் ஓங்குதற்குச்
சூழும் பெருவேலி யானீர்"

என்று இந் நூலில் வரும் தொண்டர்கள் அனைவராலும் சிறப்புற்றது திருத்தொண்டே என்று சேக்கிழார் பெருமான் சிறப்பித்துக் கூறியிருக்கக் காண்கிறோம். பெரியபுராணம் தொண்டை வற்புறுத்தும் நூல் மட்டுமன்று மக்கள் வாழ்வில் ஒழுக்கத்தை வற்புறுத்தும் வாழ்வியல் நூலும் ஆகும். மனிதன் வீரனாக இருக்கலாம்; விவேகியாக இருக்கலாம்; வீரத்தின் காரணமாக தன் கண்ணை அப்பியும், தன் மகனை வெட்டிக் கறி சமைத்தும்கூடத் தியாகமும், தொண்டும் புரியலாம். உணர்ச்சி வயப்பட்டு அடியார்கள் செய்யும் அத்தகைய பல தியாகங்களையும் பெரிய புராணத்தில் காண்கிறோம். ஆனால் பெரிய புராணத்தின் வாயிலாகச் சேக்கிழார் போற்றுவது பெரிதும் ஒழுக்கமே ஆகும். ஒழுக்கத்தின் அடிப்படையில் அமையும் தொண்டுள்ளமே, வீரத்தின் அடிப்படையில் அமைந்த தொண்டைவிடச் சிறப்புமிக்கதாகும் என்பதைத்தான் சேக்கிழாரின் பெரிய புராணம் பெரிதும் வற்புறுத்தியிருக்கக் காண்கிறோம்.

பட்டினத்தார் செயற்கரும் செயல் புரிந்த மூன்று நாயன்மார்களின் தொண்டினை வியந்து ஒரு பாடலில் போற்றி யிருக்கிறார்.

"வாளால் மகவரிந்து ஊட்ட வல்லேன் அல்லேன் மாதுசொன்ன
சூளால் இளமை துறக்க வல்லேன் அல்லேன் தொண்டு செய்து
நாளாறில் கண்இடந்து அப்ப வல்லேன் அல்லேன் இனிச்சென்று
ஆளாவது எப்படியோ திருக்காளத்தி அப்பருக்கே"

என்ற அந்தப் பாடலில் பட்டினத்தார், தம் கண்ணையே காணிக்கையாக்கிய தியாகி கண்ணப்பரைப் பற்றியும், பெற்ற மகனையே வெட்டிச் சமைத்துக் கொடுத்த வீரர் சிறுத்தொண்டரைப் பற்றியும் பாராட்டியதோடு, வாழ்க்கையில் தவறுகளைச் செ... கொண்டிருந்த திருநீலகண்டர் ஒழுக்க சீலராக மாறிய பண்பாட்டைப் பற்றியும் வியந்து கூறிப் போற்றியிருக்கக் காண்கிறோம்.

இம் மூவரின் தியாகங்களில் எது சிறந்த தியாகம் என்பதாகக் கேட்டுத் தமிழ் அறிஞர்கள் வாதிட்ட பல பட்டிமன்றங்களையும்கூட நான் கேட்டிருக்கிறேன். இத்தகைய பட்டிமன்றம் ஒன்று அண்மையில் சென்னை இராணி சீதை மன்றத்தில் நடந்த பொழுது, அப் பட்டிமன்றத்தின் நடுவராக வீற்றிருந்த பேராசிரியர் அ.ச.ஞானசம்பந்தன் அவர்கள், ஒழுக்கத்தின் அடிப்படையிலே வாழ்ந்து திருநீலகண்டர் செய்த தியாகமே, கண்ணப்பரும், சிறுத்தொண்டரும் செய்த தியாகங்களை விடப் பெரியது என்று தீர்ப்பளித்தார்கள். திருநீலகண்டரின் மனைவி "எம்மைத் தீண்டுவீராகில் திருநீலகண்டம்" என்று ஒரு கட்டளை விட்டாள். அக் கட்டளையை ஏற்று திருநீலகண்டர் இளையவராய் இருந்த நிலையிலும் சரி, முதுமைப்பருவம் வந்துற்ற போதும் சரி, தமக்கு உரிமை வாய்ந்த மனைவியை மட்டுமல்ல, "எம்மை" என்று சொன்னபடியால் மகளிர் ஒருவரையுமே அவர் நினைத்துப் பார்க்காமல் ஒழுக்கசீலராய் வாழ்ந்த அந்தத் தியாகமே பிற தியாகத்தை விடவும் சிறந்தது; மனிதன் தொண்டுள்ளத்தோடு வாழ்வது மட்டும் போதாது. அந்தத் தொண்டுள்ளமும் ஒழுக்கத்தின் அடிப்படையிலேயே அமைய வேண்டும் என்று பேராசிரியர் அ.ச.ஞானசம்பந்தன் அவர்கள் தீர்ப்பளித்து, ஒழுக்கத்தை வற்புறுத்தும் வாழ்வியல் நூல் பெரிய புராணம் என்பதை மிக அழுத்தமாக எடுத்துக் காட்டினார்களென்பதை இங்கு நான் குறிப்பிட்டுச் சொல்ல விரும்புகின்றேன்.

மனைவி என்று சொல்லப்படுகிற ஒரு பெண்ணிற்குத் தமிழ்ச் சமுதாயத்தில் எவ்வளவு மரியாதையும், உயர்வும் தரப்பட்டிருக்கிறது என்பதையும் நாம் திருநீலகண்ட நாயனார் வரலாற்றின் மூலமாக உணருகின்றோம். ஆணும் பெண்ணும் சமம் என்பதையும், ஓர் ஆணைக் கட்டுப்படுத்த வேண்டுமானால் – திருத்த வேண்டுமானால் அது ஒரு பெண்ணாலேதான் முடியும் என்பதையும் இந்த வரலாற்றின் மூலமாக சேக்கிழார் பெருமான் தெளிவு படுத்தியிருக்கிறார். ஆகவேதான் சிறந்த ஒழுக்கத்தை, உயர்ந்த பண்பாட்டை விளக்கும் இந்த நாட்டின் வரலாற்றை, ஒழுக்கமுடன் தொண்டு புரியும் மனிதர்களில் பேதம் பாராது, அவர் குயவரே ஆனாலும் அவர் தம் குடிசையையும் தேடி இறைவன் ஓடிவருவான் என்று சொல்லப்படுகிற அற்புதமான தத்துவத்தைத் தருகிற பெரியபுராணம் தமிழர்களின் தலைசிறந்த ஒரு வரலாற்று நூல் என்பதை நாம் புரிந்து கொள்ள முடிகிறது.

பெரிய புராணம் ஒரு பக்தி நூல், அது பூசையறைக்குள்ளே வைத்துப் பூசிக்க வேண்டிய நூல் என்று மட்டுமே நமக்குப் பலரும் இதுகாறும் எடுத்துச் சொல்லி வந்திருக்கிறார்கள். பக்தி இலக்கியம் என்று சொல்லும்போது, அது மக்கள் வாழ்க்கைக்குப் பயன்படாத இலக்கியம் என்பதாக ஓர் எண்ணம் இந்த நாட்டில் ஏற்படுத்தப்பட்டிருப்பதனால், பெரிய புராணம் மக்கள் அனைவராலும் போற்றப்படாத ஒருநிலை இன்றுவரை இருந்து வருகிறது. பெரிய புராணம் சைவத் திருமுறைகளில் பன்னிரண்டாவது திருமுறை என்று கூறப்பட்ட காரணத்தால், 'இது சைவ நூல்தானே! இதை நாம் ஏன் படிக்க வேண்டும்?' என்று வைணவர்களும்கூட இந் நூலைப் புறக்கணிக்கக் கூடிய நிலை இன்றுவரை இருந்து வருகிறது.

வாழையடி வாழையாக தமிழ் இலக்கியம் வளர்ந்து கொண்டே வந்திருக்கிறது என்ற போதும், சமய இலக்கியங்கள் என்ற அஸ்திவாரத்தின் அடிப்படையில்தான் அந்த வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது என்பதை நாம் யாரும் மறந்துவிடக்கூடாது. தமிழ் இலக்கிய வரலாற்றை நாம் கூர்ந்து பார்த்தால் முதலில் தொல்காப்பியமும் பிறகு சங்க இலக்கியங்களும் வருகின்றன. அவற்றை ஒட்டியே திருவள்ளுவர் உலகிற்கு வழங்கிய உலகப் பொது மறை திருக்குறள் வருகின்றது. பிறகு நம்முடைய வைணவப் பெரியார்கள் பாடியிருக்கிற திவ்யப்பிரபந்தங்களும், சைவ சமயக்குரவர்கள் வழங்கியிருக்கிற தேவாரம், திருவாசகமும் தோன்றியுள்ளன. ஐம்பெருங்காப்பியங்கள், கம்ப இராமாயணம் ஆகியவை முன்னும் பின்னுமாகத் தோன்றிச் சிறப்புப் பெற்றிருக்கின்றன. கி.பி. 12 ஆம் நூற்றாண்டில் சேக்கிழார் பெருமான் இயற்றிய பெரியபுராணம் வருகிறது. அதைத் தொடர்ந்தும் சமய இலக்கியங்கள் பல சிற்றிலக்கியங்களாகத் தோன்றியிருக்கின்றன. சமய இலக்கியங்களினுடைய பரிணாம வளர்ச்சியாக, கடைசியாக வருகிறவர் நம்முடைய வள்ளலார் இராமலிங்க அடிகளார். காலமாறுதலுக்கேற்ப, வள்ளலார் வகுத்த பாதையில் அவருக்குப் பிறகு மகாகவி பாரதியாரும், பாவேந்தர் பாரதிதாசனும் புதிய பாதையில் வருகிறார்கள். இன்றைக்கு இந்த இருபதாம் நூற்றாண்டிலேயும் பலப்பல கவிஞர்கள் தோன்றித் தமிழ் இலக்கியத்திற்கு அருந்தொண்டாற்றி வருகிறார்கள். வள்ளலார் பாடியிருப்பதைப் போல வாழையடி வாழையாக தமிழ் இலக்கியம் வளர்ந்து கொண்டிருக்கிறது; தமிழ்மொழியும் வாழ்ந்து கொண்டிருக்கிறது. தொல்காப்பியத்திலேயே தமிழ்நாட்டில் போற்றப்பட்ட தெய்வங்களைப் பற்றிய குறிப்புகள் இடம் பெற்றுள்ளன. பத்துப்பாட்டிலே முதற்பாடலாகப் போற்றப்படுவது திருமுருகாற்றுப்படையே ஆகும். ஆகவே, தமிழ் வேறு, சமயம் வேறு என்று பிரித்துப் பார்க்க முடியாதபடி தமிழர்

வாழ்வில் சமயமும் தமிழும் பின்னிக் கிடக்கின்றன. சமய இலக்கியங்கள் என்ற அஸ்திவாரம் இல்லையானால் தமிழ் இலக்கியம் உயர்ந்தது என்று சொல்லுவதற்கே நாம் தகுதியற்றவர்களாகப் போயிருப்போம். ஆகவே இலக்கியங்களை அவை எந்தச் சமயத்தைச் சார்ந்தவை என்றுகூட நாம் வீணாக வாதிட வேண்டுவதில்லை. அதனால்தான் திருக்குறளை இயற்றிய திருவள்ளுவர் எந்தச் சமயத்தைச் சார்ந்தவர் என்ற வீண் சர்ச்சையும் இன்றுவரை நிகழ்ந்து கொண்டிருக்கிறது. எந்தச் சமய இலக்கியங்களும் ஒதுக்கப்பட வேண்டியவை அல்ல என்பதை நாம் முதலில் உணர்ந்து கொள்ள வேண்டும். ஐம்பெரும் காப்பியங்கள் என்று நாம் போற்றுகிறோமே, அவை எந்தச் சமயத்திற் குரியவை என்று பார்த்தால் அவற்றில் ஒன்றேனும் சைவ, வைணவ சமயங்களுக்கு உரியன அல்ல; புத்த, சமண சமய இலக்கியங்கள்தாம் ஐம்பெருங் காப்பியங்கள். ஆகவே, இலக்கியங்கள் இந்த நாட்டினுடைய - தமிழ் மண்ணினுடைய உண்மைகளை, ஒழுக்கங்களை, பண்பாட்டை, வரலாற்றைச் சொல்லுகின்றனவா என்பதைத் தான் நாம் சீர்தூக்கிப் பார்க்க வேண்டும். அப்படிப் பார்க்கும்போது, தமிழ் மண்ணிலே நடைபெற்ற நிகழ்ச்சிகளைத் தொகுத்துத் தருகிற இலக்கியமாக, தமிழ்ப் பண்பாட்டை, ஒழுக்கத்தை, தமிழர் வரலாற்றை விவரிக்கின்ற தலைசிறந்த இலக்கியமாகத் திகழ்வதுதான் சேக்கிழார் அருளிய பெரியபுராணம்.

பன்னிரண்டாம் நூற்றாண்டில் நீதிமன்றங்கள் எப்படிச் செயல்பட்டன தமிழகத்தில் என்பதை எடுத்துக் காட்டுகிறார் சேக்கிழார். ஒன்றை உண்மையென நீதிமன்றங்கள் மெய்ப்பிக்க வேண்டுமானால் மூன்றுவிதமான சான்றுகள் வேண்டும் என்று கூறுகிறார் சோழநாட்டின் தலைமை அமைச்சராக வீற்றிருந்த சிறப்பிற்குரியவரான நம் சேக்கிழார் பெருமான்.

"ஆட்சியில் ஆவணத்தில் அன்றி மற்றயலார் தங்கள்
காட்சியில் மூன்றில் ஒன்று காட்டுவாய் என்ன முன்னே
மூட்சியிற் கிழித்த ஓலை படியோலை, மூலஓலை
மாட்சியிற் காட்ட வைத்தேன் என்றனன் மாயைவல்லான்"

என்ற சேக்கிழார் பாடல் ஒன்றே போதுமானது பெரிய புராணம் எத்தகைய தலைசிறந்த வரலாற்று நூல் என்று காட்டுவதற்கு.

அதைப்போலவே, பெரியபுராணம் தமிழ்ப் பண்பாட்டை எடுத்துக்காட்டும் மகுடமான நூல் என்பதையும் தமிழ்ப் பேரறிஞர்கள் நமக்கு எடுத்துக்காட்டி விளக்கியிருக்கிறார்கள். காதலனுடன் உடன்போக்கு மேற்கொண்ட ஒரு காதலி, வழியில் ஒரு மடத்தில் தங்கியிருக்கும்போது, அக்காதலன் அரவம் தீண்டி மாண்டு போகிறான். திருமணம் ஆகாத அந் நிலையில் அவனைத் தொட்டு அழமுடியாத வேதனையில் அவள் படும் பாட்டைச் சேக்கிழார் பெருமான்...

"வானரவு தீண்டவும் தான் தீண்டகில்லாள்" என்று நயம்படச் சுட்டுகிறார். திருமணத்திற்குமுன் காதலர்களே ஆயினும் தொட்டுப் பேசுவது தமிழர்ப் பண்பாடாகாது என்பதை எவ்வளவு நுட்பமாகவும், நயமாகவும் சேக்கிழார் பெருமான் பெரிய புராணத்தில் சுட்டியிருக்கிறார் என்பதை எண்ணும்போது, தமிழர்களின் தலைசிறந்த பண்பாட்டு நூல் பெரியபுராணம் என்பது தெளிவு பெறுகிறது அல்லவா? ஆகவேதான், "பெரிய புராணத்தை பூசை அறையில் வைத்துப் பூஜிக்க வேண்டிய ஒரு சமய நூல் என்று எண்ணாதீர்கள்; அது தமிழரின் தலைசிறந்த பண்பாட்டு நூல்; பண்பாட்டு நூலில் ஆங்காங்கே சமயக் கருத்துகளும் வருகின்றன. என்று கூறுங்கள்" என்ற கருத்தையும் நான் தொடர்ந்து வற்புறுத்தி வருகின்றேன்.

ஆகவே, பெரியபுராணம் தமிழ்நாட்டின் தலைசிறந்த இலக்கியம் - பத்தரைமாற்றுத் தங்கம் என்பதை இனி

யேனும் நாம் இந்த உலகிற்கு எடுத்துச் சொல்லி ஆக வேண்டும். இந்தப் பத்தரை மாற்றுத் தங்கத்தைத்தான் இத்தனைக் காலம் சுரங்கத்திலே போட்டு மூடி வைத் திருந்தோம். தங்கத்தையும் சுரங்கத்திலே இருந்து தோண்டி எடுத்து வெளியிலே கொண்டு வந்தால், அது மண்ணோடு கலந்துதான் இருக்கும். அதை எப்படி நெருப்பிலே புடம்போட்டு வாட்டி பத்தரை மாற்றுத் தங்கமாக மின்ன வைக்கிறோமோ, அதைப்போல பூசை யறைக்குள் இத்தனை நாளும் பூட்டி வைக்கப்பட்டிருந்த தங்கமாகிய பெரிய புராணத்தையும் இனி இந்த உலகிற்கு நாம் பத்தரைமாற்றுத் தங்கமாக வழங்கிடவேண்டும்.

பெரியபுராணம் வரலாற்று நூல் மட்டுமன்று.. வாழக்கை நெறியை விளக்குவது மட்டுமன்று.. அறிவியல் உண்மைகளையும் தெரிவிக்கிற நூலாகும். இன்றைக்கு உறுப்பு மாற்று சிகிச்சை என்பது மருத்துவத் துறையில் பரவலாகி வரும் ஒன்று. விஞ்ஞான வளர்ச்சியினால் ஒருவருடைய சிறுநீரகத்தை இன்னொருவருக்கு மாற்ற லாம். ஒருவருடைய கண்ணை மற்றொருவருக்குத் தானம் வழங்கலாம் என்றெல்லாம் மருத்துவ விஞ்ஞானம் மகத் தான முன்னேற்றத்தைக் கண்டு வருகிறது. சேக்கிழார் பெருமான், கண்ணப்பர் வரலாற்றிலேயே ஒருவர் கண்ணை எடுத்து மற்றொருவருக்கு வழங்க முடியும் என்பதையும் நம் தமிழ் மக்கள் பலநூறு ஆண்டுகளுக்கு முன்பே அறிந்திருந்தார்கள் என்பதையும் தம் பெரிய புராணம் வாயிலாக நமக்கு உணர்த்திக் காட்டியிருக்கக் காண்கிறோம். நமது தமிழ்மண் மருத்துவ ஆராய்ச்சி விஞ்ஞானத்திலேயும் தேர்ந்தவர்களைக் கொண்டிருந்த மண்தான். ஒருவர் கண்ணை மற்றொருவருக்கு வைக்க லாம் என்ற அறிவு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நம் தமிழ்ப் பெருமக்களுக்குத் தெரிந்திருக்கிறது. இதைப் பக்தியின் அடிப்படையில் சொன்னால் மற்றவர்கள் நம்புவதோடு பின்பற்றவும் செய்வார்கள் என்றுதான் சேக்கிழார் பெருமான், கண்ணப்ப நாயனார் வரலாற்றில் இந்த 'கண்தான' உண்மையைச் சொல்லியிருக்கக் காண் கிறோம். எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்பே சேக்கிழார் பெருமான் தம் பெரிய புராணத்தில் கண்தானத்தைப் பற்றிச் சொன்னார். இன்றைக்கு அது உலகில் மிக எளிய ஒரு நிகழ்ச்சியாக நாளும் நடந்து கொண்டிருக்கிறது.

ஆகவே, நம் தமிழர்கள் ஒன்றும் முட்டாள்களும் அல்லர், மூட நம்பிக்கை உடையவர்களும் அல்லர். உலகிற்கே வழிகாட்டும் அறிவுச் செல்வம் உள்ளிட்ட அனைத்துச் செல்வங்களும் பெற்றிருப்பவர்கள்தான். இவ்வளவையும் பெற்றிருந்தாலும் நம்முடைய சிறப்பை நாமே உணராமல், இளைய தலைமுறையினருக்கு எடுத்துப் பறப்பாத காரணத்தால் இன்றைக்கும் எளியவர்களாக, வறியவர் களாக வாழ்கிற ஓர் அனுதாபத்திற்கு உரியவர்களாகவும் இருந்து கொண்டு இருக்கிறோம். எனவேதான், இந்த வரலாற்று இலக்கியத்தை, தொண்டுள்ளத்தை விளக்கும் தூய தமிழ் நூலை - தமிழர் ஒழுக்க நெறி போற்றும் வாழ்வியல் நூலை - வருந்தலைமுறையினர்க்கு விளக்கும் அரிய பணியை நாம் நிறைவேற்ற வேண்டும்.

"சென்ற காலத்தின் பழுதிலாத் திறமும்
இனிஎதிர் காலத்தின் சிறப்பும்
இன்றெழுந்தருளப் பெற்ற பேறிதனால்
என்றைக்கும் திருவருள் உடையேம்"

என்ற சேக்கிழார் அருள்வாக்கிற்கு இணங்கவே, சேக்கிழார் புகழ்பரப்பித் தமிழர்தம் மெய்யான புகழையும், பெருமை யையும் உலகிற்கு உணர்த்திக் காட்டிடுவோம். தமிழ் நெறியை வளர்த்துத் தமிழைக் காப்போம்...

# வைகறை வாசல்

விரிந்த சிலந்தி வலைக்குள் ஈசல்
விழுந்து துடிக்கிறது! வாழ்வை
இழந்து தவிக்கிறது.
எரிந்த நினைவின் எல்லைக்குள்ளே
என்மனம் அழுகிறது! - பாட்டின்
இழைகள் பிரிகிறது!
தத்துவம், ஞானம், சரித்திரம் எல்லாம்
சந்தனம் மணக்கிறது! - நெஞ்சோ
சகதியில் புரள்கிறது!
புத்தன், ஏசு, காந்தியின் போதனை
புத்தகம் ஏற்கிறது! - அறிவோ
போனதைப் பார்க்கிறது!

ஆடும் குதிரையில் ஆட்டம் போதும்!
யாத்திரை தொடராது! - புதிய
ஊர்ப்புறம் தெரியாது!
தேடும் பழமை நினைவுச் சருகோ
தேன் இனி தாராது! - வாழ்வுத்
தேவைகள் தீராது!
வா! வா! மனமே! வானோ வைகறை
வாசல் திறக்கிறது! - முகிலோ
வண்ணம் நிறைக்கிறது!
போ! போ! இன்றே புதிதாய்ப் பிறந்து
பூபாளம் பாடு! - நினைவே
போய்த் தாளம் போடு!







# எழுதாத மடல்

கலைமாமணி மா. வரதராஜன்

சீதப் புனல் சூழ்ந்த சீரிலங்கை மங்கைக்குச்
சீதை விடுக்கின்ற செந்நீர்க் கடிதமிது
கடல் சூழ்இலங்கை நகர்க் காரிகைக்குக் கண்ணீர்
கடல் சூழ் விழிசீதை கடிதம் விடுகின்றேன்
பாயிரம் போற்றுகிற பார்வேந்தன் உன்கணவன்
ஆயிரம் மாமறையின் அரியபொருள் உணர்ந்தவன்தான்
மேருமலையையே விரலால் அசைத்திட்ட
வீறுடைய வேந்தனென வியந்து புகழ்கின்றார்
ஆதித்த னும்மதியும் ஆணைக்குத் தாமடங்கி
வீதிதனில் நடவாத விந்தையினை யானறிவேன்
தேவரெலாம் அவனுடைய திருவடிக்கு மிகப்பணிந்து
ஏவலராய் விளங்குவதாய் எல்லாரும் விளம்புகின்றார்
கண்டோர் வியக்குமெழிற் கற்புக்கு நல்லரசி!
மண்டோதரியே! உன் மன்னவனும் தன்னுடைய
ஆட்சித் திறத்தாலே அயோத்திக்கு நிகரான
மாட்சியுடை நகராக மாற்றியுள்ளான் இலங்கை தனை
நாரதனும் தோல்வியுற நல்லிசையைப் பொழிந்ததனால்
சீரதிகம் பெற்ற சிறப்புக்குத் தலைவன் அவன்
இத்தனை சீர்த்திக்கும் இருப்பிடமே அவனென்று
நித்தம் திரிசடையாள் நீட்டிக் கதையுரைப்பாள்
தவவலிமையால் உயர்ந்த தார்வேந்தன் குலவிளக்கே!
அவச் செயலில் உன் மன்னன் அழுந்துவதும் அழகாமோ?
வீரனெனில் அன்றைக்கே வில்லொடித்து வென்றிருப்பான்
சோரனென எனைத் திருடி சுகம்காண நினைப்பதும் ஏன்?
ஊராண்மைச் சிறப்பால் உயர்ந்திலங்கும் மன்னவர்க்குப்
பேராண்மை என்பதெல்லாம் பிறர்தாரம் விரும்பாமை
சொல்லாலேயே அவனைச் சுட்டிருப்பேன்; என் கணவர்
வில்லாண்மைக் கேயதுவும் மாசென்று விட்டுவிட்டேன்
காகுத்தன் காலடியில் காவலனைப் பணியச் சொல்
மாகுற்றம் செய்தவனை மன்னவனும் மன்னிப்பான்
மண்டோ தரியே! உன்மாங்கல்யம் நிலைத்திருக்கப்
பெண்டகை யானும் பெரிதும் விரும்புவதால்
இந்த மடலினை எழுதிடநான் முனைந்திட்டேன்
சிந்தித்துச் செயலாற்றச் செய்வதுவே நின் கடமை

இப்படிக்கு
சிறையில் தவமிருக்கும் சீதை





ஸ்ரீகாளிகாம்பாள், சென்னை

ஓவியர் : ஜி.கே.முர்த்தி

தேங்காய் காய வைத்துக் கொப்பரையாக்கப்படுகிறது.



சேர்மன் திரு. வி.வி.டி. நித்யானந்தம்.

# தூத்துக்குடி கண்டெடுத்த மற்றொரு முத்து வி.வி.டி. நிறுவனம்

ஒவ்வோர் ஆண்டும் வணிகச் சிறப்புக் கட்டுரை தீபாவளி மலரில் இடம்பெறப் பல விளம்பர நிறுவனங்களிலிருந்தும் ஆர்வத்துடன் ஒத்துழைப்புத் தருவது எங்களுக்கு மிகவும் ஊக்கமளிப்பதாக இருக்கிறது. இவ்வாண்டு ஆரம்பத்திலேயே 'கவுண்டர் பாய்ண்ட்' விளம்பர நிறுவனத்தின் அதிகாரிகள் திரு. சுரேந்திரன், திரு. நரேஷ் தங்கள் வாடிக்கையாளர் வி.வி.டி. எண்ணெய் குறித்துத் தீபாவளி மலரில் எழுத விருப்பம் தெரிவித்தார்கள். தீபாவளி என்றாலே எண்ணெயின் முக்கியத்துவம் அதிகரிப்பதால் எங்களுக்கும் இரட்டிப்பு மகிழ்ச்சி.

தேங்காய் எண்ணெய் உணவில் பயன்படுவது தவிர தினம் தலைக்குத் தடவுவதால் முடி கருமையாக, நீளமாக வளர உதவுகிறது. தரமான தேங்காய் எண்ணெயைத் தேடி வீட்டுப் பெண்கள் அலைவது இதனால் மட்டுமல்ல, தேங்காய் எண்ணெய் தோல் வியாதிகளிலிருந்து பாதுகாத்து மேனியைப் பளபளப்பாக்குவதனாலும் இருக்கலாம்.

பண்டைய காலம் தொட்டே நல்ல தேங்காய் எண்ணெயை அடிபட்ட காயங்களுக்கு இட்டுக் குணப்படுத்தியிருக்கிறார்கள். ஆகையால் பல்வேறு நற்குணங்களை உடைய தேங்காய் எண்ணெய் தயாரிக்கும் வி.வி.டி. நிறுவனம் காண தூத்துக்குடி பயணமானோம்.

ஆங்கிலேயர் ஆண்டு வந்த காலத்தில் (சுமார் 50 ஆண்டுகளுக்கு முன்பாக) பல ஷிப்பிங் ஏஜென்சி மூலம் தூத்துக்குடியில் ஏற்றுமதி, இறக்குமதித் தொழில்கள் சிறப்பு மிக்க தொழிலாக நடத்தப்பட்டு வந்தன. விருதுநகர் வன்னியப்பெருமாள் மகனார் திரு. தனுஷ்கோடி நாடார் அக் காலத்தில் பி.ஏ. படித்தவர். ஆங்கிலத்தில் பேசவும், எழுதவும் புலமை பெற்றவர் என்ற காரணத்தினால் விருதுநகரிலிருந்து தூத்துக்குடிக்கு வந்து ஷிப்பிங் ஏஜென்சியில் இருந்தார். அவர் புலமை ஆங்கிலேய வணிகர்களிடத்தில் பெரும் மதிப்பை ஏற்படுத்தியது.

வெறும் சரக்குகளை மட்டும் இறக்குமதி செய்து வந்த ஷிப்பிங் கம்பெனி மூலம் திரு. தனுஷ்கோடி நாடார் முயற்சியினால் முதன் முதலில் கொழும்புவிலிருந்து தேங்காய் எண்ணெய் வரவழைக்கப்பட்டுத் தமிழ் நாட்டில் இரு மாவட்டங்களில் விநியோகிக்கப்பட்டது. அதன் வரவேற்பும், வெற்றியும் கண்டு கொழும்புவிலிருந்து தேங்காய் எண்ணெய்க்கான கொப்பரைகளை வாங்கி, இங்கேயே எண்ணெய் தயாரித்து விற்பனை செய்ய 1942இல் வி.வி.டி. நிறுவனம் துவக்கப்பட்டது. தூத்துக்குடிக்குச் சாமான்கள் ஏற்றி வரும் லாரி டிரைவர்கள் மூலம் தரமான எண்ணெய் என்ற பெயர் பெற்ற வி.வி.டி. தேங்காய் எண்ணெய் எடுத்துச் செல்லப்பட்டுப் பல இடங்களில் விநியோகிக்கப்பட்டுச் சிறப்பாக வியாபாரம் நடந்தது.

கொழும்புவிலிருந்து கொப்பரைகளை வாங்குவதை அரசு தடுத்து நிறுத்தியதன் காரணமாக, அதே தரம் கொண்ட தேங்காய்களை கேரளாவில் உள்ள கோழிக்கோட்டிலிருந்து தருவிக்க ஏற்பாடு செய்யப்பட்டது. தேங்காய் எண்ணெயின் தரத்தில் சிறப்புக் கவனம் செலுத்தித் தயாரித்தார்கள். தமிழ் நாடெங்கிலும் வியாபாரம் விரிவடைந்து, ஆரம்பத்தில் ஒரு மாதத்தில் 1,25,000 லிட்டர் உற்பத்தியிலிருந்து தற்போது தமிழ் நாட்டின் தேவையான 8 ஆயிரம் டன்னில் 30 சதவீதம் வி.வி.டி. நிறுவனம் தயாரிக்கிறது.

1952 இல் திரு. வி.வி.டி. நித்யானந்தம் இதன் பொறுப்பேற்றுக் கொண்டார். திரு. வி.வி.டி. தயானந்தம், திரு வி.வி.டி. ரவீந்திரன், திரு. வி.வி.டி. பிரும்மானந்தம், திருமதி டி. ருக்மணி அம்மாள் இதன் டைரக்டர்கள். தற்போது (இவர்களது மகன்கள்) மூன்றாவது தலைமுறை மக்கள் திறம்பட நிர்வகித்து வருகிறார்கள் என திரு. நித்யானந்தம் பெருமையுடன் கூறுகிறார்.

நறுக்கப்பட்ட தேங்காய் செக்கில் ஆட்டப்படுகிறது.





'வி.வி.டி. கோல்ட்' எண்ணெய் நிரப்பப்படுகிறது.

வி.வி.டி. தெருவில் நுழைந்தவுடனேயே தேங்காய் எண்ணெயின் மணம் நாசியைத் துளைத்தது. சுமார் 3 ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ள தொழிற்சாலையில் முதலில் நல்ல நேர்த்தியான தேங்காய்கள் வரவழைக்கப்பட்டு உடைத்து உள்ளிருக்கும் பருப்பை வெயிலில் காய வைக்கிறார்கள். இப்படி ஒரு வாரம் (8 நாள்) காயவைத்த தேங்காய், எண்ணெய் எடுக்கத்தக்க கொப்பரைகளாகின்றன. இதிலிருந்து தரம் பிரித்து மூட்டைகளாகக் கட்டி, நிறுவை செய்து 'கட்டர்' இயந்திரத்திற்கு அனுப்பப்படுகிறது. இங்கு கொப்ரைகள் சிறு துண்டுகளாக்கப்படுகின்றன.

இச் சிறு துண்டுகள் ரோட்டரி செக்குகளிலிட்டு 'குளு' என்ற பசை சேர்த்து அரைக்கப்படுகிறது. இப்பசை சேர்க்காவிட்டால் தேங்காய் மசிந்து எண்ணெய் எடுக்க முடியாது என்ற விவரம் அறிந்து கொண்டோம். வெளிவரும் எண்ணெய் ஒரு குழாய் மூலம் டஸ்ட் டாங்கியில் நிரப்பப்படுகிறது. இது சுத்திகரிக்கப்படாத கச்சா எண்ணெய். அதிலிருந்து 32 லேயர் கொண்ட பில்டர் வழியாக செலுத்தப்படுவதன் மூலம், தூய்மையான, தெளிவான, வாசனையுள்ள, கலப்படமற்ற தேங்காய் எண்ணெய் தயாரிக்கப்படுகின்றது. இது ஒரு பெரிய 'டாங்கில்' சேர்க்கப்பட்டு அங்கிருந்து கைபடாவண்ணம் குழாய் மூலமாகவே பெரிய டின்களில் மொத்த விற்பனைக்கும், சிறு பிளாஸ்டிக் பேக்குகளில் 500 மில்லி, 200 மில்லி, 100 மில்லி அளவுகளில் சில்லறை விற்பனைக்கும் தானியங்கி இயந்திரத்தின் மூலம் நிரப்பப்பட்டு, சீல் வைத்து வியாபாரத்திற்கு எடுத்துச் செல்லப்படுகிறது.



பிரியம் நல்லெண்ணெய் வியாபாரத்துக்குத் தயார்.

இவர்களுக்குத் தேவையான பிளாஸ்டிக் கன்டைனர்களும், டின்களும், இவற்றைச் சந்தைக்கு எடுத்துச் செல்ல ஏற்றபடி 'பாக் செய்ய' 'காருகேட்' டப்பாக்களும் இவர்களே தயாரிக்கின்றனர் என்பது இவர்களது சிறப்பம்சமாகும்.

தேங்காய் ஓடுகளிலிருந்து 'Activated carbon powder' தயாரிக்கிறார்கள். இது தண்ணீர் சுத்திகரிக்க, குளிர்பானங்கள் தயாரிக்க, சுற்றுப்புறச் சூழலைப் பாதுகாக்க என்று பல்வேறு தேவைகளுக்கு உபயோகிக்கப்படுகின்றது. தூத்துக்குடியிலிருந்தும் ஸ்பிக் நிறுவனத்தில் இருந்தும் வெளிவரும் கரும்புகை சுற்றுப்புறச் சூழலைப் பாதிக்காவண்ணம் இருக்க இவர்கள் தயாரிப்பான activated carbonஐ உபயோகிக்கிறார்கள்.



வி.வி.டி. தேங்காய் எண்ணெய் தானியங்கி இயந்திரம் மூலம் நிரப்பப் படுகிறது

தேங்காயிலிருந்து எடுக்கப்படும் இளநீர், தேங்காய் வளர்ச்சி போர்டு உதவியுடன் தயாரிக்க இருக்கும் 'கோகனட் வினிகர்' ஐரோப்பிய நாடுகளில் பெரிதும் விரும்பப்படும்

தரக்கட்டுப்பாட்டு அலுவலகம்.

ஒன்றாகும். ஒரு வெளிநாட்டு நிறுவனம் இவர்கள் பாக்டரியைச் சுற்றிப் பார்க்கும் போது கொப்பரைகளைக் காயவைக்கும்போது அதிலிருந்து ஒருவித வாயு (Gas) வெளியாவதைத் தெரிவித்துள்ளார்கள். இதன் மூலமும் பயன் பெறலாம் என அறியப் பட்டுள்ளது. ஆக இந் நிறுவனத்தில் தேங்காயாய் வந்து பல வடிவங்களில், எண்ணெய், மாட்டுத் தீவனம், activated carbon, வினிகர், காஸ் எனப் பல பொருட்களாக வெளி வருகிறது. எதையும் கழிவு என ஒதுக்கிவிடாமல் எல்லாவற்றையும் உபயோகிப்பதன் மூலம் இந் நிறுவனம் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்குப் பெரிதும் பாடு படுவது தெரிகிறது.

தேங்காய் எண்ணெய் தவிர 'பிரியம்' நல்லெண்ணெய், ஆரோக்யா வெஜிடபிள் ஆயில், ஆம்லா ப்ளஸ், பிரம்யி ஆயில் என எண்ணெய் வகைகளிலும், டீ, ஷிப்பிங், பாக்கிங், கெமிகல், மினரல், உப்பு மற்றும் பண்டகசாலை (Warehousing) எனப் பல துறைகளில் விரிவு படுத்தியுள்ளார்கள்.

வி.வி.டி. எண்ணெய்க்கான 'கன்டெய்னர்களில் பெயர் அச்சடிக்கப்படுகின்றன.



தற்போதைய விற்பனையான ரூ. 25 கோடியிலிருந்து 2000 ஆம் ஆண்டு ரூ. 1000/- கோடிக்கு உயர்த்தத் திட்டமிடப்பட்டுள்ளது. இந்திய நாட்டின் முக்கியப் பிரச்னையான வேலையில்லாத் திண்டாட்டத்தை முறியடிக்க இவர்கள் பங்கில் இந் நூற்றாண்டு முடிவிற்குள் 1000 நபர்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்கவும் முடிவு செய்யப்பட்டுள்ளது. சமூக நலன்களிலும் அக்கறை கொண்டு வி.வி.டி. காந்திமதி அம்மாள் அறக்கட்டளை மூலம் பள்ளி நிறுவனங்களை நடத்துவது தவிர, பல்வேறு சமூக நலன்களிலும் பங்கு கொண்டு வி.வி.டி. நிறுவனம் சிறப்புற வளர்ந்து வருகிறது என்பது ஒவ்வோர் இந்தியனும் பெருமைப்பட வேண்டிய ஒன்றாகும். ●

# தொல்காப்பியம்

அருட்செல்வர்
நா. மகாலிங்கம்

பேரண்டத்தில் அழகான பொருள் மனிதன்தான். உயர்ந்த பொருளும் மனிதன்தான்.

மனிதனின் முகத்தின் அழகை பல ஆயிரம் ஆண்டுகளாகக் கவிஞர்கள் வர்ணித்துக் கொண்டே இருக்கிறார்கள்.

அவன் முகத்தில் இருக்கும் கண்கள் அறிவுத் தத்துவங்களை ஊடுருவிப் பார்க்கும் சாளரங்களாக விளங்குகின்றன.

மனிதனுடைய உயிர் இருக்கும் பொன் அம்பலமோ கடவுளே ஆனந்த நடனம் இடும் அரங்கமாக இருக்கிறது.

சுத்தமான தூய அறிவு மயமாக இருப்பது ஆன்மா. அது உணர்ச்சி மயமாக உடம்பு முழுதும் ஊடுருவிப் பரவி நிற்கிறது.

ஆனாலும் எல்லாம் இருட்டுக்குள் - மௌனமாகவே இருந்தன. கொஞ்சம் கொஞ்சமாக இருட்டுக்குள் ஒளி வந்துகொண்டு இருக்கிறது.

இந்தச் சமயத்தில் மனம் என்னும் தத்துவம் தோன்றியது.

அது ஒவ்வொன்றையும் பற்றிச் சிந்திக்கத் தொடங்கியது. ஏன்? தன்னைப் பற்றியும் சிந்திக்க ஆரம்பித்தது.

மனிதனிடம்தான் மனம் என்னும் அறிவுக் களஞ்சியமே இருக்கிறது. தெய்வ ஒளியுடன் பிரகாசிக்கிறது மனம். ஒளி ஊற்றாய் இருக்கிறது மனம்.

ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாகத் தங்கத்தை வாட்டி வாட்டி அனலில் புடம் போட்டது போல இயற்கையும் மனதை வாட்டி வாட்டி எடுத்தது.

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக மனதை அழுத்திக்கொண்டிருந்த சுமை இறங்கத் தொடங்கியது. தங்கச் சிலைபோல ஒவ்வொரு சொல்லாக மொழியைப் பெற்றெடுத்து விட்டது மனம்.

மொழி பிறந்தவுடன் மனதைக் கட்டிப்பிடிக்க முடியவில்லை. நினைத்ததை எல்லாம் மற்றவர்களுக்குச் சொல்ல முடிந்தது. சொன்னதை எல்லாம் நினைவில் வைத்துக் கொள்ளவும் முடிந்தது.

இது சாதாரணமான காரியம் அல்ல. மனிதனுக்குக் கிடைத்த வரம்.

தன்னுடைய அனுபவம், வரலாறு, உணர்ச்சி, வெற்றி, தோல்வி எல்லாமே தன்னைப் போல் நிலைபெற்று இருப்பதைக் கண்டான்.

தான் எண்ணுவதைத்தம் வருங்கால சந்ததிக்குச் சொல்லவும் எழுதவும் தொடங்கினான். அப்படி எழுதத் தொடங்கும்போது தான் அவன் சிந்தனை குழம்பியது. அது தன் இஷ்டத்துக்குச் செயல்படத் தொடங்கியது.

மனிதன் தன்னுடைய சொல்லிலும், எழுத்திலும் போதுமான ஒழுங்கில்லை என்பதை உணர்ந்தான். தன் சிந்தனையை நெறிப்படுத்த வேண்டும். அதற்கு ஒரு வரையறை செய்ய வேண்டும். இலக்கணம் வேண்டும் என்று அவனுக்குத் தோன்றியது.

மனிதன் எப்படிப் பேசுவது, எப்படி எழுதுவது, எப்படி வாழ்வது என்பதற்கு இலக்கணம் வகுக்க முயன்றான்.

அப்படி இலக்கணம் வகுக்க ஆரம்பித்த முதல் இனம் தமிழ் இனம் என்று உலக வரலாற்று ஆசிரியர்கள் கண்டுபிடித்து இருக்கிறார்கள்.

பல ஆயிரம் ஆண்டுகளாக இலக்கணம் செம்மைப்படுத்தப் பட்டு, புதிய புதிய இலக்கணங்கள் தோன்ற ஆரம்பித்தன.

அப்படித் தோன்றிய இலக்கணம் செம்மையாகப் பூரணத்வம் பெற்று விளங்கிய காலம் நமக்குத் தெரியவில்லை.

அவ்வாறு மொழிக்கு இலக்கணம் வகுத்து உலகில் நாகரிகமாக வாழ்ந்த மக்கள் குமரிக் கண்டத்தில் இருந்த மக்கள்தான் என்பதை மட்டும் உலக மனித இயல் ஆய்வாளர்கள் உறுதிப்படுத்தி இருக்கிறார்கள்.

குமரிக் கண்டம் ஏழு தடவை கடலால் மூழ்கடிக்கப்பட்டு இருக்கிறது. அங்கு வாழ்ந்த மக்களால் சேகரித்து வைக்கப்பட்ட இலக்கியச் செல்வங்கள் பெரும்பகுதி அழிந்துவிட்டன. அதில் அவர்கள் தங்கள் மொழிக்காக அமைத்து வைத்திருந்த இலக்கணம் அழிந்து விட்டது.

இயற்கைப் பிரளயத்தில் கடலால் கொள்ளப்பட்ட பழம் தமிழ் நாட்டில் இருந்து பலர் எஞ்சி இருந்த தமிழ் நிலப்பகுதிக்குத் தப்பி வந்தனர். அப்படித் தப்பி வந்தவர்களில் பாண்டிய மன்னன் சிவனும் இருந்தான். குமரிக் கண்டத்தை ஆண்டு வந்த சிவன் என்ற பாண்டிய மன்னன், மக்களின் நாகரிகத்தையும், பண்பாட்டையும், ஒழுக்கத்தையும் வளர்ப்பதற்காக எஞ்சி இருந்த அறிஞர் பெருமக்களைக் கொண்டு ஒரு சங்கம் அமைத்தான்.

அந்தச் சங்கத்தின் தலைவனாகத்தானே இருந்தான். அவனால் ஏற்படுத்தப்பட்ட தமிழ்ச் சங்கத்தின் தமிழ்ப் பீடத் தலைவருக்கு அகத்தியர் என்று பெயர் சூட்டினான்.

தமிழ்ப்பீடத்தின் தலைவரான அகத்தியர் பழந்தமிழ் நாட்டில் இருந்த பல துறைகளைச் சேர்ந்த நூல்களையும் முறையாகக் கற்றுத் தேர்ந்த சான்றோர். பல ஆயிரம் ஆண்டுகளாகப் பாதுகாத்து வந்த பல உயர்ந்த தமிழ் நூல்கள் கடலில் அழிந்து போனதை எண்ணி மனம் வருந்தினார்.

பாண்டிய மன்னன் சிவனின் ஆதரவுடன் தாம் கற்றவற்றை எல்லாம் திரட்டி ஒரு நூலாக எழுதித் தமிழரின் பண்பாட்டைப் பாதுகாக்க வேண்டும் என்ற உந்தலில் ஒரு நூலை எழுதினார்.

இந்த நூலை எழுதுவதற்கு முன்னால் கடலால் கொள்ளப்பட்ட பழந்தமிழ் நாடான குமரி நாட்டின் எஞ்சியுள்ள தமிழ் நிலப்பகுதி முழுவதையும் அதன் நாகரிகத்தையும், பண்பாட்டையும் அறிவதற்காகச் சுற்றிப் பார்த்தார்.

தாம் கற்று இருந்த பல்துறை நூல்களின் சுவடிகள் எஞ்சிய தமிழ் நிலத்தில் எங்காவது இருக்கின்றனவா? என்று ஆராய்ந்தார். அவர் எதிர்பார்த்த அளவு போதுமான சுவடிகள் அவருக்குக் கிடைக்கவில்லை.

எனவே பழந்தமிழ் மக்களின் பண்பாட்டையும், நாகரிகத்தையும் எடுத்துக் காட்டும் சிறந்த ஒரு நூலைப் புதிதாகவே இயற்றி ஆக வேண்டுமென்ற முடிவுக்கு வந்தார். அவர் முடிவைப் பாண்டிய மன்னன் சிவனும் வரவேற்று ஊக்குவித்தான்.

இந்த நூல் பழந்தமிழ் மக்களின் வரலாற்று முறைகளையும், அவர்கள் வாழ்க்கைப் பண்பாட்டையும், நாகரிக வளத்தையும், அவர்கள் பேசி வந்த தமிழ் மொழியின் சிறப்பையும் திருத்தமாக எடுத்துக்காட்டும் இலக்கிய நயம் நிரம்பிய இலக்கண நூல். அதற்கு 'தொல்காப்பியம்' என்று பெயரிட்டான்.

தொல்காப்பியத்தை தொல்-காப்பு-இயம் என்று பிரித்துப் பொருள் கொள்ள வேண்டும்.

தொல் என்றால் பழமையான தமிழ் மரபு.

காப்பு என்றால் அந்த மரபைப் பாதுகாக்கும் முறை.

இயம் என்றால் பாதுகாக்கும் முறையை நயமாக இயம்புகின்ற நூல் என்று பொருள்.

தொல்காப்பியத்தில் அமைந்திருக்கும் இந்த அடிப்படைப் பொருளைப் புரிந்து கொள்ளாமல் தொல்காப்பியம் என்ற சொற்றொடரை "தொல்+காப்பியம்" என்று பிரித்துப் பொருள் கூறி வருகிறார்கள்.

"காப்பியம்" என்ற சொல் தொல்காப்பியம் தோன்றிய காலத்தில் வழக்கில் இல்லாத சொல்.

'காவியம்' என்ற சம்ஸ்கிருதச் சொல்லைப் பின்பற்றி அமைக்கப்பட்ட புதிய சொல் 'காப்பியம்'.

நாட்டு வளம், நகர வளம், ஒப்பற்ற ஒரு தலைவனின் பெருமை முதலியவற்றைப் பற்றிக் கூறுகிற பிற்கால இலக்கிய வகையைச் சேர்ந்தது, காப்பியம்.

தொல்காப்பியத்தைப் 'பழைமையான காப்பியம்' என்று பொருள் கொள்வது தமிழ்மொழியின் வரலாற்றுக்கும் இலக்கண வரம்புக்கும் பொருந்தாது.

தொல்காப்பியத்தை இயற்றியவர் தொல்காப்பியன் என்று சொல்லி வருகிறார்கள். அப்படிச் சொல்லி வருபவர்கள் அந்த நூல் தோன்றிய காலத்தையும், அதன் வரலாற்றையும், அதை இயற்றிய தமிழ்ச் சங்கத்தைப் பற்றியும், தமிழ்ப் பீடத்தின் தலைமை ஆசிரியருடைய வரலாற்றைப் பற்றித் தெரியாமையால் சொல்கிறார்கள்.

தொல்காப்பியம் என்ற நூலின் ஆசிரியர் பெயர் 'தொல்காப்பியர்' என்று சொல்வது தொல்காப்பியம் என்ற நூலை இயற்றியதால் அந்த நூல் ஆசிரியருக்கு ஏற்பட்ட காரணப் பெயராகும்.

தொல்காப்பியத்தை இயற்றியவர் அந்த நாளில் தமிழ்ச் சங்கம் நடத்தி வந்த தமிழ்ப் பீடத்தின் தலைவரான அகத்தியர்.

அகத்தியர்தான் தொல்காப்பியத்தை இயற்றியிருக்க முடியும் என்பதற்குப் பல வரலாற்று ஆதாரங்கள் இருக்கின்றன.

அவற்றுள் ஒன்று "சிவன் தமிழை அகத்தியருக்குக் கற்பித்தான்" என்பது.

"ஆதியில் தமிழ் நூல் அகத்தியர்க்கு உணர்த்திய மாது ஒரு பாகன்" என்று சிவன் தமிழை அகத்தியருக்குக் கற்பித்தான் என்று பாரதியார் சொல்லி இருக்கிறார்.

குமரி நாடு என்று புகழ் பெற்று விளங்கிய பழந்தமிழ் நாட்டை ஆண்டு வந்த பாண்டிய மன்னர்கள் வரிசையில் முதன் முதலில் ஆண்ட பாண்டிய மன்னன் சிவனைத்தான் இலக்கியங்கள் "ஆதிசிவன்" என்று குறிப்பிடுகின்றன.

இவன்தான் முதன் முதலில் தமிழ்ச் சங்கம் வைத்துத் தமிழை வளர்த்தான். இவனைத் தொடர்ந்து இவனுக்குப் பின் குமரி நாட்டை ஆண்டு வந்தவர்கள் தமிழ்ச் சங்கத்தின் மூலமாகத் தமிழைத் தொடர்ந்து காலத்துக்கு ஏற்ப வளர்த்திருக்கிறார்கள்.

நமது தமிழ் இலக்கியங்களில் கிடைக்கும் சான்றுகளின்படி மூன்று தமிழ்ச் சங்கங்களைப் பற்றிய விவரங்கள்தான் தெரிகின்றன.

குமரி நாடு மூன்று முறை கடலால் கொள்ளப்பட்டு இருக்கிறது. அந்தப் பகுதியில் இருந்த தமிழ்ச் சங்கம் அந்தச் சூழலில் பாதிக்கப்பட்டு இருக்கிறது.

குமரி நாட்டின் ஒவ்வொரு அழிவுக்குப் பிறகும் எஞ்சிய தமிழ் நிலப்பகுதியில் தமிழ்ச் சங்கம் புதுப்பிக்கப்பட்டு இருக்கிறது. இவ்வாறு மூன்று முறை புதுப்பிக்கப்பட்டிருப்பதாகத் தமிழ் இலக்கியங்கள் மூலமாக அறிகிறோம்.

இலங்கை வரலாற்று நூலான மகாவம்சம் முதலிய நூல்களில் பாண்டிய மன்னர்கள் ஏழு தமிழ்ச் சங்கங்கள் வைத்துத் தமிழை வளர்த்திருக்கிறார்கள் என்ற செய்திகள் இருக்கின்றன.

மகாவம்சம் நூலின்படிப்பார்த்தால் குமரி நாடு ஏழு முறை கடலால் அழிக்கப்பட்டு இருக்கிறது என்று தெரிகிறது. இதைப் பற்றிய விவரங்களை தமிழ் நாட்டைச் சுற்றி இருக்கும் நாடுகளின் வரலாற்று நூல்களும் தெரிவிக்கின்றன.

நில நூல் ஆய்வாளர்கள் மூலமாகவும் இந்த உண்மை உறுதிச் செய்யப்பட்டிருக்கிறது.

தமிழ்ச் சங்கத்தின் தலைவர்களாகப் பாண்டிய மன்னர்கள் இருந்திருக்கிறார்கள். இருந்தாலும் தமிழ்ப் பீடத்தைத் தலைமை தாங்கி நடத்தி வந்த அறிஞர்களுக்கு அகத்தியர் என்றே பெயர் வழங்கப்பட்டு வந்திருக்கிறது.

எனவே அகத்தியர் என்ற பெயரில் பலர் தமிழ்ப் பீடத்தின் தலைவராக விளங்கித் தமிழை வளர்த்திருக்கிறார்கள்.

குமரி நாட்டை முதன் முதலில் ஆண்ட ஆதிசிவனின் பெயரையே அவன் பரம்பரையினர் பலரும் தொடர்ந்து வைத்துக்கொண்டு வந்திருக்கிறார்கள். இதனால் பழந்தமிழ் நாடான குமரி நாட்டை ஆண்ட பாண்டிய மன்னர்கள் பலருக்கு சிவன் என்ற பெயரும் அவ்வப்போது இருந்து வந்திருக் கிறது.

முதல் பாண்டிய மன்னன் ஆதி சிவன் குமரி நாடான தமிழ்நாட்டை ஆண்ட காலத்தில்தான் குமரி நாட்டு நிலத்தின் பெரும் பகுதி கடலுக்கு இரையாகி இருக்கிறது. இது முப்பத்து இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் நடை பெற்றதாக பூமி சாத்திர மேதை கள் கூறுகிறார்கள். புராணங் களில் வரும் அரச மரபுக் குறிப்பு களுக்கும் சம்பவங்களுக்கும் இது பொருத்தமாக இருக்கிறது.

இரண்டாவது தடவையாக ஒரு முறை குமரி நாட்டின் பெரும் பகுதி கடலால் அழிக்கப்பட்டிருக் கிறது. இது நடந்த காலம் இன் றைக்குப் 19 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் என்று நில நூல் அறிஞர்கள் கணக்கிட்டு இருக்கிறார்கள். இந்தச் சமயத்தில் குமரி நாட்டை ஆண்ட பாண்டிய மன்னனின் பெயரும் சிவன்தான். இதையும், புராணங்களில் காணப்படும் சம் பவங்களும், பாண்டிய அரச மரபு அட்டவணையும் ஏற்றுக்கொள் கின்றன.

மூன்றாம் முறையாகப் பத்தா யிரம் ஆண்டுகளுக்கு முன் ஒரு தரம் குமரி நாட்டின் பெரும் பகுதி கடலுக்கு இரையாகிவிட்டது. இந்தப் பிரளயத்தின் போதும் குமரி நாட்டை ஆண்டு வந்த மன்னனின் பெயர் சிவன்தான்.

கடலில் மூழ்கிவிட்ட குமரி நாட்டுத் தமிழ் நிலத்திலிருந்து தப்பி வந்த தமிழ் மக்கள் வாழ்வ தற்குக்காடுகளை அழித்து மக்கள் வாழ்வதற்கு வேண்டிய வசதியான நிலம் அளித்தான் பாண்டிய மன்ன னான சிவன்.

பாண்டிய மன்னனான சிவனைத்தான் "நிலம்தரு திருவின் நெடியோன்" என்று தமிழ் இலக் கிய நூல்கள் பாராட்டுகின்றன.

தொல்காப்பிய நூலுக்குப் பிற் காலத்தில் முன்னுரை இயற்றிய பனம்பாரனார் "நிலம்தரு திருவின் நெடியோன் அவையிலே மீண்டும் தொல்காப்பியம் அரங்கேறியது" என்று கூறுகிறார்.

இப்போது தொல்காப்பியம் தோன்றிய காலத்தைத் தெரிந்து கொள்வதற்கு அசைக்க முடியாத வரலாற்றுச் சான்றுகளும் பல கிடைத்திருக்கின்றன.

குமரி நாட்டை ஆண்ட பாண்டிய மன்னர்களின் வரிசையில் வந்த சிவன் என்னும் ஒரு மன்னன் ஆட்சிக் காலத்தில் குமரி நாடான பழந்தமிழகத்தின் வேறு பகுதியை ஆண்ட சக்ரவர்த்திகளில் ஒருவன் தக்கன். அவன் மகளைப் பாண் டிய மன்னன் சிவன் திருமணம் செய்துகொண்டான்.

தக்கன் ஆண்ட காலத்தை வரலாற்று நூல்கள் தெளிவாகக் குறிப்பிடுகின்றன. அந்த விவ ரத்தைக் கொண்டு இக்கால நவீன வான சாத்திரத்தின் துணையால் சக்ரவர்த்தி தக்கன் குமரி நாடான தமிழகத்தை ஆண்ட காலம் 19 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் என்று கணித்திருக்கிறார்கள்.

இந்த உண்மையை "தக்க யாகப் பரணி" என்ற நூலும் தெரிவிக் கிறது.

தக்கன் காலத்தில் ஒரு முறை குமரி நாட்டு நிலத்தின் பெரும் பகுதி கடலில் மூழ்கடிக்கப்பட் டிருக்கிறது.

அதன் பிறகு, ஒன்பதாயிரம் ஆண்டுகளுக்குப் பின் மீண்டும் ஒரு முறை குமரி நாட்டின் நிலத்தின் பெரும் பகுதி கடலுக்கு இரையாகி விட்டது.

இந்தப் பாண்டிய மன்னன் சிவனின் பேரர்களில் ஒருவன் தொன்மனு. பாண்டிய மன்னர் பரம்பரையில் வந்த இந்தத் தொன்மனு தமிழ் நாட்டின் மன்ன னாக முடி சூடிக் கொண்ட ஆண்டு, திங்கள், நாள் முதலிய வற்றை எல்லாம் தக்க யாகப் பரணி, கலிங்கத்துப் பரணி முதலிய நூல்களுக்கு உரை எழு திய ஆசிரியர்கள் தெளிவாக ஐயம் திரிபுக்கு இடம் இல்லாமல் சொல்லி இருக்கிறார்கள்.

இந்தச் செய்திகளில் வரும் வருடம், மாதம், தேதிகளை அடிப் படையாக வைத்து இன்றைய நவீன வான சாத்திரத்தின் துணை யுடன் தொன்மனு முடிசூட்டிக் கொண்ட காலத்தை துல்லியமாகக் கணித்திருக்கிறார்கள்.

பாண்டிய மன்னன் தொன்மனு முடிசூட்டிக்கொண்ட நாள் கி.மு. 8576 ஆம் ஆண்டு, நவம்பர் மாதம், இருபத்தோராம் நாள், வெள்ளிக் கிழமை என்றும் கணித்து இருக்கி றார்கள். இவ்வாறு கணித்துக் காட்டிய வானஇயல் அறிஞரான ஜோஸப்ங்கேலிங்கர் என்பவர் குறிப்பிடத்தக்கவர். பாண்டிய மன்னன் தொன்மனு, இவனுக்கு முன் குமரி நாட்டை ஆண்ட பாண் டிய மன்னன் சிவனின் பேரர் களில் ஒருவன். எனவே தொன் மனுவின் பாட்டனார் சிவன் குமரி நாட்டை ஆண்ட காலம் கி.மு.8676 ஆம் ஆண்டாக இருக்கலாம் என்று வரலாற்று ஆசிரியர்கள் உறுதி படுத்தி இருக்கிறார்கள். தொன் மனுவைப் பற்றி சேக்கிழாரும் சொல்லி இருக்கிறார்.

ஏறக்குறைய 10676 ஆம் ஆண் டில் பாண்டிய மன்னன் சிவ னுடைய தலைமையில் தமிழ்ச்சங் கத்தில் இருந்த அறிஞர் பெரு மக்களின் துணையுடன் அந்தச் சங்கத்தின் தமிழ்ப் பீடத் தலை வர் அகத்தியர் தொல்காப்பி யத்தை இயற்றியிருக்கிறார் என்று தெளிவாகத் தெரிந்து கொள்ள முடிகிறது.

இந்தக் காலக் குறிப்பை மகா வம்சம் என்ற இலங்கை வரலாற் றைக் கூறும் கல்வெட்டும் தெரி விக்கிறது உலகமொழிகளில் இலக் கணம் தோன்றுவதற்கு முன்னால் தோன்றிய இலக்கண நூல் தொல் காப்பியம். கி.மு. 8756 ஆண்டு களுக்கு முன்னால் தோன்றிய, அதாவது பத்தாயிரம் ஆண்டு களுக்கு முன்னால் இலக்கிய நயத்துடன் கூடிய இலக்கண நூல். இதை உலகில் உள்ள எல்லா மொழி வரலாற்று ஆசிரியர்களும் ஏற்றுக்கொள்கிறார்கள்.

இதைத்தான் மகாகவி பாரதியார் –

"ஆதிசிவன் பெற்றுவிட்டான் – என்னை
ஆரிய மைந்தன் அகத்தியன் என்றோர்
வேதியன் கண்டு மகிழ்ந்தே – நிறை
மேவும் இலக்கணம் செய்து
கொடுத்தான்"

என்று தமிழ்த்தாய் பெருமிதத் துடன் சொல்வதாகப் பாடி இருக்கிறார்.

ஆதிசிவன் என்றால் 'இறைவன்' என்று பொருள் கொண்டு விடக்கூடாது. இறைவனுக்குத் தமிழில் 'சிவம்' என்று பெயர். இறைவன் திருமணம் புரிந்து கொண்டு நம்மைப்போல் குடித்தனம் நடத்துபவர் அல்லர். அவர் முழுமுதற்கடவுள். அருள்ஒளிமயமானவர். அண்டங்கள் எங்கும் நிலைத்து இருப்பவர். எல்லாப் பொருள்களிலும் நீக்கமற நிரம்பி விளங்குபவர்.

மகாகவி பாரதியார் கூறும் ஆதிசிவனோ குமரி நாட்டை ஆண்ட முதல் பாண்டிய மன்னன். இவன் காலத்தில் தமிழ்ச் சங்கத்தின் தமிழ்ப் பீடத்தின் தலைவராக இருந்தவருக்கு அகத்தியன் என்று பெயர். தமிழ்ப் பீடத்தின் தலைவரைத்தான் பாரதியார் ஆரிய மைந்தன் என்கிறார். ஆரிய மைந்தன் என்றால் தலைமைப் பீடத்தில் இருந்தவர் என்றுதான் பொருள்.

தொல்காப்பியம் தோன்றிய காலத்தில் குமரி நாடான பழம் தமிழ் நாட்டில் சாதிகள் இல்லை. தமிழர் என்ற ஒரே சாதிதான் இருந்தது. அவர்களில் அறிவர்கள் அதாவது உயர்ந்த விஞ்ஞானிகள் என்றும் சாதாரண மக்கள் என்றும் இரண்டு பிரிவுகள் மட்டுமே இருந்தன.

தொல்காப்பியத்தை இயற்றிய அகத்தியருக்குப் பின்னால் தமிழ்ப் பீடத்தின் தலைவர்களாகப் பல அகத்தியர்கள் புகழுடன் விளங்கி இருக்கிறார்கள். தமிழை வளர்த்திருக்கிறார்கள். அவர்கள் வேறு. தொல்காப்பியம் என்ற இலக்கண நூலை இயற்றிய அறிவரான அகத்தியர் வேறு.

தொல்காப்பியம் வெறும் மொழி இலக்கண நூல் மட்டும் அல்ல. தொல்காப்பியம் மக்கள் திருத்தமாக வாழ்வது எப்படி என்பதையும், திருத்தமாகப் பேசுவது எப்படி என்பதையும், திருத்தமாக எழுதுவது எப்படி என்பதையும் இணைத்துக் கூறும் ஓர் இணையற்ற வாழ்க்கை நூலாகும். நமது பழந்தமிழ் மக்களின் வாழ்க்கை இலக்கணத்தையும், யோகம், ஞானம் போன்ற நிலையான வாழ்க்கையை விளக்கும் இணையற்ற நுட்பங்களையும் இலக்கிய நயத்துடன் கூறும் ஒப்பற்ற இலக்கண நூல்.

மற்ற மொழிகளில் உள்ள இலக்கண நூல்கள் எல்லாம் திருத்தமாகப் பேசுவதற்கும், திருத்தமாக எழுதுவதற்கும் மட்டுமே கற்பிப்பதற்காக எழுதப்பட்ட நூல்கள்.

தொல்காப்பியமோ மக்களுக்கு வாழ்க்கை ஒழுக்கத்தையும், பேச்சு ஒழுக்கத்தையும், எழுத்து ஒழுக்கத்தையும் கற்பிப்பதற்காகவே உருவாக்கப்பட்ட மிக உன்னதமான நூல்.

உலக மொழிகள் எதிலும் மக்கள் வாழ்க்கை ஒழுக்கத்துக்கும், பேச்சு ஒழுக்கத்துக்கும் எழுத்து ஒழுக்கத்துக்குமாகச் சேர்த்து கற்பிக்கும் இலக்கண நூல் கிடையாது.

தொல்காப்பியம் ஒன்றுதான் எழுத்து, சொல், பொருள் என்று மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு இருக்கிறது.

பொருள் என்றால் ஒழுக்கம் என்று அர்த்தம். மக்கள் வாழ்க்கையின் அடிப்படையாக இருக்கும் இல்லற வாழ்க்கையைப் பற்றியே "பொருள் இலக்கணம்" உயர்த்திச் சொல்கிறது. அதனுடன் தொடர்பு உடைய ஞானயோக வாழ்க்கையைப் பற்றியும், சமுதாய வாழ்க்கையைப் பற்றியும் தொல்காப்பிய பொருள் இலக்கணம் மேலும் விரித்து விளக்கி இருக்கிறது.

தொல்காப்பியம் தமிழ் மொழியின் எழுத்துகள் மொத்தம் முப்பத்து மூன்றுதான் என்பதை அழுத்தம் திருத்தமாகச் சொல்கிறது.

எல்லா மொழிகளுக்கும் எழுத்தின் அடிப்படை, 'ஒலி வடிவம் வரி வடிவம் ஆகிய இரண்டுதான்" என்கின்றன. இவற்றை ஒலியங்கள், உருவங்கள் என்கிறார்கள். இந்த இரண்டு அடிப்படை அளவுகளைக் கொண்டு மொழிகளை ஆய்ந்து வருகிறார்கள்.

அகத்தியர் தமது தொல்காப்பியத்தில் மொழிகளுக்கு எழுத்தின் அடிப்படை அளவுகள் ஒலி வடிவம், சொல்லின் அடிப்படைக்கு வேண்டிய உருவ வடிவம் ஆகிய இரண்டுடன் வாழ்க்கை ஒழுக்கத்தின் அடிப்படை அளவாகிய 'பொருள்' என்பதையும் சேர்த்து மொழிக்கு 'அடிப்படை அளவுகள் மூன்று' என்று தெளிவாகவும், அழுத்தமாகவும் கூறுகிறார்.

அறிவரான அகத்தியர் கூறும் மொழி அடிப்படை அளவுகள் மூன்று என்பதை வைத்துக் கொண்டு மொழிகளை ஆய்ந்து பார்க்கவேண்டும். அப்படிச்செய்வார்களானால் நோவம் சாம்ஸ்கி என்ற மொழி நூல் அறிஞர் ஆரம்பித்த, 'உலகத்துக்கு ஒரே மொழி' என்ற இயக்கம் வெற்றி பெற்றுவிடும்.

தமிழ் அறிஞர்கள் என்று சொல்லிக் கொள்பவர்கள் தமிழைப் பற்றிப் பிறமொழி அறிஞர்கள் கூறுவதை வைத்துக் கொண்டு தமிழின் உண்மைத் தன்மையை உணராமல் தமிழைச் சீர்குலைத்து வருகிறார்கள். போலித்தனமாக அறிவு ஆணவத்துடன் கூடிய அறிஞர்களாகிய தமிழர்கள் தனித்தனியே நின்று தடுமாறி வருகிறார்கள்.

தொல்காப்பியம் இருபத்து ஏழு அத்தியாயங்களைக் கொண்டது.

அதில் எழுத்து இலக்கணம் பற்றி ஒன்பது அத்தியாயங்கள்; சொல் இலக்கணம் பற்றி ஒன்பது அத்தியாயங்கள்; பொருள் இலக்கணம் பற்றி ஒன்பது அத்தியாயங்கள் இருக்கின்றன.

இவற்றுள் பன்னிரண்டு அத்தியாயங்கள் கருவிகளைப் பற்றிப் பேசுகின்றன. பதினைந்து அத்தியாயங்கள் அந்தக் கருவிகளின் மூலமாக நடைபெறும் செயல்களைப் பற்றிக் கூறுகின்றன.

நமக்குக் கண், காது, மூக்கு, நாக்கு, உடல் ஆகிய ஐந்தும் கருவிப் புலன்கள். கை, கால், வாய், கருவாய், எருவாய் என்ற ஐந்தும் செயல் பொறிகள். கருவிப் புலன்கள் மூலமாகத்தான் செயல் பொறிகள் தொழிற்பட முடியும்.

இதுபோல அறிவராகிய அகத்தியர் தொல்காப்பியத்தில் பன்னிரண்டு கருவி இயல்களையும் பதினைந்து செயல் இயல்களையும் அமைத்திருக்கிறார். கருவி இயல்கள் மூலமாகத்தான் செயல் பொறிகள் தொழிற்பட முடியும் என்பதை மிக நுட்பமாக விளக்கி இருக்கிறார்.

நமது உடல் எப்படிப் புலன் பொறிகளால் பூரணத்வம் பெற்று இருக்கிறதோ அதுபோல் தொல்காப்பியமும் கருவி இயல்களாலும், செயல் இயல்களாலும் பரிபூரணத்வம் பெற்று நிறைமேவு இலக்கணமாக இருக்கிறது.

அகத்தியர் தம் தொல்காப்பியத்தில் இன்றைய விஞ்ஞானமும்,

விஞ்ஞானிகளும் இதுவரை எட்டாத அளவுக்கும் மேலாகச் சென்று ஒளியின் அதிர்வுகளையும், அதன் பல்வேறு நிறங்களையும், ஒலியின் அதிர்வுகளையும், அதன் மகத்தான ஆற்றல்களையும் எந்த விஞ்ஞானக் கருவிகளின் துணையும் இல்லாமல் ஞான யோகத்தால் பண்பட்ட தம்முடைய உடலின் ஆற்றல்கள் மூலமாகவே அனுபவித்து எழுதி வைத்திருக்கிறார்.

இதை அகத்தியரால் எப்படிக் கண்டுபிடித்து அனுபவிக்கவும், எழுதவும் முடிந்தது?

அகத்தியர் சாதாரண எழுத்து இலக்கண ஆசிரியர் மட்டும் அல்லர். அவர் ஒரு ஞான யோகி. அத்துடன் மனித உடல் கூறுகளின் நுட்பங்களையும், உலகத்தில் உலாவும் கோள்களின் நுட்பங்களையும், நட்சத்திரங்களின் நுணுக்கங்களையும், ஒலி, ஒளியாகவும், ஒளி, ஒலியாகவும் மாறும் கணித வித்தகத்தையும், அவற்றின் துல்லியமான அதிர்வுகளையும் நன்கு உணர்ந்து அனுபவிக்கும் அளவுக்கு அருள் ஆற்றலால் தம் உடலை வேதித்து உயர்ந்த நிலையில் அதை வைத்திருந்தவர்.

இறைவனின் அருளையே வழிகாட்டியாக வைத்துக்கொண்டு உயிர்களிடம் அன்பு செலுத்திய வண்ணம் வாழ்கின்றவன் பேசுகின்ற பேச்சுதான் 'பேச்சு' என்று பேச்சுக்கு மிக நுட்பமான இலக்கணம் சொல்கிறார் அகத்தியர். இதைத் தம் வாழ்க்கை அனுபவத்தில் இருந்தே அவர் சொல்லியிருக்கிறார்.

இவ்வாறு பேசுவதற்கு ஒளிகளின் மூலமாக உலகைப் பார்க்கும் கண்களையும், ஒலிகளின் மூலமாக உலகத்தின் செய்திகளைக் கேட்டு அறிந்து கொள்ளும் காதுகளையும் ஒன்றுடன் ஒன்று இணைந்து செயல்படும் வித்தகம் தெரிந்திருக்க வேண்டும்.

இதற்கு அருள் ஒளியால் தம் உடலை வேதித்து அதை உயர்ந்த நிலையில் வைத்துக் கொள்ளும் சித்தியில் வெற்றி பெற்றிருக்க வேண்டும்.

இன்று உலகில் செய்து வரும் விஞ்ஞான அற்புதங்களை எல்லாம் நம் உடல் மூலமாகவே செய்ய முடியும். அதற்கு விலங்கு வாழ்க்கையிலிருந்து உணவாலும், உணர்வாலும், ஒழுக்கத்தாலும் மனித வாழ்க்கைக்கும், மாமனித வாழ்க்கைக்கும் அதிலிருந்து இறை நுகர்வு வாழ்க்கைக்கும் மனிதன் உயர வேண்டும். இறை நுகர்வு வாழ்க்கையைப் பெற்ற மனிதனால் சாதிக்க முடியாத சாதனைகள் என்று உலகில் ஒன்றுமே கிடையாது.

அவர் கண்களும் செவிகளும் உலகத்தின் எல்லாப் பொருள்களின் ஆற்றல்களையும் மிகச் சுலபமாகவும், துல்லியமாகவும் அறிந்து கொள்ளும்.

இந்த உண்மையை திருமூலர், 'பாடி எழுகின்ற வேத ஆகமங்களும், சாடித்து எழுந்த சமருக ஓசையும், நாடியின் உள்ளாக நான் கண்ட ஆறே' என்று பாடி இருக்கிறார்.

இப்படிப்பட்ட உயர்ந்த தொல்காப்பிய நூலை படித்துப் புரிந்து கொள்ள வேண்டும் என்று பல முறை முயன்றேன். முடியவில்லை.

1971 ஆம் ஆண்டு ஒருநாள் மேலைச் சிவபுரியில் இருக்கும் கணேச செந்தமிழ்க் கல்லூரியில் நடைபெற்ற விழாவுக்குத் தலைமை வகித்தேன்.

அங்கிருந்த பேராசிரியர் மு. இராமலிங்கம் என்னும் அறிஞர் தொல்காப்பியத்தை நன்கு கற்றவர் என்பதை தெரிந்து கொண்டேன்.



அவரை இராமலிங்கர் பணி மன்றத்திற்கு ஆய்வாளராக வர முடியுமா? என்று அழைத்தேன். அவர் உடனே என் அழைப்பை ஏற்றுக்கொண்டு சென்ற இருபத்து இரண்டு ஆண்டுகளாக இராமலிங்கர் பணிமன்றத்தில் திரு அருட்பா ஆராய்ச்சியில் அவர் ஈடுபட்டு பல சன்மார்க்க நூல்களை இயற்றுவதற்குத் துணை புரிந்து வருகிறார்.

1975 ஆம் ஆண்டு கோவையில் தமிழ்ப் புலவர் குழுவைக் கொண்டு தொல்காப்பிய மாநாடு ஒன்றை நடத்தினேன்.

அங்கு பேசியவர்கள் தொல்காப்பியத்தைப் பற்றிப்பேசியதையும் மேலைச்சிவபுரி பேராசிரியர் மு. இராமலிங்கம் அவர்கள் எழுதிய 'தொல்காப்பிய வளம்' என்ற நூலுக்கும் ஒரு சம்பந்தமும் இல்லை என்பதைப் புரிந்து கொண்டேன்.

தொல்காப்பியத்தை வரலாற்று முறைப்படி பேராசிரியர் இராமலிங்கத்தைக் கொண்டு பதிப்பிக்கும் முயற்சியில் ஈடுபட்டேன்.

பேராசிரியர் இராமலிங்கம் 60 ஆண்டுகளுக்கு மேலாகத் தொல்காப்பியத்தை வரலாற்று முறைப்படி ஆய்ந்துகொண்டு இருப்பவர்.

சென்ற 18 ஆண்டுகளாக பேராசிரியர் மு. இராமலிங்கம் அவர்களும், இராமலிங்கர் பணி மன்றச் செயலாளராக இருக்கும் பகீரதன் அவர்களும் சேர்ந்து தொல்காப்பிய நூலை வரலாற்று முறைப்படியும், மொழியியல் அடிப்படையிலும் ஆய்வு செய்து முடித்திருக்கிறார்கள்.

வரலாற்று அடிப்படையில் தொல்காப்பிய நூல் முதலில் எப்படி இருந்திருக்குமோ அந்த முறையில் அமைத்திருக்கிறார்கள். சுமார் ஆயிரத்து ஐந்நூறு பக்கங்கள் கொண்ட அந்த நூல் விரைவில் வெளியாக இருக்கின்றது என்ற செய்தியை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

இரண்டாயிரத்து முன்னூறு ஆண்டுகளுக்கு முன்னால் தொல்காப்பிய நூல் புத்தகமாக அச்சிடப்பட்டது. தொல்காப்பிய

நூலை நூற்றுக்கணக்கான ஆசிரியர்கள் பதிப்பித்திருக்கிறார்கள். உரையும் எழுதி இருக்கிறார்கள்.

நூற்றுக்கணக்கான தொல்காப்பிய நூல்களை வெளியிட்டிருக்கும் ஆசிரியர்கள் தொல்காப்பிய செய்யுட்களுக்கு உரையும் எழுதி இருக்கிறார்கள். எல்லா நூல்களும், அவற்றின் உரைகளும் சில இடங்களில் வேறுபடுகின்றன. மற்றபடி எல்லாம் ஒன்றுபோலவே இருக்கின்றன.

யாரும் தொல்காப்பிய நூலை வரலாற்று அடிப்படையில் பார்க்க முயலவில்லை என்பதைத் தெரிந்துகொண்டேன்.

பேராசிரியர் இராமலிங்கமும், 'ஓம்சக்தி' ஆசிரியர் பகீரதனும் இதுவரையில் வெளிவந்திருக்கும் ஏறக்குறைய இருநூற்று ஐம்பது ஆசிரியர்களின் தொல்காப்பிய நூலைப் படித்து வரலாற்று முறைப்படி தொல்காப்பிய நூலை முறைப்படுத்தி எழுதி இருக்கிறார்கள்.

இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளில் வரலாற்று முறைப்படி முதன் முதலாக வரும் தொல்காப்பிய நூல் இதுதான் என்று சொல்லலாம்.

இந்த நூலை ஒட்டி தொல்காப்பிய நூல் தொடர்ந்து மேலும் ஆய்வு செய்யப்பட வேண்டும்.

தமிழ் மரபுடன் கூடிய தமிழ் இலக்கண நூல் தொல்காப்பியம் ஒன்றுதான். பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் தொல்காப்பிய இலக்கணத்தை மட்டுமே கற்பிக்கவும் ஏற்பாடு செய்ய வேண்டும்.

தொல்காப்பியம் வெறும் இலக்கண நூல் மட்டுமல்ல. வாழ்க்கைக்கு வழிகாட்டும் ஒப்பற்ற இலக்கண நூலாகவும் விளங்குகிறது. இதனால் தமிழில் உலக மொழிகளில் இருக்கும் எல்லா நூல்களையும், அந்த மொழியின் ஓசை நயத்துடனும் பொருள் வேறுபாடு இல்லாமலும் எழுத முடியும்.

தமிழ் நாடும் தமிழும் உலக நாட்டுக்கும் உலக மொழிகளுக்கும் இணையாக உயர்ந்து செயல்படும்.

வானம் அளந்தது அனைத்தும்
அளந்திடும்
வன்மொழி வாழியவே.

— மகாகவி பாரதியார்

   

# ஸ்ரீ மாதா அமிருதானந்தமயி தேவி

எண்ணற்ற துறவிகளும், ஞானிகளும், சித்தர்களும், இறையடியார்களும் தோன்றிய நாடு இப் பாரத புண்ய பூமி. இங்கே ஆறறிவு உள்ள மனிதனை இறைநிலைக்கு இட்டுச் செல்லும் பக்தி, ஆன்மிக உணர்வு, தியானம், ஞானம், தவம், துறவு - போன்ற சாதனங்கள் ஆண்களுக்கே உரியது என்றில்லாமல் பெண்களும் அவற்றைக் கடைப்பிடித்து வாழ்ந்து உய்ய முடியும் என்று சென்ற நூற்றாண்டில் நிரூபித்தவர்கள் - அன்னை சாரதாமணி, அரவிந்தாசிரமம் அன்னை, மாஆனந்தமயி, மாதா வீரமாதேவி, ஜில்லுலுமுடி அம்மா, ஸ்ரீஞானானந்த சரஸ்வதி போன்றவர்கள். அவர்கள் வழியில் சித்திகள் பல செய்யும் ஆற்றல் பெற்றிருந்தும் அவற்றை வெறுத்து ஒதுக்கிவிட்டு இறை உணர்வு பெற மக்களைத் தூண்டும் வகையில் தற்போது இனிய குரலில் பக்திரசம் ததும்பும் அவரே இயற்றிய பல பாடல்களைப் பாடியும், பிறரைப் பாடவைத்தும் வருபவருள் ஒருவர்தான் ஸ்ரீ மாதா அமிருதானந்தமயி தேவி, அவர்கள்.

கோகர்ணத்திலிருந்து குமரிவரை விரிந்து கிடக்கும் நிலப்பகுதி பரசுராமக்ஷேத்திரம் என்ற கேரள மாநிலம். பகவான் நாராயணன் எடுத்த தசாவதாரங்களில் வாமனர், பரசுராமர், இராமர் என்ற மூன்று அவதாரங்களோடு தொடர்புடைய பூமி. ஆதிசங்கரர் பிறந்த காலடி, நாராயண பட்டத்தரீ பிறந்த மேம்பட்டூர், நாராயண குரு பிறந்த செம்பழநதி - இம்மூன்று சிற்றூர்களை உள்ளடக்கியது அம்மாநிலம்.

கொல்லம் மாவட்டத்தில் உள்ள "பறையக்கடவு" என்ற கடற்கரை கிராமத்தில் 1953ஆம் ஆண்டு இடமண்ணேல் என்ற மீனவ குடும்பத்தைச் சார்ந்த சுகுணானந்தருக்கும், தமயந்தி அம்மாளுக்கும் பிறந்த ஐந்து ஆண்கள், பெண்களில் நான்காவதாக பிறந்து சுதாமணி எனப் பெயரிடப்பட்டார். தந்தை, பகவான் கிருஷ்ணனை இஷ்டதெய்வமாக வழிபட்டு கதகளி நாட்டியத்தில் கிருஷ்ணன் வேடம் தாங்கி நடித்து வந்தவர். தாய் இறைபக்தி கொண்டு ஆசாரம், அனுஷ்டானம், ஜபம், விரதம் இவற்றில் ஆழ்ந்து, தோய்ந்து முறைப்படி கடைப் பிடித்தவர். அதனாலேயே பட்டத்தி அம்மா (பிராம்மண அம்மா) என்று பாமர மக்களால் அழைக்கப்பட்டவர். சுதாமணியை கர்ப்பத்தில் தாங்கியிருந்தபோது சிவன், கிருஷ்ணன், தேவி போன்ற தெய்வங்களை கனவில் அடிக்கடி தரிசித்தவர். சுதாமணி மற்ற குழந்தைகள் போல் அழாமல் சிரித்துக் கொண்டே கருநீல நிறத்தில் பிறந்தது மட்டுமல்லாமல், கைகள் முத்திரை பிடித்திருப்பது போன்றும் காணப்பட்டதாம். பின்னர் அவரது நிறம் சில சமயம் கருப்பாகவும் சிலசமயம் கருநீலமாகவும் மாறி மாறிக் காட்சி அளித்ததாம். ஏழாவது மாதத்திலேயே எழுந்து நடக்கவும், ஓடவும் செய்தாள் குழந்தை சுதாமணி. கருவிலேயே திருவுடைய இவர் ஐந்தாவது வயதிலேயே கிருஷ்ண பக்தியில் ஊறி, திளைத்து அவனது சரண கமலாலயத்தை அடைய இறை இசைப்பாடல்களைத் தானே இயற்றி கிருஷ்ணன் படத்தின் முன் அமர்ந்து பாடியும், ஆடியும் தனது உள் ளுணர்வுகளை வெளிப்படுத்தினாள். அப்போது தனது பாடல்களைக் கேட்க வந்தவர்களை எல்லோரையுமே அப்பாவாகவும், அம்மாவாகவும் கருதி அழைக்கும் வேற்றுமையற்ற மனப்பான்மை அச்சிறு பெண்ணின் மனத்தில் வேரூன்றிவிட்டது. உலகில் தனது பிறப்புக்கு மூலகாரணமான இறைசக்தியை மட்டும்தான் தனது பெற்றோர்களாகக் கருதிய அப் பெண் தன்னைப்பெற்ற தாய் தந்தையரையே "வளர்த்த அம்மா - வளர்த்த அப்பா" என்று விளித்து அழைத்து அவர்கள் கோபத்திற்கும் வெறுப்புக்கும்கூட ஆளானாள்.

5ஆவது வகுப்பு வரையில் பள்ளியில் படித்த அவரது ஏழாவது வயதில் அவர் வாக்கிலிருந்து வெளிவந்த முதற்பாடல் "பாஹிபராத்பரனே - குருவாயூர் புராதிபனே - பால கோபாலகனே" எனத் துவங்கும் பாடல்தான்.

பிறந்த வீட்டிலும், பின்பு உதவி செய்யப் போன உறவினர் வீட்டிலும் தினமும் விடியற் காலையில் மூன்று மணிக்கே எழுந்து இரவு 11 மணி வரை கோழி, வாத்து, பசு போன்ற வாயில்லாப் பிராணிகளையும், உடன் பிறந்தோர், உறவினர்கள் இவர்களது மனம் கோணாது அவர்களையும் பராமரிக்கும் வேலை உட்பட எல்லா வீட்டுவேலைகளையும் ஒய்ச்சல் ஒழிவின்றிச் செய்து வந்தார். அவரது 18ஆவது வயதில்தான் ஆன்மிக உணர்வு முழுதாக வெளிப்பட்டது. பெற்றோர் செய்த திருமண முயற்சியையும் தடுத்து விட்டார். பகவான் கண்ணன் இவரது 22ஆம் வயதில் இவர்மேல் ஆவிர்பவித்து கனவிலும், நனவிலும் வந்து அவர் அறியாதவாறு லீலைகள் புரிந்து முகதரிசனம் காட்டாமல் அலைக்கழித்து சோதனைச் செய்த பின்னர்தான் கிருஷ்ண தரிசனம் கொடுத்தான்.

இவர் கிருஷ்ணபாவத்திலும் பின்பு தேவிபாவத்திலும் மூழ்கிப்பல இறையருள் பாடல்களைப் பாடியவண்ணம் தியானத்தில் கலந்த நிலையில் இருந்தபோது அங்கு வந்த கிளி, பசு, புறா, நாய், ஆடு, பாம்பு போன்ற

ஐந்தறிவு ஜீவராசிகளுக்கு இவர் அளித்த அடைக்கலமும், ஆதரவும், அவைமேல் இவர் காட்டிய அன்பும் வியக்கத் தக்கது. அவைகளும் இறைவனின் வெவ்வேறு அம்சங்கள் தான். அவற்றில் உறையும் ஆத்மா ஒன்றுதான் என்பதை மற்றவர் களுக்கு உணர்த்தினார் சுதாமணி.

1978ஆம் ஆண்டு வாக்கில் ஏற்பட்ட இவரது சகோதரனின் மரணத்திற்கு பின்னும், மூன்று சகோதரிகளின் திருமணத்திற்குப் பின்னும் நிலைமை ஓரளவு சீரடைந்தபோது ஆலப் புழையைச் சேர்ந்த நீலு, ஆஸ்திரேலிய பக்தை காயத்ரி, பின்பு பிரான்ஸ் நாட்டைச் சேர்ந்தவரும், அண்ணா மலையில் ரமணரின் ஞானமார்க் கத்தில் ஈடுபாடு கொண்டிருந்த கங்கா, மொரிஷியஸ் ராமகிருஷ்ண மடத்தில் தீக்ஷை பெற்றிருந்த மது, இவர்கள் முயற்சியின் பயனாக ஏற்பட்டதுதான் "வள்ளிக்காவு" என்ற இடத்தில் அன்னை அவதரித்த "இடமண்ணேல்" வீட்டில் பூஜை அறை அருகில் இருந்த சிறுகுடிலில் முதன் முதலில் உருப்பெற்ற ஆச்ரமம். பின்பு 1981ஆம் ஆண்டு சாக்ஷாத் காரம் அடைந்து ஆத்மானுபவத்தில் திளைத்த சுதாமணியின் இறைப் பணியை உலகுக்கு அளிக்கத்திட்டமிடப் பட்டு பிரம்மச்சாரி சீடர்கள் அவருக்கு "மாதா அமிருதானந்தமயி" எனப் பெயர் சூட்டி அப் பெயரில் ஓர் இயக்கத்தையும் துவக்கினார்கள்.

பொன்னையும், பொருளையும் பெரிதாக மதிக்காமல் எல்லா உயிர்களிடத்தும் தன்னலம் கலப்பற்ற அன்பையும், ஆண்டவனிடத்தில் அசைக்க முடியாத நம்பிக்கை யையும், பக்தியையும் செலுத்தித் தியானம் செய்து ஆன்ம ஒளி பெற வேதாந்தப் பாடசாலையுடன் பல பிரம்மசாரிகளைப் பயிற்றுவிக்கும் ஒரு சாதனைக் கூடமாக விளங்கும் "மாதா அமிருதானந்தமயி மிஷன்" கிளை களாக திருவனந்தபுரம், கொல்லம், பந்தனம், எர்ணாகுளம், கொடுங் கல்லூர், ஆலப்புழை, ஆல்வாய், கோழிக்கோடு, சென்னை, பம்பாய், பாரீஸ், ரியூனியன் தீவு, கலி ஃபோர்னியா (காஸ்ட்ரோ பள்ளத் தாக்கு) போன்ற இடங்களிலும் பரவி யுள்ளது.

1985 முதல் கடந்த 7 வருடங்களாக அன்னை, இந்திய நாட்டிலுள்ள பல இடங்களுக்கு மட்டுமல்லாது அமெரிக்கா, கனடா, இங்கிலாந்து, பிரான்ஸ், ஜெர்மனி, சுவிட்சர்லாந்து, இத்தாலி, ஆஸ்திரேலியா, சிங்கப்பூர், மொரிஷியஸ், ரியூனியன் தீவு, ஜப் பான் போன்ற பல இடங்களுக்கு விஜயம் செய்து கிருஷ்ண,தேவி பாவ தரிசனம் அளித்து பக்திப் பாடல் களைக் குழுவினருடன் பாடி, ஞான ஸ்வரூபிணியாகவும், பிரேமஸ்வரூ பிணியாகவும், சக்தி ஸ்வரூபிணியாக வும் திகழ்ந்து பலரது உடற்பிணி, மனோவியாதி இவற்றை ஸ்பரிஸ தீக்ஷை அளித்து நீக்கி வருகிறார்.

இளைஞர்களின் ஆன்மிகப் பயிற் சிக்கு - "அம்ருதாயுவதாம் தாரா" - நோயாளிகளின் உடற்பிணி போக்க - "மாதா அம்ருதானந்தமயி சேவா சமிதி" வழிதவறிய பெண்களின் குழந்தைகள் காப்பகம், ஏழை விதவை களுக்கு அடைக்கலம் அளிக்கும் இல்லம், "பாரிபள்ளி" என்ற இடத்தில் அநாதை இல்லம், தொழிற்பயிற்சி மையம் சென்னை விருகம்பாக் கத்திலும், கேரளாவில் உள்ள கொடுங்கலூரிலும் தேவி, சிவன், விநாயகர், ராகு போன்ற தெய்வத் திருவுருவங்களை உள்ளடக்கிய ஒரே சிவலிங்க விக்ரகத்தை மூலவராகக் கொண்டு வழிபடும் கோயிலான "பிரும்மஸ்தானம்" - இவை மாதா அம்ருதானமயி தேவியின் தொண்டி னாலும், சாதனையினாலும் உருப் பெற்று அங்கெல்லாம் மாதவ சேவையும், மானிட சேவையும் மனித குலம் உய்ய நடைபெறுகின்றன.

— "சங்கரிபுத்திரன்"

# யோகிராஜ் வேதாத்ரி மகரிஷி

எண்ணற்ற ஞானிகளும், கணக் கற்ற சித்தர்களும், யோகிகளும் தோன்றி மனதை அடக்கி உள்ளே இருக்கும் நாதனை, அளவற்ற சக்தியை, தாங்களும் உணர்ந்து பிறரும் உணரக்கூடிய வழிகளைச் சொல்லி மறைந்த ஞானபூமி இப் பாரதப் பெருநாடு. வாழையடி வாழையாக வந்த இத் திருக்கூட்டத் தில் வந்தவர்களுள் அருட்தந்தை யோகிராஜ் வேதாத்ரி மகரிஷியும் ஒருவர். "வாழ்க வையகம் வாழ்க வளமுடன்" - இந்த வாழ்வு தரும் சொற்றொடரைத்தான் தனது ஆசி உரையாக அளிக்கிறார்.

எல்லோரும் கடைப்பிடிக்கும் எளிய முறையில் உடலுக்கு உடற்பயிற்சி, உயிருக்குக் காயகல்பம், மனத்திற்குக் குண்டலினி யோகப் பயிற்சி இவற்றை, தான் கற்றது மட்டுமல்லாமல், மற்ற வர்களும் புரிந்து செயலாற்றும்படி கற்றுக் கொடுப்பது தனிச்சிறப்பு. ஆயிரக்கணக்கான கணிக்க இயலாத நோய்கள் ஆழ்நிலை தியானத்தில் குணமாகின்றன.

அளவற்ற ஆற்றல் கொண்ட மனத் திற்குச் சில பயிற்சிகள் கொடுத் தால் நினைத்தபோது நினைத்த பொருளை நாம் அறியவும், சிந்திக்க வும் முடியும். இந்த மனப்பயிற்சிக்கு "சம்யம்" எனப் பெயர்.

எண்ணத்திற்கும், எண்ண அலை களுக்கும் ஆற்றல் உண்டு. தீய எண்ணங்கள் நமக்குள்ளும் விஷத்தன் மையை ஏற்படுத்தி மற்றவர்கள் மனத்திலும் பாதிப்பை ஏற்படுத்து கின்றன. நல்ல எண்ணங்கள் நமக்கும் நல்லதைக் கொடுத்து மற்றவர்களிட மும் நல்லவிதமான மாற்றங்களை ஏற்படுத்துகிறது அந்தப்பேராற்றல்.

சுவாமிகள் நெடுங்காலம் சித்தர் பாடல்களை ஆராய்ந்து, "உருத்தரித்த நாடியிலே ஓடுங்குகின்ற வாயுவைக் கபால மேற்றும்" - வழியைக் கண்டு பிடித்துள்ளார். அதற்காக அவர் பட்ட சிரமம், இரவு பகல் ஊண், உறக்கமின்றி அவர் மேற்கொண்ட முயற்சி - யாரும் கணிக்க முடியாதது.

அமெரிக்கா, ஜப்பான் போன்ற வெளிநாடுகளுக்குச்சென்று தான் கற்ற யோகக் கலையைப்பலருக்குக் கற்றுக் கொடுத்து அவர்கள் வாழ்வு வளம் பெற வழி வகுத்து வருகிறார்.

குண்டலினி யோகம் அடைய - "அஷ்டாங்க யோகம்" எனப்படும் 8 வித படிகளை முறைப்படி தாண்டி அடைய வேண்டும். இயமம், நியமம், பிராணாயாமம், ஆசனம், பிரத் யாகரம், தாரணை, தியானம், சமாதி - என்பவையே அவை. முதல் முறை மட்டும் சுவாமிகள் காலத்தை அனுசரித்துத் தளர்த்தி உள்ளார். மனம் அடங்கும் கலையான தியானத்தை இவர் மூலாதாரத்தில் மையம் கொண்டிருக்கும் உயிர் சக்தியை தன் காந்த ஆற்றலால் புருவ மையத்திற்கு மாற்றி தீக்ஷை அளிக்கிறார்.

இத்தகைய ஆற்றல் பெற்று விளங் கும் சுவாமிகள் சென்னையிலிருந்து செங்கல்பட்டு செல்லும் வழியில் உள்ள கூடுவாஞ்சேரி என்ற சிற்றூ ரில் 1911 ஆம் ஆண்டில் பிறந்தார். மிகவும் ஏழைக் குடும்பம். செங்குந்தர் குலம் - பரம்பரை நெசவுத் தொழில். வரதப்ப முதலியார் - சின்னம்மாள் தம்பதிகளுக்குப் பிறந்த ஆறு பெண் கள், இரண்டு ஆண்களில் எட்டாவது குழந்தை.

— "சங்கரிபுத்திரன்"

# சுவாமி ஓங்கார நந்தா

தஞ்சை மாவட்டம் மயிலாடுதுறையில் பிறந்த சுவாமி ஓங்கார நந்தா, 'இவ்வுலகில் இன்பம், துன்பம், வேதனை, கண்ணீர் என்பதெல்லாம் வெறும் மாயை. இவைகளுக்கு அப்பால் செல். அங்கே ஆனந்தப்பெருவெளி ஒன்று உள்ளது. நீ அங்கே சென்றால் பேரின்பப் பெருவாழ்வு நடத்தலாம் எனறு கம்பீரமாகச் சொல்கிறார்

19.1.37இல் பிறந்த இவர் - ஏ.வி.சி. கல்லூரியில் பொருளாதாரத்தில் பட்டமும், அண்ணாமலை பல்கலைக்கழகத்தில் கல்வியியலில் பட்டமும் பெற்றவர். கல்லூரி நாள்களில் ஆவிகளைப் பற்றி நீண்ட ஆராய்ச்சி நடத்தியவர்.

உலகில் எதுவும் பெரியதும் அல்ல; சிறியதுமல்ல என்ற சித்தாந்தம் கொண்ட சுவாமிகள் மிக எளிமையானவர்.

ஆன்மிகத்தின் மூலம் உலகம் முழுவதற்கும் அமைதியைக் கொண்டு வர முடியும் என்று திடமாக நம்புகிறார். ஆன்மிகத்தின் மூலநாடியான சத்தியம், தர்மம், நியாயத்தில் உறுதியாக இருக்கிறார். பரிசுத்தம், பரிபூரணம், பரசிவ ஐக்கியம் ஆகிய மூன்று தத்துவங்களை ஒன்றிணைத்து 'ஓங்கார மார்க்கம்' என்ற ஒரு மார்க்கத்தை வெளிப்படுத்தியுள்ளார்.

இயற்கைத்தத்துவத்தை உணர்ந்து, இயற்கையின் ஆற்றலை உயிரினங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளும் முறையே ஓங்கார மார்க்கமாம்.

பொது மக்கள், ஆன்மிகத்தில் வளரும் பொருட்டு 'ஓங்காரம் ஆன்மிக மகா சபை' என்ற ஸ்தாபனத்தை நிறுவியுள்ளார்.

ஓங்கார ஆசிரமம் ஒன்றும் பாண்டிச்சேரியில் சிறப்பாக இயங்குகிறது.

பாண்டிச்சேரி காந்தி மைதானத்தில் ஒவ்வோர் ஆண்டும் சித்ரா பௌர்ணமியன்று கடந்த 22 ஆண்டுகளாக உலகப் பேரமைதிக்காக அகண்ட 'ஓங்கார கூட்டுத் தியானம்' நடைபெற்று வருகிறது. இதன் மூலம் மக்களுக்கு தியானப் பயிற்சி அளிக்கப்படுகிறது. ஜீவகாருண்யப் பயிற்சியும் போதிக்கப்படுகிறது.

மக்கள் மனத்தைப் பரிசுத்தமாக்க வேண்டும்; அவர்களுக்குள்ளே ஞானப் பேருணர்வு பெருக வேண்டும் என்பதற்காகவும் உலகம் ஆனந்த அமைதி பெறவும்; பிரம்மாண்டமான பணிகளைச் செய்வதற்கு ஓங்கார ஆசிரமம் திட்டமிட்டுள்ளது.

'ஓங்காரம்' என்னும் ஆன்மிக மாத இதழையும் சுவாமி ஓங்கார நந்தா நடத்தி வருகிறார்.

45 ஆண்டுகள் தாம் பெற்ற ஆன்மிக அனுபவங்களையும், அநுபூதி நிலையையும் தொகுத்து 'ஞானகீதை' என்ற நூலையும் சமீபத்தில் வெளியிட்டுள்ளார்.

'உலகெங்கும் ஆன்மிகப் புரட்சி ஏற்பட வேண்டும்' என்பது ஓங்கார ஆசிரமத்தின் கருத்து.

'அண்ட வெளிச் சக்தியை மக்களின் தவயோகத்தினால் மாற்றச் செய்து உலகையே ஆனந்தமயமாக்க முடியும்' என்பது ஆசிரமத்தின் காரணகர்த்தா சுவாமி ஓங்கார நந்தாவின் கருத்து.

தொகுப்பு : நாகு

# சந்த் துகாராம் சுவாமிகள்

மகாராஷ்டிர மாநிலத்தில் இறை பக்தியையும், குறிப்பாக பாண்டுரங்க பக்தி மூலம் பாகவத தர்மத்தையும் வளர்க்க, பரவ பாடுபட்டவர்கள் அநேகர். பதினைந்து, பதினாறாம் நூற்றாண்டுகளில் ஞானேஸ்வர், நாமதேவர், ஏகநாத் போன்றோர் குறிப்பிடத்தக்கவர்கள். அவர்கள் அடியை ஒற்றி பாண்டுரங்க விட்டலனை மனதால் வரித்து, நாவால் பாடி, ஆடி, ஓடி வாழ்ந்து காட்டி பக்திப்பயிர் தழைக்கச் செய்தவர்களுள் சந்த் துகாராம் சுவாமிகள் முதல் இடம் பெறுகிறார்கள்.

பதினாறாம் நூற்றாண்டின் இறுதியில் தேஹு என்ற கிராமத்தில் பாண்டுரங்கனை எப்பொழுதும் சிந்தை செய்து வழிபட்டுவந்த விஸ்வம்பர் என்ற ஒரு பக்தரின் குடும்பத்தில் பிறந்தார் துகாராம். இந்த்ராயணி நதி அருகே பாண்டுரங்கனுக்கு ஒரு சிறிய கோயில் கட்டி வழிபட்டு வந்தவர் விஸ்வம்பர். துகாராம் தந்தை போல்ஹோபா, தாய் கனகாய். கும்பிஸ் எனப்படும் சிறுதொழில் செய்துவந்த குலத்தை சார்ந்தவர்கள். முதலில் "ராகுமாய் தாமேகாரி" என்ற பெண்மணியை மணந்து சந்த் என்ற மகனையும் பெற்றார். ஆனால் 1616 ஆம் ஆண்டில் ஏற்பட்ட பஞ்சத்தில் அவர்கள் இருவரும் இறக்கவே பூனாவில் இருந்த நிலக்கிழார் அப்பாஜி குல்வே என்பவரின் மகள் ஜீஜாய் என்பவரை இரண்டாவது தாரமாக மணந்தார்.

1619 ஆம் ஆண்டு மாசி பௌர்ணமியில் இவரது கனவில் சைதன்யபாபா (இவர் ஞானேஸ்வரர் சீடர் சச்சிதானந்த பாபாவின் நேரடி சீடர். ராகவ, கேசவ சைதன்ய மரபில் வந்தவர்) தோன்றி "ராமகிருஷ்ணஹரி" என்ற மந்த்ர உபதேசம் செய்தார். அது முதல் சாகார, சகுண உபாசகராகவே மாறினார் துகாராம். விட்டலநாதர் உடன்வர, நாமதேவரும் இவரது கனவில் தோன்றி ஆசி அளித்தார். அது முதல் இவரது நா இறைபக்திப் பாடல்களை இயற்றி பாடத் துவங்கியது. வீதிதோறும் இவரது பாடல்கள் ஒலிக்கத் தொடங்கி தேகு, பூனா, லோகாகான் பகுதியிலும் பரவின

சத்ரபதி சிவாஜி துகாராம் இல்லத்திற்கு வந்து ஆடை, ஆபரணம் போன்ற பரிசுப் பொருள்களை அவர் அறியாவண்ணம் அவரது மனைவியிடம் கொடுத்தார். அதை சிவாஜியிடமே திருப்பிக் கொடுத்து விட்டார் துகாராம். இதைக் கண்ட சிவாஜி உணர்ச்சி மேலிட்டு அவரிடம் சீடராக விரும்பினார். ஆனால் துகாராம் "உனக்குத் தகுந்த குரு சமர்த்த ராமதாஸ்தான்"என்று கூறி சிவாஜியை அவரிடம் அனுப்பினார்.

கடைசியில் 1650 ஆம் ஆண்டில் இறைவன் தன்னுடைய திருவடியில் துகாராமைச் சேர்த்துக் கொள்ள விரும்பி அவருக்கு விமானம் அனுப்பி இந்த பூத உடலுடனேயே துகாராமை வைகுண்டம் என்ற பரமபதத்திற்கு அழைத்துக் கொண்ட அதிசயமும் நடந்தது. துகாராமின் சரித்திரம் பக்தவிஜயம் என்ற மகாராஷ்டிர பக்தர்களின் சரித்திரத்தில் முதலிடம் பெற்று இன்றும் பாண்டுரங்க பக்தியைப்பரப்பி வருகிறது.

— "சங்கரிபுத்திரன்"

எதிரே: வண்ணச் சித்திரங்கள்: ஜி.கே.மூர்த்தி



மாஸ்ட்ரோ இளையராஜா 'அமுதசுரபி' தீபாவளி மலர் - 1993 போட்டோ : யோகா



ஏ.ஆர். ரகுமான் 'அமுதசுரபி' தீபாவளி மலர் - 1993 போட்டோ : யோகா

# இசை உலகில் ஓர் இளம் புயல் ரகுமான்

வண்ணப்படங்கள், கட்டுரை : யோகா

ஒவ்வொரு கால கட்டத்தில் ஒவ்வொரு துறையிலும் ஓர் இளைஞன் விஸ்வரூபம் எடுத்து அந்தத் துறையில் புகழ்பெற்று விளங்குவார். கிரிக்கெட் டெண்டுல்கர், மாண்டலின் சீனிவாசன், செஸ் ஆனந்த் போன்றவர்களை உதாரணமாகக் கூறலாம். அதுமாதிரி இன்றைய இசைஉலகில் இளம் உள்ளங்களிடையே மிகவும் பிரபலமாகப் பேசப்படும் இசையமைப்பாளராகத் திகழ்பவர் இருபத்தி ஐந்தே வயது பூர்த்தியான இளைஞர் ஏ.ஆர். ரகுமான்.



இளம் வயதில் இருந்தே 'கீ போர்ட்' (Key Board) என்ற இசைக் கருவியை வாசிப்பதில் மிகவும் தேர்ச்சி பெற்றவர் என்பதால் 'ராக் பேண்ட்' இசைக் குழுவிலும் மற்றும் இசைத் துறையில் உலக அளவில் பிரசித்திப் பெற்ற சங்கர், ஜாகிர் உசேன் ஆகியவர் குழுவிலும் வாசித்து மிகுந்த அனுபவத்தையும் இசை நுணுக்க ஆற்றலையும் பெற்றிருக்கிறார். மேலும் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், ஹிந்தி போன்ற எல்லா மொழிகளிலும் உள்ள பிரபலமான இசையமைப்பாளர்களுக்கு 'கீ போர்ட்' வாசித்து பல இசை அனுபவங்களைப் பெற்றிருக்கிறார். பல விளம்பரப் படங்களுக்கு இசையமைத்து விளம்பரதாரர்களிடையே மிகவும் புகழ் அடைந்தார். அப்போதெல்லாம் அவருக்கு 'திலீப்' என்றுதான் பெயர். விளம்பரப் படங்களுக்கு 'ஜிங்கில்' இசையமைப்பில் தனி முத்திரை பதித்து சிறப்பான ஓர் இடத்தைப் பெற்றார். இவர் இசையமைப்பின் தனித்தன்மை டைரக்டர் மணிரத்னத்தை, இவர்பால் இழுத்து 'ரோஜா' படத்திற்கு இசையமைக்கும் சந்தர்ப்பத்தை இவ



ருக்குப் பொறுப் பேற்றது. 'ஏ.ஆர். ரஹுமான்' என்கின்ற பெயரில் திரை யுலகில் அறிமுகமானார். முதல் பட மான 'ரோஜா' படத்திற்கு இசை யமைத்து ஒரே படத்திலேயே ரசிகர் களின் இதயங்களில் ஒரு நிரந்தர இடத்தைப் பெற்றதோடல்லாமல் முதல் படத்திலேயே ஜனாதிபதி விருதைப் பெறும் பாக்கியத்தைப் பெற்று தேசிய அளவில் புக ழடைந்தார். அடுத்தடுத்து அவர் இசையமைத்த 'புதியமுகம்', 'ஜெண் டில்மேன்', 'திருடா, திருடா' ஆகிய படப்பாடல்களின் ஆடியோ கேசட்டு கள் விற்பனையில் பெரும் சாதனை யைப் படைத்துக் கொண்டிருக் கின்றன.



இந்த இளைய இசைப் புயலை நேரில் சந்தித்து அமுதசுரபி தீபா வளி மலருக்காக, அவர் இசை யமைக்கும் பாங்கினை நேரில் பார்த்துப் படம் எடுத்து விவரித்து எழுத அனுமதி கேட்டோம். 'என்னை ஏன் விளம்பரப் படுத்துகிறீர்கள்' என் னுடைய இசை மக்களை சென்றடைந் தால் அதுவே எனக்குப் போதும். என்னுடைய படங்கள் அடிக்கடி பத்திரிகைகளில் பிரசுரமானால் என்னால் தனியாக எங்கும் செல்ல முடியாமல் சூழ்ந்து கொள்கிறார்கள். அதனால் என் தனிமை கெடுகிறது" என்று கூறி முதலில் தயங்கினார். பின்பு மறுநாள் வந்து படம் எடுத்துக் கொள்ளச் சம்மதம் தெரிவித்தார்.

குறிப்பிட்ட தினத்தன்று சரியாக 10.30 மணிக்கு ரகுமான் வீட்டிற்குச் சென்றோம். அலுவலக அறையில் அவருடைய உதவியாளர் நோயல் வரவேற்றார். ரகுமானுடைய அலு வலகம், வீடு, அவரது பஞ்சதன் ரெகார்டிங் ஸ்டுடியோ ஆகிய மூன்றுமே ஒரே கட்டடத்தில் ஒரே காம்ப்வுண்டுக்குள் இருக்கின்றன. விளம்பரத்திற்கு இசையமைத்த நாள் முதல், திரைப்படத்திற்கு இசை யமைத்துக் கொண்டிருக்கும் இந்த நாள் வரை தன்னுடைய ஸ்டுடியோ வில்தான் 'ரெகார்டிங்' செய்து வரு கிறார். முதல்நாள் இரவு மிகவும் தாமதமாகப் படுக்கைக்குச் சென்ற தால் இன்று காலையில் எழுந் திருக்கவே ரகுமானுக்குத் தாமதமாகி விட்டதாக உதவியாளர் நோயல் கூறினார். இவருடைய வருகையை எதிர்பார்த்து வயலின், வயோலோ, செல்லோ, டபுள்பால் ஆகிய ('STRING INSTRUMENTS') இசைக் கருவிகளை வாசிக்கும் இசைக்கலைஞர்கள் காலை பத்து மணியிலிருந்து காத்துக் கொண் டிருந்தார்கள்.

தீபாவளிக்கு ரிலீஸ் ஆகவிருக்கும் 'திருடா திருடா' படத்தின் 'ரீ ரிகார் டிங்' கடந்த சில நாள்களாக நடந்து கொண்டிருப்பதாகக் கூறினார்கள். ரகுமானின் வருகையை எதிர்பார்த்து வரவேற்பறையில் நாம் உட்கார்ந்து கொண்டிருக்கும் நேரத்தில் 'ரகு மானை நேரில் சந்திக்க ஃபோட்டோ எடுத்துக் கொள்ள அனுமதி வேண்டும்' என்றும், நன்றாக பாடவரும் எனவே ரகுமானிடம் சந்தர்ப்பம் கேட்க நேரில் வரவேண்டும்' என்றும் 'ரகுமானிடம் ஆட்டோகிராப் வாங்க எப்போது வரலாம்' என்று கேட்கும் பலவிதமான ஃபோன்கால்கள் வந்த வண்ணம் இருக்க ஒவ்வொருவருக்கும் பொறுமையாக பதில் கூறிக் கொண் டிருந்தார் நோயல்.

சுமார் 11.30 மணிக்கு ரகுமான் மேல் மாடியிலிருக்கும் தனது வீட்டிலிருந்து இறங்கி ரெகார்டிங் தியேட்டருக்குள் நுழைந்தார். அப்போது ரகுமானின் பின்னாலேயே ரெகார்டிங் தியேட்டருக்குள் நாமும் அனுமதிக்கப்பட்டோம். சிறிய ஒலிப்பதிவுக் கூடம் என்றாலும் அதிநவீன ஒலிப்பதிவுக் கருவிகள் அங்கே பொருத்தி வைத்திருப்பதை நம் கண் முன்னே காண்கிறோம். நடத்துனர் (Conductor) ஸ்ரீநிவாசமூர்த்தியின் மேற்பார்வையில் பன்னிரெண்டு பேர் வயலின் வாசிப்பவர்களும், பத்து பேர் 'வயோலா' வாசிப்பவர்களும், இரண்டு பேர் 'டபுள்பேஸ்' வாசிப்பவர்களும் தீவிரமாக தங்களது வாத்தியங்களில் தங்களுக்குக் கொடுக்கப்பட்ட இசை 'நோட்ஸ்'களுக்கு ஏற்றார் போல் ஒத்திகை பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஒலிப்பதிவு கூடத்திற்குள்ளே வந்த ரகுமான், ஏற்கனவே அறைக்குள் வந்திருக்கும் டைரக்டர் மணிரத்னம் அவர்களுடன் சிறிது நேரம் உரையாடி இருவரும் கருத்துகளைப் பரிமாறிக் கொள்கிறார்கள். பின்பு டைரக்டர் மணிரத்னம் புறப்பட்டுச் செல்ல ரகுமான் தன் இருக்கையில் வந்து உட்கார்ந்து கொண்டு ஒரு பட்டனை அழுத்தி 'ஸ்டார்ட்' என்று கூறுகிறார். கண்ணாடி பொருத்தப்பட்ட அடுத்த அறைக்குள் இருக்கும் இசைக் கலைஞர்களின் இனிய வாசிப்பிலிருந்து பிரம்மாண்டமாக இசை அலை எழுந்து நம்மைப் பிரமிக்கச் செய்கிறது. ஒரு சிறுஅளவுகூட டென்ஷன் இல்லாமல் ஒலிப்பதிவுக் கருவிகளைத் தானே இயக்கி இசைப் பதிவு செய்கிறார். வாசிக்கப்படும் வாத்தியங்களின் ஓசைகளை உன்னிப்பாகக் கவனித்துக் கூட்ட வேண்டிய இடத்தில் கூட்டச் சொல்லி குறைக்க வேண்டிய இடத்தில் குறைக்கச் சொல்லி 'ஆணைகள்' பிறப்பித்துத் தனக்கு முழுமையான திருப்தி ஏற்படும்வரை திரும்பத் திரும்ப வாசிக்கச் சொல்லி ஒலிப்பதிவு செய்கிறார்.

'ஏற்கனவே இந்த குறிப்பிட்ட காட்சிக்கான பின்னணி இசையின் இசைக் கோவையை 'கீ போர்டில்' வாசித்து கம்ப்யூட்டரில் பதிவு செய்து வைத்துள்ளேன். இப்போது வயலின், வயோலா, செல்லோ, டபுள் பேஸ் ஆகிய இசைக்கருவிகளில் வாசித்த இசையும் அதனோடு இணைய வேண்டிய இசைதான். ஏற்கனவே வாசித்தவை சில 'டிராக்கிலும்' தற்போது வாசித்தவற்றை மற்றைய 'டிராக்கிலும்' பதிவு செய்வோம்' என்று கூறி, எல்லாவற்றையும் இணைத்து நமக்கு போட்டுக் காண்பித்தார் ரகுமான். கேட்கவே மிகவும் பிரமிப்பாக இருந்தது. ஆங்கில படங்களின் Sound Trackஐ கேட்பது போன்ற வித்தியாசமான ஓசை. இந்த இளம் வயதில ரகுமானுக்குக் கடவுள் இவ்வளவு நுண்ணிய இசை அறிவைக் கொடுத்திருக்கிறாரே என்று வியப்பாகவும் இருந்தது. ஆனால் அந்த திறமை யாவற்றிற்கும் தானே காரணமாக நினைக்காமல் 'இறைவன் கொடுத்த வரமாக' மிக அடக்கத்துடன் கூறும் ரகுமானின் அமைதியான சுபாவமும் மேலும் ஆச்சரியத்தை ஏற்படுத்தியது.

'நீங்களே உட்கார்ந்து ரெகார்டிங் செய்கிறீர்களே. ரெகார்டிங் இன்ஜினியர் என்று யாரும் உங்கள் தியேட்டரில் கிடையாதா' என்று கேட்டோம்.

'இங்கே பெரும்பாலும் நானே ரெகார்டிங்கைக் கவனித்துக் கொள்வேன். இதோ அருகில் இருக்கும் சிவகுமார் 'கம்ப்யூட்டர்' ஆபரேஷன் பொறுப்பைக் கவனித்துக் கொள்வார். ஸ்ரீநிவாசமூர்த்தி இசைக் கலைஞர்களைக் 'கண்டக்ட்' செய்யும் டிபார்ட்மெண்டைப் பார்த்துக் கொள்வார்.

சில நேரங்களில் என் உதவியாளர் நோயல் வந்து கோரஸ் பாடுவார், டிரம் வாசிப்பார். டிரம் வாசிக்கும் சுரேஷ் பீட்டர்ஸ் சில நேரங்களில் பாடவும் செய்வார். அவர் பாடி பிரசித்திப் பெற்ற பாடல்தான் 'ஜிகு புகு ஜிகுபுகு ரயிலு'. எல்லா ரெகார்டிங்கும் முடிந்த பின்னர் கடைசியாக ஸ்ரீதர் என்பவர் ஒலிப்பதிவின் ஏற்ற இறக்கத்தை ஒழுங்குபடுத்தி வைப்பார். அவர்தான் எங்கள் ஸ்டுடியோவின் 'மெயின் சவுண்ட் ரெகார்டிஸ்ட்' எங்கள் ஸ்டுடியோவைப் பொறுத்த வரை யார் எதைச் செய்கிறார்கள் என்பது முக்கியம் இல்லை. செய்வதைத் துல்லியமாகச் செய்ய வேண்டும் என்பதில் கவனமாக இருப்பேன். மொழியைக் கடந்து 'ஒரு ரசனையை உண்டு பண்ண வேண்டும் என்பது தான் என் ஆசை. அதற்காக ரெகார்டிங் ரூமுக்குள்ளேயே இரவு பகல் என பார்க்காது சாப்பிடாமல்கூட உழைப்பேன்' என்றார் ரகுமான்.

ரகுமானால் புதுப் பொலிவு பெற்றிருக்கும் தமிழ்ச் சினிமாவின் இசைத்துறை, மேலும் மேலும் அவரது படைப்புகளால் பெருமை பெற கடவுள் அவருக்கு மேலும் இசை ஞானத்தை அளிக்க வேண்டும் என்று மனத்திற்குள் பிரார்த்தித்துக் கொண்டு, இசையமைப்பாளர் ரகுமானுக்கு வாழ்த்து கூறி விடை பெற்றோம்.

ஃ





ஸ்ரீ ஜலகண்டேஸ்வரர் ஆலயத் தோற்றம்

# கோட்டைக்குள்ளே ஓர் ஆலயம்

நீலவன்

## அமைவிடம்

கீர்த்தி வாய்ந்தது. நேர்த்தி தோய்ந்தது. வரலாற்றின் வீரசாகசங் களில் வடிவமைக்கப்பட்டது. சென்னையிலிருந்து பெங்களூர் நெடுஞ்சாலையில் நூற்று நாற்ப தாவது கிலோ மீட்டரில் அமைந்தது. முற்காலத்தில் இராய வேலூராயிருந் தது. இக் காலத்தில் வேலூராய்... வடார்க்காடு அம்பேத்கர் மாவட் டத்தின் தலைநகராய் விளங்குகிறது. இங்குதான் பேருந்து நிலையத்திற் கெதிரே ஸ்ரீ ஜலகண்டேஸ்வரர் ஆலயம் கம்பீரமாய்க் கண்களில் கவின் பதித்துக் கவர்ந்திழுக்கிறது.

## கோலமிகு கோட்டை

நகரின் மையத்தில் மேடற்ற சமவெளித் தரையில் அமைந்துள்ளது. வேலூர்க் கோட்டை. நீண்ட சதுர வடிவம் கொண்ட இதன் வெளிப்புற நீளம் 800 மீட்டர். அகலம் 500 மீட்டர். இரண்டு வெளிப்புறச் சுவர்கள். 8 மீட்டர் ஆழ நீலநிற நீரில் சன்னமான அலைவீச்சுகள் கொண்ட ஒரு காலத்தில் முதலைகள் மலிந்திருந்த அகழி. நீரின் மேல் மட்டத்திலிருந்து 4 மீட்டர் உயரத்தில் 8 மீட்டர் அக லத்தில் முதற் கருங்கற்சுவர். அதன் மேல் 7-8 மீட்டர் உயரமும், 10-12 மீட்டர் அகலமும் கொண்ட இரண்டாம் கருங் கற்சுவர்.

சுற்றுச் சுவர்களில் காவலர் அறைகள். போர்த் தளவாடங்களுடன் வீரர்கள் சுற்றிவரும் தளம். சிறு சிறு இடைவெளியில் வரிசையாய் நீண்ட சதுரத்தில் அரை வட்டமான, தாக்கு தலைத் தவிர்க்கவல்ல பாதுகாப்பான பெரும் கருங்கற்கள். இவை கோட்டை யைக் கைப்பற்ற முயலும் எதிரிகளிட மிருந்து தப்பிக்க, முறியடிக்கப் போர்க் கருவிகளைப் பயன்படுத்த உதவியவை. மூன்று கோணங்களில் மும்முனைத் தாக்குதலை நிகழ்த்தும் வாய்ப்பை ஏற்படுத்தித் தந்தவை.

இரண்டாம் சுற்றுச் சுவரில் சாய் தளச் சரிவான பகுதிகள் உள்ளன. இப் பகுதி இன்னொரு பாதுகாப்பு அம்சம்.

வீரப்ப நாயக்கர், பொம்மி நாயக்கர், லிங்கம நாயக்கர் எனப்பட்ட மூன்று நாயக்கர்களைச் சுற்றிச் சுற்றி இக் கோட்டையின், இக் கோயிலின் வரலாறு சுழலுகிறது.

கி.பி. 1526 – 1595 வரை 69 ஆண்டு கள் அரசாண்ட பொம்மி நாயக்கர் (பொம்மி ரெட்டி என்றும் இவர் அழைக்கப்பட்டார்) காலம் கோட்டை யும், ஸ்ரீ ஜலகண்டேஸ்வரர் ஆலயமும் தங்களைச் சாளுக்கிய பாணியில், திராவிடக் கலையில் வெளியுலகிற்கு அறிமுகம் செய்வித்த காலம்.

## ஆலய வரலாறு

ஸ்ரீ அப்பைய தீட்சதர் பொம்மி நாயக்கரின் ராஜகுரு. ஆரணி அடைய பலத்தில் ஐந்நூறு மாணாக்கர்கள் வாசித்த கலாசாலையை நிறுவி சைவ மும் அத்வைதமும் தழைக்க வழி வகுத்தவர். இவரது அரிய ஆலோ சனையே ' ஸ்ரீ ஜலகண்டேஸ்வரர் ஆலயம் உருவாகக் காரணம்.

கோட்டையின் வடகிழக்கு ஈசான மூலையில் கம்பீரமான கோபுரங் களைக் கொண்ட இவ்வாலயம் எழுந் தது குறித்து ஓரிரு கர்ணபரம்பரைக் கதைகள் இன்றும் வழங்கப்படு கின்றன.

பொம்மி நாயக்கருக்குச் சொந்த மான நூற்றுக்கணக்கான பசுக்களில் ஒன்று காலைப்போதில் நிறைய பால் தந்தது. பகற்போது முழுதும் காட் டில் நன்கு மேய்ந்துத் திரும்பியது. மாலைப் போதில் ஒரு துளி பாலும்



நவசக்தி ஜோதி



ஒரு பக்கம் பார்த்தால் யானை மறுபக்கம் காளை

தரவில்லை. மன்னருக்கு இது வியப்பை அளித்தது. கண்காணிக்கச் செய்தார். ஓர் அதிசயச் செய்தி அவரைத் திகைக்க வைத்தது.

மாலை வெயிற்போதில் காட்டில் அடர்புதருக்குள் பசு நுழைந்து ஒரு புற்றுக்கருகில் நிற்கிறதாம். புற்றி லிருந்து ஐந்து தலை நாகப்பாம்பு வெளிப்போந்து பசுவின் பால் முழுவதையும் உறிஞ்சி விடுகிறதாம்.

விரைந்த மன்னர் இந்த விந்தையைக் கண்டு மெய்மறந்தார். குலதெய்வத்தைத் தொழுதார். கன வில் தோன்றிய தெய்வம் அவ்விடத் தில் ஒரு மாபெரும் கோட்டையையும், மகத்தான ஆலயத்தையும் நிர்மாணிக் கப் பணித்தது.

வேட்டையாடக் காட்டுக்குச் சென்ற மன்னரின் வேட்டை நாய் ஒரு முயலைக் கண்டு துரத்தியதாம். ஒரு குறிப்பிட்ட இடத்தில் விறைத்து நின்ற முயல் வேட்டை நாயை எதிர்த்துத் தாக்கத் தொடங்கியதாம்.

மன்னர் பொம்மி நாயக்கர் பிர மித்துப் போனாராம்.

'வேட்டை நாயை முயல் எதிர்த்துத் துரத்திய பகுதியில் பெரியதோர் லிங்கம் உள்ளது. தோண்டி அதை எடுத்து, எதிரே உள்ள மலையி லிருக்கின்ற பெரும் புதையலைக் கண்டெடுத்து 'ஆலயம் அமை' என்று கனவில் இறைவாக்குக் கிடைத்தது.

கி.பி. 1526.



புனிதத் தீர்க் கேணி



அரிசிக் கல் தொட்டி

ஸ்ரீ ஜலகண்டேஸ்வரர் ஆலயக் கட்டுமானப் பணி அரவாரத்துடன் தொடங்கப்பட்டு இனிதே நிறைவேற முழு முதற் காரணகர்த்தராய் விளங்கிய பொம்மி நாயக்கர் கி.பி. 1530 ஆம் ஆண்டில் ஆலய நிர்வாகச் சீர்மைக்காக ஒரு கிராமத்தை வரி விலக்குச் செய்திருக்கிறார். அம் பருத்தி கிராமம், கி.பி. 1576 ஆம் ஆண்டில் திப்பசமுத்திரம் கிராமம், மற்றும் சத்துவாச்சாரி, சம்பாநல்லூர், பெருமுகை ஆகிய கிராமங்களும் மான்யங்களாய் ஆலய மேன்மைக்கு அருட் சாதனங்களாகியிருக்கின்றன.

பதினேழாம் நூற்றாண்டின் மையத்தில் வேலூரைப் பிடித்த ஓர் இஸ்லாமிய மன்னனின் மகன், ஆல யத்தின் கருவறையில் நடனமணியைக் கொலை செய்ததால் ஆலய வழிபாடு நின்று போனது.

சிலகாலம் கழித்து மீண்டும் வழிபாடு தொடங்கியது.

கி.பி. 1708 ஆம் ஆண்டில் யாது காரணத்தாலோ மீண்டும் ஸ்ரீ ஜலகண்

டேஸ்வரரின் கருவறை இருளில் மூழ்கியது.

'ஆண்டவன் இல்லாத ஆலயம்' எனும் அவப்பெயரை ஆரத் தழுவித் தத்தளித்தது.

### தகப்பனும் மகனும்

கணபதி ஸ்தபதி ஸ்ரீஅப்பைய தீட்சதரின் அருளாசியுடனும், பொம்மி நாயக்கரின் பொருளாசியுடனும் துரிதமாய் ஆலயப் பணிகளை நிறைவேற்றுவதில் முனைப்புடன் ஈடுபட்டார். கட்டடப் பணிகள் முடிவுற்று விக்கிரகங்கள், உட்புறச் சிற்ப வேலைப்பாடுகள் குறித்த ஆலோசனை மேற்கொண்ட சமயத்தில் அங்கு வந்த இளஞ்சிற்பி, இவ்வாலயக் கருவறைப் பகுதியில் ஒரு கல்லுக்குள் ஒரு தேரை இருப்பதாயும், சிற்ப, ஆலயக் கலை விதிப்படி தவறு நேர்ந்திருப்பதாயும் சுட்டினான்.



வேலூர்க் கோட்டை

தீர்க்கமாய்ச் சிந்தித்த கணபதி ஸ்தபதி தன் ஞானத்தைப் பிரயோகித்து விதிகள் குறித்து இளஞ் சிற்பியுடன் விவாதித்தார்.

குறிப்பிட்ட விதியைச் சொல்லி ஆலய அமைப்பின் தவறை அறுதியிட்டான் இளஞ்சிற்பி.

அமைக்கப்பட்டுவிட்ட ஆலயத்தில் லிங்கப் பிரதிஷ்டை செய்துதானே தீர வேண்டுமென்ற கணபதி ஸ்தபதியின் கூற்றுக்கு "ஆலயவழிபாடு தொடராது. இரண்டு தடவைகள் தடைப்படும். ஆண்டவன் இல்லாத ஆலயம் எனப்படும். நீண்ட இடைவெளிக்குப் பின்னர் ஆலய வழிபாடு தொடங்கி பிரபஞ்சம் உள்ளளவும் பிரபலமாய் விளங்கும்" என்று ஆறுதல் அளித்தான் இளஞ்சிற்பி.

தன்னுடைய் தன் இல்லாளுக்கும் மட்டுமே தெரிந்த ஆலயக் கட்டுமானம் குறித்த அந்த பிரத்யேக விதி இந்த இளஞ் சிற்பிக்குத் தெரிந்தவிதம் எவ்வாறு என்று குழம்பிய கணபதி ஸ்தபதி அவனது பூர்வீகத்தை வினவினார்.

தென்னக யாத்திரை வந்த தன் தந்தை கணபதி ஸ்தபதி நீண்ட நெடுங்காலமாய் இல்லம் திரும்பாததால் அவரைத் தேடி வர நேர்ந்த அவலத்தை அறிவித்தான் இளஞ் சிற்பி.

ஆனந்தத்தில் மிதந்து அணைத்துப் பூரிப்புற்றனர் தகப்பனும் மகனும்.

பிரிந்த இல்லத்தார் சேரும் பொருட்டு பிரார்த்தனை மேற்கொள்ளும் பேராலயமாய் இன்றும் பெருமையுற்றிருக்கிறது இவ்வாலயம்.

### அபூர்வ ஆலயம்

நீண்ட சதுரத்தில் அமைந்துள்ள இவ்வாலயத்தின் இராஜ கோபுரம் இடி, மின்னல், மழை ஆகிய எவற்றாலும் சிறிதும் பாதிப்புக்குள்ளாகாமல் இன்றும் நின்று நிலவுகிறது. ஏழு நிலைகளைக் கொண்ட இது 30 மீட்டர் உயரம் கொண்டது. ஒவ்வொரு நிலை வாயிலின் இருபக்கங்களிலும் ஒவ்வொரு பெண், சிற்ப வடிவில் சிலிர்ப்பூட்டுகிறாள். விமானத்தின் வடக்கும் தெற்கும் கண்களைக் கொள்ளையிடுகின்ற பேரழகுப் பிம்பங்களாய் எண்ணிறந்த சிற்பங்களைக் கொண்டிருக்கின்றன.

இராஜகோபுரத்தின் தென்மேற்கு மூலையில் உள்ள திருக் கல்யாண மண்டபம் திரைகடல் கடந்தும் நிறைபுகழ் ஈட்டிய ஒன்று.

இலண்டன் பிரைட்டன் கலைக் கூடத்திற்கு இத் திருக் கல்யாண மண்டபத்தைக் கப்பலில் எடுத்துச் செல்லும் முயற்சி ஆங்கிலேயரால் மேற்கொளளப்பட்டதென்ற ஒன்றே இதன் பெருஞ்சிறப்பிற்குச் சான்று.

முப்பத்திரண்டு பெரிய தூண்கள். பதினாறு சிறிய தூண்கள்.

ஒவ்வொரு தூணிலும் சிற்பங்கள்.

செழுமையான குதிரை மீதமர்ந்த மதர்ப்பான வீரன் ஆரோகணித்து சிறுத்தையை வேட்டையாடுகிறான்.

மூன்று தளங்கள் கொண்ட ஒவ்வொரு தூணின் தளங்களின் நான்கு பக்கங்களிலும் ஒவ்வொரு சிற்பங்கள். மூன்றாவது தளத்தில் மிதக்கும் பொதிகை.



அறுபத்து மூவர்

லட்சுமி, சரஸ்வதி, அநுமார், மயில்வேலவன், வித்தியாச உருவ அமைப்பில் விநாயகர், சிவன், மும்மூர்த்திகள், மச்சாவதாரம், நரசிம்மாவதாரம், இராமாவதாரம், யாளிகள், யானைகள், சிங்கங்கள், வராகங்கள் தேவலோக தேவதைகள் இத்யாதி... இத்யாதி.

கற்களில் கவி பாடுகிறார்கள். கதை சொல்கிறார்கள்.

நடுவில் ஆமையின்மீது அமர்க்களமாய் அமைந்த சுற்றிலும் சிறுசிறு சிற்பங்கள் கொண்ட பெரிய மேடை.

ஒரே கல்லினாலான விரி தாமரையின் ஒவ்வோர் இதழிலும் ஒவ்வொரு கிளி நேராகவும், தலை கீழாகவும் அலகினால் கொத்தும் வட்டக்காட்சி மண்டபத்தின் விதானத்தில் பதித்த விழிகளை மீளச் செய்யாத ஒன்றென்றால் அது உண்மையிலும் உண்மை.

தென்னிந்தியாவிலேயே சிற்பக் கலை அற்புதம் மிளிர்கின்ற இத் திருக் கல்யாண மண்டபத்தின் எதிரே சமீபத்தில் புதைந்திருந்தது - தூர் எடுக்கப்பட்டு இப்போது சூர்யக் கதிர்கள் பளிரிடும் சிவகங்கைக் குளம். அடுத்தடுத்து வசந்த மண்டபம். யாகசாலை. ஆருத்ரா மண்டபம்., மடப்பள்ளி.

இரண்டாம் பிராகாரத்தில் -

புதிதாய்க் கண்டுபிடிக்கப்பட்ட புனித நீர்க் கேணி புதுமைகளைப் புரிகிறது.

ஒன்பது மீட்டர் ஆழமுள்ள இப் புனித நீர்க் கேணியின் மூன்று மீட்டர் ஆழத்தில் தென்புறத்தில் ஒரு சுரங்கம் உள்ளது. ஒன்றரை மீட்டர் உயர, ஒரு மீட்டர் அகலக் கற்கதவிற்குள் மூன்று மீட்டர் அகலமும் ஆறு மீட்டர் நீளமும் கொண்ட கற்களால் கட்டப்பட்ட நீராழி மண்டபம் அச் சுரங்கத்திலுள்ளது.

இக்கேணி நீரே அன்றாட அபிஷேகத்திற்குப் பயன்படுத்தப்படுகிறது. இக் கேணியின் படிக்கட்டுகளில், வீசுகின்ற காசு நின்றால் நினைத்தது நிறைவேறுமென்ற நம்பிக்கை பரவி வருகிறது.

ஆனை முகத்தோன், அன்னை அகிலாண்டேஸ்வரி, தட்சிணாமூர்த்தி, பிரும்மா, சண்டீஸ்வரர், துர்க்கை, அறுபத்து மூவர் காண்போரின் கண்களில் களிவைத் தெளிக்கின்றனர்.

பதினைந்து மீட்டர் உயரமுள்ள, பாங்கிக்காலை நான்கு பூதங்கள் தாங்க, அதன்மீது அமைந்த சதுரப் பெட்டியை நான்கு யானைகளும், சதுரமணிப் பலகையை நான்கு யாளிகளும் தாங்க வடிவமைக்கப்பட்ட கொடிமரம் தலையைத் தூக்கிப் பார்க்கத் தூண்டுகிறது.



துவஜஸ்தம்பம்

அதனருகில் இருக்கின்ற அதிசயக் கல்தொட்டி கட்டாயம் காண வேண்டிய ஒன்று.

அருள்மிகு அகிலாண்டேஸ்வரி அம்மனுக்கெதிரில் 'நவசக்தி சத்ய ஜோதி' எனப்படு ...ணையா ஜோதி வேறெந்த ஆலயங்களிலும் தென்படாத ஒன்றாய் நம்மை அசத்துகிறது.

வட்ட வடிவில், நட்ட நடுவில் பிரதான விளக்கைச் சுற்றி எட்டு விளக்குகள்.

இந்த 'நவசக்தி சத்யஜோதி' எப்பொழுதும் எரிந்து கொண்டிருக்கிறது.

இதற்கு நெய்யோ, எண்ணெய்யோ ஊற்றி, தெய்வ வழிபாடு செய்வோரின் எண்ணங்கள் நிறைவேறுகின்றன. பிணி நீங்குகிறது. பிள்ளைப்பேறு கிடைக்கிறது. மனம் சாந்தியடைகிறது. மணங்கள் நிகழ்கின்றன.

சூழ் ஜலத்தின் மத்தியில் மன்னர் பொம்மி நாயக்கரால் கண்டெடுக்கப்பட்ட மூலவர், ஜலகண்டேஸ்வரர் என்று நாமகரணம் செய்விக்கப்பட்டார்.

பூஜை புனஸ்காரங்கள் அற்றுப்போன அக் காலத்திலேயே ஆலயத்திலிருந்து அகற்றப்பட்டு, கோட்டையிலிருந்து முந்நூறு மீட்டர் தூரத்துக் கிராமத்தில் மண்ணோடு மண்ணாய்ப் புதைந்து போனது சிவலிங்கம். இந்த நிலை ஏன் நேர்ந்தது என்பதற்குச் சரியான ஆதாரமில்லை.

Dead Temple எனப்பட்ட இறந்த ஆலயத்தில் 16.3.1981 திங்களன்று காலை ஒன்பது மணிக்குப் பின்னர் "அரகரா... சிவசிவா... அப்பனே ஜலகண்டேஸ்வரா..." என்ற ஓங்கார நாதவெள்ளம் முழங்க புதையுண்டிருந்த ஸ்ரீஜலகண்டேஸ்வரர் புகுந்தார்.

சுமார் முந்நூற்று நாற்பதாண்டுகள் ஆலயத்திற்கப்பால், அநாதை இரட்சகரான ஸ்ரீஜலகண்டேஸ்வரர் தானும் அநாதை என்று வதிந்த நிலை நீங்கி அகில உலகைப் புரக்கும் ஈஸ்வரராய், மூலவராய் ஆலயப் பிரவேசியாகிப் பிரதிஷ்டையானார்.

கருவறையைத் தாங்கியிருக்கும் ஈஸ்வரர் கோபுரமும், அதன் விதானமும் நான்கு திசைகளிலிருந்து ஐந்து தலை நாகப்பாம்பு சுமந்திருப்பது போல் தோன்றுகிறது. ஈஸ்வரர் கோபுரக்கலசம் மிகவும் அபூர்வமான நாக கலசம்.

## சந்நிதிகள்

ஸ்ரீஜலகண்டேஸ்வரர் சந்நிதி, ஸ்ரீஅகிலாண்டேஸ்வரி சந்நிதி, ஸ்ரீவெங்கடேச பெருமாள் சந்நிதி, ஸ்ரீநடராஜர் சந்நிதி ஆகியன்வை முற்காலத்தவை. ஸ்ரீசண்முகர் சந்நிதி, பச்சைக்கல் ஆறு அடிசெல்வ விநாயகர் சந்நிதி, வலம்புரி விநாயகர் சந்நிதி, சண்டேஸ்வரர் சந்நிதி, பைரவர் சந்நிதி ஆகியவை இக் காலத்தவை.

நவக்கிரகங்கள், லட்சுமி, சரஸ்வதி, அப்பர், சுந்தரர், ஞான சம்பந்தர், மாணிக்க வாசகர் என்று நாளொரு மேனியாய் நீளுகின்றன.

பத்தாண்டுகளுக்கு முன்னர் ஆலய நுழைவாயிலில் பக்கத்திற்கொன்றாக நிறுத்தப்பட்டிருந்த உயரமான துவாரபாலகர் இருவர் இப்போது உள்ளே உறைகின்றார்கள். ॐ

வண்ணப்படங்கள் :

விடிவெள்ளி ஆறுமுகம்



வண்ணப்படம் : யோகா

சதம் காணும் மாணிக்கவேலனார்



பரமாச்சார்யாளுக்கு நடைபெற்ற கனகாபிடேகத்தில் பாத பூஜை போட்டோ : யோகா 'அமுதசுரபி' தீபாவளி மலர் - 1993

# குருவின் திருவார்த்தை

**வானதி திருநாவுக்கரசு**



ஸ்ரீகாஞ்சி மடத்தோடு அடியேனுக்கு 25 ஆண்டுகளாகத் தொடர்பு உண்டு. ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் இளமைப் பருவத்தை அடியேன் நன்கு அறிவேன். அவர்கள் திருச்சியிலிருந்த பொழுது ஏராளமானக் கதைகள், கவிதைகள், கட்டுரைகள் எழுதி கலைமகள் குருப்பிலிருந்த 'கண்ணன்' என்ற சிறுவர் பத்திரிகைக்கு அனுப்புவார்கள். அவர்களுடைய கதைகள் கட்டுரைகள் கண்ணனில் ஏராளமாக வெளிவந்திருக்கின்றன. ஸ்ரீ மடத்து வேலைகளையும் கவனித்துக் கொண்டு 'கிங்கரன்' (தொண்டன்) 'சங்கர கிங்கரன்' என்னும் பெயர்களில் அவர்கள் கதைகள் கட்டுரைகளை எழுதியிருக்கிறார்கள். அடியேனும் சிறுவர் கதைகள் எழுதுவேன். கண்ணன் பத்திரிகை ஆசிரியர் 'ஆர்.வி.' எனக்கு மிகவும் வேண்டிய நண்பர். என்னை ஸ்ரீ காஞ்சி மடத்தோடு இக்கியமாக்கியவரே கண்ணன் பத்திரிகை ஆசிரியர் ஆர்.வி. ஆர்.வெங்கட்ராமன்தான்! அவரும் நானும் அடிக்கடி போய் ஸ்ரீஜயேந்திர சரஸ்வதி சுவாமிகளையும் ஸ்ரீ மகாப் பெரியவர்களையும் தரிசித்து வருவோம். பெரியவர்கள் எங்களுக்கு ஆசி வழங்கி தனித்தனியாக விபூதி பிரசாதம் வழங்குவார்கள். அப்படி ஆசி வழங்கும் பொழுது ஒருநாள், "நீங்கள் விபூதி பிரசாதம் வாங்கிக் கொண்டால் மட்டும் போதாது. மயிலாப்பூரிலேதானே நீங்கள் இருக்கிறீர்கள். மயிலாப்பூர் நண்பர்கள் எல்லாம் சேர்ந்து ஒரு சத்சங்கம் ஆரம்பித்து எங்களிடம் ஆசி பெற்று மொத்தமாக விபூதி பிரசாதம் வாங்கிக் கொண்டு போய் வாரா வாரம் சென்னையிலிருக்கும் ஹாஸ்பிடல் நோயாளிகள் ஒவ்வொருவரையும் மாலையில் பார்த்து காஞ்சி மடத்துப் பிரசாதங்களை அவர்களுக்குக் கொடுத்து வரவேண்டும். தீர்ந்து போச்சுன்னா மறுபடி வந்து வாங்கிப் போய் தவறாமல் நோயாளிகளுக்குக் கொடுத்து வரணும். அதைச் செய்வீர்களா?" என்றார்கள்.

அதன்படி பெரியவர்கள் ஆசியோடு விபூதி பிரசாதம் வாங்கிக் கொண்டு போய் ஜி.ஹெச். மற்றும் இராயப்பேட்டை ஹாஸ்பிடல் நோயாளிகள் ஒவ்வொருவருக்கும் வாரம் தவறாமல் கொடுத்து வந்தோம். ஹாஸ்பிடல் நோயாளிகள் ஸ்ரீகாஞ்சி மடத்துப் பிரசாதம் இதோ என்றவுடன் உற்சாகமாக எழுந்து நின்று அதை பயபக்தியுடன் வாங்கி அணிந்து கொள்வார்கள். ஸ்ரீகாஞ்சிப் பெரியவர்களின் கருணையே கருணை என்று போற்றிப் பாராட்டுவார்கள். 'தெய்வமே அவர் மூலம் வந்து ஆசீர்வதிப்பதாகக் கருது, இப்பொழுது குணமாகிவிட்டது' என்று கூறுவார்கள். இதை அப்படியே சுவாமிகளிடம் போய்ச் சொல்வோம். அவர்கள் புன்னகைத்து 'நம்பிக்கையோடு பூசிக் கொண்டார்களா?' என்று கேட்பார்கள். 'ஆம். நம்பிக்கையோடு பூசிக்கொண்டார்கள்' என்று சொல்வோம். இந்தப் புனிதப் பணியை மிகச் சிறந்த சமுதாயப் பணியாகக் கருதி ஸ்ரீகாஞ்சி மடத்தோடு என்னை இக்கியப்படுத்திக் கொண்டேன். ஸ்ரீகாஞ்சி மடத்தோடு எனக்குள்ள அனுபவங்களை நிறையச் சொல்ல முடியும்.

சதம் கண்ட சங்கரர் ஸ்ரீசந்திர சேகரேந்திர சரஸ்வதி சுவாமிகளை இன்று உலகமே போற்றுகிறது. அவர்கள் Internationaly accepted saint. அவர்கள் அடிச்சுவட்டில் வந்த ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் ஸ்ரீமடத்து நான்கு சுவர்களுக்கு மத்தியில் மட்டும் இருந்து கொண்டு தொண்டு செய்யாமல் பாரதம் முழுவதும் சென்று மக்களோடு மக்களாகக் கலந்து சேரிகளுக்குக்கூடச் சென்று அவர்களுக்கு ஏற்படுகிற துன்ப துயரங்களிலெல்லாம் பங்கு கொண்டு சமூகசேவை செய்து வருவதை நாம் கண்கூடாகக் கண்டு வருகிறோம். காரணம் ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் சின்ன வயசிலே ரொம்பவும் கஷ்டப்பட்டுப் படித்திருக்கிறார்கள்.

சுவாமிகளுக்கு எட்டு வயசு ஆகும் போது திருவிடைமருதூரில் வேதபாடசாலையிலே சேர்ந்து பதினாலு வயசு முடியும் வரைக்கும் அங்கே படித்திருக்கிறார். திருவிடைமருதூர் வேத பாடசாலை எங்கள் நகரத்தார் திருப்பணிதான். அதுவும் எங்களூர் தேவகோட்டை மெ.லெ.மெ. குடும்பத்தினர் செய்தது. அங்கு அவர்களுக்குப் பசுமடம், வேதபாடசாலை எல்லாம் இருக்கிறது. அந்தப் பாடசாலையில் நம் ஜயேந்திரர் வேதம் படித்தார் என்பதை அறிய எனக்குப் பெருமையாக இருக்கிறது.

திருவிடைமருதூரில் அவருக்கு வேத அப்பியாசம் பண்ணி வைத்தது யார் தெரியுமா? ஸ்ரீ மகாப் பெரியவர்களுடைய கடைசித் தம்பி கிருஷ்ண மூர்த்தி சாஸ்திரிகள்தான்.

சுவாமிகளுடைய இளம் வயசு சரிதை கேட்க மிகச் சுவாரஸ்யமாக இருக்கும். இதை அவர் கொடுத்த பேட்டிக் கட்டுரையில் படித்து அப்படியே அசந்துவிட்டேன். அவர் பேசுவது போலவே அவர் வார்த்தைகளில் அப்படியே உங்களுக்குச் சொல்கிறேன்.

'மடத்துக்கு வருவதற்குச் சில நாள்களுக்கு முன்பு யாத்திரை கிளம்பினேன். அப்பா அம்மாவும் கூட வந்தா - மதுரைக்கு வந்தபோது ஐயங்கார் நண்பர் ஒருவர் வீட்டில் தங்கத் தீர்மானிச்சோம். மதுரை ரயில்வே ஸ்டேஷனில் இறங்கியவுடன் அங்கிருந்த தெரிந்த ஓர் ஆளிடம் சாமான்களையெல்லாம் கொடுத்து ஐயங்கார் வீட்டில் கொண்டு வைக்கச் சொன்னோம். அன்று முழுவதும் மதுரையைச் சுற்றிவிட்டு இரவு ரொம்ப லேட்டாக ஐயங்கார் வீட்டுக்குப் போனோம். நாங்கள் அப்போது வருவோம் என்று அவர்கள் கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை. நாங்கள் எத்தனை பேர் வந்திருக்கோம் என்ற விவரங்களை, பெட்டிகளைக் கொண்டு வைத்த ஆள் சொல்லவில்லை போலிருக்கு. எங்களுக்கோ பயங்கரப் பசி. அவர்கள் வீட்டுல கொஞ்சமா பழையதுதான் இருந்தது. ரொம்பவும் சங்கடப்பட்டுவிட்டார்கள் ஐயங்கார் வீட்டில். 'பழைய சாதமாக இருந்தால் என்ன பரவாயில்லை....' என்று நாங்கள் எவ்வளவோ சொல்லி

யும் அவர்கள் சமாதானமாகவில்லை. கடைசியா ஆளுக்குக் கொஞ்சமா அந்தப் பழையதைப் போட்டுண்டு சாப்பிட்டபோது ஐயங்கார் கண்கலங்கிட்டார். 'நாளைக்குச் சுவாமிகளா ஆகப் போற உனக்கு பழையதைப் போடறேனே...'னு அழ ஆரம்பிச்சுட்டார் ஐயங்கார். அவாளோட அன்பை இப்ப நினைச்சாலும் எனக்கு மனசை வேதனைப்படுத்தறது. என் கண் கலங்குகிறது. இப்ப என்னைப் பார்க்க வரும்போதுகூட அந்தச் சம்பவத்தைச் சொல்லி வருத்தப்படுவார் ஐயங்கார்'.

இன்னொரு சம்பவத்தை அவரே கூறுகிறார் கேளுங்கள்.

'அப்புறம் காசியாத்திரைக்கு டில்லி கிளம்பினோம். டில்லியிலே சுந்தரேச ஐயர்னு ஒரு நண்பர் வீட்டுலதான் தங்கினோம். அப்போ நான் குடுமி வெச்சுண்டிருப்பேன். டில்லியில் வெளியில் குடுமியோட போனா பரிகாசம் பண்ணுவாளோன்னு வெட்கமா இருந்தது. குடுமியை மறைக்கப் பெரிய முண்டாசைக் கட்டிண்டேன். சுந்தரேச ஐயர் எப்பவும் ஒரு தொப்பி போட்டிண்டு இருப்பார். கழட்டவே மாட்டார். ஸ்டைலுக்குத்தான் அப்படிப் போட்டிருக்கார்னு நினைச்சேன். ஒரு நாள் எதேச்சையா அவர் தொப்பியைக் கழட்டினபோது பார்த்தேன். அவரும் குடுமி! அதை மறைக்கத் தான் 'தொப்பின்னு' அப்புறம்தான் புரிஞ்சுது! அப்புறம் தைரியம் வந்து முண்டாசை எடுத்துட்டுக் குடுமியோடவே டில்லியில் பல இடங்கள்ல சுத்தியிருக்கேன். தாஜ்மகால், குதுப்மினார்னு ஓர் இடம் விடலை. தெரிஞ்ச எம்.பி. ஒருத்தர் மூலமா பார்லிமெண்டைச் சுற்றிப் பார்த்தேன். யாத்திரை எல்லாம் முடிஞ்சு நான் பட்டத்துக்கு வந்த போது எனக்குச் சரியா பதினெட்டு வயசு!'

இந்த மாதிரி சுவாமிகளின் இளமைப் பருவ நிகழ்ச்சிகள் எத்தனையோ உள்ளன. இரண்டை மட்டுமே அவர் வாய் மொழியாகவே குறிப்பிட்டேன். இவற்றை ஏன் குறிப்பிட்டேன் என்றால் ஸ்ரீஜயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் மனித நேயத்தையும், அன்பையும், கருணையையும், துணிவையும், அவர்கள் நகைச்சுவை உணர்வையும் குறிப்பிட்டுக் காட்டுவதற்காகத்தான்.

ஆதிசங்கரரின் அடிச்சுவட்டில் வந்த பேரருளாளர் ஸ்ரீ சந்திரசேகரேந்திரரின் அருட்பலத்தினாலும், ஆன்மிகப் பயிற்சியினாலும் ஆழ்ந்த படிப்பினாலும், தவ வலிமையினாலும், மனித நேயத்தாலும் ஸ்ரீஜயேந்திரர் சிறந்து விளங்குகிறார்கள்.



நானில மக்கள் நலமுற - எல்லோரும் எல்லாச் செல்வமும் பெற்றிட அவர்கள் எல்லாவற்றையும் துறந்து தூய வாழ்க்கை மேற்கொண்டு, சதாசர்வ காலமும் இறைவனையே நினைத்து போற்றித் தியானித்து வருவதைக் கண்கூடாகப் பார்த்து வருகிறோம்.

இந்து மதம் இன்றைக்குச் சிறந்தோங்கி விளங்குகிறது என்றால் ஸ்ரீ காஞ்சி மடத்தின் பங்கு - பணி மிக மிக அதிகம். 'நான் ஓர் இந்து' என்று ஒவ்வொருவரும் பெருமையோடு சொல்லிக் கொள்ளத் தக்க விகக்கில் இந்துமத தத்துவங்களையும் அதன் அருமை பெருமைகளையும் உலகறியச் செய்து வருபவர்கள் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள்தாம்.

அகிலத்திலுள்ள மக்கள் அஞ்ஞான இருளிலிருந்து விலகவும் துன்பங்களிலிருந்து விடுபடவும் துயரங்களிலிருந்து மீளவும் மக்கள் மேம்படவும் உயரிய கருத்துகளை நாளும் சிந்தித்த வண்ணமிருப்பவர் ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள்.

பைபிள் சொஸைட்டி எப்படி பைபிளை Free ஆகப் போட்டு வழங்குகிறதோ அப்படி நமது இந்துமத தத்துவங்களையும், வேத இதிகாச புராணங்களையும், சமய தத்துவங்களையும் நூலாக்கி ஸ்ரீ காஞ்சி மடத்தில் Free ஆக அச்சிட்டு மக்களுக்கு வழங்கி வருகிறார்கள். நான் காஞ்சி மடத்துக்குப் போகும் போதெல்லாம் 'விநாயகர் அகவலை அச்சிட்டு வழங்கு; கந்த ஷஷ்டி கவசத்தைப் போட்டுக் கொடு; கனக தாரா ஸ்தோத்திரத்தைப் போட்டுக் கொடு; சிவபுராணத்தைப் போடு' என்று சொல்வார்கள். அவர்கள் ஆணைப்படி சிறு சிறு புத்தகங்களாக அச்சிட்டு வழங்கி வருகிறேன். என் மாதிரி அவர்களிடம் தொடர்புடையவர்களை எல்லாம் சிறு சிறு புத்தகங்கள் - அறநூல்களை அச்சிட்டு இலவசமாக வழங்கச் சொல்வார்கள்.

'இதனை இதனால் இவன் முடிக்கும் என்று ஆய்ந்து அதனை அவன்கண் விடல்'.

என்பதை ஸ்ரீஜயேந்திரர் நன்கு அறிந்தவர். சுவாமிகள் மிகச் சிறந்த நிர்வாகி. ஸ்ரீமடத்துடன் தொடர்புடையவர்களுக்கு இது நன்கு தெரியும்.

ஒரு நாள் நான் ஸ்ரீ மடத்துக்குப் போயிருந்த சமயம். ஒரு அம்மாள் ரூ. 5000 பணத்தைக் கொண்டு வந்து, "பெரியவாள் நம் மடத்து முன் மண்டபம் கட்ட வைத்துக் கொள்ள வேண்டும்" என்று கொடுக்கிறாள். "இதை ஆபீஸில் கொடுத்து ரசீது வாங்கிப் போ" என்று சொல்கிறார். அதே சமயம் நீலகண்ட அய்யர் நூறுக்கணக்கான கடிதங்களைக் கொண்டு வந்து கொடுத்து அவைகளுக்கு என்ன பதில் எழுதுவது என்று கேட்கிறார். உடனுக்குடன் அவைகளைப் படித்துப் பார்த்து தக்க பதில் சொல்கிறார். பொன்மலர் பத்திரிகை நிருபரைப் பார்த்து, "Matter என்ன ஆச்சு?" எனக் கேட்கிறார். ஓர் அம்மாள் வந்து, "என் மகளுக்குக் கல்யாணம். பணம் பத்தலே. சேலத்துல ஒரு வீடுதான் இருக்கு. அதை வித்துதான் கல்யாணம் பண்ண வேணும். யாரும் வாங்கிக்க மாட்டேங்கறா. பெரியவா அனுக்கிரகம் பண்ண வேணும். எப்படியாவது சீக்கிரம் வித்துட்டாதான் என் பெண்ணிற்குக் கல்யாணம் ஆகும்"என்கிறாள். உடனே ஆசீர்வதித்து பிரசாதம் கொடுக்கிறார். ஆசி பெறக் காத்து நிற்கும் மக்கள் ஒவ்வொருவரையும் வரிசையாக வந்து பிரசாதம் வாங்கிப் போகச் சொல்கிறார்.

நானும் எனது மனைவியும் பிரார்த்தனையாக ஒரு வெள்ளி விளக்கை ஸ்ரீமடத்துக்குக் காணிக்கையாக்க நின்று கொண்டிருக்கிறோம். இதைப் பார்த்ததும் பணியாளைக் கூப்பிட்டு "இவர்களைக் கூட்டிப்போய் ஸ்ரீ மகா திரிபுர சுந்தரி ஸ்ரீ சந்திரமௌலீஸ்வரர் சந்நிதியில் வைத்து விளக்கேற்றி சாமி கும்பிட வைத்துக் கூட்டிக் கொண்டு வா" என்றார்கள்.

ஒவ்வொரு செயலையும் தம் அருட்பார்வையாலும் ஆணைகளினாலும் நிறைவேற்றும் பாங்கினையும் சுறுசுறுப்பையும் பார்த்து அப்படியே வியந்து போய் துணிவோடு அவர்களிடம், "சுவாமி, ஸ்ரீமடமென்ன, இந்தியாவையே நிர்வகிக்கும் ஆற்றல் தங்களுக்கு இருக்கிறது" என்று கூறினேன். இதைக் கேட்டு சுவாமிகள் அவர்களுக்கே உரிய மணிக்குரலை எழுப்பி ஆஹா எனக் கை கொட்டிச் சிரித்த காட்சியை என்னவென்று விவரிப்பேன்!

இப்படி அவர்கள் புகழை நாள் முழுவதும் சொல்லிக் கொண்டிருக்க என்னிடம் நிறைய விஷயங்களுண்டு.

# யோகி வேமனர்

டாக்டர் ஆர். பத்மநாபன், இ.ஆ.ப. (ஓய்வு)

யோகி வேமனர் தமது இளமையில் உலகியல் சுகங்களில் மூழ்கியவராக வளர்ந்தார். பொறுப்பற்றவராகவும் கன்னியர் கூட்டத்தில் நாட்டமுள்ளவராகவும் திரிந்தார். தீய நண்பர்களின் உறவால் காமத்திலும் களியாட்டத்திலும் மூழ்கியவரானார். நாட்டிய மங்கையர், பரத்தையர் ஆகியோரின் கவர்ச்சியும் அழகும் அவரது காளைப்பருவ வேட்டைக்கு விருந்தாயின. ஒருநாள் இந்தக் கவர்ச்சியின் கொட்டம் அடங்கி அவரது வாழ்க்கைப் போக்கு மாறியது. ஊர் சுற்றும் காமுகராக இருந்து தத்துவக் கவிஞராக மாறியவரே யோகி வேமனர்.

ஆந்திரப் பிரதேசத்திலுள்ள கடப்பை மாவட்டத்தில் விவசாயக் குடும்பமொன்றில் பிறந்த வேமனர் கி.பி. 1400-1480 ஆகிய ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்தார் எனப்படுகின்றது. அவருடைய இளமை வாழ்க்கை, பெற்றோர் முதலியவற்றை அறிய உதவும் நம்பத்தகுந்த ஆதாரங்கள் எதுவுமில்லை. ஆந்திர நாட்டிலும் பிற இடங்களிலும் வழங்கிவரும் செவிவழிச் செய்திகள், தெலுங்கிலுள்ள அவருடைய பாடல்கள் ஆகியவற்றால் நரசாம்பாள் என்னும் அவரது அண்ணியார் அவரை வளர்த்து ஆளாக்கினார் என அறிய முடிகின்றது. நரசாம்பாள், வேமனரை அன்புடன் ஆதரித்து வளர்த்தார், வேமனரும் அவரைத் தம் தாயாகவும் தெய்வமாகவும் கருதிப் போற்றினார். இருவரும் அளவிலாப் பற்றும் பாசமும் கொண்டிருந்தனர். பக்தியும் சீலமும் மிகுந்த நரசாம்பாள் ஏழை, எளியோரிடம் பரிவு கொண்டு உதவும் குணமுடையவர். இதனால் சுற்றுப்புற மக்களிடையே மதிப்பும், மரியாதையும் பெற்றிருந்தார். வேமனரிடம் அன்பு கொண்டிருந்த நரசாம்பாள் அவரது ஒழுக்கக் கேடான வாழ்க்கைப் போக்கைக் கண்டு வருந்தினார். அவர், பரத்தையர் உறவில் நாட்டமுடையவராய் தமது பொன்னையும், பொருளையும், நேரத்தையும் இழப்பதை வெறுத்தார். பண்பும் பரிவும் மிகுந்த பொறுப்புள்ளவராக வேமனர் வளர வேண்டுமென விரும்பி அவர் எடுத்துரைத்த அறிவுரைகளெல்லாம் பயனற்றுப் போயின. பொருட்பெண்டிர் அழகிலும் அலங்காரத்திலும் ஆட்பட்டிருந்த வேமனருக்கு நரசாம்பாளின் அறிவுரைகள் செவிடன் காதில் ஊதிய சங்காயின. எனினும் வேமனரை வெறுத்து ஒதுக்காத நரசாம்பாள் அவரைத் தடுத்துத் திருத்தும் முயற்சியில் தொடர்ந்து ஈடுபட்டார். நரசாம்பாள் விரும்பிய அந்த நாள் உதயமாயிற்று.

வேமனரைக் கவர்ந்த கன்னியர் கூட்டத்தில் குறிப்பாக நாட்டிய மடந்தை ஒருத்தியின் கட்டுடல் அழகில் பெரு விருப்பம் கொண்டு மண்ணும் விண்ணும் அவளே கதி எனக் கிடந்தார். ஒருநாள் அவள், தனக்கு வைர மோதிரம் வேண்டுமென வேமனரிடம் கேட்டாள். அதை வாங்கியளிப்பதற்குப் பணமில்லாத வேமனர் தன்னால் முடியாது என்று சொல்ல முடியாதவராக முடிவில் அந்தப் பரத்தையின் தேவையை நரசாம்பாளிடம் தெரிவித்து உதவும்படி வேண்டினார். வேமனரிடம் பரிவு கொண்ட நரசாம்பாள் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு அவரைத் திருத்தலாம் எனக் கருதினார். அவரது காம வேட்கைக்கு என்றாவது ஒருநாள் முடிவு வரும் என நம்பிய நரசாம்பாள் பெண்ணின் கவர்ச்சித் தோற்றம் வெறுக்கத்தக்கதாகவும் மாறவல்லது என்பதை அறிந்தவராய் அவர் கேட்ட வைர மோதிரத்தை ஒரு நிபந்தனையுடன் கொடுக்க முன்வந்தார். அந்த வைர மோதிரத்தை வேமனர் நல்ல பகல் வெளிச்சத்தின்போது அளிக்க வேண்டும், நாட்டிய மடந்தை அதனை அவர்முன் முழு நிர்வாணக் கோலத்தில் நின்று பெற்றுக் கொள்ள வேண்டும் என்பதே அவர் விதித்த நிபந்தனை. இந்த நிபந்தனைக்கு உட்பட்டு வைர மோதிரத்தைப் பெற வெட்டவெளிச்சத்தில் அவர் முன் நிர்வாணமாக நின்ற அந்த மங்கையைக்கண்டார் வேமனர். இதற்குமுன் கண்ட அவளது உடல் கவர்ச்சியிலும் தசைத் திரட்சியிலும் மயங்கிக் கிடந்த வேமனர், இந்தக் கோலத்தைக் கண்டு மருண்டார். கவர்ச்சித் தோற்றமும் அழகும் மறைந்து வெறுப்புக்குரிய தோற்றமே எதிரில் தெரிந்தது. அந்த வெறுப்பும் ஏமாற்றமும் அவருக்குள் மாற்றத்தை ஏற்படுத்தின. அக்கணமே மாற்றமுற்ற மனிதனாகப் புதிய வேமனரானார்.

இந்த நிகழ்ச்சிக்குப் பின் வேமனர் மன அமைதி இழந்தவராக ஆழ்ந்த யோசனையில் மூழ்கியவரானார். இதனைக் கண்ட நரசாம்பாளும், பிற உறவினர்களும் அவருக்குத் திருமணம் செய்து வைக்க முனைந்தனர்.



ஆனால் அவரோ அதில் நாட்டமில்லாதவராக இருந்ததால் திருமண முயற்சியைக் கைவிட்டனர். இத்தகைய மன நிலையிலிருந்தபோது உள்ளுணர்வுப் போராட்டத்தால் அவருடைய மனமும் உடல் தோற்றமும் மாற்றமுற்று வாழ்க்கைப் போக்கே முழுமையாக மாறியது என்பர்.

இந்தச் சூழ்நிலையில் அங்கிருந்த அடர்ந்த காட்டில் சிவயோகியார் ஒருவர் நெடிய தவம் மேற்கொண்டிருந்ததை வேமனர் அறிந்தார். அந்த யோகியார் ஒரு சிலருக்கே தரிசனம் அளித்து வந்தார். அவ்வாறு தரிசனம் பெறும் பேறு வேமனரின் நண்பன் அபிராமய்யா என்பவருக்கும் கிட்டியிருந்தது. அபிராமய்யாவுக்குச் சிவ யோகியார் தரிசனம் அளிக்கும் காட்சியைக் காண ஆர்வமுற்று, அவரைப் பின் தொடர்ந்து சென்று யோகியார் இருந்த இடத்தை அறிந்தார். அபிராமன் இல்லாத சமயம் பார்த்து சிவயோகியாரைக் கண்டு தனக்குத் தீட்சை யளிக்கும்படியும் மந்திரோபதேசம் செய்தருளும்படியும் வேண்டினார். அவர் வேண்டியவாறே யோகியார் வேமன ருக்குத் தீட்சையளித்து மந்திரோபதேசம் செய்தருளினார் எனப்படுகிறது. இவ்வாறு அபிராமனை வஞ்சித்ததற் காகத் தம்மை மன்னிக்கும்படி அவரிடம் வேண்டிக் கொண்டார்.

இதன் பின்னர் வேமனர் தன்னைச் சூழ்ந்த உலகின் புத்தொளியைக் கண்டார். பழைய உலகம் புதுமையும் வேறுபட்டத் தோற்றமும் உள்ளதாகத் தோன்றியது.

தீவிரமும் உன்னதமானதுமான சிந்தனைகள் அவர் மனத்தில் பெருக்கெடுத்தன. மெலிந்த அவர் உடலுக்குள் பெரியதோர் உள்ளக்கிளர்ச்சி ஏற்பட்டது. இயற்கை அனைத்தும் அவருக்குப் பேரழகு காட்சி நல்கின. ஒரு எளிய குடும்பஸ்தனின் நிலையிலா எண்ணங்களை எதிர்க்கும் வல்லமை பெற்றார். பேரானந்த நிலையும் ஒளி மயமான புதிய நோக்கும் காட்சியும் அவருக்கு உதய மாயிற்று. அவரது ஆன்மிக அனுபவ விளைவாகப் பாடல்கள் பெருக்கெடுத்தன. தமது அண்ணியாரை முதல் குருவாகவும், தம் நண்பன் அபிராமய்யனை இரண்டாவது குருவாகவும் சிவயோகியாரைத் தமது ஞானாசிரியராகவும் கொண்டார்.

வேமனரைப் பற்றி வழங்கும் கதை ஒன்று, அவர் தன் தாய் காசிக்குச் சென்றபோது அவரது கையில் செப்புக்காசு ஒன்றினைக் கட்டியனுப்பியதாகவும், அந்த அம்மையார் தமது காசி யாத்திரை முடிந்து திரும்பி வந்தபோது கங்கையில் அவர் நீராடியபோது அந்தச் செப்புக்காசு பொன்னாக மாறியதா எனக் கேட்டதாகவும் தெரிவிக்கிறது. கங்கை நீரால் செப்புக் காசு பொன்னாக மாறுமோ என்று அந்த அம்மையார் கள்ளங்கபடமின்றிக் கேட்க, உண்மை யான அசைவிலா நம்பிக்கை செம்பையும் பொன்னாக மாற்றவல்லது எனக் கூறினார். அவ்வாறே செப்புக் காசு களின் மீது தண்ணீரைத் தெளித்து அவற்றைப் பொன்னாக மாற்றிக் காட்டினாராம். நம் நாட்டு ஞானியர், யோகியர் பற்றி வழங்கும் செவிவழிச் செய்திகள் போலவே வேமனரின் பயணங்கள், ஆன்மிக உயர்வு பற்றிய விவரங்கள் ஆகியவற்றிற்கான தக்க ஆதாரங்கள் கிடைக்க வில்லை. எனினும் பிற யோகியர் போலவே வேமனரும் சித்து நிகழ்த்தவல்லவராகவும், ரசவாதமும், மாந்திரீக ஆற்றல் பெற்றவராகவும் இருந்ததை இன்றளவும் மக்களிடையே வழங்கும் அவரது பாடல்கள் காட்டுகின்றன. ஊர் ஊராகச் சுற்றி உணர்ச்சிப் பிரவாகமாகப் பாடல்கள் பாடி வந்த வேமனர் எளிய நடையில் மக்களுக்குப் பல அறிவுரைகளைக் கூறி வந்தார்.

ஏழை எளியவர்களுக்காக ஆலயங்களையும் அன்னச் சத்திரமும் கட்ட வேண்டுமெனக் கூறிய வேமனர், மக்கள் சேவையை வலியுறுத்தினார். யோகியராக உயர்ந்து முற்றும் துறந்த நிலை எய்திய வேமனர், ஆடை எதுவு மின்றிச் சுற்றித் திரிந்தார். பக்திநெறியையும் மக்களுக்குப் பணிபுரியும் மனப்பான்மையையும் எடுத்துரைத்தார். கண்மூடி வழக்கங்களையும், சாதி முறையையும் கண்டித் துரைத்தார். மதத்தின் பெயரால் மக்களைச் சாதிகளாகப் பிரித்துத் தாழ்த்திக் கொடுமைப்படுத்துவதைக் கைவிடுத்து அனைவரும் சமத்துவமாக வாழ வேண்டினார். மனத் தூய்மை இன்றிச் செய்யப்படும் வெற்று ஆரவாரச் சடங்குகளால் பயனேதுமில்லை என்றார். அவ்வாறே மனத்தூய்மையில்லாமல் வேத, சாஸ்திர புராணங்களில் உண்மையைத் தேடி அறிய மேற்கொள்ளும் முயற்சி வீணானது என்றும், மனத்தூய்மையே மிக அவசியம் என்றும் வலியுறுத்தினார்.

தனி மனிதர் கடைத் தேற்றத்திற்கு ஜெபம் செய்வதைவிட மாந்தரனைவரின் கதிமோட்சத்திற்கு ஜெபம் செய்வது அவசியம் என்றார். தனக்குள்ளே எங்கும் நீக்கமற நிறைந்த மெய்ப்பொருளைக் கண்டறிய வேண்டு மென உணர்த்தியதே வேமனரின் ஆன்மிகச் சாதனையின் சிகரமாக அமைந்தது. பேரின்பப் பேறு தனக்குள் இறை வனைக் கண்டவர்க்கே சித்திக்கும்; அனைத்துயிர்களின் ஆன்மநேயம், சமத்துவம், தூய்மையும், ஒழுக்கமும் நிறைந்த வாழ்க்கை, பக்தி ஆகியவற்றை வலியுறுத்தியதே வேமனரின் போதனைகளின் உயர்பண்பாக அமைந்தது.

கவிஞராகவும், சித்தராகவும், யோகியராகவும் விளங் கிய வேமனர் எழுபது ஆண்டுகாலம் வாழ்ந்தார். தமது வாழ்வின் இறுதிக் காலத்தில் அவர் குகையொன்றில் நுழைந்து மறைந்தார் என்பர். இவர் இறுதியாக வாழ்ந்த காட்டாரப்பள்ளி கிராமத்தில் அவரது பக்தர்கள் அவ ருக்குச் சமாதி எழுப்பியுள்ளனர். ஆண்டுதோறும் மக்கள் அங்கு திரண்டு விழாக் கொண்டாடி அவரது போதனை களை நினைவு கூர்கின்றனர். அனைத்துயிர்களின் நேயம், ஒருமைப்பாடு, சமத்துவம், கருணை, நற்பண்புகள் ஆகியவற்றைப் போதித்த வேமனர், திருவள்ளுவர், பசவர், இராமலிங்க அடிகளார் ஆகியோருக்கு ஒப்பாக உயர்ந்து விளங்குகின்றார். சாதி, குலம் என்னும் வேறுபாடற்று, அன்பும், அமைதியும், ஒருமையும் நிலவும் புதியதொரு சமுதாயம் அமைந்திட அவரது போதனைகள் நமக்குப் பயன்படுவனவாகுக. ಃ



# மழைநீரைச் சேமித்து மகத்தான பலன் பெறுங்கள்!

சென்னை நகரில் வருடத்திற்கு 110 செ.மீ. மழை பெய்கிறது. இம்மழைநீர் வீணாக கடலில் கலக்கிறது. இதைக் கூடுமான வரையில் தடுப்பது எளிது. இதற்காகும் செலவும் குறைவு. அதன் பயன்கள் ஏராளம்! வரைபடத்தில் காட்டியுள்ளபடி மழைநீரை பூமிக்கடியில் செலுத்திச் சேகரித்து வைப்பதால்

## பயன்கள்

1. திறந்த மற்றும் ஆழ்துளைக் கிணறுகளின் நீர் மட்டம் குறையாமல் பாதுகாக்கப்படும்.
2. நீரில் உப்புத் தன்மையும் குறையும்.
3. கட்டடங்களில் உண்டாகும் விரிசல்களும் குறையும்.

## மழைநீர் சேமிப்பு முறைகள்

### தனி வீடுகள்




1. 30 செ.மீ. விட்டத்தில் மூன்று மீட்டர் ஆழத்திற்கு ஆழ்துளைகள் அமைத்து உடைக்கப்பட்ட செங்கற்களால் நிரப்பவும். தரைமட்டத்திலிருந்து சுமார் 15 செ.மீ. ஆழத்திற்கு ஆற்று மணலை நிரப்பி ஆழ்துளைகளை மூடவும். இந்த ஆழ்துளைகளை 3 மீட்டர் இடைவெளிகளில் கட்டடத்தைச் சுற்றியுள்ள வெற்றுத் தரைப்பகுதிகளில் அமைக்க வேண்டும்.
2. வீட்டின் மொட்டை மாடியில் (Open Terrace) விழும் அனைத்து மழை நீரையும் 150 மி.மீ. விட்டமுள்ள வடிகால் குழாய் மூலம் 60 செ.மீ. X 60 செ.மீ. அளவில் 60 செ.மீ. ஆழத்தில் உடைந்த செங்கற்கள் நிரப்பப்பட்ட வடிகட்டும் படுகை வழியே வீட்டில் உள்ள கிணற்றில் சென்றடையும்படி வகை செய்ய வேண்டும்.
3. சுற்றுச்சுவரில் மழைநீர் வடிகால் ஓட்டைகள் இருப்பின் அவற்றை அடைக்கவும். மெயின் கேட்டுகளை ஒட்டி சிறுசுவர் (Dwarf Wall) எழுப்பி மழைநீர் வெளியே வீதிக்குச் செல்லாமல் படுகைக்குச் செல்ல வகை செய்ய வேண்டும்.

பொது மக்களின் நன்மை நாடி வெளியிடுவோர்



நிர்வாக இயக்குநர்
சென்னைக் குடிநீர் வாரியம்
சென்னை - 600 002.

# அண்ணா

## ரா. கணபதி

பௌர்ணமி பூஜை. குழுமியுள்ள அடியார்களில் கேரள நாட்டு அரச குடும்பமொன்றைச் சேர்ந்த பெண் மணி ஒருவர். அவர் பூஜகருக்குப் பெரிய தாலத்தில் காணிக்கைகள் வைத்து வணங்குகிறார்.

பூஜகர் - திருப்தியின் திருவடிவ மாக நிறைந்து காண்பவர், வணங்க வைக்கும் காம்பீர்யமும் இனிக்கப் பழகும் மாதுர்யமும் ஒன்று கலந்த தோற்றத்தினர், குளிர்ந்த பார்வையர், பிரஸன்ன வதனர், நடுங்கினாலும் ஓங்கி ஒலிக்கும் ஹிதவசனர் - தாலத் தைத் தூக்கி ஸதஸுக்குக் காட்டுகிறார். காணிக்கையாளர் இன்னார், காணிக் கைகள் இன்னின்ன என்று நடுங்கும் குரலில், நடுங்கினாலும் ஓங்கி ஒலிக்கும் குரலில் அறிவிக்கிறார்.

ஆச்சரியமூட்டும் திறந்த மனம், வெள்ளை உள்ளம். அவருடைய ஸ்தானத்தில் வேறெவரிருந்தாலும், 'பூஜை புரஸ்காரம் என்று சொல்லிக் கொண்டு ஆசாமி மூட்டை அடிக் கிறார்' என்று உலகம் சொல்லுமோ என எண்ணி இப்படிப்பட்ட கையுறை ஸமர்ப்பணத்தைக் கமுக்கமாக நகர்த்தத்தான் செய்வார். ஆனால் இவர்? அம்பிகையே அவளது குழந்தைகளில் பலர் மூலம் தமது வாழ்க்கைத் தேவைகளை நிறைவேற்றி வைக்கிறாள் எனக் கொண்டவராத லால் அவளது சீராட்டலில் வரும் சீர்வரிசைகளாகவே தமக்குக் கிடைக் கும் கையுறைகளைக் கருதுகிறார். எனவே பெருமையோடு அதை வெளி யுலகுக்கு விளம்பரப்படுத்துகிறார்.

"வேண்டுதல் வேண்டாமை இலான்" என்றார் தெய்வப்புலவர். வேண்டுதல் மட்டும் இலாதாராகப் பல பெரியோர் உண்டு. அவர்கள் தாமாக ஒரு பொருளையும் வேண்டிப் போகாத பக்குவம் பெற்றிருப்பரே யன்றி, அதுவாக வந்து சேரும் எதை யும் ஏற்கும் பரிபக்குவம் பெற்றிருக்க மாட்டார்கள். அதாவது 'வேண்டாமை இலாமை' கைவரப் பெற்றிருக்க மாட்டார்கள். தள்ளும் துறவினும் உயர்ந்த கொள்ளும் துறவை அபூர்வ மான மஹாநுபாவர்களிடந்தான் காண முடியும். ஏதொன்றும் வேண்டு மென்று பறக்காமல், வேண்டா மென்றும் பதறாமல் இருக்கும் அந்த ஸமநிலை நமது பெரியவரின் இயல்பாகியிருப்பது ஸஹ்ருதய ரெவருக்கும் தெள்ளத் தெளியத் தெரிகிறது.

அடுத்தே ஸமத்துவத்தின் இன் னொரு சாயலைக் காண்கிறோம்.

ஒரு பாமர ஸ்திரீ. வழியோடு போனவள் ஏதோ பூஜை நடக்கிறதே என்று உள்ளே வந்திருப்பாள் போலி ருக்கிறது. அங்கு பலர் கையுறை



செலுத்துவதைப் பார்த்துத் தாலும் ஓர் ஒரு ரூபாய் நோட்டை அந்தப் பெரிய வரிடம் நீட்டுகிறாள். அற்ப மதிப் புள்ள நூறே காசுகள்தான்! அகஸ் மாத்தாக வந்திருக்கக் கூடியவளா தலால் அதை வைத்துக் கொடுக்க அவளிடம் தட்டும் தாம்பூலமும் இல்லாதிருப்பது நியாயமே. ஆனால் அந்தப் பூஜா க்ருஹத்திலிருந்த ஏராள மான தாம்பூலத் தட்டுகளில் ஒன்றில் அவள் வைத்துக் கொடுத்திருக்கலாம். மரியாதைப் பண்புக்கு அதுதான் உகந்ததாகியிருந்திருக்கும். ஆனால் அறியாதாள் நேரே தன் கையி லிருந்தே காணிக்கையை நீட்டுகிறாள்.

பெரியவரின் ஸ்தானத்திலுள்ள வேறெவராயிருந்தாலும் முறைப்படி வைத்துக் கொடுத்திருந்தால்கூட அவ்வற்பக் காணிக்கையை வெறுமே தொட்டு, "உன்னிடமே இருக்கட்டும்" என்று திருப்பித்தானிப்பார். முறை யும் கெட்டுக் கைக்குக் கை நீட்டி னாலோ நிஷ்டுரமாகவே நிராகரித் திருப்பார்.

இவர்? அரச குடும்ப வெகு மானத்தை ஏற்ற அதே முக மலர்ச்சியோடு அந்த நூறே காசு நோட்டை நேராக அவள் கையிலிருந்து பெற்றுக்கொண்டு அவள் யார், என்ன என்று கேட்டறிகிறார்; 'ஹியரிங் எய்ட்' போட்டுக்கொண்டும் ஒத்துழைக்காத செவியாதலால் பல முறை கேட்டு அறிகிறார். அதன்பின் ராஜரீகப் பரிசுகளைத் தூக்கிக் காட்டியதை விடவும் அந்த ஒற்றை ரூபாய் நோட்டை உயர்த்தி ஏலம் போடுவது போல் ஸதஸுக்குக் காட்டி, "இந்த ஒரு ரூபாய் இந்த அம்மாள் எனக்குக் கொடுத் திருக்கிறாள்" என்று தமது கம்பித - கம்பீரக் குரலில் அறிவித்து அவள் இன்னார், இன்ன இடத்தி லிருந்து வந்தவள் என்றும் தெரிவிக் கிறார்!

❊ ❊ ❊

ஸமபாவத்தின் பிறிதொரு வண் ணம் காட்டும் இரு ஸம்பவங்கள். குரு-சிஷ்ய ஏற்றத் தாழ்வுகள் காணா ஏற்றமிகு நிகழ்ச்சிகள்.

என் தந்தையார் 1919-லிருந்தே அவரோடு நெருக்கமாகப் பழகிப் பின்னாளில் அவரிடம் தீக்ஷையும் பெற்றவர். எவரையும் எளிதில் ஒப்புக்கொள்ளாத கறார்க் கணிப்புக் காரரான அவரையும் அலாதி பக்தி விச்வாஸம் சொள்ளுமாறு பெரியவரது குணநலனும் அறிவு நலனும் செய்திருந்தன. ஆயினும் -

பிழை கண்டவிடத்துப் பொறுக்க முடியாத பதற்றம் தந்தையாரின் பிறவிக் குணம். மனத்தில் படுவதை நகாசு செய்யாமல் உடைத்தே சொல்லிவிடுவார். பெரியவரின்

நூலொன்றில் தந்தையார் ஓரிரு பிழைகள் கண்டுவிட்டார். பூஜித குருவிடமும் தமது இயல்பைக் கட்டுப்படுத்தாமல் பட்டென்று குற்றமெடுத்து விட்டார். அதையாவது அந்தரங்கமாகச் செய்தாரா? இல்லை. பெரியவர் எங்கள் இல்லத்திற்கு வருகை புரிந்து எங்களோடு ஸல்லாபித்துக் கொண்டிருக்கும் போதே தந்தையார் தமது குற்றப் பத்திரிகையைத் தாக்கல் செய்தார்.

'குத்திக் காட்டுவது' என்பதை ஸ்தூலமாகவே ஆக்குவதுபோல, பெரியவரின் கையிலுள்ள அந்தப் புத்தகப் பிரதியிலேயே பிழையான இடங்களை விரலால் குத்திக் குத்திக் காட்டுகிறார்.

"எந்த ஆதாரத்தின் மேல் இப்படிப் போட்டிருக்கிறீர்கள்?" என்று வேறு 'எக்ஸ்பிளனேஷன் கால் ஃபார்' செய்கிறார்!

என்ன அநுசிதம் என்று நாங்கள் பட்ட அவஸ்தை உண்டே!

ஆனால் அந்தப் பெரியவர்? ஸர்வஸஹஜமாக "அப்படியா ராமசந்திரா? இதெல்லாம் தப்பாக இருக்கிறதா? எதிலேயோ இந்த மாதிரிப் பார்த்துத்தான் போட்டிருக்கிறேன். அதுவே சரியில்லை போலிருக்கிறது. பண்ண வேண்டிய கரெக்ஷனையெல்லாம் நீ பண்ணிக்கொடு. அடுத்த எடிஷனில் சரிப் பண்ணிவிடலாம். இனிமேலே என் மானுஸ்கிரிப்ட் ப்ரெஸ்ஸுக்குப் போவதற்கு முந்தியே பார்த்துவிடு. 'வரிவஸ்யா ரஹஸ்யம்' பண்ணிக்கொண்டிருக்கிறேன். எப்போது வந்து பார்த்துக் கொடுக்கிறே?"

தந்தையாரின் ஒளிவுமறைவற்ற மனப்பாங்கைப் புரிந்துகொண்டு அதை மெச்சியும், அவர் சொல்வது சரியாகத்தான் இருக்குமென்பதில் நன்னம்பிக்கை காட்டியும் பேசிப் போகிறார். தந்தை அவரிடம் பேசியபோது குருவிடம் ஒரு சிஷ்யர் இப்படியும் பேசலாமா என ஒரு விதத்தில் வியந்த நாம் இப்போது சிஷ்யரிடம் ஒரு குரு இப்படியும் பேசமுடியுமா என இன்னொரு விதத்தில் வியக்கிறோம்!

எங்களைப் பார்த்துப் பெரியவர் சொல்கிறார், எங்கள் அவஸ்தையைத் தணிக்கும் பெருமனத்தோடு : "சில சமயத்திலே நான் ஒரளவுக்கு விஷயங்கள் பார்த்துத் தள்ளிக் கொண்டு போய்விடுகிறேன். இவன் அப்படியில்லை. எது ஒன்றானாலும் அடியோடு நுனி பார்த்துப் பெர்ஃபெக்டாகப் பண்ணுவான்".

உசிதக்குறைவு எனத்தக்க விதத்தில் நடந்துகொண்டவரின் உட்சிறப்பை மதித்து நற்சான்றிதழ் அல்லவா கொடுக்கிறார்?

இவ்வினத்தில் அடியேனுக்குமே பெரியவரிடம் சொந்த அநுபவமுண்டு. பூஜா விதானம், ஜப விதானம், ஹோம விதானம் என்றெல்லாம் அவர் நூல்கள் எழுதியபின் அவற்றின் தொடர்ச்சியாக அவற்றில் குறிப்பிடப்படும் முத்திரைகளை விளக்கி ஒரு முத்ரா விதான நூலும் எழுத வேண்டுமென நான் அவரைக் கேட்டுக் கொண்டு கடிதமெழுதினேன். (ஒரே ஊரில் இருந்து கொண்டு எனக்குப் பரமகுருவான அவரை நேரில் சென்று பார்க்காமல் கடிதத் தொடர்பு கொண்டதைப் பந்தா பார்ப்பவர்கள் ஒப்பத்தான் மாட்டார்கள். ஆனால் அவரோ இதைப் பொருட்படுத்தியதில்லை. ஈஸ்ஸ்' என்று உடன் பதில் வந்து விடும், தெளிவான எழுத்தில், தெளிந்த நடையில்.)

அதேபோல் என் முத்ராவிதானக் கோரிக்கைக்குப் பதில் வந்தது. ஆனால் ஏமாற்றமளிக்கும் பதில். தொண்ணூறைத் தொட்டுக் கொண்டிருக்கும் தாம் "ஸர்வாரம்ப பரித்யாகீ" என்ற கீதை வாக்கை மேற்கொண்டு எந்த புதுப் பணியையும் தவிர்த்துவிட உத்தேசித்திருப்பதாகத் தெரிவித்திருந்தார்.

நான் விடவில்லை. ஏனெனில் சிக்கல் மிகுந்த முத்திரைகளைத் தெளிவுற விளக்கக் கூடியவர் அவரே என்றும், அதற்கு அத்தியாவசியமான சித்திரங்களையும் சேர்த்து நன்கு பிரசாரமாகக் கூடிய பிரசுரமாக வெளியிடும் வசதி அவருக்கே உண்டு என்றும் நான் கருதினேன்.

எனவே அவர் பிரமாண வாசகமாகக் காட்டிய 'ஸர்வாரம்ப பரித்யாகீ'யை வைத்தே அவரை 'மடக்கி'விட எண்ணி மீண்டும் எழுதினேன். இங்கே கண்ணன் கூறும் பணியானது ஆசைவாய்ப்பட்டுச் செய்யும் காம்ய கர்மந்தான் என்று பொருள் கொள்ளப்படுவதை அவருக்கு நினைவுறுத்தி, ஜீவனுள்ளவரை விடாமல் நிஷ்காம்ய கர்மம் செய்த பெரியோர்கள் இல்லையா என வினவினேன். 'ஆரம்ப' என்பதற்குப் 'பணி' என்பதோடு 'தொடக்கம்' என்றும் பொருள் உண்டல்லவா? அதில் சிலேடை வைத்து, 'இது நீங்கள் புதிதாக ஆரம்பிக்கும் பணி அல்ல; முந்தைய நூல்களில் ஆரம்பித்து வைத்த முத்திரை சமாசாரங்களை முறைப்படித் தொடர்ந்து விளக்குவதுதான். சிக்கலான ஒன்றைத் தொடங்கிவிட்டுத் தெளிவு செய்யாமல் பின்வாங்கலாகுமா?' என்றும் கேட்டேன்.

பரமகுருவுக்கு ஒரு ப்ரசிஷ்யன் இம்மாதிரி எழுதுவதை அதிகப் பிரஸங்கித்தனம் என்று கொள்ளத் தாராளமாக இடமுண்டு.

ஆயின் இந்தப் பரம குரு பரம உத்தம மனிதரல்லவா? என்னை உலுக்கி, உருக்கும் வினயத்துடன் பதிலெழுதினார். "Your letter is an eye-opener to me" எனத் தொடங்கி, உரிய தருணத்தில் அவருக்கு நான் ஓர் உண்மையை எடுத்துக்காட்டியதாக மனசு விட்டுப் பாராட்டி எழுதியிருந்தார். 'முத்ரா விதானம்' எழுதுவதாகவும், அது மாத்திரமின்றி, காரியம் தானாக ஓயும் வரையில் வேறு தலைப்புகள் தோன்றினாலும் அவை குறித்தும் எழுதிக்கொண்டே போவதற்கு இறை கட்டளைதான் என் மூலம் வந்திருப்பதாகவும் கூறியிருந்தார்.

வினயம் ஒரு பக்கம் இருக்கட்டும். தொண்ணூறை எட்டும் தொண்டு கிழப் பருவத்தில் ஓய்வெடுக்கச் செய்த முடிவை அநாயாஸமாக மாற்றிக் கொண்டு ஜீவனுள்ளவரை தொண்டில் ஈடுபட முன்வந்த தியாக சீலத்தைச் சொல்லுங்கள்! இவரும் ஓர் அதிசய பரித்யாகிதான்!

எழுதியபடியே முத்ரா விதானத்தை மேற்கொண்டு முடித்துத் தந்துவிட்டு, அதன் பின்னரும் பல அரிய நூல்களை ஆஸ்திக உலகுக்கு ஆஸ்தியாக ஆக்கிக் கொடுத்தார். தொண்ணூற்றேழாம் வயதில் இற்று விழும் கனியாக அவர் இறைமை எய்துவதற்குச் சில காலம் முன் வரையில்கூட, அதாவது அதுவாகவே ஓயும் வரையில் இந்த நிஷ்காம்ய கர்ம யோகம் தொடர்ந்தது. அதுவரையில் நான் அவரைக் காணச் சென்ற ஒவ்வொரு முறையும் அவருடன் யாரேனும் இருப்பாராயின் அவர்களிடம் அவர் என் அதிகப்பிரஸங்கித்தனத்தை மெச்சியும் ரஸித்தும் கூறி, "இவன் பண்ணிய 'டைம்லி அட்வை'ஸால்தான் நான் இன்னமும் எழுத்து வேலையை நிறுத்தாமல் பிரயோஜனமாகப் பொழுதைப் போக்கிக்கொண்டு, உத்ஸாஹமாகவும் இருப்பது" என்று சொல்லத் தவறியதில்லை.

அந்தக் கோபுரத்துக்கு இந்தப் பருக்கைக் கல் 'அட்வைஸ்' கொடுக்கவாவது! பருக்கைக் கல்லையும் பெருக்கக் கண்ட அந்த மனமாண்பை என் சொல்ல?

❊ ❊ ❊

நூற்றுக்கு மூன்றே ஆண்டு குறைய மஹா விருக்ஷமாக வாழ்ந்து சென்ற ஆண்டு சுதந்திர தினத்தன்று உடலிலிருந்து விடுதலை பெற்ற அந்தப் பெரியவரின் பெரு வாழ்வில் பண்புச்சாறு செறிந்த பல்லாயிர நிகழ்ச்சிக் கனிகள் பழுத்திருக்கும். பதச் சோறாகவே சில கண்டோம்.

யார் அந்தப் பெரியவர்?

அரசியல் உலகில் 'அண்ணா' என்றால் எப்படித் திரு ஸி.என். அண்ணாதுரைதானோ அவ்வாறு ஆன்மிய உலகில் தனிப்பெரும் 'அண்ணா'வாகப் புகழ்கொண்ட ஸ்ரீ என். ஸுப்ரமண்ய ஐயர்தான்.

அவரை அண்ணா-மலை என்றே சொல்லலாம். நூசுக்குச் சமமாகவே வாழ்ந்து முடிந்து போகும் ஏராள மான மாந்தரிடையே அறிவாலும் அநுபவத்தாலும் பண்பாலும் பணி வாலும், தாம் செய்த பணியாலும் மலையாக ஓங்கிய அண்ணா அல்லவா?

* * *

அவர் பிறந்த ஊருக்கும் அண்ணாமலைப் பெயர் இடலாம். தேவார காலத்துக் கொடிமாடச் செங்குன்றூரான இன்றைய திருச் செங்கோடுதான் அது. செங்கோடு என்றால் சிவந்த மலை; அதாவது அருண அசலம்; அதாவது அண்ணா மலை! அர்த்தநாரீச்வர க்ஷேத்திர மான திருச்செங்கோட்டை ஸோமாஸ் கந்த ஸ்தலமாக்கிச் செங்கோடன் என்றே பெயர் கொண்ட பெருமானின் நாமத்தைத்தான் அச் செம்மலை தந்த நம் செம்மலுக்கு இட்டார் தந்தை நரஸையர்.

அந்த நரஸையர் ஓர் ஆரம்பப் பள்ளி ஆசிரியர். அதாவது பொருளா தாரத்தில் மிகவும் பிற்பட்டவர். அதோடு, பத்தினி ரத்தினமான அருந் ததியின் பெயரைக் கொண்ட அவரது மனையாள் அவருக்கு ஒன்பது மக்களையாக்கும் ஈந்திருந்தாள். மூல ஸுப்ரமண்யன் அம்மை-அப்பர் களின் இளைய குமாரனாயிருக்க நமது ஸுப்ரமண்யனோ ஜ்யேஷ்ட புத்திர ராக இருந்தார். பின்னாளிலோ ஆத்திக உலகுக்கே ஜ்யேஷ்டரான 'அண்ணா' ஆனார்.

வறுமை வருத்திய குடும்ப மெனினும் அந்தச் சிறு பிராயத்தி லிருந்தே நம் கட்டுரை நாயகருக்கு ஓர் உள்வலிமை. கஷ்ட ஜீவனத்தால் கலக்கமுறாமல் கல்வியில் கருத் தூன்றி ஈடுபட்டு உபகாரச் சம்பளம் பெற்று மெட்ரிகுலேஷன் தேறினார். திருச்செங்கோட்டுக்கு அருகேயுள்ள பவானியில் பள்ளி இறுதிப் படி வங்கள் படித்தார். தேவாரம் திரு நணா எனக் கூறும் பெரும் தலமே பவானி.

ஒரு விநோதம். 'அண்ணாமலை' என்பதில் 'அண்ணா' என்றால் 'அணுகவொண்ணா' என்று பொருள் கூறுவர். 'நணா' என்றாலும் 'நண்ண வொண்ணாதது' என்பர். நம் அண்ணாவோ அனைவரும் அணுகி நணுகிப் பழகுமாறு வாழ்ந்தவர். 'அண்ணித்தல்' என்றால் 'இனித்தல்' என்று பொருளிருப்பதைக் கொண்டே இந்த அண்ணலை அண்ணனாகக் கூற வேண்டும்!

ஐந்து தம்பிமாரும் மூன்று தங்கைமாரும் வாழ்க்கையின் அவ சியத் தேவைகளுக்கே தவிக்கும் சூழ் நிலையில் அவர் ஒருவாறு பள்ளிப் படிப்பை முடித்ததே பெரிது. அதன்பின் கல்லூரி பற்றி அவர் கனவிலும் நினைக்கவில்லை. ஆயின், கனவிலும் நினையாததைச் சாதித்துத் தரவும் கருணை என்று ஒன்று இல்லையா? எங்கோ வங்கத்தில் வாழ்ந்து மறைந்த - உடலால் மறைந் தாலும் அருளால் மறையாத - பரம ஹம்ஸ ராமகிருஷ்ணரின் பரங்கருணை செங்கோட்டு இளைஞனை ரகசியமாக எட்டியது! எவரோ நன்மைவிரும்பி, "சென்னையில் ஏழைச் சிறுவர்களுக்கு உணவு, உடை, உறையுள் யாவும் இலவசமாக அளித்து ஸ்ரீராமகிருஷ்ண மிஷனில் மாணவரில்லம் தொடங்கி யுள்ளனர்" என்று நரஸையரின் காதில் போட்டு வைத்தார். அதன் நல் விளைவு, 1914இல் பத்தொன்பது வயது இளைஞர் ஸுப்ரமண்யன் மயிலை மாணவரில்லத்துக்கு வந்து சேர்ந்தார். நற்றாமரைக் கயத்தில் நல்லன்னம் சேர்ந்தது!

மாணவரில்லத்தில் மாணிக்க மாகத் திகழ்ந்து கொண்டு வெஸ்லி கல்லூரியிலும் மாநிலக்கல்லூரியிலும் படித்துப் பட்டதாரியானார். பிறகு வெஸ்லி கல்லூரியில் டெமான்ஸ்ட் ரேடராக உத்தியோக வாழ்வு தொடங்கினார். ஆனால் ராமகிருஷ்ண குருமஹராஜ் இவரது வாழ்வுப் பணி முழுதும் தமது திருநாமத்தில் அமைந்த நிறுவனங்கள் மூலமே நடக்க வேண்டுமெனத் திருவுளம் பற்றியிருந்தாரே! அதனால் மூன் றாண்டுகளுக்குப் பிறகு ஸ்ரீராம கிருஷ்ண மாணவரில்லப் பள்ளி யிலேயே ஆசிரியப் பணி ஏற்றார். படிப்படியாக அதன் தலைமை யாசிரியர் பதவி வரை உயர்ந்தார். அதன்பின் மாநிலத்தின் மாபெரும் கல்விக் கூடங்களிலேயே ஒன்றான தி.நகர் ராமகிருஷ்ண உயர்நிலைப் பள்ளியின் தலைமையாசிரியராகவும் சீரிய பணியாற்றினார்.

உலகியற் கல்வி போதனை மட்டு மின்றி மாணவரில்லத்துச் சிறுவர் களுக்குச் சமய வகுப்புகள் நடத் தினார். ஸ்ரீராமகிருஷ்ண மடத்துப் பிரம்மசாரிகளுக்கு வேத வேதாந்த வகுப்புகள் நடத்தி உண்மை வேதி யருக்கான அத்யாபனப் பணியை நிறைவேற்றினார்.

உலகுக்கே போதனையாக அவர் வழங்கியுள்ள எழுபது தமிழாக்க நூல் களில் ஓரிரண்டு தவிர மற்றவற்றைப் பதிப்பித்ததும் அந்த ராமகிருஷ்ண ரின் நாமம் தாங்கிய திருமடத்தார் தாம். இந் நூல்கள்தாம் 'அண்ணா' என்ற அருமை நாமத்தை அமரமாக்கி யிருப்பவை. 1945-ல் பகவத்கீதையின் தமிழுரையில் தொடங்கியவர் அதன் பின் நாற்பத்தைந்தாண்டுகள் இடை விடாது இத் திருத்தொண்டிலேயே திளைத்திருந்தார். உபநிடதங்கள், ஆதிசங்கரர் முதலியோரது வேதாந்த நூல்கள், சாக்தப் பெரும் சாத்தி ரங்கள், ஏனைய கடவுளரைக் குறித்த தோத்திரங்கள் - பூஜா விதிகள், ராமா யணம், பாகவதம், ஸந்தியாவந்தனம் முதலிய வைதிக வழிபாடுகள் - சடங்குகள் - ஹோமங்களின் வழிமுறை கள் என்றிப்படி வடமொழியிலுள்ள பரம உத்தமமான ஆன்மியப் பொக் கிஷங்களைத் தமிழ் கூறும் நல்லுல குக்குச் சொத்தாக்கியிருக்கிறார். மூலத்தை வழுவற அடியொற்றி யிருப்பினும் தமிழ் வடிவம் சிக்க லின்றிச் சரளமாக ஓடுவது இவற்றின் சிறப்பு. மூலத்தைச் சுருக்கித் தரும் சில நூல்களில் தொடர்ச்சி முறி படாமல் காத்துக் கொடுத்திருப்பது அருமை.

ஆங்காங்கு வட மொழி, தென் மொழிகளில் அவர் கொடுத்துள்ள வெகு பொருத்தமான மேற்கோள்கள் மூல நூற் கருத்துக்கு மேலும் சுவை கூட்டி நம் மனத்தில் ஆழப் பதிவிக்கும்.

பள்ளியாசிரியர் நூலாசிரியராயிருந் ததுடன் இந்நூல்களும், அவர் ஆற்றிய சமயச் சொற்பொழிவுகளும் அவருக்கு ஆத்திக, ஆத்மிக உலகில் ஆசாரிய ஸ்தானம் போட்டுக் கொடுத்தன. ஏராளமானவருக்கு மந்திர தீக்ஷை வழங்கியும் அவர் ஆசாரியராகப் பெருமை கொண்டவர். மிகப் பொருத்தமாகவே அவருக்குச் சக்கர வர்த்தி ராஜகோபாலாச்சாரியார் 'ஆசார்ய' விருது சூட்டியிருக்கிறார்.

* * *

இவை யாவும் வெளிமட்டத்தில். உள்ளேயோ? செங்கோட்டு இளை ஞனை ரகசியமே தீண்டித் தமது நாமத்தில் அமைந்த இல்லத்திற்கு இழுத்துக்கொண்ட குருமஹராஜ் நாளாவட்டத்தில் ரகசியத்தை வெளிப்படையாக்கி ஒரு ஜீவனுள்ள சக்தியாகவே அவரை ஆட்கொண்டு ஆளாக்கினார். அப்புறம் அந்த குரு மஹராஜையும் ஆட்கொண்ட அம்பிகை யின் ரூபத்திலும் திருவருளின் பொழிவைப் பெற்று அவரது ஆன்மா மேலும் பரிபக்குவமுற்று அநுபூதி கண்டது. இமயத் தொடருக்கிணை யான மலைகள் பஸிபிக் கடலுக்குள் மறைந்திருப்பதாகச் சொல் கிறார்களே, அவ்வாறு அண்ணாவின் மஹாநுபவங்களும் அந்த அடக்கப் பாங்கினரால் எளிமைக் கடலுக்குள்

மறைத்தே காக்கப்பட்டன. எனினும் அவரிடமிருந்து பரவிய திவ்வியப் பிரேமையின் மென்மணம் அவரது அகமலரின் அதிசயப் பரிணாமத்திற்குச் சங்கேதம் காட்டவே செய்தது.

உள்ளாழங்களைக் காட்டாமல், ஆயினும் உள்ளம் உருகி அவர் கூறுவார் : "நான் தம்படிக் காசில்லாமல் இந்தச் சென்னைக்கு வந்து குரு மஹராஜின் பெயரிலான இல்லத்தில் சேர்ந்தேன். அன்றிலிருந்து இன்று வரை அவர் என்னை விடவில்லை. செல்லக் குழந்தைக்குத் தாய் போல அன்பு காட்டி ஜீவ யாத்திரையைத் தொடர்ந்து நல்லபடி நடத்தி வருகிறார்."

"அம்பிகை பேர் பேராக அனுப்பி வைத்து வேண்டியதையெல்லாம் கொடுத்து நிரப்புகிறாள். இந்தப் பூஜா பாத்திரங்கள் யார் யாரோ கொண்டு வந்து கொடுத்ததுதான். இந்தக் கற்பூரப் பாக்கெட், ஊது பத்திக் கட்டு எதுவும் நான் காசு போட்டு வாங்கவில்லை. புஷ்பம் ஒருத்தன் உபயம். பழம் நீ கொண்டு வந்து விட்டாய். கால் காசு சொந்தச் செலவில்லாமல் இப்படி நடத்திக் கொடுக்கிறாள்". குழந்தையாய் மனம் திறந்து சொல்கிறார்.

தம்படி, காசு என்று பொருளுலகில் சொல்வதோடு அவர் நிறுத்திக் கொண்டாலும் அந்த குரு மஹராஜும் அம்பிகையும் ஆத்ம ஸம்பத்துக்களையும் அவருக்கு அள்ளிக் கொடுக்கவே செய்தனர்.

முப்பெரு நிகழ்ச்சிகள் அண்ணாவின் ஆன்மிய ஸித்திகளுக்கு உரமூட்டின. ராமகிருஷ்ணருக்கு அவரது சொந்தப் புத்திரராகவே அம்பிகை காட்டுவித்த ஸ்வாமி பிரம்மானந்தர் 1921-ல் சென்னைக்கு வருகை தந்தார். அப்போது அவருக்கு அருகிருந்து அருளுரைகள் கேட்டு, பணிவிடை செய்து பரமாநுக்கிரஹம் பெற்ற பாக்கியசாலிகளில், அண்ணாவும் ஒருவர். 1924-ல் குருமஹராஜின் நேர்ச்சீடாக்ளில் இன்னொருவரும் 'மஹா புருஷ்ஜி' என்றே போற்றப் பட்டவருமான ஸ்வாமி சிவாநந்தரிடம் மந்திர தீக்ஷை பெற்ற மஹாபாக்கிய சாலியாகவும் அவர் ஆனார். பின்னாளில் காஞ்சீபுரம் உபநிஷத் பிரம்மேந்திர மடத்தைச் சேர்ந்த யதீச்வரரும், பரம சாக்தராக யோகாநந்தர் என தீக்ஷா நாமம் பூண்டவருமான பெரியவரிடம் அவர் பெற்ற ஸ்ரீவித்யா தீக்ஷை அவரை அம்பிகையிடம் ஆழங்காற்படுத்தியது.

❊ ❊ ❊

சாமானியரான நமக்கு அவர் ஒளித்துவைத்த உள்வாழ்வைவிட வெளிக்காட்டிய உலக வாழ்வே பயன் தரும் பாடமாகும். அவர் ஆதரிசம் படைக்காத மானுட மாண்பு எதுவுமே இருக்காதாயினும் அவற்றில் சில மட்டும் பார்ப்போம்.

முதலாவவதாக ஸௌலப்யம். அனைவரும் இயல்பாக அணுகி வரச் செய்த அன்புப் பாங்கு. அவர் 'அண்ணா' ஆனதே அதனால்தான். ஆதியில் இல்ல மாணவராகப் புகுந்தவர் அப்புறம் அந்த இல்லப் பள்ளியிலேயே ஆசிரியராக வந்தாரா? அப்போது சக ஊழியரும் மாணவரும் அவரை 'ஸார்' எனறு அழைத்தனர். அதைக் கேட்டு அந்த ஸுலபர் தம்மை துர்லபராக எட்டத்தில் வைக்கிறார்களே என்று எண்ணினார்! "நான் அயல் மனிதனா என்ன? ஏன் 'ஸார்' போடுகிறீர்கள்? இது மாணவர் இல்லம் இல்லையா? ஒரே வீட்டைச் சேர்ந்தவர்கள் தங்களுக்குள் 'ஸார்' போட்டுக் கொள்வதுண்டா? உங்களுக்கெல்லாம் முன்னாலிருந்தே நான் இந்த வீட்டுப் பிள்ளையாக இருந்திருப்பதால் என்னை அண்ணாவாக நினைத்து அப்படியே கூப்பிடுங்கள்" என்றார். இப்படி ஏற்பட்டதுதான் அவருடைய அண்ணா நாமம். பின்னாளில் அவரது இல்லம் விச்வ குடும்பமாகவே விரிய, அவர் அனைவருக்கும் அண்ணாவானார். அன்புறவால் அண்ணா ஆனவர் அறிவுச் சிறப்பாலும் அந்தப் பெயருக்கு

ஏற்றவராயிருந்தார். வள்ளுவம் வகுத்தபடி "அறன் அறிந்து மூத்த அறிவுடையார்" அல்லவா அவர்?

இரண்டாவதாக, செய்ந்நன்றி மறவாமை. இளமையில் தமது வளமைக்கு வழி வகுத்தது ஸ்ரீராம கிருஷ்ண மாணவரில்லம் என்பதால் குறிப்பாக அதனிடமும், பொதுவாக மிஷன், மடம் ஆகியவற்றிடமும் அவர் கொண்டிருந்த நன்றி எல்லையில்லாதது. அவரது ஆற்றலுக்குப் பெரிய பெரிய உத்தியோகங்கள் கிடைத்திருக்குமாயினும் நடுத்தர ஊதியமே அளித்த ராமகிருஷ்ணக் கல்வி நிலைய ஊழியம் தவிர இன்னொன்றை அவர் சொப்பனத்திலும் எண்ணியதில்லை. அவர் எழுதிய அத்தனை நூல்களும் பல பதிப்புகள் கண்டு ஆயிரமாயிரமாகப் பிரதிகள் விற்பனையானபோதிலும் மடத்திலிருந்து ஒரு காசுகூட சம்மானம் வாங்காத அவரது தியாகசீலம் நம்மை அயரவைப்பது! இதற்கீடாக இன்னொன்று: மத்திய கிழக்கு நாடுகளுக்குக் குடிபெயர்ந்து நல்ல பொருள் வசதியடைந்த அவரது முன்னாள் மாணவர்கள் அவரை அங்கு வரவழைத்துப் பல இடங்களில் பூஜைகளும், சொற்பொழிவுகளும் நடத்தினார்கள். கணிசமான ஸம்பாவனையும் அவருக்கு வழங்கினார்கள். அதை அப்படியே மாணவரில்லத்துக்கு நன்கொடையாக்கிவிட்டார் நம் பொன்மனப் பெரியவர். இத்தனைக்கும் அவர் மூன்று பெண் மக்களை (மட்டும்) பெற்ற மத்யதர வருவாய்க்காரர்தான். தமது தியாகத்தை வெளியிட்டுக் கொள்ளாமல், மடத்தினர் தமக்கு இலவசமாக ஜாகை தந்திருப்பதை மட்டும் ஆழ்ந்த நன்றியுடன் குருமஹராஜ் - அம்பிகையின் பராமரிப்பில் பிறிதொரு பிரஸாதமாகச் சொல்லிக் கொள்வார்.

தாம் மாணவரில்லத்தின் தலைவர் பதவி வரை உயரும்படிப் பொதுத் தொண்டில் தம்மைப் பழக்கிய இல்லத்தின் முன்னாள் பெரியோர்களான ராமு-ராமாநுஜ ஸஹோதரர்களைப் பற்றியும், உபாத்திமைத் தொழிலில் தமக்கு உதாரண புருஷரான வாஸுதேவாசாரியார் பற்றியும் சமயம் நேர்ந்தபோதெல்லாம் உட்பொங்கும் நன்றியுடன் பேசுவார்.

மனைவியிடமும் நன்றி காட்டிய ஆதரிசக் கணவர் அவர்! "கல்யாணம் என்னவோ நடந்துவிட்டது. அப்புறம் பல வருஷம் அவளை அகத்துக்கு அழைக்காமலே இருந்தேன். அதற்காக அவள் ஒரு குறை சொன்னதில்லை. இரண்டாம் உலக யுத்த காலத்தில் 'எவாகுவேஷன்' போது ஸ்கூல் இங்கேயிருந்து உத்தர



மேருருக்கு இடம் மாற்றப்பட்டபோது அங்கே நான் பட்ட சிரமத்தைப் பற்றித்தான் எல்லாரும் சொல்கிறார்கள். ஆனால் நான் ஸ்கூல் நடத்துவதற்காகப் பட்டதைவிட அங்கே குடும்பம் நடத்துவதற்காக அவள்தான் அதிகம் சிரமப்பட்டது. ஆனாலும் சிரமத்தை சிரமமாகவே நினைக்காமல் ஸந்தோஷமாகவே செய்து கொண்டுபோனாள். பெரிசாகப் பூஜை செய்கிறோம் என்று நாங்கள் பெயர் வாங்கிவிடுகிறோம். ஆனால் இதற்காக அகத்துப் பெண்டுகள் எவ்வளவு சிரமப்பட வேண்டியிருக்கிறதென்பது எவருக்கும் தெரிவதில்லை" என்பார்.

அவர் இல்லறத்தில் இருந்து கொண்டு கடமைகளை இன்பமாக ஆற்றிக்கொண்டு, அன்பு நிறைந்த குடும்பத் தலைவராக இருந்த போதிலும் அதில் பாசப் பற்றென்னும் பாசியைப் படர விடாமல் நிமலமாக இருந்ததையும் அவர் படைத்த உதாரணங்களில் மூன்றாவதாகக் காட்டலாம்.

மேலே கண்ட அவரது உபாத்திமை வாழ்க்கையில் அவருடைய ஸ்வதர்மப் பற்றும், திரவியத் தியாகத்தில் அவருடைய பொருள் பற்றின்மையும் நாலாவது, ஐந்தாவது முன்னுதாரணங்களாக வருகின்றன.

தற்பெருமை சற்றுமின்றி அடங்கியிருந்து அவர் தளும்பாத நிறை குடமாக ஆதரிசம் படைத்ததையும் கண்டுவிட்டோம்.

ஏழாவது உதாரணமாக அவரது கர்ம யோகத்தைக் கூறவேண்டும். தொண்ணூற்றேழாம் பருவத்தில் அவர் உடலம் சாயும் வரையில் அவர் காட்டிய உழைப்பு நெறி அற்புதமானது. அந்த நெறி அவரை நெரிக்கவில்லை; நெகிழ்த்தி உற்சாகமே ஊட்டி வந்தது. காரணம் தமது பணியில் அவர் காட்டிய அந்தரங்க ஈடுபாடே. "தவம் செய்வார் தம் கருமம் செய்வார்" என்ற பொய்யா மொழியை நீண்ட நெடிய காலம் மெய்யாக்கிய தவசி அவர்.

முடிவாக, முத்தாய்ப்பாகச் சொல்லவேண்டியது அவர் எதிலும் மிகைக்குப் போகாமல் மத்திம மார்க்கத்திலேயே இருந்து, கீதை கூறும் யுக்தனுக்கு உதாரண புருஷராக விளங்கியதுதான். எதிலும் விறைப்பும் இல்லை, தொய்வும் இல்லை என்று, உரிய பிகு-சுகுவுடன் வாழ்ந்தார். ஆதி நாளிலிருந்து கதரே உடுத்தி வந்த அவரது ஸ்வதேசிப் பற்று குறித்தும், தமிழிலேயே கையெழுத்துப் போடுவதென்ற அவரது தாய் மொழிப் பற்று குறித்தும் அன்பரொருவர் வெகுவாக ச்லாகித்துக் கூறினார். ஆனால் அவரோ உடனே, "ஆனாலும் அந்தக் காலத்தில் இவற்றையே நான் ஒரு 'இஷ்யூ'வாக்கி வாக்குவாதம் பண்ணியது சரியில்லைதான். எதிலுமே முரட்டுத் தீவிரம் நல்லதில்லை" என்றார்! சீர்திருத்தத் தலைவர்களுடனேயே சேர்த்துப் பேசப்படும் ஸ்வாமி விவேகாநந்தரின் பரம சிஷ்யர்களும், சாஸ்திரீய ஆசாரங்களையே கண்டிப்பாகப் பின்பற்றும் மடிக்காரர்களும் ஒரேபோல அவரை அண்ணாவாகக் கொண்டாடி மதிப்பும் மரியாதையும் செலுத்தியதில் அவரது மத்திம மார்க்கச் செவ்வி பளிச்செனப் பிரகாசிக்கிறது. அதற்கு ஸ்ரீ காஞ்சி மஹா பெரியவர்களுமே பொதுச்சபை உபந்நியாசத்தில் நற்சான்று கொடுத்திருக்கிறார்.

மஹாபெரியவர்களின் சதாப்தி ஆண்டாகிய தற்போது அவர்களோடு நமது கட்டுரை பெரியாரைத் தொடர்புறுத்தி முடிப்பதே பொருத்தம். பெரியவர்களை ஊருலகமெல்லாம் போற்றும் சொற்றொடர் 'நடமாடும் தெய்வம்' என்பதுதானே? அச் சொற்றொடரை அவருக்கு முதன் முதலாகச் சூட்டியவர் - அண்ணாதான். 1957 செப்டெம்பரில் பெரியவர்கள் சென்னைக்கு விஜயம் செய்தபோது அவரை வரவேற்று ஒரு கட்டுரையும், அவரது வாழ்க்கை வரலாறான 'ஸ்ரீஜகத்குரு திவ்விய சரித்திர'த்திற்கு ஒரு விமரிசனமும் கல்கி இதழில் அண்ணா எழுதியிருந்தார். அவற்றில் பிந்தையதற்கு அவர் இட்டிருந்த மகுடம் "நடமாடும் தெய்வத்தின் அடிச்சுவட்டில்" என்பதாகும். அன்றிலிருந்தே ஸ்ரீ மஹா பெரியவர்கள் அனைவருக்கும் நடமாடும் தெய்வமானார்கள்.

ஃ

# கீதகோவிந்தம் - ஜெயதேவர்

தமிழாக்கம் : இலந்தை சு. இராமசாமி

பெண்களில் அநேகர் காதல்
பித்தமே ஏறி, மாயக்
கண்ணனை இழுத்த ணைக்கக்
களிப்பிலே உணர்ச்சி பொங்கி
எண்ணமே கிளுகிளுக்கும்
இதனைநீ பாராய் என்று
நண்ணியே பாங்கி, வாடும்
ராதையின் பால் சொல்கின்றாள்.

காண்டம் - 1 . பாடல் - 4

வண்ண ஓவியங்கள்: ம.செ.

பொன்னுடை அணிந்தவன் நீநிற மேனியில் சந்தனம் சிதைவனமாலி
மன்னவன் ஆடலில் மணிபொதி குண்டலம் கன்னத்தில் ஒளிர்நகைசாலி
ஹரி இதோ பெண்விளையாட்டினிலே - கண்மணி
காணடி காட்டினிலே. 1

அங்கொரு பேதையள் தன்நகில் சுமையால் ஹரியினை வீழ்த்தி அணைக்கிறாள்
அங்கவன் வேய்ங்குழல் நாதமுடன் அவள் தன்குரல் நாதம் இணைக்கிறாள். 2

மதுசூதனின் முகப் பங்கயம் ஆடும் விழிகளை விழிகளால் உண்டு
அதனைத் தன்னுள் தியானம் செய்கிறாள் ஓர்பெண் நெஞ்சுள் கொண்டு 3

அவன்செவிக் கெதையோ சொலவிழைவாள் போல் சென்றவோர் மெல்லிடை மாது
அவன் கன்னத்தில் முத்தம் அழுத்த அவன் சிலிர்த்தான் அப்போது 4

அமைதியாய்க் கொடியகம் ஒய்வுற் றிருந்த அவனுடன் எண்ணி
யமுனைக்கு வாவென அவன் உத்தரீயம் இழுத்தாள் ஓர்பெண் நண்ணி. 5

அழகிய நடமிடும் ஒருபெண் கண்ணனின் வேய்ங்குழல் நாதம் கேட்டு
இழைந்திடும் வளையல் குலுங்கிடக் கைகள் கொட்டுவாள் தாளம் போட்டு 6

ஒருத்தியை அணைப்பான், ஒருத்தியைத் தடவிவேறு ஒருத்திவாய் முத்தம் கொடுப்பான்
ஒருத்தியை ஆசையாய்ப் பார்ப்பான் மயக்கிடும் ஒருத்தியைக் கூடி நடப்பான் 7

கேசவன் ஆடல் ரகசியம் பிருந்தாவன லீலைகளைப் பற்றி
ஸ்ரீஜெயதேவர் இசைத்திடும் கீதம் அளித்திடும் நலம், புகழ், வெற்றி. 8

## ஆஞ்சநேயன்

கவிஞர் ஆற்றலரசு




புலன்களை அடக்கி உயர்ந்தவன் - என்றும்
புவிதனில் அனுமன் சிறந்தவன்!
நலம்தரும் ஆற்றலில் நிலைத்தவன் - அன்பு
நன்மைக்குப் பாலமே அமைத்தவன்!

சஞ்சீவி மலைதனை பெயர்த்தவன் - ராம
சகோதர உயிரைக் காத்தவன்!
அனுமனே இலங்கை சென்றவன் - இராவண
ஆணவம் அடக்கியே நின்றவன்!

வான்வெளியில் அவன் மாருதி - நிதம்
வணங்கிடும் பேருக்கு சாரதி!
தேன்மொழி சீதையின் தூதுவன் - ராமன்
திருவடி தாங்கிய சேவகன்!

இராம காதையின் நாயகன் - அன்பு
இராமனை துதிக்கும் சேவிகன்!
கலியுகம் காத்திடும் அனுமனவன் - பக்தி
சரம்குவிப் போருக்கு துணைவனாம்!

# மாகவி பாரதியும் பாவேந்தர் பாரதிதாசனும் - ஓர் ஒப்பாய்வு



டாக்டர் கி. வேங்கடசுப்பிரமணியன்

"பாரதத்தின் பழம்பெரும் பண்பாட்டையும் அதன் பாரம்பரியத்தையும் பற்றி உலகம் வியக்கிறது என்றால், அதற்குத் தமிழகத்தின் பாரம்பரியமும் பழம்பெரும் இலக்கியமும் ஒரு முக்கிய காரணம்" என்பார் இங்கிலாந்து நாட்டுத் தமிழறிஞர் பாரோ.

நமது நாட்டின் நவீன படைப்பாளிகளை உலக இலக்கியம் இன்று உன்னிப்பாய்க் கவனிக்கிறது என்றால், அதற்கு ரவீந்திரநாத் தாகூர், அமரகவி பாரதி, புரட்சிக்கவிஞர் பாரதிதாசன், கல்கி, தேவுர பள்ளி கிருஷ்ண சாஸ்திரி, ஆர்.கே. நாராயணன், பிரேம்சந்த், புதுமைப்பித்தன், இந்திரா பார்த்த சாரதி போன்றோரும் காரணங்களாகின்றனர். பாரதத்திலேயே தமிழகம் பின்னைப் பழைமைக்கும் பழைமையாய், முன்னைப் புதுமைக்கும் புதுமையாய் திகழ்கிறது. நம் சங்ககால இலக்கியமும் இன்றைய நவீன இலக்கியமும் இந்த இரண்டு அம்சங்களுக்கும் பொதுவாக ஓர் எடுத்துக்காட்டாக உள்ளது.

தமிழ் மாநிலத்தைச் சேர்ந்தவன் என்ற முறையிலும், தமிழ் படித்தவன் என்ற முறையிலும், சுதந்திர பாரதத்திற்கான அரசியல் தாக்கத்தாலும், அதன் பிறகு எழுந்த சமூக இயக்கத் தாக்கத்தாலும் உருவானவன் என்ற முறையில் நான் தமிழகத்தின் இலக்கியத்தை ஓரளவு அறிவேன். அந்தக் காலத்தி லேயே நான் தமிழைப் பயிற்சி மொழியாகக் கொண்டு படித்தேன்.

என் தாயும், தந்தையும் சுதந்திரப் போராட்டத்தில் குதித்தனர். சிறைக்கு மனைவியுடன் போகும்போது பாரதி பாடலையும், உபநிஷத்தையும் மட்டுமே எடுத்துப் போனார், என் தந்தையாரின் அக்காள் கணவர் டாக்டர் சாமிநாத சாஸ்திரி. போலீஸ் இவை தேச

விரோதப் புத்தகங்களா என ஆராய்ச்சி செய்தபோது, "இவை என்ன புத்தகங்கள் என்று நீங்கள் கண்டு பிடிப்பதற்குள் எங்கட்குச் சுதந்திரம் வந்து விடும்" என்று கொக்கரித்த கோமான் அவர். நிற்க, சுந்தரத் தெலுங்கு பாடிய அன்னமாச்சாரியா, தியாகையர், ராம்தாஸ், கன்னடத்தில் புரந்தரதாசர் ஆகியோரும் உலக பக்தி இலக்கியத்திலும், இயக்கத்திலும் தனி இடத்தைப் பிடித்திருப்பவர்கள்.

தமிழ் இலக்கியத்தில் எந்த இலக்கியத்தையும் போலச் சமூகத்தின் தேவைகளுக்கு ஏற்ப சிந்தனை யாளர்களும் படைப்பாளிகளும் உருவாகி உள் ளார்கள். தமிழ் இலக்கியப் படைப்புகள் கண்டு நான் மலைத்து நிற்கிறேன். ஆனால் நான் குறிப்பிட்ட கவிஞர்களைவிட, எனக்குப் பிடித்தது கணியன் பூங்குன்றனாரின் பாடல். இவர் நான் இப்போது சொன்னவர்களைப் போல் அதிகமாகப் பேசப்பட வில்லையானாலும், பேசப்பட வேண்டியவர் என்பது என் கருத்து.

"யாதும் ஊரே
யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா
பெரியோரை வியத்தலும் இலமே
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே..." என்றார்.

உலகம் ஒன்று என்று எத்தனையோ கவிஞர்கள் சொல்லி இருக்கிறார்கள். ஆனால் பெரியவர்கள் என்பதற்காக, அவர்களை வியந்து பார்ப்பதும், தாழ்வுற்ற மக்களை ஏளனமாய் பார்ப்பதும் இருக்கவே கூடாது என்ற இந்தப் புலவரின் சிந்தனை இப்போதும் ஒரு புதிய சிந்தனையாகவே உள்ளது.

மன்னர்கள் ஆண்ட அந்தக் காலத்திலேயே, ஒரு புலவன், பெரியவரைப் பார்த்து வியக்கமாட்டோம் என்று ஒருநவீன சிந்தனையைக்கொடுத்திருக்கிறான். இந்தக் கோட்பாடு இன்றைய ஜனநாயகத்தின் அடிப்படை. ஆனால், இன்று "லாரிகளில்" அப்பாவித் தொண்டர்களைக் கூட்டங்களுக்காகவும், மறியல்களுக் காகவும் வாடகை வண்டிகளில் அழைத்துச் செல் வதைப் பார்க்கும்போதும், கிராமங்களில் சொந்த தந்தை உயிருக்குப் போராடிக் கொண்டிருக்கையில் அவருக்கு உண்ண உணவுகூடக் கொடுக்காமல், தலை நகரில் தும்மலுக்குக்கூட அரசு செலவில் மருத்துவ மனைகளில் சேர்க்கப்படும் அரசியல் தலைவர் களைப் பற்றியே நினைத்து உருகி தீக்குளிக்கும் அப்பாவிகளைப் பார்க்கும்போதும் எனக்கு இந்தக் கவிஞனின் இந்த அற்புத வரிதான் நினைவுக்கு வருகிறது.

ஆகையால், தனி நபர் வழிபாட்டு முறையில் அமைந்த அரசியலை மாற்றி, பிரச்னை அடிப்படை யில் - நெறிகள் அடிப்படையில் அதனைக் கொண்டு வரவேண்டும் என்று தேசிய முன்னணி அரசுக்கு கவிஞர் பூங்குன்றனின் காவிய வரி ஓர் ஊன்று கோலாக உள்ளது. இந்தத் தத்துவத்தை மேலும் செம்மையாகச் செயல்படுத்த இந்த மாபெரும் தமிழ்க் கவிஞனின் சிந்தனையை நாடெங்கும் சொல்லவேண்டும் என்பதே என் கருத்து.

புரட்சிக் கவிஞரைப் பற்றிப் பேசவேண்டிய நான், எதற்காக இப்படிப் பீடிகை போடுகிறேன் என்று நீங்கள் நினைக்கலாம். ஒரு படைப்பும், பண்பாடும் தேர் மாதிரி. அதனை ஒரேயடியாக ஒருவர் மட்டுமே நகர்த்த முடியாது. இந்த வகையில், இந்தப் பண் பாட்டுத் தேரை நகர்த்திய வள்ளுவனும், இதரப் படைப்பாளிகளும், விட்டுச் சென்ற இடத்திலிருந்து, பாரதியும், பாரதிதாசனும் நகர்த்திக் காட்டினார்கள் என்பதாலேயே, நான் நமது பண்பாட்டுச் சூழலை ஒரு பறவைப் பார்வையாகச் சுட்டிக் காட்டினேன். உலக மண்ணின் தொடர்ச்சிதான் நாடுகளின் வளர்ச்சி. உலக சிந்தனைகளின் தொடர்ச்சிதான் மாபெரும் படைப்புகள். இந்தப் படைப்புகளும், ஒன்றுக்கொன்று உலகத்தைப்போல் பின்னிப் பிணைந்தவை. ஆகையால் பாரதிதாசனைப் பேசும் போது பாரதி வருவார். பாரதியைப் பற்றிப் பேசும்போது பண்டைய கவிஞர்கள் வருவார்கள். இது தவிர்க்க முடியாத ஒன்று; தவிர்க்கக் கூடாத ஒன்று. "சாசர் முதல் சர்ச்சில் வரை" (Chaucer to Churchill") என ஆங்கில இலக்கியத்தில் கூறு வார்களே அப்படி.

புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் நாடறிந்த புலவர். உரைநடைக்கும் அருந்தொண்டாற்றியவர். பக்திக் கவிஞராகத்துவங்கி, அரசியல் சுதந்திரப் போராட்டக் கவிஞராக மலர்ந்து, சமூக சீர்திருத்தக் கவிஞராக பரிணாமம் பெற்றவர். பாரதியாரால் அரசியல் சுதந்திரப் பார்வையையும், தந்தை பெரியாரால் சமூக சீர்திருத்தப் பார்வையையும் கண்களாகப் பெற்றவர். இருபெரும் மேதைகளின் தாக்கங்களில் அவர் தர்க்கங்களைப் பார்க்காமல் தனித்துவத்துடன் படைப்புகளைப் படைத்தார். இதுதான் அவருடைய மிகப்பெரிய பலம். அவரது ஒப்பற்ற தனித்துவம்.

பாரதிதாசன், "சுயமரியாதை" என்ற வார்த்தைக்கு முப்பரிமாணம் கொடுத்தவர். தமிழகம், சுயமரியாதை இயக்கத்திற்குப் பெயர் பெற்றது. சுயமரியாதை என் றால் பிறர் மரியாதையைப் பேணுவது என்பதை நம் மில் பலர் மறந்துவிட்டோம். சுயமரியாதை என்றால், "தன்னைவிட மேலானோர் இல்லை" என்று அகங் காரமாக இருப்பது அல்ல. சுயமரியாதை என்பது தனக்குத் தோன்றுவதைப் பிறருக்கு இன்னலின்றி எந்தவித அச்சமும் இன்றி செயல்படுத்துவது. தந்தை பெரியார் தன் வாழ்க்கையையே சுயமரியாதை விளக்கமாகக் கொண்டிருந்தார். சிறு பையன் போனாலும் எழுந்து நின்று வரவேற்றவர் சுயமரி யாதைச் சிங்கம் பெரியார்.

பாரதிதாசன் எதை விட்டுக் கொடுத்தாலும், ஏன்-கவிதைகள் எழுதுவதையே விட்டுக் கொடுத்தாலும், சுயமரியாதையை விட்டுக் கொடுக்காதவர் என்பதற்கு பல நிகழ்ச்சிகளைச் சொல்லலாம். காசுக்காகக் கும்பிடாதவர், கவிதை அரங்கேற்றத்திற்காகக் கண் டவர்களை எல்லாம் பார்க்காதவர், கூழைக் கும்பிடு போட்டுப் புகழை வளர்க்காதவர். இப்படிப்பட்ட இந்த அஞ்சாத அரிமா, கனகசுபுரத்தினம் என்ற தன் பெயரை, பாரதிதாசன் என்று மாற்றி, தாசன் என்ற வார்த்தைக்குப் பெருமை சேர்த்தார். சுய மரியாதைக் கவிஞர் ஒருவர், தான் குருவாக ஏற்றுக் கொண்ட ஒரு கவிஞரின் தாசன் என்று தன்னை அழைத்துக் கொண்டார். இது பாரதிதாசன் தன்னைப் பின்னால் வைத்துத் தமிழை முன்னால் வைத்த அணுகு முறையையே காட்டுகிறது. படைப்புகள் என்று சொல்லப்படுபவைகளில் வெறும் சொற் ஜாலங்கள்

செய்து கொண்டு, ஆண், பெண் அலங்கோலங்களைப் படம் பிடித்துப் பம்மாத்து செய்யும் இந்தக் கால இலக்கியவாதிகள் (எல்லோரும் அல்ல) பாரதிதாசன் கடைப்பிடித்த இந்த அணுகுமுறையைப் பின்பற்றி னால் அவர்களுக்கும் நாட்டுக்கும் நல்லது. இப்படி தன்னளவில் நினைத்ததைப் பகிரங்கமாகப் பிர கடனப்படுத்திய ஒரு பண்பே பாரதிதாசனை புரட்சிக்கவிஞர் என்று சொல்வதற்குப் போதுமானது.

புரட்சிக்கவிஞன் பாரதிதாசன், பாரதியார், தன்னைச் சிறப்பாகப் பாட வைத்தார் என்று ஊரறிய உலகறியச் சொன்னவர். "சுப்பிரமணிய பாரதி தோன்றி, புதுமுறை, புதுநடை காட்டினான்" என்றார். "எளிய முறையில் தன்னை தமிழை எழுதச் செய்தவன் பாரதி" என்றார். பதினேழு வயதில் பாரதியுடன் பரிச்சயப்பட்டு, பின்னர் அவரது பக்தனாக, சீட னாக மாறிய பாரதிதாசன், அமர கவியின் இறுதி நாள் வரை குருகுல மாணவன்போல் வாழ்ந்தவர். பாரதியைப் பார்ப்பத்ற்கு முன்பு, "சுப்ரமணிய துதி" போன்ற பாடல்களைப் பாடிக் கொண்டிருந்தவர், அமரகவியுடன் அந்நியோன்னியமான பிறகு, தனது கவனத்தை தேசத்தின் பிரச்னைகள் மீது திருப்பி னார்.

புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் சமூக சீர்திருத்தக் கவிஞர் என்றும், அவருக்கும் தேசத்திற்கும் அவ்வள வாக சம்பந்தம் இல்லை என்றும் ஒரு கருத்து நிலவுகிறது. இது மெய்யன்று, பாரதிதாசன் எழுதிய கதர்ப்பாட்டு, ராட்டினப்பாட்டு, காந்தி புகழ்மாலை ஆகியவை தேசிய இயக்கத்தைப் போற்றிப் புகழ்ந்த சிறிய, அதே சமயம் சீரிய இலக்கியங்களாகும்.

நான் புதுவையில் துணைவேந்தராக இருந்த போது, அங்கு தேசிய வீரர்கள் விடுதலைப் போராட் டத்தில் அணிவகுத்துச் செல்லும் போதெல்லாம், புரட்சிக்கவிஞரின், "அன்னையின் மணிக்கொடி" என்ற பாடலையே பாடிக்கொண்டு சென்றார்கள் என்று கேள்விப்பட்டேன். இதுபற்றி அமரர், அரிய தியாகச் செம்மல் திரு. எஸ்.ஆர். சுப்பிரமணியம் என்னிடம் நிரம்பக் கூறியது உண்டு. காங்கிரஸ் இயக்கத்தில் தீவிரவாதிகளின் தரப்பிலிருந்த, தனது குரு பாரதியாரை, அப்படியே பின்பற்றியவர் பாரதிதாசன். பாரத அன்னையின் விலங்குகளை நொறுக்குவதற்காக எழுந்த ஏராளமான வீரர்களுக்கு, புரட்சிக்கவிஞர், பாரதமாதா சிலைகளில் துப்பாக்கி களை மறைத்து வைத்து விநியோகம் செய்தார் என்பதையும் நான் அறிந்தேன். எல்லாவற்றிற்கும் மேலாக சீனப் படையெடுப்பின்போது மக்களைத் தட்டி எழுப்பியவர் பாரதிதாசன். ஒவ்வொரு குடும்பமும் ஒரு பாசறையாக வேண்டும் என்றும், ஒவ்வொரு பாசறையிலிருந்தும் ஒரு வீரனாவது சீன ஆக்ரமிப்பை முறியடிக்க போர்க்களம் நோக்கிச் செல்லவேண்டும் என்றும் பாடியவர் பாரதிதாசன். ஆகையால் அவரை வெறும் சமூக சீர்திருத்தவாதி என்றும், தேசியவாதி அல்லர் என்றும் முத்திரை குத்துபவர்கள், குறுகிய மனப்பான்மைக்காரர்கள் மட்டுமல்ல, வானுயர்ந்து நிற்கும் பாவேந்தரை சாதாரணமாகப் பார்த்தவர்கள் என்றும் கொள்ள லாம்.

"என் வாழ்க்கையே ஒரு செய்தி" என்றார் அண்ணல் காந்தி. இதேபோல், எழுதியபடி

நடந்தவர், நடந்தபடி எழுதியவர் புரட்சிக்கவிஞர். அவர் படைத்த ஐம்பதுக்கும் அதிகமான நூல்களில் சமூக அநீதியைக் கண்டித்தல், எளியோரை வாட்டும் வலியோரை தண்டித்தல், 'சாதி இருக்கிறது என்று சொல்வானும் இருக்கிறான்' என்று கூறுமிடத்து இவர் குணமென்னும் குன்றேறி நின்று அடையும் சீற்றங் களை இவரிடம் பார்க்கலாம். அவர் எழுதிய 'இசை யமுது' என்ற இசைப்பாடலில், நாயக நாயகியர்கள் வரிசையில், வண்டி ஓட்டுபவர், மரம் வெட்டுபவர், நெசவாளர், சலவையாளர், குறத்தி ஆகிய சாமானியர் களையே இவர் அற்புதமான நாயக நாயகியராய் சித்திரித்தார். இதேபோல் இவர் எழுதிய 'அழகின் சிரிப்பு' என்ற காவியம் தனிச்சிறப்புடையது.

இதனால்தான் செக்கோஸ்லோவாக்கியத் தமிழ் அறிஞர் கமில் சுவலபில், "அழகின் சிரிப்பு" என்ற தலைப்பே கவிதை" என்று இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டில் பேசினார்.

புரட்சிக்கவிஞர் தமிழ் இலக்கியத்தில் பல்வேறு முதன் முயற்சிகளைத் தோற்றுவித்து அவற்றைச் சமூகப் பிரக்ஞையுடன் இணைத்தவர். ஒரு குடும்பம் எப்படி இருக்க வேண்டும் என்பதை குடும்ப விளக்கு விளக்குகிறது. குடும்பக் கட்டுப்பாடு பற்றியும் அன்றே "காதலுக்கு வழி வைத்துக் கருப்பாதை சாத்தக் கத வொன்றும் காண வேண்டும்" என்றார். பாரதியைப் போல் இவரும் அடிமட்டத்தில் வீழ்ந்துகிடப்போரை மேலே கொண்டு வருவதே கவிஞன் கடமை என்றார்.

"பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் குருடரெலாம் விழி பெற்றுப் பதவி கொள்வதே" பாரதியின் குறிக்கோள். இவற்றுள் மகளிரும் அடங்குவர். "அச்சமில்லா, நாணமில்லாப் பெண்கள் நாட்டின் இரு கண்கள்" என்று அச்சமின்றி அக்காலத்தே கூறியவர் பாவேந்தர்.

பொதுவாக நம்மவர்கள் இயற்கையைக் கடவு ளோடும் காதலோடும் ஒப்பிட்டும் இணைத்தும் பாடியபோது, ஆங்கிலக் கவிஞன் வோட்ஸ்வொர்த் போல் இயற்கையை இயற்கையாகப் பாடியவர் பாவேந்தர். இவர் இயற்கை அழகில் எந்தவித இடைச் செருகலையும் விடாமல் தமிழ் இலக்கியத்தில், விதவைத் திருமணத்தை ஆதரித்து இலக்கியமாகச் சொன்னவரும் பாரதிதாசனே. 'கோரிக்கை அற்று கிடக்குது அண்ணே வேரில் பழுத்த பலா' என்று இளம் விதவைகளைப் பற்றி இவர் மனம் குமுறி எழுதிய வாசகம் இன்றைக்கும் மாபெரும் இலக்கிய வரியாக நடைபோடுகிறது.

புரட்சிக்கவிஞர் தொடாத துறை என்று எதுவுமே இல்லை என்று சொல்லலாம். இருபதுக்கும் அதிக மான காவியங்களைப் படைத்தவர்; முப்பதுக்கும் அதிகமான உரைநடைப் படைப்புகளையும் தமிழுக்கு வழங்கியவர். "படித்த பெண்கள்", "கற்கண்டு" போன்ற இவரது நாடக நூல்கள் இலக்கியப் பேழைகள். திரைப்படத்தையும் அவர் விட்டு வைக்க வில்லை. 'பொன்முடி', 'வளையாபதி' போன்ற திரைப்படங்களுக்கு உரைநடை எழுதினார். பல்வேறு நாடகங்களில் நடித்திருக்கிறார். பாடியிருக்கிறார். பதினேழாவது வயதில் மகாகவி பாரதியாரைக் கவ ரும் வகையில் அவர் எழுதிய 'வீர சுதந்திரம் வேண்டி நின்றோர் பின் வேறொன்றும் கொள்வாரோ' என்ற பாடலைப் பாடி அமரகவியை எடுத்த எடுப்பிலேயே வசீகரித்தவர். பாரதியாரும், அந்தச் சின்னஞ்சிறு இளைஞரை, 'நமது கவிதா மண்டலத்தில் ஒருவர் சேர்ந்திருக்கிறார்' என்று சொன்னார். பாரதியாரின் கவிதா மண்டலத்தில் அவரால் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒரே ஒரு நட்சத்திரம் பாரதிதாசன்தான்.

புரட்சிக்கவிஞர், பாரதியை முன்னோடியாகக் கொண்டாலும், தம் தனித்துவத்தை இழந்ததில்லை. பாரதியாரால் பட்டை தீட்டப்பட்ட வைரமான அவர், உற்சவமூர்த்திகளிடமும் உல்லாசவாசிகளிடமும் ஆப ரணங்கள் ஆகாமல், பாட்டாளி மக்களுக்குப் பட்டய மாக மாறினார்.

தந்தை பெரியாருடன் இவர் கொண்ட நட்பும் திராவிட இயக்கத்தின் சுயமரியாதைத் தாக்கமும் இவரை சமூக நீதியில்லாத அரசியல் நீதியால் பல னில்லை என்று சிந்திக்க வைத்தது. அதனாலேயே பகுத்தறிவுப் பாதையில் நடைபோட்டு முன்பு தான் பாடிய கடவுளர்களையே பிறகு சாடவும் செய்தார். ஆனாலும் அதைக் காலத்தின் கட்டாயமாகத்தான் செய்தாரே அன்றி அதில் எந்தப் பிரதிபலனையும் எதிர்பார்க்கவில்லை. அமரகவி தொட்ட சமூக சீர்திருத்தத்தை சமூகப் புரட்சியாக மாற்றவேண்டும் என்று எழுதியவர், பேசியவர் பாரதிதாசன்.

புரட்சிக்கவிஞர் வாழ்க்கையில் தனக்கென்று ஒரு நெறியை வகுத்திருந்தார் என்று அறிகிறேன். அவர் தமிழ் ஆசிரியராகப் பணியாற்றியபோது, விடுமுறை நாள்களில் மட்டும்தான் வெளியூர்களுக்குச் சென்று கூட்டங்களில் பேசுவார். இப்போதுபோல், அரை நாள் லீவு அல்லது ஒரு மணிநேர பெர்மிஷன், ஒரு வேளை இங்கே இருப்பதுபோல் காட்டிக்கொண்டு, எங் கேயோ இருப்புது போன்ற மனோபாவம் அவரிடம் இருந்ததில்லை. "பெரியவர்கள் சேய்போல் இருப்பர்" என்பார்கள். இதற்கு உதாரணமாகவும் அவர் இருந்திருக்கிறார். முரட்டுத் தோற்றமும், மூர்க்க மான மீசையும் அவரை ஒரு மாதிரி காட்டினாலும் அவர் ஒரு பலாப்பழம் மாதிரி. வீட்டுக்கு வருபவர் களைக் குழந்தைபோல் நேசித்து விருந்துபசாரம் செய்தவர். "என்னடை - தன்னடை - என் யாப்பு தன்யாப்பு" என்று தனக்குப் பின்னால் பல கவி ஞர்கள் உருவாகி இருப்பதைப் பெருமிதத்துடன் சொல்லித் தனக்கென்று ஒரு தனிப் பரம்பரையை விட்டுச் சென்றிருக்கிறார். அந்தப் பரம்பரை எதிர் காலத்தைத் தொலைநோக்காய் பார்த்து படைப்பு களை ஆக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

"நீடுதுயில் நீக்கப்பாடி வந்த நிலா" எனப் பாரதியாரை, பாவேந்தர் அழைத்தது அவருக்கு முற்றிலும் பொருந்தும். இருவரும் ஒரு செடியில் தோன்றிய இரு மலர்கள். இலக்கிய இரட்டையர்கள் - அண்ணன் - தம்பிகள், தகப்பன் - மகன் என்று எப்படி வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளலாம். ஆனால், இருவரையும் பிரித்து நடுவில் சுவர் கட்டும் வேலை என்றும் நிலைபெறுவது அல்ல. ஏனெனில் ஒருவர் மற்றவருக்கு அஸ்திவாரம், அவ்வளவுதான்.. "பாரதியால் அவர் தம் தாசன் பெருமை பெற்றதும், பாவேந்தரால் பாரதி பெருமை பெற்றதும்" என்று கூறினால் போதுமானது. இதுவே சத்தியமான உண்மை.

# மனிதப் பிறவி

**மீ.ப.சோமு**

"கோபாலு மேளங்களாம்
குழந்தைவேலு பம்பைகளாம்
கந்தையா கும்பங்களாம் – தங்கரத்தினமே
கண்கொள்ளாக் காட்சியடி – பொன்னு
ரத்தினமே"

இவ்வாறு பாடிக்கொண்டே மருத மரச் சாலையில் நடந்து செல்வார்கள் வழிப்போக்கர்கள். அப்படி நடந்து சென்றால், சுற்றுவட்டாரத்தில் எங்கோ ஒரு கிராமத்துக் கோயிலிலே கொடை நடக்கிறது என்ற புரிந்து கொள்ள வேண்டும்.

ஸ்ரீ வைகுண்டம் என்று பெயர் தாங்கிய ஊரின் சுற்றுவட்டாரத்தில் அந்தப் பாட்டுக்கு அத்தனை புகழ்! அதாவது அந்தப் பாட்டு வர்ணிக்கிற கதாநாயகர்கள் அந்த வட்டாரத்தில் அத்தனை பிரசித்தம்! கோபாலு மேளம், குழந்தை வேலு பம்பை, கந்தையா கும்பம் – என்றால் ஸ்ரீ வைகுண்டம் எல்லையில் மட்டுமில்லை, பக்கத்து வட்டாரங்களில் இருந்துங்கூட நாட்டுப்புறத்து மக்களும் நகர்ப்புறத்து மக்களும் ஆயிரக்கணக்காக அம்மன் கோயிலின் கொடையைப் பார்ப்பதற்குக் கூடிவிடுவார்கள்.

கொடை நடப்பதற்கு இரண்டு நாள்களுக்கு முன்பிருந்தே ஊரெல்லாம் ஒரே கல்யாண வைபவமாக இருக்கும். பந்தல்கள், தோரணங்கள், அலங்காரப் பூ வேலைகள் என்று ஊரே இனந்தெரியாமல் மாறிவிடும். தெருக்களில் எல்லாம் விதம் விதமான கோலங்களும் வர்ணங்களுமாக இருக்கும். சாலை வழியெல்லாம் மேற்கண்ட பாட்டு எழுந்து எதிரொலி செய்யும். நடந்து செல்கிற உழவர்கள், வண்டியிலே செல்லும் பெண்டு பிள்ளைகள் – எல்லாரும் அந்தப் பாடலை உற்சாகத்தோடு பாடுவார்கள்.

அந்தப் பாடலைப் பலமுறை கேட்டிருக்கிறாள் இச்சைக்கிளி என்ற வண்ணப் பெயர் கொண்ட இச்சை! வில்லுப்பாட்டு வேலாயுதப் புலவரின் மகளான பஞ்சவர்ணக்கிளி அவள்! பொய்க்கால் குதிரை ஆட்டத்திலே ஸ்ரீவைகுண்டம் எல்லையில் மட்டுமல்லாமல், சுற்று வட்டாரங்களில் மட்டுமல்லாமல், இந்தத் தமிழ்நாடு முழுதுமே ஒரு கலக்குக் கலக்க வேண்டும் என்ற நோக்கத்தோடு தந்தையினால் விசேஷமாகப் பயிற்சி அளிக்கப்பட்டு வளருகிற கலைக் கன்னி அவள்!

ஆமாம்; கரக ஆட்டத்தை வர்ணிக்கிற அந்த அருமையான பாடலைப் பலமுறை கேட்டதுண்டு இச்சைக் கிளி. அம்மன் கோயிலிலே கொடைத் திருவிழா நடக்கும் காலத்தில் வேலாயுதப் புலவரே உற்சாகமாக அந்தப் பாடலைப் பாடிக்கொண்டு வீடு திரும்புவார். அப்பொழுதெல்லாம் அத்தனை பெயருக்கும் புகழுக்கும் காரணமாக அமைந்த கந்தையாக் கரகக்காரனையும் அவனுடைய தோழர்களையும் பார்க்க வேண்டும், அந்த ஆட்டத்தைக் காணவேண்டும் என்று இச்சைக்கிளி ஆசைப்படுவாள். என்றாலும் அதற்கு இதுவரை வாய்ப்பு இல்லாமலே போய்விட்டது!

கோபாலு மேளத்தையும், குழந்தை வேலு பம்பையையும், கந்தையாவின் கரக ஆட்டத்தையும் முதன் முதலாகக் கண்டு களிக்கும் வாய்ப்பு ஏரல் என்ற அழகான ஊரிலேதான் இப்பொழுது கிடைக்கப் போகிறது இச்சைக்கிளிக்கு!

ஏரல் – தாமிரவருணி தீரத்தில் அம்மன் கோயிலின் கொடைகளிலே மிகமிகப் புகழ்பெற்ற கிராமம். அங்கே வேலாயுதப் புலவர் இந்த ஆண்டில் கும்பக் குட ஆட்டத்தைப் போலவே தம்முடைய மகளுக்கு ஒரு பொய்க்கால் குதிரை ஆட்டமும் ஏற்பாடு செய்துவிட்டார். பெண் பிள்ளைகள் இம்மாதிரி வேடந்தாங்கி ஆடுவது என்பது அந்த வட்டாரங்களில் அதுவரை இல்லை. எனவே கூட்டம் வழக்கத்தைவிட ஏராளமாக இருந்தது! இச்சைக் கிளிக்கு மட்டற்ற உற்சாகம். தான் பொய்க்குதிரை ஆடப்போவதினாலே மட்டும் இல்லை; நீண்ட நெடுங்காலமாகக் கேட்டிருக்கிற பாட்டின் கதாநாயகர்களை இப்பொழுது சந்திக்கப் போகிறோம், அவர்களுடைய ஆட்டத்தைப் பார்க்கப் போகிறோம் என்று எண்ணி, மனத்துக்குள் ஆனந்தப்பட்டாள் கிளி. மற்றபடி வேறு எந்த முக்கிய நிகழ்ச்சியையும் ஏரல் ஊரிலே அவள் எதிர்பார்க்கவில்லை!

ஆனால் நடந்தது என்ன?

கரக ஆட்டம் ஆற்றங்கரையிலே இருந்து புறப்பட்டது. பூஜைகள் எல்லாம் முறைப்படி நடந்து, தீபாராதனைகள் ஆகி, அம்மன் கோயில் பூசாரி கொடுத்த பிரசாதத்தை வாங்கிக் கொண்டு எல்லாரும் அங்கிருந்து பக்தி சிரத்தையோடு புறப்பட்டார்கள். புலவரோடு இச்சைக் கிளியும் மணலிலே, பட்டப்பகல் பன்னிரண்டு மணி வெயிலிலே, அத்தனை பெரிய கூட்டத்தில் நடந்தாள். கலைக்கன்னி என்ற முறையில் அல்ல. கந்தையாவின் கரகத்தைப் பார்த்து அனுபவிக்கிற ஆயிரக்கணக்கான ரசிகர்களிலே தானும் ஒருத்தி என்ற முறையிலேதான்! அந் நிலையில் மணலின் சூடு காலில் ஏறவில்லை. அங்கங்கே கரகம் நின்று ஆடியபோது அத்தனை மக்களும் கண்ணும் மனமும் ஒன்றாகிக் கரக ஆட்டத்திலே கலந்து நின்றார்கள். பம்பையின் முழக்கமும், மேளத்தின் வர்ண மெட்டும், கும்பக்குடத்தின் ஒய்யாரமான ஆட்டமும் சேர்ந்து, அத்தனை பெரிய கூட்டத்தை ஒருநிலைப்படுத்தி அந்தக் காய்ந்து கனல் விடுகிற ஆற்று மணலிலே மெய்ம்மறந்து நிற்க வைத்தது! அந்த ஆட்டத்தின் அத்தகைய அற்புத ஆற்றலை நேருக்கு நேர் கண்டாள் இச்சி.

புலவருக்கே ஒரே வியப்பு! "அடடா! என்ன ஆட்டம் என்ன ஆட்டம்! கொதிக்கிற ஆற்று மணல் கூடப் பூ மெத்தையாகி விடுகிறதே. நெருப்பைக் கொட்டுகிற வெயில் கூடக் குளுமையான நிலவாக மாறி விடுகிறதே! உடம்புக்கு உள்ள உணர்ச்சியெல்லாம் உள்ளத்திலே போய் நின்றல்லவா இந்த ஆட்டத்திலே லயிக்கிறது!" என்று வாய்விட்டுச் சொன்னார் வேலாயுதப் புலவர்! அவர் இலக்கண இலக்கியங்கள் கற்றவர். இச்சைக்கிளிக்கு அப்படியெல்லாம் வர்ணித்துச் சொல்லத் தெரியாது. என்றாலும், அவளுடைய மனத்திலும் அதே வியப்புதான். எள்ளளவும் குறைவில்லை. சொல்லப் போனால் இம்மியளவு அதிகமாக இருந்தது என்று கூடக் கூறலாம்.

மேளம் அற்புதம், அதைவிட அற்புதம் பம்பை. கரகமோ? பம்பைக்கு எத்தனை அற்புதம் இருந்ததோ

அத்தனை அற்புதம் கரகத்துக்கும் இருந்தது. இரண்டில் எது எதைவிட உயர்வு என்று சொல்வதற்கில்லை. இச்சைக்கிளி இரண்டையும் மாறி மாறி வியந்தாள். ஏற்றத் தாழ்வின்றி வியந்தாள். குழந்தைவேலு, கந்தையா என்ற கதாநாயகர்கள் இப்பொழுது அவளுடைய கண்முன்னே நின்றார்கள். இதுவரை ஒரு பாட்டாக இருந்த வடிவங்கள் இப்பொழுது மனிதர்களாக எதிரே நின்று அந்தப் பாட்டின் பொருளைச் செயலிலே காட்டிக் கொண்டிருந்தன!

'பிப்பிப் பீ, பிப்பிப் பீ, பிப்பி பிப்பீ, பிப்பிப் பீ' என்று மேளம் ஒலித்தது. 'ரண்ட்டின, ரண்ட்டின, ரண்', 'டிர் ராண்டின, டிர்ராண்டின, டிர்ராண்டின, ரண்', 'ட்ரிம், ட்ரிம்' என்று பேசியது பம்பை! 'ரங்கு ரங்கு ரங்' என்று கரகம் ஆடினான் கந்தையா! அந்தக் காட்சி உண்மையிலேயே கண் கொள்ளாக் காட்சியாகத் தான் இருந்தது இச்சைக்கிளிக்கு!

கந்தையாவைக் கூர்ந்து பார்த்தாள் கிளி. மென்மையான சல்லடைத் துணியினால் செய்த வெள்ளை நிற அங்கி. உடம்பின் ஆற்றலோடு ஒட்டிக் கொண்டு வளைந்து நெளிந்தது. இடுப்பிலே பச்சைப் பசேலென்ற உறை. அதற்கு மேல் குங்கும வர்ணத்தில் ஒரு துணி. அதை இடுப்பைச் சுற்றி இறுக்கிக் கட்டியிருந்தான் கந்தையா. இரண்டு கைகளிலும் மணிக்கட்டுவரை ஒட்டிக் கொண்டிருந்த சட்டையின் கைக்கு மேலே, தங்கக் காப்புகளும் தாயத்தும் பளபளத்தன. பாதங்களைப் போய்ப் பிடித்துக் கொண்டு நெளிந்த சல்லடை அங்கிக்குமேல் சதங்கை 'ஜல் ஜல்' என்று தாளம் கொட்டியது. இரண்டு கைகளையும் நீட்டிக் கொண்டு தாளத்துக்குத் தக்க அபிநயத்தோடு கந்தையா ஆடிக் கொண்டே உலவும்போது, தலையில் இருந்த கரகம் அப்படியே கிறங்கியது, சுற்றியது. அப்படியும் இப்படியும் ஒயிலாகத் துவண்டது. அதன் கொண்டையிலே இருந்த கிளியோ அசைவுக்கு அசைவு ரஞ்சிதமாகக் கொஞ்சியது!

'டிர்ராண்ட்டின டிர்ராண்ட்டின ட்ரீண்' என்று ஒரு முத்தாய்ப்பு விழும் பம்பையிலே! இதுவரை கரகத்திலே கிறங்கி நின்ற இச்சைக்கிளி இப்போது தனது இங்கிதப் பார்வையைப் பம்பைக்காரன் குழந்தைவேலின் பக்கமாகத் திருப்புவாள்.

ஆகா! அந்த வளைந்த குச்சிகளுக்குள்ளேதான் எத்தனை பெரிய கலை வாழ்கிறது! உயிரற்ற அந்த மரக் குச்சியிலே நின்று எப்படியெல்லாம் உயிர் பேசுகிறது! இச்சைக்கிளி ஒரே வியப்பிலே மூழ்கிப் போனாள். உயிருள்ள தோலும், அடுப்பு மூட்டுகிற மரக் குச்சியும், ஒரு மனித உள்ளத்தின் கற்பனையும், ஒன்று சேர்ந்து விட்டால் எத்தனை பெரிய அற்புதம் நிகழ்ந்து விடுகிறது! இச்சைக்கிளியின் கலையுள்ளத்திலே இப்படியெல்லாம் பல கற்பனைகள்! மரக்காலிலே நின்று பொய்க் குதிரை ஆடிப் பழகிய அவளுக்கு இப்பொழுது மரக் குச்சியினிடத்திலே ஒரு பயபக்தி உண்டாகிவிட்டது! பம்பை அத்தனை வேலை செய்துவிட்டது!

அன்றிரவு இச்சைக்கிளி தூங்கவில்லை!

காதிலே பம்பை! கண்முன்னே கரகம்! கந்தையாவும் குழந்தைவேலும் மாறி மாறி வந்தார்கள் மனக்கண்ணுக்கு முன்னால்! உறக்கம் வரவில்லை இச்சைக்கிளிக்கு!

மறுநாள் இரவு இச்சைக்கிளியின் பொய்க்கால் குதிரை ஆட்டம்! முந்திய நாளைவிட இன்று அதிகமான கூட்டம். பெண் மகள் குதிரையாட்டம் ஆடுகிறாள் என்று நாட்டுப்புறத்து மக்கள் எல்லாம் குடும்ப சமேதராக ஏரல் ஊருக்குக் குடிவந்துவிட்டார்கள்! அந்த ஊர் முழுதும் அல்லோல கல்லோலப் பட்டது! மாலை ஆறு மணிக்குக் கந்தையா கதவை மூடிக் கொண்டு ஒரு மாடி வீட்டிலே படுத்திருந்தான். முதல் நாள் ஆடிய களைப்பு அவனுக்கு இன்னும் தீரவில்லை. பொய்க்கால் ஆட்டத்தைப் பார்ப்பதிலோ அவனுக்கு ஒருநாளும் அக்கறை கிடையாது. ஆனால், விதி விட்டதா? சொல்லி வைத்தாற்போல் அந்த மாடிக் கதவை வந்து தட்டியது விதி, வில்லுப்பாட்டு வேலாயுதப் புலவரின் வடிவத்தில்!

"தம்பி! தம்பி! தம்பியோவ்!" என்று வெண்கலத் தொண்டையிலே கூப்பிட்டுக் கொண்டே ஒரே பிடிவாதத்துடன் தாளம் மாற்றி மாற்றிக் கதவைத் தட்டினார் வில்லுப்பாட்டு வேலாயுதப் புலவர். ஒரே எரிச்சலோடு வந்து கதவைத் திறந்தான் கந்தையா.

"தம்பி! ஓர் அவசரம், எதிர்பாராமல் ஆகிவிட்டது. எங்களோடு வந்த கொட்டுக்காரருக்குத் திடீரென்று ஜுரம், காய்ச்சல். இன்று இரவு ஆட்டத்துக்கு வேறு ஆள் இல்லை. உங்கள் பம்பைக்காரக் குழந்தை வேலுவைக் கொஞ்சம் அனுப்பி வையுங்கள்" என்று பதறினார் புலவர்.

தூக்கக் கலக்கம் பாதி, எழுப்பி விட்டாரே என்ற எரிச்சல் பாதி! "அதெல்லாம் வளமை இல்லை! ஒருத்தருக்கு வாசிக்கிறவன் இன்னொருத்தருக்கு வாசிக்கப்படாது. அதிலேயும் பொம்பிளை ஆட்டத்துக்கு ஒரு மீசை முளைச்ச ஆம்புளையை வந்து வாசிக்கச் சொல்றீங்களே! அதெல்லாம் முடியாது. யாராவது கணியான் இருப்பான், கூட்டிக்கிட்டுப் போங்க. நம்ம பம்பை வராது. இது ஆம்புளை வாத்தியம்!"

இப்படிச் சொல்லிவிட்டுக் கதவைப் புலவரின் முகத்திலே கொண்டு சாத்தியடிப்பதுபோல், 'படார்' என்று மூடிவிட்டு, உள்ளே போய்த் தன் உறக்கத்தைத் தொடர்ந்தான் கந்தையா. பம்பைக்காரன் குழந்தைவேலு பக்கத்து அறையிலே உறங்கிக் கொண்டிருந்தான்.

"பொம்பிளை வாத்தியம், ஆம்பிளை வாத்தியம் என்று வாத்தியங்களிலேகூட ஒரு பாகுபாடா!" என்று எண்ணி ஒரு பக்கம் வினோதச் சிரிப்பு. அதே சமயம் தன்னையும் தன் மகளையும் அவமதித்துவிட்டானே என்ற வேதனை. இதற்கெல்லாம் மேலாக இரவு இச்சையின் ஆட்டம் நடந்தாக வேண்டுமே என்ற கவலை – இப்படியாக மனம் சாம்பிப்போய் மகளிடம் திரும்பி வந்து நடந்ததைச் சொன்னார் வேலாயுதப் புலவர்.

கந்தையா தங்கியிருந்த மாடியறையிலே மீண்டும் கதவு தட்டும் ஓசை! படார் படார் என்று வரவில்லை இந்த ஓசை. இதில் மென்மை இருந்தது. அந்த மென்மையோடு எப்படியும் கதவு திறந்தால் அல்லாமல் விடுவதில்லை என்ற உறுதியும் இருந்தது!

கந்தையா கண்ணைக் கசக்கிக் கொண்டே வந்து கதவைத் திறந்தான். என்ன ஆச்சரியம்! இச்சைக்கிளி நின்று கொண்டிருந்தாள்! கந்தையா அப்படியே மலைத்துப் போய் விட்டான்!

குதிரையின் வால் போன்று அடர்த்தியான சடை. அதை இறுக்கி முடிந்திருந்தாள். இடையிலே ஒரு மின்னல் அப்படியும் இப்படியும் துவண்டுகொண்டிருந்தது. முகத்திலோ? புகழ்பெற்ற அராபி தேசத்து வெண்புரவிகளின் நடையிலே காண்கிற துள்ளலும், வேகமும், ஒயிலும் அந்தக் கன்னியின் முகத்திலும் கண்ணிலும் மேனி முழுதிலும் தாளம் தப்பாமல் ஒய்யாரமாகக் குதிபோட்டுக் கொண்டிருந்தன.

"உள்ளே வாருங்க அம்மா!" என்று கந்தையா சொல்கிறவரை பொறுக்கவில்லை இச்சைக்கிளி. அப்படி ஒரு பாய்ச்சல்! தன்னை உள்ளே விடாமல் கதவை மறுபடியும் அடைத்துவிடாதபடி வாசலைத் தாண்டிவந்து உள்ளே நின்று கொண்டாள்.

"நீங்களும் நானும் ஒவ்வொரு விதத்திலே தொழிலாளிங்க. நம் பளுக்குள்ள இந்தமாதிரி ஆபத்துச் சமயத்திலே ஒருத்தருக்கொருத்தர் உதவாமப்போனா எப்படி? நீங்களே சொல்லுங்க!" என்று பேசிற்று கிளி,

→

கந்தையாவின் முன்னால் நின்று கொண்டு!

"நான் சொல்ல வந்தது என் னண்ணா..." என்று இழுத்தான் கந்தையா. அப்போது அவனுடைய முகத்தைப் பார்க்கவேண்டுமே! அசடு வழிந்தது!

"சொல்ல வந்தது என்னவோ தெரியாது. ஆனா என்ன சொன்னீங் கண்ணு தெரியும். மனுசங்களுக்குள் ளேயே ஆம்பிளை பொம்பிளைண்ணு பார்க்கிற காலம் மலையேறிப் போச்சு. நீங்க என்னடான்னா வாத் தியத்துக்குப் போயிப் புடைவை கட்டுறீங்களே!"

பாதிக் குறும்பு, பாதி கோபம் இந்த இரண்டும் கலந்த ஒரு புன் முறுவல்! அந்த முறுவலிலே குழைத்து வார்த்தைகளை வழங்கினாள் பொய்க் கால் கன்னி! கந்தையாவுக்குத் திகை முட்டியது! பதில் பேச வார்த்தை வரவில்லை. "குழந்தைவேலு! குழந்தைவேலு!! ஏண்டா எப்பா குழந்தே! கொஞ்சம் எழுந்து வாடா கண்ணு!" என்று தோழனைக் கூப் பிட்டான் அவன்!

ஆற்று மணலையடுத்த ஒரு பெரிய திட்டிலே பொய்க்கால் குதிரை யாட்டம் அமர்க்களமாக நடந்தது. ஏற்கனவே இச்சைக்கிளியைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்த மக்களுங்கூட இன்று இன்னொரு புதிய செய்தியைக் கேட்டு இரட்டிப்பு ஆனந்தத்தோடு கூடியிருந்தார்கள். அந்தச் செய்தி யாரும் எதிர்பாராதது! வேலாயுதப் புலவருமே அதை எதிர்பார்த்தாரா?

வழக்கமாக இச்சைக்கிளியின் ஆட்டத்திற்குத் தாளம் தட்டுகிற கொட்டுக்காரனுக்கு இப்படி ஒரு காய்ச்சல் வருமென்று புலவர் எதிர் பார்த்தாரா? இல்லை. குழந்தை வேலுவை அனுப்பி உதவ வேண்டும் என்ற வேண்டுகோளுடன் கந்தை யாவைப் போய்க் கேட்டபோது அவன் அப்படி முரட்டுத்தனமாகப் பேசு வான் என்றும் அவர் எதிர்பார்க்க வில்லை. அதன் பிறகு என்ன நடந்தது? தம்முடைய மகளே அத்தனை அவசரமாகப் போய் இவ்வளவு எளிதில் குழந்தைவேலுவை அழைத்து வந்துவிடுவாள் என்று அவர் கண்டாரா? இல்லவே இல்லை! ஏரலிலே கூடியிருந்த மக்களும் இப்படி ஒரு நிகழ்ச்சியை எதிர்பார்க்க வில்லை.

எதிர்பார்க்க வில்லையானால் என்ன? மகிழ்ச்சி தரக் கூடிய காரியம் எதிர் பாராமல் நடந்தது என்றால் அதன் சுகமே தனிதானே! புலவ ருக்குக் கால் நிலத்திலே நிற்கவில்லை. உள்ளம் குதிரையைப் போலத் துள்ளித் துள்ளிக் கூத்தாடியது. மக்க ளுக்கோ ஏரல் ஆற்றிலே வெள்ளம் வந்தது போல அத்தனை மகிழ்ச்சி மனத்தின் கரையைப் புரட்டிக் கொண்டு ஓடியது! இச்சைக்கிளிக்கோ என்றால் சொல்லவேண்டியதில்லை. பல நாள்களாகத் தான் கேட்டுக் கேட்டு வியந்து வந்துள்ள பாடலின் கதாநாயகர்களைச் சந்தித்ததோடு மட்டுமில்லை, அவர்களில் ஒருவர் தனக்குப் பம்பை வாசிக்கவும் நேர்ந் ததே என்று எண்ணி எண்ணி மகிழ்ந்தாள். அந்த மகிழ்ச்சியில் தன் னுடைய வழக்கமான வயோதிகக் கொட்டுக்காரனுக்கு வந்த ஜுரத்தை 'வாழ்க' என்று வாழ்த்தினாள்! அவளுடைய மரக்காலுக்கு நூதனமான ஒரு துடிப்பு உண்டாயிற்று. அலங் காரக் குதிரையோ வானத்துக்கும் பூமிக்குமாகத் துள்ளித் துள்ளிப் பறந் தோடி விளையாடியது! பம்பைக் காரக் குழந்தைவேலு முதலாவது சந்திப்பிலே ஏற்படுகிற வியப்பும் எக் களிப்பும் மேலிட்டவனாய், பொய்ப் புரவியையும் மனிதப் புரவியையும் மாறி மாறி நோக்கியவாறு அந்த ஒயிலான ஆட்டத்துக்கு உல்லாசமாகத் தாளம் தட்டினான். அவனுடைய கையிலே அன்று புதிய புதிய கற் பனைகள் பேசின. முத்தாய்ப்பு விழும்போதெல்லாம் அவனுடைய இதயநாதமே வந்து பம்பையின்

தோலிலே 'ஜாம் ஜாம்' என்று ஒலித்தது.

இத்தனை ஆர்ப்பாட்டங்களையும் கூட்டத்தின் விளிம்பில் வந்து நின்று பார்த்துக்கொண்டே இருந்தான் கந்தையா! அன்றுதான் அவனுடைய வாழ்வில் முதன் முறையாக அவன் பொய்க்கால் குதிரையைப் பார்க்கி றான்! அன்றுதான் வாழ்வில் முதன் முறையாகக் குழந்தைவேலு வாசித்த பம்பையின் ஒலி அவனுக்குப் பிடிக்க வில்லை! பம்பையின் தோலிலே விழுந்த ஒவ்வோர் அடியும் கந்தையா வுக்குத் தன்னுடைய கன்னத் திலே விழுவதுபோல் இருந்தது! 'டர்ராண்ட்டின், டிர்ராண்ட்டின, ட்ரிண்' என்று புறப்பட்ட முத்தாய்ப் புகள், கந்தையாவின் இதயத்திலே வந்து வாள் செருகுவதுபோல் 'ட்ரிண்' என்று செருகிக் கொள்ளும்.

பொய்க்கால் குதிரையின் ஆட்டம் அப்படி ஒரு புதிய மாறுதலைச் செய்துவிட்டது. இதுவரை தாளத் தோடு இணைந்து ஒலித்துக்கொண் டிருந்த இரண்டு நண்பர்களின் நல்ல கலையுள்ளங்களிலே!

கந்தையா அன்றிரவு மாடி வீட்டுக்குத் திரும்பியபோது அவ னுடைய முகம் பேய் அறைந்ததுபோல் பரிதாபமாகக் காணப்பட்டது!

குழந்தைவேலு அன்றிரவு மாடி வீட்டுக்குத் திரும்பியபோது அவ னுடைய முகம் நூதனமான தாளங் களை ஒலித்துக் கொண்டிருந்தது! அந்த முகத்திலே இப்பொழுது ஒரு மனிதப்புரவி புதிதாக உலாவிக் கொண்டிருந்தது!

வெகுநேரம் வரை இருவரும் ஒருவரோடு ஒருவர் பேசவில்லை. இரண்டு பேருமே இரண்டு பேரையும் புரிந்து கொண்டுவிட்டார்கள்! அந்த நிலையில் இருவருமே எதுவும் பேச வில்லை!

நடுநிசிக்குப் பிறகு கந்தையா ஒரு விசித்திரமான கனவு கண்டான். அதில் தானும் இச்சைக்கிளியும் கல் யாணம் செய்து கொண்டு வாழ்வது போலவும், குழந்தைவேலுக்கும் தனக் கும் பகை ஏற்பட்டுவிட்டது போலவும், அது காரணமாகத் தனக்கு ஒரு புதிய பம்பைக்காரன் அமைந்தது போல வும், இருவரும் சேர்ந்து கோஷ்டி யாகக் கரக ஆட்டம் நடத்துவது போல வும் ஒரு தோற்றம்! நடுநடுவே இச்சைக்கிளியின் புரவியாட்டம் கன விலே தெரியும்! ஆனால் ஒரு விசித் திரம், என்னவென்றால், அவளுக்குப் பம்பை வாசிக்கிறவன் அந்தப் புதிய ஆளா அல்லது குழந்தைவேலுதானா என்று கனவிலே சரியாகத் தெரிய வில்லை; அதில் ஒரு குழப்பம்! முனகிக்கொண்டே அறையைவிட்டு வெளித்தாழ்வாரத்திலே வந்து படுத் தான் கந்தையா!

குழந்தைவேலுக்கு வேறு விதமாக இருந்தது அனுபவம்! அவன் கனவு காணவில்லை. ஆனால், நனவிலேயே தானாக ஒரு கனவை உண்டாக்கிப் பார்த்துக் கொண்டான்! அதில் தானும் இச்சைக்கிளியும் மணம் செய்து கொண்டு வாழ்வது போலவும், வெளி யூர்களுக்கெல்லாம் தாங்கள் இருவரும் சென்று புரவியாட்டம் நடத்துவது போலவும் கற்பனைத் தோற்றங்கள்! அந்தத் தோற்றத்திலே நூறு, ஆயிரம், இலட்சம் என்று கணக்கற்ற மக்கள் கூட்டம். அந்தக் கூட்டத்தைக் கற்பனை செய்து பார்க்கும்போதே குழந்தைவேலின் மனத்தில் ஒரு



முக்கியமான ஜீவாதாரமான சந்தேகம் உதித்தது. இத்தனை மக்களும் தன்னுடைய பம்பையைக் கேட்பதற்கு வருகிறார்களா அல்லது தன்னுடைய மனைவி குதிரையைப்போல் வேஷம் கட்டிப் பொய்க்காலிலே நின்று ஆடுவதைப் பார்ப்பதற்காக வருகிறார்களா? அவர்கள் கூட்டமாக நின்று அனுபவிப்பது தன்னுடைய மனைவியின் கலையையா? மக்கள் கூட்டம் மரத்தினாலான அந்தப் பொய்யான காலை - மரக்கட்டையை - ரசிக்கிறதா அல்லது ஜீவன் துடிதுடிக்கிற தன்னுடைய பம்பையின் மரக் கோல்களையா?

குழந்தைவேலு அறையினுள்ளே புரண்டு புரண்டு படுத்துக்கொண்டே தன்னுடைய மனக் குதிரையை இப்படி எல்லாம் ஆடும்படி விட்டான்!

சூரியன் உதயமாயிற்று. அம்மன் கோயில் கொடைக்கு வந்திருந்த



# இவனே மனிதன்!

சந்தக் கவிமாமணி
தமிழழகன்

உணர்ச்சிகளின் பிண்டம்
உல்லாசப் பண்டம்
புணர்ச்சிகொள எதிர்பால்
பூனைஎன மண்டும்.

பழக்கங்களின் சொந்தம்
பகுத்தறிவில் மந்தம்
வழக்கங்களை மீறி
வரமுடியாப் பந்தம்

சுயநலம்கொள் வேகம்
சுருட்டுவதில் மோகம்
அயல்நலங்கள் மிதித்தே
அறிவுரை சொல் விவேகம்.

சமயங்களில் மோதும்
சந்தர்ப்பங்கொள் வாதம்
இமயங்கள்போல் நடிக்கும்
எண்ணங்களே மீதம்!

போலிகளின் கூட்டம்
பொய்ம்மைகளில் நாட்டம்
கூலிகொளும் துடிப்பால்
கொள்கைவிட்டும் ஓட்டம்

# இதழ்மலர்

அந்திமங்கும் நேரத்திலே
ஆற்றங்கரை ஓரத்திலே
வந்தவன்என் மேலேகண்ணைப் போட்டான் உன்
வெல்லஇதழ் தாஎனவும் கேட்டான்!

போதுமென நான்எட்டிப்
போய்நின்றேன் கைகொட்டி
ஏதிது புதுப்பழக்கம் என்றான் ஒரே
எட்டினில்என் முன்னேவந்து நின்றான்!

திருவாரூர்த் தேர்போலே
தெரிகிறதாம் பார்வையிலே
திருவிழாவைக் காணவாஎன் றழைத்தான் என்
தோளில்சின்ன மீசையினை இழைத்தான்!

அவன்மார்பில் முகம்புதைத்தேன்
ஆசையொடும் இழுத்தணைத்தான்
எவன்வந்தால் என்னேடி என்றே என்
இதழினைப்பல் படாமல் தின்றான் நன்றே!

பட்டுக்கோட்டை இராசேந்திரன்

# மனம் தா தவபாலா

கலைமாமணி திருச்சி பாரதன்

பிறந்த இடமோ மிகச் சிறிது
பேசித் தவழ்ந்ததும் மிகச்சிறிது
உறங்கும் கணமும் மிகச்சிறிது
உலகம் அடடா! மிகப்பெரிது!

நிறைந்த உலகை விழிகாணும்
நேர்த்தி வளைத்தும் நமதுரிமை
மறந்தே அழிதல் அகன்றிடவே
மனம் தா பழனித் தவபாலா!



மக்கள் கூட்டம் எல்லாம் விடியுமுன் ஏரலை விட்டு ஏகிவிட்டது! மழை பெய்து ஓய்ந்தது போன்ற ஓர் அமைதி ஏரல் ஊரிலே நிலவி நின்றது. வேலாயுதப் புலவர் தம்முடைய மகளைக் கூட்டிக்கொண்டு அந்த அமைதியான நேரத்திலே தம்முடைய ஊருக்குப் புறப்பட்டுவிட்டார்!

கண்ணைக் கசக்கிக் கொண்டே கரகக்காரரும் பம்பைக்காரரும் ஒருவரையொருவர் பார்த்தார்கள். இரவு முழுதும் இதய அரங்கிலே கூத்தாடிய மனப்புரவி இப்பொழுது ஆடி ஓடி அமர்ந்துவிட்டது. கரகத்துக்கும் பம்பைக்கும் நடுவிலே ஆட்டமிட்ட மரக்கால்கள் இப்பொழுது அங்கில்லை.

"தம்பீ!" என்றான் கந்தையா.

"அண்ணே!" என்று அன்பாகக் கூப்பிட்டான் குழந்தைவேலு.

"ராத்திரி ஆட்டம் எப்படி?" என்று கேட்டான் கந்தையா.

"எந்த ஆட்டத்தைக் கேக்கிறீங்க? பொய்க்காலைத்தானே?" என்றான் குழந்தைவேலு.

"பொய்க்காலுதான். ஆனா அது ஆடும்போது நிசக்காலு மாதிரியே தானே இருந்தது!" என்றான் கந்தையா மயக்கம் தெளிந்து கொண்டே.

"அது நிசந்தான் அண்ணே! என்றைக்குமே பொய்க் குதிரை நிசக் குதிரையைவிட நிசமாத்தான் தோணும்!" என்று சொல்லிச் சிரித்தான் குழந்தைவேலு.

"குதிரையிலே என்ன இருக்குது தம்பி! நாம்பளாப் பண்ணிக்கிடுறோம் கற்பனை! அவ்வளவுதான்! குதிரை என்னத்தைக் கண்டுது! அது பாட்டுக்கு அது ஆடுச்சு! நாம்ப பாட்டுக்கு நாம்ப ஆடிப்புட்டோம். யோசிச்சுப் பாத்தா மனுசனைப்போல ஒரு பொய்க்கால் குதிரை வேறு எதுவும் இல்லை தம்பீ!" என்று தெளிவோடு பேசினான் கந்தையா. அந்தத் தெளிவான சூழ்நிலையிலே அம்மன் கோயில் பூசாரி ஞானக் கும்மியைப் பாடிக்கொண்டே கோயில் பிரசாதத்தோடு கலைஞர்களை வழி அனுப்ப மாடி வீட்டுக்கே வந்து சேர்ந்தார். அவர் பாடிய ஞானக் கும்மி என்றோ ஒரு சித்தர் இவர்களுக் காகவே பாடி வைத்துவிட்டுப் போன ஒரு மகத்தான ஞான உபதேசம் போல் ஒலித்தது.

"குதிரை கட்டிய லாயத்திலே – மனக்
கோட்டையிலே சந்தைப் பேட்டையிலே
எதிரி தான் வந்து தட்டுகிறான் – அதை
ஏதென்று கேடி ஞானப் பெண்ணே!"

இவ்வாறு பாடினார் பூசாரி, திருநீற்றைக் கொடுத்துக் கொண்டே! ⁂

# பாதரசம்

## சுஜாதா

அதை கோகுலாஷ்டமி என்றோ கிருஷ்ண ஜெயந்தி என்றோ சொல்ல மாட்டோம். சீசந்தி!

சீரங்கத்தில் ஒவ்வொரு பண்டிகைக்கும் தனி அடையாளம், பெயர் உண்டு. தீபாவளிக்கு மொட்டை மாடியில் உலரும் ஓலைப்பட்டாசு அடையாளம்.

கார்த்திகைக்கு அகல்விளக்கும் சொக்கப் பானையும்.

பொங்கலுக்கு சோனி மாடுகளின் கொம்பில் வர்ணம்.

வைகுண்ட ஏகாதசிக்கு பட்டாணிக் கடலை, கிழக்கு வாசலில் கொக்கோகப் புத்தகங்கள், பாம்பு உடல்-மனித தலைப் பெண் எக்ஸிபிஷன் எனப் பல அடையாளங்கள்.

சித்திரைத் தேருக்குத் தண்ணீர்ப் பந்தல், கோவிந்தாக் கூட்டம், நீர்மோர்.

அதுபோல் கிருஷ்ண ஜயந்திக்கு நாவற்பழமும் சப்பரமும்.

அயோடின் நிறத்தில் கரு நீலக் குப்பல்களாக சாப்பிட்டதும் நெஞ்சை அடைத்து நாக்கில் சாயம் ஏற்றும் நாவற்பழம், அப்புறம் சப்பரத்தைப் பற்றி விரிவாக இந்தக் கதை.

கிருஷ்ணர் பிறந்த யமுனை வெள்ள நந்தகோகுல ஸ்தல மாற்றக் கதையெல்லாம் எங்களுக்கு லேசாகத்தான் பயிற்சி.

ஆனால் கிருஷ்ணர் பிறந்த தினமாகிய சீசந்திக்கு சப்பரம் கட்ட வேண்டியது வருஷாந்திர சந்தோஷ எதிர்பார்ப்பு. தெருப் பசங்களின் முக்கிய கவர்ச்சி, சப்பரம் கட்டி அதில் ஒரு கிருஷ்ணர் விக்கிரகத்தை வைத்து ஒரு சுற்று வீதிவலம் இரவில் எடுத்துச் செல்ல வேண்டும். சிறிசும் பெரிசுமாக நண்டும் சிண்டுமாக பூஜை மணியும் சங்குமாக அகல்விளக்கும் குழல் விளக்குமாக ஊர்வலங்கள் பின்னிரவு வரை செல்லும்.

பண்டிகைக்கு ஒருவாரம் முன்பே சாமக்கிரியைகளைச் சேர்க்க ஆரம்பித்து விடுவோம். பாட்டி நல்ல பாட்டி. வீடுவீடாகப் போய் முதலில் விளக்குக்கு எண்ணெய் சேர்க்க அனுமதிப்பாள்.

"எண்ணை வாத்தா எண்ணை

இல்லாட்டா தொண்ணை (பொம்மை என்றும் பாடம்)

தாச்சி வார்த்தா தாச்சி

இல்லாட்டா பீச்சி".

(கடைசி இரண்டு வரிகளின் அர்த்தம் தெரியாது). ஒவ்வொரு வீடாகப் போய் இவ்வாறு கேட்க சிலவீடுகளில் எண்ணெய் ஊற்றுவார்கள். பெரும்பாலும் கூட்டெண்ணெய். சில வீடுகளில் துரத்தி விடுவார்கள். துரத்தப்பட்ட சிறுவர்கள் கோஷ்டியாக ஓஓஓஓ என்று கத்திகொண்டு வெளியே ஓடி வந்து விடுவோம். யாரையும் திட்டமாட்டோம். திட்டலில்லாத. கிரிக்கெட் இல்லாத மாதம் அது. கொஞ்சம் மழை பெய்யும். மேற்கே மான்சுனின் லேசான விளைவாக குழந்தைத்



தூறல் போடும். அது மென்காற்றிலேயே திரைபோல் அசையும் உபத்திரவமில்லாத பயனிலாத் தூறல்.

கடைக்குப் போய் சப்பரம் கட்ட, மற்ற சாமான்களை வாங்க "சீசந்திக்குக் காசு" என்று ஒரு ப்ளேயர்ஸ் சிகரெட் டப்பாவில் உண்டியல் பண்ணி அதை போட்டுக் குலுக்கிப் போவோர் வருவோரை வழிமறித்துக் காசு சேர்ப்போம். சாமி காசாதலால் லேக்கா உருண்டையோ, ஜவ்வு மிட்டாயோ வாங்காமல் பக்தி சிரத்தையாகச் சேர்த்து வைத்து சப்பரத்துக் குண்டான ரசகுண்டு, ஜிகினா பேப்பர் போன்ற அலங்கார வஸ்துக்கள் வாங்கி சப்பர வேலையை சீசந்திக்கு முதல் நாள் துவங்குவோம்.

அந்த நாளின் வாசனை இத்தனை வருஷமாகியும் எனக்கு மறக்கவில்லை. வெல்லச்சீடை போன்ற பட்சணங்களின் நெய் கலந்த சர்க்கரை தீய்ந்த வாசனை. பிடிக்காததுபோல் பிடிக்கிற கோந்துவாசனை. புதுக் காகிதத்தின் ரசாயன வாசனை. குங்கிலியம் சாம்பிராணி வாசனை. சுள்ளாணி சுத்தியல் இவையெல்லாம் கொண்டு வந்து ஒரு நாலுகால் ஸ்டூலைக் கவிழ்த்துப் போட்டு நானா பக்கத்தில் மூன்று பக்கத்தில் காலண்டர் அட்டை வைத்து ஆணியடித்து மூடி உள்ளே விளக்குப் பொருத்தி ரசகுண்டு தொங்கவிட்டு அப்பு என்கிற எலக்ட்ரிகல் விற்பன்னன் டார்ச் லைட்டிலிருந்து முட்டை பல்பை நீக்கி அதற்கு எவரெடி இணைப்புக் கொடுத்து சிறிது வெளிச்சம் உண்டாக்குவான். என் வேலை கத்திரி வேலை. கிளேஸ் காகிதத்தைப் பதினாறாக மடித்து அதில் அரை வெட்டுகள் போட்டு நீட்டவாக்கில் பிரிக்கும்போது விரியும் தோரணம் செய்வது ஒன்றுதான் எனக்கு உருப்படியாகத் தெரியும். அப்புறம் பேரிக்காய், வெண்ணெய் போன்றவை திரட்டுவேன்.

அந்தக்கடைசி சீசந்தியில் இரண்டு சமாசாரங்கள் புதிதாக வந்தன.

ஒன்று பாதரசம், மற்றொன்று பம்பாய் மாலினி வரவு.

வரதன் கெமிஸ்ட்ரி லாபிலிருந்து கொஞ்சம் பாதரசம் திருடி வந்து அதை வைத்து ஒருமாதிரி கலர் தொப்பிப் பண்ணி அது தரையில் வைத்தால் உயிர்பெற்று கொஞ்ச நேரம் ஆடுவது மற்ற எல்லாருக்கும் வியப்பளித்தது. அன்றைய வருஷ சீசந்தி எங்கள் சப்பரத்தில் ஸ்பெஷாலிட்டி. அதைப்பற்றி கீழச்சித்திரை வீதியே பேசப்போகிறது என்று எதிர்பார்த்தோம்.

பம்பாய் மாலினி சற்றும் எதிர்பாராமல்தான் வந்திருந்தாள்.





காலையில் நான் எழுந்து வந்ததும் கூடத்தில் புதிய குரல் கேட்டது. சற்றே மூக்கடைத்த குரல். அந்த நாட்களில் எல்லா பெண்குரல்களுமே எங்களுக்கு மோகனக் குரல். என்னைப் பார்த்து புன்னகைத்து "வாடா! நீதானே ரங்கு?" என்றாள். எனக்கு பிரமிப்பு ஏற்பட என் தலையைத் தடவிக்கொடுத்தாள்.

தன்னுடன் சேர்த்து அணைத்துக் கொண்டாள். எனக்கு உள்ளுக்குள் கின்னரர்கள் ஒலித்தனர்.

"பாட்டி! இது யாரு?"

"நம்ம மாலு தெரியாது? தொரசாமி மாமா பொண்ணுடா பம்பாயிலிருந்து வந்திருக்கா சீசந்திக்கு".

நாங்கள் கட்டும் சப்பரத்தைப் பார்த்து "சப்பரம் கட்டறிங்களா" என்று அதற்கு உதவுவதாக வாக்களித்தாள்.

பம்பாய் மாலு கல்யாணத்தின் வாசற்படியில் இருந்தாள். அவளோடு உடனே எனக்குக் காதல் பிறந்தது. விரைவாக ஓடி விரைவாகப் பல்தேய்த்து சர்க்கரைகூட இல்லாமல் பால் குடித்து விட்டுத் தலையைத் தள்ளி வாரிக்கொண்டு வந்து விட்டேன். அதற்குள் மற்ற தெருப் பையன்கள் மாலுவைச் சூழ்ந்து கொண்டுவிட அவள் கத்தரித் திறமையாக டிஸைன் கட் பண்ணி அலங்காரங்களில் இதுவரை இராத பம்பாய் நாசூக்கைக் கொண்டு வந்தாள்.

வரதன் அவளுக்காக ஓடி ஓடி வேலை செய்தது 'அவள் எல்லோர் தலையையும் தடவிக் கொடுப்பது' எனக்குப் பிடிக்கவில்லை. அவள் எனக்குத்தான் உறவுக்காரி என்பதை வலியுறுத்த அருகில் போய் ஒட்டிக் கொண்டேன். வரதன் என்னைப் பொறாமையுடன் பார்த்தான்.

அவள் கண்களை நான் இன்னும் மறக்கவில்லை. இயற்கையான கருமை படர்ந்து கேலியில்லாமல் சிரிக்கும் கண்கள். அதேபோல அவள் கையில் போட்டிருந்த நெளி மோதிரம், அதில் பதித்திருந்த ஒற்றை வைரம். அடிக்கடி 'காட்டு காட்டு' என்று சொல்லி அவள் உள்ளங்கையை வாங்கிக்கொண்டு தொட்டுப் பார்க்க சந்தர்ப்பம் தந்த மோதிரம்.

அந்த நாள்களில் எனக்கு எழுத்து திறமை சிவிக்ஸ் பரீட்சையில் குப்பைத் தொட்டிகளால் என்ன பயன், மகாத்மா காந்தி யார், அவர் நம் நாட்டுக்கு என்ன செய்தார் போன்ற விஷயங்களில் விரயமாகியிராவிடில் ஒரு முழுநேர நாவலே எழுதியிருப்பேன். எனக்கும் மாலினிக்கும் ஏற்பட்ட அந்த அதைக் காதல் என்று சொல்வது தப்பாகக்கூட இருக்கலாம். ஏதோ ஒரு தல்.

சில தவிர்க்க முடியாத காரணங்கள் தவிர மற்ற எப்போதும் அவள் பின்னாலேயே அலைந்தேன். மொட்டை மாடிக்குப் போனால் மொட்டை மாடி. கடைக்குப் போனால் கடை. அவள் சிரித்தால் சிரிப்பு. அவள் படுத்துக் கொண்டால் அருகே நானும்.

"என்னடி இப்படி ஒட்டிக்கிறது இது உன்னோட?" என்று பாட்டி சொன்னதில், "பாட்டி, உனக்குத் தெரியாது. எங்க ரெண்டு பேருக்கும் ப்ரத்யேகமான ஜென்மஜென்ம பிணைப்பு" என்று சொல்ல முடியாமல் வார்த்தையின்றித் தவித்தேன். ஆனால் அவள் சீசந்திக்கு இருந்து

விட்டுத் திரும்பி பம்பாய் போகுமுன் என் உள்ளக்கிடக்கையை சொல்லத் தான் போவது பற்றி எனக்கு எள்ளளவும் சந்தேகம் இருக்க வில்லை. சந்தர்ப்பத்துக்குக் காத்திருந் தேன்.

சீசந்தி சப்பரம் அலங்காரம் எல் லாம் இரண்டாம் பட்சமாகி விட்டது. அலங்காரியைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருப்பதுதான் என் வாழ்க்கையில் முதல் குறிக்கோளாக, அடுத்தமுறை எப்போது வேலையி லிருந்து கவனம் நீங்கி என்னை விநோதமாகப் பார்த்து அந்த விசேஷ சலுகைப் புன்னகையை உதிர்த்து என் தலையை ஒருமுறை கலைப்பாள் என்பதற்காகவே வாழ்ந்தேன். சப் பரம் மெல்ல மெல்ல உருவானது. சப்பரத்தில் வைக்க சின்னதாக கிருஷ்ண விக்கிரகம் தேடினோம். படமா, பொம்மையா என்று விவாதம் நடந்தது.

வரது, சின்னராஜு போன்றோர் கடுமையாக விவாதித்தார்கள். எனக்குப் பொருட்டாக இல்லை. மாலினி அத்தனை அழகானவளா என்று இப்போது யோசிக்க முடிய வில்லை. அந்த வயதில் உலகில் பலபேர் எனக்கு அழகாக இருந் தார்கள். டி.ஆர். ராஜகுமாரி, மாதுரி தேவி, கருப்பாக நீர் எடுக்க வரும் கண்ணம்மா, நாகலட்சுமி என்று எல்லாம் மாலுவைப் பார்க்கிற வரை தான்.

அவள் வந்து, அவளைப் பார்த்த தும் என் மனதில் அழகைப் பற்றி இருந்த எல்லாக் குழப்பங்களும் தீர்ந்துவிட்டன. மாலினி அப்பேற் பட்டவள். எங்கள் சீசந்தி டீமில் எல்லோரும் அவளுக்கு ஏதாவது செய்யக் காத்திருந்தார்கள். பேப்பர் மடித்துக் கொடுக்க, அவளுக்கு நாவற் பழம் கொடுக்க, துணி துவைக்க, உலர்த்த எல்லோரும் காத்திருந் தோம்.

"ரங்கு உன்னை பாட்டி கூப் பிடறா" என்பது சாதாரண வார்த்தை களாக இருந்தாலும் மாலு என்னுடன் பேசுகிறாள் என்பதே பெருமையாக இருந்தது.

"ரங்கு நீ பெரியவனானப்புறம் என்ன பண்ண போறே?" என்று ஒரு தடவை கேட்டாள்.

சட்டென்று கேட்ட கேள்விக்கு நான் தயாராக இல்லை.

"வந்து வந்து பெரியவனானப்புறம் நான் வக்கீலாவேன்" என்றேன்.

எதற்கோ அப்படி சொன்னேன். பைத்தியம் நான்.

"எனக்கு வக்கீல்னா பிடிக்காது!"

"உனக்கு என்ன பிடிக்கும்".

"ரைட்டர்".

"ஸ்கூல்ல ரைட்டர் மாமா இருக் காரே துரைராஜுன்னு அந்த வேலையா?".

அவள் கலகலவென்று சிரித்தாள். "ரைட்டர்னா தெரியாது? எழுத் தாளர்.''

"நோட்ஸ் எல்லாம் போடறாரே அவரா?"

"அய்யோ" என்று தலையி லடித்துக் கொண்டாள். எனக்கு அழவேண்டும் போல இருந்தது.

ஒருமுறை "எப்பப் பார்த்தாலும் என்னைவிட்டு ஓர் இன்ச் நகர மாட்டேங்கறியே எப்பவாவது ஸ்கூல் பாடம் படிக்கவேண்டாமா ரங்கு?"

"எல்லாம் படிச்சாச்சு".

"எங்கே உன் பாடபுத்தகமெல் லாம் கொண்டுவா!"

போச்சுரா! "என்ன பாடம்" என்றேன் ஈனஸ்வரத்துடன்.

"தமிழ், சிவிக்ஸ் எதுவேனா".

எனக்குக் கொஞ்சம் உதறல் எடுத்து தமிழ் பாடபுத்தகத்தை, எடுத்து வந்தேன். அது காது மடிந்து அடித்த எலிபோல இருந்தது.

"இப்படியா வெச்சுப்பா புத்த கத்தையெல்லாம்? பம்பாய்ல பாலாஜியோட தம்பி இருக்கான். புதுசா வெச்சுப்பான், அட்டை போட்டு, பேர் எழுதி பைண்டு பண்ணி".

அப்போதே தீர்மானித்து விட் டேன்.

'எங்கே சொல்லு பார்க்கலாம் 'அரும்பொனே மணியே'.

"இது இன்னும் நடத்தலை"

"பின்ன எதுதான் நடத்திருக்கா? திருக்குறளா? அழுக்காறு அத்யாயம் எல்லாம் நடத்திருக்காளா?''

"நான் அப்புறம் வரேன். பாட்டி ரவை வாங்கிண்டு வரச் சொன்னா".

புரிந்தவள் போல அவள் சிரிக்க ராத்திரியே வள்ளலார், தாயுமானவர்

## காலமங்கை

நா.சீ.வரதராஜன்



கால மென்னும் கோல மங்கை
காவியங்கள் செய்கிறாள்
ஞால மீதில் புதிய அழகை
நாளும் பொழுதும் நெய்கிறாள்.

பகலெ லாம்தீப் பந்தின் ஆட்டம்
பயிலு வாள் வான் தெருவிலே!
நிகரி லாமல் வளர்ந்து தேயும்
நிலவின் ஆட்டம் இரவிலே!

பருவ மாற்றத் திரை விரிப்பாள்
பரவ சத்தின் ஆட்சியாய்!
அருவி, வீழ்ச்சி, நெளியும் ஓடை,
ஆறு மேவும் காட்சியாய்!



கூடுகின்ற வயதினா லே
குறை வுறாத இளமையாள்!
வாடு கின்ற நிலையிலாது
வளரு கின்ற வளமை யாள்!

கால மென்னும் கோலமங்கை
காட்சி மாற்றம் செய்கிறாள்!
ஞால மீதில் நெஞ்சை யள்ளும்
நவ ரசங்கள் பெய்கிறாள்!

எல்லாரையும் நெட்டுருப் போட்டு விடுவது என்று தீர்மானித்து விட்டேன்.

*சீசந்தியன்று ராத்திரி கல்யாண சுந்தரம் வந்திருந்தார். அவர் பாட்டிக்குத் தூரத்து உறவு. மிராஸ்தாரர். ரொம்பப் பணக்காரர். அவர் எங்கள் சப்பரத்தைப் பார்த்து "இது என்ன எலி வலை மாதிரி. ஒரு சப்பரம் நன்னா விஸ்தாரமா பெரிசா ஒண்ணு பண்ண வேண்டாமா? நாமள்ளாம் என்ன குடும்பம்?" என்று அங்கலாய்த்தார். மாலுவை அணைத்துக்கொண்டு ரொம்ப விசாரித்தார். அந்த மாமாவை எனக்குப் பிடிக்கவே இல்லை.

நாங்கள் சப்பரத்தை சித்திரை வீதியில் ஊர்வலமாக எடுத்துச் செல்ல தகர டின்னில் டமாரங்களைத் தயார் செய்து கொண்டிருந்தபோது கல்யாண சுந்தரம் சாத்தார வீதியிலிருந்து ஒரு பெரிய பூப்பல்லக்கே ஆர்டர் செய்து நான்கைந்து பெட்ரோமாக்ஸ் விளக்குகளும் பல்லக்குத் தூக்கிகளும் நாராயணன் நாமமுமாக வந்து இறங்கி விட்டார்கள். எங்கள் துக்குணியூண்டு சப்பரத்தைப் பல்லக்கின் ஒரு ஓஓரத்தில் வைத்து விட்டு கூடத்தில் மாட்டியிருந்த பஞ்சு மிட்டாய் கலர் ஜிகினா தைத்திருந்த தஞ்சாவூர் கிருஷ்ணன் படத்தை நடு நாயகமாக வைத்து ஜாம்ஜாமென்று சித்திரை வீதியே வியக்கும்படி ஊர்கோலம் சென்றது... எல்லாம் கல்யாண சுந்தரம் மாமா மாலினியை இம்ப்ரெஸ் பண்ணுவதற்காக என்பது அப்போது தெரியவில்லை.

பெரியவர்கள் எங்கள் சின்ன சப்பர விளையாட்டை அபகரித்துக் கொண்டு விட மிக வேகமான ஊர்வலத்தில் ஒட்ட நடையாகத் தொடர்ந்து செல்லும்போது ஒரே ஒரு சந்தோஷம் மாலு ரொம்ப உற்சாகமாக என் கையைப் பிடித்துக் கொண்டு பல்லக்கின் பின்னால் போனது. மறுநாள் மாலு பம்பாய் போக தயார் செய்து கொண்டிருந்தபோது நான் சொல்லிவிட்டேன்!

என்னையே பார்த்தாள். "உனக்கு என்ன வயசு ரங்கு?"

"பதினொண்ணு".

"எனக்கு என்ன வயசு தெரியுமா? இருவத்து ஒண்ணு".

"கொஞ்சம் வருஷம் கழிச்சுக் கல்யாணம் பண்ணிக்கலாம்" என்றேன்.

அவள் சிரித்தாள். "சிலவேலைல இருபத்தோரு வயசான மாதிரி தான் பண்றே நீ. இருந்தாலும் ரங்கு உன்னை எனக்குப் பிடிச்சிருக்கு. [illegible] கேட்டது பிடிச்சிருக்கு. "பிடிச்சிருக்கிறதால எல்லாரும் கல்யாணம் பண்ணிக்க முடியாது. அதுக்குன்னு சில விதிகள்லாம் இருக்கு. முதல் விதி வயசு இப்படி தலைகீழா இருக்கக்கூடாது.

"உனக்கு இருபத்தோரு வயசாகி எனக்குப் பதினொண்ணுன்னாலே தப்பு. இது அதைவிடத் தப்பு! இதுக்கெல்லாம் அனுமதி இல்லை. நீ எதையோ ஓர் உணர்ச்சிய வேற எதோன்னு தப்பாப் புரிஞ்சுண்டிருக்கே. நான் சொல்றது உனக்குக் கொஞ்சம் கஷ்டமாத்தான் இருக்கும். ஆனா பிற்காலத்தில் இதை யோசிக்கறப்ப உனக்குச் சிரிப்பா வரும். நாம் இப்படி ஒரு கேள்வி கேட்டமான்னு. உனக்குக் கல்யாணம் ஆகி பெண்டாட்டி வந்தப்றம் அவகிட்ட சொல்லு. என்ன?"

"அழாத" என்று சொல்லிவிட்டுப் புடைவைத் தலைப்பால் என் கண்ணீரைத் துடைத்தாள். "ராத்திரி யாரும் இல்லாதப்ப மாடிக்கு வா. உனக்கு ஒண்ணு காட்டறேன்" என்றாள்.

எனக்கு உள்ளமெல்லாமல் பதறியது. ஆனால் அந்தச் சந்தர்ப்பம் வரவே இல்லை. மத்யானம் பாட்டி "மாலு என்னமோ அழறா போய்ப் பாருடா. கடன்காரன் என்னத்தையோ பாதரசத்தை கொண்டு வந்துட்டு... உன்னோட ரோதனப்பா!"

நான் பதறிப் போய் உள்ளே சென்றபோது மாலு தன் உள்ளங்கையைப் பார்த்து கொண்டு அழுது கொண்டிருந்தாள்.



அவள் சப்பரத்தை எடுத்து வைக்கும்போது பாதரசம் சிந்திப் போய் மோதிரத்தில் பட்டு மோதிரம் கன்னங்கரேல் என்று ஆகிவிட்டது!

"அய்யோ ரங்கு மோதிரம் போச்சே. இப்ப இதைப் பார்த்தா பாலாஜி கொன்னுடுவாரே. கடன் காரா இந்த மாதிரி தங்கத்திலபடக் கூடாதுன்னு சொல்ல மாட்டியோ!

"இப்ப என்ன பண்ணுவேன்? பாலாஜிக்கு எப்படி பதில் சொல் வேன்" என்று அழுதாள். என்னை நிமிர்ந்து பார்க்கவே இல்லை.

பாட்டியுடன் கோரதமுட்டி தங்கப் பட்டறைக்குப் போய் கோவிந்த சாமியை அழைத்து வரச் சென்ற போது "பாலாஜி யாரு?" என்றேன்.

"அதான் அவ மாமா புள்ள. அவளைக் கல்யாணம் பண்ணிக்கப் போறான். அவன் போட்ட மோதிரம் தான் அது!

அச்சானியமா அதில போய் பாதரசம் விழுந்துட்டுதுன்னு அவாத் தில தெரிஞ்சா ரொம்ப கோவிச் சுப்பா.

அவாள்ளாம் ரொம்ப சகுனம் பார்க்கறவா..." பாட்டி மேலே சொன்னது கேட்காமல் எனக்குள் ஆயிரம் மின்னல்கள் வெட்டின.

கோவிந்தசாமி வந்து மோதிரத்தைப் பார்த்து, "எல்லாம் சரியாப் போய்டும். ஒருமுறை காச்சி ஊதி கொடுத்துர்றேன். நல்ல வேளை வைரத்தில படலை".

"எல்லாம் இவனால வந்தது" என்று என்னை முறைத்தாள் கண்களில் வெறுப்புடன். "மாலு நீ பாலாஜியைப் பற்றி முன்னாலேயே சொல்லிருக்கணும் இல்லையா!" என்று நான் அவளைக் கேட்க வில்லை.

மாலுவா. அத்தனை கோபமா அவளுக்கு என ஆச்சரியமாக இருந்தது. அதன்பின் அவள் ஊருக்குப் போகும் வரை என்னுடன் பேசவே இல்லை.

அதுதான் கடைசி சீசந்தி. கல்யாணசுந்தரம் எங்க வீட்டில் புகுந்து கொண்டு ஒரு சுவீகாரகேஸில் குடும்ப விரோதம் வந்து பிரிந்து சொத்து அழிந்து பல மாற்றங்கள் நிகழ்ந்து விட்டன. மாலுவின் கல்யாணத்துக்கு அவர்கள் பம்பாய் போயிருந்தபோது நான் வீடு மாற்றப் பட்டு பாட்டி மாற்றப்பட்டேன்.

இந்தப் பாட்டிரொம்ப 'ஸ்டிரிக்ட்'. அடுத்த வருஷம் சீசந்தி வந்தபோது "சீசந்தியாவது சப்பரமாவது போய் படிடா! பாடப் புத்தகத்தப் படிக் கிறதுக்கில்லாம வீதிவீதியா எண்ணெய் வாத்தா எண்ணென்னு திருதண்டி சந்நியாசி மாதிரி கண்ட கண்ட தெருப்பசங்களோட கத்துவியா போக் கணங்கெட்டவனே" என்று பாட்டி தடை செய்துவிட்டாள்.

இத்தனை வருஷம் கழித்தும் அந்த உணர்ச்சியை இனம் கண்டு கொள்ள பிரயத்தனப்படவில்லை! ஆனால் ஸ்டெல்லாவிடம் அதை நான் ஒரு சமயம் சொன்னபோது புன்னகைத்து "காஃப் லவ்" என்றாள். வயது வந்தவர்கள் வார்த்தைகளைப் பயன்படுத்தி அதன் கவிதையைக் கெடுக்க விரும்பவில்லை.

ஆனால் அதன்பின் மாலு எங்கே இருக்கிறாள் என்று நான் விசாரித்ததே இல்லை. அவளைப் பார்க்கவும் முயற்சிக்கவில்லை. தங்கத்தில் பாதரசம் பட்ட அந்தக் காலத்திலிருந்து அவள் எனக்கு வேற்று மனுஷி ஆகிவிட்டாள்.



# டீச்சரும் மாமரமும்

## ராஜம் கிருஷ்ணன்

சொர்ணமணி டீச்சர் வீட்டு மாமரத்துக்காய் என்றால், அதற்குத் தனி மதிப்பு. காய் ஒவ்வொன்றும் அரை கிலோ முக்கால் கிலோ நிறை இருக்கும். ஊறுகாய் போட்டால் ஊரையே தூக்க மணக்கும். பழமோ மல்கோவா தோற்றுப் போகும். டீச்சருக்கு அந்த மாமரம் செல்லக் குழந்தை; உற்ற தோழி; பெருமைப் படும் சொத்து; அவருடைய வாழ்க்கையில் விழுந்த மேடு பள்ளங்களை அவ்வப்போது இட்டு நிரப்பும் கற்பகத்தரு. பொழியலூர் துவக்கப் பள்ளியின் ஆசிரியையாக அவளும் நாகலிங்கத்தைக் கட்டி, அந்த மூன்றைக் குடிசையில் நுழைந்து பதினாறு ஆண்டுகளாகிவிட்டன. அப்போது இந்த மரம் பூக்காத குமரியாகப் பசிய இலைகள் குலுங்க நின்றது. நாகுவின் அம்மா பள்ளியில் சத்துணவு ஆயாவாக இருந்தாள். குடிகாரப் புருசனிடம் அடிபட்டு உதைபட்டு நலிந்த உடம்பு. ஒருநாள் அரிசி மூட்டை கொண்டு வந்தபோது இனித் தாளாது என்று காய்ந்து விட்டது.

பல்லாவரம் பஜாரில் ஒரு பம்ப் செட் கடையில் தேர்ந்த தொழிலாளியாக இருந்த நாகுவுக்குச் சேதி சொல்ல அவளே ஓடினாள். இந்த இளம் டீச்சரின் மீது அளவுகடந்த விசுவாசம் அந்த ஆயாவுக்கு. கண்ணை மூடுமுன் மகனுக்கு இவளே ஆதரவு என்று சேர்த்துவிட்டாள்.

புறம்போக்கு - பட்டா வீடுதான். அக்கு பிக்கு இல்லை. நாகுவோ பார்க்க சினிமாக் கதாநாயகனைப் போன்று இருந்தான். டீச்சரும், தாய் செத்து, இரண்டாந்தாரத்திடம் சிறுமைப்பட்டவள். எனவே, அந்தக் குடிலில் அவன் நுழைந்தபோது அதைச் சுவர்க்கமாகவே கருதினாள்.

தேவகியை அவள் வயிற்றில் கொண்டபோதுதான் அந்த மாமரம் முதல் பூங்கொத்தைக் காட்டியது.

"நம்ம மரம் பூத்திருக்குதுங்க".

பசுங்கதிர் போல வெளிர் மஞ்சள் மொட்டுகள்... சிறு சிறு தானிய மணிகளைப்போல்...

அவள் பார்த்துப் பார்த்துப் பரவசமடைந்தாள்.

"ஏங்க? இது என்ன ஜாதி?"

"ஏதோ ஜாதி. நீ என்ன ஜாதி?" என்றான் பதிலுக்கு.

அவளுக்குச் சுருக்கென்று தைத்தது.

அவள் சாதி - இடையர். அவன் நாயுடு. மேலான சாதி என்ற எண்ணம் உண்டு.

புதியதொரு பரவசத்தைப் பகிர்ந்து கொள்ள முடியவில்லை.

தேர்ந்த தொழில்காரன். மாசம் ஐந்நூறு அறுநூறு சம்பாதித்தான். வஞ்சகமில்லாமல் வேலை செய்தான். கடையே அவனால்தான் ஓடிற்று என லாம்.

தேவகி பிறந்தபோது, அவன் எவ்வளவு அன்பாக இருந்தான்? அரசு மருத்துவமனையில் பிரசவித்து அவள் வீடு வந்தபோது, அக்கம் பக்கம் உதவி செய்தாலும், அவன் பெற்ற தாய்போல் பேணினான். அந்த வருஷம், முதல் மாங்காய்... எட்டுக் காய்கள் தேங்காயளவு பருத்துத் தொங்கியபோது டீச்சருக்குத் தன் கண்ணே பட்டுவிடும்போல் இருந்தது.

"பிள்ளைக்குத் தண்ணீர் ஊற்ற யாரும் வரவேண்டாங்க!" என்றாள்.

முதல் காயை அவன்தான் பறித்து அரிந்து உப்பு மிளகாய் போட்டு வைத்தான். மற்ற ஏழும் பழுத்தன. ஒரு பழம் அவன் தன் முதலாளிக்குக் கொடுத்தான். ஒ பழத்தைப் பேறு பார்த்த டாக்டரம்மாவுக்குக் கொண்டு கொடுத்தார்கள். மற்ற பழங்களை ஒவ்வொன்றாக அரிந்து தின்றார்கள்.

இந்தப் பதினாறு வருஷங்களில் எத்தனை மாற்றங்கள்? நாகுவுக்கு எப்படியோ குடிப்பழக்கம் வந்து விட்டது. வீடு ஒழுகியதால் டீச்சர் 'லைட்ரூஃபிங்' என்ற சிமெந்துப் பாய்க் கூரை போட்டாள்; தளவரிசை சீராக்கினாள். வீட்டு முற்றத்தில் ஓர் அடி குழாய் ஊற்றுக் கிணறு செய்து கொண்டார்கள்.

போதும் என்றிருந்த நிலை மாறி, மேலும் மேலும் என்று பணத்தேவை அதிகமாயிற்று.

பள்ளியில் நூறுக்கு மேற்பட்ட பிஞ்சுகளைக் கட்டி மேய்த்து வீட்டிலும் 'டூசன்' என்று பத்து - இருபது 'சிறிசு'களை நெருங்க விட்டாள்.

முக்காலே மூன்று வீசமும் குடிகார அப்பன் - கூலிக்கார அம்மைகளின் வாரிசுகள்தாம். பள்ளிக்கூடத்தில் கற்காத கல்வியை 'டூசனில்' கற்றுவிடுவார்கள் என்று நம்பி அனுப்பினார்கள். இந்த டீச்சர் ஐந்து ரூபாய்க்கு 'டூசன்' எடுத்தாள். இன்னொரு டீச்சர் பத்து, பதினைந்து என்று 'ரேட்' வைத்திருந்தாள். "சொர்ணமணி, இதுங்க ஸ்கூலுக்குச் சம்பளம் கட்டறதில்ல. ஒவ்வோர் அப்பனும் குடிக்கச் செலவழிக்கல? வீட்டு வேலை செய்யப் போறவ, தலையிலே அஞ்சு ரூபா பூவைக்கல? நீ ரேட் பத்துன்னு ஏத்து" என்றுகூட இவளைக் கட்டாயப் படுத்தினாள்.

சொர்ணமணியினால் மன ஈரத்தை அப்படித் துடைக்க முடியவில்லைதான். ஆனால், நாளடைவில் அவள் தன்னையே அந்நியப்படுத்திக் கொள்ள வேண்டி இருந்தது.

மரத்துப் பக்கம் எந்தப் பிள்ளையும் செல்லாதவாறு கண்காணித்துக் கொண்டே பின்பக்கம் முற்றத்தில் 'டூசன்' எடுப்பாள்.

அப்போது லுங்கியுடன் நாகு வருவான்.

"டேய், இங்க வா, ஒரு சிகரெட் பாக்கெட் வாங்கியா" என்று விரட்டுவான்.

"காசு..." என்று அந்தப் பிஞ்சு தலையைச் சொறியும்.

"டீச்சர் கணக்கில் எழுதிக்கச் சொல்லுடா, போ; அஞ்சு நிமிசத்துல ஓடியாரணும்" என்பான்.

இந்தச் சின்னஞ்சிறுசுகள் முன் 'புருசன் - பெண்சாதி' குரல் எடுபடக் கூடாது என்று டீச்சர் அடங்கிப் போவாள்.

"ஏண்டி, மல்லிகா? தேதி எட்டாச்சி. இன்னும் டூசன் பீஸ் கொடுக்கல உங்கம்மா?"

"எங்கம்மாக்குக் காய்ச்சல், வேலைக்குப் போகல டீச்சர்..."

"அப்ப டூசன் எதுக்கு? நின்னுக்க. உனக்குச் சும்மா பாடம் எடுக்க எனக்குக் கட்டுப்படி ஆவாது. ஒரஞ்சு ரூபாக் காசு, அது குடுக்க முடியல".



"வடிவேலு இனிமே மூணாவது. பத்து ரூபா குடுக்கனும், மாசம்! பாடம் பெரிசில்லை?"

பள்ளியில் கொடுக்கும் வீட்டுப் பாடம்தான். கணக்கை எழுதிக் கொடுப்பாள். தமிழ்ப் பாடம் படிப்பார்கள்.

நம் குடும்பம் - தேசியக் கொடி போன்ற பாடங்கள்.

கூட்டல் கழித்தல் கணக்கு. பெருக்கல் - வகுத்தலில் பிள்ளைகள் தேர்ந்தாலும் தேறாவிட்டாலும், டீச்சர் வீட்டைப் பெருக்குவார்கள்.

'தேவகி' அவர்களிடையே ராஜ குமாரி.

தேவகி வளர்ந்து குமாரியாகி, ஒரு தேவதைக்குரிய வசீகரத்துடன் விளங்கினாள். அவள் பஜார் பக்கம் உயர்நிலைப் பள்ளியில் படிக்கப் போய்விட்டாள். தன்னால் எட்ட முடியாத, பி.ஏ., எம்.ஏ.பி.எட்., எம்.எட். படிகளை எட்டி, அவள் ஒரு பெரிய பள்ளித் தலைமை ஆசிரியப் பீடத்தில் அமரவேண்டும். ஓர் இன்ஜினீயர் புருஷன் வாய்க்க வேண்டும் என்ற கனவு ஊள்ளூர முளைத்து வளர்ந்து வந்தது. அதை டீச்சர் அவ்வப்போது மகளுக்கு உணர்த்தி வந்தாள்.

"அம்மா, என் ஃபிரண்ட்செல்லாம் ஜோதி தியேட்டரில் புதுப்படம் பார்க்கப் போறாங்க. நானும் போறேம்மா, ப்ளீஸ்..."

உச்சியில் மாட்டிய மல்லிகை கனகாம்பரச்சரம் குலுங்க, பவுடர் சோப் மணம் இழைய அம்மாவின் கழுத்தை வளைத்துக் கிறங்க அடிப்பாள்.

"சினிமால்லாம் வாணாண்டா, நமக்குப் படிப்புதாண்டா முக்கியம்..."

"போம்மா! நம்மூட்ல ஒரு டி.வி. கூடக் கிடையாது. வெக்கமா இருக்கு, என் ஃபிரண்ட்செல்லாம் பேசறப்ப?"

"உங்கப்பாகிட்டச் சொல்லுடா ராஜா".

"போம்மா!"

குழைந்து குழைந்து மகள் பணம் வாங்கிவிடுவாள்.

ஃபிரண்ட்ஸ்.... சொர்ணமணிக்கு என்றுமே இப்படி ஃபிரண்ட்ஸ் இருந்த அனுபவம் இல்லை. இவர்களோ, சினிமாவுக்குப் போனார்கள். புதிதாக வந்த ப்யூட்டி பார்லரில் 'ப்ளீச்' செய்து கொண்டார்கள். புருவம் வளைத்துக் கொண்டார்கள். முடி நுனியை, முன் பகுதியை சினிமாக் காரிகள் போல் வெட்டிக் கொண்டு 'ஷாம்பூ' செய்து கொண்டார்கள். புதிய புதிய மாதிரிகளில் சல்வார் கமிஸ், மாக்ஸி, மிடி என்று அணிந்தார்கள்.

சொர்ணமணி அறிந்திராத புதிய உலகங்களை, துவக்கப்பள்ளி அரசுச் சம்பளத்தில் அவள் நுழைத்து விட்டாள். டீச்சர் கடன்பட்டாள். அதை அடைக்க, தன்னிடம் சிக்கிய பிஞ்சுகளிடம் ஈவிரக்கமின்றி உறிஞ்சினாள். நாகலிங்கம், அன்றாடக் குடியனாக, வேலையும் சரியாகச் செய்யாமல், அவளிடமிருந்தே விலகிப் போனான்.

இந்த நெருக்கங்களில் டீச்சருக்கு ஒரே பகைமையாக இருந்தது அந்த மாமரம்தான்.

அது யார் எப்படிப் போனாலும் பூத்தது. தை, மாசி வந்துவிட்டால், பூரித்துப் புதுமணப்பெண் கோலம் கொள்ளும். பழைய ஒல்லிக் குமாரியா அது? இப்போது கிளைகளை நான்கு திசைகளிலும் பரப்பி, பின்புறத்து மாட்டுக் கொட்டகையிலும் ஆக்கிரமித்திருந்தது. டீச்சர் வீட்டு மரம். ஆள் ஏறிக் காய் பறிக்கும் வரை யாரும் தொடமாட்டார்கள். அது பிஞ்சுகள் விட்டு, காய்த்து, கனக்கக் கனக்க நகைகள் குலுங்க, மஞ்சட் பூச்சுடன் திகழும் பேரிளம் பெண்போல் காட்சி அளிக்கும் காலத்தில் பள்ளி மூடிவிடுவார்கள். அப்படியே வியாபாரி வந்து பறித்துச் செல்வான்.

தேவகிக்கு மட்டுமே ஊறு காய்க்குக் காய்கள் வைத்துக் கொள்வாள். பழமும் ஒரு பத்துபோல் வைத்துக் கொள்வாள். மரமோ வஞ்சனையின்றி நூற்றுக்கணக்கில் காய்த்தது.

மரத்தில் பூப்பிடித்த நாள்களில் இருந்து 'டூசனை' வாயிற்பக்கம் கொண்டு வந்துவிடுவாள் டீச்சர். எந்தப் பிஞ்சேனும் நழுவி, மாமரத்தின் பக்கம் தென்பட்டால் போதும். டீச்சரின் கழுகுப் பார்வைக்குத் தப்ப முடியாது. அன்றே 'டூசன்' சீட்டுக் கிழிக்கப்படும்.

டீச்சர் அடிக்கமாட்டாள். கீழே விழும் பிஞ்சுகளை மட்டும் எப்போதேனும் கொடுப்பாள்.

மாமரம் பூக்கும்போதே நாவில் நீர் ஊறப் பார்க்கும் பிஞ்சுகள் சிலர் இருக்கத்தான் செய்தார்கள். அபூர்வமான பயல், கிட்டினன். அவனுக்கு அப்பன் இல்லை. மூன்று அக்காள்மாரும் கல்யாணமாகிப் போனபின் சிற்றாள் வேலை செய்த தாய்க்குப் பிறந்த ஒரே 'ஆம்பிளைப்' பயல். அவனை அபூர்வமாகப் படிக்கப் போட்டு, டூசனும் வைத்திருந்தாள் அம்மை.

எப்படியேனும் மரத்தில் ஏறி ஓரிரண்டு காய்களைப் பறித்துத் தின்னும் ஆசை அவனுள் வெறியாக மிகுந்திருந்தது. அவன் படித்தது இரண்டாம் வகுப்பு.

பள்ளிக்கூடத்தில் மதிய உணவுக்கு முன் 'ஒன்று'க்கு விடும்போதே வீட்டுக்கு நழுவி விடவேண்டும். மாட்டுக் கொட்டில் சுவர் ஏறி மரத்துக்குத் தாவி விடலாம்...

அன்று கிட்டினன் மதிய உணவைத் தியாகம் செய்தான். பகல் பள்ளிக்கு வரவில்லை. மறுநாள் டூசனுக்கும் வரவில்லை.

ஆனால் டீச்சர் கண்டுபிடித்து விட்டாள். மாமரத்தடியை அவள்தான் பெருக்கி வைப்பாள். ஓர் அடி வைத்தாலும் தெரிந்துவிடும். பச்சை இலைகள் விழுந்திருந்தன. கிட்டினன் அவசரத்தில் ஒரு பசுங்கிளையை ஒடித்துப் போட்டிருந்தான்.

காலையில் இரண்டாம் வகுப்பில் அவனைக் கண்டுவிட்டாள்.

அவன் காதைப் பிடித்துக் தூக்கினாள்.

"திருட்டுப் பயலே? எத்தினி காய் பறிச்சே?"

பையன் விக்கித்துப் போனான். "ஒண்ணு... ஒண்ணுதான் டீச்சர்!"

"பொய் சொல்லாதே! முழியப் பேத்திடுவேன். ஏண்டா திருடித் திங்கச் சொல்லுமோ நாக்கு?"

கன்னத்தில் பளீரென்று அடித்தாள். "போ, வெளியே!" என்றாள்.

பள்ளி முடியும் வரை அவன் வெளியேதான் உட்கார்ந்திருந்தான்.

டீச்சருக்கும் உள்ளே பாடம் நடத்த மனமில்லை.

கன்னம் சிவக்க - விரல் தடம் தெரிய, தான் அடித்திருக்க வேண்டாம் என்று மனம் நொந்தாள். பெரியவர்களும் ஆசைப்படும் ஒரு பொருள்... ஆனாலும் திருட்டு... தப்பல்லவா?

வெளியே வந்ததும், அவனை அழைத்தாள். "நீ திருடக்கூடாது. திருடினது தப்பு. நீ இப்ப உன் சட்டையக் கழட்டிக் குடுத்திட்டு வீட்டுக்குப் போறே. உங்கம்மாவைக் கூட்டிக்கிட்டு வாற!" என்றாள்.

கிட்டினன் வரவேயில்லை.

ஒருநாள், இரண்டு நாள்...

பள்ளி மூடிவிட்டார்கள். மற்றவர்களிடம் கிட்டினனைப் பற்றி விசாரித்தாள்.

"டீச்சர், அவன் அக்கா வூட்டுக்கு ஓடிட்டானாம்..." என்று சொன்னார்கள்.

அந்த ஆண்டு மாமரம் அவளுக்குத் தொள்ளாயிரம் ரூபாய் பயன் தந்தது. ஆனால் தேவகி பத்து தேறவில்லை.

"என்னம்மா இப்படிப் பண்ணிட்டே? ட்யூட்டோரியல்ல பணம் கட்டி, கவனமாப்படி. எப்படினாலும் நல்ல மார்க்கெடுத்து பாஸ் பண்ணணும்".

"போம்மா, எனக்குப் படிப்பு வரல. ஜாப் டைலரிங் சேரப் போறேன். ஆறு மாசம் கத்திட்டா, அவங்களே எண்ணூறு ரூபா சம்பளத்துக்கு வேலைக்கு எடுத்துக்கிறாங்க! கோடம்பாக்கத்திலே அதுல சேந்து, நளினி அக்கா இப்ப டிஸைன் - மாடலிங்கில மாசம் நாலாயிரம் சம்பாதிக்கிறா. நாம சொந்தமாகத் தொழில் நடத்த பாங்க் கடன்கூடக் குடுக்கும்... டென்த், ட்வெல்த்... காலேஜ் படிச்சிட்டு வேலையில்லாம திண்டாட இதாம்மா மேலு!"



தாயைக் கரைத்துவிட்டாள். தொள்ளாயிரம் போதாமல் அவள் செலவுக்கு மேலும் கடன் வாங்க வேண்டி இருந்தது.

இவளுடைய ஆயிரத்து இருநூற்றுச் சம்பளம், புருசனின் நிரந்தரம் இல்லாத வருமானம் இரண்டையும் கொண்டு குடும்பம் என்ற ஓட்டைப் படகைச் செலுத்த முடியாத அளவுக்குத் தத்தளித்தாள்.

அந்த வருஷம் மாமரத்தின் பசிய இலைகளில் சொறி கண்டாற்போல் பின்புறம் குத்துக்குத்தாகக் கொப்புளம் வெடித்தது. சொர்ணமணி டீச்சர் பதறிப் போனாள். இந்த மரத்தின் இலைகள் பெரிது பெரிதாக அகலமாக இருக்கும். அத்தனை இலைகளும் நோவு கண்டு வாடின. பழுத்து உதிர்ந்தன.

பழக்காய் இறக்கிய பின்னரே சருகுகள் உதிர. ஆவணி புரட்டாசியில் புதிய தளிர்கள் நெருப்புக் கொழுந்து போல் தோன்றும். இப்போது...

இந்த வருஷம் ஓர் ஆயிரம் வந்தால் கடன் குழியை மேலும் பறிக்க வேண்டாம் என்று நினைத்தாளே?

இரவில் குடித்து விட்டு வந்த நாகு இருமி இருமி அமைதியைக் குலைத்தான்.

டீச்சருக்குப் புரண்டு புரண்டு படுக்கையில் கிட்டினனின் முகம் நினைவில் தோன்றியது. அந்தச் சட்டை... வெள்ளை தெரியாமல் அழுக்கேறிய தருமச் சட்டை. ஏதோ ஓர் உந்துதலில் துவைத்து வைத்திருக்கிறாள்... அந்தப் பையனுக்கு அப்படி ஒரு தண்டனை கொடுத்திருக்க வேண்டாம். சுமாராகப் படிப்பான். ஒருகால், அக்காள் ஊரில் சென்று படித்து, சில ஆண்டுகள் கழித்து, வாலிபனாக வருவானோ? இவள் சர்வீசிலேயே 'இன்ஸ்பெக்டராக' வந்து... 'டீச்சர்' என்று வணங்குவானோ? திருடக்கூடாது என்று எனக்குத் தண்டனை கொடுத்து ஆளாக்கினீர்கள் டீச்சர்" என்று பல பேரறியப் பாராட்டுவானோ?

இந்த நினைப்பு இதமாக இருந்தது.

"பிள்ளையாரப்பா, இந்த வருஷம் பூத்துக் காய்க்கட்டும். இங்கு வரும் குழந்தைகளுக்கு ஆளுக்கு ஒரு பழம் தருவேன்!" என்று நினைத்துக் கொண்டாள்.

செல்லியை வேப்பஞ்சருகு கொண்டு வரச் சொல்லி, அதை எரித்து, சாம்பலைக் கரைத்து எம்பி எம்பித் தெளித்தாள்.

அவள் முயற்சி வீண் போகவில்லை.

நோய் பிடித்த இலைகளுக்கிடையே கூழையான செம்பட்டை



முடியிலே பூவைத்து அலங்கரித்தாற் போன்று மொட்டுகள் கிளைத்தன.

மரத்தைத் தொட்டு கண்களில் ஒத்திக் கொண்டாள்.

காலம் தப்பிய மொட்டுகள் பிஞ்சாகு முன் இந்த ஆண்டு பள்ளி மூடிவிட்டார்கள்.

அன்று தேவகி கேட்டாள் :

"யம்மா, சாரு சொல்றாரு, ஃபாஷன் மாடல் டீலக்ஸ் மிசின் ஒண்ணு ரெண்டாயிரத்துக்கு விலைக்கு வருது. எடுத்துக்கன்னு. அவுங்க அமெரிக்கா போறாங்களாம். புதிசா வாங்கப் போனால் அது நாலாயிரத்துக்கு மேல ஆகும். இப்பவும் புதிசாவே இருக்கு. அவங்க மாஸ்டருக்குத் தெரிஞ்சவங்க... அது சொந்தத்துக்கு வாங்கிட்டா, ரொம்ப உபயோகமா இருக்கும்மா...

டீச்சருக்கு ஒன்றும் புரியவில்லை.

"ஏம்மா, ஆறுமாசம் படிச்சா எட்டு நூறுல வேலைன்னு சேர்ந்தே. இப்ப பத்துமாசம் - ஒருவருசம் ஆகப் போகுது. நீ என்ன படிக்கிறே,தைக்கிறன்னு தெரியல. துணி, அது இதுன்னு காசு வாங்கிட்டுப் போற. மாசம் நூறு ரூபா சம்பளம், ரயில் பாஸு, செலவு, என்னம்மா இது?"

"என்னம்மா இது, என்ன நம்ப மாட்டியா? ஆறு மாசத்துல வேலை கிடைக்குந்தா. அது ஃபாக்டரில, ஒரே தையல் போடும் ஜாப். இப்ப நானே விதவிதமா மாடல் பண்ண - டிஸைன் பண்ணப் பழகுறேன். இதுக்கு அந்த மாடல் மிசின் ரொம்ப உதவியாக இருக்கும். கிளாசிலன்னா மிசின் ரொம்ப நேரம் கிடைக்காது..."

அவள் எல்லாவற்றுக்கும் காரணம் வைத்திருந்தாள்.

"அவ சொல்றால்ல? இனியும் என்ன உனக்கு சந்தேகம்? நமக்கு இருக்கிறது ஒரு புள்ள..." என்று அப்பன் சிபாரிசு வேறு.

தன்னுடைய ஒரு மோதிரத்தை வைத்து ஆயிரத்தைந்நூறு புரட்டினாள். பிறகு நூறும் இருநூறும் கைமாற்றென்று வாங்கி, மகளுக்குக் கொடுத்தாள்.

மழைக்காலம் வருமுன் கூரை ஒக்கிட வேண்டும். பிள்ளை படித்தாலும், வேலப்ப மேஸ்திரி ஒன்றுமில்லாமல் ஒக்கிடமாட்டான்: ஏதோ நன்றாகச் செய்து கொடுப்பான்.

அதிகாலையிலேயே தேவகி சீவிச்சிங்காரித்துக் கொண்டு பணமும் கையுமாகக் கிளம்பிவிட்டாள்.

"மிசின் கொண்டுப் போட்டுட்டு நான் வார கொஞ்ச நேரமானாலும் ஆவும். அவுங்க வூடு காலி பண்றதனால அந்த வண்டியிலேயே எங்க இன்ஸ்டிட்யூட்ல கொண்டாந்து போட்டுக்கிடுவேன்..." என்று சொல்லி விட்டுப் போனாள்.

மூட்டைப் புடைவைக்காரன் தீபாவளிக்கு வாங்கிய புடைவைக் கடனை வசூல் செய்ய வந்தான்.

மாசம் இருபது ரூபாய் என்று முந்நூறு ரூபாய்ச் சேலை வாங்கினாள்.

"டீச்சர், போன மாசமே நீங்க இல்ல... வந்திட்டுப் போனேன்...

"என்னங்க, தேதி பதினைஞ்சிக்கு வரீங்க? ஒண்ணாந்தேதி வாக்கில வாங்க!" என்று சொல்லி அனுப்பினாள்.

மாலை ஏழு மணிக்கு நாகுதான் போதையுடன் வந்து சுருண்டு படுத்தான்.

இந்தப் பழக்கத்தை மாற்றும் வைத்தியம் பற்றிச் சொல்கிறார்கள்... அதை விசாரித்து, முதலில் அதை மாற்ற வேண்டும் என்று நினைத்துக் கொண்டாள்.

மணி எட்டு ஒன்பதாகிவிட்டது. தேவகி வரவில்லை.

ரயிலை விட்டிறங்கியபின் அந்தப் பக்கம் வர அதற்கு மேல் பஸ் இல்லை.

ஏழுக்கெல்லாம் வந்து விடுவாள்.

இன்னும் வரவில்லையே?

மனம் அலைபாய்ந்தது. "ஏங்க, பஜார் பக்கம் போயிப் பார்த்திட்டு கூட்டிட்டு வாங்களேன்".

"அவ வந்திடுவா. கவலைப் படாதே..." என்றவன், "எனக்குப் பசி; சோறுவை!" என்றான்.

சோற்றையும் குழம்பையும் வைத்து விட்டு, அவள் சைக்கிள் கடை வீரா சாமியிடம் சென்று பஜாரில் பார்க்கச் சொல்லி அனுப்பினாள்.

மணி பத்தரை.

"வரலே டீச்சர். நா சொல்லிட்டு வந்திருக்கிறேன். டிரெயின் விட்டி றங்கி வந்திச்சின்னா பத்திரமாக் கொண்டாந்து வுடுன்னு ஆறுமுகத் துக்கிட்ட..." என்று சேதிதான் சொன் னான்.

இரவு முழுவதும் அமைதியில்லை.

எத்தனை அவமானம்? டீச்சர் மக, ஒரு நா பூரா வரவில்லை என்றால்... ஒருவேளை ஏதானும் விபத்தோ?

பொழுது விடிந்ததும், அவள் கதவைப் பூட்டிக்கொண்டு நாகுவுடன் கோடம்பாக்கம் - தையல் இன்ஸ்டிட் யூட்டைத் தேடிச் சென்றாள். ஒரு சந்தில் 'நீலாவதி தையல் பயிற்சி நிலையம்' என்ற பெயரில் அது இருந்தது.

கண்ணாடி போட்டுக் கொண்டு நடுத்தர வயதில் கண்ணியமானவராக அதன் உரிமையாளர் வந்தார்.

"தேவகியா? அந்தப் பொண்ணு இன்ஸ்டிட்யூட்ட விட்டு நின்னு மூனு மாசம் ஆச்சிங்களே?"

தீர விசாரித்ததில், சினிமாக் கம்பெனியில் வேலை செய்த பையன் ஒருவனுடன் அவள் சிநேகமாக இருந்ததாகவும், அவன் அவளுக்கு நடிக்க சான்ஸ் வாங்கித் தரப் போவ தாகவும் சொன்னதாக ஒரு பெண் தகவல் கூறினாள்.

டீச்சர், கசங்கிய கந்தலாக வீட் டிலே வந்து விழுந்தாள். அக்கம் பக்கம், பள்ளி - தனக்குக் கௌரவ மளித்த சமுதாயம் எல்லாமும் கரைந்து போயின. மாமரத்தடியில் வந்து குலுங்கிக் குலுங்கி அழுதாள்.

மரம் பூம்பிஞ்சுகளை உதிர்த்தது; நுனிவெம்பியும் அடி சிறுத்தும் நோஞ் சான் பிஞ்சுகளாக முதிர்ந்தவற்றை உதிர்த்தது. இளம்பிள்ளைவாதக் குழந்தை போலும், சொறிக்கரடு தட்டிய மதலை போலும், அன்றா டம் தன் கிளைகளில் முகிழ்த்த அனைத்துப் பயன்களையும் அது பொல பொலவென்று கொட்டியது. ஏற்கெனவே குடிக்கும் புருஷன், மகள் சென்ற துக்கத்தைச் சாக்காகக் கொண்டு மேலும் குடித்தான்.

உதிர்ந்து மேலே மேலே வெம்பிக் காய்ந்த குவியலைக் கூட்டக்கூட மனமில்லாமல் டீச்சர் மரத்தை வெறித்துப் பார்த்துக் கொண்டே காலம் கழித்தாள். பள்ளி திறந்தால் சிறிது மனப்புண் ஆறுமோ?

"வணக்கம் டீச்சர்!"

திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள்.

கிட்டினன்... ஒரு சாக்கும் அழுக்கு நிசாரும் வெற்று மேனியுமாக... எண்ணெய் கண்டு எத்தனையோ நாளாயின என்று விள்ளும் முடி.

"மாங்கா குடுக்கிறீங்களா டீச்சர்?"

அப்போதுதான் பின்னால் வந்து நின்ற பெரிய மீசையுள்ள ஆளை அவள் பார்த்தாள்.

"இவுரு எங்க மாமா... மாங்கா வெலக்கி எடுத்துப்பாரு... குடுக்கி றீங்களா டீச்சர்?"

அவன் மாமரத்தில் இருந்து உதிர்ந்த நோய்ப் பிஞ்சுகளையும், இன்னும் நோய் முற்றாமல் தொத்திக் கொண்டு நிற்கும் அரைகுறைக் காய் களையும் அண்ணாந்து பார்த்தான்.

"டட்ட... நோவுபுடிச்சிப் போச்சே? மருந்தடிச்சிருக்கலாமே? ஒண்ணுக் கும் ஆவாதே...?"

டீச்சர் கண்ணீரை அடக்கிக் கொள்ளச் சிரமப்பட்டாள்.

"கிட்னா, நீ சட்டைய வாங்கிக்காம போயிட்டியே?"

"எங்கம்மா, சாரத்திலேந்து வியுந்து செத்துப்போச்சி. நா படிக் கல டீச்சர்!"

"...இது ஒண்ணுக்கும் ஆவாது. மேல ஒரு பத்துக்காய் தேறுமோ என்னமோ? அதும் அரை - கால்தான் இருக்கும். மொத்தமா ஒரு வெல சொல்லுங்க டீச்சர்..." என்றான் மாமன்.

"ஒரு வெலயும் வாணாம். எல் லாத்தையும் எடுத்திட்டுப் போங்க..." உள்ளே சென்று, பெட்டிக்கடியில் வெள்ளையாக மடித்து வைத்திருந்த சட்டையைத் தேடி எடுத்தாள். கிட்டினன் மரத்திலேறிக் காய்கள், பிஞ்சுகளைப் பறித்துச் சாக்கில் கட்டினான். கீழே விழுந்த இலை, சருகுக் குப்பைகளைக் கூட்டிச் சுத்த மாக்கினான். அந்தக் குழந்தை சாக்கைச் சுமந்து கொண்டு புறப் பட்டபோது, அவளால் தாங்க முடிய வில்லை.

"கிட்டினா... நீ... ஸ்கூலுக்கு வா... நான் உனக்குப் பணம் கட்டிச் சேத்து வுடுறேன்... ஏங்க, கிட்டினனை அனுப்பி வையுங்க!"

அவர்கள் வாயில் படலைத் திறந்து மூடிக்கொண்டு சென்றார்கள். வெள்ளைச் சட்டை மடிப்பில் பொங்கி வந்த கண்ணீர்த் துளிகள் உதிர்ந்தன. ❖

## என்னைப் போலவே நானிருப்பேன்

பி.விக்கிரி

மலரைப் போல மனம் வேண்டேன் - அது
மறுநாள் வரைக்கும் நிலைப்பதில்லை!
நிலவைப் போல முகம் வேண்டேன் - அது
நிச்சயம் ஒருநாள் தேய்ந்து விடும்!

தாரகை போல மினுக்கு வேண்டேன் - அது
தரையில் ஒரு நாள் வீழ்ந்து விடும்!
பேரிகை போல முழக்கு வேண்டேன் - அது
பெரிதும் ஒருநாள் கிழிந்து போகும்!

மலையைப் போல உறுதி வேண்டேன் - அது
மனிதன் கையால் பொடி யாகும்!
சிலையைப் போல எழில் வேண்டேன் - அது
சிதைந்து போகும் வாய்ப் புண்டு!

கனியைப் போல இனிமை வேண்டேன் - அது
காலப் போக்கில் அழுகி விடும்!
பனியைப் போலக் குளுமை வேண்டேன் - அது
பகலவன் வந்தால் விலகி விடும்!

என்னைப் போலவே நான் இருப்பேன் - அது
என்றும் எனக்குப் பெருமை தரும்!
என்னைப் போலவே நான் இருந்தால் - அது
என்னை உணர்ந்திட வழி வகுக்கும்!

# 'கர்மயோகி'

# ஸ்ரீ அன்னை பகவான் ஸ்ரீ அரவிந்தர் யோக வாழ்க்கை



ஸ்ரீ அரவிந்தர் இளைஞராக இருந்த பொழுது சாரட் வண்டியில் போய்க் கொண்டிருந்தார். வண்டி குடை கவிழ ஆரம்பித்தது. அவர் நெஞ்சிலிருந்து ஒரு சக்தி வெளிவந்து வண்டியை நிமிர்த்தியதை அவர் கண்டார். அது அவருக்குப் புரியவில்லை. பகவான் ஸ்ரீ அரவிந்தருடைய தம்பிக்குக் கடும் ஜுரமிருந்த பொழுது ஒரு நாக சந்நியாசி ஒரு டம்ளர் தண்ணீரை மந்திரித்துக் கொடுத்தார். ஜுரம் உடனே இறங்கியதைக் கண்ட ஸ்ரீஅரவிந்தர் இந்த மந்திர சக்தியைப் பயன்படுத்தி நாட்டை விடுதலை செய்ய வேண்டும் என யோகத்தை நாடினார்.

விஷ்ணு லீலை என்ற மராட்டிய யோகி பகவானை உட்காரச் சொல்லி, வெளியிலிருந்து வரும் எண்ணங்களை எடுத்து எறியச் சொன்ன பொழுது, அதைச் செய்த பகவான் மௌனத்தைப் பெற்றார். மனம் மௌனத்தால் நிறைந்த பொழுது உத்தர பாராலில் சொற்பொழிவு செய்ய வேண்டியிருந்தது. தலையில் ஓர் எண்ணமும் இல்லை. சபையோர் முன் நின்று வணக்கம் செலுத்தியவுடன் ஒரு பிரவாகமான சொற்பொழிவு அவர் தலையில் நுழைந்து வெளிப்பட்டது. பயங்கரவாத சுதந்திரப் போராட்டம் பகவானை அலிப்பூர் சிறையில் தள்ளியது. விவேகாநந்தர் சிறையில் அவர் முன் தோன்றி யோக ரகசியங்களைக் கூறி, கீதையைக் கையில் கொடுத்து வழி காட்டினார். யோகம் பலித்தது. அனைவரும், அனைத்தும் நாராயணனாகக் காட்சியளித்தன. கைதி, கோர்ட், வக்கீல், ஜட்ஜ், எதிரி அனைவரும் வாசுதேவனேயாகும்.

விடுதலை பெற்றபின் அந்தராத்மா, "பாண்டிச்சேரிக்குப் போ" எனக் குரல் கொடுத்தது. பகவான் சுதந்திரப் போராட்டத்தை விழைந்தார். அதற்குப் பதிலாக இறைவன், "சுதந்திரத்திற்கான உன் வேலை முடிந்துவிட்டது. நான் உனக்கு வேறு வேலை வைத்திருக்கிறேன்" என்று புதுவைக்கு அனுப்பினார்.

அன்னை சிறு வயது முதல் தியானத்தால் ஆட்கொள்ளப்படுவார். சாப்பிடும் பொழுது சில சமயம் தன்னை மறந்து உட்கார்ந்து விடுவார். பாறைமீது சிறுமியாக விளையாடும் பொழுது விளிம்புவரை ஓடிவந்தவர் அங்கே நிற்க முடியாமல் பள்ளத்தில் விழுந்துவிட்டார். விழும் பொழுது தன்னை யாரோ தாங்கிப் பிடிப்பதை அறிந்தார். வெகு உயரத்திலிருந்து விழுந்தும், எந்தக் காயமும் படாமல், இயல்பாக எழுந்து வந்தார். இரவில் அன்னை தூங்கும் பொழுது, அவர் ஜீவன் வானில் எழுந்து பாரிஸ் நகரம் முழுவதும் பரவி, அதைத் தேடி வரும் ஜீவன்களை ஆறுதல் செய்வதை அவர் தினமும் கண்டார். சோகத்தில் திளைத்த ஜீவன்கள் அவர் அருகே வந்தவுடன் அவர் ஆசையால் தீண்டப்பட்டவுடன் சோகத்தை இழப்பதைக் கண்டார்.

கீதையைப் பற்றிக் கேள்விப்பட்டு அதைப் படித்துப் பயனடைந்தார். இறைவன் நெஞ்சில் இருக்கிறான் என்றொருவர் தற்செயலாய்ச் சொல்லியதைக் கேட்டு, அதைக் காண ஒரு வருடம் முனைந்து ஜீவாத்மாவை நெஞ்சின் பின்னால் கண்டார்.

ஒரு குருவைத் தேடிக் கொண்டிருந்தார். தினமும் அவர் தியானத்தில் பலர் தெரிவதுண்டு. ஆசிரியராகக் காணப்பட்ட ஒருவரை அவர், "கிருஷ்ணா" எனக் குறிப்பிடுவது வழக்கம். அவரையே குருவாக நினைத்திருந்தார். அவரைத் தேடி



மனம் அலைந்தது. அதே தோற்ற முடைய ஒருவரைச் சந்தித்து அவரை குருவாக ஏற்றுக் கொண்டார். என்றாலும் மனத்தில் ஐயமிருந்தது. இவர் பெயர் தியோன். அன்னைக்கு இவர் பல்வேறு யோகப் பயிற்சிகளை அளித்தார். மின்னலையும் திசைமாற்றும் திறனுடையவர் தியோன். அன்னை ஒரு சமயம் உடலை விட்டு சூட்சும உலகில் சஞ்சாரம் செய்யும் பொழுது, "வாழ்வின் மந்திரம்" (Mantra of life) அங்கு சம்ஸ்கிருதத்தில் பொறிக்கப் பட்டிருப்பதைக் கண்டு, அதை மனப் பாடம் செய்து கொண்டார். அதே க்ஷணம் தியோன் அம் மந்திரத்தைத் தனக்குச் சொல்லும்படி கேட்டார். அன்னை மறுத்துவிட்டார். தியோன் கோபமுற்று, மீண்டும் அன்னை உடலுக்குள் நுழையும் வழியை அறுத்து விட்டார். அன்னை பதட்டப்பட வில்லை. மந்திரத்தைக் கொடுக்க இசையவில்லை. தானே மனம் மாறி தியோன் அறுத்ததை மீண்டும் இணைத்தார். பிற்காலத்தில் அன்னை பகவான் ஸ்ரீ அரவிந்தரைப் பார்த்த மாத்திரம், "இவரே எனது கிருஷ்ணா" என அறிந்து கொண்டு அவருடனேயே தங்கிய பொழுது பகவானிடம் அந்த மந்திரத்தைக் கூறினார்.

பகவானும், அன்னையும் புதுவையில் சந்தித்து உலகை உய்விக்கத் திட்டமிட்ட பொழுது அன்னை தெய்வ லோக சக்தியைப் பயன்படுத்தப் பிரியப்பட்டார்கள். தெய்வலோக, சக்தி பெரியது. ஆனால் உலகின் இருளும் பொய்யும் மிக வலிமை யானவை. தெய்வ சக்தியால் அவற்றை வெல்ல முடியாது. தெய்வ லோகத்திற்கு மேலேயுள்ள சத்திய ஜீவிய சக்தியால்தான் அது முடியும். அந்த சக்தி பூவுலகில் வந்தால் பொன்மயமாக இருக்கும். இருள் ஒளியாகும். பொய் மெய்யாகும் என பகவான் விளக்கியதை அன்னை ஏற்றுக் கொண்டார்.

ஆசிரமத்தையும், சாதகர் யோகத்தையும் அன்னையின் பொறுப்பில் விட்டு, பகவான் 1926 இல் தனிமையையும், மௌனத்தையும் நாடினார். பகவானுக்கு சத்திய ஜீவியம் பலித்து, சச்சிதானந்தமும் பலித்துவிட்டது. அதன் பலனாகத் தெய்வ லோக சக்தியைப் பகவான் பூவுலகிற்குக் கொண்டுவர முயன்றார். அவருடலில் அது பாய்ந்து நிரம்பிய நேரம் (1926) பகவான் அடுத்தாற்போல் பொன்னொளியைப் பூவுலகுக்குக் கொண்டு வரும் முயற்சிக்காகத் தனிமையை நாடினார்.

ஆசிரம நிர்வாகத்தையும், சாதகர் யோகத்தையும் அன்னை மேற்கொண்டார். பகவான் அன்னையின் யோகத்தைத் தானே மேற்கொண்டார். சத்திய ஜீவியம் பலித்தது. ஆனால்



அது அவருக்கு மட்டும் பலித்தது. பூவுலகம் தயாராக இல்லை. உடலை நீத்து, சூட்சும லோகத்தில் தங்கிப் பூவுலகத்தைப் பொன்னொளியை ஏற்கத் தயார் செய்ய வேண்டி பகவான் உடலை நீத்துவிட முடிவு செய்தார். பொன்னொளி அவருடலில் பாய்ந்து, நிரம்பி, ஐந்து நாள் தங்கியிருந்தது. அவருடலில் இருந்த அனைத்து யோக சக்தியையும் அன்னை உடலில் இருத்திவிட்டு பகவான் சமாதியடைந்தார். "உடலில் பகவானுடைய சக்தி நுழைவதை நான் உணர்ந்தேன்" என்றார் அன்னை.

பகவானுக்குப் பின் அன்னை ஆசிரமப் பொறுப்போடு தன் யோகத்தையும் தானே மேற்கொள்ள வேண்டியதாயிற்று. இக் கடினமான பொறுப்பை ஏற்க அன்னை மிகவும் சிரமப்பட்டார்.

அது சமயம் அவர் பகவான் அறைக்குப் பக்கத்து வராந்தாவில் உலவுவதுண்டு. அப்பொழுது கிருஷ்ண பரமாத்மா அவருடன் உடன் உலாவுவார். சிறிது நாள்களுக்குப் பின் கிருஷ்ண பரமாத்மா பகவான் ஸ்ரீ அரவிந்தராக மாறினார். பிறகு பகவான் அன்னையாகவே மாறினார். இவை அன்னையின் யோக கட்டங்கள். "கிருஷ்ண தரிசனம்", "ஸ்ரீ அரவிந்த தரிசனம்" முதல் நிலைகள். இறுதியில் அன்னையே பகவானாகவும், பகவான் அன்னையாகவும் மாறி அவர்கள் இரண்டறக் கலந்து விட்டனர்.

1950 இல் பகவான் சமாதியானாலும், அன்னை பகவானை இடை யறாது நெஞ்சில் தரிசித்தாலும் 1959 இல் அன்னை முதன் முறையாக பகவானை சூட்சும உலகில் கண்டார். சூட்சும உலகில் பகவானுக்கு ஓர் அறை உண்டு. அங்குள்ள அறைகள் மிகப் பெரியவை. அன்னை அங்கு தினமும் இரவில் போவார். தவறாது பகவானைக் காண்பார். உரையாடுவதும் உண்டு. பல சமயம் பகவான் பதில் சொல்வதில்லை. சில சமயம் தெளிவாகப் பேசுவார். அன்னை அது போல் பகவான் கூறியவற்றைக் குறித்து வைத்தார். அவை அவருக்குப் பின்னால் வெளியிடப்பட்டுள்ளன.

ஒருமுறை பகவான் வேகமாக நடந்ததை விவரிக்கின்றார். ஒருமுறை அன்னையின் புடைவையை உடுத்தியிருந்தார். மறுசமயம் காலை உணவு கேட்கிறார். வேறொரு சமயம் கார் ஓட்டுகிறார். ஒரு சமயம் இடுப்பில் நிறைய கட்டுப் போட்டிருப்பதை அன்னை பார்த்து ஏன் அது என்கிறார். "அவர்கள் நான் எழுதியவற்றைத் திருத்துகிறார்கள்" என்றாராம். பகவான் எழுதியதைத் திருத்த எவருக்கும் உரிமையில்லை. திருத்தினால் சூட்சும உலகில் அவருடலில் காயம்படுகிறது என்பதே சூட்சுமமான உண்மை.

புதுவையில் முதன் முறையாக ஸ்ரீ அரவிந்தரைத் தேடிவந்த பொழுது வீதியில் போகும் ஒருவர் பகவான் வீட்டை அடையாளம் காண்பித்தார். அன்னை அவர் விலாசத்தைப் பெற்று மாதா மாதம் அவருக்குக் கடைசி வரை நன்றிக் கடிதம் எழுதி, அத்துடன் காணிக்கையாக ஒரு நகையையும் அனுப்பினார்.

பகவான் சமாதியடைந்த பின் தன் அறையில் தன் நாற்காலியை சமாதியை நோக்கிப் போட்டுக் கொண்டார். பகவானிருந்த பொழுது தன் நாற்காலியை பகவான் அறையை நோக்கிப் போட்டிருந்தார்.

The Mother என்பது அன்னையை பகவான் விவரிக்கும் புத்தகம். அவருடைய எழுத்தில் சிறப்பானது. அதன் முதல் பிரதியை "To Her" என்று எழுதி பகவான் அன்னைக்கு அளித்ததை அன்னை அந்த ரிப்பனுடன் கடைசிவரை அப்படியே போற்றி வைத்திருந்தார்.

ஸ்ரீ அரவிந்தருடைய (Symbol) அடையாளத்தை வெள்ளியில் செய்து அதைத் தன் நெற்றியில் தலையில் கட்டியுள்ள (Kitty Cap) துணியில் பின்னால் தினமும் குத்தி வைப்பது அன்னையின் வழக்கம்.

அவருடைய யோகம் சரணாகதி. அன்னையின் யோகம் சரணாகதி. அன்னை ஸ்ரீ அரவிந்தருக்கு சரணாகதி அடைந்தது பூரணமானது. பகவானும் தன்னை அன்னைக்கு பூரணமாக சரணாகதி செய்துவிட்டார். லோகமாதா என்பதால், அன்னையின் விருப்பத்திற்கு மாறாக அவர் நடந்து கொள்ள நினைத்ததும் கிடையாது.

சரணாகதியை மேற்கொண்டவர் அவர்கள் இருவருமேயாகும். பூரண சரணாகதியை மேற்கொள்ள மனிதன் தெய்வ நிலையைக் கடந்து சத்திய ஜீவனாகப் போகிறான். சரணாகதி மூலமே சத்திய ஜீவனாக முடியும். சரணாகதியை ஆரம்பிக்கச் சத்திய ஜீவியம் (Consciousness) வேண்டும். அவர்களது யோக வாழ்க்கையின் சுருக்கம், **"பூரண சரணாகதி"**.

# கல் மண்டகத்து ஆழ்வார்

டாக்டர்
இரா. கலைக்கோவன்

காஞ்சிபுரம் வந்தவாசி சாலையில் காஞ்சிபுரத்திலிருந்து எட்டு கிலோ மீட்டர் வந்து, சாலையின் இடப்புறம் பிரியும் மண்பாதையில் இரண்டு கிலோ மீட்டர் உள்ளே சென்றால் குரங்கணில் முட்டத்தை அடையலாம். டிசம்பர் பூக்கள் பூத்துக் குலுங்கும் தோட்டங்கள் சூழ்ந்த சிறு வீடுகள். ஊரின் ஒரு புறத்தே சிவன் கோயில். அதற்குச் சற்றுத் தள்ளி, ஊர் மக்கள் நெல், கடலை காயவைக்கவும், சிறு குழந்தைகள் விளையாடிப் பொழுது போக்கவும் வாய்ப்பாக ஒரு குடைவரை. பாறையொன்றின் கிழக்கு முகத்தில் குடையப்பட்டுள்ள இக் குடைவரையின் முகப்பு, இரண்டு பெரிய தூண்களையும், பக்கப் பகுதிகளை ஒட்டி ஏறத்தாழ அதே அளவிலான இரண்டு அரைத் தூண்களையும் கொண்டுள்ளது. மையத் தூண்கள் இரண்டும் தொடக்க காலப் பல்லவர்களுக்கே உரிய கலைமுறையில் சதுரம், கட்டு, சதுரம் என்ற அமைப்பில் இருக்க, பக்க அரைத்தூண்கள் இத்தகு வேறுபாடுகளின்றி அமைந்துள்ளன. இத் தூண்களின் சில போதிகைகள் மேல் நோக்கி வளைகையில் சட்டெனத் திரும்புமாறு அமைக்கப்பட்டுள்ளன. இப் போதிகைகளின் மேல் உத்திரமும், அதன் மேல் பிதுக்கமாகச் சிறு கம்பும் இடம்பெற்றுள்ளன. முகப்பின் மேற் பகுதியில் பாறையின் முன்புறத்தே தளவானூர் போல் கபோத அமைப்பு உருவாக்கப்படவில்லை என்றாலும் முகப்பு உள்ளார்ந்து குடையப்பட்டிருப்பதால், கூரையின் நீட்டலே கபோதப் பயன்பாட்டைத் தந்து விடுகிறது. பாறையின் பக்கச் சுவர்களில் அரைத்தூண்களை ஒட்டி வட, தென் பார்வையாக முழு உயரத்திற்கும் சிறு அரைத்தூண் போன்ற பிதுக்கம் காட்டப்பட்டுள்ளது.

முகப்பின் பின்புறத்தே உள்ள நீள் சதுரக் கூடத்தின் மையப் பகுதியில், முகப்பிலுள்ளது போலவே இரண்டு பெருந்தூண்களும் இரண்டு அரைத் தூண்களும் வெட்டப்பட்டுள்ளன. இவற்றால் இரண்டாகப் பிரிக்கப்படும் கூடத்தின் முன் பகுதியை முக மண்டபமாகவும், பின் பகுதியை உள் மண்டபமாகவும் கொள்ளலாம். இந்த வேறுபாட்டை உணர்த்தக் குடைவரையை வெட்டிய கல்தச்சர்கள் உள்மண்டபத் தரையமைப்பைச் சற்று உயர்த்திக் காட்டியிருக்கிறார்கள். இந்த உயர வேறுபாடு பெரும்பாலான பல்லவக் குடைவரைகளில் ஏறத்தாழ ஒரே அளவாய்ப் பின்பற்றப்பட்டிருந்தாலும், மாமண்டூர் முதல் குடைவரை போன்று ஒன்றிரண்டில் மட்டும் சற்று மிகுதியான


பாம்பு முப்புரி நூலாகத் தலை கொம்புடன் நிற்கும் மையக் கருவறைக் காவலர்

அளவில் காட்டப்பட்டிருப்பதைக் குறிப்பிட வேண்டும்.

உள் மண்டபப் பின் சுவரில் மூன்று கருவறைகள் குடையப்பட்டுள்ளன. தரையமைப்பிலிருந்து சற்று உயர்ந்து காணப்படும் இக் கருவறை வாயில்களை அடைய ஒவ்வொன்றின் முன்னாலும் படியமைப்புகள் உள்ளன. இப் படியமைப்புகளுக்கு இடைப்பட்ட பகுதிகளிலும், பக்கப் பகுதிகளிலும் தாங்குதள அமைப்பு காட்டப்பட்டுள்ளது. சிறு உபானம், ஜகதி, முப்பட்டைக் குமுதம், கம்பு, கண்டம், பட்டிகை என்றமைந்துள்ள இத் தாங்குதளத்தின் மீதிருந்து பத்து அரைத்தூண்கள் எழுகின்றன. இவற்றின் பாதங்கள், தாங்குதளத்தின் கண்டப் பகுதியில் இலேசான பிதுக்கங்களாய்க் காட்டப்பட்டுள்ளன. இந்த அரைத்தூண்கள் கருவறை வாயில்களையும், வாயில்களுக்கு இடைப்பட்டச் சுவர்ப் பகுதிகளையும் அழகுபடுத்த அமைக்கப்பட்டுள்ளன. பல்வேறு உறுப்புகளைப் பெற்று வளர்ச்சியுற்ற நிலையில் காணப்படும் மல்லை வராகக் குடைவரை அரைத் தூண்களிலிருந்து முற்றிலுமாய் வேறுபட்ட மிக எளிய, தொடக்க கால அமைப்புகளாய்க் காணப்படும் இவ் அரைத் தூண்களின் தலைப்பகுதிகளிலிருந்து பிரியும் போதிகைகள், உத்திரத்தில் இணைகின்றன. உத்திரத்தின் மேல் வெளிநீட்டலாய்க் காட்டப்பட்டிருக்கும் வலபியின் மேல் எளிய, கூடுகளற்ற கபோத அமைப்பு உருவாக்கப்பட்டுள்ளது. கருவறை வாயில்களை அரண் செய்யும் அரைத் தூண்களுக்கும், சுவரை அலங்கரிக்கும் அரைத்தூண்களுக்கும் இடைப்பட்ட பகுதிகளில் காணப்படும் ஆழமற்ற கோட்டங்களில் கருவறைக்கு இரண்டென, ஆறு வாயிற்காப்போர் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

பின் சுவரின் தாங்கு தள அமைப்பும், கூரையை ஒட்டியமைந்துள்ள வலபி மற்றும் கபோத அமைப்பும் உள் மண்டபத்தின் பக்கச் சுவர்களிலும் தொடர்கின்றன. இப் பக்கச் சுவர்களில் பக்கத்திற்கொன்றாக வடபுறம் ஒரு கருவறையும் தென்புறம் ஒரு கருவறையும் குடையப்பட்டுள்ளன. முக மண்டபத்தின் பக்கச் சுவர்களிலும் தென்புறமொன்றும் வடபுறமொன்றும் இரு கருவறைகள் குடையப்பட்டுள்ளன.

## கருவறைகள்

குரங்கணில் முட்டம் குடைவரையில் மொத்தம் ஏழு கருவறைகள் அமைக்கப்பட்டுள்ளன. இத்தனைக் கருவறைகளுடன் கூடிய ஒரே பல்லவர் குடைவரை இதுதான். இவ்வேழனுள் மூன்று உள்மண்டபப் பின் சுவரிலும், இரண்டு அதன் பக்கச் சுவர்களிலும் அமைய, எஞ்சிய இரண்டு மகா மண்டபப் பக்கச் சுவர்களில் குடையப்பட்டுள்ளன.

## உள் மண்டபக் கருவறைகள்

எண்ணிக்கையில் ஐந்தாக உள்ள உள் மண்டபக் கருவறைகளுள் பின் சுவரில் கிழக்கு முகமாக மூன்றும், பக்கச் சுவர்களில் வட, தென் முகமாக இரண்டும் குடையப்பட்டுள்ளன. இக் கருவறைகளின் தோற்றம், அமைப்பு ஆகியவற்றில் வேறுபாடுகள் உள்ளன.

பின்சுவர்க் கருவறைகள் உபானத்தில் இருந்து தொடங்கிப் பட்டிகையில் முடியும் தாங்கு தளத்தின் மீது அமைந்துள்ளன. அவற்றின் வாயில்கள் அரைத் தூண்களால் அலங்



குடைவரையின் முகப்பும் உட்புறமும்

கரிக்கப்பட்டுள்ளன. அரைத் தூண்களின் பாதங்கள் கண்டப் பகுதியில் இலேசான பிதுக்கங்களாய்க் காட்டப்பட்டுள்ளன. வாயில் அரைத் தூணுக்கும் சுவர் அரைத்தூணுக்கும் இடையில் உள்ள கோட்ட அமைப்புகளில் வாயிலின் இருபுறமும் வாயிற்காப்போர் சிற்பங்கள் காணப்படுகின்றன. கருவறையை அடைய உள் மண்டபத் தரையிலிருந்து படிக்கட்டுகள் காட்டப்பட்டுள்ளன.

பக்கச் சுவர்க்கருவறைகள் உபானம் இல்லாத தாங்குதளத்தின் மீது அமைக்கப்பட்டுள்ளன. அவற்றின் வாயில்களில் அரைத்தூண் அலங்கரிப்பு இல்லை. அரைத்தூண்கள் இல்லாத போதும் கண்டப்பகுதியில் பாதங்கள் காட்டப்பட்டுள்ளன. பக்கச் சுவரின் வாயிற்பகுதியைத் தூணாய்க் கருதி இப்பாதம் காட்டப்பட்டுள்ளது போல் தோன்றுகிறது. கோட்ட அமைப்புகளோ வாயிற் காவலர் வடிவங்களோ காட்டப்படாமையோடு, படிக்கட்டுகளும் செதுக்கப்படவில்லை.

## பின் சுவர்க் கருவறைகள்

உள் மண்டபப் பின் சுவரில் குடையப்பட்டுள்ள மூன்று கருவறைகளுக்கும் அமைப்பு முறையில் அதிக வேறுபாடுகள் இல்லை. இவற்றின் உட்பக்கச் சுவர்களும், கூரைகளும் வெறுமையாக உள்ளன. கருவறைத் தரை, வாயிலைவிடச் சற்று உயர்த்திக் காட்டப்பட்டுள்ளது. கருவறையின் மையத்தில் தரையில் குழியொன்று வெட்டப்பட்டுள்ளது. இது உருவத் திருமேனியை ஊன்றி நிறுத்தப்பயன்பட்டிருக்கலாம். பக்கச் சுவர்கள் வாயில் நிலையிலும் சற்று உள்ளார்ந்து குடையப்பட்டுள்ளன. வாயில் மேல்நிலையாக உத்திரத்தையே கொண்டுள்ளன. தென் மற்றும் வடபுறக் கருவறைகளின் மேற்படிக்கட்டின் மிதி பகுதி பட்டிகைக்குச் சற்றுக் கீழாக இருக்க, மையக் கருவறையில் அது குமுதத்திற்குச் சற்று மேலாகக் காட்டப்பட்டுள்ளது. வட கருவறையின் வாயிலில் இரண்டு படிகளே உள்ளன. மற்ற இரண்டிற்கும், மூன்று படிகள் உள்ளன. மையக் கருவறையின் முன் சந்திரசீலா இருந்த அடையாளம் மட்டுமே காணப்படுகிறது.

## பக்கச் சுவர்க் கருவறைகள்

அமைப்பு முறையில் பின் சுவர்க் கருவறைகளையொட்டியே இவையும் குடையப்பட்டுள்ளன. தென் பார்வையாகக் குடையப்பட்டுள்ள வடபுறக் கருவறையின் தரை, தாங்குதளத்தின் பட்டிகை அளவைவிட நன்றாக உயர்த்தப்பட்டுள்ளது. இதன் வலப்புறச் சுவர்ப் பகுதி பின் சுவரின் இறுதி அரைத்தூணை மறைத்து அமைந்துள்ளது. போதிகை மட்டும் தெரிய அதற்குரிய அரைத்தூண் இச் சுவரோடு ஐக்கியமாகிவிட்டது.

தென் பக்கக் கருவறையின் தரை, பட்டிகை நிலையை ஒட்டி அமைந்துள்ளது. இதன் நுழைவாயில் இடப்புறச் சுவர் சிதைந்து, எஞ்சியுள்ள மேல் கீழ்ப் பகுதிகள் தூணொன்றின் பாதம் மற்றும் போதிகை அமைப்பு போலக் காட்சியளிக்கின்றன. இங்கும் வடபுறம் போலவே பின் சுவரின் அரைத்தூண் ஒன்று கருவறைப் பக்கச் சுவரில் ஐக்கியமாகியுள்ளது.

## முக மண்டபக் கருவறைகள்

உள்மண்டபத்துப் பக்கச் சுவர்களில் குடையப்பட்டுள்ள கருவறைகளுக்கும் இவற்றுக்கும் பெரிதாக எந்த வேறுபாடும் இல்லையெனலாம். இவற்றுள் வடபுறக் கருவறையின் முன் ஒரு படிக்கட்டும் தென்புறக் கருவறையின் முன் இரண்டு படிக்கட்டுகளும் உள்ளன. இந்த இரண்டாம் படிக்கட்டு சந்திரசீலாவாக உள்ளது. கருவறைகளின் வாயில் நிலையாக உத்திரமும் அதன் மேல் வலபியும் கபோதமும் உள் மண்டபத்திலுள்ளது போலவே அதன் தொடர்ச்சியாகக் காட்டப்பட்டுள்ளன. உள் மண்டபக் கருவறைகளைப் போல் இவற்றிற்குத் தாங்குதள அமைப்பு இல்லை.

முக மண்டபக் கூரையில் உத்திரத்தின் மேல் கிழக்கு மேற்காக வாஜனம் ஓடுகிறது. தென், வட புறங்களில் இது வலபியோடு இணைந்து விடுகிறது. உள் மண்டபத்தின் கூரையின் கிழக்கிலும் இதுபோன்ற வாஜன அமைப்பு காட்டப்பட்டுள்ளது. இது பக்கச் சுவர்களிலுள்ள வலபியோடு இரண்டறக் கலந்து விடுகிறது.

## சிற்பங்கள்

இக் குடைவரையின் சில கருவறைகளுள், சிதைந்து போன சிற்பங்கள் காணப்படுகின்றன. உள்மண்டபப் பின் சுவரில் குடையப்பட்டுள்ள தென் மேற்குக் கருவறையில் முருகனின் சிற்பமொன்று சாய்த்து வைக்கப்பட்டுள்ளது. பிற்காலப் பல்லவக் கலை முறையில் வடிக்கப்பட்டுள்ள இச் சிற்பத்தின் முகம் சிதைந்துள்ளது. பின் கைகளில் அக்கமாலையும் குண்டிகையும் கொண்டு, முன் கைகளைக் காக்கும் மற்றும் கடி முத்திரைகளில் காட்டி, செவிகளில் பனையோலைக் குண்டலங்களுடன் நின்ற திருக்கோலத்தில் காட்சிதரும் கடம்பவேளின் இடப்புறம் குத்தீட்டி ஒன்று காணப்படுகிறது.

கிழக்கு முகமாய் உள்ள மையக் கருவறையில் சிதைந்து போன சண்டேசுவரர் சிற்பம் சாய்த்து வைக்கப்பட்டுள்ளது. மகிழ்வமர் கோலத்தில் வலக்கையில் தடி போன்றதொரு கருவியை ஏந்தி, இடக்கையைத் தொடையில் இருத்திக் காட்சிதரும் இச் சண்டேசுவர வடிவம் பிற்காலப் படைப்பாகும்.

முக மண்டபத்திலுள்ள தென் கருவறையில், தளத்தின் மீதமர்ந்துள்ள நந்தியின் சிதைந்த வடிவம் காணப்படுகிறது. தலையற்ற உடலுடன் இச் சிற்பம் தனித்துக் கிடக்கிறது.

## வாயிற்காப்போர் வடிவங்கள்

ஏழு கருவறைகளுள் மேற்கிலுள்ள மூன்றுக்கு மட்டும் கருவறைக்கு இரண்டென, ஆறு வாயிற்காப்போர் வடிவங்கள் காட்டப்பட்டுள்ளன. இவ்வடிவங்கள், உள் மண்டபப் பின் சுவரில் எழும் அரைத் தூண்களுக்கு இடையிலமைந்த ஆழமற்ற கோட்டங்களில் வெட்டப்பட்டுள்ளன. தோற்றம், ஆடையலங்காரம், நிற்கும் நிலை,

கை அமைதிகள் என அனைத்திலும் இவை ஒன்றுக்கொன்று வேறுபட்டுள்ளன.

தென்மேற்குக் கருவறையின் இரு வாயிற்காப்போரும் முவ்வளைவுக் கோலத்தில் நேர் நோக்கியவர்களாய்ப் பூட்டுக் குண்டலங்களுடன், கீழாடைகளின் பக்கவாட்டு முடிச்சுகள் வளையத் தொங்கலாய் முன்புறத்தே அழகுற அமைய, ஒரு பாதத்தை சம நிலையிலும் மற்றொரு பாதத்தை இலேசான திரஸ்ரயத்திலும் காட்டி நிற்கிறார்கள். வலப்புறத்தாரின் வலக்கை வலத்தொடையில் கட்ய வலம்பிதமாகவும், இடக்கை மார் பருகே கடகமாகவும் இருக்க, இடப்புறத்தாரின் இடக்கை இடுப்பிலும், வலக்கை சிதைந்த நிலையிலும் உள்ளன. வலக்காவலரின் மகுட முகப்பிலும் பக்கங்களிலும் எடுப்பான எழுச்சிகள் காட்டப்பட்டுள்ளன. முகத்தின் இருபுறமும் சடைக்கற்றைகள். முப்புரிநூல் மார்பின் பாதியளவில் நின்றுவிடுகிறது. இடக் காவலர் முப்புரிநூல் வலக்கை அருகே சிதைந்துள்ளது. மகுடம் உடைந்து பின்னாளில் கிரீடமாய்த் திருத்தப்பட்டுள்ளது.

மையக் கருவறைக் காவலருள் வலப்புறம் இருப்பவர் கருவறை நோக்கியிருக்க இடப்புறம் இருப்பவர் நேர் நோக்கி நிற்கிறார். வலப்புறத்தாரின் இரண்டு பாதங்களும் திரஸ்ரயத்தில். வலக்கை கடி முத்திரையில். இடக்கை கதையின்மீது ஊன்றியிருக்க, விரல்கள் இடுப்பை வருடுகின்றன. கதை, கீழிருந்து மேலே பூண் அணிந்த இடங்களில் அளவில் சிறுத்துப் பிடியுடனும் சுற்றிய பாம்புடனும் அச்சுறுத்துகிறது. இவர் முப்புரி நூலாய்ப் பாம்பு. வலச்செவியில் பனையோலைக் குண்டலம். இடுப்பாடை முடிச்சு வலப்புறம் தொங்கலாகவும் பின்புறத்தே விசிறி மடிப்பாகவும் காட்டப்பட்டுள்ளன. முகப்புகளோடு கூடிய கரண்ட மகுடத்தையும் மீறிய சடைக் கற்றைகள். தலையில் இடப்புறம் நன்கு வளர்ந்து, வளைந்த கொம்பு. இங்குள்ள வாயிற் காவலர்களில் இவர் ஒருவரே கொம்பர்.

இடக் காவலரின் வலக்கை சிதைந்துள்ளது. இடக்கையை இடுப்பில் வைத்திருக்கும் இவரின் முப்புரிநூலாய் இரண்டு பாம்புகள் பின்னிப் பிணைந்துள்ளன. மகுடம் சிதைந்து பின்னாளில் கிரீடமாகியுள்ளது. கண்டிகைக் கழுத்தின் இருபுறமும் தோள்களில் பரவலாய்ச் சடைக் கற்றைகள். சிதைந்த வலக்கையின் கீழே பாம்பு சுற்றிய கதை.

வடபுறக் கருவறை வாயிலர் முவ்வளைவுக் கோலத்தில், திரஸ்ரயப் பாதங்களுடன், கைகளுள் ஒன்று போற்றி வாழ்த்த, மற்றொன்று இடுப்பில் ஊன்றி இதமாய் அமர்ந்துள்ளது. செவிகளில் ஒன்றில் பனையோலைச் சுருள், மற்றொன்றில் பூட்டுக் குண்டலம். வலக் காவலர் கழுத்துக் கண்டிகையர். இடப்புறத்தார்க்கு நகை வெறுப்பு போலும்.

இந்த வாயிற்காவலர் சிற்பங்கள் அனைத்துமே பட்டிகையின் மேல் நிற்பது போலக் காட்டப்பட்டுள்ளன.

## கல்வெட்டுகள்

இக் குடைவரையில் இருந்து மைய அரசின் கல்வெட்டுத் துறை ஒரே ஒரு கல்வெட்டைப் படியெடுத்து, அதன் சுருக்கத்தைப் பதிப்பித்துள்ளது. இக் கல்வெட்டு குடைவரையின் மையப் பகுதியிலுள்ள இரண்டாம் தூண் வரிசையைச் சேர்ந்த வடபுற அரைத் தூணின் தென் முகத்தில் வெட்டப்பட்டுள்ளது. கச்சியும் தஞ்சையும் கொண்ட இராட்டிரகூட மன்னரான கன்னர தேவரின் இருபத்து நான்காம் ஆட்சியாண்டில் வெட்டப்பட்டிருக்கும் இக் கல்வெட்டு குடைவரை அமைந்துள்ள இடத்தைக் காலியூர்க் கோட்டத்தைச் சேர்ந்த எரிகீழ் நாட்டுப் பல்லவபுரம் என்று குறிப்பிடுவதுடன் குடைவரையைக் 'கல் மண்டகம்' என்று அழைக்கிறது. இறைவன் 'கல் மண்டகத்து ஆழ்வார்' என்று அழைக்கப்பட்டுள்ளார். மைய அரசின் கல்வெட்டறிக்கை இறைவன் பெயரைக் 'கல் மடை காட்டாழ்வார்' என்று பிழையாகத் தந்துள்ளது. இறைவன் திருமுன் திருப்பலி கொட்டவும், மூன்று சந்தியும் திருவமுது காட்டவும் பல்லவபுரத்து ஊரார் அளித்த நிலக்கொடையைக் கூறும் இக் கல்வெட்டு சரியான பராமரிப்பின்மையால் சேதமுறத் தொடங்கியுள்ளது.

இது தவிர ஆறு புதிய கல்வெட்டுகளை இக் குடைவரைத் தூண்களிலிருந்து டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம் வெளிச்சத்திற்குக் கொணர்ந்துள்ளது. இவற்றுள் இரண்டு முழுமையானவை. இரண்டு தொடக்கத்தோடு நிற்பவை. இரண்டு துணுக்குகளாய் நிற்பவை. முழுமையான இரண்டனுள் ஒன்று, இவ்வூரைச் சேர்ந்த வைகானசன் கண்ணன் பட்டன் என்பாருக்கு ஊரார் நிலக் கொடையளித்ததைக் குறிப்பிடுகிறது. கன்னரதேவரின் இருபத்து நான்காம் ஆட்சியாண்டில் வெட்டப்பட்டுள்ள மற்றொரு கல்வெட்டு, இக் கோயில் இறைவனுக்கு முப்போதும் திருவமுது காட்ட பல்லவபுரத்து ஊராரால் தரப்பட்ட ஒன்பதரை மா நிலக்கொடையைச் சுட்டுகிறது. இறைவனை கல் மண்டகத்து திருவடிகள் என்று அழைக்கும் இக் கல்வெட்டு, குண்டியாற்றையும், வானவன் மல்லடியையும் சுட்டுகிறது. கன்னர தேவரின் இருபத்தைந்தாம் ஆண்டில் வெட்டப்பட்டுள்ள கல்வெட்டு ஊர்ப் பெயரையும் கோயில் பெயரையும் தந்து முற்றுப் பெறாமல் நிற்கிறது. மற்ற மூன்று கல்வெட்டுகளுள் இரண்டைத் தொடர்புபடுத்தினால் இறைவனுக்கு விளக்கெரிக்க ஆடுகள் கொடையாகத் தரப்பட்ட செய்தி கிடைக்கிறது. மற்றொன்று விற்பனைச் செய்தியொன்றை மட்டும் பெருமளவில் மிகவும் சிதைந்து காணப்படுகிறது.

பல்லவர் காலக் குடைவரைகளுள் காலத்தால் முற்பட்டதெனக் கொள்ளத்தக்க இக் குடைவரை, கலை முறையாலும், கொண்டிருக்கும் கல்வெட்டுகளாலும் மிகவும் போற்றிப் பாதுகாக்கப்படவேண்டிய கோயிலாகும். அரசும், மக்களும் இவ்வரிய கலைப்படைப்பைக் காப்பாற்றும் முயற்சிகளில் முனைப்பு காட்டாது போனால் விரைவில் இதுவும் பாழடைந்த மண்டபங்களுள் ஒன்றாகப் போய்விடலாம்.



குடைவரையின் முகத்தோற்றம்...

# மூன்றாவது நபர்

## ஆர். சூடாமணி



மார்பில், எட்டி உதைத்துவிட்டான்.

ஸ்தூலமாய்ச் செய்தால்தானா?

"என் வியாபாரத்தைப் பெரிசு பண்ணணும். இப்ப கொஞ்சம் முடை. உங்கப்பா என்ன, போறப்ப பணத்தையெல்லாம் மூட்டை கட்டி எடுத்துக்கிட்டா போகப் போறார்? நான் நல்லாயிருந்தா உனக்குத்தானே சுகம்? அவரண்டை போய் உடனே முப்பதாயிரம் பணத்தோட வரதானால் வா. இல்லாட்டி அங்கேயே இருந்துக்க, சொல்லிட்டேன்".

மாப்பிள்ளை என்றால் கொக்கா? பெரியவர் என்ற மரியாதை இல்லை. தாய்மாமன், மாமனார் என்று எந்த உறவுக்கும் ஒரு கண்ணியம் தரவில்லை. வயசான காலத்தில் நானும் கிழவியும் கையில் நாலு காசோடு பிறர் கையை எதிர்பார்க்காமல் சுதந்திரமாய் வாழவேண்டும் என்ற என் லட்சியத்தையும் மதிக்கவில்லை.

"உங்கப்பா பணமெல்லாம் உனக்குத்தானே? செத்தப்புறம் கொடுக்கறதை இப்ப நமக்குத் தேவையாயிருக்கறப்பவே கொடுத்தா குடியா முழுகிடும்?" என்றானாம்.

அப்படி என்ன எனக்குப் பெரிசாய் சொத்து குவிந்து கிடக்கிறது? ஒரு சின்ன அரசுத்துறை அலுவலகத்தில் சூபர்வைசராய் வேலை பார்த்து ஓய்வு பெற்றபோது கைக்கு லட்சத்து சொச்சம் வந்தது. அதில் பாதிக்கு மேல் பெண்ணின் கல்யாணத்துக்கு வாங்கியிருந்த கடன் வட்டியும் முதலுமாய் விழுங்கிவிட்டது. மீதியை வங்கியில் டெபாசிட் செய்து எதிர்கால மழைக்குக் குடை தேடிக்கொண்டேன். பென்ஷன் பணத்தில் மாதச் செலவு. சொந்தமாக ஒரு சாண் இடமேனும் வேண்டும் என்னும் கிழவியின் ஆசை இந்தப் பிறவியில் ஈடேறப் போவதில்லை. என்னை மணந்து அவளுடைய எந்த ஆசைதான் ஈடேறியிருக்கிறது?

கொள்ளைக்கார மாப்பிள்ளை கண்ணில் அந்த வங்கிப் பணம் உறுத்துகிறது. அவனுக்குப் பண உதவி செய்யக்கூடிய வசதியான நண்பர்கள் பலருண்டு. ஆனால் அவர்களிடம் வாங்கினால் அது கடன். திருப்பித் தரவேண்டும். மாமனாரிடம் வாங்கினால் அன்பளிப்பு! எப்படி இருக்கிறது நியாயம்? நான்தான் கேட்கிறேன், எனக்குப் பின் அந்தப் பணம் உன் பெண்டாட்டிக்குத்தான் என்று என்னடா சட்டம்? பிதுரார்ஜித சொத்தா பாழாய்ப் போகிறது? உனக்குத்தான் பெண்ணையும் கொடுத்துக் கல்யாணத்திலும் கொட்டி அழுதுவிட்டேனே! அநாதைப் பையன் என்பதற்காக எந்த விமரிசையைக் குறைத்தேன்? அதற்கு மேல் உனக்கென்ன பாத்தியதை? என் காலத்துக்குப் பின் என் பணமெல்லாம் தர்மத்துக்கு என்று எழுதி வைக்கிறேன், நீ எவண்டா கேட்க?

"சாப்பாடு வைக்கவா?" ஐந்தாம் முறையாகக் கிழவி கேட்டாள்.

"வேணாம். வேணாம்னா ஏன் உயிரை வாங்கறே? உன் அழகான மருமகன் பேசின பேச்செல்லாம்தான் வயிறை நிரப்பிடிச்சே. அப்புறம் சோறு எதுக்கு?"

"அவன் கெடக்கறான் ரெண்டுங்கெட்டான் பயல். நீங்க பார்த்து வளர்த்த பையன்..."

"அதான் வளர்த்த கடா மாரில் பாயுது".

"கைக்குழந்தை பிஞ்சுக்காலால் மாரில் உதைச்சா பெத்தவங்களுக்கு நோகுமா?"

"அந்த வெறும் பயலுக்குப் பரிஞ்சுகிட்டு வராதே மரகதம். அப்புறம் நான் மனுஷனா இருக்க மாட்டேன்".

"வெறும் பயலோ ஒசத்திப் பயலோ, நம்ம மருமகன்".

"அந்த தைரியத்தில்தான் வாய்க்கு வந்ததைப் பேசறான்".

"தப்புத்தான். ஆனா நம்ம குழந்தையை வாழாவெட்டியாக்கிட்டான்னா அவள்தானே ஆயுசுக்கும் கண்ணீர் வடிச்சுகிட்டிருப்பா".

"ச்சே! இதுக்குத்தான் அப்பவே தலை தலையா அடிச்சுக்கிட்டேன் அவனுக்குக் கொடுக்க வேணாம்னு".

உறவில் சம்பந்தம் எனக்குப் பிடிக்கத்தான் இல்லை. பெற்றோரை ஒரு ரயில் விபத்தில் பறிகொடுத்த பிள்ளை என்ற இரக்கத்தால் அக்காள் மகனை வீட்டோடு வைத்துக் கொண்டு வளர்த்து ஆளாக்கினேன். பிறகு அவனுக்கு ஒரு நல்ல வழிகாட்டி அனுப்பிவிடத்தான் எனக்கு எண்ணம். ஆனால் எமகாதகப் பயல் கிழவியை நைச்சியமாய் வளைத்துப் போட்டுவிட்டான்.

போதாததற்கு அவனுக்கும் நளினா வுக்குமிடையே 'இது' வேறு. கிழவிதான் சொன்னாள்: "குழந்தைங்க ஆசைப் படுது. ஒண்ணுக்குள்ள ஒண்ணுன்னு பேசாம கட்டிக் குடுங்க. அவங்க ரெண்டு பேரும் சந்தோஷமாயிருந்தா நமக்கு வேறென்ன வேணும்?"

கடைசியில் அப்படியே செய்தேன். இப்போது சொல்கிறான், 'பணம் கொடுக்காவிட்டால் உன் பெண்ணை நீயே வைத்துக்கொள்!' என்று.

மகளின் வாழ்க்கை நலம் என்பது மாப்பிள்ளை கையில் ஒரு பணயக் கைதியாகிவிட்டது.

"நாளைக்கே பாங்குக்குப் போய் ரூபாயை எடுக்கற வழியைப் பாருங்க".

"ஃபிக்ஸட் டெபாசிட் மரகதம்! ரின்யூ பண்ணி ரெண்டு வருஷமாகலே. இப்ப மூடினம்னா ஏகப்பட்ட வட்டி நஷ்டமாகும்".

"என்னங்க செய்யறது? வேறு வழி?"

"'வேறு வழி?' - ஒரு நடுவர்க்கக் குடும்பஸ்தனின் எல்லாச் செயல் பாட்டையும் இறுதியாய்க் கட்டிப் போடும் சங்கிலி.

அடுத்த வியாழக்கிழமை நளினா ஒரு மாற்றுடையுடன் என் வீட்டுக்கு அனுப்பப்படுவாள். ஒரு வாரத்தில் முப்பதாயிரம் ரூபாயுடன் கணவனிடம் திரும்பிச் செல்லவில்லையானால் எட்டாம் நாள் அவள் பெட்டி, படுக்கை, சாமான்கள் என்று அனைத்தும் அவளைத் தொடர்ந்து நிரந்தரமாக இங்கு அனுப்பப்பட்டுவிடும்.

இந்த லட்சணத்தில் காதல் கல்யாணம்!

'அப்பா, ராஜுவைச் செய்துக் காட்டி எனக்குக் கல்யாணமே வேணாம்'.

என்னடி அப்படிப்பட்ட கொம்பன் உன் ராஜு? இதோ உன் காதலுக்கு முப்பதாயிரம் ரூபாய் விலை போட்டு அனுப்புகிறானே. இதைவிட ஒரு கூலிக்காரனுக்கு உன்னைக் கொடுத்திருந்தால் கண்டேன் கண்டேன் என்று உள்ளங்கையில் வைத்துத் தாங்கியிருப்பான்.

நளினா. அவள் முகத்தின் அழகு கம்பீரமான கடல் போன்றது. உருவத்திலும் அசைவுகளிலும் பெயருக்கேற்ற நளினம். ஒரு சிரிப்பில் ஆயிரம் நெஞ்சங்களைச் சிறைப்பிடிப்பாள். அறிவுக்குந்தான் குறைவா? கல்வியில் அவள் திறமையையும் ஆர்வத்தையும் கண்டு என் சக்தியை மீறிச் செலவழித்து அவள் விரும்பியவாறே எம்.எஸ்ஸி. வரை படிக்க வைத்தேன். எல்லாம் கடைசியில் ஒரு சுரண்டல் காரனுக்குப் பலி கொடுக்கத்தானா?

புதன்கிழமை வரைகூட ஒரு நப்பாசை. ராஜு ஒருகால் இளகியிருக்கலாம். வாசலிலேயே நின்று, இன்ன வென்று விளக்க முடியாத ஏதோ செய்திக்காகக் காத்திருந்தேன்.

இரவாகிவிட்டது. இனி எந்தப் புதிய செய்தியும் வரப் போவதில்லை...

அன்றிரவு என்னால் சரியாய்த் தூங்க முடியவில்லை. கிழவி தூங்கினாள். மீட்சி இல்லை என்னும் நிராசையில் எழுகிற ஆயாசத்தின் தாக்கம்.

வியாழக்கிழமை விடியற்காலை மூன்று மணிக்கு எழுந்து பல் விளக்கிவிட்டு பம்ப் அடிக்க ஆரம்பித்தேன். இந்த நேரத்தில் தண்ணீர் அதிக சிரமமில்லாமல் வரும். சிறு குமிழிகள் பூத்துப் பூத்து உடைய வாளியில் நீர் அடித்து அண்டாவை நிரப்பினேன். இன்னும் குடங்களும் டிரம்மும் நிரப்ப வேண்டும்.

"நீங்க நகருங்க, நான் கொஞ்ச நேரம் அடிக்கறேன். முதல்ல காப்பி குடிங்க".

நேற்றிரவு ஃப்ரிஜ்ஜில் (நான் ஒய்வு பெற்றபோது வாங்கியது) எடுத்து வைத்திருந்த பாலில் கலந்த காப்பி. அதைக் குடித்துவிட்டுப் பால் பைகள் வாங்கி வர 'பூத்'துக்குப் போக வேண்டும். பிறகு பத்து மணிக்கு வங்கி திறந்ததும் போய் டெபாசிட்டை 'ஃபோர்குளோஸ்' செய்து பணத்துக்கு ஏற்பாடு செய்யவேண்டும்...

காப்பி குடித்தேன். கசந்தது. சர்க்கரை போட்ட காப்பிதான்.

"இன்னும் கொஞ்ச நேரம் அடிச்சிட்டு 'பூத்'துக்குப் போறேன் மரகதம்".

"வேணாம், நீங்க கிளம்புங்க. நான் பார்த்துக்கறேன்".

"நேத்தே தோள்பட்டை வலி உனக்கு".

"உங்களுக்கு மட்டும் வலிக்கலையா? அன்னையில் வேறு இழுத்து கிட்டிருந்துதே பாவம்".

"நான் ஆம்புளை".

"நோவும் கஷ்டமும் எல்லாருக்கும் ஒண்ணுதான்".

"ஆனா மாப்பிள்ளை வர்க்கத்துக்கு மட்டும் எந்தக் கஷ்டமும் கிடையாது. அதான் மாமனார்னு ஒர் அட்சய பாத்திரம் இருக்குதே!"

"சும்மா மனசைக் கஷ்டப்படுத்திக் கிட்டு என்னங்க புண்ணியம்? தலையெழுத்தை அனுபவிச்சுத்தானே ஆகணும்".

"அது சரி. வேறு வழி?"

"கிளம்புங்க".

"நீ காப்பி குடிச்சியா?"

"ஆச்சு".

பனியனுக்கு மேல் சட்டையை இழுத்து விட்டுக்கொண்டு செருப் பணிந்து பால் கார்டுகளுடன் கிளம்பினேன். பால் வண்டியருகில் ஒரே கலாட்டா. ஒரு பையில் விரிசல் விழுந்து பால் கசிந்து கொண்டிருந்ததை வாடிக்கைக்காரர் ஆட்சேபிக்க, வண்டிக்காரர் தாம் பொறுப்பில்லை என்று மறுக்க, வாக்குவாதமும் சண்டையும் வலுத்தன. ஒருவாறு நான் அடித்துப் புடைத்து இரண்டு பால் உறைகளை வாங்கிக் கொண்டு வீடு திரும்பும்போது மணி ஆறரை.

கொல்லைப் புறத்தில் பம்ப் அடித்துத் தண்ணீர் நிரப்பும் ஓசை கேட்டுக் கொண்டிருந்தது. கிழவி இன்னுமா அடிக்கிறாள்? நேற்றே பம்ப் அடித்து அடித்துத் தோள் களிலும் மார்பிலும் வலி அவளுக்கு.

அங்கு விரைந்தேன். என் அடியோசை கேட்டதுமே, பம்ப் அடிப்பதை நிறுத்தாமல், தலைகூடத் திரும்பு முன், குட் மார்னிங் அப்பா!" என்று நளினா திரும்பி என்னைப் புன்னகையோடு பார்த்தாள்.

அதற்குள் மூட்டை கட்டி அனுப்பி விட்டானா பெண்டாட்டியை? வியாழக் கிழமை எப்போது விடியும் என்று காத்துக் கொண்டிருந்தான் போல் இருக்கிறது.

"எப்ப வந்தே நளினா?"

"அரைமணி ஆச்சு".

"அப்பலேர்ந்து பம்ப் அடிக் கிறியா?"

"அம்மா அடிச்சிட்டிருந்தாங்க. வாங்கிக்கிட்டேன்".

"நகரு, நான் அடிக்கறேன்".

"உங்களைவிட நான் சின்னவள்னு நினைக்கறேன்".

"நீ ஊரான் வீட்டுப் பொண்ணு".

"ஜோக் நல்லாயிருக்கு".

உதட்டைப் பிதுக்கிவிட்டுச் சமையலறைக்குப் போய்க் கிழவியிடம் பால் பைகளைக் கொடுத்தேன். சிறிது நேரத்தில் புதுப்பாலில் மூவருக்குமாக அவள் கொஞ்சம் காப்பி கலந்து எடுத்து வந்தாள்.

நளினா முகத்தையும் கழுத்தையும் துடைத்துக் கொண்டே உள்ளே வந்து, "தண்ணி நின்னு போச்சும்மா. ஆனா பாத்திரமெல்லாம் நிரப்பிட்டேன்" என்றவாறு தாயிடமிருந்து காப்பியை வாங்கிக்கொண்டாள்.

நான் காப்பியை உறிஞ்சியபோது மேஜைமீதிருந்த துணிப்பையைத்தான் பார்த்துக் கொண்டிருந்தேன்.



"உன் மாற்றுடையும் பேஸ்ட் பிரஷ்ஷுமா?"'

"ஆமாம். ஒரே ஒரு மாற்றுடை தான் உங்க மருமகன் அனுமதிச்சிருக்கார். ஒரு வாரத்துக்குத்தானே!" நளினா சிரித்தாள்.

"கவலைப்படாதே. ஒரு வாரத்துக்குள்ளேயே மூணாம் சேலை உடுத்தலாம். பத்து மணிக்கு பாங்க் திறக்கும். நான் போய்ப் பணம் வாங்கி வந்துடறேன்".

"எதுக்காக வாங்கணும்?"

"வேறு வழி? ஒரு வாரம் கெடு கொடுத்திருக்கான் உன் புருஷன்".

"ஒரு வாரம் கெடுதான். ஆனா அது அவர் உங்களுக்குக் கொடுக்கலேப்பா! இப்போ நான் அவருக்குக் கொடுத்திருக்கேன்".

அவளைக் கூர்ந்து நோக்கினேன்.

"நீங்க அவருக்குப் பணம் தரக்கூடாது. அது இல்லாமலே அவர் ஒழுங்காய் ஒரு வாரத்தில் இங்கே வந்து என்னை அழைச்சுக்கிட்டுப் போனால் நான் போய்க் குடித்தனம் செய்யறேன். இல்லே, பணம்தான் பெரிசுன்னு அவர் நினைச்சால் அடுத்த வியாழக்கிழமை என் எல்லா சாமான்களையும் இங்கே அனுப்பிடும்படி நானே அவர்கிட்ட சொல்லிட்டு வந்துட்டேன்".

"அடிப்பாவி! குடியைக் கெடுத்தியே!" என்று கிழவி அலறினாள்.

"நளினா...! என்ன இது... என்னம்மா இப்படிப் பேசறே?"

# வந் வக்கட்டும்







**கவிஞர் சுடர்வண்ணன்**

மகிழ்வெனும் வான மத்தாப்புப் பூக்களினால்
மக்களெலாம் புத்தாடைகள் அணியட்டும்
மறுமலர்ச்சி சிந்தனையின் ஆக்கத்தினால்
மனிதகுலம் தலைநிமிர்ந்து நிற்கட்டும்

முத்திரைகள் பதித்ததுபோல் அரிய சாதனைகள்
முடிப்பதற்கே முயற்சிகளும் எடுக்கட்டும்
இத்தரையிலிருக்கின்ற கித்தாப்புப் பேர்வழிகள்
இன்று முதல் மனந்திருந்தி வாழட்டும்

எத்தரப்பு மனிதர்கள் எங்கெங்கிருந்தாலும்
ஏற்ற தாழ்வில்லாமல் ஒன்றாக இருக்கட்டும்
கற்றவர்கள் மென்மேலும் நூல்கள் ஆய்வதோடு
கல்லாதவர் கண் திறக்க முயலட்டும்

உற்றவர்கள் இல்லார்க்கு நன்கு உதவட்டும்
உலகத்தைப் புரிந்தவர்கள் உயரட்டும்
பெற்றவர்கள் பிள்ளைகளால் மதிக்கப்படும்
பெருமையான காலங்கள் உருவாகட்டும்

தோற்றவர்கள் வெற்றிபெற்றுக் களிப்பதற்கே
துவண்டிடாமல் சக்திபெற்று மீளட்டும்
மற்றவர்கள் குற்றங்குறை கண்டிடாமல்
மனிதருக்கு மனிதர்களே மதிக்கின்ற
மகத்தான திருநாளாய் தீபாவளி திகழட்டும்!

நளினா பதிலே சொல்லவில்லை. முகம்' இறுகியிருந்தது.

வாரம் சென்றது. ராஜு வரவில்லை.

எட்டாம் நாள் காலை சுமார் ஒன்பது மணிக்கு ஒரு கைவண்டியில் நளினாவின் கட்டில், பீரோ, பெட்டிகள் முதலியவை வந்து இறங்கின. கிழவியும் நானும் வேதனையுடன் தவிக்க, நளினா சலனமின்றி, அவற்றை உள்ளே கொண்டு வரச் சொல்லி வாங்கி வைத்துவிட்டு ஆட்களுக்குக் கூலி கொடுத்து அனுப்பினாள்.

"நளினா, நீ செய்யறது ஆனாலும் நல்லாயில்லே..."

"உன் மருமகனின் தாராள புத்தியைப் பார்த்தியாம்மா? கூலியைக்கூட என்கிட்ட வாங்கிக்கச் சொன்னாராம்!"

"நீதானே சாமான்களை அனுப்பி விடச் சொன்னே?" என்றேன் ஆற்றாமை தாங்காமல்.

நளினா என்னை யோசனையோடு பார்த்தாள். "கடைசியில் ஆம்புளை கட்சிதான் ஆம்புளை!"

"நீ ரொம்பக் கண்டே. இதோ பார் நளினா... அ... அட... ராஜு!"

ராஜுதான். மருமான் - மாப்பிள்ளை ராஜசேகர்.

"அப்பாடா, ராஜு, வந்தியா...! நல்லபடியா உன் பெண்டாட்டியை அழைச்சுகிட்டுப் போப்பா!"

"நான் அதுக்காக வரல்லே மாமா. என்னைத் தூக்கி எறிஞ்சவளை ஆத்திரம் தீரத் திட்டிட்டுப் போக வந்தேன். ஏன் நளினா, கடைசில உனக்கு என்னைவிட முப்பதாயிரம் ரூபா பணம் பெரிசாப் போச்சா?"

"பலே ராஜு! நான் கேக்க வேண்டிய கேள்வியை நீங்க கேக்கறீங்களா? முப்பதாயிரம் கொண்டு வராத போனா நீ வேணாம்னு சொன்னது யார்?"

"முப்பதாயிரம் கொடுக்கறதைவிட உன்னோடு வாழாமலேகூட இருப்பேன்னு சொல்லிட்டு வந்தது யார்?"

நான் குறுக்கிட்டேன். "வீணா சண்டை போட்டுக்காதீங்க. ராஜு, நீ அவள் பேச்சை மனசில் வச்சுக்காதேப்பா. நான் இன்னிக்கே போய் பாங்கிலேர்ந்து பணம் கொண்டு வந்து தரேன். வாங்கிக்கிட்டு நளினாவை அழைச்சிட்டுப் போ".

"அப்பா, நீங்க பணம் கொண்டு வந்து கொடுத்தால் ராஜு பணத்தை மட்டும்தான் எடுத்துக்கிட்டுப் போகணும். நான் அவர்கூடப் போக மாட்டேன்" என்றாள் நளினா மிகத் தெளிவாக.

"என்ன நளினா இது! உங்கப்பாவே ஒத்துக்கறபோது உனக்கென்ன?" என்ற ராஜுவை அடுத்து நானும், "ஆமாம், அவன் பணம் கேக்கறான், நான் கொடுக்கறேன். நீ சும்மா இரு" என்றேன்.

"இது மாமனார் - மாப்பிள்ளை ரெண்டு பேருக்குள் தீர்ந்து போற விஷயமாப்பா?"

"அப்படின்னா?"

"மூணாவது யாரும் இதில் சம்பந்தப்படல்லையா?"

"யார் மூணாவது?"

"மகள். இது என் வாழ்க்கை பற்றியது. இந்த விஷயத்தில் முடிவெடுக்க எனக்கு உரிமை இருக்கு. உங்ககிட்ட ராஜு பணம் வாங்கினால் நான் அவரோடு வாழமாட்டேன். இது நிச்சயம்".

"தனியாய் எப்படி வாழ்வே?" என்றான் ராஜு இகழ்ச்சியாக.

"எங்கப்பா எனக்குக் கொடுத்த படிப்பு இருக்கு".

"படிப்பு இருந்துட்டா போதுமா?"

"படிப்பு ஒரு பெண்ணுக்குத் தன்னம்பிக்கை கொடுக்காட்டி அந்தப் படிப்புக்கு என்ன அர்த்தம்?"

"சந்தோஷமாயிருந்துடுவியா?"

"சந்தோஷம் நம் கையில் இல்லை ராஜு. ஆனா நேர்மையாய் வாழறது நிச்சயம் அவங்கவங்க கையில்தான் இருக்கு. எல்லாத் தேவைகளுக்கும் மனைவியைப் பணயம் வச்சு மாமனார் கிட்டேயிருந்து பணம் பறிக்கிறது அயோக்கியத்தனம். அதுக்குத் துணை போக என் நேர்மை ஒரு நாளும் இடம் தராது".

சிறிது நேரம் அறையில் சப்தமே இல்லை. ராஜுவும் நளினாவும் பார்த்துக் கொண்ட பார்வை! கண்கள் கத்திகளாக இருந்தால் இருவரும் வெட்டுண்டு விழுந்திருப்பார்கள்.

"வீட்டுக்கு வா, பேசிக்கறேன்" என்றான் ராஜு ஒரு யுகத்துக்குப் பிறகு.

"நான் வரமாட்டேன்".

"அட, உங்கப்பாவையா பாங்குக்குப் போகச் சொல்றேன்? உன்னைத்தானே நம்ம வீட்டுக்கு வரச் சொல்றேன்".

என்னால் செவிகளை நம்ப முடியவில்லை. கிழவியும் மலைத்து நிற்பது புரிந்தது.

நளினா நிமிர்ந்து பார்த்தாள்.

"நிஜமா சொல்றீங்களா ராஜு?".

"ஜடம் ஜடம். உன் சாமான்களை அனுப்பிட்டு நான் பாட்டுக்கு என் வேலையைப் பார்க்க வேண்டியது தானே! ஏன் பின்னாலேயே வந்தேனாம்? அத்தை, கொஞ்சம் காப்பி கிடைக்குமா?".

"இதோ!" என்று கிழவி உள்ளே ஓடினாள்.

என் மகளின் முகத்தைப் பார்த்தேன். அந்தக் கணம் என்னை ஒரு கோடீசுவரனாய் உணர்ந்தேன். ❖

## வைரம்

**1949** இல் திருவனந்தபுரத்தில் ஒரு சமயம் சர்.சி.வி. ராமனின் பேச்சைக் கேட்டேன்.

'கிரிஸ்டல்' பற்றிப் பேசினார். வருங்காலத்தில் வைரத்தை சர்வ சாதாரணமாக விஞ்ஞான முறையில் தயார் செய்து விடலாம் என்றும், வைரங்கள் ரொம்ப மலிந்துபோய், நாம் எல்லோரும் செருப்பில்கூட அதை வைத்துக் கொள்வோம் என்றும் கூறினார்.

அவர் பேசிப் போய் 50ஆண்டுகள் ஆகிவிட்டது! இன்னும் அவர் வைரக் கனவு நிறைவேறவில்லை.

சர்.சி.வி. ராமனை விடுங்கள். நீங்கள் வைரம் தயாரிக்க வேண்டுமா? ஒரு சுலபமான வழி தருகிறேன். ஒரு கரித்துண்டை எடுத்துக் கொள்ளுங்கள். அதில் ஓர் அழுத்தம் கொடுங்கள்.

அழுத்தம் கொடுத்தால் போதும். கரித்துண்டு வைரத் துண்டாகிவிடும்.

அந்த அழுத்தம் எப்படிக் கொடுக்கிறது என்கிறீர்களா? அதைத்தான் அமெரிக்கா ஜி.இஸி. நிறுவனமும் செய்து பார்த்தார்கள்... அழுத்தம் கொடுத்ததில் ஆச்சரியம் வைரத் துண்டு உண்டாகிவிட்டது.

ஆனால் போதும் என்று இந்த விஞ்ஞானப் பரிசோதனையை நிறுத்தி விட்டார்கள்.

காரணம் தெரியுமா?

அந்தத் துளி வைரம் செய்கிற செலவுக்கு பூமியைத் தோண்டி வைரம் எடுப்பதே மலிவு என்று தெரிந்து விட்டது.

வைரம் உலகிலேயே கனத்த கல்! அதில் என்ன விசேஷம்? பட்டை தீட்டினால்அந்தப்பட்டைகளிலும் ஒளி வீசும் பாருங்கள்! எல்லாத் திசையும் தீபாவளி! அதனால்தான் உலகம் முழுதும் வைரத்தின் மீது ஒரு மோகம். தவிர வைரம் கிடைப்பது அரிது. அதனால் விலை அதிகம். எனவேதான் ஆபரணத்துக்கு ஆபரணம், ஆஸ்திக்கு ஆஸ்தி என்று இதில் பொருளைக் கொட்டுவார்கள்.

அந்த நாளில் ரோம், ஏதன்ஸ் எல்லா இடங்களில் இந்த வைரங்கள் தான் போய்க் கொண்டிருந்தன. இன்னும் உலகத்தில் பிரசித்தி பெற்ற வைரங்கள் இந்தியாவில் கண்டு எடுத்தவைதான்.

தெரிந்து கொள்ளுங்கள் அருமையான வைரம் என்றால் அதில் லேசாக நீலம் கலந்திருக்கும். மறுவின்றி இருக்கும்! நீல வைரம் கிடைப்பது வெகு அரிது.



நட்சத்திர மாணிக்கங்கள்

மஞ்சள் நிற வைரங்கள் மிக மலிவு வாய்ந்தவை.

பச்சையிலும் பிரவுனிலும் வைரங்கள் உண்டு.

கி.மு. 200லிருந்துகூட இந்திய வைரம்தான் வெளிநாடு சென்றது. போன நூற்றாண்டு வரை நமது ஆதிக்கம்தான் இதில்! ஆனால் ஆப்பரிக்காவில் ஒரு குழந்தை காலில் பட்ட கூழாங்கல் வைரக்கல்லாக மாற, அவ்வளவுதான். ஆப்பிரிக்கா தான் உலகில் வைர உற்பத்தி ஏற்றுமதியில் நம்பர் 1 நாடு ஆகிவிட்டது.

இருந்தாலும் கவலைப்பட வேண்டாம். உலகத்தில் சொந்தக் கை கொடுத்துப் பட்டை தீட்டுவதில் பிரசித்தி பெற்றவர்கள் இந்தியர்கள்தாம்! எனவே ஏராளமான வைரங்கள் இந்தப் பட்டைக்காகவே இந்தியா வந்து திரும்பிப் போகின்றன. இதில் உலகத்தின் டாப் மோஸ்ட்டில் நாம் இருக்கிறோம்.

1. ஆறு பட்டைகள் 2. தூக்க எளிதாக இருக்கவேண்டும். 3. சமசீரான அளவில் எட்டு இதழ்கள் இருக்க வேண்டும். அவை ஒரு கூர்மையில் முடிய வேண்டும். உள்ளே மறு ஏதும் இருக்கக்கூடாது.



நட்சத்திர மேனியாள்

# நவரத்தினங்கள்

புஷ்பா தங்கதுரை

திருப்பதி கிரீடத்தில் மொத்தம் 28,369 வைரங்கள்.

வைரங்களின் மொத்த மதிப்பு 4 கோடியே 50 லட்சம் ரூபாய். இவை தவிர ரூபி, எமரல்ட் கற்களும் விரவப் பட்டுள்ளன. கிரீடத்தின் மொத்த மதிப்பு கிட்டத்தட்ட எட்டரை கோடி ரூபாய்.

சர்.சி.வி. ராமன் பெங்களூரில் தமது அறையில் ஒரு வைரத்தைத் தம் மேஜை மீது வைத்திருந்தார். அந்த வைரத்தின் மீது கண்ணுக்குத் தெரியாத அல்ட்ரா வயலட் கதிர்களைப் பாய்ச்சி வைத்தார். அதனால் வைரம் ஜொலிப்பு அடைந்து, ஒரு பெரிய பிரகாசத்தை அறையுள் கொடுத்தது. இந்த வெளிச்சத்தில் சர்.சி.வி. ராமன் தமது தினசரி பேப்பர்களை அலாதிப் பிரியத்துடன் வாசிப்பார்.



பட்டை தீட்டாத வைரம்.
பெயர் 'கிரேட் ஸ்டார்' 255.61 காரட்.
[illegible]இல் விற்கப்பட்ட விலை ஒரு கோடி டாலர்

ரத்ன பரிக்ஷா நூலின் பிரகாரம் வைரத்தின் குற்றங்கள் ஐந்து.

1. உள் அழுக்கு. அல்லது உள் மங்கல்

2. புள்ளி.

3. கோடு.

4. சிதைவு அல்லது விரிசல்.

5. காக்கைக் கால் தோற்றம்.

ஒருவர் நல்ல வைரம் வைத்திருந்தால் நல்ல பலன்கள் உண்டாகும்.

1. தானம், தவம் இயற்றிய பலன் கிடைக்கும்.

2. எதிரிகளை வெற்றி பெறலாம்.

3. பொருள்கள் வளரும், மக்கள் நலமாக இருப்பார்கள்.

பிறர்க்கு உபகாரம் செய்வார்கள், திறமை மிகுந்தவர்களாகவும் இருப்பார்கள்.

ரத்ன தீபிகா என்ற நூலின்படி வைரங்கள் கிடைத்த இடங்கள், சிங்களம், கலிங்கம், மாதங்கம், இமாலயம், சௌராட்டிரம்.

வைரம் என்பது கரிப்படிகத்தின் இரசாயன மாறுதலே!

ஒரு விஷயம் தெரியுமா? உலகத்தில் வைர வியாபாரம் அனைத்தையும் ஒரே ஒரு நிறுவனம்தான் கண்காணிக்கிறது.

'டீ பீர்ஸ்' சுரங்க நிறுவனம்தான் வைரத்தின் உற்பத்தி, அதன் விநியோகம், இரண்டையும் மேற்கொள்கிறது.

இதற்காக ஒரு மத்திய விற்பனை நிலையத்தை அந்த நிறுவனமே வைத்திருக்கிறது.

உலக வைர விலையை இந்த நிறுவனம்தான் கண் குத்திப் பாம்பாகப் பாதுகாத்து வருகிறது.

நீங்கள் பீர்ஸ்லிடமிருந்து வைரம் வாங்க வேண்டுமானால், அந்த நிறுவனம் அழைப்பிதழ் அனுப்பும் நூறு அழைப்பாளர்களில் ஒருவராக இருக்க வேண்டும். நிச்சயம் இந்த நூறு பேரும் பிரசித்திப் பெற்ற நூறு நிறுவனங்களைச் சேர்ந்தவர்களாக இருப்பார்கள் என்பது உங்களுக்குத் தெரியும்.

பிரிட்டிஷ் ராணியின் பொக்கிஷங்களில் பிரசித்திப் பெற்ற இந்திய வைரம் 'கோஹினூர்' ஒன்று.

கோஹினூர் எடை 800 காரட்! கி.பி. 1304 இல் இருந்தே இது பிரசித்தமானது.

## வைடூரியம்

பூனைக் கண் போல் ஜொலிக்கும். இதை ஆங்கிலத்தில் 'கேட்ஸ் ஐ' என்பார்கள். காரணம், இந்த மணியில்



'பூனைக் கண்' வைடூரியம்



மேற்புறத்தில் ஒரு சிறுபட்டை அளவு ஒளி எப்போதும் பிரதிபலித்துக் கொண்டே இருக்கும்.

ஒருவித வளைவாக வெட்டு செய்தால்தான் இந்த மணியில் பூனைக் கண் மினுமினுப்பு தோன்றும்.

வைடூரியங்கள் விலை மதிப்பு உள்ளவை.

சில அபூர்வ வைடூரியங்களும் உண்டு. ரஷ்யாவில் கிடைப்பவை அவை.

பகலில் இவை பசுமையாகவும் இரவில் ஒருவித சிவப்பாகவும் ஒளி வீசும்.

இந்தக் கற்கள் வெகு அபூர்வம்.

வைடூரியங்களில் சிறந்தவை இலங்கை, பர்மா, பிரேசில் நாடுகளில் கிடைக்கின்றன. வைடூரியம் கடினமானவை. (மோ ஸ்கேலில் எட்டரை).



# கோமேதகம்

'தேன் துளி' போன்ற நிறத்தைக் காட்டுவது கோமேதகம்! கார்னட் என்பது பெயர்.

இந்த வகையில் எத்தனையோ ரகங்கள் உண்டு. ஒவ்வொன்றும் நிறத்தில் வித்தியாசம்.

இரட்டை ஸிலிகேட் இவை! மலிவு விலையில் கிடைப்பவை.

இந்தியா, பிரேஸில், இலங்கை ஆகிய நாடுகளில் கிடைப்பவை.

இந்தக்கல் கடினமானதன்று! ஒரு குணம்! பிரபல நவரத்தினங்களாக நடிக்க முடியும்.

நம் நாட்டில் ஆந்திரா, ஒரிசா, ராஜஸ்தான் மாநிலங்களில் கிடைப்பவை. ஒரிசாவிலிருந்து ஏற்றுமதி ஆகிறது.



டன்ஸானியாவில் கிடைத்த மாணிக்கம் பட்டை தீட்டாதது



மாணிக்கம் பதித்த நெக்லஸ், காதணிகள்.

# மாணிக்கம்

'என் பொல்லாக் கரு மாணிக் கமே!' என்று பெருமாளை அழைக்கிறார் நம்மாழ்வார்.

'மாணிக்கம் கட்டி வைரம் இடை கட்டி ஆணிப் பொன்னால் செய்த கட்டில்' என்கிறார் பெரியாழ்வார்.

அதன் வகைகளை எடுத்தால் தேசமாணிக்கம், கண்டரமாணிக்கம், மாணிக்க நல்லூர் என்று எத்தனை விதங்கள், 'மாணிக்காத்தாள், மாணிக் கம் என்று ஆண் பெண்களின் பெயர்கள்.

ஆக, மாணிக்கம் தமிழகத்தில் சர்வசாதாரண சொல்!

ஏதோ நாகத்தின் தலையில் மாணிக்கம் இருக்கும். நாகம் ரத்தி னத்தைக் கக்கும் என்று எல்லாம் ஏமாந்து விடவேண்டாம். அப்படி ஏதும் நடக்காது.

மாணிக்கம் என்பதும் கல்தான்! கீழே பூமிக்குள் உள்ள இரசாயன சாலையில் வெப்பம், அழுத்தம் இரண்டினாலும் உருமாறும் இரசா யனம்.

ஆங்கிலத்தில் இது 'ரூபி', சிவப்புக் கல்! சிவப்பு என்றால் ரத்தச் சிவப்பு! சோபையான சிவப்பு! கையில் மாணிக்கம் வைத்தால் ஒரு சொட்டு ரத்தம் தேங்கி இருப்பது போல இருக்கும்.

பர்மிய ரூபிகள்தான் இந்தத் துல் லிய அழகு! ஆனால் இதற்கு மேலும் ஒரு ரகம்! 'புறா ரத்தம்' என் பார்கள் அதை! அந்தச் சிவப்புக்கு உவமையே கிடையாது.

பர்மா, இலங்கை, தாய்லாந்து நாடுகளில் ரூபிகள் உள்ளன. பர்மிய சுரங்கங்களில் இப்போது தூர்ந்து விட்டன.

கண்ணை அதிசயத்தில் ஆழ்த்து வது. மாணிக்கங்களில் சிலவற்றில் தெரியும் நட்சத்திரம்! அழகான நான்கு ரேகைகளுடன் இந்த நட்சத் திரம் அசல் ஆகாயத்து வியாழன் போல மின்னும்.

விஷயம் தெரியுமா? வைரத்தைவிட அழகு, ஒளி, ஜொலிப்பு மூன்றிலும் மாணிக்கம் உயர்தரம்!

ஒரே எடை உள்ள வைரத்தை காட்டிலும் மாணிக்கம் விலை அதிகம்.

தென் இந்தியாவிலும், பீகார், காஷ்மீரத்திலும் மாணிக்கம் வெட்டி எடுக்கப்படுகிறது.

தமிழ்நாடு, காங்கேயம் பகுதிகளில் மாணிக்கம் அதிகம். இந்தக் கல் அடர்வான சிவப்பு நிறம் கொண்டது.

ஒரு விஷயம்! மாணிக்கத்தைச் செயற்கையாகவும் செய்யலாம்.

இரண்டாந்தரக் கற்களை முதல் தரம் ஆக்கலாம்! நல்ல சூடு ஏற்றினால் போதும்.

கரூர் – காங்கேயம் பகுதி ரூபிகளை வெப்பத்தில் சுட்டு பர்மா மாணிக்கத்துக்கு நிகராக மாற்றிவிடலாம்.

உலகில் பெரிய மாணிக்கம் நம் நாட்டில் உள்ளது. பெங்களூரைச் சேர்ந்த ஜி. வித்தியாராஜ் என்ற அட்வகேட்டிடம் இருக்கும் 'வித்யாராஜ்' என்ற மாணிக்கக் கல் 650 காரட் கொண்டது.

மாசற்ற மாணிக்கம் அணிந்தால் நிறைந்த செல்வம் அடைவார்கள்.

சதா இன்பமயமான வாழ்க்கையைப் பெறுவார்கள்.

ரூபியை ரத்தினங்களின் தலைவன் என்பார்கள். மாணிக்கத்தில் ஒரு தணியாத் தழல் எரிகிறது என்று நம்பினார்கள். அது தண்ணீரைக் கொதிக்க வைக்கக் கூடியது என்றார்கள்.அரக்கை அது உருக்கி விடும் என்று கிரேக்கர்கள் நம்பினார்கள்.

மாணிக்கத்தைப் பற்றிப் பழைய ரத்ன பரிட்சை நூல் என்ன சொல்கிறது?

இந்தியாவில் ஆந்திரம், தும்பரம், காலாபுரம் தவிர சிங்களத்திலும் கிடைக்கிறது.

அசோகத் தளிர் போன்ற மாணிக்கத்திற்கு 'ஸௌசந்தி' என்று பெயர்.

நீல நிறமுள்ள மாணிக்கத்தை 'நீலகந்தி' என்பார்கள்.

சிவப்பு மாணிக்கத்திற்கு 'பத்மராகம்' என்று பெயர்.

மாணிக்கத்தில் இரு நிறங்கள் கலந்திருந்தால் குற்றம்.

தேன் சொட்டு போன்ற மாணிக்கத்தை 'காமலம்' என்பார்கள். இது ஆயுள், செல்வம், வெற்றி எல்லாம் கொடுக்கும்.

காரணட்ம் என்ற தாதுக்களின் படிக வகைதான் மாணிக்கம்.

(காரணட்ம் என்பது சுத்த அலுமினியம் ஆக்ஸைட்)

'டைமூர் ரூபி' என்ற பிரசித்திப் பெற்ற மாணிக்கம் ஷாஜஹானின் மயில் ஆசனத்தில் பதிக்கப்பட்டிருந்தது. இந்தப் பிரசித்தியான ஆசனம் இப்போது பிரிட்டிஷ் ராணி பொக்கிஷத்தில் உள்ளது.

# பச்சை

# (மரகதம்)

'பச்சை மாமலை போல் மேனி' என்று தொண்டரடிப் பொடியாழ்வார் அரங்கப்பெருமானை வருணிக்கிறார்.

பச்சை என்றால் கண்கள் மட்டும் அல்ல, மனமும் குளிர்கிறது.

அதற்காகத்தான் போக்குவரத்தில் 'போ' என்பதற்கு பச்சை விளக்கை அடையாளம் காட்டினார்கள்!

பச்சை என்பது ஒரு கல்! அதன் அபரிமித பசுமைதான் மனித உள்ளங்களைப் பெரிதும் கவர்ந்திருக்கின்றன. எமரெல்ட் என்று ஆங்கிலத்தில் கூறுவார்கள்.

'மரகதம்' வடமொழி! மரகதம் என்பது பெண்களுக்கு நாம் சாதாரணமாக வைக்கும் பெயர். 'பச்சை' என்று ஆண் பெண் இருவர்களின் பெயர்களும் உண்டு.

பச்சை என்பது கிடைப்பது அரிது! அதனால் அதன் விலை அதிகம்.

ஒரு விசேஷம்! செயற்கை ஒளியில் பச்சையின் நிறம் மாறாது.

ரஷ்யாவிலும், மடகாஸ்கரிலும் கிடைப்பது மரகதம்!

அந்த நாளைய எகிப்திய ராணி கிளியாபாட்ராவிடம் பிரசித்திப் பெற்ற மரகதக் கற்கள் இருந்தன. அவளுக்குச் சொந்தமாக மரகதச் சுரங்கங்களும் இருந்தன.

மன்னர் நீரோ பற்றிக் கேள்விப் படாதவர் யார்? அந்த நாளைய ரோமானிய விளையாட்டுகளை அவர் மரகதக் கல் வழியாகத்தான் பார்ப்பாராம்.

பேங்காக்கில் மரகத புத்தர்

வெட்டி எடுக்கப்பட்ட மரகதக்கல்



நிச்சயம் அது விலை மதிக்க முடியாத மரகதக் காட்சியாக இருந்திருக்கும்.

கொலம்பியா, பிரேசில், இந்தியா, ஆஸ்திரேலியா, ரஷ்யா ஆகிய பல தேசங்களிலும் கிடைப்பவை மரகதம்.

மரகதம் கடினமானது அல்ல! அதனால் பொடித்து விடக்கூடியது! ஏனெனில் நமது நாட்டில் திருநள்ளாற்றில் மரகத சிவலிங்கம் இருக்கிறது. நிச்சயம் இது உலக அதிசயங்களில் ஒன்று.

பாங்காக்கில் மரகத புத்தர் சிலை ஒன்று பிரசித்தியாக உள்ளது.

மரகதத்தில் மதுக்கிண்ணம் அமைப்பது சாகசமான வேலை! மரகதக் கிண்ணங்களில் மது ஊற்றி அருந்திய மாமன்னர்கள் உண்டு!

அடுக்குப் பாறையின் இடுக்குகளில் கிடைப்பது இந்த அபூர்வ மரகதம்! ராஜஸ்தானத்தில் தற்போது வெட்டி எடுக்கிறார்கள்.


நீலக்கல் நெக்லஸில் அழகி


நீலநிற நீலம்


மஞ்சள் நீலமணி


ஆரஞ்சு நீலமணி


பிங்க் நீலமணி


தங்க நட்சத்திர நீலமணி


நீல நட்சத்திர நீலமணி

# நீலம்

மணி என்றால் நீல மணிதான்!

நீலத்திற்கு இணை ஏது நிறம்? அதை ஒரு ஸைகிக்' கலர் என்று கூறலாம். பார்க்கப் பார்க்க ஒரு மர்மமான மனப்பிரமை உண்டாகும்.

நீல ஆகாயம், நீலக் கடல் என்றார்கள்.

நீலம் போல நம்மை அமைதிப் படுத்தும் சக்தி எதற்கும் இல்லை.

நீலத்தை ஆங்கிலத்தில் ஸபையர் என்றார்கள்.

காஷ்மீரில் உயர்வான நீலம் கிடைக்கிறது. அதுவும் மலையில் ஒரு குறிப்பிட்ட உயரத்திற்கு அப்பால்!

காஷ்மீரம் நீலம் பிரசித்திப் பெற்றது.

டச்சு அரசரின் கிரீடத்தில் நடு மையமாக ஒரு பெரிய 'ஸபையர்' உள்ளது.

இந்த நீலக் கல் இந்தியாவில் உதித்தது.

இந்தியாவில் தொன்று தொட்டு நீலமணி நிலவி வருகிறது.

இலங்கை நீலங்கள் சற்று வெளிர் நீலமாக இருக்கும்.

1929 இல் காட்டில் கிடைத்த மணி என்ற பெயருடன் உள்ள நீலமணி தான் உலகிலேயே பெரிது. அதன் எடை 985 காரட்.

'கோரண்டம்' என்ற தாதுப் பொருளின் வகை இது. டிட்டானியம் உலோகத்தின் ஆக்ஸைட் இதனுடன் கலந்திருப்பதால் இதற்கு நீல நிறம் கிடைக்கிறது.

பழைய நூலின் பிரகாரம் நீலம் கங்கை நதிக்கரை, குருட்சேத்திரம் தவிர இலங்கையிலும் கிடைக்கும்.

கனம், மனதைக் கவரும் காந்தி, பூரிப்பு புல்லைப் பிடிக்கும் தன்மை இவைதான் நல்ல நீலமணியின் குணங்களாகும்.

இதைத் தரிப்பவருக்கு செல்வம், ஆயுள், பலம், புகழ் இவை உண்டாகும்.

நீலமணியைப் பாலில் போட்டால் அந்தப் பால் முழுதும் நீலநிறமாகத் தென்படும். இந்த நீலத்திற்கு 'இந்திர நீலம்' என்று பெயர்.

இது சனிபகவானின் ரத்னமாகும். இதைத் தரித்துக் கொண்டால் சனி பகவான் எப்போதும் கருணை உள்ளவர் ஆவார். ஆயுளும் அளவற்ற செல்வமும் கிடைக்கும்.


நிறமில்லா நீலக்கல்


பல நிற நீலக்கல்

# புட்பராகம் (மஞ்சள்)

மஞ்சள் நிறம் கொண்ட மணிகளை புட்பராகம் என்கிறோம். உண்மையில் புட்பராக மணிகள் யாவுமே மஞ்சள் அல்ல! சில வெளிர் மஞ்சள், வெளிர் நீலம், வெளிர் பச்சை எல்லாம்கூட உண்டு. டோபஸ் இதன் ஆங்கிலப் பெயர். 'அலுமினியம் ஸிலிகேட்' இதில் கலந்திருக்கும் தாதுப்பொருள்.

பொதுவாக புட்பராகம் நிறமற்றதாக இருக்கும். அல்லது வெளிர் மஞ்சளாக இருக்கும்.

பிரவுன் வந்த மஞ்சள் புட்பராகம், பிரேஸிலிலிருந்து உற்பத்தியானவை.

ஒரு விஷயம். மஞ்சள் புட்பராகத்தை சூடுபடுத்தினால் அது அழகான ரோஸ், பிங்க் நிறத்தை அடையும்! தற்கால நகை வகைகளுக்கு இது நிரம்பப் பயன்படும்.

ஆகாய நீல புட்பராகங்கள் அயர்லாந்திலும், ஸ்காட்லாந்திலும் கிடைக்கின்றன. இன்னும் ரஷ்யா, இலங்கை, ஜெர்மனி, ஆஸ்திரேலியா, அமெரிக்கா இவைகளில் வெவ்வேறு வெளிர் நிற புட்பராகங்கள் கிடைக்கின்றன.

பெரிய வடிவில்கூட இந்தக் கல் கிடைக்கும்! சிலவற்றில் ஒளி ஊடுருவும். சிலவற்றில் ஊடுருவாது.

நார்வேயில் உள்ள ஒரு பிரசித்திப் பெற்ற புட்பராகம் கிட்டத்தட்ட 137 பவுண்ட்!



பொன் புஷ்பராகம்

நிறமில்லா புஷ்பராகம்

கரும் புஷ்பராகம்



இம்பீரியல் புஷ்பராகம்



# முத்து

முத்துச்சிப்பி உண்டாக்கும் மணி இது! நமது நாட்டில் கொற்கையில் முத்துக் குளிப்பதை மார்கோபோலோ நேரில் பார்த்து எழுதி உள்ளார். கொற்கை முத்துகள் ஒரு காலத்தில் ரொம்பப் பிரசித்திப் பெற்றவை.

பெர்சியா, இந்தியா, சைனா, ஜப்பான், ஆஸ்திரேலியா, பிலிப்பைன்ஸ், மத்திய அமெரிக்கா இவற்றில் கடற்கரையில் முத்துச்சிப்பி உண்டாகிறது.

சிறந்த முத்து வெள்ளை வெளேர் என்று இருக்கும்.

சமயத்தில் க்ரீம் நிறத்திலும், பிங்க் கலந்த ரேகையாகவும் இருக்கும்.

இன்னும் மஞ்சள், பச்சை, நீலம், பிரவுன், கறுப்பு முத்துகளும் உண்டு.

செயற்கை முத்துகளும் ஏராளமாக உற்பத்தியாகின்றன.

கண்ணாடி மணிகளில் கூடச் செயற்கை முத்து உண்டாகி விடுவதும் உண்டு.

பாண்டிய மன்னர் பெரிய பெரிய முத்துகள் நிறைந்த ஆபரணங்களை அணிவார்.

கொற்கையில் கிடைக்கும் பெரிய வடிவ முத்துகள் வெளிநாட்டுக்கு போகா வண்ணம் பாண்டிய அரசர்களே அதற்குத் தக்க விலை கொடுத்து வாங்கிக் கொள்வார்கள்.

'முத்து' என்ற பெயர் பிரபலம்! முத்து நமக்கு சர்வ சாதாரணப் பெயர்

முத்து மாலையை விரும்பாதவர்கள் யார்?

இதன் பளபளப்புக்கு ஈடு ஏது?

முத்துக் கிரீடம் ஒன்று உண்டு. திருவரங்கப் பெருமாளுக்கும்!



வண்ண முத்துக்கள்

கோன்சியாலினும், கால்ஸைட் தாதுவும் கலந்த இரசாயனம்தான் முத்து.

பழைய நூலின் பிரகாரம் முத்து இந்தியா தவிர, சிங்களம் ஆரவாடம் (?) பாரசீகம், பரபரம் (?) தேசங்களில் கிடைப்பவை.

நல்ல வட்ட வடிவமான (உருண்டை) முத்துக்கு 'குணவதி' என்று பெயர்.

நல்ல ஒளிவீசும் முத்துக்கு 'நிர்மலம்' என்று பெயர்.

எடை அதிகம், சந்திரபிம்பம் போன்ற வட்ட வடிவம். இதற்கு 'மனோகரம்' என்று பெயர்.

முத்துகளுக்கு மஞ்சள், வெளுப்பு, நீலம் போன்ற நிறங்களும் உண்டு.

வெண்ணிற முத்து புகழைக் கொடுக்கும்.

மஞ்சள் நிற முத்து சௌபாக்கியத்தைக் கொடுக்கும்.

ஒரு கழஞ்சுக்கு நான்கு முதல் ஒரு முத்து வரை நின்றால் அவை உன்னத முத்துகள் என்று அர்த்தம். அதிக எடை உள்ள முத்து உயர்ந்தது.



முத்துமாலையுடன்
முத்து அழகி

## பவழம்

கடலுள் வாழும் 'பாலிப்ஸ்' என்ற நுண்ணிய பிராணியின் வெளிப்புற எலும்புக் கூடுதான் பவழம்.

இந்தப் பிராணிகள்தான் சிவப்புப் பவழங்களை உண்டாக்குகின்றன. மத்திய தரைக் கடல் பகுதியிலும், பஸிபிக் சமுத்திர கடற்பாறைகளிலும் இவை வளர்கின்றன.

பவழம் கடினமானதன்று அதனால் அழகான வடிவங்களை இவற்றில் செதுக்கலாம்.

பவழம் மெருகு ஏற்றினாலும் சற்று மந்த நிறத்தைக் காட்டத்தான் செய்யும்.

பிரசித்திப் பெற்ற பவழங்கள், வெண்மையாகவும், சுத்த சிவப்பாகவும் இருக்கும்.

வெள்ளை, பிங்க் நிறங்களிலும் பவழம் உண்டு.

பவழம் நம் நாட்டில் தொன்றுதொட்டு நிலவி வரும் மணிகளில் ஒன்று.

'பவழ 'வாய்க் கமலச் செங்கண் என்று திருமாலை வர்ணிக்கிறார் ஆழ்வார்.

பவழத்தின் மீது இத்தாலியருக்கு மோகம் அதிகம்.

ராம சேது சமுத்திரத்தில் பவழமானது கொடியுடன் காணப்படும் என்று ரத்ன பரிட்சை நூலில் சொல்லப்பட்டுள்ளது.

பவழத்தைக் கொதிக்க வைத்தால், கல் போன்ற கெட்டி அடையும்! அப்போது அதற்கு நல்ல சிவப்பு நிறம் ஏறும். உரைகல்லில் உரைத்தால் மங்கலான ஒளியைக் காட்டும்.



பவழ புத்தர்



பவழ மணி மாலை

## கழஞ்சு என்றால் எவ்வளவு?

மூன்று குன்றிமணி எடைக்கு ரூபகம் (பணவிடை) என்று பெயர். பத்து பணவிடை கொண்டதற்கு ஒரு களஞ்சம் (கழஞ்சு) என்று பெயர்.

## ரத்னங்களை சோதிப்பது எப்படி?

ஒன்பது மணிகளையும் நவரத்தினங்கள் என்பார்கள். ரத்தினம் என்பது ஒன்பது மணிகளையும் குறிக்கும்.

பொதுவாக ரத்னங்களை சோதிப்பது எப்படி? ரத்னப் பரீட்சை நூல் என்ன சொல்கிறது?

வைரத்தை வைரத்தால் துவாரம் போடலாம்! போலி வைரமானால் சிதைந்து விடும்.

முத்தை எடுத்து உப்பு நீரால் கழுவ வேண்டும். போலி முத்தானால் உருக்குலைந்து விடும்.

ரத்னத்தை (எந்த மணியாயினும் சரி) அதைக் கரைக்கும்போது மிருதுவாக இருந்தால் அது போலி ரத்னமாகும்.


நவரத்தினங்களில் மோதிரங்கள்

## நவரத்ன மோதிரம் செய்வது எப்படி?

மத்தியில் சூரியன், கிழக்கில் சுக்கிரன், அக்கி திக்கில் சந்திரன், தெற்கில் குஜன், தென்மேற்கில் ராகு, மேற்கில் சனி, வாயு திக்கில் குரு, வடக்கில் கேது, ஈசானியத்தில் புதன் ஆகியவை கிரகங்களின் இடங்கள்.

சூரியனுக்கு மாணிக்கம், சுக்கிரனுக்கு வைரம், சந்திரனுக்கு முத்து, செவ்வாய்க்குப் பவழம், ராகுவுக்குக் கோமேதகம், சனிக்கு நீலம், குருவுக்குப் புட்பராகம், கேதுவுக்கு வைடூரியம், புதனுக்கு மரகதம் ஆகியவை இசைவான நவரத்ன மணிகள்.

எனவே சூரியனின் ரத்னமான மாணிக்கத்தை நடுவில் வைத்து, வைரம், முத்து, பவழம், கோமேதகம், நீலம், புட்பராகம், வைடூரியம், மரகதம் இவைகளை முறையே கிழக்கு திக்கு முதல் ஈசானிய திக்கு வரையில் வைரம் முதல் மரகதம் வரை எட்டு ரத்னங்களையும் வைத்து மோதிரத்தை இழைக்க வேண்டும். இதுவே நவரத்ன மோதிரம்.


பவளச் சிற்பம்


ஒபலில் செதுக்கிய சித்திரம்

நன்றி :

1. நவமணிகள் - டாக்டர் அய்யப்ப எழுதியது (படங்களுக்கும் நன்றி)
2. ரத்ன பரீட்சை
3. ரத்ன தீபிகா
4. Gems
5. Jewellery

## நவக்கிரக பூஜை

சுத்தமான இடத்தில் பீடம் அமைக்க வேண்டும். அதன் மீது சுத்தமான துணியைப் பரப்ப வேண்டும். முதலில் ரத்னங்களை வட்ட அமைப்பாக அமைக்க வேண்டும். பதுமராகத்தை நடுவிலும் சுற்றி முத்து முதலிய ரத்னங்களை அவைகளுக்கு சூரிய (நவரத்ன மோதிர விளக்கத்தைப் பார்க்கவும்) கிழக்கு, தென்கிழக்கு முதலிய திசைகளில் அமைத்து இந்த ரத்னங்களில் சூரியன் முதலிய ஒன்பது கிரகங்களையும் ஒவ்வொரு கிரகத்துக்கும் பிரியமான பூக்களைக் கொண்டு அர்ச்சிக்க வேண்டும்.

## காரட்

ரத்னங்களை எடை போடுவதற்கு காரட் என்ற எடை உபயோகப்படுகிறது. ஒரு பழச் செடியின் விதைகள் இந்த காரட்களாகப் பயன்பட்டன. இதனால் நகரத்துக்கு நகரம் ஊருக்கு ஊர் எடை வித்தியாசப்பட்டது. தற்போது இதை ஒருவித பொது நிலைக்குக் கொண்டு வந்துவிட்டார்கள்.

ஒரு மெட்ரிக் கிராமில் ஐந்தில் ஒரு பங்குக்கு காரட் என்று பெயர். இந்த கிராம் 100 புள்ளிகளாக (பாயிண்ட்ஸ்) உட்கூறுகள் போடப்பட்டிருக்கும்.

# அதிர்ஷ்ட நவமணிகள்

அந்தந்த மாதஙகளில் பிறந்தவர்கள் அந்தந்த மணிகளை அணிந்து கொண்டால் செல்வம், அமைதி, ஆரோக்கியம் முதலியவை பெறுவார்கள்.


ஜனவரி - கார்னெட்


பிப்ரவரி - அமிதிஸ்ட்


மார்ச் - அக்வாமரைன்


ஏப்ரல் - வைரம்


மே - மரகதம் (எமரல்ட்)


ஜூன் - முத்து


ஜூலை - மாணிக்கம் (ரூபி)


ஆகஸ்ட் - பெரிடாட்


செப்டம்பர் - நீலம் (ஸபையர்)


அக்டோபர் - ஒபல்


நவம்பர் - டோபஸ்.


டிசம்பர் - டர்க்வாய்ஸ்


பட்டை தீட்டிய கார்னேலியன்


ராணி முத்துக்களால் ஒரு ஜாடி.

# சிந்தனை முறைகளைச் சீரமையுங்கள்

டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி

ஊரில் ஒரு கல்யாணம், அல்லது கார்த்திகை என்று வந்துவிட்டால் எல்லோரும் கூப்பிடுகிற ஒரு நபர் கண்ணப்பனைத்தான். காரணம், மனிதர் அவ்வளவு அருமையான நிர்வாகி. எதையும் நுணுக்கமாகச் செய்வார்; சிறப்பாகச் செய்வார். தசாவதானிபோலப் பல விஷயங்களை ஒரே சமயத்தில் கையாளக்கூடிய திறமை படைத்தவர்.

அப்படிப்பட்ட மனிதர் என்ன தொழில் செய்கிறார் என்கிறீர்கள்?

ஒரு கடையிலே கணக்கெழுதுபவராக வாழ்க்கையை ஓட்டிக்கொண்டிருக்கிறார்.

யானைக்குத் தன்பலம் தெரியாது என்பதைப்போல, பலருக்கும் தங்கள் வலிமை எதில் இருக்கிறது என்பது புரிவதில்லை. தங்களைத் தெரிந்து கொள்ள அவர்கள் முயற்சிப்பதில்லை; தங்கள் திறமையைப் பூரணமாக உபயோகிப்பதில்லை.

பேச்சுப் போட்டியிலும், வாதங்களிலும் வல்லமை உடைய இளைஞர் - வழக்கறிஞர் தொழிலில் பிரகாசித்திருக்க வேண்டியவர் - மாட்டுப் பண்ணையை நிர்வகித்து வருகிறார். எதையும் 'துரு துரு'வென்று ஆராயும் மனோபாவம் கொண்ட இளைஞர் - விஞ்ஞானத்தில் ஆர்வம் கொண்டவர் - சப்-ரிஜிஸ்டிரார் அலுவலகத்தில் பணியாற்றிக் கொண்டிருக்கிறார்.

## கையிருப்பு - திறமை - வலிமை

பார்த்தோமானால் மிகப்பலர் கிடைத்த ஒன்றில் இறங்கி, "ஏதோ ஒரு வேலை - ஏதோ ஒரு தொழில்" என்று வாழ்க்கையை முடிக்கின்றனர். அவர்களது அந்திமக் காலத்தில்தான் "நாம் அதில் இறங்கியிருக்கலாமோ?" என்கிற ஞானம் ஏற்படுகிறது. இதனால் வாழ்வு தங்களுக்கும், சமுதாயத்திற்கும் பயனின்றி முடிந்து போகிறது.

பக்கத்து வீட்டுக்காரர் மளிகைக் கடை வைத்தார் என்று தானும் வைத்து முதலீட்டை இழந்தவர்கள் ஏராளம். இந்தத் தொழிலை விட்டு விட்டு திடீரென்று வேறு தொழிலில் இறங்கினால் "பிறர் என்ன சொல்வார்களோ - எப்படி விமர்சிப்பார்களோ" என்று தங்கள் திறமைகளைக் கோட்டைவிட்டவர்கள் ஏராளம். தன் கையிருப்பை - தன் திறமைகளை உணராமல் - அவற்றை வெளிக்கொணராமல் - தன்னைப் பூரணமாக காட்டிக் கொள்ளாமல் - மாண்டு போனவர்கள் ஏராளம்.

ராமலிங்க அடிகள் பாடுகிறார் :

"தன்னை யறிந்தின் பமுற - வெண்ணிலாவே
ஒரு தந்திரம் நீ சொல்ல வேண்டும்
வெண்ணிலாவே!"

"தன்னை அறிந்தால் தனக்கொரு கேடில்லை" - என்கிறார் திருமூலர்.

'தன்னையறிதல்' என்பது தனக்குள்ளே இருக்கும் ஆத்மனை அறிதல் - நமக்குள்ளே ஒரு மாபெருஞ் சக்தி குடிகொண்டிருக்கிறது என்பதை உணர்தல் என்பார்கள். அது தத்துவ ரீதியான உண்மை. அதுவும் அவசியம்; ஆனால் அன்றாட வாழ்வில் ஈடுபட்டிருக்கும் நாம், வாய், வயிறு, உறவு என்ற ஜீவ தாகங்களை நிறைவேற்ற வேண்டிய நாம், இந்த நிஜ உலகில் வாழ, நமது கையிருப்பு என்ன, நமது திறமை என்ன, நமது உள்ளுணர்வு எதில் நம்மை உந்துகிறது என்றும் புரிந்து கொள்ள வேண்டும். நம்மைப் புரிந்து கொள்ள வேண்டும்.

அதனால்தான் மார்த்தா ஷ்ரைனர் என்ற ஒரு பெண்மணி இந்த ஒரு மாபெரும் வாழ்க்கை உண்மையை நூலின் தலைப்பாக்கி ஒரு புத்தகம் எழுதி இருக்கிறார்.

"எது உங்களுக்குப் பிடித்த விஷயமோ, தொழிலோ, அதில் ஈடுபடுங்கள். பணம் தானாக வரும்" என்று.

பணம் சம்பாதிக்கும் வாழ்வில், எதில் நிறைய சம்பாதிக்கலாம் என்று பார்க்கிறோமே ஒழிய, எது நமக்குப் பிடித்தது என்று பார்ப்பதில்லை. கல்லூரியில் படிக்கும் மாணவன் எந்தப் பாடம் எடுத்தால் உடனடியாக வேலை கிடைக்கும் என்று படிப்பைத் தேர்ந்தெடுக்கிறானே ஒழிய, தனக்குப் பிடித்த பாடம் எது, அறிவியல் துறை எது என்று தேர்ந்தெடுப்பதில்லை.

'இந்த பஸ்ஸில் இடம் இருக்கிறது' என்று இடம் கிடைத்த பஸ்ஸில் ஏறி உட்கார்ந்து நாம் பயணம் செய்வதில்லை. இது சென்னை செல்லுமா அல்லது செங்கோட்டை செல்லுகிற பஸ்ஸா என்று பார்த்துத்தான் ஏறுகிறோம். அப்படி பஸ்ஸைத் தேர்ந்தெடுக்கும் நாம், நம் வாழ்க்கைப் பயணத்திலோ கிடைத்த வண்டியில் ஏறிக்கொண்டு பயணம் செய்கிறோம்.

ஒரு சிலர்தான், வாழ்வில் சில ஆண்டுகள் ஆனவுடன் நாம் தவறான வண்டியில் ஏறியிருக்கிறோம் என்பதை உணர்ந்து, அதிலிருந்து இறங்கி சரியான வண்டியைத் தேர்ந்தெடுக்கிறார்கள்.

விகடன் துணை ஆசிரியர் மதன், சென்னை மாநிலக் கல்லூரியில் பௌதிகம் படித்தவர். உள்ளுக்குள்ளே ஓவியம் வரையும் ஆர்வம். எனினும் அவர் ஓர் ஓவியப்பள்ளிக்குச் சென்று பயிற்சி பெற்றதில்லை. படம் போடுவதோ, கார்ட்டூன் போடுவதோ ஒரு மதிக்கத் தகுந்த - நல்ல வருவாயைக் கொடுக்கக்கூடிய தொழிலாக இல்லாதிருந்த காலகட்டம். எனினும் மதன் விகடனில் கார்டூனிஸ்டாக சேர்ந்தார். ஒரு தலை சிறந்த கார்டூனிஸ்டாக ஆசிரியராக வெளிவந்தார். இன்று அகில உலகிலும், விஷயம் தெரிந்தவர்கள் போற்றும் மனிதராகத் திகழ்கிறார்.

## உள்ளுணர்வு

நமக்குள்ளே ஒரு மகத்தான சக்தி இருக்கிறது. அதற்குப் பெயர் உள்ளுணர்வு. அந்த உள்ளுணர்வு பல விஷயங்களை நமக்குத் தெரிவிக்கிறது. செல்ல வேண்டிய திசையைக் காட்டும் அடையாளங்களாகச் சில சமயம் வாழ்வில் சில அறிகுறிகள் - சகுனங்கள் தென்படுகின்றன. சில சமயம், நம் உணர்வு நம்மை உந்தி நம்மைச் சில திசைகளில் கொண்டு தள்ளுகிறது. சில சமயம் நம் தலைக்குள் யாரோ பேசுவது போன்ற குரல் கேட்டுக்கொண்டே இருக்கிறது, "இங்கே போ. இப்படிச் செய்" என்று வழி காட்டுதலாக.

சில சமயம் அடிவயிற்றிலிருந்து ஓர் உணர்வு எழுகிறது, 'இப்படிச் செய்யாதே' என்று. நாம் புரிந்து கொள்வதில்லை. அதற்கு மதிப்புக் கொடுக்காமல் தர்க்கவாத உலகின் அறிவால் ஈர்க்கப்பட்டு நாம் மாறுபட்ட காரியத்தைச் செய்யத் துவங்கி மாட்டிக் கொள்கிறோம்.

நம்மை வழிகாட்டி நடத்திச் செல்லும் மனிதன் நம்முள்ளேதான் இருக்கிறான்! அவனுக்கு மூலாதாரம் எனப்படும் ஒரு மாபெரும் புலனாகாப் பெருஞ்சக்தியுடன் தொடர்பு உண்டு. அந்த உள்மனிதனை நாம் உணர்ந்து கொள்ள வேண்டும்; புரிந்து கொள்ள வேண்டும்; வாழ்வில் பயன்படுத்த வேண்டும். நாமோ தீர்வு



களுக்காக வெளியிலே தேடுகிற அளவுக்கு உள்ளே தேடுவதில்லை.

### அனுபவ பள்ளிக்கூடம்

காசு, பணம், சம்பளம் என்று ஏதும் பெறாமல் பொதுத்தொண்டு மட்டுமே செய்யும் ஒரு நிறுவனத்தில் வந்து சேர்ந்தார் ஒரு மனிதர், நிர்வாகி என்ற பெயரில். அவருடைய இயல்போ அதிகாரம், 'தான்' என்ற ஆணவம், 'உலகையே உடனடியாகப் புரட்டி விடலாம்' என்ற மனோபாவம். மனித உறவுகளாலும், இனிமையான அரவணைப்பாலும் வளர்ந்து வந்த அமைப்பு இவர் கையில் சின்னா பின்னப்பட்டுக் கொண்டிருந்தது. அந்தப் புதிய மனிதர் தன் கையிருப்பை உணர்ந்து கொள்ள வில்லை. அந்த அமைப்பின் கையிருப்பை - அதன் நீரோட்டத்தை உணர்ந்து கொள்ளவில்லை.

அனுபவம் என்கிற பள்ளிக்கூடத்தில்தான் மூடர்கள் கற்றுக் கொள் கிறார்கள். புத்திசாலியோ பிறருடைய அறிவுரையிலிருந்தும், அனுபவத்தில் இருந்தும் தன் வாழ்வைத் திருத்திக் கொள்கிறான்.

கிராமத்திலே பிறந்த என் நண்பர், பரஞ்சோதி மிகப் பெரிய மனிதராக வாழ்வில் உயர்ந்தவர். அவருடைய அண்ணன் கிராமத்திலே பிறந்த மனிதர், தன் தம்பிக்கு எழுதினார் : 'தம்பி! உலகில் சரியான நேரம் எது என்று எல்லோரும் லண்டனிலுள்ள 'கிரீன்விச்' நேரத்தைப் பார்த்துத் தங்கள் கடிகாரத்தைச் சரி செய்து கொள்வார்கள். அதுபோல நீ பிறருடைய வாழ்க்கையைப் பார்த்துப் பார்த்து உன் வாழ்க்கையைச் சரி செய்து கொண்டிருக்கிறாய்" என்று.

### சிந்தனையைச் சீரமையுங்கள்

சொல்லப் போனால், நாம் சிந்திப்பதில்லை. ஒரு காரியத்தைச் செய்வதற்கு முன்போ, ஒரு காரியம் நிகழ்ந்த பின்னோ, அதைப்பற்றி ஆராய்வதில்லை. ஒரு காரியத்தின் வெற்றிக்கோ தோல்விக்கோ காரண மாய் இருந்த உள் உண்மையை உணர்ந்து கொள்வதில்லை. அறிவும் அனுபவமும் வெளிஉலகிலிருந்து பெறுகிறோம். ஆனாலும் உள் நோக்கி அந்த அறிவையும் அனுபவத்தையும் தீரப் பரிசீலிப்பதன் மூலமே வாழ்க் கைக்கு அதன் பாடத்தை நாம் உபயோகித்துக் கொள்ள முடியும்.

சாதனை, செயல் எல்லாம் சிந்தனையில், மனித மனத்தில் தோன்றும் எண்ணங்களில்தான் தோன்று கிறது. நம்மிடமுள்ள பழக்க வழக் கங்கள் எல்லாம் - நம்முடைய குணங் கள் எல்லாவற்றிற்கும் காரணம் நமது சிந்தனைகள்தான் - எண்ணங்கள் தான்.

வெளி உலகில் நமக்கு நேரும் தோல்வியையும் துன்பங்களையும் கண்டு மனம் பதைக்கும். நாம் அதன் மூல காரணமென்ன என்று பின் னோக்கிச் சென்று அதன் எண்ண மூலத்தை உணர்வதில்லை. விளைவு களின் காரணம் நமது செயல்கள் தான். நமது செயல்களின் காரணம் நமது நம்பிக்கைகள்தான். நமது நம் பிக்கைகளின் மூலகாரணம் நம் மனத் தில் கொண்டிருந்த எண்ணங்கள் தான். எனவே நமது வாழ்வில் நிகழும் விளைவுகள் வேறுவிதமாக இருக்க வேண்டுமானால் என்ன செய்ய வேண்டும்? எண்ணங்களைச் சீரமைத்துக் கொள்ள வேண்டும். தீய விளைவுகளோ, நமக்குப் பிடிக்காத விஷயங்களோ நமது தொழில் நஷ்டங்களோ, நம் தோல்விகளோ எதை நிரூபிக்கின்றன?

நாம் கொண்டிருந்த எண்ணங்கள் சரியில்லை என்பதைத்தான். நமது கட்டட அமைப்பின் 'டிசைன்' சரி யில்லை என்பதைத்தான் அது காட்டு கிறது. நாம் எண்ணங்கள் என்ற 'புளூ பிரிண்டை' (BLUE PRINT) மீண்டும் மாற்றி புதிய வரைபடம் போட வேண்டும். இப்படித்தான் சொல் கிறார் ஞானகுரு ஜேம்ஸ் ஆலன்.

அதனால்தான் சொல்கிறார்கள், இன்றைய தொழில் கல்வி போதிக்கும் பேராசிரியர்கள் : "ஒரு நிறுவனம் நஷ்டத்தில் ஓடிக்கொண்டிருந்தால், அல்லது தேக்க நிலையை அடைந் தால் அங்கே உள்ள அமைப்புகளை மாற்றி அமைக்க வேண்டும் - அங்கே உள்ள மனிதர்களை இடமாற்றம் செய்ய வேண்டும் என்று பேசு கிறார்கள். நிர்வாகம், தனது எண்ணங் களை முதலில் மாற்றிப் சீரமைக்க வேண்டும் என்ற அடிப்படையை மறந்து விடுகிறார்கள்:

"போட்டியாளர்கள் ஒரு தரமான ஒரு புதிய பொருளை விற்க முன் வந்தால் அதுபற்றிக் கவலைப்படும் நிர்வாகிகள் அதன் மூலகாரணங்களை அறிய, அதை நிரந்தரமாகக் கிள்ளி எறிய தங்களது சிந்தனை முறையை வலுப்படுத்திக் கொள்வதில்லை; கவனம் செலுத்துவதில்லை" என்று கூறுகிறார்கள்.

ஒரு நாட்டில் ஆகட்டும், ஒரு நிறுவனத்தில் ஆகட்டும், எங்கும் - தேவையான அடிப்படைப் பொருட் கள் இருக்கின்றன. அதாவது மனிதர்கள், கச்சாப் பொருட்கள், உழைப்பு, அதன் விளைவாக வரு மானம் என்று எல்லாம் இருக்கின்றன.

நிர்வாகிகளுக்கு - நாட்டுத் தலைவர் களுக்கு - எதற்காக சம்பளம் கொடுக் கப்படுகிறது? தங்களிடமுள்ள கச்சாப் பொருள்களையும், மனிதர்களையும்,



மூலதனத்தையும் எப்படிப் பயனுள்ள முறையில் பயன்படுத்தினால் அதிக லாபம் நன்மை பெற முடியும் என்று சிந்திப்பதற்காகத்தான் சம்பளம் கொடுக்கப்படுகிறது. சரியான சிந்தனை – சரியான யோசனை – சரியான எண்ணம் மட்டும் இருந்துவிட்டால் அதற்குப் பிறகு திட்டம், செயல், உழைப்பு என்பனவெல்லாம் தானே தொடரும். செயல்புரிவதில் தீவிரம் காட்டும் பலர், செயலுக்கு மூல காரணமான சிந்தனை சரியாக இருக்கிறதா என்று யோசித்துப் பார்ப்பதில்லை; சிந்திக்க நேரம் எடுத்துக் கொள்வதில்லை.

சிந்தனையிலே பலவேறு கோணங்கள் இருக்கின்றன. ஒரு கச்சாப் பொருளை வாசனைத் தைலத்திற்கு வாங்குகிறோம் என்றால், அதன் நிறம், மணம், அதன் அடர்த்தி, அதன் நச்சுத் தன்மை, அதன் விலை, மக்கள் அந்த வாசனையை விரும்புவார்களா என்கிற விஷயம் – என அதைப் பல்வேறு கோணங்களிலே ஆராய்கிறோம்.

அதேபோல நமது எண்ணங்களையும் எண்ண அமைப்பு முறையையும் –

அது நல்ல, தோதான, புதிய யுக்தியா?

பிரச்னையைத் தீர்க்குமா?

நல்ல முடிவுதானா?

தோல்வி ஏற்பட வாய்ப்பிருந்தாலும் பெரும்பாலும் வெற்றி தரும் திட்டம்தானா?

தொலை நோக்கில் நல்ல பலன் தருமா என்று பல்வேறு கோணங்களில் நாம் ஆராயவேண்டும்.

அப்படி ஆராய்ந்து நிதானமாக ஒரு முடிவுக்கு வரவேண்டும்.

எனது பம்பாய் நண்பர் ஒருவர் தன்னைப் பற்றிச் சொன்னார் : "நான் ஒரு விஷயத்தை எடுத்துக் கொண்டேனானால், பல நாள் – பல மாதங்கள் அதைப் பற்றிச் சிந்தித்து கொண்டிருப்பேன். பார்ப்பதற்கு நான் வேலை ஏதும் செய்யாதது போலத் தோன்றும். என் மனத்தில் தீவிரமாகச் சிந்தித்து, சிந்தித்து ஒரு முடிவுக்கு வந்து விட்டேனானால் உடனடியாகச் செயல்பட ஆரம்பித்து விடுவேன். விரைவில் காரியம் முடிந்து விடும்" என்று.

என் மனத்தைவிட்டு அகலாத சம்பவம் அவர் சொன்ன வார்த்தைகள்.

## "கெய்சன்" – தொடர்ந்த முன்னேற்றம்

அத்துடன் ஒன்றே ஒன்றைச் சேர்த்துக் கொள்ளுங்கள். ஜப்பானியர்கள் இன்றைய நிர்வாக அறிவில் ஒரு புதிய சொல்லைச் சேர்த்திருக்கிறார்கள். அதன் பெயர் 'கெய்சன்' (KAIZEN) என்பதாகும். அதன் பொருள் – தொடர்ந்த கண்காணிப்பு. தொடர்ந்த முன்னேற்றம்.

நமது சிந்தனையின் விளைவுகளைத் தொடர்ந்து கண்காணித்துக் கொண்டிருக்க வேண்டும். விளைவுகள் நாம் எதிர்பார்த்த பாதையிலிருந்து கீழே இறங்குமானால் மீண்டும் எண்ணங்களைச் சீரமைத்துத் திருத்த முயல வேண்டும். எண்ணங்களையும் விளைவுகளையும் கண்காணிக்க வேண்டும். அப்போதுதான் வெற்றி – முன்னேற்றம் தொடர்ந்து ஏற்படும்.

நமது நாட்டின் தேக்கத்திற்கு மூல காரணம் என்ன என்று யோசியுங்கள்.

எது முக்கியம் (PRIORITY) என்பவை முன்னே எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறதா என்று யோசியுங்கள். 65 சத மக்கள் விவசாயத்தை நம்பி வாழும்போது அவர்கள் வாழ்வில் முன்னேற்றம் காண வழிவகுத்தோமானால்தான் நாட்டில் பொருளாதார முன்னேற்றம், பரவலாக ஏற்படும். செய்தோமா என்று சிந்தியுங்கள்.

அல்லது முக்கியமல்லாத விஷயங்களில், மதம், மொழி, சாதி என்று கவனம் இறங்கிவிட்டதா என்பதையும் யோசியுங்கள்.

அடுத்து, திட்டமும் வளர்ச்சியும் தொடர்ந்து கண்காணிக்கப்படுகிறதா என்று பாருங்கள். அரசியல் கடிவாளங்களான, நீதிமன்றம், சட்டசபை, அரசாங்க இயந்திரம், பத்திரிகைகள் என்ற நான்கும் தொடர்ந்து அரசியல் தலைமையைக் கண்காணித்துச் சுதந்திரமாக இயங்குகின்றனவா அல்லது ஆட்சியாளர்களைச் சார்ந்து நிற்கின்றனவா என்று யோசியுங்கள்.

தொடர்ந்த முன்னேற்றத்திற்கு வழி தொடர்ந்த கண்காணிப்பு; அடிப்படையில் எது முக்கியம், எது தேவை என்ற தெளிவு, தன் வளமைகளை – தன் கையிருப்புகளை – முழுமையாக உபயோகிக்கும் புத்திசாலித்தனம். ஒரு நிறுவனத்திற்கும் சரி; நாட்டுக்கும் சரி.

❀

## பணம்

முதலில்
அவர்கள் இருவரும் நண்பர்கள்.
மூன்றாவதாக வந்தது பணம்
மூன்றாவதாக வந்த
பணத்துக்கு
'முதல்' என்று பெயரிடப்பட்டது.
மூன்றாவதாக வந்த முதலால்
முதலில் வந்த அவர்கள்
மூன்றாம் மனிதர்களாகிப்
போனார்கள்!
அடே... யப்பா
பணம்!

அமுதபாரதி

# செல்லாக் காசு



ஆனந்தமூர்த்தி ஒய்வு பெற்று சொந்த ஊருக்குத் திரும்பி ஒரு மாதத்துக்கு மேலாகிவிட்டது. பல தனியார்த் துறை நிறுவனங்களும், வடக்கே சில மாநிலங்களும் பலமுறை கேட்டுக் கொண்டும் அவர் தமக்கு அளிக்கப்பட்டப் பதவிகளில் நாட்டம் காட்டவில்லை. சென்னை என்ஜினியரிங் கல்லூரியில் பட்டம் பெற்ற உடனேயே ஜூனியர் என்ஜினியர் பதவி. எட்டு ஆண்டுகளுக்குப் பிறகு உதவி என்ஜினியர். அதன் பின்னர் பல ஆண்டுகளுக்குப் பின் நிர்வாக என்ஜினியர். ஐம்பத்தைந்தாம் வயதில் மாநிலத்தின் மூன்று தலைமை என்ஜினியர்களில் ஒருவர். கடமை கண்ணியம் கட்டுப்பாடு இவைதான் பிரணவ மந்திரம் என்று அவர் அரசுக்கு அயராது உழைத்தபோதிலும் பதவி உயர்வுகள் கிடைத்துக் கொண்டுதான் இருந்தன.

கடைசி நாள் அன்று பிரிவு உபசார விருந்து நடந்தது. ஆனால் அவரிடம் வேலை பார்த்தவர்களோ, கண்ட்ராக்டர்களோ அளிக்கவில்லை. அவரே ஐந்து மணிக்குத் தம்மிடம் வேலை பார்க்கும் சிப்பந்திகளையெல்லாம் வீட்டுக்கு அழைத்து மாபெரும் விருந்தை அளித்தார். சிப்பந்திகளுக்கெல்லாம் நினைவுப் பரிசுகளும் வழங்கினார். இது இலாகாவிலேயே ஒரு பரபரப்பை ஏற்படுத்தியது. ஆனந்தமூர்த்தி ஓர் அசடு என்று மற்ற உயர்மட்ட என்ஜினியர்கள் கூறினார்கள். இதையும் பாராட்டாக ஏற்றுக் கொண்டு ஓய்வு பெற்ற மறுநாளே மனைவியுடன் சொந்த ஊர் திரும்பினார்.

ஒரு வெள்ளிக்கிழமை காலை. மணி ஒன்பது. ஆனந்தமூர்த்தி வாசல் வெராந்தாவில் ஒரு கூடை நாற்காலியில் அமர்ந்து அன்றைய தினசரியைப் படித்துக் கொண்டிருந்தார். திடீரென்று ஒரு கார் வரும் ஓசை கேட்கவே, பேப்பரை விலக்கிவிட்டுப் பார்த்தார். கார் நின்றது. ஓட்டி வந்தவர் மிகவும் சிரமப்பட்டுத் தம்முடைய பருமனான உடலை வெளியேற்றி நின்றார். ஆனந்தமூர்த்திக்கு அடையாளம் தெரியவில்லை. ஆனாலும் எங்கேயோ எப்போதோ பார்த்த நினைவு வந்தது.

தழையத் தழைய வெள்ளை வெளேரென்று வேட்டி, சில்க் ஜிப்பா. தோளில் தொங்கிய அங்கவஸ்திரத்தின் நுனி முழுங்கால் வரை ஒடியது.

அவருடைய அலாதியான நடை, பொறி தட்டினாற்போல அடையாளம் காட்டியது. சின்ன வயதில் இதே ஊரில் தன் தந்தையின் ஆடுமாடுகளை மேய்த்து, பள்ளி ஆசிரியரின் முகத்தில் சுண்ணாம்பைத் தெளித்து, அதன் காரணமாகப் பள்ளியிலிருந்து விடுதலை பெற்று சைக்கிளில் பால் தவலைகளைக் கட்டிக் கொண்டு பழநி வரை சென்று, அதன் பிறகு ஒரு சிறு கண்ட்ராக்டராகப் பதிவு செய்து கொண்ட வேலுசாமி! ஒரு அரசியல் கட்சியில் தொண்டனாக ஆரம்பித்து, அடியாளாக உயர்பதவி பெற்று மூன்று முறை தேர்தல்களில் டெபாசிட்டை இழந்து நாலாவது தடவை நின்று எம்.எல்.ஏ.வாக வந்த வேலுசாமி! இப்போது மாஜி எம்.எல்.ஏ. வேலுசாமி!

இவன் எதற்கு இங்கே இப்போது வருகிறான்? ஆனந்தமூர்த்தி யோசித்துக் கொண்டிருக்கையிலேயே, படி ஏறி வந்த மாஜி மாடு மேய்த்த, சுண்ணாம்பு அடித்த, பால் விற்ற, கண்ட்ராக்டர் வேலை செய்த எம்.எல்.ஏ.

“வணக்கம் என்ஜினியர் ஐயா. என்னைத் தெரியுதா?”

“வா, வேலுசாமி...”

“அப்ப நினைவு வைச்சிட்டிருக்கீங்க!”

“மறக்க முடியுமா?”

“நீங்க இந்த ஊர்ல ஜூனியர் என்ஜினியரா இருந்தப்பத்தான் நான் காண்ட்ராக்டராக தொழில் ஆரம்பிச்சேன்”.

“மொதல்ல உட்காரு”.

“அந்தக் காலத்தில் நான் உங்க முன்னால ஒக்கார்ந்ததில்லை”.

“அது அந்தக் காலம், உட்காரு”.

“நீங்க மாஜி சீஃப் என்ஜினியர்”.

“நீ மாஜி எம்.எல்.ஏ. நான் மறுபடியும் அந்த நாற்காலியிலே உட்கார முடியாது. ஆனா நீ மறுபடியும் எம்.எல்.ஏயா வரலாம். ஏன் மந்திரியாவும் வரலாம்... யோசிச்சுப் பார்த்தா இப்ப நான்தான் எழுந்து நிக்கணும்”.

“அய்யய்யோ தப்பு தப்பு... வீட்ல அம்மா சவுக்கியமா? புள்ளை பாஸ்கர் பாம்பேயிலே சவுக்கியமா...? பொண்ணு மஞ்சு அமெரிக்காவிலே சவுக்கியமா?”



பி.வி.ஆர்.

ஆனந்தமூர்த்தி ஆச்சரியப்பட்டுப் போனார்.

"நாம சந்திச்சு முப்பது வருஷத்துக்கு மேலாறது. ஆனா என்னைப் பத்தி எல்லாம் தெரிஞ்சு வைச்சிருக்கியே..."

"உங்க நேர்மை பேர்ல அப்படி ஒரு பக்தி. சத்தியமா சொல்றேன் ஐயா, உங்களை மாதிரி ஆகணும்னு நான் ரொம்ப ஆசைப்பட்டிருக்கேன். அரசியல்லே விழுந்தேனா, முடியாமல் போச்சு. இப்பத்தான் கொஞ்சம் கொஞ்சமா என்னை நானே மாத்திட்டு வரேன்".

"மாறினா சரி. என்ன சாப்பிடறே, காபியா, டீயா?"

"ஒண்ணும் வேணாம் ஐயா..."

"அதெல்லாம் முடியாது".

"அப்ப மோர் குடுங்க..."

ஆனந்தமூர்த்தி சிரித்தார்.

"ஏன் சிரிக்கிறீங்க ஐயா?"

"மோர்னப்ப தயிர் ஞாபகம். தயிர்னப்ப பால் ஞாபகம். பால்னப்ப பசுமாடு ஞாபகம். பசுமாட்டோட ஆடு, மாமரம் அரிசி மணிலாக் கொட்டை, பயிறு எல்லாம் ஞாபகத்துக்கு வந்தது".

"இன்னும் மறக்கலையா, ஐயா?"

"அது எப்படி முடியும், வேலுசாமி? இரு. மோர் கொண்டு வரேன். கூடவே அந்த ஃபைலையும் கொண்டு வரேன்".

"அது இன்னுமா இருக்கு?"

"நீ ஆரம்பிச்ச கதையாச்சே! மறக்க முடியுமா?" ஆனந்தமூர்த்தி சிரித்துக் கொண்டே உள்ளே சென்றார்.

அவர் மீண்டும் மோரும் ஒரு பழைய ஃபைலுமாகத் திரும்பி வந்தார்.

"வேலுசாமி, மொதல்ல மோரைக் குடி. அப்புறம் நானே ஃபைலைப் படிக்கிறேன்...."

"எதுக்கு ஐயா?"

"மோர் நல்லதுக்குப்பா..."

"அதில்ல ஐயா... ஃபைல்..."

"நம்ம ரெண்டு பேருக்கும் இது மறக்கும் நினைவல்லவா... தமாஷா இருக்கும்... இப்ப நினைச்சாலும் எனக்கு சிரிப்பு வருது, வேலுசாமி".

"சரி... எனக்கு என்ன நஷ்டம்... நானும் சிரிக்கிறேன்!" சொல்லி விட்டு வேலுசாமி மோரைக் குடித்து முடித்தான்.

ஃபைல் பாராயணம் ஆரம்பமாகியது.

## 1

மா. வேலுசாமி.
கண்ட்ராக்டர் PWD
ஐய்யன்குளம்
(வேடசந்தூர் அருகே)
திண்டுக்கல் தாலுகா
மதுரை மாவட்டம்.

தேதி.
16.8.60

மாண்புமிகு அமைச்சர் அவர்களுக்கு கண்ட்ராக்டர் மா. வேலுசாமி எழுதி சமர்ப்பிக்கும் விண்ணப்பம்.

நான் கடந்த இரண்டு ஆண்டுகளாக மராமத்து இலாகாவில் ஒரு சிறு கண்ட்ராக்டராகப் பணி ஆற்றி வருகிறேன். சிறுசிறு வேலைகளே எனக்கு அவ்வப்போது ஜுனியர் என்ஜினியரால் தரப்பட்டு வருகிறது. இதுவரையில் ஐயாயிரத்துக்கும் அதிகமான பெறுமானமுள்ள வேலை ஒன்று கூட அளிக்கப்படவில்லை. ஜுனியர் என்ஜினியர் கந்தசாமி அவர்கள் தொடர்ந்து இருந்திருந்தால் இந்த விண்ணப்பம் எழுதி அனுப்ப வேண்டிய அவசியமே ஏற்பட்டிராது. எட்டு மாதங்களுக்கு முன் அவரை பரம்பிக்குளத்துக்கு மாற்றிவிட்டார்கள். அவருக்குப் பதிலாக ஆனந்தமூர்த்தி என்பவர் ஜுனியர் என்ஜினியராகப் பதவி ஏற்றிருக்கிறார். பெயருக்கு ஏற்றாற்போல ஆனந்தமாக இருக்கும் நபர் இவர். நான் கடுமையாகவும் நேர்மையாகவும் உழைப்பவன். அப்படி இருந்தும் என்னுடைய வேலைகளில் வேண்டுமென்றே குற்றம் குறைகளைக் காண்கிறார். எப்போதுமே அரிக்கும் கை, இந்த ஆனந்தமூர்த்தியின் கை. பிறக்கும் போதே லஞ்சத்துடன் பிறந்தவர். பல வழிகளில் பல கண்ட்ராக்டர்கள் அவரைத் திருப்தி செய்து தத்தம் காரியங்களைச் சாதித்துக் கொள்கிறார்கள். மருதாசலம் எனும் கண்ட்ராக்டர் சென்ற வாரம் இரண்டு மூட்டை அரிசியை இந்த என்ஜினியருக்குக் கொடுத்து தம் காரியத்தைச் சாதித்துக் கொண்டார். மயில்சாமி என்கிற இன்னொரு கண்ட்ராக்டர் ஒரு மூட்டை பயறு கொடுத்தார். இப்படி ஏதாவது கொடுத்தால்தான் காரியம் நிறைவேறும் என்ற எண்ணத்தில் நான் அவரை அணுகினேன். உன்னால் என்ன கொடுக்க முடியும் என்று கேட்டார். கேளுங்கள் என்றேன். என் மனைவி ஊருக்குச் சென்றிருக்கிறாள், திரும்பி வர ஒரு மாதம் ஆகும். அதுவரையில் என்னுடன் இரவு மட்டுமே தங்க ஒரு இளம் பெண் வேண்டும் என்றார். நமக்குக் காரியம் தானே முக்கியம் என்று அன்றே திண்டுக்கல்லுக்குச் சென்று மரகதம் என்ற ஓர் இருபது வயதுப் பெண்ணை இந்த ஜுனியர் என்ஜினியர் ஆனந்தமூர்த்திக்கு அனுப்பி வைத்தேன். இதன் பிறகு மணிலாக் கொட்டை கேட்டார். கொடுத்தேன். என் தந்தை பால் வியாபாரம் செய்து வருவதை அறிந்து கொண்டு, ஒரு பசுமாடு வேண்டும் என்றார். புளியம்பட்டி வரை சென்று முன்னூறு ரூபாய்க்கு ஒரு பசுமாடு வாங்கி, நானே அவருடைய வீட்டுக்குச் சென்று கட்டி வைத்தேன். இவ்வளவெல்லாம் செய்தும் இந்த ஜுனியர் என்ஜினியர்



என்மீது இரக்கம் காட்டவில்லை. மேலும் கடுமையாக நடத்துகிறார். போனவாரம் மரகதம் எனும் பெண் தான் கர்ப்பமாகி இருப்பதாகக் கூறி 'ஓ'வென்று கதறி அழுதாள். எனக்குத் தெரிந்த ஒரு மருத்துவச்சியிடம் அவளை அழைத்துச் சென்று கர்ப்பத்தைக் கலைக்க வேண்டியதாயிற்று. இதற்கு நானூறு ரூபாய் செலவு. இதை நான் என்ஜினீயரிடம் கூறிய போது, அவர் இளக்காரமாகச் சிரித்தார். தான் மட்டும் பொறுப்பு இல்லை என்றார்.

பெண், பசு, தானியங்கள் எல்லாம் லஞ்சமாகப் பெற்றுக் கொண்டும் எந்த உதவியும் செய்யாத இந்த ஜூனியர் என்ஜினியர் மீது கடும் நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று அடிபணிந்து கேட்டுக் கொள்கிறேன்.

தாங்கள் எங்கள் தொகுதியில் எம்.எல்.ஏவாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு நம் தொகுதியே பெருமை அடையும் வகையில் மந்திரியானவர். தங்களுக்கு ஓட்டு அளித்த பல்லாயிரக் கணக்கானவர்களில் நானும் ஒருவன்.

இந்த ஜூனியர் என்ஜினியர் ஆனந்தமூர்த்தி இந்த இடத்தைவிட்டு ஒழிந்தால்தான், என்னைப் போன்ற சிறு கண்ட்ராக்டர்கள் வயிறு கழுவ முடியும்.

இப்படிக்கு தங்கள் தொண்டன்,

மா. வேலுசாமி.

## 2

வேடசந்தூர் கண்ட்ராக்டர் மா. வேலுசாமியின் புகார்க்கடிதம் PWD செக்ரட்டரியின் பார்வைக்கும் விசாரணைக்கும் அனுப்பப்படுகிறது.

(ஒப்பம்)

மந்திரிக்காக

தேதி - 14.9.60

தலைமைச் செயலகம்

பொதுப்பணித்துறை இலாகா.



## 3

சீஃப் என்ஜினியரின் பார்வைக்கும் நடவடிக்கைக்கும் வேடசந்தூர் மா. வேலுசாமியின் புகார்க் கடிதம் அனுப்பப்படுகிறது.

(ஒப்பம்) காரியதரிசிக்காக

தேதி - 3.10.60.

## 4

திருச்சி வட்டம் சூப்பரண்டெண்டிங் என்ஜினியர், மா. வேலுசாமியின் புகாரை உடனே விசாரித்து, ரிபோர்ட் அனுப்பக் கேட்டுக்கொள்ளப்படுகிறார். பதில் 25.11.60க்குள் வந்து சேரவேண்டும்.

(ஒப்பம்) சீஃப் என்ஜினியருக்காக.

தேதி - 10.11.60.

இணைப்பு : மா. வேலுசாமியின் புகார்க் கடிதம்.

## 5

மதுரை நிர்வாக என்ஜினியருக்கு கண்ட்ராக்டர் மா. வேலுசாமி எழுதியிருக்கும் புகார்க் கடிதம் இத்துடன் அனுப்பப்படுகிறது. உடனே விசாரித்து, தக்க பதிலை 24.11.60க்குள் அனுப்ப வேண்டும்.

(ஒப்பம்) சூப்பிரண்டெண்டிங் என்ஜினியருக்காக.

தேதி - 22.11.60

## 6

திண்டுக்கல் உதவி என்ஜினியருக்கு கண்ட்ராக்டர் மா. வேலுசாமியின் புகார்க் கடிதம் இத்துடன் அனுப்பப்படுகிறது. உடனே விசாரணை செய்து பதில் அனுப்ப வேண்டும்.

(ஒப்பம்) மதுரை நிர்வாக என்ஜினியருக்காக

தேதி - 30.11.60

## 7

வேடசந்தூர் ஜூனியர் என்ஜினியர் திரு. ஆனந்தமூர்த்திக்கு, கண்ட்ராக்டர் மா.வேலுசாமியின் புகார்க் கடிதம். அனுப்பப்படுகிறது. பதில் உடனே அனுப்பவும்.

(ஒப்பம்) உதவி என்ஜினியர்.

தேதி - 17.12.60

## 8

தலைமைச்செயலகம்

பொதுப்பணித் துறை இலாகா

3.10.60 தேதியிட்ட கடிதத்துக்கு சீஃப் என்ஜினியரிடமிருந்து இன்னும் பதில் வரவில்லை. 25-1-61க்குள் பதில் அனுப்பும்படி சீஃப் என்ஜினியர் கேட்டுக் கொள்ளப்படுகிறார்.

(ஒப்பம்) செக்ஷன் ஆபீசர்

தேதி - 2-1-61.

## 9

*சீஃப் என்ஜினியர் அலுவலகம்*

3-10-60 தேதியிட்ட கடிதத்துக்கு சூப்பிரண்டெண்டிங் என்ஜினியரிடமிருந்து இன்னும் பதில் வரவில்லை. அரசுச் செயலாளர் 25.1.61க்குள் பதில் வரவேண்டும் என்று கட்டளையிட்டிருக்கிறார். உடனே பதில் தேவை.

(ஒப்பம்) சீஃப் என்ஜினியருக்காக

தேதி - 26.1.61

## 10

22.11.60 தேதியிட்ட கடிதத்துக்கு நிர்வாக என்ஜினியர் இன்னும் பதில் அனுப்பவில்லை. அரசுக்கு உடனே பதில் அனுப்ப வேண்டியிருப்பதால் 31-1-61க்குள் பதிலை நேரடியாக அனுப்பவும்.

(ஒப்பம்) சூப்பிரண்டெண்டிங் என்ஜினியருக்காக

தேதி - 27-1.61

## 11

திண்டுக்கல் உதவி என்ஜினியர் 30.11.60 தேதியிட்ட கடிதத்துக்கு இன்னும் பதிலளிக்கவில்லை. திருச்சி வட்டம் என்ஜினியரின் கடிதத்தை அப்படியே அனுப்பியிருப்பதால், அதையும் உடன் கொண்டு வரும்படி உதவி என்ஜினியர் கேட்டுக் கொள்ளப் படுகிறார்.

நிர்வாக என்ஜினியருக்காக

தேதி 12.2.61

## 12

வேடசந்தூர் ஜுனியர் என்ஜினியர் ஆனந்தமூர்த்தி அவர்களுக்கு,

என்னுடைய 17.12.60 தேதியிட்ட கடிதத்துக்கு இன்னும் பதில் இல்லை. மா. வேலுசாமி எனும் கண்ட்ராக்டர் என்ன புகார் அனுப்பியிருக்கிறார்? புகார்க் கடிதத்துடன் உடனே வரவும்.

உதவி என்ஜினியர் (திண்டுக்கல்)

தேதி - 23.2.61

## 13

(உதவி என்ஜினியர் அவர்களுக்கு வேடசந்தூர் ஜுனியர் என்ஜினியர் எழுதிய கடிதம்)

தேதி - 4.3.61

மா. வேலுசாமி யாரைப் பற்றி என்ன புகார் யாருக்கு எழுதினார் என்பது விளங்கவில்லை. புகார்க் கடிதத்தின் நகல் அனுப்பினால் பதில் கூறுகிறேன்.

ஆனந்தமூர்த்தி

ஜுனியர் என்ஜினியர்.

மா. வேலுசாமி சிரித்தார்.

"போதும் ஐயா, போதும்". ஆனந்தமூர்த்தி விடவில்லை.

"போதும்னா எப்படி, வேலுசாமி? நீ எழுதின புகார்க் கடிதமே இந்த ஃபைலல இருக்கே... திண்டுக்கல் ஏ.இ., மதுரை எக்சிகியூடிவ் என்ஜினியர்ட்ட புகார்க் கடிதத்தோட நகலைக் கேட்டார். அவர் திருச்சி எஸ். இ.ட்ட கேட்டார். எஸ்.இ., மெட்ராசுக்கு தந்தி அடிச்சார். மெட்ராஸ்ல சி.இ. செக்ரடேரியட்டுக்கு ஆளை அனுப்பினார். நீ எழுதின புகாரை அப்படியே அனுப்பியிருக்காங்க. யாரும் நகல் எடுக்கலே. மந்திரியும் மாறிட்டார்".

"தெரியும் ஐயா".

"இப்ப எனக்கு வயசு அம்பத்தெட்டு முடிஞ்சுட்டுது. நான் கேக்கறதுக்குப் பதில் சொல்லு. மரகதம்ங்கற இருபது வயசுப் பொண்ணுக்கு இப்ப வயசு அம்பது இருக்காது? அவ எங்கே? அவ கர்ப்பத்தைக் கலைச்ச மருத்துவச்சி எங்கே? அவ பேர் என்ன? நீ தந்த புளியம்பட்டி பசு மாட்டோட நிறம் என்ன? மருதாசலமும் மயில்சாமியும் எனக்கு வேறு என்னென்ன கொடுத்தாங்க, சொல்லு".

"ஐயா அதையெல்லாம் விடுங்க... இளம் வயசிலே எனக்கு உங்க பேர்ல ஆத்திரம். நான் சரியா வேலை செய்யலேதான். நீங்க கடுமையா நடந்துக்கிட்டீங்க. உங்களைப் பணத்தாலேயோ பொருளாலேயோ அடிக்க முடியாதுன்னு எல்லாரும் சொன்னாங்க. என்ன செய்யறது? இப்படி ஒரு புகார்க் கடிதம் எழுதி அனுப்பினால் நம்ப மந்திரி உதவி செய்வாரு. உங்களை வேற இடத்துக்கு மாத்துவாருன்னு தோணித்து. ஒண்ணு ரெண்டு பேர்ட்ட இதுபத்திப் பேசினேன். எல்லாரும் சொன்னாங்க, நேர்மையான அதிகாரியை மாத்த அவர்மேல புகார் எழுதி அனுப்பறதுதான் சரியான வழின்னு..."

"ஆனந்தமூர்த்தி சிரித்தார்.

"என் கைக்கு மேலிடத்திலேர்ந்து உன் லெட்டர் கிடைச்சதும் நான் அசரலே. மடியில கனம் இருந்தாத்தானே பயம் இருக்கும்? ஆனா லெட்டரை எப்படிப் பைசல் பண்றதுன்னு யோசிச்சேன். ரெண்டு வழி தெரிஞ்சுது. ஒண்ணு, பதில் அனுப்பறது. நீ சொல்றதெல்லாம் அபாண்டம்னு வாதிப்பது. ஆனா இதனாலே என்ன நடக்கும்? மேலே மேலே விசாரணை வரும். உன்னையும் என்னையும் உட்கார வைத்து, எக்ஸிகியூடிவ் என்ஜினியர் விசாரிப்பார். நான் ரொம்ப எளிதா மடக்கிடலாம். மொதல்ல மரகதம்ங்கற பொண்ணையும், அவ கர்ப்பத்தைக் கலைச்ச மருத்துவச்சியையும் அழைச்சுட்டு வாம்பேன். நீ தந்த பசு மாட்டை யார்ட்டே வாங்கினே, அவனைக் கூட்டிட்டுவான்னு சவால் விட்டிருப்பேன். நீ அங்கேயே அப்போதே மண்ணைக் கவ்வியிருப்பே. அதுக்கு அப்புறம் என்னவாகும்? உனக்குக் கிடைச்சிட்டிருந்த ஒண்ணு ரெண்டு காண்ட்ராக்ட் வேலையும் இல்லாமல் போயிருக்கும். உன் அப்பா பேரு கெட்டுப் போயிருக்கும். ரெண்டாவது வழி? உன் புகார் லெட்டர் அப்படியே அலுங்காம எனக்கு வந்திருக்கு. இதுக்கு ஒரு நகல்கூட எடுத்து சீஃப் என்ஜினியர் ஆபீஸ்ல வைச்சிருக்கமாட்டாங்கன்னு நெனைச்சேன். நான் நெனைச்சது சரின்னு சீஃப் என்ஜினியர் ஆபீஸ்ல இருந்த என் நண்பன் மூலமா ஊர்ஜிதம் ஆச்சு. அப்புறம் என்ன? கம்முன்னு இருந்தேன். கடைசி கட்டமா நானே என்கிட்ட இருந்த உன் லெட்டரோட நகலைக் கேட்டேன். அவ்வளவுதான், கேஸே முடிஞ்சுட்டுது..."

"ஆமாங்க... ஆனா எப்படி முடிஞ்சுதுன்னு இப்பத்தான் விவரமாத் தெரிஞ்சுது. உங்களுக்கு ஒண்ணு ஞாபகம் இருக்கா ஐயா?"

"என்ன வேலுசாமி?"

"நானும் அப்புறம் உங்ககிட்ட வேலை கேட்டு வரலே..."

"ஆமாம். என்ன செய்தே அப்புறம்?"

"பி டபிள்யு டியை விட்டுட்டு ஹைவேஸ் டிபார்ட்மெண்ட்டுக்குப் போயிட்டேன். என் அதிர்ஷ்டம் அங்கே உங்களை மாதிரி ஒரு என்ஜினியர் இருக்கலே... ரிப்பேரே பண்ணாத ரோடுகளுக்கெல்லாம், ரிப்பேர் பில் போட்டேன். ரெண்டு வருஷம் என் வண்டி நல்லாவே ஓடிச்சு. அப்புறம்தான் அரசியல்ல இறங்கினேன்... பில் போடாமலே காசு கிடைக்கிற இலாகா அரசியல் இலாகாதான்னு தெரிஞ்சுது".

"பிழைக்கத் தெரிஞ்சவன்".

"அரசியல் கத்துக் கொடுத்துடும் ஐயா... கடைசியா எம்.எல்.ஏ. ஆனப்புறம்தான் மகாலட்சுமி கண்ணு முன்னாடி வந்தா..."

"இப்ப என்ன செய்யறே..."

"பால் பண்ணை நடத்திட்டு வரேன் ஐயா... நூத்தம்பது மாடு. எல்லாம் டெல்லி எருமை - வைச்சுட்டிருக்கேன், கூட்டுறவு சங்கத்துக்கு வித்துடறேன்... நான் கொடுக்கிற பாலுக்கு ஸ்பெஷல் ரேட்னா தரத்தைப் பார்த்துக் கொள்ளுங்க, ஐயா!"

"பால் மட்டும் தரமா இருந்தாப் போதாது வேலுசாமி. மனசும் அதே வெண்மையோட இருக்கணும்".

"இப்பவும் கொஞ்சம் கறுப்பா கலங்கலாத்தான் இருக்கு. ஆனா மெல்ல மெல்ல சரியாயிடுவேன்".

"ஒரு வழி இருக்கு".

"என்ன ஐயா?"

"ஒரே ஓர் ஆசையை விட்டுடணும்".

"என்ன ஐயா அது, சொல்லுங்க..."

"பணத்தாசை!"

வேலுசாமி ஒரு நிமிடம் ஆனந்த மூர்த்தியைக் கூர்ந்து பார்த்தான்.

பிறகு –

"இது கொஞ்சம் கஷ்டம் சார்".

"ஏன் கஷ்டம்?"

"கூடப் பிறந்த வியாதி".

"தினசரி இங்கே வா... என்னோட ஒரு மணி நேரம் இரு. அப்புறம் உன் கூடப்பிறந்த வியாதி எப்படிப் பறந்து போறதுன்னு பாரு".

"மன்னிக்கணும் ஐயா..."

"ஏம்ப்பா வேலுசாமி?"

"ஒரு புள்ளை டாக்டருக்குப் படிக்கறான். இன்னொருத்தன் என்ஜினியரிங். ரெண்டு பொண்ணுங்க... வயசு பதினெட்டு பதினாறுன்னு. வெறும் நூத்தம்பது மாடுகளை வைச்சுட்டு எல்லாத்தையும் கரைசேர்க்க முடியாது".

"அப்ப நீ என்னதான் செய்துட்டு வரே..."

"சொல்லட்டுமா?"

"சொல்லு..."

"அரசியல் தரகனா இருந்துட்டு வரேன். பணம் நிறையப் புரளுது... இன்கம்டாக்சும் கட்டவேணாம்".

"அரசியல் தரகனா..."

"ஆமாம் ஐயா... வேலை வாங்கிக் கொடுக்க ஒரு ரேட், டிரான்ஸ்பர்னா வேற ஒரு ரேட்... பிரமோஷன்னா...

"சரி சரி புரியுது".

"இன்னிக்கு ராத்திரி மெட்ராஸ் போறேன். ஒரு என்ஜினியரை சஸ்பெண்ட் பண்ணியிருக்காங்க...அவரை விடுவிச்சு வேலையில உட்கார வைக்கணும். அம்பது ரூபாய் கெடைக்கும். ரெண்டு பொண்களுக்கும் வைரக் கம்மல் வாங்கறதா உத்தேசம்".

"நீ எந்த என்ஜினியரைப் பத்திப் பேசறேன்னு எனக்குத் தெரியும் வேலுசாமி".

"உங்களுக்குத் தெரியும்னு எனக்கும் தெரியும் ஐயா... நீங்கதான் அவரை சஸ்பெண்ட் பண்ண அரசுக்கு சிபாரிசு பண்ணினீங்க. நீங்க செய்ஞ்சது கரெக்ட்தான்... இந்த ஆளும் ஒரு மாதிரிதான். ஆனா என் கால்ல விழுந்துட்டானே... என் கையும் அரிக்குதே?"

ஆனந்தமூர்த்தி சிரித்தார்.

"ஜமாய் வேலுசாமி. இது உன்னை மாதிரி உள்ளவங்களுக்குப் பொற்காலம். நேர்மை, நாணயம் எல்லாம் செல்லாக் காசாகி விட்டது".

"நாமும் காலத்துக்கு ஏத்தபடி நடந்து கொள்ளணும் ஐயா! அப்பப்ப கீதை, யேசு, காந்தின்னு சொல்லிட்டே நம்ப காரியத்தைக் கவனிச்சுக்கணும். நான் வரேன் ஐயா..."

"நல்லாயிரு, வேலுசாமி".

ஆனந்தமூர்த்தி அவன் படி இறங்கித் தன் காரை நோக்கிச் செல்லுவதையேப் பார்த்தவராய் அமர்ந்திருந்தார்.

ஒரே ஒரு கேள்வி மட்டும் அவருள் எழுந்தது.

அவர் தம் வாழ்க்கையில் ஒரு மாபெரும் தவறைச் செய்துவிட்டாரோ, ஏன் நேர்மை கூடப் பிறந்த வியாதியாகி விட்டது?

மறுகணமே கேள்வி மறந்தது.

இந்த வியாதி நல்ல வியாதிதான். பயப்படுவதற்கு ஒன்றும் இல்லை.




# பூண்டி மகான்

கடவுளைக் காண முயல்வோர்களை பக்தர்கள் என்றும், கண்டு தெளிந்தோர்களைச் சித்தர்கள் என்றும் தேவாரம் குறிப்பிடுகிறது. அநுபூதி ஞானம் பெற்றவர் சித்தர் என வழங்கப்படுகின்றார். சித்தர்கள் எல்லா சமயத்திற்கும் அப்பாற்பட்ட சர்வசமய சமரச சன்மார்க்கத்தினையே கடைப்பிடிப்பவர்கள்.

சித்தர்கள் தங்கள் ஆத்ம சாதனைகளின் மூலம் பெரும் சக்திகள் பெற்று அழிவற்ற அமரநிலை எய்தியவர்கள். எல்லா சித்தர்களின் அநுபூதி அனுபவத்தில் எவ்வித வேற்றுமையும் கிடையாது. மேலும், யோகசக்தியினால் 'வாசி' என்ற மூச்சினைத் தன்னுள் அடக்கியாண்டு, யோக சக்தியின் கனவினால் உடலிலுள்ள மூலாதாரம், தொப்புள், இதயம், இரைப்பையின் நடுக்கழுத்து, தலைமுடி ஆகிய இடங்களில் மனதை முறையாகக் கட்டி, குண்டலினியை எழுப்பி, பலப்பல அனுபவமும், வெற்றியும் பெற்று, முப்பாலுக்கும் அப்பாலிருக்கும் பரவெளியில் நிலைத்து எல்லாச் சித்தியும் பெற்றவர்களே சித்தர்கள்.

கண் விழித்திருந்தும் குருடர்களாய், செவியிருந்தும் செவிடர்களாய், வாயிருந்தும் ஊமையர்களாய்க் காட்சி தருவார்கள். அவர்கள் பித்தரைப் போலவும், குழந்தைகளைப் போலவும் உலவுவார்கள்.. இவ்வுலகம் சித்தர்களால் நிலைபெறுகிறது.

அத்தகைய வித்தகச் சித்தர்களில் ஒருவர் பூண்டி மகான். பரமகுருவாகிய முருகப் பெருமானே நம் முன்னே பூண்டி என்ற சிற்றூரில் ஆற்று சுவாமிகளாகத் தோன்றி ஒரே இடத்தில் பத்தொன்பது ஆண்டுகளுக்கு மேல் அமர்ந்து அருளாசி வழங்கியவர்கள் அவர்கள். கலியுகத்தில் கருணைக் கடலாக விளங்கிய பூண்டி மகான் பிணியால் வாடியவர்களுக்கும், பில்லி சூனியம் போன்ற சைத்தான்களுடன் உழன்றவர்களுக்கும், ஊனமுற்றவர்களுக்கும், மதிகெட்டவர்களுக்கும் ஆசிகூறி விபூதி வழங்கி குணமடையச் செய்தவர்கள். பிள்ளைப்பேறு இல்லாதவர்களுக்கும் குழந்தைகள் பிறக்க அருளாசி வழங்கியவர்கள்.

பூண்டி மகான் ஒரு குழந்தை. ஆம், தெய்வக்குழந்தை! பேசும் தெய்வம். அண்மையில் வாழ்ந்து மறைந்த மகான்களில் பூண்டி மகான் மிகச் சிறந்த சித்தர். மனதில் உள்ள குறைகளை அவர்களிடம் நாம் தெரிவிக்கச் சென்றால், அக் குறைகள் தாமாகவே விலகிவிடுகின்றன. சுவாமிகளின் பார்வையே பல குறைகளைப் போக்கிவிடும். அவர்கள் கையில் விபூதி பெற்றுக் கொண்டவுடன் நமக்குப் புத்துணர்ச்சி ஏற்படும்.

வடஆற்காடு மாவட்டம் திருவண்ணாமலை - போளூர் நெடுஞ்சாலையில் கலசப்பாக்கம் அருகில் செய்யாற்றின் கரையோரம் உள்ளது பூண்டி என்னும் சிற்றூர். அங்கே பூண்டி மகான் 1959 ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் பன்னிரண்டாம் நாள் ஒரு சிறு திண்ணையில் வந்தமர்ந்தார்கள். அதன்பின் எழுந்து நடக்கவில்லை. உலவவுமில்லை. கட்டை போலக் காட்சியளித்தார்கள். பக்கத்திலே குப்பை குவிந்திருக்கும். அவை யாவும் பக்தர்கள் பயபக்தியுடன் அளித்த அன்புக் காணிக்கையான தேங்காய்கள், பழங்கள், இனிப்புப் பண்டங்கள், மலர்கள் ஆகும். அவை ஒருபோதும் கெட்டுப் போவதில்லை.

தம்மை நாடி வரும் ஆயிரக்கணக்கான பக்தர்களுக்கு இன்சொல் வழங்கி வந்தார்கள். எப்பொழுதும் சாந்தமுகத்துடன் இருக்கும் சுவாமிகளின் பார்வை மிகவும் கூர்மையானது. எவ்வளவு பேர் வந்தாலும் யார் யார் முகம் எந்த எண்ணத்தைப் பிரதிபலிக்கிறது என்பதை தமது ஒரு சில வார்த்தைகளாலேயே கூறிவிடுவார்கள். எக்காலத்துக்கும் மனித குலத்திற்கு நன்மையே செய்யவேண்டும்; மக்கள் நல்லொழுக்கத்துடனும், பக்தி சிந்தனையுடனும் நல்லவர்களாகவே வாழவேண்டும்; அதற்காகவே மெய்தவம் செய்து கொண்டிருந்தார்கள் பூண்டி மகான்.

பல ஆண்டுகளுக்கு முன் பூண்டி மகான் பக்கிரி வேடத்தில் கலசப்பாக்கம் ரயில் நிலையத்தில் வந்து இறங்கினார்கள். காக்கரை சுடுகாட்டில் சென்று தங்கினார்கள். முட்புதர்கள் நிறைந்த அந்த இடத்தையே பஞ்சணை மெத்தையாக ஏற்றார்கள் அருள் வள்ளலாகிய சுவாமிகள். கலசப்பாக்கம் தங்கவேல் நயினார் மகா பக்திமான். அவர் பூண்டி மகான் என்ற பக்கிரியைத் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்று அமுது படைப்பது வழக்கம்.

ஒரு சமயம் வில்வாரணி கணக்கப்பிள்ளை சுவாமிகளைத் தன் இல்லத்திற்கு அழைத்துச் சென்றார். அமுது படைத்து, இரவில் ஓர் கயிற்றுக் கட்டிலில் சுவாமிகளைப் படுக்கும்படி வேண்டினார். சுவாமிகளின் மீதுள்ள அன்பால், அவர்களைத் தன் வீட்டிலேயே தங்க வைக்க விரும்பி, வீட்டுக் கதவை வெளியே பூட்டிவிட்டார். நள்ளிரவில் பூட்டு பூட்டியபடியே இருக்க, சுவாமிகள் வெளியே வந்து மாட்டுக்குத் தண்ணீர் வைக்கும் தொட்டியிலுள்ள ஐந்து குடம் தண்ணீர் முழுவதையும் அப்படியே வாயால் உறிஞ்சிக் குடித்த அதிசயத்தைக் கண்ட கணக்கப்பிள்ளை பயந்து திடுக்கிட்டார். தவறு செய்து விட்டோமே என அஞ்சி, சுவாமிகளின் காலில் விழுந்து கதறி அழ, கருணைக் கடலான பூண்டி மகான் புன்னகை புரிந்து கணக்கப்பிள்ளையை ஆசீர்வதித்தார்கள்.

ஆதியில் சுவாமிகள் கலசப்பாக்கத்தில் ஆற்று மணலிலே ஆலயமாக அமைத்து, மழை, வெயில், கடுங்குளிர் எதையும் பொருட்படுத்தாது அங்கேயே தங்கி, அழுக்கேறிய ஆடையில் காட்சியளித்தார்கள். அவர்கள் ஆற்றிலே குடியிருந்ததால் 'ஆற்று சுவாமிகள்' என்று அழைக்கப் பெற்றார்கள்.

நாளடைவில் கலசப் பாக்கத்தைக் கைகழுவி பூண்டியில் குடிபுகுந்தார்கள். முதலில் சுவாமிகள் ஒரே இடத்தில் தங்கவில்லை. பூண்டி இடுகாடு, அம்மன் கோயில் முதலிய இடங்களிலும், ஆற்று ஓரங்களிலும் அமர்ந்து சுவாமிகள் கடுந்தவம் புரிந்தார்கள். பிரயாம்பட்டு பிள்ளையார் கோவில் பூந்தோட்டத்தில் ஒரு சிவலிங்கம் உள்ளது. அவ்விடத்திலும் சுவாமிகள் அமர்ந்து அருந்தவம் இயற்றினார்கள். அதுசமயம் அவர்கள் எவரையும் குடிக்கத் தண்ணீர்கூடக் கேட்டதில்லை.

இவ்வாறு சுவாமிகள் எவரிடமும் எதையும் எதிர்பாராது கடுந்தவம் புரிந்த காலத்தில் கலசப்பாக்கம் ஓட்டல் அதிபர் கோபால் நயினார், கடலாடி சிவானந்தம் ஆகியோர் சுவாமிகளைத் தேடி ஆகாரம் கொண்டுபோய்க் கொடுப்பர். அவர்கள் பக்தியைச் சோதிப்பதுபோல் சில நேரங்களில் சுவாமிகள் அவர்கள் கண்களுக்கு அகப்படுவதில்லை. அதனால் அன்பர்கள் மனம் சலித்துப் போவார்கள். கடலாடி சிவானந்தம் சுவாமிகளுக்குப் புத்தாடை கொண்டு வந்து அணிவிப்பதுண்டு. சுவாமிகள் பழைய ஆடைகளைக் களையாமலே அவற்றின் மீதே புத்தாடைகளைப் போட்டுக் கொள்வார்கள். அப்போது சுவாமிகள் கடுந்தவத்தில் மூழ்கி முத்துக் குளித்த காலம். அதனால் அவர்கள் நாள் கணக்காக ஒரே இடத்தில் அமர்ந்து தியானம் செய்வார்கள். ஒரொரு சமயம் கர்ப்பம் கலங்க சிம்மக் கர்ச்சனை செய்வார்கள். இறுதியாக 1959 ஆம் ஆண்டு பூண்டியில் ஒரு சிறு திண்ணையில் அமர்ந்தார்கள்.

பூண்டியைச் சேர்ந்த திரு. சுப்பிரமணியசாமி என்பவர் சுவாமிகளுக்கு ஆறுகால பூசையும், உணவும் அளித்துத் தொண்டு புரிந்தார். சுவாமிகள் அவர் ஒருவரைத்தான் தம்மை அபிடேகம் செய்ய அனுமதித்தார்கள்.

அவரே சுவாமிகளிடம், "தங்கள் ஊர், பெயர், தாய், தந்தையார் யார்?" என்று பலமுறை கேட்டதுண்டு. ஆனால் கிடைத்த பதிலோ, "அதெல்லாம் தேவ ரகசியம், உனக்கேன்பா?" என்பதே. ஆனால், சுவாமிகளின் இயற்பெயர் சண்முகானந்தர் என்று தெரிய வருகிறது.

தபோவனத்துச் சித்தர் தெய்வத் திரு. ஞானானந்தகிரி சுவாமிகள், "நம் நாட்டில் கோடிக்கு ஒருவர் பூரண ஞானியாய்த் திகழ்கிறார்கள். அவ்விதம் திகழ்பவர்களில் பாதிக்கு மேல் தென்னாட்டில் உள்ளார்கள். அவர்களைத் தரிசித்தாலே போதும் நமது பாவம் குறைந்து, புண்ணியம் கூடும்" எனக் கூறி என்னை பூண்டி மகானைத் தரிசிக்கப் பணித்தார்கள்.

அவ்விதமே பூண்டி மகானைத் தரிசித்துப் பழங்கள், மலர்கள் அளித்து, தேநீரும் வாங்கிப் பருகக் கொடுத்தேன். அவர்கள் சிறிது குடித்துவிட்டு, மீதியை என்னிடம் அளித்தார்கள். அதனை நான் மன மகிழ்ச்சியுடன் பருகினேன். சுவாமிகள் எனக்கு விபூதி அளித்து ஆசி வழங்கினார்கள். பின்னர் ஏதேதோ பேசினார்கள்.

அவர்களிடம் நான் விடைபெற்று வந்து, தெய்வத்திரு ஞானானந்தகிரி சுவாமிகளிடம், "பூண்டி மகானைத் தரிசித்தேன். ஆனால், அவர்களோ தெளிவாய் மனங்கலந்து பேசவில்லை" என்றேன்.

அதற்கு சுவாமிகள், "நாம் நதியில் சென்று நீராடுகிறோம். நமது உடம்பிலுள்ள அழுக்கும், சூடும் அகல்கின்றன. உடல் நலமும், சுகமும் பெறுகிறது. நாம் நதியில் நீராடுவதால் நதிக்கு யாதொரு பயனுமில்லை. அதேபோல், அப்பெரியாரின் அருள் ஒளியில் நாம் சென்று வந்தால் நமது பாவம் அகலும். அறிவு தெளிவுறும். மனத்திடமும், நம்பிக்கையும் ஏற்படும். அவர்கள் நம்முடன் மனங் கலந்து பேசத் தேவையில்லை. நல்லாரைக் காண்பதே நன்று" என்றார்கள்.

அதன்பின் பலமுறை பூண்டி மகானைத் தரிசித்து அருளாசி பெற்றேன். ஒரு சமயம் தவத்திரு கிருபானந்த வாரியார் அவர்களுடன் சென்று சுவாமிகளைத் தரிசித்தேன். சுவாமிகள் சரீர நினைவின்றி சுத்த பரப்பிரும்மமாகக் காட்சி அளித்தார்கள். தம் உடம்பையும் உலகத்தையும் மறந்து சீவன் முக்தராக விளங்கினார்கள். அவர்களைத் தரிசித்துப் பணிவார் வினைகள் தணிவார் என்பது திண்ணம்.

தவத்திரு கிருபானந்தவாரியார் அவர்கள் ஒரு சமயம் பூண்டி மகானிடம் உரையாடியபோது, சுவாமிகள், "திருவாரூர் மடப்புரம் தட்சிணாமூர்த்தி சுவாமிகளை நான் பார்த்திருக்கிறேன்" என்றார்களாம். தட்சிணாமூர்த்தி சுவாமிகள் இருநூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர். திருவாரூரில் சீவ சமாதி அடைந்தவர். அவரை சுவாமிகள் பார்த்திருக்கிறேன் என்றதால் சுவாமிகளுக்கு இருநூறுக்கு மேல் வயதிருக்கும் என்பது புலனாகிறது.

மகான்களும், யோகிகளும் ஒரு போதும் மறைவதில்லை. பூண்டி மகான் தமது உடலைத்தான் சட்டையைக் கழற்றுவதுபோல் கழற்றிவிட்டுச் சூட்சும உடம்புடன் வாழ்கிறார்கள். அவர்கள் 3-11-1978 இல் சமாதி நிலை அடைந்தார்கள். அவர்கள் இன்றும் பலருக்குக் காட்சியும், தரிசனமும தருகிறார்கள் என்று அவர்களது அன்பர்கள் மனப்பூர்வமாக நம்புகிறார்கள். பூண்டி மகான் சமாதிக்குச் சென்று மனநிறைவு பெற்று மகிழ்ச்சியுடன் வருகிறார்கள்.

பூண்டி மகான் சமாதியில் காசியில் இருந்து கொண்டு வந்த சிவலிங்கம் நிறுவப்பட்டு, பல லட்சம் செலவில் ஆலயம் அமைத்து, 11-6-1987 அன்று குடமுழுக்கு விழாவும் வெகு சிறப்புற நடைபெற்றது. மெய்யன்பர்கள் அவசியம் தரிசிக்க வேண்டிய புனிதமான சமாதி ஆலயம் அது.



# ஐங்குறு நூறு

முனைவர் சி. பாலசுப்பிரமணியன்

**பா**ட்டும் தொகையும் சங்க நூல்கள் என வழங்கப்படும். பாட்டு எனப்படுவது பத்துப்பாட்டு, தொகை எனப்படுவது எட்டுத்தொகை. எட்டுத் தொகை நூல்கள் இவை இவை என ஒரு பழம்பாடல் குறிப்பிடுகிறது. அப்பாடல் வருமாறு :

முருகு, பொருநாறு, பாண் இரண்டு, முல்லை
பெருகு வள மதுரைக் காஞ்சி, மருவினிய
கோல நெடுநல்வாடை, கோல் குறிஞ்சி, பட்டினப்
பாலை, கடாத்தொடும், பத்து.

எட்டுத்தொகை நூல்களுள் மூன்றாவதாக இடம் பெறுவது ஐங்குறு நூறு என்று இப் பாடல்வழிப் புலப் படுகின்றது. ஐங்குறு நூறு தன்னுடைய பெயருக்கேற்ப ஐநூறு பாடல்களும் சிதையாமல், அழியாமல் நமக்குக் கிடைத்துள்ளது நாம் பெற்ற பேறு எனலாம். அகப் பொருள் தழுவிய நூல்களுள் குறைந்த அடிகளைக் கொண்ட பாக்களைப் பெற்று அமைந்துள்ள நூல் ஐங்குறு நூறு ஆகும்.

## நூல் அமைப்பு

இந் நூல் மூன்றடிச் சிற்றெல்லையையும் ஆறடிப் பேரெல்லையையும் கொண்ட பாக்களை உடையதாகத் திகழ்கின்றது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்திணைப் பாகு பாட்டுடன் இந்நூல் விளக்குகிறது. ஐங்குறு நூற்றின் பாடல்கள் மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை, முல்லை என்ற வரிசைப்படி அமைந்துள்ளன. ஒவ்வொரு நூற்றையும் பத்துப் பத்துப் பகுதி களாகப் பகுத்து, ஒவ்வொரு பத்திற்கும் தனித்தனித் தலைப்புகள் அமைத்துள்ளனர். பிற்காலத்தில் பத்துப் பாடல்களின் தொகுதியைப் பதிகம் என்றும், நூறு பாடல்களின் தொகுதியைச் சதகம் என்றும் வழங்கினார்கள். எட்டுத்தொகை நூல்களிலேயே பத்துப் பத்துப் பாடல்களைக் கொண்ட நூல் பதிற்றுப் பத்து எனும் பெயரிலே வழங்கப்படுகின்றது. அது புறப்பொருள் தழுவிய நூல். ஆனால், ஐங்குறு நூறு அகப்பொருள் தழுவி ஐநூறு பாடல்களைக் கொண்ட தொகை நூலாகத் திகழ்கின்றது. பத்துப் பத்துப் பாடல்களாக அமைந்துள்ள தலைப்பு, அவ்வப் பாடல்களில் காணப்படும் கருத்துச் செறிவைப் புலப்படுத்தி நிற்கும் அருந்தொடர்களைத் தாங்கி நிற்கின்றன.

## நூல் சிறப்பு

பொருள் காரணமாக, சொல் காரணமாக ஒன்றிற் கொன்று தொடர்பு உடையனவாகப் புனையப்படும் செய்யுள் தொடர்நிலைச் செய்யுள் என்று சொல்லப் பெறும். ஐங்குறு நூறும் கலித்தொகையும் தொடர்



நிலைச் செய்யுள் வகையைச் சார்ந்த நூல்கள் என்று சான்றோர் குறிப்பிடுவர். ஐங்குறு நூற்றுச் செய்யுள் அனைத்தும் அம்மை, வனப்பு, அழகு எனும் வனப்புகளைக் கொண்டு புனையப்பட்ட செய்யுள் என்பர். மூன்று முதல் ஆறு அடிகள் வரை அமைந்துள்ள பாக்களில் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் எனும் மூன்றினையும் தன்னகத்தே கொண்ட இலக்கிய நயத்தினை நயம்படப் புலப் படுத்தியுள்ள செய்யுள்கள் ஐங்குறு நூற்றின் தனிச் சிறப்பாகும்.

### தொகுத்தோனும்,தொகுப்பித்தோனும்

இவ் அழகு நூலைத் தொகுத்த ஆசிரியர் சங்கப் புலவராகிய புலத்துறை முற்றிய கூடலூர்க் கிழார் என்பர். தொகுப்பித்தோர் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை எனும் சேர வேந்தன் என்று செப்புவர். கூடலூர்க் கிழார் சேரநாட்டைச் சேர்ந்த புலவர் என்பர் தமிழ்த்தாத்தா உ.வே. சாமிநாதையர்.

### ஐங்குறு நூற்றுப்புலவர் பெருமக்கள்

பழம்பாடல் ஒன்று ஐங்குறு நூற்றைப் பாடிய புலவர் பெருமக்கள் பெயரினைப் புலப்படுத்துகிறது.

மருதம் ஓரம்போகி; நெய்தல் அம்மூவன் ;
கருதும் குறிஞ்சி கபிலன் ; கருதிய
பாலை ஒதலாந்தை; பனி முல்லை பேயனே
நூலை ஒது ஐங்குறு நூறு.

— பழம் பாடல்

எனவே, மருதத் திணையினை ஓரம்போகி யாரும், நெய்தல் திணையினை அம்மூவனாரும், குறிஞ்சித் திணையினைக் கபிலரும், பாலைத் திணை யினை ஓதலாந்தையாரும், முல்லைத் திணையினைப் பேயனாரும் பாடியுள்ளனர் என்பது இப் பாடற் பகுதியில் இருந்து நமக்குப் புலனாகின்றது. இந் நூலினை ஐம்பெரும் பகுதிகளாகப் பிரித்துப் பகுதி ஒன்றிற்குப் பத்துப் பாடல் அடங்கிய பத்துப் பத்துப் பாடல்களை உட்பிரிவாகக் கொண்டு அமைத்து, ஒவ்வொரு தலைப்பிற்கும் முதல், கரு, உரிப்பொருட் களை இணைத்துப் பத்து என்று பெயரிட்டுத் தொகுத்திருக்கிற முறையை இந் நூலினைத் தொகுத்த கூடலூர்க் கிழார் ஒவ்வொரு திணையைப் பாடிய பெருமக்களின் சிறந்த பாடல்களைத் தேர்ந்து தெளிந்து ஒரு சிறந்த நூலாக ஐங்குறு நூற்றினை உருவாக்கியுள்ளார் என்று கருதலாம். ஐங்குறு நூற்றைப் பாடியுள்ள புலவர்கள் அனைவரும் சங்கச் சான்றோர்களாவர். அவர்கள், இலக்கிய நயம் தோய்ந்த இனிய பாடல்களை யாத்துள்ளனர் என்று ஐங்குறு நூற்றுப் பாடல்களை மேம்போக்காகப் படிப் பவர்களுக்கே விளங்கும். இந் நூற்பாவிலுள்ள நயம்கெழுமிய செய்யுள்களும், செய்யுட் பகுதிகளும் வருமாறு :

## மருதம்

### வேட்கைப் பத்து

'நெல்பல பொலிக! பொன்பெரிது சிறக்க!

'விளைக வயலே! வருக இரவலர்!'

'பால்பல ஊறுக! பகடுபல சிறக்க!

'பகைவர் புல்ஆர்க! பார்ப்பார் ஓதுக!'

'பசிஇல் லாகுக! பிணிசேண் நீங்குக!'

'அறம்நனி சிறக்க! அல்லது கெடுக!'

'அரசுமுறை செய்க! களவு இல்லாகுக!'

'நன்றுபெரிது சிறக்க! தீது இல்லாகுக!'

'மாரி வாய்க்க!' வளம்நனி சிறக்க!'

## நெய்தல்

### தாய்க்கு உரைத்த பத்து

'பூப் போல் உண்கண் மரீஇய
நோய்க்கு மருந்து ஆகிய கொண்கண் தேரே!
'துன்புறு துயரம் நீங்க,



இன்புறு இசைக்கும், அவர்தேர் மணிக் குரலே!'
'நன்னம் துறைவன் வந்தென்'
'தண்கடற் படு திரை கேட்டொறும்,
துஞ்சாள் ஆகுதல் நோகோ யானே'
'எம்தோள் துறந்த காலை யெவன்கொல்
பல்நாள் வரும் அவன்அளித்த பொழுதே!'
'மாலை வந்தன்று, மன்ற –
காலை அன்ன காலை முந்துறுத்தே'
'புன்இறை கூரும் துறைவனை
உள்ளேன் – தோழி! – படீஇயர் என் கண்ணே!'
'வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தென,
காணிய சென்ற மடநடை நாரை
கானற் சேக்கும் துறைவ னோடு
யான் எவன் செய்கோ? பொய்க்கும் இவ் ஊரே?
'வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தென,
காணிய சென்ற மடநடை நாரை
பதைப்ப, ததைந்த நெய்தல் கழிய
ஓதமொடு பெயரும் துறைவற்குப்
பைஞ்சாய்ப் பாவை ஈன்றனென், யானே!'
'நின்ஒன்று இரக்குவென் அல்லேன்!' '
நல்குவன் போலக் கூறி'
'கடல் அணிந்தன்று, அவர் ஊரே!'

### குறிஞ்சி

'அன்னாய், வாழி! வேண்டு, அன்னை! நம் படப்பைத்
தேன்மயங்கு பாலினும் இனிய – அவர் நாட்டு
உவலைக் கூவற்கீழ
மான் உண்டு எஞ்சிய கலிழி நீரே'
'அம்ம வாழி, தோழி! நம் மலை
வரைஆம் இழிய, கோடல் நீட,
காதலர்ப் பிரிந்தோர் கையற நலியும்
தண்பனி வடந்தை அச்சிரம்
முந்து வந்தனர் – நம் காத லோரே'
'சிலம்பின் வெதிரத்துக் கண்விடு கழைக்கோல்
குரங்கின் வன்பறழ் பாய்ந்தென, இலஞ்சி
மீன்எறி தூண்டிலின் நிவக்கும் நாடன்
உற்றோர் மறவா நோய்தந்து,
கண்டோர் தண்டா நலம்கொண் டனனே!'

### பாலை

'அவரோ வாரார்; தான் வந்தன்றே –
குயிற்பெடை இன்குரல் அகவ,
அயிர்க்கேழ் நுண்அறல் நுடங்கும் பொழுதே'

*இத்தனை அரிய நயங்களைக் கொண்ட பாடல்களாக ஐங்குறு நூற்றுப் பாடல்கள் அமைந்துள்ளன.*

*எளிய இனிய பாடல்களைத் தன்னகத்தே கொண்டுள்ள தனிச் சிறப்பு வாய்ந்த ஒரு நூலாக ஐங்குறு நூற்றை நாம் குறிப்பிடலாம்.*



நாயகி (ஸ்ரீரங்கம்)



ஸ்ரீஅலர்மேல் மங்கை (பத்மாவதி தாயார் – திருச்சானூர்)



ஸ்ரீபெருந்தேவி(காஞ்சிபுரம்)

ஸ்ரீகனகவல்லி (திருவள்ளூர்)



ஸ்ரீவேதவல்லி (திருவல்லிக்கேணி)



ஸ்ரீஹேமாம்புஜவல்லி(திருவஹீந்திரபுரம்)





போட்டோ : டி..ஆர்.ஸ்ரீநிவாசன்

# டெல்லி டு மெட்ராஸ்

டில்லியிலிருந்து வந்த கணேஷ், நம் நெல்லையிலிருந்து சென்றவர் தான். இந்திய விமானப் படையில் பணிபுரிந்தபோது, தற்செயலாக நேர்ந்தது நாடக அனுபவம். 1964இல் பாகிஸ்தான் ஆக்ரமிப்பின்போது, காயமுற்ற நம் படைவீரர்களை மகிழ்விக்கும் பொருட்டு, அவர்களின் முகாம்களுக்குச் சென்று நாடகம் நடத்திய இவரது சக ஊழியரான ராயப்பன், மேடை அனுபவம் உடையவர். தன்னுடன் நடிக்கும்படி அவர் வற்புறுத்தியபோது, கணேஷ் தயங்கினார். 'எனக்கு என்ன தெரியும்'என்று திகைத்தார். கட்டாயத்தின் பேரில் ஒப்புக் கொண்டார். 'நவீன நல்ல தங்காள்' என்ற அந்த நாடகத்தில் பயந்து பயந்து நடித்தார். இதையே ஓர் உத்தியாக நண்பர் நாடகத்தில் பயன்படுத்தியதைக் கண்டு வியந்தார். பார்த்தவர்கள் பாராட்டியபோது, 'அட நமக்கும் நடிக்க வரும் போலிருக்கிறதே' என்றெண்ணினாராம். பிறகு, ராயப்பன், தான் பங்கு கொண்டிருந்த தட்சிண பாரத நாடக மன்றத்தின் நாடகங்களில் நடிக்கும் வாய்ப்பை இவருக்கு ஏற்படுத்தித் தந்தார்.

டில்லி தமிழர்களுக்கு கலை நிகழ்ச்சிகளைத் தந்து கொண்டிருந்த மற்றோர் அமைப்பு, சௌத் இந்தியன் தியேட்டர். சுப்புடு அதன் செயலாளர். பண பலமும், செல்வாக்கும் அதிகம் உள்ள அமைப்பு அது. தமிழ்நாட்டிலிருந்து குழுக்களை வரவழைத்து நாடகம் போடுவார்கள். ஆனால் டில்லிவாழ் தமிழர்களின் திறமைக்கு வாய்ப்பு தர வேண்டுமென்ற நோக்குடன் துவக்கப்பட்டது, தட்சிண பாரத நாடக சபை. இவ்விரு குழுக்களின் அமைப்பாளர்களிடையே ஆயிரம் போட்டி, பொறாமை இருந்தாலும், கலைஞர்களிடையே பரஸ்பர நல்லுறவு இருப்பதுண்டாம். இவர்களுடைய குழுவினர் மேஜர் சுந்தரராஜன், சோ போன்றவர்களின் (தீர்ப்பு, ஒரு பொய்) நாடகங்களை வாங்கிப் போட்டனர்.

இந்திய விமானப் படையிலிருந்து ஓய்வு பெற்ற பிறகு, இந்திய உணவுக் கழகத்தின் பணியில் சேர்ந்து சென்னைக்கு வந்தார். சென்னை நாடக மேடைக்கு அறிமுகமானார். காத்தாடி ராமமூர்த்தி குழுவின் நாடகங்களில் பரிமளிக்கத் தொடங்கினார். மேடையிலிருந்து பெரிய திரைக்கும் (சினிமா) சிறிய திரைக்கும் (டி.வி.) பிரவேசம் செய்தார்.

*"இருபதாண்டு காலம் அரசின் வெவ்வேறு துறைகளில் வேலை செய்த பிறகு, முழு நேர நடிகராக இருக்கிறீர்கள்! வாழ்க்கை முறையில் என்ன வித்தியாசம் தெரிகிறது?"*

"முதலில் வீடு - ஆபீஸ் - மேடை - ஷூட்டிங் என்றிருந்தேன். இப்போது வீட்டை விட்டால் ஷூட்டிங், ஷூட்டிங் விட்டால் வீடு என்றிருக்கிறேன். அவ்வப்போது சமூகத்துடன் தொடர்பு இருக்க வேண்டும் அல்லவா? சிவிக் எக்ஸ்னோரா அமைப்பினருடன் குடிசைப் பகுதிகளுக்குச் சென்று, சுற்றுப்புறச் சுகாதாரம் பற்றி அறிவுரை தருவதுண்டு; டாக்டர் விக்கிரமன், ஏர்வாடி ராதாகிருஷ்ணன் ஆகியவர்களின் அழைப்பிற்கிணங்க 'உரத்த சிந்தனை' போன்ற அமைப்புகளின் இலக்கிய நிகழ்ச்சிகளில் கலந்துகொள்வதுண்டு. பள்ளிக்கூட கலை நிகழ்ச்சிகளுக்கும் போகிறேன். டி.வி.யிலும் சினிமாவிலும் நடிப்பதால்தான் என்னை அழைக்கிறார்கள் என்றாலும், அந்தந்த நிகழ்ச்சிக்குத் தொடர்புள்ள விஷயங்களைப் பற்றி ஓரளவாவது தெரிந்து கொண்டு தயாராகப் போவது வழக்கம். ஓகோ என்று பாராட்டாவிட்டாலும், பேசத் தெரியாமல் திணறினார் என்று கேலி செய்யாமல் இருப்பார்கள் அல்லவா?

"இயல்பாகவே எனக்குப் படிக்கும் ஆர்வம் உண்டு. (பேட்டிக்காகச் சென்றபோது அவர் படித்துக் கொண்டிருந்த கண்ணதாசனின் "போய் வருகிறேன்" என்ற புத்தகம் மேஜை மீது கிடக்கிறது) வாலியின் கவிதைகள், குமரி அனந்தன், கோமல் சுவாமிநாதன் போன்றவர்களின் கட்டுரைகள் இவற்றை விரும்பிப் படிப்பேன். ரயில் பயணத்தின்போது, கண்ணில் படும் நல்ல நூல்களை வாங்கி விடுவேன்; இப்படிப் படிப்பதால், பல விஷயங்களைத் தெரிந்து கொள்ள முடிகிறது. பொது நிகழ்ச்சிகளில், பேச அது உதவுகிறது".

*"முழு நேரமும் நடிப்புத் தொழிலில் ஈடுபடக் காரணமானது, ஆர்வம் தானா?"*

"ஆர்வம் ஒரு முக்கியக் காரணம்; திரைப்பட நடிகனாக அள்ளிக்



கொட்டாவிட்டாலும், திறமைக்கேற்ற வருமானம் வருவதாகச் சொல்ல முடியாவிட்டாலும், வருமான வரி கட்டும் தகுதி உடைய நடிகனாக இருக்கிறேன். ஒரு Flat - ஒரு கார் - ஒரு கலர் டி.வி. என்று பிற நடிகர்களிடம் உள்ள மினிமம் வசதிகளுடன் வாழ்கிறேன்".

"மேடை நாடகத்திலும் நடித்துக் கொண்டு, திரைப்படத்திலும் நடிப்பதால் பிரச்னை வருவதுண்டா?"

"ராணி சீதை ஹாலில் நாடகம் - விஜிபி கோல்டன் பீச்சில் ஷூட்டிங் என்றால், நாடகத்தை முடித்துக் கொண்டு போய்ச் சேர தாமதமாகிவிடும். சிரமத்தைப் புரிந்து



'டௌரி கல்யாணம்' படத்தில்...

கொண்டு, பெரிதாக்காமல் இருப்பவர்கள் உண்டு. அதற்காக நாம் எப்போதுமே டிராமா இருந்ததால் லேட்டாயிற்று என்று சொல்லிக் கொண்டிருக்கலாமா?"

"வருமானம், வாழ்க்கை வசதி பற்றி குறிப்பிட்டீர்கள். மேடை நாடகம், வருமான ரீதியில் பயன்பட்டதுண்டா?"

"முதலில் காத்தாடி குழுவில் (1971-72இல்) நடித்தபோது எனக்குக் கிடைத்த தொகை ஐந்து ரூபாய். பிறகு அது பத்து ரூபாயாக உயர்ந்தது. எல்லோருக்கும் அப்படித்தான்.' குழுவிற்குக் கிடைக்கும் வருமானத்தைப் பொறுத்ததுதான் அது. எல்லோருக்கும் கொடுத்தபிறகு அவருக்கு ஒன்றும் அதிகம் மிஞ்சி விடாது. பிற்பாடு 'ஓம் கணேஷ் கிரியேஷன்ஸ்' என்ற பெயரில் நான் தனிக்குழு தொடங்கியபோதும், பண விவகாரம் இந்த அளவில்தான் இருந்தது. வெளியூர் நாடகங்களில் ஓரளவு கணிசமான வருமானம் கிடைக்கும்".

தமிழ் நாட்டிற்குத் திரும்பி வந்த பிறகு இவர் நடித்த முதல் நாடகம், (காத்தாடி குழுவிற்காக விசு எழுதிய) 'டௌரி கல்யாண வைபோகமே' அதில் சில காட்சிகளில் மட்டுமே தோன்றினாலும், அவர் ஏற்ற மாம்பலம் குசேலர் பாத்திரம் பலராலும் பேசப்பட்டது. "ஐயா, அம்மா, அப்பப்பா"வில் இவர் ஏற்ற கைலாசம் வேடத்திற்கு நல்ல வரவேற்பு. இந்த மேடை நாடகம் தொலைக்காட்சியிலும் சக்கை போடு போட்டது.

"முன்பெல்லாம் மேடை நாடகங்களில் கதையம்சம், உணர்ச்சிமயமான நடிப்பு, இவற்றுக்கு மதிப்பு இருந்தது. பிறகு ஒரு கட்டத்தில் வெறும் ஜோக் தோரணங்களாக, நாடகங்கள் மாறின. ஆரம்பத்தில் அவை ரசிக்கக்கூடிய தரத்திலாவது இருந்தன. இப்போதோ ஆபாசமாகப் பேசுவதும், விரசமாக நடந்து கொள்வதும் மேடை நாடகத்தில் சர்வ சகஜமாகி விட்டதே?"

"தேர்வில் முப்பது சதவிகிதம் பெற்றால் பாஸ், அறுபது சதவிகிதம் பெற்றால் முதல் வகுப்பு, எழுபத்தைந்து சதவிகிதம் தாண்டினால் டிஸ்டிங்ஷன் என்றிருப்பது போல், இதுவரைக்கும் சொல்லலாம், இதற்கு மேல் சொன்னால் விரசம், இதற்கு மேல் சொல்லவே கூடாது என்றெல்லாம் வரைமுறை உண்டா? இன்னொன்று இதெல்லாம் எதற்கு என்று நாம் ஆட்சேபித்தாலும், இதைவிட மோசமான வசனம் போடுகிறார்கள் அதற்கே யாரும் எதுவும் சொல்வதில்லை என்று அடித்துப் போட்டு விடுகிறார்கள்".

"யாரும் எதுவும் சொல்வதில்லை என்று அவர்களாகவே எப்படி முடிவு கட்டலாம்? ஆட்சேபக் குரல்கள் உரிய இடத்தில் எழுப்பாமல் வேண்டுமானால் இருக்கலாம்"

"உண்மைதான்; இப்போது நீங்கள் கண்டனம் தெரிவிப்பது போல் (சில நாடக நடிகர்கள் தங்களை பிளேபாய்களாக உருவகித்துக்கொண்டு அமைக்கும் நாடகக் காட்சிகளின் ஆபாசத்தை சுட்டிக் காட்டினோம்) எதிர்ப்பவர்கள் இருப்பார்கள்தான்; என் குழு நாடகத்தைப் பொறுத்தவரை, இந்த வசனத்தை மனைவியிடமும், குழந்தைகளிடமும் பேச முடியுமா என்று பார்ப்பேன்; அப்படியும் தப்பித்தவறி ஏதாவது வந்து விட்டாலும், அது குழந்தைகளால் புரிந்து கொள்ளும்படியானதாக இருக்காது".

"இந்தக் காலத்தில் குழந்தைகளுக்குத் தெரியாததுகூட உண்டா?"

"சமூகத்தில் பெரிய மனிதர்களாக இருப்பவர்கள்கூட நிழலான நடவடிக்கைகளில் ஈடுபடத்தான் செய்கிறார்கள். சினிமா பார்க்கிறோம்; ஒலியும் ஒளியும் பார்க்கிறோம்; எத்தனை ஆபாசமாக வந்தாலும் கண்ணை மூடிக் கொள்வதில்லை. யாரோதானே என்ற எண்ணத்தில் பார்க்கிறார்கள். இதற்கு நடிப்பவர்களையோ, இயக்குநரையோ குறைகூறமுடியாது. சென்ஸார் போர்டு என்ன செய்கிறது? வடிகட்ட வேண்டிய சல்லடை சரியில்லை என்றால் பொறுப்பு யாருடையது?"

"ஒருவேளை மற்ற அரசாங்கத் துறைகளின் சாபக்கேடான ஊழல் இங்கும் தலை விரித்தாடுகிறதோ, என்னவோ?".

"அப்படியும் இருக்கலாம்".

"திரைப்படத்தைப் பொறுத்தவரை, சென்ஸாரை நீங்கள் காரணம் காட்டலாம்; மேடை நாடகங்களின் விஷயம் அப்படி இல்லையே?"

"மேடை நாடகத்தின் வசனப் பிரதி, காவல் துறையின் பார்வைக்கு அனுப்பி வைக்கப்படுகிறது. ஆனால் அவர்களுக்கு இருக்கும் பல பிரச்னைகளில் இதையெல்லாம் சரி பார்த்துக் கொண்டிருக்க முடியுமா? ஆகவே எல்லை மீறாமல் இருப்பது, நடிகர்களின் கடமைதான். ஆனால் ஒன்று; நீங்கள் குறிப்பிடுகிற வசனங்கள் மக்களின் பலமான கைதட்டலைப் பெறுகின்றனவே? ஆகவே, சமூகத்தில் அசிங்கத்திற்கும் இடம் உண்டு. அது இருப்பதால்தான், நல்லதின் மதிப்பு தெரியும். எல்லோருமே புத்தரும், காந்தியுமாக இருந்து விட முடியுமா?"

"இருட்டு, சமூகத்தின் ஓர் அங்கம் என்பதை மறுப்பதற்கில்லை. ஆனால் அதனாலேயே, அதை நியாயப்படுத்த வேண்டுமா? நம்மைப் பொறுத்தவரை சரியாக இருந்தால் போதும் என்ற மனநிலை சரியல்லவே?"

"அதற்காகத்தான், வாய்ப்பு கிடைக்கும்போதெல்லாம், பொது மக்களிடையே பேசுகிறோம். நடிகவேள் எம்.ஆர். ராதா, எந்த சினிமாவிலும் ஆபாசமாக நடித்ததில்லை; அவர் அடிக்கடி சொல்வார்,



'தராசு' - தில்லி தொலைக்காட்சித் தொடரில்...

சினிமாவை நம்பாதே, சினிமாக் காரனை நம்பாதே என்று. இதுவும் ஒரு தொழில்; ஆனால் இதில் வெறித் தனமாக ஈடுபடாதீர்கள் என்றுதான் நான் சொல்வது வழக்கம். சில குடும்பங்களில், ரஜினி ரசிகர்களுக்கும் கமல் ரசிகர்களுக்கும் சண்டை வரும். அப்படி வராவிட்டாலும், சண்டை மூட்டி விடுவதற்கென்றே சில 'நலம் விரும்பிகள்' வருவதுண்டு. என் வீட்டைப் பொறுத்தவரை அதற்கெல் லாம் இடம் கொடுப்பது கிடையாது".

(டெல்லி கணேஷின் குழந்தைகள் மிகவும் கட்டுப்பாட்டுடன் வளர்க்கப் படுகிறார்கள் என்பதைப் பார்க்க முடிந்தது)

"தேடிச் சோறு நிதம் தின்று" என்று பாரதி சொல்வது போல்தான் இன்று பெரும்பாலோர் இருக்கி றார்கள். இந்த வாழ்க்கையில் எது வுமே நிரந்தரம் இல்லை. திரை உலகில் பாகவதர், என்.எஸ்.கே., எம்.ஜி.ஆர்., சிவாஜி, ரங்காராவ் போன்றவர்களின் சாதனைதான் எப்போதும் நிற்கக் கூடியது. என் வீட்டு வரவேற்பறையில் முன்பு நிரம்பியிருந்த திரைப்பட வெற்றி விழாக் கேடயங்களையெல்லாம் அகற்றி விட்டேன். சிலர் அவற்றைப் பார்த்துவிட்டு, இந்தப் படத்தில் நீங்கள் என்ன செய்தீர்கள் என்று கேட்பார்கள். எனக்கு எரிச்சல் வரும். அவர்கள் மறந்து போனதிலும் வியப்பில்லை. நாம் என்ன, காலம் காலமாக நினைவில் வைத்துக் கொள் ளும்படியான ரோலையா செய்து விட்டோம்? அப்பா, இன்ஸ்பெக்டர், டாக்டர் இப்படி ஏதாவது ரோல் தானே".

பசி, சிந்துபைரவி, அச்சமில்லை, அச்சமில்லை, குங்குமச்சிமிழ், பெண் மணி அவள் கண்மணி, புன்னகை மன்னன், மைக்கேல் மதன காமராஜன் போன்ற படங்களில் (சிறுவேடம் என்றாலும்) சிறப்பாகச் செய்திருக் கும் அவரது இப்படிப்பட்ட பேச்சு, நம் புருவங்களை உயர்த்த வில்லையா?

குடிசை, உச்சி வெயில் போன்ற பரீட்சார்த்தப் படங்களில் அவர் நடித்ததைப் பற்றிக் குறிப்பிட்ட போது, "ஆமாம்; அவற்றைத் தயா ரித்த ஜெயபாரதி பணம் தந்தாலும் சரி, தராவிட்டாலும் சரி, அவர் நிலைமையைப் புரிந்து கொண்டு நடித்துக் கொடுத்தேன்" என்றார்.



'புரியாத புதிர்' படத்தில்...



"திரைப்படங்களின் வெற்றி விழாக்களில் எல்லோருக்கும் ஷீல்டு தரும்போது உங்களுக்கு மட்டும் எப்படி தராமல் இருப்பது என்பார்கள்; வரும் வழியில், உடனிருக்கும் நண்பர்களிடம் கொடுத்து விடுவேன். வேண்டுமானால், என் பெயரை சுரண்டி எடுத்து விடு என்று சொல்வேன். ஷீல்டு நம்முடன் வரப் போகிறதா? அவை இருந்த இடத்தில் சுவாமி படங்களை வைத்துவிட்டேன். இப்போது நிம்மதியாக இருக்கிறது. எதற்குச் சொல்கிறேன் என்றால், நம் ஒருவரால், இந்த ஒரு ஜென்மத்தில் சமூகத்தை மாற்றி விட முடியாது".

"சரி; மேடை நாடகத்தைப் பொறுத்தவரை, டில்லி ரசிகர்களுக்கும் சென்னை ரசிகர்களுக்கும் (நுணுப்) ஏதாவது வித்தியாசம் தெரிந்ததா?"

"அதெல்லாம் ஒன்றும் பெரிய வித்தியாசம் கிடையாது. சும்மா சொல்வார்கள், இந்த ஊரில் எடுபடுவது அந்த ஊரில் எடுபடாது என்று. அதை நான் ஒத்துக் கொள்ள மாட்டேன். நகர்ப்புறங்களில் போடும் அதே நாடகங்களைக் கிராமப்புறங்களிலும் போடுகிறோம். வசனத்தில் ஆங்கிலம் கலக்காமல் பார்த்துக் கொள்கிறோம். இன்னும் சற்று பேச்சு வழக்கிற்கு ஏற்ற மாதிரி மாற்றிக் கொள்வோம். அவ்வளவுதான். அண்மையில் சென்னைக்கு வந்த பம்பாய்க் குழு போட்ட இரண்டாவது சாணக்யா என்ற நாடகத்தில் வேத கோஷமும், மந்திர உச்சாடனமுமாக இருந்தது; அப்படிப்பட்ட நாடகத்திற்கு ஒரு சில இடங்களில் கிடைத்த வரவேற்பு நம்பமுடியாதபடி இருந்தது. நாங்கள் ஒரு தடவை, ஸ்டான்லி மருத்துவக் கல்லூரியில், 'மீண்டும் சுப்ரபாதம்' நாடகம் போட்டோம். வெங்கடாசலபதிக்கு தீபாராதனை காட்டுகிற காட்சியில், மாணவர்கள் கோவிந்தா கோவிந்தா என்று கூவி கலாட்டா செய்தார்கள். ஜால்ரா, விசில் சப்தம் என்று ஒரே கூச்சலாக இருந்தது. கூக்குரல்களுக்கிடையே, எப்படியோ நாடகத்தை நடத்தி முடித்தோம். சில ஆண்டுகளுக்குப் பிறகு, ஒரு டாக்டரிடம் சிகிச்சைக்காகச் சென்றபோது, அவர், ஸார் எங்கள் கல்லூரியில் நீங்கள் போட்ட 'மீண்டும் சுப்ரபாதம்' பார்த்திருக்கிறேன் என்றார். நீங்கள் எங்கே எங்களை நாடகம் போட விட்டீர்கள்? ஏக ரகளை செய்து விட்டீர்களே? என்றேன். அதற்கு அவர், "ஸார் நாங்கள் உங்களை கலாட்டா செய்யவில்லை. கடைசி வருஷம் என்பதால் ஜாலியாக எங்களுக்குள் செய்து கொண்ட கலாட்டாதான் அது; இடைவேளையில் உங்களுக்குப் பாராட்டு நிகழ்ச்சி நடந்தபோது, அமைதியாக இருந்தோமே" என்றார்.

"உங்கள் நாடகங்கள் பொதுவாக சீரியஸாக இருக்கும் அல்லவா?"

"ரொம்ப சீரியஸ் என்று சொல்ல முடியாது. நான் எப்போதும் மெலோட்ராமா செய்வதில்லை. அய்யோ போயிட்டியே என்று வயிற்றில் அடித்துக் கொண்டு அரற்றுவதைப் பார்க்கவா ரசிகர்கள் வருகிறார்கள்?"

"அண்டர் ஆக்டிங் செய்வது உங்கள் பாணி; இல்லையா?"



"அதே சமயம் ஹிலேரியஸாகவும் இருக்கும்; ஜோக் தோரணம் கட்ட எனக்குத் தெரியாது. பக்கா சீரியஸாகவோ, பக்கா காமெடியாகவோ இல்லாமல், இரண்டு மணிநேரம் போரடிக்காமல் பார்க்கும்படி எங்கள் நாடகங்கள் இருக்கும்".

"மேடை நாடகம், தொலைக்காட்சி, திரைப்படம் இம்மூன்று மீடியங்களில் எது உங்களுக்கு மிகவும் பொருத்தமாகத் தெரிகிறது?"

"மேடையில் முகபாவத்திற்கு அதிக வாய்ப்பில்லை; வசன உச்சரிப்புக்கு முக்கியத்துவம் உண்டு. சிரித்துக் கொண்டே அழுகிறோம் என்ற நாடகத்தில், ஒரு காட்சி - மகனிடம் அம்மா கோபாவேசமாகப் பேசிவிட்டுப் போகிறாள். அத்தனை நேரம் மௌனமாக இருக்கும் அப்பாவிடம், மகன், அப்பா, அம்மாவுக்கு என்ன ஆச்சு? என்று கேட்பான். அதற்கு அப்பா, தெரியலியேடா என்று மட்டும் சொல்வார். அந்த ஒரு வார்த்தையிலேயே அத்தனை கொந்தளிப்பையும் காட்ட வேண்டும். (சொல்லிக் காட்டுகிறார்) டி.வி.யாக இருந்தால், தலையை அசைத்தாலே போதும். தவிர டி.வி.க்காக தயாரிக்கிற நாடகங்களை வீடியோவில் போட்டுப் பார்த்து சரிசெய்து கொள்ளலாம். தூர்தர்ஷன் தயாரிக்கும் நாடகங்களை மானிட்டரில் போட்டுப் பார்க்கும்போது, பொசிஷன், லைட்டிங் பற்றிய நம் சந்தேகங்களைக்கூட தெளிவாக்கிக் கொள்ளலாம். ஆனால் சினிமாவில் கதாசிரியர் சொல்வது நாம் புரிந்து கொள்வது, காமிராவில் பார்க்கும் கோணம் இவையெல்லாம் ஒத்துப் போகின்றனவா என்பது பிலிம் கழுவி வரும்போது தான் தெரியும். ஏனென்றால் வ்யூ ஃபைண்டரில் பார்த்து ஒகே ஆன காட்சிகூட, காமிரா ஓடும்போது நடிகர்களின் அசைவில் சிறு மாற்றம் இருந்தாலும் போயிற்று. அதற்காக மறுபடியும் அந்த காட்சியைப் படமாக்க முடியுமா?"

"டப்பிங் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?"

"அது ஒன்றும் பிரச்னை இல்லை. காட்சியில் நடித்தபோது இருந்த உணர்ச்சி டப்பிங் சமயத்தில் வருமா என்று கேட்டால், வராதுதான்; அதற்காக விட்டு விட முடியுமா? வரவழைத்தாக வேண்டும் பார்க்கப் போனால் விட்டுப்போனதைச் சேர்த்து டெவலப் செய்து கொள்ளலாம்".

"வானொலி நாடகத்தில் நடிப்பது போல் டப்பிங் என்று சொல்லலாமா?".

"வானொலியில் மைக்கில் பேசுகிறோம். அங்கே உதட்டசைவை கவனிக்க வேண்டிய அவசியமில்லை.



சற்று சிரமம்தான். உதாரணமாக, நான். நான்... வந்து....இந்த...என்று தயங்கிப் பேசும் காட்சியில், எத்தனை தடவை ஒரே வார்த்தையை சொன்னோம் என்று சந்தேகம் வந்துவிடும். இருந்தாலும், நமக்கென்று ஒரு பாணி உண்டல்லவா? அதனால், சுலபமாக கண்டு பிடித்து விடலாம். 'டப்பிங்' பெரிய வித்தையொன்றும் இல்லை. திரைப்படத்தைப் பொறுத்தவரை, நான், ஐந்தாறு டேக் எடுக்க வைக்கிறவனும் இல்லை, பெரிய வசனம் பேசமுடியாமல் திணறுகிறவனும் இல்லை. டப்பிங்கிலும் லூப்பை சீக்கிரம் பிடித்து, முடித்து விடுகிறேன். இதனால் எல்லாம், ஏதும் இன்செண்டிவ் கிடையாது. நமக்குள்ளது எப்போதும் போல் அப்பா ரோல்தான். ரசிகர்களின் கைதட்டல் கிடைக்கிற மாதிரி நடிப்பு அமைந்தால் கொஞ்சம் மரியாதை, கணிசமான தொகை உண்டு. இல்லையென்றால், கொடுப்பதை வாங்கிக் கொண்டு வர வேண்டியதுதான். நாம் சரிப்படவில்லையென்றால், வேறு ஆளைப் பார்க்கப் போய்விடுவார்கள். திறமைக்கு பெரிய அங்கீகாரம் எல்லாம் கிடையாது. இந்த சூழ்நிலையில், வந்தவரை லாபம் என்றெண்ணி, வருவதை வைத்துக் கொண்டு, நம் ஸ்டேடஸை மெய்ன்டெய்ன் பண்ணிக் கொண்டிருக்க வேண்டியதுதான்".

1980லிருந்து ஐந்தாண்டு காலம் இவருடைய ஓம் கணேஷ் கிரியேஷன்ஸ் நாடகக்குழு சுறுசுறுப்பாகச் செயல்பட்டது. மிஸ்டர் பூபதி (இவரது குழுவின் தற்போதைய மேடை நாடகம்)

"மேடை நாடகத்துடன் தொடர்பு விட்டுப் போகாமலிருக்கவே, இப்போதும் நாடகம் போடுகிறீர்களா?"

"அப்படி இல்லை; நாடகம் வேண்டும் என்று என்னிடம் கேட்கிறார்கள். எனக்கும் ஒய்வு இருக்கும்போது, அதற்கு ஒத்துக் கொள்கிறேன். பிஸியாக இல்லாதபோது அப்படி இருப்பதாகச் சொல்லி, நாடகம் போடுவதைத் தட்டிக் கழிப்பது மனசாட்சிக்கு ஏற்றதாக இல்லை. அப்படி ஒத்துக் கொண்ட பிறகு, அதே தேதியில் அதைவிடப் பெரிய வாய்ப்பு (திரைப்படத்தில்) கிடைத்தால், அதற்காக நாடகத்தை ஒதுக்கி விடுவதில்லை. டைரக்டரிடம் நிலைமையை எடுத்துச் சொல்லி, அந்த ஒரு நாளைக்கு மட்டும் அனுமதி வாங்கிக் கொண்டு, செங்கோட்டையில் ஷூட்டிங் என்றாலும் நடுவில் சென்னைக்கு வந்து நாடகம் போட்டு விட்டு மறுபடியும் ஷூட்டிங் போய் விடுவது உண்டு. ஆனால் அவர்களுக்குத் தொல்லை உண்டாகிற மாதிரி நேர்ந்ததில்லை. அதுவே சாதனைதானே?"

ஃ



'மீண்டும் சுப்ரபாதம்' நாடக 100ஆவது நிகழ்ச்சியில்...

# நான் பிறந்த அமெரிக்கா

**'ஆதித்யா'**



✦ நான் பிறந்தேன்

நான் அமெரிக்காவிலே ஒரு ஹாஸ்பிடல்லே பிறந்தேன். பிறந்த உடனே நர்ஸ், என் கால் பாதங்களிலே கருப்பு மையைத் தடவி ரேகைகளை ஒரு பேப்பர்லே பதிவு செய்து கொண்டாள். அதுலேயே என் அம்மாவோட கட்டைவிரல் ரேகையையும் பதிவு செய்தார்கள். இந்த அம்மாவோட குழந்தை இதுன்னு அடையாளம் தெரிஞ்சுக்க இப்படிச் செய்யறாங்க. அதன் பிறகுதான் என்னைக் குளிப்பாட்டித் தூங்க வைத்தார்கள். பிறந்த இரண்டாவது நாளே என்னை, அம்மாவுடன் வீட்டுக்கு அனுப்பிச்சுட்டாங்க. அமெரிக்காவிலே கார் ஸீட் இருந்தால்தான் குழந்தையை கார்லே எடுத்துக் கொண்டு போகலாம். குழந்தைகளுக்கென கார்ஸீட் இங்கே கிடைக்கிறது. தொட்டிப் படகு மாதிரியுள்ள அந்த பிளாஸ்டிக் 'ஸீட்'டில் என்னை 'COMFORTER'லே (மெது மெத்தை) படுக்க வைத்து, என் தொடை வழியாக 'பெல்ட்'டை மாட்டி, தோள் பட்டை மேலே எடுத்து 'பக்கிள்' மாட்டி, அதை காரிலே உள்ள ஸீட் பெல்டோட கட்டிடுவா. அந்தக் கார் ஸீட்டைத் தரையில் வைத்துப் படகு மாதிரி ஆட்டினா நல்லா தூக்கம் வரும்.

நான் பிறந்த ஒரு மாதத்துக்குள் எங்க ஊர் அசெம்பிளி மெம்பரிடம் இருந்து. "புதிய அமெரிக்கப் பிரஜையான உன்னை வரவேற்கிறேன். இந்த நாட்டுப் பிரஜைகளுக்கான சகல உரிமைகளும் உனக்குக் கிடைக்கும் என்று உறுதி கூறுகிறேன்" என்று அழகான CITIZENSHIP CERTIFICATE எனக்கு வந்தது.

பேபியைக் குளிப்பாட்ட ஒரு சின்ன 'பாத்டப்' (BATH TUB) இங்கே கிடைக்கிறது. எல்லாம் ஒரே மாதிரி அளவு. எல்லா வீட்டு கிச்சன் 'ஸிங்க்லே' (SINK)யும் அது பொருந்தும். அதுக்குள்ளே 'ஸ்பாஞ்சு' லைனிங் வைத்துக் கீழே தண்ணீர் போகத் துளையும் இருக்கும். குழந்தை பிறக்கறதுக்கு முன்பே அப்பாவுக்கும் அம்மாவுக்கும் குழந்தையைத் தூக்கறது, குளிப்பாட்டறது எல்லாம் எப்படின்னு கற்றுக் கொடுப்பார்களாம். அதனாலே அப்பாவுக்கு என்னைக் குளிப்பாட்டக் கஷ்டமாகவே இல்லை. நான் கொஞ்சம் பெரியவனா ஆனவுடன் என்னோட சித்தி பாட்டி, எனக்குச் சின்ன பிளாஸ்டிக் 'ஸ்விம்மிங் பூல்" வாங்கித் தந்தா. வாயாலே ஊதிக் காற்று அடைச்சா, தொட்டி மாதிரி ஆகிவிடும். அதுலே இரண்டு பக்கெட் தண்ணீர் விட்டால் அதுதான் "ஸ்விம்மிங் பூல்".

நான் பிறந்து, வீட்டுக்கு வரும் போது ஹாஸ்பிடல் நர்ஸ், "ஃப்ரீ" முதல் "ஹேர் கட்"னு ஒரு கூப்பன்

✦ கார் சீட்



✦ சின்ன பாத் டப்





✦ பர்த் டே ட்ரீட்

✦ ஸான்டாக்ளாஸுடன்...



✦ மீனாட்சிக்கோயில் ஹூஸ்டன்



✦ பேஸ்பால் விளையாடுவோம்....



கொடுத்தாங்க. சில ஹாஸ்பிடல்களும், குழந்தைப் பொருள் தயாரிப்பாளர்களும் புதுசா பிறக்கிற குழந்தைகளுக்கென்று அதைத் தருவாங்களாம். இந்தியாவுக்கு முதல் தடவையாக நான் வந்தபோது என்னைக் கோயிலுக்குக் கூட்டிண்டு போய் தலையை மொட்டை அடிச்சுக் குளத்துலே குளிப்பாட்டி விட்டாங்க.

என்னோட 'பர்த் டே' அன்னிக்கு கேக் வெட்டுவேன். என் 'ஃப்ரெண்ட்ஸு'க்கெல்லாம் எங்க வீட்டில் 'ட்ரீட்' கொடுப்போம். அப்பா அம்மாவோட எப்பொழுதாவது தூரத்து ஊரிலேயுள்ள கோயிலுக்குப் போவேன். தமிழ்நாடு மாதிரி பல பெரிய கோயில்கள் இங்கே இருக்கிறது. ஹூஸ்டன் நகர்லே உள்ள மீனாட்சி கோயில் அழகாக இருக்கும். நிறையப் பேர் சுவாமி கும்பிட வருவாங்க. அமெரிக்கர்களும் புதுசா கார் வாங்கினா பூசை பண்ணி விட்டு ஓட்டிக் கொண்டு போவாங்க. அமெரிக்க வீடுகளைப் போல எங்க வீட்டிலும் கிறிஸ்துமஸ் 'ட்ரீ' அலங்காரம் செய்து எனக்கு 'கிஃப்டு' எல்லாம் அப்பா வாங்கித் தருவார், நான் ஸாண்டா க்ளாஸோட போட்டோ கூட எடுத்துக் கொண்டேனாக்கும்.

எங்க வீட்டுப் பக்கத்தில் ஒரு பார்க் இருக்கு. சில நாள்களில் என்

'ஃப்ரெண்ட்ஸ்' உடன் போய் விளையாடுவேன். அங்கே ஏறு மரம், சறுக்கு மரம்னு பலவிதமா கனமான பிளாஸ்டிக்னாலே செய்து வைத்திருப்பாங்க. கண்ணாமூச்சி விளையாடலாம். மற்ற நாள்களில் எங்க வீடுகள் பின்னால் 'லான்'லே (LAWN) பேஸ்பால் விளையாடுவோம். பேஸ்பால்தான் அமெரிக்காவிலே நிறையப் பேர் விளையாடுவாங்க. சில 'கைஸ்' (GUYS) (பசங்க) நைலான்லே செய்த பட்டம் விடுவாங்க. ஒவ்வொன்றும் 25 டாலர் வரை விலை. ஸூப்பராப் பறக்கும்.

என்கிட்டே சைக்கிள் இருக்கு. இந்த ஊர்லே குழந்தைகள் சைக்கிளில் ரோடு பக்கமே போகக்கூடாது. அதற்கென்று ரோடு ஓரமாக "ஸைடு வாக்" (SIDE WALK) இருக்கும். அப்பா அம்மாவோட போறதுன்னா காரிலேதான் போவோம். அநேகமா உலகத்திலே தயார் செய்யும் எல்லாவிதக் கார்களும் இங்கே கார் பஜார்லே கிடைக்கும். வாடகைக்குக் கூடப் புதுசா நமக்குப் பிடித்த கார் கொடுப்பாங்க. ரோடு எல்லாம் வழுவழுன்னு இருக்கும். இங்கே கார், பஸ், பெரிய 'ட்ரக்' எல்லாம் மணிக்கு 88 கிலோ மீட்டர் வேகத்தில் ஓட்டலாம். அதைவிட வேகமாக ஓட்டினால் போலீஸ் பட்ரோல் பிடித்து 'ஃபைன்' போட்டிடுவாங்க. கார்கள் எல்லாம் வரிசையா 'லேன்'ல தான் ஓடும். 'ஓவர்டேக்' பண்ணனும்னா 'லைட் ஸிக்னல்' போட்டுண்டு லேன் மாறிப் போவாங்க. சென்னை ரோடுகள்லே,



✦ கார் பஜார்


✦ விக்டோரியா வண்டி



✦ மிட்டாய் கடை, உடுப்பி ஹோட்டல்

அய்ய! என்ன நெரிசல்! ஒருத்தருக்கொருத்தர் முந்திக்கிட்டு நடுவிலே பூர்றாங்க! ஹார்ன் சத்தம் காதைத் துளைக்குது. அமெரிக்காவிலே கார் ஹார்ன் சத்தமே கேட்க முடியாது. நியூயார்க் நகரத்தில் சில இடங்களில் சுற்றிப் பார்க்க விக்டோரியா குதிரை ஸாரட் வண்டி கூட இருக்கிறது.

சென்னையில், பார்க்க அசிங்கமா இருக்கு. குட்டிப் பசங்களும் சரி, பெரியவங்களும் சரி. ரோடிலேயே "ஈஸ்" போறாங்க. வெட்கமாவே இல்லை. எங்க ஊரிலே "காஸ் ஸ்டேஷன்"லேயும் (Petrol Bunk) "ஹைவேஸ்"லேயும் (நெடுஞ்சாலை) டாய்லெட் இருக்கு. "க்ளீனா" இருக்கும். குழந்தைகளுக்கு "டையபர்" (அரைத்




✦ டால்ஸ், பெட்ஸ் பாரேட்



✦ வண்ண வண்ண இலைகள்



✦ டால்ஸ், பெட்ஸ் பாரேட்

துணி மாற்ற 'டேபிள்' இருக்கும். உட்கார்ந்து ரெஸ்ட் எடுக்க பெஞ்சு போட்டு, வெளியிலே பார்க் மாதிரி இருக்கும். 'Pet' நாய்களுக்கென்று 'சுசு', '2' போக இடம் உண்டு.

நான் இன்னும் ஸ்கூல் போக ஆரம்பிக்கவில்லை. இங்கு ஐந்து வயது முடிஞ்சாதான் ஸ்கூலிலே சேர்த்துப்பாங்க. வயது குறைவான குழந்தைகள் பென்சில் பிடிச்சா விரல் நரம்புகள் 'வீக்' ஆகிவிடுமாம். என் அப்பா அம்மா யுனிவர்ஸிடிக்கு 'டீச்' பண்ணப் போகும்போது என்னை DAY CARE CENTERலே விட்டுடுவா. அங்கே, குழந்தைகள் பெரியவங்க கிட்ட எப்படிப் பழகணும், எப்படிச் சாப்பிடணும், தானே எப்படி 'பான்ட்' மாட்டிண்டு 'ஷூ', 'லேஸ்' கட்டிக் கணும், பெயிண்டிங் போடுவது,



பாட்டு, கதை, 'ஆல்ஃபபெட்ஸ்', ஒன்றி லிருந்து நூறுவரை எண்ணுவது, கடிகாரம் மணி பார்ப்பது எல்லாம் கற்றுக் கொடுப்பாங்க. பலவித சத்தான உணவும் கொடுப்பாங்க. ஞாயிற்றுக்கிழமையிலேயும் 'டே கேர்' போகணும் போல இருக்கும்.

அமெரிக்காவிலே கடைகள் எல்லாம் அழகாக இருக்கும். காய்கறி, பழக்கடைகளைப் பார்த்தால் எல்லாம் வாங்கணும் போல இருக்கும். பெரிய ஊர்களில் இந்தியர்கள் நடத்தும் கடைகள் இருக்கின்றன. "ஸாரி", சுரிதார், எல்லா டிரஸ்ஸும் கிடைக்கும். மிட்டாய்க் கடைகள், சில ஊரிலே உடுப்பி ஹோட்டல்கூட இருக்கும்.

இங்கே பல விழாக்கள் கொண் டாடுவாங்க. வஸந்த காலத்திலே

(ஏப்ரல் மாதம்) குழந்தைகள் DOLLS and PETS PARADE நடத்துவாங்க. முயல்குட்டி மாதிரி டிரஸ் பண்ணிண்டு, தன் வீட்டிலே உள்ள நாய்க்குட்டி, பூனைக்குட்டி, BUNNY BEARS பொம்மைகளை எல்லாம் வண்டியிலே வைத்து பாண்டு வாத்தியங்களோட ஆடிக்கொண்டு ஊர்வலமாகப் போவாங்க. அதுலே உயரமான 'க்ளவுன்'களும் ஆடிப் பாடிண்டு வருவாங்க. பார்க்க 'கலர்ஃபுல்'லாக இருக்கும்.

கலர்னு சொன்னா ஞாபகம் வருது. அக்டோபர் மாதம் அமெரிக்காவின் வடக்கு மாநிலங்களில், மரங்களின் பச்சை இலைகள் எல்லாம் மஞ்சள், ஆரஞ்சு, சிவப்பு, பழுப்பு என்று நிறம் மாறி, உலர்ந்து உதிரும். பலவண்ண இலைகளைப் பார்க்க நிறைய உல்லாசப் பயணிகள் வருவாங்க. இலைகள் உதிர்ந்து மரங்கள் மொட்டையாக நிற்கும். அப்புறம் 'ஸ்நோ' (SNOW). வானத்திலேயிருந்து உப்பு, வெள்ளைப் பஞ்சு மாதிரி விழுந்து உறைந்துவிடும். ரோடுலே விழுந்த 'ஸ்நோ'வை இரவிலேயே பெரிய புல்டோஸர் லாரியில் வந்து வாரிப் போட்டுக் கொண்டு போயிடுவாங்க. வீட்டு 'லான்'லே (LAWN) விழும் 'ஸ்நோ' கெட்டியாக உறைந்தவுடன் வெள்ளை வெளேர்னு பார்க்க அழகாக இருக்கும். அப்பொழுது படகு மாதிரி பெரிய பிளாஸ்டிக் தட்டில் உட்கார்ந்து சறுக்கி குழந்தைகள் எல்லாரும் விளையாடுவோம்.



இரவில் 'ஸ்நோ'



பழக்கடை



பிளாஸ்டிக் தட்டில் குழந்தைகள்

'ஸ்நோ' விழுந்து உறைந்தவுடன் இருட்டான இரவில் பார்க்க வெளிச்சமா ரொம்ப அழகாக இருக்கும்.

இப்படி என்னைப் போன்ற அமெரிக்காவிலே பிறந்த இந்தியக் குழந்தைகள் பெரியவர்களாக ஆகும் போது அமெரிக்கர் மாதிரி நாகரிகமாப் பழகணுமா, இந்தியர் நாகரிகப் படிப் பழகணுமாங்கற ஓர் இக்கட்டான சூழ்நிலை ஏற்டுகிறதாம். அதனாலேதான் அமெரிக்காவிலே பிறந்து வளர்பவர்களை தமாஷா 'ABCD'. அப்படின்னா? 'America - Born - Confused Desi' என்று சொல்கிறார்கள்.

தகவல் : ஜனார்த்தனன்

# "வேளாண்மையில் சாதனை நிகழ்த்தி வரும் சிந்தனையாளர்"

## எஸ். எஸ். நாகராஜன்

தன்னம்பிக்கை, உழைப்பு, வெற்றி இவற்றுக்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறார், சிந்தித்து செயல்பட்டு வரும் புளியங்குடியைச் சேர்ந்த விவசாயி திரு. பி. கோமதி நாயகம். திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்டத்தில் மதுரை - குற்றாலம் சாலையில் அமைந்துள்ள ஊர் புளியங்குடி. மேற்குத்தொடர்ச்சி மலையின் அடிவாரத்தில் அமைந்துள்ள இந்த ஊரில் வளமான செம்மண் மற்றும் வண்டல் கொண்ட வேளாண்பூமி விவசாயத் தொழிலுக்கு ஊன்றுகோலாக இருந்து வருகிறது. தமிழகத்தில் எலுமிச்சை அதிகம் விளையும் பகுதி இது. அதுமட்டுமல்ல, எலுமிச்சைக்கென்றே தனியாகப் பெரிய சந்தையும் இங்குதான் உள்ளது. அருகிலுள்ள கேரளாவிற்கு தினமும் 4 அல்லது 5 லாரிகள் காய்கறிகளும் செல்கின்றன. அத்துடன் பூ மார்க்கெட் ஒன்றும் உள்ளது. இப்பகுதியில் ஏராளமான ஏரிகளும் 2000க்கும் அதிகமான பம்புசெட் கிணறுகளும் உள்ளன. இப்பகுதியில் பின்பட்ட சம்பாவில் ("பிசானம்" செப்டம்பர் - பிப்ரவரி) அதிகப் பரப்பளவில் நெல் சாகுபடி செய்யப்பட்டு வருகிறது. பழம்பெரும் நெல்லாகிய "மொழிக்கறுப்பு" இப்பகுதியில் சாகுபடியில் இருந்தது. எலுமிச்சை மரங்களோடு தென்னையும் இப்பகுதியில் சாகுபடி செய்யப்பட்டு வருகிறது.

59 வயது நிறைந்த திரு. கோமதி நாயகம் பள்ளி ஆசிரியரும் ஆவார். இவர் ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தபோது பிரபல தொழில் அதிபர் மற்றும் வேளாண்மை வித்தகர் திரு.ஜி.டி. நாயுடுவின் புத்தகத்தைப் படித்து ஒரு விமர்சனம் எழுதினார். உடனே கோவை வந்து தன்னைச் சந்திக்குமாறு திரு. நாயுடு கடிதம் எழுதவே, அங்கு சென்று இரண்டு நாள்கள் தங்கினார். அப்போது விவசாயத்தின் முக்கியத்துவத்தை திரு. நாயுடு மூலம் துல்லியமாகத் தெரிந்து கொண்டார். புளியங்குடி இராமலிங்கம் நடுநிலைப் பள்ளியில் ஆசிரியராகப் பணிபுரிந்து கொண்டே விவசாயத்தில் இவர் ஈடுபட்டார். இவர் விவசாயத்தில் நுழைந்த அன்றே பலத்த அடி. இவருக்குச் சொந்தமான புஞ்சை நிலத்தில் கிணறு ஒன்றை வெட்டினார். எதிர்பார்த்த அளவிற்கு அதிகம் நீர் கிடைத்தாலும் கிணற்றுச் சுவர்கள் அடிக்கடி இடிந்து விழுந்து பண்ணைத் தொழிலில் இடர்பாடுகளை உண்டாக்கியது. நல்ல பலமான சுவரைக் கட்ட போதுமான நிதிவசதி இல்லாததால் மிகவும் மனச் சோர்வை அடைந்த திரு.கோமதிநாயகம் என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்துக் கொண்டிருந்தார். இவரைச் சுற்றியிருந்த சமுதாயம் இவரை ஆசிரியர் பணியோடு நிற்கும்படி அறிவுரை கூறியது. இது சமயம் இவரது தாயாரின் சகோதரி திருமதி சண்முகத்

தென்னையில் ஊடுப் பயிராக கோ - 1 தீவனப்புல்



எலுமிச்சையில் அகத்தி ஊடு பயிர்





தென்னையில் ஊடுப் பயிராக மொச்சை

தம்மாள், அவரது கணவர் திரு. சடையப்பன் செட்டியார் இவருக்கு உதவி செய்து கிணற்றினைக் கட்டி பம்புசெட் அமைக்க உதவினார்கள். மிகவும் உற்சாகத்தோடு கிணற்றுப் பாசனத்தில் திரு. கோமதி நாயகம் நெல் சாகுபடி செய்தார். இதில் பெருத்த நஷ்டம் ஏற்பட்டது.. நிலைகுலைந்த திரு. கோமதி நாயகம் திரு. ஜி.டி.நாயுடுவை அணுகி யோசனை கேட்டார். அவர் "உங்கள் ஊர் குற்றாலம் அருகில் உள்ளது. எனவே மழை வளம் இருக்கும். நீங்கள் தென்னை மரங்களை நட்டுப் பராமரிப்பதுடன், கால்நடைகளையும் வளர்க்கலாம் என்று ஆலோசனை வழங்கினார். அதன்படி 1962 ஆம் ஆண்டு தென்னை மரங்களை நட்டார். அதோடு நெல், பருத்தி, மணிலா, காய்கறிகள் மற்றும் கேழ்வரகு போன்றவற்றைச் சாகுபடி செய்தார். மீண்டும் விவசாயத்தில் நஷ்டமே ஏற்பட்டது. தனக்குத் தொடர்ந்து ஏற்பட்டு வந்த நஷ்டங்களைக் குறித்து தீவிரமாகச் சிந்தித்து இதுகுறித்து விவசாய வல்லுநர்களோடு கலந்தாலோசனை செய்தார். 1970 ஆம் ஆண்டு முதல் கடுமையாக உழைத்துத் தனது நிலங்களின் வளத்தை அதிகரிக்க முற்பட்டார். பத்து ஆண்டுகளாகத் தொடர்ந்து இயற்கை உரங்கள் இட்டதாலும், தக்கைப்பூண்டு போன்ற பசுந்தாள் உரச் செடிகளைப் பயிர் செய்து நிலத்தில் உழுது விட்டதாலும் இவரது விவசாய வருமானம் சிறிது சிறிதாக உயரத் துவங்கியது. இது சமயம் திரு. கோமதி நாயகம் புளியங்குடியில் விவசாய சேவா நிலையம் ஒன்றினைத் துவக்கினார். விவசாயத்தை லாபகரமாகச் செய்வதற்குத் தொழில் நுட்பங்கள் தேவைப்படுகின்றன. இவற்றை இச் சங்கத்தில் அங்கத்தினர்கள் விவாதிக்க ஏற்பாடு செய்யப்பட்டது. விவசாயிகள் தங்கள் சந்தேகங்களுக்கு நிபுணர்களிடமிருந்து விளக்கங்கள் பெற வழிவகை செய்யப்பட்டன. இந்தச் சங்கத்தைத் தோற்றுவித்ததால் விவசாயிகள் திரு. கோமதி நாயகத்தோடு இணைந்து சிந்திக்கத் துவங்கினார்கள். இச் சங்கம் மூலம் பல்வேறு புதுமைகள், நுணுக்கங்கள் அறிமுகம் செய்யப்பட்டன. சங்கத்திற்கு நுழைவுக்கட்டணம் ரூ. 100/-. தொழில் அதிபர்கள் உலகம் முழுவதும் தொழில்நுட்பப் பயணம்



பால் வளத்திற்குக் கலப்பினப் பசுக்கள்
(இடமிருந்து வலம் - திரு. ஜீவா, திரு. நல்லதம்பி)



முற்போக்கு விவசாயி திரு. பி. கோமதி நாயகம்



இயற்கை உரமிட்ட தென்னை

மேற்கொண்டு தங்கள் தொழிலில் ஏற்பட்டு வரும் நவீனங்களைக் கண்டறிந்து வந்து தங்கள் தொழிலை உள்ளூரில் நவீனப்படுத்துவதுபோல விவசாயிகளும் செய்யலாம் என்ற நோக்கத்தோடு விவசாயிகளுக்குச் சுற்றுலாப் பயணத்திற்கு திரு. கோமதி நாயகம் ஏற்பாடு செய்து தானும் விவசாயிகளுடன் சென்றார். இவர் பஞ்சாப், அரியானா, கேரளா போன்ற மாநிலங்களுக்குச் சென்று வந்துள்ளார். அரியானா மாநிலத்தில் இருந்து சீமை எலந்தைச் செடிகளைப் பெருமளவு தென் மாவட்டங்களுக்குச் சங்கம் மூலம் கொணர்ந்தார். ஆண்டு தோறும் சங்கத்தில் விவசாய நிபுணர்கள், முற்போக்கு விவசாயிகள் இவர்கள் உதவியுடன் கருத்தரங்கு களை நடத்தினார். மாதந்தோறும் மாவட்ட ஆட்சித் தலைவர் தலைமை யில் அனைத்துத் துறை அதிகாரிகளும் கலந்து கொண்டு நடத்தும் விவ சாயிகள் குறை தீர்க்கும் நாள் கூட்டத் தில் கலந்து கொண்டு விவசாயிகளின் பிரச்னைகள் பலவற்றுக்கும் இச் சங்கம் தீர்வு கண்டுள்ளது. தினமும் இரவு 7 முதல் 9 மணி வரை விவ சாயிகள் இங்கு கூடி கருத்துப் பரி மாற்றம் செய்வது வாடிக்கை. பலவகை விவசாயப் பத்திரிகைகள் இங்கு வருகின்றன. இச் சங்கத்திற்கு வாடகைக் கட்டடம் ஒன்றும், அலுவலர் ஒருவரும் உண்டு. சுருக்கமாகச் சொன்னால் அரசுத் துறைக்கும் விவ சாயிகளுக்கும் ஒரு பாலமாக இச் சங்கம் செயல்படுகிறது. இச் சங்கம் தொழில் நுட்பங்களை வெளியிடும் போது அதற்கு விவசாயிகள் மத்தியில் மிகுந்த வரவேற்பு உண்டு. ஏனெனில் இந்தப் பரிந்துரைகள் எல்லாமே உறுப்பினர்கள் நேரிடையாகச் செயல் படுத்திக் கண்டறிந்த உண்மைகள். இச் சங்கம் நடத்தியதால் மிக்க அனுபவம் பெற்ற கோமதி நாயகம், விவசாயத்தில் நம்பிக்கையோடு ஈடு பட்டார். தனது அனுபவத்தில் தனது நிலத்தின் வளத்தை அதிகப்படுத்து வது மிகவும் முக்கியமானது என்ப தைத் தெரிந்து கொண்டார். கடந்த 7 வருடங்களாக நிலவளம் அதிகரிக்க இவர் இயற்கை உரங்களையிட்டு வருகின்றார். இதற்காக ஆடு வளர்ப் பில் ஈடுபட்டு இயற்கை உரம் சேகரித்தார். இது சரிப்படாததால் கறவை மாடுகளை வளர்க்கத் துவங்கினார். தற்போது இவரிடம் 12 பசுக்களும், 6 கன்றுகளும், ஒரு பொலி காளையும் உள்ளன. இவரது 8 ஏக்கர் புஞ்சை நிலத்தில் 250 தென்னை மரங்களும், 130 எலுமிச்சை மரங் களும், 3 ஏக்கர்களில் கோ-1 தீவனப் புல்லும் சாகுபடியில் உள்ளன. தென்னையில் ஊடுபயிராக ஒரு பகுதியில் கோ-1 தீவனப்புல்லும், மற்றொரு பகுதியில் தழைச்சத்தை நிலத்தில் நிலை நிறுத்தும் பயறு வகைப் பயிரான மொச்சையும் சாகு படி செய்யப்பட்டுள்ளன. இவை மூலம் மாடுகளுக்குத் தேவையான பசும்புல் கிடைக்கிறது. இத்தொழில் நுட்பம் கீழ்க்கண்ட தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளது.

தென்னை, எலுமிச்சைகளைச் சாகு படி செய்து கொண்டே மாடுகளுக்குத் தேவையான தீவனப் புல்களையும் சாகுபடி செய்து கொள்ள வேண்டும். எலுமிச்சை நட்டபின் ஊடுபயிராக அகத்தியினைச் சாகுபடி செய்தால் நிலவளம் அதிகரிப்பதுடன் கால்நடை தீவனமாகிய பசுந்தழையைப் பெற லாம். மேலும் போனசாகப் பல ஆயி ரக்கணக்கான மதிப்புள்ள அகத்திக் கம்புகள் பெறலாம். அகத்தி இரண் டாம் ஆண்டில் சுமார் 40 அடி உயரம் வளரும். அதை வெட்டித் தண்ணீரில் மூழ்கி இருக்குமாறு 15 தினங்கள் வைத்தால் சுலபமாகப் பட்டைகளை உரித்துவிடலாம். பட்டை உரிக்கப் பட்டக் கம்புகள் பல வருடங்கள் மக்க ளுக்கு உதவும். வண்டு, பூச்சிகளால் பாதிக்கப்பட்டு உளுக்காது. இத் தகைய கம்புகளை கூரை செட்டுக்கு அதிக விலை கொடுத்து மக்கள் வாங்கிச் செல்வார்கள். ஒரு ஏக்கர் எலுமிச்சை நட்டு இடைவெளியில் சுமார் 3000 அகத்திச் செடிகளை நட்டால் இரண்டாம் ஆண்டில் கம்புகள் விற்பனையில் சுமார் ரூ. 15.000/- வருமானம் பெறலாம். இதோடு அகத்தி மரம் இரண்டு ஆண்டுகள் கால்நடைகளுக்கு அதிகத் தழையைத் தீவனமாகக் கொடுக்கும். அத்துடன் நிலவளத்தை அகத்தி கூடுதலாக்குகின்றது. திரு. கோமதி நாயகம் தொழில் நுட்பத்தைத் தனது பண்ணையில் நடைமுறையில் விளக்கி வருகிறார். இம் மாதிரியாகச் சாகுபடி செய்து வரும் இவரது தோட்டத்தில் களையெடுக்கும் பணியே (Weeding) கிடையாது என்பது குறிப்பிடத்தக்கது. எலுமிச்சைக்கு, இவர் ஆண்டிற்கு ஒருமுறை முக்கிய தொழு உரம் இட்டு வருகிறார். எலுமிச்சைத் தோட்டம் அகத்தியால் வளம் பெறு கின்றது. இதனால் இரசாயன உரங் களை இடச் செலவே செய்யப்படுவ தில்லை.

திரு. கோமதி நாயகம் கறவை மாடுகளை வளர்ப்பதிலும் தனது தேர்ச்சி பெற்ற அனுபவத்தைக் காட்டியிருக்கிறார். இவர் தீவனப் புல்லிற்காகத் தனி நிலம் ஒதுக்க வில்லை. தென்னை மரங்களுக்கு இடையில் பசும்புல் சாகுபடி செய் கின்றார். இவருக்கு இதனால் தேவை யான பசும்புல் கிடைப்பதுடன் தென்னையிலும் அதிக மகசூல் கிட்டு கிறது. இவர் கறவை மாடுகளின் எண்ணிக்கையை அதிகரித்துக் கொள்ளவில்லை. இவரது குடும்ப நபர்கள் உதவியோடு மாடுகளைப் பராமரிப்பது, பால் கறப்பது போன்ற

பணிகளைச் செய்ய விரும்புகிறார். இவர் விவசாயிகள் கலப்பினப் பசுக்களை வளர்க்க வேண்டுமென்கிறார். நாட்டுப் பசுவிற்கும், கலப்பினப் பசுவிற்கும் கீழ்க்கண்ட வித்தியாசங்கள் இருப்பதாகக் கூறுகிறார்.

| விவரங்கள் | நாட்டுப்பசு | கலப்பினப்பசு |
|---|---|---|
| ஒருநாளைக்கு ஒரு பசு தரும் பால் | 1 - 1 1/2 லிட்டர் | 8 - 10 லிட்டர் |
| பால் கறக்கும் நாள்கள் | 150 நாள்கள் | 300 நாள்கள் |
| பால் கறக்கும் நாள்களில் கிடைக்கும் பாலின் அளவு | 220 லிட்டர் | 1500 - 2000 லிட்டர் |
| பால் வற்றிய நாள்கள் | 10 - 12 மாதங்கள் | 5 மாதங்கள் |
| ஒரு கன்றுக்கும் அடுத்த கன்றுக்கும் இடைவெளி | 20 - 24 மாதங்கள் | 14 மாதங்கள் |
| சினைக்கு வருவது | தாமதம் | விரைவில் |

செய்யும் செலவிற்குக் கலப்பினப் பசு கணிசமான லாபம் தரும் என்கிறார். ஒரு குடும்பத்தினர் தங்களால் நிர்வகிக்க, இயலும்அளிவற்குப் பசுமாடுகளை வைத்துக் கொண்டு. கன்றுகளை அதாவது கிடாறிக் கன்றுகளை நல்ல விலைக்கு விற்கலாம் என்கிறார். சுமார் 16 மாதங்களில் இக்கன்றுகள் பருவத்திற்கு வந்துவிடுகின்றன. இவருக்குப் பசுமாடுகளைப் பராமரிக்க இவரது குமாரர்கள் ஜீவா, நல்லதம்பி மற்றும் மனைவி திருமதி. வேலம்மாள் உதவி வருகின்றனர். மூத்த மகனான திரு. ஜீவா மாடுகளைக் கவனிப்பதுடன் தென்னை, எலுமிச்சை தோட்டங்களையும் கவனித்துக் கொள்கிறார். திரு. கோமதி நாயகம் தனது பால் பண்ணையில் விவேகாநந்தா கேந்திரத்தின் மூலம் இரண்டு சாண எரிவாயுக் கலன்களை அமைத்துள்ளார். எரி வாயுக் கழிவான சாணக் கரைசல் தென்னை, எலுமிச்சை, புல் போன்றவற்றிற்கு எருவாகப் பயன்படுகிறது. இவர் முற்றிலும் இயற்கை உரங்கள் உதவியுடன் காய்கறிகளைச் சாகுபடி செய்கின்றார். இவைகளுக்கு விஷ மருந்துகளைத் தெளிப்பதில்லை. தென்னையில் கிடைக்கும் பாளை, மட்டை இவைகளை நிலத்தில் புதைத்து விடுகின்றார். அவை மண்ணில் கலந்து நீர் பிடிப்புத் தன்மையை அதிகாரித்து கின்றன. பண்ணைக் கழிவுகள் அனைத்தையும் உரமாக்க முயற்சி செய்து வருகிறார். உணவே மருந்து. மருந்தே உணவு. எனவே காய்கறிகள், தான்யங்கள் விஷமற்றதாக இருக்க அரும்பாடு படுகிறார். சாதாரணமாக 2 ஏக்கர் தோட்ட நிலம் இருப்பவர்கூட வளமாக வாழமுடியும் என்பது இவரது கருத்து.

ஓர் ஏக்கரில் தான்யம், காய்கறிகள், ஓர் ஏக்கரில் மரப்பயிர்கள், அதற்கு இடையில் தீவனப் பயிர்கள், அதன் மூலம் கால்நடைகள் வளர்த்தல் என்ற முறையில் திட்டமிட்டால் ஒரு குடும்பம் வசதியாக வாழ இயலும். விவசாயத்தில் இன்றுள்ள விரக்தி, சோர்வு பற்றி இவரது கருத்து: விவசாயத்தில் தீவிரமான ஆர்வம் தேவை. இப்போதுள்ள பல விவசாயிகளுக்கு அது இல்லை. நஷ்டங்களையும், இதில் உள்ள கஷ்டங்களையும் பற்றியே புலம்புகின்றனர். அதனால் பயன் ஏதும் இல்லை. எல்லாத் தொழிலிலும் கஷ்ட, நஷ்டங்கள் உண்டு. அதேபோல்தான் இதிலும். அத்துடன் பெரும்பாலான மக்கள் வேளாண்மை என்பது படிக்காத பாமர மக்களுக்குரிய ஒரு தொழில் என்றுதான் எண்ணுகின்றனர். படித்தவர்கள், விஷயம் தொிந்தவர்கள் இதில் ஈடுபடவேண்டும். இயற்கையின் சீற்றத்தைத் தாங்கும் முதல் நபர் விவசாயிதான். விளை பொருள்களுக்குக் கட்டுபடியாகும் விலை இல்லை. ஆனாலும் விவசாயிகள் இதை முழு மூச்சாகச் செயல்பட்டால் மாற்றலாம். இவரது பால்பண்ணையில் கறவைக்கும், பால் விநியோகத்திற்கும் வேலையாள் கிடையாது. இவரது புதல்வர்களே அப் பொறுப்பை வகிப்பதால் சிறப்பாகவும், அக்கறையுடனும் நடத்த இயலுகிறது. விவசாயம் வெற்றிகரமாக நடைபெறக் குடும்பத்தாரின் முழு ஒத்துழைப்பும் தேவை. விவசாயிகள் தங்களது பிள்ளைகளை வேறு துறைகளுக்கு மாற்றிவிட முயற்சிப்பதைவிட நிலத்திலேயே நல்ல வருமானம் பெற வழிவகைகளைச் சிந்திப்பது அவசியம். இவரது இன்னொரு தோட்டத்தில் (2 ஏக்கர் பரப்பு) 62 எலுமிச்சை (10 வயதுள்ள), சொட்டு நீர்ப்பாசனம் மூலம் பாசனம் பெற்று, ஆண்டுக்கு 20 முதல் 30 ஆயிரம் வரை வருமானம் தருகிறது. இதற்குக் களை வெட்டுதல் இல்லை. பாசனத்திற்குத் தனியாக ஆள் தேவையில்லை. இயற்கை உரம் மட்டுமே பயன்படுத்தப்படுவதால் மிகக் குறைந்த செலவுதான் ஆகிறது.

**தென்னையில் வருமானம் :**

மொத்த மரங்கள் 250. 1992 இல் காய்த்த மொத்த காய்கள் 37265. இதன் விற்பனை வருமானம் ரூ. 99741/-. 1991 இல் காய்த்த மொத்த காய்கள் 37,300. இதன் விற்பனை வருமானம் ரூ. 60,692/-. 1993 இல் இதுவரை ரூ. 56,200/-க்குத்தான் வருமானம் வந்துள்ளது. இன்னும் இரண்டு ஆண்டுகளில் தேங்காய்கள் 40000 அல்லது 45000 காய்களாக உயர வேண்டும் என்பது இவரது திட்டம். இதை இயற்கை உரங்கள் இடுவதன் மூலம் அடைய இவர் பாடுபடுகின்றார்.

குடும்ப நபர்களோடு ஒருங்கிணைந்து சந்தோஷத்தோடு செயல்பட்டு வரும் திரு. கோமதி நாயகம் கீழ்க்கண்ட கருத்துகளுக்கு விவசாயிகள் தங்கள் கவனத்தைக் கொடுத்துச் செயல்பட வேண்டுமென்கிறார்.

- விவசாயிகளின் இன்றைய இன்னல்களுக்கு அரசை அல்லது அதிகாரிகளை மட்டும் குறை கூறுவதை விடுத்து நம்மிடம் என்ன குறைகள் உள்ளன என்று எண்ணுவது நல்லது. நம்மிடம் உள்ள ஒற்றுமையின்மை, விழிப்பு உணர்வு இன்மை, தன்னம்பிக்கையின்மை, தொழில்மீது ஆழ்ந்த அக் கறையின்மை இவைகளும் முக்கியக் காரணங்கள்தாம். எனவே இவற்றை முதலில் நிவர்த்திக்க வேண்டும்.
- தொழில்நுட்ப அறிவைப் பெருக்கிக் கொள்ளவும், அனுபவம் வாய்ந்தவர்களுடன் கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்ளவும், அரசு

அதிகாரிகள் மற்றும் நிர்வாகப் பொறுப்பில் உள்ளவர்களுடன் தொடர்பு கொள்ளவும் ஓர் அமைப்பை விவசாயிகள் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். அது பெரிய அமைப்பாக இருக்க வேண்டியது அவசியம் இல்லை.

○ விவசாயம் கட்டுபடியாகவில்லை என்பது எங்கும் பேசப்படும் உண்மை. என்ன செய்வது இதற்கு? முதலில் உற்பத்திச் செலவைக் குறைப்பதைப் பற்றிச் சிந்தியுங்கள். எங்கெல்லாம் தரிசு நிலங்கள் உள்ளனவோ அங்கெல்லாம் மழைக் காலத்திற்கு முன் நன்கு உழுது கொளஞ்சி விதையை விதைத்து விடுங்கள். இதனால் தேவையான தழை உரம் பெறலாம். ஆண்டு தோறும் தானாகவே முளைக்கும். மண் வளம் பெறும். மண் அரிப்பு தடுக்கப்படும். தென்னை, எலுமிச்சை போன்ற மரங்களுக்கு உரம் கிடைக்கும். எதுவும் தேவையில்லையென்றால் விலைக்கு விற்றுப் பணம் பெறலாம். தழை உரம் பெருகினால் தரணி செழிக்கும்.

○ நீர் பற்றாக்குறை - விவசாயிகளை ஆண்டுதோறும் பயப்படுத்தும் பூதகரமான பிரச்னை. அவ்வப்போது தலைகாட்டும் வறட்சி விவசாயிகளின் பொருளாதாரத்தை உறிஞ்சிவிட்டே அகலுகின்றது. எனவே முடிந்த அளவு மரப்பயிர்களுக்குச் சொட்டு நீர் பாசனம், இதரப் பயிர்களுக்குத் தெளிப்புப் பாசனம் அமையுங்கள். இதர பொருட்களை விலை கொடுத்துப் பெறுவதுபோல் நீரினை வாங்க முடியாது. இதனை நினைவில் கொள்ளுங்கள். எனவே இருக்கின்ற நீரைத் திறமையாகப் பயன்படுத்தும் நிலையில் நாம் நிற்கிறோம்.

○ கடன் - இன்று நம்மீது கவிழ்ந்து அழுத்தும் ஒரு பெரிய சுமை. தனியாரிடம் கடன் பெறுவதை முடிந்தவரை விலக்க வேண்டும். சம்பாதித்த பணத்தை மட்டும் வைத்து நமது வளர்ச்சியைத் துரிதப்படுத்த இயலாது. எனவே வளர்ச்சிப் பணிகளுக்குக் கடன் வாங்குங்கள். கடன் வாங்கி நிலம் வாங்குபவர்களுக்கு ஓர் அறிவுரை. 30 ஆயிரம் கடன் பெற்று சொத்து வாங்குபவர் 30 ஆயிரம் ரூபாய்க்கு ஓர் ஆயுள் இன்சூரன்ஸ் பாலிசி எடுக்க வேண்டும். துரதிருஷ்டவசமாக அவர் மரணமடைந்தால் இன்சூரன்ஸ் பணம் மூலம் கடனை அடைக்கலாம். குடும்பத்தினர் உழைத்துப் பிழைக்க நிலமாவது மிஞ்சும். ஆடு, மாடு இவற்றை இன்சூர் செய்து விடுங்கள். இது விஷயத்தில் பணச்செலவு பார்க்கக் கூடாது.

○ புஞ்சை நிலங்களை விற்கும் முன் பலமுறை யோசியுங்கள். எந்தப் பொருளையும் ஏழாண்டுகள் வைத்திருந்தால் அதற்கு ஓர் உபயோகம் தெரியவரும் என்பது ஒரு முதுமொழி. இன்று வருமானம் இல்லை என்றாலும் அருகே ஒரு தொழிற்சாலையோ, குடியிருப்போ தோன்றுமாயின் மதிப்புமிக்க சொத்தாக உங்கள் புஞ்சை மாறலாம் அல்லவா? சாகுபடிக்கு மட்டும்தானா நிலம்? மாடு வளர்த்தல், ஆடு வளர்த்தல், முயல் காடை மற்றும் கோழிப் பண்ணை வளர்ப்பு என்று நிலம், பலவற்றுக்கும் தேவை. இன்னோர் உதாரணம். வளர்ந்து வரும் நகருக்கு அருகே புத்திசாலி ஒருவருக்கு 4 ஏக்கர் வறண்ட புஞ்சை நிலம். கிணற்று நீர் போதிய அளவு இல்லை. ஆண்டுதோறும் நட்டம் அதிகரித்தே வந்தது. விவேகி வேறு வழி கண்டார். வாடகைக் கார்களை நிறுத்தி சவாரிக்குப் போகுமுன் நன்கு கழுவித் துடைத்துவிடும் நிலையமாக்கினார். உதவிக்கு ஒரு பையன் மட்டுமே. இப்போது தினமும் ரூ. 100/- வருமானம். தொலைபேசி வசதியுடன் கூடிய நிலையத்தில் கார் மற்றும் லாரி, டிராக்டர் என்று வாகனங்கள் பெருகிவிட்டன. உங்கள் வாய்ப்பை நீங்கள்தான் கண்டறிய இயலும்.

○ மனிதனை மேய்ப்பது ஒரு கலை. வேலையாட்களைக் கூலிக்காரன் என்று கூறாமல் என்னுடன் பணியாற்றும் சகா என்று கருதுங்கள். பண்ணைகளில் நிரந்தரமாகப் பணி புரிபவர்களுக்குத் தனிநபர் விபத்து இன்சூரன்ஸ் எடுத்துக் கொடுங்கள். ஆண்டுக்கு ரூ. 15/- மட்டுமே. வேலையாள் விபத்தில் இறந்தால் ஈட்டுத் தொகையாக ரூ. 15000/- கிட்டும். உறுப்புகள் சேதமானாலும் நஷ்டஈடு உண்டு. உங்கள் ஊழியர்களின் நலனில் உங்களுக்குள்ள அக்கறையைப் புலப்படுத்தும். இம்முறை இருதரப்பினரின் நல்லுறவுக்குப் பாலம் அமைக்கலாம்.



○ விவசாயம் இன்று கவர்ச்சியற்ற தொழில்தான். ஆனால் மனித முறையைச் செம்மையாகப் பயன்படுத்துவோர் இதிலும் பொருளீட்டுகின்றனர் என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். எந்தப் பயிர் செய்தாலும் வரப்பு வாய்க்கால்களில் அகத்தியை ஊன்றி வையுங்கள். மாட்டுக்கும், ஆட்டுக்கும் ஏன் மனிதர்களுக்கும் இது பயன்படும். கீரையை விலைக்கு விற்கலாம். கம்புகளை விற்கலாம். எதுவும் இயலவில்லையாயினும் எரிபொருளாகப் பயன்படுத்தலாம்.

○ கால்நடை வளமே விவசாயத்திற்கு அடிப்படை. குடும்பத்தினரின் ஆரோக்கியம் நிலைக்கப் பால் தேவை. உரமும், கன்றும் நமக்குக் கிடைக்கும் போனஸ்.

○ தினமும் ஏதாவது பழங்கள் உங்கள் உணவில் இடம்பெறும் வண்ணம் பழ மரங்களை உருவாக்குங்கள். காலி இடங்களிலும், வேலி ஓரங்களிலும் ஏதாவது மரங்களை வளர்த்து வாருங்கள். பல ஆண்டுகள் உழைத்த பின் இயலாமை வந்தபோது அவை கைகொடுக்கும்.

○ தொழில் அதிபர்கள் தங்களது தொழிலில் எங்கெல்லாம் புதுமை காணப்படுகிறது என்று கண்டறிந்து அதைத் தங்களது தொழிலில் புகுத்திப் போட்டி மிகுந்த உலகில் வெற்றி பெறுவதுபோல் விவசாயச் சுற்றுலாக்கள், தேர்ச்சி பெற்ற விவசாயிகளுடன் தொடர்பு இவற்றை வளர்த்துக் கொண்டே வாருங்கள்.

சிறு விவசாயிகள் திரு. கோமதிநாயகம் போல் சிந்தித்துச் செயல்படுதல் வேண்டும். அவர் கூறுவது போல் வெற்றி காண வழிமுறைகள் நினைத்த மாத்திரத்தில் கிடைத்து விடாது. அவை எங்கும் எழுதி வைக்கப்படவில்லை. இதற்குப் பாடுபட்டு உழைத்து அனுபவம் பெற வேண்டும். இதைக் குறித்துச் சிந்தித்துக் கொண்டே இருக்க வேண்டும். யார் உண்மையாகச் சிந்தித்துக் கொண்டிருக்கிறார்களோ அவர்களுக்குத் தானாகவே வெற்றிக்குரிய வழிகள் தென்படத் துவங்கும். இதைப் பெரியவர்கள் ஆங்கிலத்தில் கீழ்க் கண்டவாறு விளக்கியுள்ளனர்:

'The big ideas always find the man who is looking for them'.

○○






ஸ்ரீ யோக நரசிம்மர் (சோளிங்கர்)

ஓவியம் :: சில்பி






ஸ்ரீ யோக ஆஞ்சநேயர் (சோளிங்கர்)

ஓவியம் : சில்பி

"ஸ்ரீக்கானை மறையாய் விரிந்த
விளக்கை என்னுள்
புக்கானை புகழ்சேர் பொலிகின்ற
பொன்மலையைத்
தக்கானைக் கடிகைத் தடங்
குன்றின் மிசையிருந்த
அக்காரக் கனியை அடைந்துய்ந்து
போனேனே"

என்று கடிகாசலப் பெருமானைத் தித்திக்கும் சர்க்கரையால் ஆன பழம் என்று போற்றுபவர் திருமங்கை ஆழ்வார். இவர் குறிப்பிடும் 'கடிகை'தான் சோழசிம்மபுரம். பிறகு சோளிங்கர் ஆயிற்று. பன்னிரு ஆழ்வார்களுள் திருமங்கையாழ்வாரும் பேயாழ்வாரும் மங்களாசாசனம் செய்த தொண்டை நாட்டில் அமைந்திருக்கும் வைணவ திவ்விய திருத்தலமாகும். இது வைணவத் தலங்கள் 108இல் ஒன்றாகும்.

சோளிங்கர் வடஆர்க்காடு அம்பேத்கர் மாவட்டத்தில் வாலாஜா வட்டத்தில் உள்ளது. இந்த மாவட்டத்தில் இது ஒன்றே ஆழ்வார்களால் பாடப்பெற்ற திருத்தலமாகும். இவ்வூர் சோளிங்கர் எனப்பட்டாலும் இதன் அருகில் மூன்று கிலோமீட்டர் தெற்கில் கொண்ட பாளையம் என்ற கிராமம் உள்ளது. இங்கு பெரியமலை, சிறியமலை என இரண்டு மலைகள் உள்ளன. இதில் பெரியமலையில் அருள்மிகு யோக நரசிம்ம சுவாமியும், சிறிய மலையில் யோக ஆஞ்சநேய சுவாமியும் அருள்பாலிக்கிறார்கள்.


★ ஸ்ரீ யோக நரசிம்மர் கோயிலுக்குப் போகும் வழியும் மலைக் கோயிலும்

# யோகம் தரும் நரசிம்மர்

சித்திரம்: அமரர் 'சில்பி'

கட்டுரை: 'சக்தி'


★ வலது பக்கத்தில் தெரிவது யோக நரசிம்மர் உள்ள பெரிய மலை
இடது பக்கத்தில் இருப்பது யோக ஆஞ்சநேயர் இருக்கும் சின்ன மலை.

இங்கு பெரிய மலையில் சோளிங்கர் யோக நரசிம்மர் ஆலயத்தில் உள்ள கல்வெட்டில் காணப்படும் செய்தியின்படி இக்கோயில் தொண்டை நாட்டுத் திருப்பதிகள் 22இல் ஒரு தலமாகும்.

யோகத் தவத்தில் இருக்கும் நரசிம்ம சுவாமி மகாவிஷ்ணு அவதாரம். சிங்கமுகம், கிழக்கே, திருமுக மண்டலம் கொண்ட யோகாசனக் கோலம். சாளிக்கிராம மாலை அணிந்துள்ளார்.



★ காற்று மண்டபத்தின் அருகே உள்ளே மலையிலிருந்து ஸ்ரீநரசிம்மர் மலை அளிக்கும் தோற்றம். இடது பக்கம் புஜகுண்டும், நடுவே யோக நரஸிம்மரின் ராஜ கோபுரமும், வலது பக்கத்தில் தெரிவது ஸ்ரீ அமிர்த பலவல்லித் தாயாரின் பழைய கோயில்



★ ஊர்க் கோயிலில் உள்ள பக்தோசிதர் சுவாமிக் கோயிலின் சந்நிதித் தெருத் தோற்றம்; யோக நரசிம்மரின் உத்சவ மூர்த்தி இந்தக் கோயிலில்தான் இருக்கிறது.



சின்ன மலையின் மேல் கோயிலின் தோற்றம். இடது பக்கத்தில் தெரிவது யோக ஆஞ்சநேயரின் சன்னிதி விமானம். வலது பக்கம் ராஜ கோபுரம். நடுவே, 'தூரத்தில் தெரிவது யோக நரஸிம்மரின் பெரிய மலை.

(மேலே) யோக ஆஞ்சநேயர் கோயிலின் அருகே இருக்கும் சக்ரதீர்த்தமும் கோயிலின் தோற்றமும். இடது பக்கத்தில் அரச மரத்தினிடையே தெரிவது ராஜகோபுரம்; யோக ஆஞ்சநேயர், ரங்கனாதர், ராமர் முதலிய கோயில்களின் விமானங்களையும் காணலாம்.



ராஜகோபுரமும்,
யோக நரசிம்மருடைய
ஹேமகோடி விமானமும்.

இது புகழ் வாய்ந்த பிரார்த்தனைத் தலமாகும். பில்லி சூனியம், தீராத வினை, மனக்குறை முதலியவற்றால் துன்புறுவோர் இத்தலத்திற்கு வந்து நியமத்துடன் சேவை புரிந்தால் அத்துன்பம் சூரியனைக் கண்ட பனிபோல் நீங்கக் காண்கிறோம். பெருமானுக்கு மண்டகப்படி செய்வதும், மண்டபம் எழுப்பியும், கட்டளை ஏற்படுத்தியும் உற்சவம் செய்தும் பல தொண்டு புரிவதே இத்தலத்தின் சிறப்பாகும். புராணத்திலே இத்தலம் காசி, கங்கை, கயா ஆகியவற்றைவிட மேலானது என்று போற்றப்பட்டுள்ளது. பெரிய மலையில் தல விருட்சம் என ஒன்றுமில்லை. சிறிய மலையில் அசோகமரம் உள்ளது. பெரிய மலையில் யோக நரசிங்கப் பெருமாள், - மூலவரும் - தாயாரும் கோயில் கொண்டுள்ளனர். தாயாரை வலம் வந்து வடக்கு முகமாக நடந்தால் பெருமாளின் துவாரபாலகர்களைக் காணலாம். பெருமாள் சந்நிதியில் வெளியே நிற்காமல் அவர்தம் கருவறை அமைந்த மண்டபத்தின் வெளியே வடக்கு வாசலில் தெற்கு நோக்கிக் கம்பீரமாகக் காட்சி தருகின்றனர்.

பெரிய மலையில் உள்ளே நுழையும் போது அழகிய கோபுர வாசல் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும். அங்கு நின்று சுற்றுமுற்றும் பார்த்தால் பச்சைப் பசேல் எனப் பசுமை படர்ந்த குன்றுகளும் இடையே ஊர்களும் காட்சி அளிக்கின்றன.

பெருமாளின் முன்பு இரண்டு இறக்கைகளுடன் குவித்த கைகளுடன் சிலை வடிவில் கருடாழ்வார் காட்சி தருகிறார். அவருக்குப் பின்னமைந்த சுவரில் சாளரமுண்டு. அங்கிருந்து பார்த்தால் எதிரே சிறிய மலை தெரியும். சிறிய மலையில் யோக ஆஞ்சநேயரின் திருக்கண்கள் நேராகப் பெரியமலையில் உள்ள யோக நரசிங்கப் பெருமானின் திருவடி நோக்கி அமைந்துள்ளன.

வெள்ளிக்கிழமை தோறும், பெருமாள் மற்றும் அமிருதபலவல்லித் தாயாருக்கு அபிஷேகம் நடைபெறும். திருமேனியில் சேர்க்கப்படும், பால், தயிர், தேன், சர்க்கரை முதலியவை பஞ்சாமிர்தம் என்கிறார்கள். இரண்டு சிறப்பு இந்தக் கோயிலுக்கு உண்டு. ஆழ்வார் பாடல் பெற்றதும், வைணவ ஆசார்யர்கள் வழிபாடு செய்ததும் இத்தலத்தின் பெருமைகளாகும்.

இங்கு குரங்குகள் மிகவும் அதிக அளவில் காணப்படுகின்றன. எனவே மலை ஏறும் போது கம்பு கொடுக்கிறார்கள்.

100 படிகளுக்கு ஒருமுறை எண்ணிக்கை குறிப்பிடப்படுகிறது. வயதானவர்களின் வசதிக்காக "டோலி" உண்டு. ஒரு தொட்டிலில் இருவர் தூக்கிச் செல்லும் காட்சி பரவலாகக் காணமுடிகிறது. இங்கு ஆழம் காணமுடியாத சுனை உள்ளது.



இறைவன் திருவடிகளில் சூரிய சந்திரர்களின் நித்யவாசம், இந்த மலையில் மொத்தம் 1305 படிகள் உள்ளன.

★ சின்ன மலையின் சக்ரதீர்த்தக் கரையிலுள்ள மண்டபங்களிடையே பெரிய மலை தரும் தோற்றம் பெரிய மலையின் அருகே இருக்கும் புதுகுண்டுவைப் பார்த்தால் யோக நித்திரையில் இருக்கும் சிங்கத்தின் தோற்றம் வெகு ஆச்சரியமாக அமைந்திருப்பது தெரியும்




குளிர்ந்த புங்க மரச் சோலைகளினிடையே சின்ன மலைக்குச் செல்லும் படிக்கட்டுகளும், தொலைவில் ராஜகோபுரமும். (கீழே) பிரம்ம தீர்த்தம்: சேவார்த்திகள் இங்கே உள்ள வீர ஆஞ்சநேயரைப் பிரதட்சிணங்கள் செய்வது வழக்கம். அடிவாரத்தில் தெரிவது வெங்கடேசப்பெருமாள் கோயிலும், தீர்த்தவாரி மண்டபமும்.




★ பெரிய மலையின் தோற்றம். மலையடியின் அருகே இருப்பது வீர ஆஞ்சநேயர் கோயில். படத்தின் நடுவே உயரத்தில் புதுமண்டபம், பக்கத்தில் யோக நரசிம்மர் கோயிலின் ராஜகோபுரமும் உள்ளன. (கீழே) ஸ்ரீ நரசிம்மர் கோயிலுக்குச் செல்லும் படிக்கட்டுகளும், மலை மேலுள்ள நான்கு கால் மண்டபமும்

★ யோக நரசிம்மருடைய உற்சவமூர்த்தியான பக்தோசிதர் சுவாமியும் உபய நாச்சியார்களும்



இங்கு குழந்தை பாக்கியம், திருமண பாக்கியம் பெறமுடியாத வர்களை அதிகம் காண முடிகிறது. மலை ஏறும் வழி எங்கும் தொட்டில்கள் காணப் படுகின்றன. பலரின் நேர்த்திக் கடன் மரங்களில் தென்படு கின்றன.

தினமும் மாலை ஐந்து மணிக் கெல்லாம் இரண்டு கோயில்களும் மூடப்பட்டு விடுகின்றன.

இங்கு கருடசேவை சிறப்பான தாகும். தெனாலிராம கவி என்ற தெலுங்குக் கவியும் ஒரு புத்தகம் எழுதியுள்ளார். முத்துசுவாமி தீட்சிதர் இப் பெருமானைக் குறித்து வடமொழியில் ஒரு கீர்த் தனையே இயற்றியுள்ளார்.

இந்தக் கடிகாசலத்தில் 108 தீர்த்தங்கள் இருப்பதாகக் கூறப் படுகிறது. அவற்றில் முக்கிய மானது பிரம்மதீர்த்தம் என்னும் தச்சான்குளமாகும். இங்குதான் பெருமாளுக்குத் தெப்ப உற்சவம், தீர்த்தவாரி போன்றவை நடை பெறுகின்றன.

சோளிங்கரின் இன்னொரு மலை சின்னமலை. இதில் யோக ஆஞ்சநேயர் யோக நிலையில் காணப்படுகிறார். வாயு குமாரன் சாந்த ரூபியாய், யோக நிலையில் பரந்தாமனை நினைத்துக் கோலம் கொண்டிருக்கும் அழகு நம் கண் களையும், கருத்தையும் ஈர்க்கும் வண்ணமாய் உள்ளது. எதிரே மேற்குத் திசையில் நரசிங்கப் பெருமாளின் கொடிக்கம்பம் இருப் பதை இங்கிருந்தே காணலாம். இங்கு ஆஞ்சநேயர் தம் திருக் கண்களால் பெரியமலையில் உள்ள நரசிங்கப் பெருமாளின் திரு வடியைக் கண்டவாறே அவரை நினைத்துத் தவமிருக்கும் நிலையைக் காணலாம். ஆஞ்ச நேயசுவாமி ஓர் அழகிய சிறு குழந்தை குத்திட்டு அமர்ந்துள்ளது போல் காட்சி தருகிறார். நான்கு கைகள்.

ஒரு கையில் சக்கரம், மற்றதில் சங்கு, மற்றும் இரு கைகளில் ஜப மாலையும், ஜப எண்ணிக்கையும் ஆன நிலையில் உள்ளார். இப் படிப்பட்ட ஆஞ்சநேயரை எங்கும் காண முடியாதாம். ஞாயிறு தோறும் சிறப்பு அபிஷேகம் உண்டு. இந்த மலைக்கு 500 படிகள் உள்ளன. இங்கு அரங்க நாதர் மற்றும் ஸ்ரீராமர் சந்நிதிகள் உள்ளன. வாயுபுத்திரனின் கோயில் என்பதாலோ என்னவோ காற்று தாங்க முடியாத அளவில் வீசுகிறது. விழாக் காலங்களில் ஆஞ்சநேயர் ஊர்வலமாக வரும் போது இங்குள்ள ராமர் சந்நிதியில் தரிசித்து விட்டுச் செல்வது வழக்கமாம்.

தார் அமர் கொன்றையும் சண்பக மாலையும்
சாத்தும் தில்லை
ஊரர்தம் பாகத் துமை மைந்தனே, உல
கேழும் பெற்ற
சீர் அபிராமி அந் தாதிஎப் போதும் என்
சிந்தையுள்ளே,
கார் அமர் மேனிக் கணபதி யேநிற்கக்
கட்டுரையே.

— அபிராமி அந்தாதியின்
காப்புச் செய்யுள்.




அபிராமிபட்டர் அன்னை அபிராமியைப் பாடுவதற்கு முன்னால் விநாயகப் பெருமானைக் காப்புச் செய்யுளாகப் பாடுகிறார்.

இணையில்லா சக்தி படைத்தவள் ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி. அவள் பேரழகி. அப்பெருமாட்டியை, "அழகுக்கு ஒருவரும் ஒவ்வாதவள்" என்கிறார் பட்டர். அபிராமியை நூறு பாடல்களில் அழகு சொட்டச் சொட்ட அவளின் அருளையும், ஆற்றலையும் தேன் தமிழில் பாடியுள்ளார். அபிராமி அந்தாதியைப் பலர் பாராயணம் செய்து பலன் பெற்றுள்ளனர். மிகச் சிறந்த நூல். எளிய நடையில் தமிழ் மணம் கமழ்கிறது. படிப்பவர் நெஞ்சிலே அன்னையின் திருவுருவம் தோன்றும். பக்தியும், ஞானமும் பெருகும்.

அபிராமிபட்டர் ஸ்ரீவித்யா உபாசகர். சக்தியை வணங்கும் சாக்தர். அபிராமியைப் பாடப் போகிறார். அப்போது அன்னையின் திருக்குமாரரான கணபதியை எண்ணிப் பிரார்த்தனை செய்து கொள்கிறார். காப்புச் செய்யுளிலே கணபதியை வணங்குகிறார்.

விநாயகப் பெருமானின் அருளும், கருணையும் கிடைத்து விட்டால், அபிராமி அந்தாதியை மங்களகரமாக நிறைவு செய்யலாம் அல்லவா!

அபிராமிபட்டர் 'லலிதா சகஸ்ர நாமத்தை' நன்றாகப் பாராயணம் செய்து அன்னையை பூஜை செய்து வந்துள்ளார். அதில் ஆயிரம் நாமங்கள் கொண்ட அன்னையை, அந்தாதியிலும் அபிராமியைப் பல பாடல்களில் அப்பெருமாட்டியின் பெயர்களை அழகு தமிழில் பாடியுள்ளதைக் காணலாம்.

பொதுவாக கவிஞர்கள் தாங்கள் பாடப்போகும் பாடல்களுக்கு முன்னால் விநாயகப் பெருமானை நினைத்துப் பாடி, பிறகு பாடல்களைத் தொடங்குவார்கள். அப்படிப் பட்ட 'விநாயக காப்புச் செய்யுள்கள்' பல உள்ளன.

ஆனால் அபிராமிபட்டர் பாடிய காப்புச் செய்யுளில், கணபதியை மட்டுமல்லாமல், அவரது தாய் தந்தையரையும் சேர்த்துப் பாடியுள்ளார்.

'விநாயகப் பெருமானே! உம்முடைய அன்னையாகிய அபிராமியைப் பற்றிப் பாடப் போகிறேன். அதற்கான சக்தியையும், உதவியையும் தந்தருள வேண்டும்' என்று வேண்டுகிறார்.

சிவபெருமான் எல்லா சைவத் தலங்களிலும் கோயில் கொண்டுள்ளார். திருக்கடவூர் என்ற ஊரில் அமிர்தகடேசுவரர் என்ற திருநாமத்தோடு காட்சி தருகிறார். எனினும் பட்டருக்கு இன்னும் சிறப்பு வாய்ந்த தலமாக இருக்கலாமே என்கிற எண்ணம்.

சைவப் பெருமக்கள் 'கோயில்' என்றால் தில்லையைத்தான் நினைவு கூறுவார்கள்; பேசுவார்கள்; பாடுவார்கள். சிவபெருமானுடைய சிறந்த தலமாகக் கருதப்படுவது தில்லை; அதாவது சிதம்பரம்.

அபிராமிபட்டர் இயற்றப் போகும் அந்தாதிக்கு உரியவள் தில்லையிலும் கோயில் கொண்டுள்ளாள். அபிராமி எங்கும் குடியிருப்பவள். கோயிலிலும் குடியிருப்பாள்; பக்தர்களின் மனத்திலும் இருப்பாள். அவள் இல்லாத இடமே இல்லை எனலாம். திருக்கடவூரில் 'அபிராமி' என்ற திருநாமத்தோடு கோயில் கொண்டுள்ளாள். பிற தலங்களில் பல திருநாமங்களோடு இருப்பவள்தானே, 'அபிராமி' என்ற எண்ணம் வந்தது பட்டருக்கு.

எங்கும் நிறைந்திருக்கும் தாயாகவும், மகாதிரிபுர சுந்தரியாகவும் காண்கிறார். அப்பெருமாட்டிக்கு திருக்கடவூர் மட்டுமா சொந்தம்! எங்கெல்லாம் சிவபெருமான் கோயில் கொண்டுள்ளாரோ, அங்கெல்லாம் அன்னையும் இருப்பாள். இந்தச் சித்தாந்தத்தில்தான் அபிராமிபட்டர் தில்லையில் அபிராமியைக் காண்கிறார். அங்கு சிவகாமி என்ற நாமத்தோடு அருள்பாலிக்கிறாள். ஆக பட்டர் திருக்கடவூர்வாழ் சிவபெருமானையும், அபிராமியையும், தில்லையில் வாழ் சிவனாகவும், சிவகாமியாகவும் எண்ணுகின்றார். அதனால்தான் கணபதியைப் போற்றும்போது தில்லையில் வாழும் சிவ தம்பதியைப் பாடுகிறார்.

இனி விநாயகப் பெருமானின் தாய் தந்தையரைப் பாடுகிறார். தில்லை நடராஜப் பெருமானுடைய வாம பாகத்தில் அம்பிகை இருக்கிறாள். அற்புதமான காட்சி இது. மகிழ்ச்சியை மட்டுமின்றி, தத்துவத்தையும் அறி கிறோம். சிவபெருமானுக்கு உகந்த மாலை கொன்றை மாலை. அம்பி கைக்கு சண்பக மாலை, 'சாம்பேய குஸுமப் பிரியா' என்று அம்பிகையின் பல நாமங்களில் இதுவும் ஒன்று. சண்பகத்திற்கு சம்ஸ்கிருதத்தில் 'சாம் பேய' என்று பெயர். இது அம்பிகை விரும்பி அணியும் மாலையாகும்.

கொன்றை மாலை அணியும் சிவனும், சண்பக மாலை அணியும் அம்பிகையும் ஒருருவில் இருவராய்க் காட்சி தருகிறார்கள். சிவனைப் பார்த்த பின்பு அம்பிகையைத் தம் உள்ளத்தே வைத்துப் பார்க்கிறார் பட்டர்.

அம்மையைப் பாடத் தொடங்க கணபதியை அல்லவா வணங்க வேண்டும். கணபதியை அவருடைய தாய் தந்தையருடன் வணங்கித் தம் உள்ளத்தே வைத்துப் பார்க்கிறார்.

மஹா கணபதி கார் போன்ற மேக நிறத்தவர். அவரிடம் பணிவாக ஒரு விண்ணப்பத்தைக் கேட்கிறார் பட்டர்.

'விநாயகப் பெருமானே! தங்கள் அன்னையைப் பாடித் துதிக்க வேண்டும். தங்களுக்கு அன்னையாக இருக்கும் அப்பெருமாட்டி எனக்கும் அன்னை அல்லவா! எனக்கு மட்டு மல்ல; ஏழு உலகங்களையும், ஜீவராசி களையும் காக்கும் தாயாக விளங்கு பவள் அவள் அல்லவா! சொல்ல முடியாத சீரைப் பெற்றவள். அப் படிப்பட்ட அன்னையை, அந்தாதி பாடல்களினால் பாட விரும்புகிறேன்" என்கிறார். மேலும் அவர் விநாயகரின் செவிக்கு மாத்திரம் கேட்கும்படி, "நான் என்ன செய்ய வேண்டும்?" என்கிறார். இது பட்டருடைய உள்ளத் தில் எழுந்த கேள்வியாகும்.

"விநாயகப் பெருமானே! அந் தாதியை எப்படிப் பாட வேண்டும் என்று கற்பிக்க வேண்டுகிறேன். இன்னபடிப் பாடு என்று கூறி அருள வேண்டும்" என்று வேண்டுகிறார்.

கவிதை பாட முதலில் நம் மனத் தில் கருத்து உருவாக வேண்டும். சிந்தனை பெருக வேண்டும். எந்தக் கலையிலும் சிந்தனை சிறப்பான இடத்தைப் பெறுகின்றது.

தெளிவான சிந்தனை படைத் தவரிடம்தான் செய்யுள் உருவாகும்; பாடல்கள் உருவாகும். பழங்காலக் கவிஞர் பெருமக்கள் பொருளுக்காகக் கவிபாடவில்லை. கற்பனை வளமும், தெளிந்த சிந்தனையும் அவர்களிடம் இருந்தன. அதனால்தான் இன்றள வும் அம் மாபெரும் கவிஞர்களின் கவிதை ஜீவனோடு இருப் பதைக் காண்கிறோம்.

இந்தக் கருத்தை மகாகவி பாரதி யார், "உள்ளத்தில் உண்மையொளி உண்டாயின் - வாக்கினிலே ஒளி உண்டாகும்" என்று கூறுகிறார்.

அபிராமிபட்டர் தம் சிந்தையுள்ளே திறமையான ஒளி பெற வேண்டும் என்று வேண்டுகிறார். இதற்கு விநாயகப் பெருமானின் உதவியை நாடுகிறார். அந்தப் பேருதவி அவ ருக்குக் கிடைத்து விட்டால் அந்தாதி ஊற்றுப்போல் பொங்கிப் பெருகும். எவ்விதத் தடையுமின்றி அந்தாதி முற்றுப் பெறும்.

இக்கருத்தைத்தான் அபிராமி பட்டர் வணக்கச் செய்யுளாகிய காப்புச் செய்யுளிலே வேண்டுகிறார். பட்டரின் உள்ளத்தை அறிந்தவர் அல்லவா விநாயகப் பெருமான். அதனால் 'அபிராமி அந்தாதி' இனி தாக முடிவதற்கு என்ன தடை இருக்க முடியும்? அவர் கேட்ட வரத்தை இனிதே வழங்குகிறார்.

இக்கட்டுரையின் தலைப்புச் செய்யுளாக அமைந்துள்ளது பட்ட ருடைய கணபதி வணக்கம். நம் கட்டுரையும் இனிதாக முடிய அச் செய்யுளும் உதவும். நமக்கும் கணபதி யின் அருள் கிடைக்கட்டும்.

பாட்டின் கருத்தைப் பார்ப்போம் :

"கொன்றை மாலையும், சண்பக மலர் மாலையும் முறையே அணிந்த, தில்லையில் உள்ள இறைவனுக்கும், அவர் அருகே தம் பாகத்தில் எழுந் தருளும் உமாதேவிக்கும் உரிய மைந்தனே! மேகம் போன்ற கரிய திருமேனியை உடைய கணபதியே! ஏழு உலகங்களையும் பெற்ற சக்தி வடிவினளாகிய அபிராமி அம்மைக்கு அணியும் அந்தாதி என்றும் எப் போதும் என் உள்ளத்தே நிற்கும்படி யாக உரைத்தருள்வாயாக!"

இறைவனும், இறைவியும் ஒருரு வாக ஒன்றி அமர்ந்திருக்கிறார்கள். இறைவன் கொன்றை மாலையை அணிந்துள்ளான். இறைவி சண்பக மாலையை அணிந்துள்ளாள்.

சர்வலோக ஜனனியாக, அம் பிகையை வணங்க ஒவ்வொருவருக் கும் உரிமை உண்டு. ஏழு உலகங் களும் போற்றும் அன்னையை 'உல கேழும் பெற்ற சீர் அபிராமி' என்று பட்டர் கூறுகிறார். தில்லையும், திருக்கடவூரும் மட்டுமன்றி, உலகு ஏழுமே அவளுக்குச் சொந்தம் என்ற கருத்தைக் குறிப்பாக உணர்த்துகிறார். அந்தாதியைப் பாடிவிடலாம். ஆனால் அது என்றும் தன் உள்ளத்தில் நிலைத்திருக்க வேண்டும் எனக் கருதி "எப்போதும் என் சிந்தையுள்ளே" என்று கணபதியை வேண்டுகிறார்.

கணபதியின் நிறம் பலவாகக் கூறப்படுகிறது. வெள்ளை, சிவப்பு என்றெல்லாம் கூறுவதுண்டு. அபி ராமிபட்டர் கணபதியை "கார் அமர் மேனி" என்று வானிலே தோன்றும் முகிலின் வண்ணத்தைக் குறிப்பிட்டுப் பாடுகிறார். மழை முகிலினின்றுதானே பொழிகிறது. பட்டரின் பாடல்களும் மழை போன்று கார்மேகத்தைப் போன்ற நிறத்தையுடைய கணபதி யின் அருளால்தான் பொழிகிறது; பொழிந்தது.

அபிராமிபட்டர் பாடிய காப்புச் செய்யுள் அழகான வர்ணனை கொண்டது. விநாயகப் பெருமானைப் போற்றிப் பாடிய செய்யுள். பிறகு அந்தாதிப் பாடல்களில் ஒன்றில் கணபதியைப் பாடி வணங்குகிறார்.

கணபதியை 'மஹாகணபதி' என்று கூறுகிறோம். புலவர், பாமரர், கலை ஞர் மற்றும் பல தேவர்களுக்கெல் லாம் அருள் பாலிப்பவர். எல்லோ ரும் விநாயகப் பெருமானை வணங் கியபின்தான் வேலைகளைத் தொடங் குவர்.

விநாயகப் பெருமானின் திருப் பாதங்களில் நாமும் நம் சிரத்தை வைத்து, வணங்கி அவரருளைப் பெறு வோம்.

## விநாயகர் துதி

ராகம் : தர்பாரிகானடா
தாளம் : ஆதி

பல்லவி
ஸ்ரீகணநாயகனே - சரணம்
கிருபாகரனே குணர்வனே (ஸ்ரீ)

சரணங்கள்
ஆகமவேத புராண ஸ்வரூபனே
சங்கரனே சிவசங்கரி பாலனே
அருள்புரிவாய் கரிமுகத்துமகனேதய (ஸ்ரீ)

போதக பரிமள மோகனனே தவ
மங்கள நாயகனே துதிக்கையனே
மனோபீதம் தன்னை மறவாதவரும் அருள் (ஸ்ரீ)

- நீலா ராமமூர்த்தி

# வணக்கத்துக்குரிய கவிதை

மாலை ஐந்து மணியளவில் டோரதிக்குக் கருத்தடை ஆபரேஷன். கட்டிலில் அமர்ந்து கொண்டு, ஜன்னல் வழியே சூன்யங்களை ஆராய்வது பேழலக் கண்களை மேற்கு வானத்து எல்லைக்குள் ஊடுருவுகிறாள். விளிம்பிலே காரணங்களுடன் கூடிய கண்ணீர் தொட்டுக் கொண்டு இருக்கிறது.

சந்ததி என்கிற இனிமையான சொல் அல்லது வாரிசு என்கிற ஜென்ம சாபல்யம், தன்னை விட்டு விலகி எங்கோ, எங்கோ செல்வது போன்ற பிரமை.

'ஓ, ஏசுவே, இந்த ஜென்மத்தில் எனக்கு அந்தப் பாக்கியமில்லை. சகலமும் உணர்ந்த கர்த்தாவே, காதல் என்கிற சொல்லுக்கும் அர்த்தமில்லாமல், கல்யாணம் என்கிற விடைகளைப் புரிந்திருப்பாள், ஓர் ஒரகத்தி போல?

இந்தச் சில ஆண்டுகளில் அவன் நடந்து கொள்கிற விதங்களும், நடப்புகளும், சுயநலமான தர்மங்களைத் தானே பிரகடனப்படுத்துவனவாகத் தெரிகின்றன? இல்லையென்றால் இந்த ஆபரேஷனுக்கு அவசியமும் உண்டா?

செயற்கை முறை வேண்டாமாம்.

இயற்கை முறையில் இவன் வாரிக் கட்டிக் கொண்டது? சொந்த மனைவியிடம் ஏழரைக் குழந்தைகள் - வயிற்றில் ஆறு மாதங்கள். பேசுவது பகவத் கீதை, பூஜிப்பது பகவான் நாமம்.

அவளும் கீதை படித்தவளே! நெஞ்சில் கீதையின் நிழல் படரு

## டாக்டர் கோவி மணிசேகரன்

பந்தத்துக்கும் தகுதி இல்லாமல் இப்போது ஒரு ஜடமாகப் போகிறேன்'.

டோரதி ஒரு கிருத்துவளாக இருந்து முனகலில் பிரார்த்தனையைப் பதிக்கிறாள்.

காதலன் என்பதற்கு அர்த்தமில்லாதவனும், கணவன் என்பதற்குத் தகுதியில்லாதவனுமான கிருஷ்ணன், சற்று முன்தான் வந்திருந்து, ஆறுதல் கூறிவிட்டு அலுவலகம் நோக்கிச் சென்று விட்டான். நியாயமான காதலனாகவோ, நிஜமான கணவனாகவோ அவன் பூதாக்கிரமங்களால் ஆட்கொண்டவனாக இருந்தால், அரை நாள் விடுமுறையாவது எடுத்துக் கொண்டு பக்கத்திலிருப்பானல்லவா? என்ன சுயநலம். இடைவேளையில் வந்து பார்த்துச் செல்வதற்கு?

கட்டிய மனைவி ஒரு சமயம் காய்ச்சலோடு படுத்தபோது ஒரு வாரம் விடுமுறை எடுத்துக் கொண்டவன்...

இப்போதுதான் புரிகிறது அவனுடைய சுயநலம். அப்போது இதே டோரதி தன்னை வெளிப்படுத்திக் கொள்ளாமல் எவ்வளவுக்குப் பணி கின்றது. அவளுடைய மனம் முணுமுணுக்கிறது. ஒரு காலத்தில் அவளுடைய முன்னோர் இந்துக்கள்.

'ஓ, பகவானே, ஜென்மம் என்றால் வாழ்க்கை வேண்டும்; வாழ்க்கை என்றால் சந்ததி வேண்டும். நீ சம்சாரத்தையே வெறுக்கச் சொல்கிறவன். உன் பெயர் கொண்ட கிருஷ்ணன் சம்சாரத்தை வெறுக்கவில்லை. ஆனால் சம்சாரத்துக்கே சாரமாக இருக்கிற என்னிடம் வெறுப்பைத் தேடிக் கொள்வது ஏன்?'

'அந்தச் சுயநலமியைப் படைத்தவனும் நீயே, வாழ்விப்பவனும் நீயே. பின்னால் வருத்தப்படப் போகிறவன் நீயோ, அவனோ?'

தலையை அண்ணாத்துகிறாள்.

நயனங்களை இமைக் கதவுகள் மூடுகின்றன. சிப்பிகளாக அவை காட்சி அளித்து நீர் முத்துக்களைக் கர்ப்பம் தரிக்கின்றன. கடிகாரம் இரு முறை அலறி ஓய்கிறது. இமைகள் திறக்கின்றன. ஜனித்த நீர் முத்துக்கள் வெளியே எட்டிப் பார்த்து, இறங்கி அவளுடைய மார்பகங்களில் விழுந்து சிதறுகின்றன.

சில ஆண்டுகளுக்கு முன் — ஓர் அக்டோபர் மாதம், முதல் தேதி.

பூக்கடை பஸ் நிறுத்தத்தில் பஸ்ஸுக்காகத் தவம் பண்ணிக் கொண்டிருந்தபோது கிடைத்த பிரசன்னம், வரம்...

'ஆ... ஏசு, எவ்வளவுக்குத் தண்டித்துவிட்டார்'

மாலை நேரந்தான். ஆபீஸ் பிராணிகள் கூடுகளை நோக்கிப் பறந்து கொண்டிருக்கிற நேரம். ஒன்றரை மணி நேரமாக டோரதி காத்துக் கொண்டிருக்கிறாள். பஸ் காலியாக வருவதாவது? அதுவும் மயிலாப்பூர் பஸ். கிருஷ்ணனும் அப்போது பஸ்ஸுக்காக அங்கு வந்து நின்றான். கையில் ஒரு சிறு பை.

ஒரு பஸ் வந்து நின்றது. மனிதக் கூட்டம் ஆட்டுமந்தையைப் போல விழுந்தடித்துக் கொண்டு ஓடி ஏறுகிற போது, இனியும் தாமதித்தால் எட்டு மணி வரை இதே மாதிரி அவதி என்கிற முடிவுடன் டோரதியும் நெரிசலில் இடிபாடுகளைத் தாங்கிக் கொண்டு ஏற முனைகிறாள்!

'சே, இந்த ஆம்பளைங்களுக்குப் புத்தியே இல்லை, பொம்மனாட்டிங்களை எப்படி இடிச்சுண்டு ஏர்றானுங்க பாரு"...

ஒரு மாமி தனது இயலாமையின் காரணமாகப் பிலாக்கணிக்கிற சத்தம் எல்லார் காதுகளிலும்தான் விழுகிறது. சட்டை செய்ய வேண்டுமே?

டோரதி எப்படியோ தொத்திக் கொண்டு ஏற முனைகிற போது, ஒரு காலையூன்ற இடமில்லாது தனித்த டோரதி, அப்படியே மல்லாந்து, தரையில் முறிபட்ட கிளை போல விழுந்தாள். முட்டிக்கு மேலே சேலை விலகியும், மார்புக்குக் கீழே மேலாடை சரிந்தும் ரொம்பவும் அசிங்கமாக அவள் விழுந்த காட்சியைக் கண்டு, தினமும் முகத்தை மழுங்க 'ஷேவ்' செய்து கொள்பவர்கள் வேடிக்கை பார்ப்பதும், ரசிப்பதுமாக இருந்தார்களேயொழிய, உதவ வேண்டும் என்கிற மனோபாவம் ஒருவரிடமும் உதயமாகவில்லை.

அந்தப் பரோபகாரச் சிந்தை கிருஷ்ணனுக்கு மட்டுமே பளிச்சிட்டது. அவன் பதறியடித்துக் கொண்டு ஓடி வந்து தூக்கவே செய்தான். கொஞ்சமும் கூச்சப்படவில்லை. சுற்றி இருந்தவர்களைப் பற்றிக் கவலைப் படவுமில்லை.

ஒரு சகோதரியை, ஒரு சிநேகிதியை, ஏன்? தன்னுடைய மனைவியை இந்நிலையில் கண்டால் மனம் எப்படிச் சுற்றுப்புறத்தை மறக்குமோ அப்படித்தான் அவனும் மறந்து உதவினான். அவள் தன்னைச் சரிபார்த்துக் கொண்டு இரு கரம் கூப்பி நன்றி தெரிவித்தாள்.

ஒருவருக்குத் தன்னாலும் உதவி செய்ய முடிந்ததை எண்ணித் திருப்திப்பட்டுக் கொண்ட கிருஷ்ணனுக்குப் பிறகுதான் தன் நினைவே வந்தது. கைகளை நோக்கினான். கொண்டு வந்த பை எங்கே? மருள மருள விழித்துச் சுற்றுமுற்றும் பார்த்தான். அது காணவில்லை.

அவனது துடிப்பு நிறைந்த பரிதாபமான கவனிப்பைக் கண்ட டோரதி, "என்ன சார், என்ன தேட றீங்க?" என்ற ஒரு பரபரப்பு நிறைந்த குரலில் கேட்டாள்.

"நான் பை கொண்டாந்தேன். உங்களைக் காப்பாத்த நினைத்த அவசரத்திலே அது நழுவி விழுந்திருக்கும்."

அவன் கண்கள் கலங்கிப் போயின. குரலில் தழுதழுப்பிருந்தது. அவன் அழுதே விடுவான் போல் தெரிந்தது. அவனுடைய நிலைமை, குடும்பம் அப்படியானவை. அந்தப் பையில் அந்த மாதச் சம்பளமிருந்தது.

"பையிலே ஏதாவது..."

"என் டைரி, அதுக்குள்ளே இந்த மாதச் சம்பளம் ஆயிரத்து ஐந்நூற்று எழுபது ரூபாய்!"

"ச்சு... ச்சு..."

டோரதியும் தேடினாள்.

யார் பதில் சொல்வார்கள்? அங்கு நடந்ததைக் கேட்டு ஆறுதல் சொல்லக் கூடிய நிலையிலா இயந்திர உலகம் சுழன்று கொண்டிருக்கிறது?

அவரவர், அவரவரின் துடிப்பு. பஸ் வருகையின் மீது கண்கள்... எவனிடமோ பை வசமாக அகப்பட்டுக் கொண்டது.

டோரதி வெகுவாக வருத்தம் கண்டாள். தனக்கு உதவப் போய் ஏற்பட்ட நஷ்டத்தைத் தானே ஈடு செய்யவும் முன்வந்தாள்.

"சார், இஃப் யூ டோன்ட் மைண்ட், இதான் என் அட்ரஸ். நாளைக்கு வாங்க. நான் உங்க பணத்தைத் தர்றேன்"

"நீங்களா?"

"நானேதான். என்னால்தானே உங்களுக்கு இந்த நஷ்டம்? நான்தான் ஈடு செய்யணும். கூச்சப்படாம நாளைக் காலையிலே அவசியம் வாங்க"

கிருஷ்ணன் அந்த விசிட்டிங் கார்டை வாங்கிப் பார்த்தான்.

"நீங்க நர்ஸா?"

"எஸ்"

அப்போது போட்ட 'எஸ்'தான். கடைசி வரையிலும் அவள் 'எஸ்' போடத் தொடங்கி விட்டாள். அவனது வாழ்வுக்கு 'எஸ்' போட்டு வருகிறாள்.

இருவருள்ளும் தொடர்புகள் நீண்டன. கிருஷ்ணனுடைய அடக்கமான அழகும், விளம்பரப்படுத்திக் கொள்ள விரும்பாத அறிவும் டோரதியை வீழ்ச்சி காணச் செய்து விட்டன.

நீண்ட நாள் வாழ்க்கைக்குப் பிறகு...

ஆறு மாதங்களுக்குப் பிறகுதான் கிருஷ்ணனுடைய விசுவரூபமே டோரதி கண்களுக்குப் புலனாயின. ஆ... எவ்வளவு பெரிய ஏமாற்றம?

கடற்கரையோரத்தில் காற்று அமர்க்களப்படுத்திக் கொண்டிருந்தது. சூரியன் மேலே வானில் முழுவதுமாக வீழ்ந்து விடவில்லை. ஞாயிற்றுக்கிழமை கடற்கரை...

இருவரும் எதை ரசிக்க இங்கு வந்தார்களோ?

"டோரதி, இன்னிக்கு நான் உங்கிட்டே ஒரு பெரிய உண்மையைச் சொல்லணும் போலத் தோணுது. நான் பிராமணன். கல்யாணமானவங்கிற விஷயம்தான் உனக்குத் தெரியும். எனக்கு ஐந்து குழந்தைகளும், தாயும், தகப்பனும் இருக்காங்க. நான் இதை உங்கிட்டே சொல்லலை. ஏன்னா, நீ என்னை விரும்பறதைவிட, நான் உன்னை விரும்புவதுதான் ரொம்ப ரொம்ப அதிகம். என்னமோ தெரியலை, போன ஜென்மத்துச் சொந்தம் மாதிரி ஒரு பிடிப்பு! நேக்கே புரியலை. நாம அடிக்கடி ஓட்டலுக்குப் போறச்சயும், நீ முன் வந்து செலவழிக்கறதையும், நான் ஏன் தடுக்காம - கண்டும் காணாம இருந்தேன், இருக்கிறேங்கறதுக்கு மூல காரணம், என் சம்பளமே என் வீட்டுக்குப் பதினேழாம் தேதி வரைக்கும்தான் வரும். ரெண்டொரு பிள்ளைகளுக்கு டியூஷன் சொல்லித் தர்றேன். தள்ளிண்டு போறது. நீகூட சாயந்தரமானா 'மீட்' பண்ணச் சொல்றே. பதினேழாந் தேதிக்கு மேலே யார் உதவுவாங்க?

"நான் உதவறேன்"

டோரதி இவ்வாறு சொன்னதும் கிருஷ்ணனால் நம்ப முடியவில்லை. இடக்கையின் மோதிர விரலால் காதைக் குடைந்து கொண்டான்.

"ஏன் நான் சொல்றதை உங்களாலே நம்ப முடியவில்லையா? உங்களைப் பத்திய சரித்திரம் மூணு மாசத்துக்கு முந்தியே தெரியும். தெரிந்தப்புறம்தான் நானே செலவு பண்ண ஆரம்பிச்சேன். ஓர் ஆச்சரியமான விஷயம் என்ன தெரியுமா? 'நர்ஸைக் காதலிக்கிறவன் பர்ஸை தொலைச்சான்னு' சொல்வாங்க. இங்கே நான் என் பேங்க்கையே தொலைக்கத் தயாராயிட்டேன்".

"டோரதி..."

"இட்ஸ் ஆல் ரைட். நான் கன்னியாகவே வாழ்ந்து மடியணும்னு, மூர்க்கமான பிடிவாதத்தோடு கர்த்தரிடம் போராடினேன். கர்த்தர் அதுக்கு இடந்தரலை. நீங்க என்னைக் கல்யாணம் பண்ணிக்க மாட்டீங்க. அது சரியுமில்லே. சமுதாயத்துக்காக நான் சொல்லலை, சம்சாரங்கிற புனிதமான உறவுக்கு ரெண்டு பேருமே பங்கம் பண்ணிகிட்டு வர்றோம். நீங்க இதை மறுப்பீங்க. நான் ஒப்புக்கிறேன். நான் நர்ஸ்தான். ஆனா, கர்த்தர் மேலே ஆணையாச் சொல்றேன். நீங்கதான் என்னை முதல்லே தொட்டவர். கழுத்திலே தாலியோ, கையிலே மோதிரமோ எல்லாமே வெறும் சடங்குகள். சம்பிரதாயங்கள். ரெண்டுமே புனிதமாயும் இருந்திருக்கு, பூச்சாண்டியும் காட்டியிருக்கு. நாம புனிதம்னு சத்தியம் செய்ய வேண்டாம். பூச்சாண்டின்னு ஏமாறவும் வேண்டாம். நாம சொர்க்கத்திலே கல்யாணம் பண்ணிக்கலாம். அதுவரைக்கும் சடங்கும், சம்பிரதாயமும் கட்டுப்படுத்தாத தம்பதியா இருந்து, கட்டுப்படுத்தறவங்களை விடப் புனிதமா வாழ்ந்து காட்டணும். இந்தாங்க. இது என்னோட பாங்க் பாஸ் புக். என் மாசச்சம்பளத்துலே மிச்சமானது. மேல் வருமானம் ஐந்நூறுக்கு மேல் வரலாம். எல்லாமே சேமிப்புதான். நீங்க வேணுங்கிறதை 'டிரா' பண்ணிக்கலாம். குழந்தைங்க ஒரே துணியைப் போட்டுக்கிட்டுப் பள்ளிக்கூடம் போறதைப் பார்க்க எனக்குப் பரிதாபமா மட்டுமில்லே, வெட்கமாகவும் இருக்கு. என்ன இருந்தாலும் நான் சித்தாத்தா இல்லையா?"

"டோரதி..."

கிருஷ்ணனுடைய கண்கள் கலங்கி விட்டன. எவ்வளவு பெரிய உள்ளம் கொண்ட பெண்ணை வாழ்வில் சந்தித்து விட்டோம்...

அது கடற்கரையாக இருந்தது. இல்லையென்றால் அக்கணமே காலில் விழுந்து சாஷ்டாங்கமாக நமஸ்

கரித்து இருப்பான். புனிதமான பெண்ணின் காலில் விழுந்து கும்பிடுவதைவிட, ஞான யோகம் வேறு என்ன இருக்க முடியும்? சுயநலம் இப்படியாகவும் நினைக்கிறது.

கிருஷ்ணனுடைய குடும்பம் இப்போது வறுமைப்பிடியிலிருந்து சற்றே, சற்றே என்ன? நன்றாகவே விலகியது. நோய்ப் படுக்கையாக இருந்து மருத்துவத் தொல்லை கொடுத்து வந்த தந்தையார் ராமானுஜ ஐயங்காரும் மண்டையைப் போட்டது எவ்வளவோ தேவலையாக இருந்தது. மனைவி அலமேலு முதலில் சந்தேகப்பட்டாலும், முடிவில் ஏதோ பதவி உயர்வு என்பதை நம்பினாள். இவ்விதமான அதிர்ஷ்டமும் ஒரு பதவி உயர்வுக்குச் சமமானதுதானே?



எவ்வளவு கவனமாக இருந்தாலும் நர்ஸுக்கும் மருத்துவம் சறுக்கினாற்போல இது நான்காவது அபார்ஷன்.

ஒரு குழந்தையைப் பெற்றுக்கொண்டு அறுவை சிகிச்சை செய்து கொள்ளுமாறு அனுமதிக்க கிருஷ்ணன் மனம் விரும்பவில்லை. இடந் தர மறுத்தது. குழந்தை பிறந்து விட்டால் தனது வாழ்வுக்கு உதவும் அவளுடைய வருமானம் எங்கே பாதித்து விடுமோ என்கிற சுயநலம்.

"குழந்தைன்னு ஒண்ணு பொறந்துட்டா நம்ம ரெண்டு பேருக்கு நடுவே சலனமற்றுத் தொங்கும் ரொம்பவும் லேசான திரை கனத்து அலை மோதத் தொடங்கிவிடும். டோரதி. தாம்பத்ய வாழ்வுக்கு வில்லனா முளைப்பதே இந்தக் குழந்தைங்க தான். மற்றபடி யாருமே இல்லை. எனக்கு உன்கிட்டே இருக்கிற அன்பும், ஆசையும் என் சம்சாரத்திடம் கூடக் கிடையாது தெரியுமோ?"

கிருஷ்ணன் 'சம்சார கீதை' பாடினான்.

டோரதி இப்போது குந்திக்கு மகளாய்ப் பிறக்காததுதான் குறை. அர்ச்சுனன் வில்லை எடுத்துக் கொண்டான். இவனோ சொல்லை எடுத்துக் கொண்டு சிரம் தாழ்த்தினான். இதன் முடிவு...

ஐந்தாவது அபார்ஷன் ஒருக்கால் நேருமானால்...?

கருத்தடை ஆபரேஷனைச் செய்து விடுவது.

"இப்போதே செய்து கொள்ளலாமே" என்றான் கிருஷ்ணன். அவள் சொன்னாள் : 'இட்ஸ் டு லேட்'.

அவளே காலம் தவறிவிட்டவள். காலம் தவறிப்பிறந்து விட்டவள். காலம் தவறி வாழ்க்கைப் பட்டு விட்டவள். காலத்துக்கு ஒவ்வாத அல்லது ஏற்றுக் கொள்ளமுடியாத பெண் ஜென்மம்.

கிருஷ்ணனுடைய மூத்த பெண் ராதா வயதுக்கு வந்து விட்டாள். அந்த விசேஷத்தை மற்றவர் வியக்கும் படியாகக் கொண்டாடியும் விட்டான். கொண்டாடச் செய்தவள் டோரதி.

அவளும் அந்நியரைப் போல வருகை தந்து அந்த விசேஷத்தில் கலந்து கொண்டாலும், தன்னுடைய மகளுக்குச் செய்கிற ஆனந்தமே மேலோங்கிப் புல்லரிக்கச் செய்தது. ராதாவின் திருமணத்துக்காகவும் ஓர் இன்ஷ்யூரன்ஸ் பாலிஸி எடுத்திருந்தாள், டோரதி. இந்த யுகத்திலும் இப்படி ஒரு பெண்ணா?

கேட்டுக் கொண்டது கிருஷ்ணனுடைய மனமல்ல, கேட்க வைத்தது டோரதியின் இயல்பான குணம்.

'இயற்கையாக வாழ்ந்தது போதும். செயற்கையாக வாழ எத்தனையோ வழிகள் இருக்கின்றன' என்று டோரதி வாதாடிப் பார்த்தாள். கிருஷ்ணன் ஒப்புக் கொள்ளவேயில்லை. வீட்டில் அவன் வாழ்கிற வாழ்க்கையே அது தானே!

கட்டிய மனைவி கருத்தடையை சாஸ்திர ரீதியாக ஆதரிக்கவில்லை. டோரதியின் செயற்கை முறையை கிருஷ்ணன் சுயநல ரீதியாக ஆதரிக்கவில்லை. டோரதியும் இதனை ஒரு விதத் தியாகம் போல இல்லாவிட்டாலும் ஒருவித நியதியாக ஏற்றுக் கொண்டாள். அவனுக்காகவே வாழ முடிவு செய்து விட்ட பிறகு, அவள் தீய்ந்தால் என்ன? பாலில் ஊறினால் என்ன? அதில் சர்க்கரை போட்டாலும் ஒன்றுதான், உப்பைக் கொட்டினாலும் ஒன்றுதான்.

அவளே அந்த ஐந்தாவது அபார்ஷனை எதிர்பார்த்து ஏற்படுத்திக் கொண்டு இப்போது நர்சிங் ஹோமில் கடந்த கால நினைவுகளைக் காரணமில்லாமல் அசை போட்டுக் கொண்டிருக்கிறாள். எத்தனை குழந்தைகளுக்கு மருத்துவம் பார்த்தவள். தனக்கும் ஒரு குழந்தை இல்லையே என்கிற ஏக்கம் இராதா? இல்லையென்று அவள் சொன்னாலும், தன்னைத் தானே அவள் ஏமாற்றிக் கொள்கிறாள் என்று அவளுக்குள்ளேயிருந்து ஒன்று குரல் கொடுக்கத்தான் செய்கிறது.

அவளும் மானுடத்தின் ஓர் அங்கம் தானே?

ஆயினும் இயற்கையின் ஏதோ ஒன்று அவளை அலைக்கழித்துக் கொண்டிருந்தது போலவே முடிவும் துன்பியலாய் சிரித்தது.

ஓ... டோரதி...

ஆபரேஷன் வெற்றியாக முடிந்தாலும் ஆயுள் தோல்வியாக முடிந்து விட்டது.

சின்ன ஆபரேஷன்தான். விதியின் கையிலிருப்பது மிகப் பெரிய கசாப்பு கத்தி.

பொழுது விடிகிறபோது...

பறவைகள் கூட்டை விட்டுச் சிறகடித்துப் பறந்தபோது... ஓ... டோரதி...

நீ வணக்கத்துக்குரிய கவிதை. ❖

# ஜாலியன்வாலாபாக் நினைவுகள்

## ரகமி



ஜெனரல் டயர்

[நமது இந்திய சுதந்திரப் போராட்ட வரலாற்றில் நாட்டு விடுதலைக்காக வடக்கே "ஜாலியன் வாலாபாக்" என்ற மைதானத்திலே ஆங்கிலேயக் கொடுமைக்காரனான ஜெனரல் டயர் நடத்திய துப்பாக்கிச் சூட்டில் ஆயிரக் கணக்கான இந்தியர்கள் தங்களது உயிரைத் தியாகம் செய்ததோடு, பலர் பலத்த காயங்களுடன் குற்றுயிராயினர். இச்சம்பவம் நிகழ்ந்து தற்போது 75ஆவது ஆண்டு நடக்கிறது.]

ஆங்கிலேயர்களிடம் அடிமைப் பட்ட நம் பாரத நாட்டை விடுவிக்க நாட்டு மக்கள் ஆட்சியாளர்களுக்கு எதிராகப் பல போராட்டங்களை நடத்தினர். அதோடு முதல் உலக மகாயுத்தத்தின்போது நம் பாரதம் பொருளையும், உயிரையும் பிரிட்டி ஷாருக்குக் கொடுத்து உதவியதை மறந்துவிட்டனர் ஆங்கிலேய ஆட்சி யினர். இந்தியர்கள் நடத்தும் போராட் டங்கள், சதி ஆலோசனைகளினால் தங்களது ஆட்சிக்கு ஏதேனும் ஆபத்து ஏற்படுமோ என்ற பயத்தினால் பிரிட்டிஷாரின் ஓர் அதிகாரியான "ரௌலட்" என்பவர் தலைமையில் ஒரு விசாரணைக்குழு நியமிக்கப்பட்டு, பின்னர் அவரால் ஏற்படுத்தப்பட்ட சட்டத்திற்கே "ரௌலட் சட்டம்" என்ற பெயரும் வழங்கலாயிற்று. இது ஓர் அடக்குமுறைச் சட்டம் என்றே கூற லாம். இச்சட்டத்தில், பிரிட்டிஷாருக்கு எதிராக "இந்தியப் புரட்சியாளர்" எனச் சந்தேகிப்பவர்களைப் போலீ சார் எவ்வித வாரண்டுமின்றி உட னுக்குடன் கைது செய்து சிறையில் தள்ளலாம். சந்தேகிப்பவர்கள் வீடு கள், மற்றும் இதர நபர்களின் வீடு களையும் போலீசார் வாரண்டுகள் எதுவுமின்றிச் சோதனைகள் நடத்த லாம். பிரிட்டிஷ் ஆட்சியாளர்களால் நியமிக்கப்படும் விசேஷக் கோர்ட்டு களில் மட்டுமே இப்புரட்சியாளர்கள் மீதுள்ள வழக்குகள் விசாரிக்கப்படும். குற்றவாளிகளுக்காக சாட்சியங்கள் கூறுபவர்களுக்கு, "இந்திய சாட்சியச் சட்டம்" (INDIAN EVIDENCE ACT) இருப் பினும், அந்தச் சட்டங்கள் இந்த விசேஷக் கோர்ட்டிற்குப் பொருந்தாது. "குற்றவாளி" என நிரூபிக்கப் பிராசி கியூஷன் தரப்பில் தகுந்த சாட்சி யங்கள் இல்லையெனினும், நீதி பதிகள் குற்றவாளிகளைத் தண்டிக் கத் தனி அதிகாரம் உண்டு. குற்ற வாளிகள் கோர்ட்டில் தங்களுக்காக வாதாட எந்த வழக்கறிஞர்களையும் நியமிக்கக்கூடாது. தீர்ப்பிற்குப் பின் குற்றவாளிகள் இதனை எதிர்த்து அப் பீல்கள் எதுவுமே செய்யக் கூடா தென்று மிகக் கடுமையான ஷரத்துகள் இடம் பெற்றிருந்தன.

1919ஆம் ஆண்டில் "ரௌலட் சட்டம்" தீவிரமாக அமலாக்கப்பட்ட போது சென்னைக்கு விஜயம் செய் திருந்த மகாத்மா காந்தியடிகள் இதனை எதிர்த்துச் சத்தியாக்கிரகப் போராட்டம் நடத்தினார். இதன் தொடர்பாக அதே ஆண்டு ஏப்ரல் 6ஆம் தேதி பம்பாயில் தங்கியிருந்த போது, மகாத்மா காந்தியடிகள் இந்த சத்தியாக்கிரக நாளை டில்லி மற்றும் பஞ்சாப் மாநிலங்களில் தமது தொண் டர்களுடன் அனுசரிக்கத் திட்டமிட்டார். இது விவரம் அறிந்த பிரிட்டிஷ் அரசு அவரை பம்பாய் நகரை விட்டு வெளி யேறக் கூடாதெனத் தடை உத்தரவு விதித்தது. ஆனால் காந்தியடிகள் அத்தடைகளை மீறி ஏப்ரல் 10ஆம் தேதி தமது, தொண்டர்களுடன் டில்லிக்குப் புறப்பட்டார். உடனே ஆட்சியாளர்கள் அவரைக் கைது செய்து சிறைவைத்தனர். இச்செய்தி அகில இந்தியா முழுவதுமே காட்டுத் தீயைப் போலப் பரவியது. இந்தக் காரணத்தினால் "ரௌலட் சட்ட"த்தை எதிர்த்தும், ஆட்சியாளர்களின் கொடுமைகளை எதிர்த்தும் மக்கள் ஆங்காங்கு பலத்த ஆர்ப்பாட்டங்களை நடத்தினர்.

1919ஆம் ஆண்டு ஏப்ரல் 6ஆம்தேதி ஒரு தினத்திற்கு மட்டுமே சத்தியாக் கிரக நாளாக அனுஷ்டிக்க வேண்டு



ரவீந்திரநாத தாகூர்





மதுரபாஸ்கர தாஸ் • எஸ்.எஸ். விஸ்வநாத தாஸ்

மென மகாத்மா காந்தியடிகள் அறிவித்திருந்தாலும், ஆட்சியாளர்களின் திடீர் கடும் நடவடிக்கைகளால் அது ஏப்ரல் 13ஆம் தேதிவரை தொடர்ந்தது.

பஞ்சாப் மாநிலத்திற்குள் ஆட்சியாளர்கள் காந்தியடிகள் வராதபடி முன்னேற்பாடுகளுடன் தடுத்து நிறுத்தினர். இதனால் அங்கிருந்த பிரபல காங்கிரஸ் தலைவர்களான டாக்டர் சைபுதீன் கிச்சுலு, டாக்டர் சத்யபால் இருவரும் ஆட்சியாளர்களை எதிர்த்து ஆர்ப்பாட்டங்கள் செய்தனர். இது விவரம் அறிந்த அம் மாவட்ட நீதிபதி அவ்விருவரையும் தன்னை நேரில் சந்திக்கும்படி அழைக்க 1919ஆம் ஆண்டு ஏப்ரல் 11இல் அவ்விருவரும் நீதிபதியைப் பேட்டிக் காணச் சென்றனர். ஆனால் ஆட்சியாளர்கள் அவ்விருவரையும் எங்கேயோ மறைத்து ரகசியமான இடத்தில் காவல் வைத்து விட்டனர்.

அவ்விருவரைப் பற்றியும் பற்பல தகவல்கள் பரவின. மக்கள் உண்மையை அறியும் தீவிரத்தோடு மாவட்ட நீதிபதியைப் பேட்டி காண மாபெரும் கூட்டமாகச் சென்றனர். ஆனால் அக் கூட்டத்தினர் நடுவழியிலேயே தடுத்து நிறுத்தப்பட்டனர். கூட்டத்தினரைக் கலைக்க தடியடிப் பிரயோகமும் துப்பாக்கிச் சூடும் நடைபெற்றன.

இதனால் மேலும் ஆத்திரம் அடைந்த மக்கள் பஞ்சாபிலுள்ள அமிர்தசரஸ் நகருக்குள் புகுந்து, அரசாங்க வங்கிகள், இதர அலுவலகங்களையும் தீயிட்டுக் கொளுத்தியதோடு, சில ஐரோப்பியர்களையும் கொளுத்தித் தீர்த்தனர். மக்களின் சுதந்திர வெறிக்குச் சரியான பதில் கூறமுடியாத ஆட்சியாளர்கள் இப் போராட்டத்தை அடக்க ராணுவத்தின் உதவியை நாடினர். இதனை முறியடிக்க ஆயிரக்கணக்கான மக்கள் "ஜாலியன் வாலா பாக்" என்ற மைதானத்தில் ஒன்றுகூடி ஆங்கிலேயரின் ராணுவ நடவடிக்கைகளுக்குப் பதிலடி கொடுக்கத் திட்டமிட்டனர்.

இது விவரம் அறிந்த ஆட்சியாளர்கள் "ஜாலியன் வாலாபாக்"கில் எவருமே எக்கூட்டமோ, பிரசங்கங்களோ செய்யக் கூடாதென்று தடை விதித்தனர். இம்மாதிரியான உத்தரவு போடுவதற்குக் காரணமாக இருந்தவன் ஜெனரல் டயர் என்ற ஆங்கிலேயத் தளபதி! இவனுக்குப் பல வழிகளில் உறுதுணையாகவும், வழிகாட்டியாகவும் இருந்தவன் பஞ்சாப் துணை கவர்னரான சர். மைக்கேல் ஓட்வியர்.

1919ஆம் ஆண்டு ஏப்ரல் 13ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை பஞ்சாப் மாநிலத்திலுள்ள "ஜாலியன் வாலா பாக்" மைதானத்தில் சுமார் இருபதினாயிரம் இந்தியர்களுக்கு மேல் கூடினர். ஆண்களோடு பெண்களும், கைக் குழந்தைகளோடும், கர்ப்ப ஸ்திரீகளோடும் ஒன்றுகூடி ஆட்சியாளர்களுக்கு எதிராகக் கோஷங்களை எழுப்பினர்.

இந்தியர்களின் போராட்டங்களை அடக்கி ஒடுக்கும் எண்ணத்தோடு ஜெனரல் டயர் தனது கையில் பிஸ்டலுடன், கைகளில் துப்பாக்கிகளை ஏந்திய குதிரைப்படை வீரர்களுடன் "ஜாலியன் வாலாபாக்" மைதானத்தில் ஒன்று திரண்டிருந்த இந்தியர்களைச் சுற்றி வளைத்துக் கொண்டான். அதோடு எவருமே தப்பிச் செல்லாதபடி, அங்கிருந்த ஒரு குறுகலான வழியை அடைத்துக் கொண்டு நின்றான். ஆட்சியாளர்களை எதிர்த்து கோஷமிடும் கூட்டத்தினரைக் கலைந்து போகும்படி ஜெனரல் டயர் எச்சரித்தான். கூடியிருந்த மக்கள் மரணத்திற்கும் அஞ்சாமல் தொடர்ந்து கோஷமிட்டனர். மிகுந்த கோபத்தோடும், ஆங்கிலேய அதிகார ஆணவம் மேலிடத் தளபதி ஜெனரல் டயர், "சுடு!... சுட்டுத் தள்ளு!" என உத்தரவிட்டுக் கொண்டே தன்னிடமிருந்த பிஸ்டலைச் சுடத் தொடங்கினான். இதனைத் தொடர்ந்து அவனோடு வந்த ராணுவத்தினரும் ஈவு இரக்கமின்றி, 'படபட'வெனக் குண்டு மாரி பொழியத் தொடங்கினர்.

சுமார் 10 நிமிடங்கள் துப்பாக்கிச் சூடு. தங்களது உயிர் போகும் சமயத்திலும் அவர்கள், "வந்தே மாதரம், "பாரத் மாதா கீ ஜே!", "ஆங்கிலேய ஆட்சி ஒழிக!" என்ற கோஷங்களோடு தரையில் வீழ்ந்து மடிந்தனர். அங்கிருந்த மிகக் குறுகலான வழி மூலம், எவருமே தப்பிச் செல்ல முடியாமல் டயரின் துப்பாக்கிச் சூட்டில் சிக்கி மடிந்தனர். இறந்தவர்களின் எண்ணிக்கை, பலமான குண்டடிக் காயங்களில் சிகிச்சையின்றிக் கிடப்போரின் எண்ணிக்கை ஆயிரத்திற்கும் மேலாக இருக்க, ராணுவத்தினரால் வெளியிடப்பட்ட பட்டியல் நேர் விரோதமாக இருந்தது.

"ஜாலியன் வாலாபாக்" மைதானத்தில் ராணுவத் தளபதி ஜெனரல் டயர் நடத்திய கைவரிசையில் இந்தியர்கள் அனுபவித்தக் கொடுமைகள் ஏராளம்! ஊரடங்குச் சட்டம் தலைவிரித்தாடியது. மக்களின் உயிர்ச்சேதம், பொருள் சேதங்கள் அதிகரித்தன.





பாரதம் சுதந்திரம் அடைந்தபின் "ஜாலியன் வாலாபாக்" இடத்தில் கட்டப்பட்ட நினைவுச் சின்னம்



மகாத்மா காந்தி

ஆங்கிலேய ராணுவத்தினரின் விபரீதமான போக்குகளைக் கண்டிக்கும் வகையில் வங்கக் கவி ரவீந்திரநாத தாகூர் பிரிட்டிஷாரால் தனக்கு அளிக்கப்பட்ட மிக உயர்ந்த "நைட்" என்ற பட்டத்தைத் துறந்து ஆங்கிலேயருக்கு எழுதிய கடிதத்தில் :

"இன்று நாட்டில் மக்கள் இழிவு படுத்துகின்ற நிலையிலிருப்பதால், அரசாங்கத்தாரால் எனக்கு அளிக்கப்பட்ட விருது அவமானச் சின்னமாக விளங்குகின்ற கட்டத்திற்கு வந்துவிட்டது. இதனால் நான் என்னைப் பொறுத்தவரையில் எனக்கு வழங்கப்பட்ட தனிச்சிறப்புகளைத் துறந்து விட்டு மனிதத் தன்மைக்கு ஒவ்வாத பல இழிவுகளைத் தாங்க வேண்டிய நிலையிலுள்ள என் சொந்த மக்களுடன் நான் தோளோடு தோள் நிற்க விரும்புகிறேன்!" என வீர முழக்கமிட்டார்!

நம் தென்னகத்தே முத்தமிழ் க்ஷேத்திர தேசியக் கவிஞர் "மதுர பாஸ்கர தாஸ்" ஜாலியன் வாலாபாக் படுகொலை நிகழ்ச்சியைக் கண்டு மிக்கத் துயரத்தோடு, அதனை "பஞ்சாப் படுகொலை" என்ற தலைப்பில் எழுதிய கவிதையை அந்நாளைய நாடக மன்னன், தியாகி எஸ்.எஸ். விசுவநாத தாஸ் தனது மேடை நாடகங்களில் உணர்ச்சியோடு கண்ணீர் விட்டே பாடினார்.

இப் பாடலைப் பாட அரசாங்கம் தடை விதித்தது. தடையை உடைத்தெறிந்து மேடைகளில் "பஞ்சாப் படுகொலை" பாடலைப் பலமுறை பாடிய விசுவநாத தாஸின் மீது பல முறை ராஜத் துரோக வழக்குகள் போடப்பட்டுச் சிறைத் தண்டனையும் அளிக்கப்பட்டது.

# குமரிமாவட்டக் கோட்டைகள்



வட்டக் கோட்டையின் நுழைவாயில்

சங்கப் புலவர்கள் புகழ்ந்து பாடிய நாஞ்சில் நாடு இன்றையக் குமரி மாவட்டமாகத் திகழ்கிறது. நிலவளம், நீர்வளம், பொருள்வளம் மிக்கது நாஞ்சில் நாடு. அதன் செல்வச் செழிப்பு மூவேந்தர்களான சேர, சோழ, பாண்டியர்களையும், விஜயநகர நாயக்கர், மகமதியர் படைகளையும் கவர்ந்திழுத்தது என வரலாறு கூறுகின்றது. நாஞ்சில் நாடு மூவேந்தர் ஆட்சியில் மாறி மாறி இருந்தது என்பதை இலக்கியங்கள், கல்வெட்டுகள், கோயில் அமைப்புகள், ஊர்ப்பெயர்கள் இவற்றை வைத்து நாம் தெரிந்து கொள்ளலாம். இவ்வாறு நாஞ்சில் நாடு பல மன்னர்களின் வீர விளையாட்டு நடந்த போர்க்களமாகத் திகழ்ந்தது என வரலாறு கூறுகிறது. பகைவர் படைகளுக்கெல்லாம் பாசறையாக அமைந்தது நாஞ்சில் நாடு. அதனால் அங்கு பல கோட்டைக் கொத்தளங்கள் எழுந்தன. அவற்றுள் சில கோட்டைகள் அழிக்கப்பட்டன. சில கோட்டைகள் இன்றும் சிறப்புடன் காட்சி தருகின்றன.

நாஞ்சில் நாட்டின் தலைநகராகத் திகழ்ந்த கோட்டாறு ஒரு காலத்தில் கோட்டை மதில் சூழ அமைந்திருந்தது என்பதை "குருமா நெடுமதிற் கோட்டாற்றரண் கொண்ட தென்னன் கன்னிப் பெருமான்" என கி.பி. எட்டாம் நூற்றாண்டிலே தோன்றிய பாண்டிக்கோவை தெரிவிக்கின்றது. கோட்டாற்றைச சுற்றி அமைந்திருந்த கோட்டையைக் குலோத்துங்கச் சோழன் எரித்து அழித்தான் என்று சிதம்பரம் கோயிலில் கிடைத்த வடமொழி கல்வெட்டு ஒன்று கூறுகிறது. பார்த்திபன் காண்டவ வனத்தை எரித்து அழித்தது போன்று குலோத்துங்கன் கோட்டாற்றை எரித்து அழித்தான் என்றும், அந்த நிகழ்ச்சியின் நினைவாக வெற்றிக் கம்பம் ஒன்று நாட்டப்பட்டது என்றும் அக்கல்வெட்டு குறிப்பிடுகிறது. கோட்டாறு கோட்டையை எரித்தழித்த செய்தியை "வெள்ளாறும் கோட்டாறும் புகையால் மூட" என்று கலிங்கத்துப் பரணி கூறுகின்றது. கடுக்கரை முதல் கன்னியாகுமரி வரை ஒரு காலத்தில் சிறப்புற்று விளங்கிய கோட்டையின் தடயங்களை பல இடங்களில் நாம் இன்றும் காணலாம். இக்கோட்டை இயற்கையரணான கடுக்கரை மலையிலிருந்து தொடங்கி அம் மலைத் தொடரை அடுத்தும், அகன்றும் அதன்மீது ஏறியும் செவரக் கோட்டை, காற்றாடி மலை, நெடுமலைக் குன்று இவற்றைத் தொட்டு, ஆரல்வாய்மொழி வழியாக வளைந்து வளைந்து தென் குமரிக் கடலிலே வந்து முடிகின்றது. இக் கோட்டையின் பல பகுதிகளும் அழிந்த நிலையிலே ஆங்காங்கே இன்றும் காட்சி தருகின்றன. 1906 ஆம் ஆண்டு திருவிதாங்கூர்

டாக்டர் எஸ். பத்மநாபன்



பத்மநாபபுரம் கோட்டையின் உள்ளே காணப்படும் அரண்மனை

தொல்பொருள் ஆய்வுத் துறையினர் வீரநாராயணச் சேரியில் அகழ்வாய்வு செய்து இக்கோட்டையின் இடிபாடுகளைக் கண்டறிந்த அறிக்கை வெளியிட்டனர். இக்கோட்டை சங்கக் காலத்தில் இப்பகுதியை ஆண்ட ஆய்மன்னர்கள் காலத்தில் கட்டப்பட்டதாகக் கூறுவார் உண்டு.

ஆரவாய்மொழியை அடுத்துள்ள கோட்டைக்கரையில் ஒரு பெரியக் கோட்டையும், வெடிமருந்து செய்யும் ஒரு கூடமும் இருந்தன என்பதற்குப் பல தடயங்கள் நமக்குக் கிடைக்கின்றன. இங்கு கி.பி. எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த பாண்டிய மன்னன் மாறன் சடையனின் படைவீரன் இரணகீர்த்திக்காக எழுதப்பட்ட ஒரு நடுகல் கிடைத்தது. வட்டெழுத்துடன் கூடிய இந் நடுகல் பேராசிரியர் மனோன்மணியம் சுந்தரம் பிள்ளையவர்களால் கண்டெடுக்கப்பட்டு கேரள அரசாங்கத்தினரால் திருவனந்தபுரத்தில் பாதுகாக்கப்பட்டு வருகிறது.

குமரி மாவட்டத்தில் பல கோட்டைகளை நாம் இன்றும் காணலாம். நகரைச் சுற்றி அமைந்துள்ளது பத்மநாபபுரம் கோட்டை. மலையைச் சுற்றி கட்டப்பட்டது உதயகிரிக் கோட்டை. மலையின் மேலே காணப்படுவது மருந்துக் கோட்டை. கடலை அடுத்துக் காணப்படுவது வட்டக் கோட்டை.

## வட்டக் கோட்டை

வட்டக் கோட்டை கடுக்கரை கன்னியாகுமரி கோட்டையின் ஒரு தொடர்ச்சியாகும். இது முக்கடலும் கூடி முழங்கும் குமரித் துறையிலே அமைந்துள்ளது. மூன்றரை ஏக்கர் பரப்புடைய இக்கோட்டையின் மதில் 29 அடி உயரம் கொண்டது. உள்ளே காணப்படும் கொத்தளத்தின் உயரம் 3 அடி முதல் 6 அடி வரை உள்ளது. கோட்டையின் ஒரு பக்கம் கடலும், மறுபக்கங்களில் அகழியும் உள்ளன. இக்கோட்டையைத் தொடர்ந்து ஒரு கருவேலங்காடு அரணாக உள்ளது. அரணாக நிற்கும் காட்டை காவற்காடு என்றும் கடிமிளை என்றும் கூறுவர்.

முத்துக் கொழிக்கும் குமரித்துறைக்குக் காவலாகவும், கடல் வாணிபத்திற்கு உறுதுணையாகவும் பாண்டிய மன்னர்களால் கட்டப்பட்டதுதான் வட்டக் கோட்டை. கோட்டையின் உள்ளே உள்ள மண்டபங்களில் பாண்டியனின் சின்னமான மீன் செதுக்கப்பட்டுள்ளது. தென் குமரியுடன் பாண்டியன் கொண்ட தொடர்பு குறித்து இலக்கியங்களும், கல்வெட்டுகளும் சான்று கூறுகின்றன. பாண்டியனை குமரிச் சேர்ப்பன் என்று கூறுகிறது சூடாமணி நிகண்டு. "தென்னவர் தம் குலதெய்வம் தென்குமரி" என்பது குமரியம்மன் ஆலயத்துக் கல்வெட்டுத் தொடர், பதினேழாம் நூற்றாண்டுவரை கன்னியாகுமரியை ஒட்டியுள்ள பகுதிகள் பாண்டிய நாடாகத்தான் இருந்தது. கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டிலே தான் திருவிதாங்கூர் மன்னர் மார்த்தாண்ட வர்மா வட்டக் கோட்டையைப் புதுப்பித்தார்.

## உதயகிரிக் கோட்டை

சேரர் வழிவந்த வேணாட்டு மன்னர்களின் தலைநகர் பத்மநாபபுரம் என்ற கல்குளம். அதனை அடுத்துக் காணப்படுவது வரலாற்றுச் சிறப்புமிக்க உதயகிரிக் கோட்டை. இது வேணாட்டு மன்னர்களின் போர்த்திறனுக்கும், அரண் வலிமைக்கும் சிறந்ததோர் எடுத்துக்காட்டாக விளங்குகின்றது. இக் கோட்டை 260 அடி உயரமான ஒரு சிறிய மலையை மையமாகக் கொண்டு 85 ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ளது. இக் கோட்டை மதில் 18 அடி உயரமும், சில இடங்களில் 15 அடி உயரமும் கொண்டது. மலையுச்சியில் நின்றால் ஆறுமைல் சுற்றளவில் உள்ள இடங்களை நாம் காணலாம்.

உதயகிரி ஒரு காலத்தில் சேர மன்னர்களின் முக்கிய படைத்தளமாக விளங்கியது மட்டுமின்றி, மாட மாளிகைகளும்கூட கோபுரங்களும் நிறைந்த ஒரு பெருநகராகவும் திகழ்ந்தது என்பதற்கு இலக்கியக் கல்வெட்டு ஆதாரங்கள் உள்ளன. சோழப் பேரரசன் இராஜராஜன் காலத்தில் சேர நாட்டை ஆண்டு

வந்தவன் பாஸ்கர ரவிவர்மன். இராஜராஜ சோழன் தமது தூதுவனை சேரநாட்டிற்கு அனுப்ப, சேர வேந்தன் பாஸ்கர ரவிவர்மன் அரசு நெறி தவறி தூதுவந்த சோழ நாட்டு வீரனை உதயகிரிக் கோட்டையில் சிறைப்படுத்தினான். இந்தக் கேள்வியுற்ற இராஜராஜ சோழன் கொதித்து எழுந்து, தமது படையுடன் உதயகிரி வந்தடைந்து, கோட்டை கொத்தளங்களை அழித்து நகரை எரித்து தூதுவனை விடுவித்தான். இச் செய்திகளை ஒட்டக்கூத்தரின் மூவருலா நமக்குத் தெரிவிக்கிறது.

இராஜராஜ சோழன் குதிரையின்மீது ஏறி உதயகிரிக் கோட்டையின் உள்ளே நுழையும் காட்சியை உதய சூரியன் எழுவதுபோல் இருந்தது என ஜயங்கொண்டார் நமது கலிங்கத்துப்பரணியில் அழகுபடக் கூறியுள்ளார். மேலும் சேர மன்னனின் வலிமைமிக்க யானைப் படைகளைக் கவர்ந்து, உதயகிரிக் கோட்டையை வெற்றிக்கொண்ட செய்தியுடன், இவ் வெற்றியின் நினைவாக இராஜராஜ சோழன் தமது பிறந்த நாளான ஐப்பசி மாத சதய நாளன்று சேர மண்டலத்தில் விழாவெடுத்த செய்தியையும் கலிங்கத்துப்பரணி குறிப்பிடுகின்றது.

"சதய நாள் விழா உதியர் மண்டலம்
தன்னில வைத்தவன் தனியோர் மாவின்மேல்
உதயபானு வொத்து உதகை வென்ற கோன்
ஒருகை வாரணம் பல கவர்ந்து"

(ஒரு கை வாரணம் என்பது யானை)

இராஜராஜ சோழன் தமது பிறந்த நாளான ஐப்பசி மாத சதய நாளை சேர நாட்டிலே கொண்டாடினான் என்ற செய்தியை திருநந்திக்கரை குடைவரைக் கோயிலில் கிடைத்த கல்வெட்டு உறுதிப்படுத்துகிறது. "இந் நாட்டு திருநந்திக் கரை மாதேவர்க்கு பெருமாள் ஐய்ப்பிசைச் சதையத்தினான் திருவிழாவெடுத்து சதயத்தினாள் ஆறாடி" என்பது அக்கல்வெட்டுத் தொடர்.

எரித்தழிக்கப்பட்ட உதயகிரிக் கோட்டை ஏழு நூற்றாண்டுகளுக்குப் பின்னர் சேரர் வழிவந்த வேணாட்டு மன்னர் மார்த்தாண்டவர்மனால் சீரமைக்கப்பட்டது. கோட்டை மதில்கள் அம் மன்னனின் காலத்தில் பழுது பார்க்கப்பட்டன. உதயகிரிக் கோட்டை வேணாட்டு வீர வரலாற்றிலே சிறந்ததொரு போர்ப் பாசறையாகத் திகழ்ந்தது என திருவிதாங்கூர் சரித்திரம் நமக்கு எடுத்துரைக்கிறது.

டச்சுப் போரிலே கைது செய்யப்பட்டவரும், பின்னர் மார்த்தாண்ட வர்மாவின் தளபதியாக பணியாற்றிய வருமான டிலனாய் உதயகிரிக் கோட்டையிலே தங்கி 37 ஆண்டுகள் திருவிதாங்கூர் அரசை விரிவாக்க உழைத்தார். அவரது கல்லறை உதயகிரிக் கோட்டையின் உள்ளே மேற்கூரையில்லாத ஒரு தேவாலயத்தில் காணப்படுகிறது.

## பத்மநாபபுரம் கோட்டை

பத்மநாபபுரம் ஒரு காலத்தில் சேரர் வழிவந்த வேணாட்டு மன்னர்களின் தலைநகராகத் திகழ்ந்தது. அந்நகர் கி.பி. 1744 ஆம் ஆண்டு வரை கல்குளம் என்ற பெயரைப் பெற்றிருந்தது என அங்குக் கிடைத்தக் கல்வெட்டுகளிலிருந்து அறிய முடிகிறது. வேணாட்டு மன்னர் மார்த்தாண்ட வர்மா தாம் பிடித்தடக்கிய நாடுகளை அனந்தைத் திருமால் பாதத்திலே சமர்ப்பித்து ஸ்ரீ பத்மநாப தாசர் என்ற பட்டத்தைப் பெற்றார். இந் நிகழ்ச்சியின் நினைவாகக் கல்குளம் பத்மநாபபுரம் ஆயிற்று.

இப் பழைமையான நகர் இரண்டரை மைல் சுற்றளவுள்ள கற்கோட்டையால் சூழப்பட்டுள்ளது. இக் கோட்டையின் குறைந்த உயரம் 15 அடி. கூடுதல் உயரம் 24 அடி. நான்கு திசைகளிலும் நான்கு பெரிய வாயில்களும், சில சிறிய அவசர வாயில்களும் இக் கோட்டையிலே உள்ளன. இப் பழம்பெரும் கோட்டை வேணாட்டு மன்னர்களின் போர்ப் பாதுகாப்பு அரணுக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

பத்மநாபபுரம் கோட்டையைச் சுற்றி வேறு சில கோட்டைகளும் உள்ளன. இந் நகரின் ஒரு பக்கம் மலை உச்சியில் காணப்படும் கோட்டை மருந்துக் கோட்டை எனவும், மறுபக்கம் காணப்படும் கோட்டை சவக்கோட்டை எனவும் அழைக்கப்படுகின்றன.



பத்மநாபபுரம் கோட்டையின் தெற்கு வாயில்

## ஆடலரசன் அருள்

### சிதம்பரம் டாக்டர் வி.வி.ஸ்வர்ணவெங்கடேச தீக்ஷிதர்

சிவா

ராகம் : மாண்டு தாளம் : ஆதி

**பல்லவி**

பாடுகின்றார் பலர், வாடுகின்றார், ஏன்? (பாரில்) மனமே.
பணம் ஒன்றையே கருதி, ஓடுவதால், தான், தினமே. (பா)

**அநுபல்லவி**

ஆடுகின்ற, தில்லை ஈசன், (அனவரதமும் ஆனந்த நடனம்)
ஆடுகின்ற, தில்லை ஈசன், அருட்துணையை நாடாமல்
வாடுகின்ற வாட்டம் தீர, வழி, முறையைத் தேடாமல். (பா)

**1ஆவது சரணம்**

பாடற்கினிய குரலளித்த, பரமனையே மறந்து
பல நூல்களிலிருந்து பதமெடுத்துப் பா, புனைந்து
தேடத்தேட ஓடுகின்ற, திரவியத்தையே, நினைந்து,
தேவரென்றும், மூவரென்றும், யாவரையுமே புகழ்ந்திரந்து. (பா)

**2ஆவது சரணம்**

தேடத், தேட, ஓடும் பணம். நாம் ஓட, ஓட, நம்மைத் தேடும் என
திறமையுள்ளோர் எனினும், வாழ்வில் தெளிந்து நடக்கணும் எதிலும்
ஆடலரசன் அருள் பெறின் அதனால் இக,பர,ஸுகம் கிடைக்கும் என்றும்
அல்லலற்ற உளம் வலுக்கும். அகம், களிக்கும். முகம் ஜ்வலிக்கும் (பா)

மருந்துக் கோட்டையில் போர்க்கருவிகளும், அவற்றிற்கு வேண்டிய வெடிமருந்துகளும் தயாரிக்கப்பட்டன. சவக்கோட்டையை வேணாட்டு மன்னர்களும் அவர்களது குடும்பத்தாரும் இடுகாடாகப் பயன்படுத்தினர்.

பத்மநாபபுரம் கோட்டையின் உள்ளே பழைமையான பல கோயில்களும், வேணாட்டு மன்னர்கள் வாழ்ந்த அரண்மனையும் வரலாற்றுச் சின்னங்களாக நமக்குக் காட்சி தருகின்றன. கோட்டையின் தென் கிழக்கே ஐந்தடுக்கு கோபுரத்துடன் கம்பீரமாகக் காட்சி தரும் நீலகண்ட சுவாமி கோயில் திராவிடக் கட்டடக் கலையின் சின்னமாகத் திகழ்கிறது. பத்மநாபபுரம் கோட்டையின் வடமேற்கு மூலையில் ஸ்ரீராமபிரான் கோயில் கொண்டுள்ளார். இக்கோயில் கேரளக் கட்டடக்கலை அமைப்புக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது. இங்கு இராமாயணக் கதை முழுவதும் 45 மரப் பலகைகளில் நாடக ரூபமாகச் சித்திரிக்கப்பட்டுள்ளது. மர வேலைப்பாட்டில் இந்திய நாட்டின் சிறந்த கலைச் செல்வங்களில் ஒன்றாக இதைக் கருதலாம்.

சேர சோழ பாண்டியர்கள் ஆண்ட நாடு தமிழ்நாடு. அவர்களது கலைத்திறனை நிலைநாட்டி நிற்கும் கோயில்கள் தமிழகத்திலே ஏராளம். ஆனால் அவர்கள் வாழ்ந்த அரண்மனை ஒன்றைக்கூட தமிழகத்தின் பிற பகுதிகளில் நாம் காணமுடியாது. சேரர் வழி வந்த வேணாட்டு மன்னர்கள் வாழ்ந்த அரண்மனை ஒன்று பத்மநாபபுரம் கோட்டையின் உள்ளே இன்றும் கம்பீரமாகக் காட்சி தருவது குமரி மாவட்டத்திற்கே ஒரு பெருமையாகும்.

இவ்வாறு குமரி மாவட்டத்திலே காணப்படும் வட்டக்கோட்டை, உதயகிரிக் கோட்டை, பத்மநாபபுரம் கோட்டை ஆகிய மூன்றும் தமிழகத்தை ஆண்ட சேர, சோழ, பாண்டிய மன்னர்களின் வரலாறுகளை பறைசாற்றி நிற்கின்றன.

# காதல் ஒரு தொல்லை

அபர்ணா நாயுடு



கல்லூரியின் தொடக்க நாள். விடுமுறைக் காலம் முழுவதும் வெறிச்சோடிக் கிடந்த அந்த வளாகத்தில் கலகலவெனத் திருவிழாக் கோலம். ஸ்கூட்டர்கள், மோட்டார் சைக்கிள்களின் விர்ர். சீனியர்களின் கம்பீர நடை. உற்சாகக் குரல்கள். பயந்து பயந்து நடக்கும் புதுமுகங்கள்... மிரண்ட விழிகள். வியர்வை சிந்தும் முகங்கள்.

அங்கங்கே சிறுசிறு குழுக்களாக மாணவ-மாணவிகள். கிண்டலும் கேலியுமாகச் சிரிப்பலைகள். புதுமுகங்களைப் பற்றிய வர்ணனைகள். பேச்சளவில் மட்டுமே வரம்பு கட்டப்பட்ட 'ராகிங்'.

காரை ஓர் ஓரமாக நிறுத்திவிட்டு இறங்கினாள் கலா. புது மாணவி. பார்வையைச் சுற்றிலும் படரவிட்டாள். பயந்தது மாதிரி எதுவும் தெரியவில்லை. குரல் அளவில் தவிர, 'ராகிங்' கட்டு மீறவில்லை என்றே தோன்றியது. மனத்தில் தெம்பு பிறந்தது. தலை சற்றே நிமிர்ந்தது. கல்லூரி அலுவலகக் கட்டடத்தை நோக்கி நடக்கத் தொடங்கினாள்.

திடுமென அங்கே அமைதி.

ஒருநொடி அவள் அதை உணரவில்லை. சட்டென்று அதை உணர்ந்த போது –

நெஞ்சில் லேசான பயம். அத்தனை பேரும் அவளையே உற்றுப் பார்ப்பதைப் போன்ற குறுகுறுப்பு. ஏதோ நடக்கப் போகிறது... அதன் ஆயத்த நிலைதான் இது...

எண்ணம் எழுந்த கணத்தில் படபடப்புத் தொடங்கியது.

தடக்கென்று நின்றாள். சுற்றிவர வெறித்துப் பார்த்தாள். சவால் விடும் பார்வை.

'ம்... கமான்... செய்யற கலாட்டாவைச் சீக்கிரம் செய்து முடியுங்க. சஸ்பென்ஸை எதுக்காக வளர்க்கணும்?'

நெஞ்சினுள் எழுந்த கூவல் வெளியே வராமல் உள்ளுக்குள்ளேயே மோதி எதிரொலித்தது.

அதற்குப் பதில் சொல்வதைப் போலக் கலாட்டா...

"பானுப்ரியா மாதிரி கண்ணுடா!"

... ஆரம்பித்தது.

"ஸ்ரீதேவி மூக்குடா!"

... வளரத் தொடங்கியது.

"சிரிச்சா குஷ்பு மாதிரி இருக்குமா?"

"சிரிக்க வைச்சுப் பார்த்துட்டா தெரிஞ்சு போகுது".

"சிரிக்க வைக்கமுடியுங்கறே?"

"அப்ப நீ என்ன முடியாதுங்கறே?"

"என்ன பெட்?"

"நீ சொல்லு, என்ன பெட்?"

பொருட்படுத்துவது போலத் தெரிந்தால் மேலும் வளரக் கூடும். அலட்சியப்படுத்தினால்...

பார்வையைத் திருப்பி நடக்கத் தொடங்கினாள்.

அவள் நடைக்கேற்ப 'தட்தட்' எனக் கரவொலி. கூடவே, "அடி ராக்கம்மா கையைத் தட்டு..."

... உச்சகட்டம்!

தனிக்குரல் விரைந்து கோரஸாக ஒலிக்க, அவளுள் உஷ்ணம் கூடியது. பல்லைக்கடித்து, சட்டென்று நின்று, திரும்பிப் பார்த்த போது –

"ஸ்டாப் இட்".

கோரஸையும் மீறி எழுந்த குரல். கூட்டம் சட்டென அமைதி அடைய, அவள் பார்வையில் எதிரே அந்தக் குரலுக்குடைய —

சிவசங்கரன்.

அவனுடைய பார்வைக்குக் கட்டுப்பட்டு அந்தக் கூட்டம் கலைந்தது.

அன்று பகல் பூராவும் அவளுள் அந்தக் கேள்வி.

"யார் அவன்? பெயர் என்ன?"

புது இடம். புதுமுகங்கள். எவரிடமும் கேட்க முடியவில்லை. தயக்கம். மாலைவரை நீடித்துக் கல்லூரியை விட்டுப் புறப்பட்ட போதும்.

காரை மெதுவாகச் செலுத்தினாள். வளாகத்தை விட்டு வெளியேறி இடது புறம் சாலையில் திருப்பினாள். சற்றுத் தொலைவு சென்ற போது பஸ் நிறுத்தம். அங்கே அவன். கூட்டத்திலிருந்து விலகித் தனியாக. அருகே சென்று நிறுத்தினாள். ஜன்னல் வழியாகத் தலையை வெளியே நீட்டினாள். சிரித்தாள். சொன்னாள்.

"ஏறிக்குங்க. வீட்டிலே டிராப் பண்ணிடறேன்".

அவளை உறுத்துப் பார்த்தான். சொன்னான் –

"அவசியம் இல்லை".

அவள் சிரித்தாள்.

"எனக்கு அவசியம்".

அவன் பேசாமல் இருந்தான்.

"ப்ளீஸ்... காலைல அந்தக் கலாட்டாவிலிருந்து என்னை விடுவிச்சீங்க. அதுக்கு நான் நன்றி செலுத்த வேணாமா? அதுக்காகத்தான்".

"இப்ப காரை நிறுத்திக் கேட்டதே போதும். அதுவே நன்றி செலுத்திட்ட மாதிரிதான்".

"நோ. அது எனக்குத் திருப்தியா இருக்காது. ம்... கமான்... ஏறிக்குங்க".

அவன் பதில் சொல்வதற்குள் விசில் ஒலி. திரும்பிப் பார்த்தாள்.

போலீஸ்காரர் ஒருவர் காரை நகர்த்தச் சொல்லிக் கையை ஆட்டிக் கொண்டிருந்தார்.

அவள் சட்டெனக் காரின் கதவைத் திறந்து விட்டாள்.

"ம்... சீக்கிரம். போக்குவரத்துக்கு இடைஞ்சல்னு சொல்லிப் போலீஸ்காரர் புக் பண்ணிடப் போறார்".



அவசரப்படுத்தினாள்.

அவன் தயக்கத்தோடு ஏறி அமர்ந்து கதவைச் சாத்த, கார் நகர்ந்தது.

போக்குவரத்து நெரிசலில் லாகவமாகக் காரைச் செலுத்திக் கொண்டிருந்தாள். இடையிடையே ஓரக்கண்ணால் அவனைப் பார்த்தாள். மௌனத்தின் ஆட்சி. அவளே அதைக் கலைத்தாள்.

"பேசவே மாட்டேங்கறீங்களே!"

"பேச என்ன இருக்கு?"

"ஏன், உங்களைப் பத்தித் தெரிவிக்கலாம். என்னைப் பத்திக் கேட்டுத் தெரிஞ்சுக்கலாம்".

அவன் பேசாமல் இருந்தான். அவள் சொன்னாள்.

"என் பேரு கலா. உங்க பேரு?"

அவன் மௌனம் தொடர்ந்தது.

"என்ன பேசாம இருக்கீங்க? நீங்க சொல்லலைன்னா தெரிஞ்சுக்க முடியாதா? உங்க பேரு என்ன அவ்வளவு பெரிய அரசாங்க ரகசியமா?"

"சிவசங்கரன்".

"எனக்கு அப்பா கிடையாது. அம்மா மட்டும்தான். அப்பா காலமான பிற்பாடு எங்க இண்டஸ்டிரி எல்லாத்தையும் அம்மாதான் கவனிச்சுக்கறாங்க. எனக்கும் அம்மாவுக்கும் லட்சியம் ஒண்ணு இருக்கு. அதை எப்படியாவது நிறைவேற்றிடணும்கறது எங்களோட தீவிரமான நோக்கம்".

முதல்முறையாக அவனுள் லேசான சுவாரசியம்.

அவன் பார்வையில் மெலிதான ஆர்வம்.

"உங்களைப் பத்திச் சொல்லுங்க" என்றாள் அவள்.

"என்னைப் பத்தி என்ன சொல்ல? ஒரு காலத்துல வசதி. இப்போ கஷ்டப்படற குடும்பம். அப்பாவோட பிசினஸ் பார்ட்னர் ஒருவர் ரொம்ப வருஷத்துக்கு முன்னால மோசடி செய்துட்டார். அதுக்கப்புறம் எங்களால தலைதூக்கவே முடியலை".

அவள் முகத்தில் வேதனை படர்ந்தது.

"சொல்லுங்க. விவரமா சொல்லுங்க" என்றாள். ஆனால் –

அதன்பின் அவன் எதுவும் பேசவில்லை.

அவனை அடிக்கடி சந்திக்கத் தொடங்கினாள். கல்லூரி வளாகத்தில். லைப்ரரியில். பஸ் நிறுத்தத்தில். கடற்கரையில். அவன் வீட்டில்...

அவள் ஒதுங்க ஒதுங்க மேலும் மேலும் நெருங்கினாள்.

அவள் மன உணர்வு அவனுக்குப் புரிந்தது. தன்னுடைய மன உணர்வும் அவளுக்குப் புரிந்திருந்தது. ஆனால் அதற்கு இடம் தர விரும்பவில்லை. அவளுக்கு இடம் தரவும் விரும்பவில்லை. அவனுக்கு ஒரே ஒரு நோக்கம்தான் இருந்தது. தன் குடும்பத்தின் சரிவுக்கும் அதன் விளைவாக அமைந்து விட்ட அவல வாழ்க்கைக்கும் காரணமாக இருந்தவரைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும். கண்டு பிடித்துப் பழிவாங்க வேண்டும்... அதுவரை மனத்தை எந்த வகையிலும் திசை திரும்ப அனுமதிக்கக் கூடாது. ஆகவே –

அவளிடமிருந்து விலக முயன்றான். அவன் விலக விலக, அவள் மேலும் மேலும் அணுக – இதற்கு முடிவு கட்டவேண்டுமென்று ஒருநாள் எரிச்சலோடு சொன்னான்.

"உன்னோட பெரிய தொல்லையாப் போச்சு".

"காதல்ங்கறதே ஒரு தொல்லைதானே! நிறைவேறுகிற வரை நெஞ்சுக்குள்ளே உட்கார்ந்திருக்கிற வண்டு மாதிரி அது குடைகிற குடைச்சல்..."

அவன் பேசாமல் இருந்தான்.

"உங்களோடதான் என் வாழ்க்கை. அது நிச்சயம்".

"இல்லை. அதை மறந்துடு".

கண் கலங்கினாள்.

"பிடிவாதமாப் பேசாதீங்க".

"கலா! கடைசி தடவையா சொல்றேன். என்னோட நோக்கம் நிறைவேறணும். அதை எப்படியும் நிறைவேற்றியே தீருவேன். அது அப்படி நிறைவேறிட்டா அதனோட விளைவு எனக்குப் பாதகமா இருக்கும். இதை நல்லாத் தெரிஞ்சுக்கிட்டுதான் இதுல நான் இறங்கறேன். அந்தப் பாதகமான விளைவு என்னோட போகட்டும். உனக்கும் அதுல பங்கு வேண்டாம். புரியுதா?"

"எல்லாம் புரிஞ்சுதாங்க பேசறேன். என்ன உங்க நோக்கம்? உங்க அப்பாவை மோசம் பண்ணியவரைக் கண்டு பிடிச்சுப் பழிவாங்கணும். அவ்வளவுதானே!"

"ஆமாம்".

"எப்படி முடியும்?"

"ஏன் முடியாது?"

"உங்க சின்ன வயசில நடந்த விஷயம் இது. அரை குறையா உங்க அம்மா சொல்லித் தெரிஞ்சுக்கிட்டது. உங்களுக்கு நினைவு தெரிஞ்சு இந்த முடிவை நீங்க எடுத்தப்ப உங்க அம்மா உயிரோட இல்லை. அப்பாவுக்குப் பாரிச வாயு. கை, கால், பேச்சு எல்லாமே போயிருச்சு. யாருன்னு கண்டுபிடிச்சு எப்படிப் பழி வாங்கப் போறீங்க?"

அவன் குமுறினான்.

"எப்படியாவது... எப்படியாவது கண்டு பிடிச்சே ஆகணும். அம்மா மனசொடிஞ்சு செத்துப் போனதுக்கும், அப்பா உள்ளுக்குள்ளேயே குமுறி நோய்வாய்ப்பட்டதுக்கும், இன்னிவரை வசதியான வாழ்க்கைன்னா என்னன்னே எனக்குத் தெரியாமப் போனதுக்கும் காரணமானவனைக் கண்டுபிடிச்சுப் பழி வாங்கியே ஆகணும்".

அவள் நிதானமான குரலில் பேசினாள்.

"எதையும் பாசிடிவ்வாவும் அணுகலாம். நெகடிவ்வாவும் அணுகலாம். உங்க அணுகுமுறை ரொம்ப ரொம்ப நெகடிவ். இதனால யாருக்குத் திருப்தி?"



"எனக்கு".

ஒரு நொடி அவனை வெறித்துப் பார்த்துவிட்டுப் போய்விட்டாள்.

மறுநாள் அவள் அவன் வீட்டுக்குப் போனாள். அவன் கோபமாகக் கேட்டான்.

"ஏன் வந்தே?"

"நீங்க பழிவாங்கத் துடிச்சீங்களே... அவர் யாருன்னு சொல்லிட்டுப் போகத்தான். ஆனா, அவரை உங்களால பழிவாங்க முடியாது".

அவன் திகைத்தான்.

"ஏன் தெரியுமா? அவர் ஏற்கெனவே செத்துப் போயாச்சு".

அவன் திகைப்பு கூடியது.

"அவர்... அவர் வேறே யாருமில்லை. என் அப்பாதான்".

"வாட்?"

"அப்புறம் இன்னொண்ணு. எனக்கும் அம்மாவுக்கும் ஒரு லட்சியம்னு சொன்னேன் இல்லையா? எங்கப் பாவால ஏமாற்றப்பட்டவர் யாருன்னு கண்டுபிடிச்சு அவருக்கு நியாயமாச் சேர வேண்டியதைத் தந்துடணுங்கறதுதான் அது. நான் பாசிடிவ் அனுகுமுறைன்னு சொன்னது இதைத்தான். இந்தாங்க... இந்த டாக்குமென்ட்டைப் பிடிங்க. எங்க இண்டஸ்ட்ரியில உங்களுக்கு இருக்கிற பாதி உரிமையை இது உறுதிப்படுத்துது... அப்புறம் இன்னொண்ணு..."

அவன் கண்களைத் தன் கண்களால் சிறைப்படுத்தினாள்.

"நான் உங்களுக்காக எப்போதும் காத்திட்டிருப்பேன். நீங்க மனசு மாறி என்னைத் தேடி வந்தீங்கன்னா சந்தோஷம். இல்லைன்னா... இப்படியே இருந்துடுவேன்".

சொல்லி விட்டுப் போய் விட்டாள்.

ஒரு மணி நேரத்துக்குப்பின் –

வாசலில் பஸ்ஸர் ஒலித்தது.

அவள் கதவைத் திறந்தாள்.

அவன் நின்று கொண்டிருந்தான்.

# என்ன செய்யட்டும்?

ராஜேந்திரகுமார்

அந்த நிமிடம் வரை அமைதியாக இருந்தது அந்தக் கிராமம்.

திடீரென்று எழுந்த 'இல்லேம்மா. இனிமே இல்லேம்மா' என்ற பெரிய அலறல் கேட்டதும் –

மீன் ஆய்ந்து கொண்டிருந்த பாட்டிமா திரும்பிப் பார்த்தாள்.

பால் கொடுத்துக் கொண்டிருந்த குழந்தை சிணுங்க, திரும்பினாள் இளம்பெண் ஒருத்தி – உருவிக் கொண்டே.

சமையலிலிருந்த அம்மாள் ஒருத்தி அடுப்புச் சுள்ளிகளை இழுத்து நுணுக்கி விட்டு எழுந்து போக முயன்றவள் மீண்டும் அமர்ந்து கொண்டாள்.

எல்லோர் முகத்திலும் இருந்தது ஒன்றேதான். எரிச்சல்!

"விடிஞ்செழுந்தா இதே வேதனையாப் போச்சு" என்ற கிழவியைச் சாலையிலேயே மடக்கி நிறுத்தினார்கள் மற்றவர்கள்.

"ஏன் தாயீ நீ வேற. அவ புத்திதான் தெரியுமே. அப்புறம் ஏன் வம்பு பண்ணறே? அன்னைக்கு அவ்வளவு வாங்கிக்கிட்டியே மறந்து போச்சு தாக்கும்?"

உண்மை!

அன்று ஒருநாள் இதே கிழவிதான் போய் நின்று கத்தினாள்.

"அடி ஏண்டி வந்ததும் வராததுமா புள்ளையை இந்த அடி அடிக்கிறே? விடுடி அவனை".

"அடிபோடி அந்தப் பக்கம். அஞ்சு பெத்தேனா ஆறு பெத்தேனா? பெத்ததே ஒண்ணு. அதுவும் ஊருக்குள்ளே உதைபட்டு வந்து நின்னா பெத்த வயிறு உனக்கென்ன தெரியும்? புள்ளையே பெறாத வெறுஞ்சிறுக்கிதானே நீ. உனக்கெப்படித் தெரியும் போடி. வந்துட்டா பெரிசாப் பேச. போடி அந்தாண்ட".

"ஆமா. உலகத்தில இல்லாத பெரிய புள்ளையைப் பெத்துட்டா. என்னத்தைடி அப்படிப் பண்ணிட்டான்?"

"அதையேண்டி கேட்கறே. அந்த தனலட்சுமியில்ல?"

"யார்? பண்ணை வீட்டுக்காரம்மாவா?"

"அந்தச் சண்டாளிதேங். அவ பொண்ணுக்குக் கல்யாணம். இந்தப் பய போயி கல்யாணம் நடக்காது மாப்பிள்ளையா வரப்போற பையன் செத்துப் போறதா கனவுல பார்த்தேன்னு சொல்லி ஊர் பயலுங்க எல்லாம் சேர்ந்து அடிச்சு அடிச்சு உடம்பெல்லாம் கிழங்கு கிழங்கா வீங்கிப் போயீ..."

உண்மை! அந்தப் பண்ணை வீட்டுக் கல்யாணம் நடக்கவில்லை. கல்யாணப் பந்தல் கட்டி, மேளம் எல்லாம் கொட்ட ஆரம்பித்தபோதுதான் செய்தி வந்தது. மாப்பிள்ளை போதையில் நடந்து மொட்டை மாடியிலிருந்து விழுந்து – அதே இடத்திலேயே இறந்து போக, கல்யாணம் நின்றுவிட்டது.

"அப்படியும் விடாம மறுநாள் வந்து பேய் மாதிரி கத்திட்டுப் போறா. என் மவன்தான் ஏதோ செய்வினை பண்ணிட்டான். இல்லேன்னா இவனுக்கெப்படித் தெரியும்னு திட்டிட்டுப் போறா சக்களத்தி".

"அட போகாதேங்கறோம்ல?"

"இருங்கடி. அவ கத்துவாங்கறதுக்காகப் பையனை அடிச்சே கொன்னுடுவா போலிருக்கு அந்த ராட்சசி. போயி என்னதான்னு கேட்டுட்டு வரேன்" என்ற கிழவி அவசரமாகப் போய் பார்த்தபோது, சுள்ளிக் கட்டையால் மகனை அடித்து நொறுக்கிக் கொண்டிருந்தாள் செவந்தியம்மா.

"அடிப்பாவி. நிறுத்துடி. புள்ள புரண்டு புரண்டு துடிக்குது. என்ன, அடிச்சே கொல்லப் போறியா? அப்படி என்னடி பண்ணிட்டான்? இப்படிப் பேய் மாதிரி நிக்கிறே?"

"என்னை என்ன பண்ணச் சொல்றே தாயீ. வாயை வச்சிட்டு சொம்மா இருந்தாதானே? ஏடா கூடமா பண்ணிட்டு வந்திருக்கானே பாவி"

"என்ன ஆச்சு?"

"ஊர் பெரியமனுஷன் கவுண்டரய்யா பொண்ணு இப்பதானே வயசுக்கு வந்துச்சு. நாளைக்கழிச்சு மக்காநாளு பொண்ணு பார்க்க வரகப்பட்டிக்காரங்க வராங்க. வேலை மெனக்கெட்டு அம்புட்டு தூரம் போயி கெட்டுப் போகப் போகுது அந்தப் பொண்ணுன்னு சொல்லிட்டு வந்திருக்கான். பெரியவரு கோவம் வந்து ஆளை வெச்சுக் கொல்லப் போறேன்னு மெரட்டிட்டுப் போறாக. அவுக சொன்னதைச் செய்வாகளே".

"ஏண்டா முட்டாப் பயல நெசமாவா?"

"ஆமாம் ஆத்தா. நேத்து ராத்திரி தூங்கையில கனவு கண்டேன். நாலு பேரு அந்தப் பொண்ணை..."

"அடப் போடா தூங்குமூஞ்சி. நீயும் உன் கனாவும். பேசாம கொஞ்ச நாளைக்கு உத்தமபாளையத்துக்குப் போயிரு. இங்கே இருந்தா வெட்டிப் போட்டுருவாங்க".

"ஆத்தா..."

"ஆத்தா என்ன? உசிரைக் காப்பாத்திக்கிறதைப் பாருடா ராஸ்கோல். பெரியவங்க கோவம் உனக்குத் தெரியாது. வாயும் கையும் பேசறதுக்கு முந்தி அவுக அருவா பேசும்டா. கிளம்பு பேசாம".

அந்த காயம்பு கிளம்பி உத்தமபாளையத்தில் சித்தப்பா வீட்டுக்குப் போன அடுத்த நாளே அந்தப் பயங்கரம் நடந்துவிட்டது.

புதியதாகச் சமைந்த பெரியவர் கவுண்டரய்யாவின் மகளை ஊர் மைனர்கள் நான்கு பேர் தூக்கிப் போய் மாறி - மாறி -

மறுநாள் காலையில்தான் மூச்சடங்கிப் போன பெண்ணாகக் காட்டில் கண்டுபிடித்தார்கள்.

கவுண்டரய்யா புலம்பினார். "பாவி மவன். எந்த நேரம் சொன்னானோ என் மவ கதி இப்படி யாயிடுச்சே!"

உத்தமபாளையம் சித்தப்பா கொஞ்சம் விவரம் தெரிந்தவர். மனோதத்துவ டாக்டரிடம் காயம்பூவைக் கூட்டிப் போனார்.

"அது சிம்பிள்" என்றார் டாக்டர். "ஈ.எஸ்.பி. அதாவது எக்ஸ்ட்ரா சென்சரி பர்ஸெப்ஷன். இந்த உணர்வு எல்லாருக்கும் உண்டு. உதாரணமா பஸ்சில போறோம். தெருவில போறோம். பின்னாலிருந்து யாரும் நம்ம முதுகையே பார்த்தால் நமக்கே தெரியாம ஓர் உணர்வு வந்து திரும்பிப் பார்க்கிற அதுதான் ஈ.எஸ்.பி. சில சமயம் சிலபேர்கிட்ட அதிகமாயிடும். அப்ப அவங்களாலே அப்புறமா நடக்கப் போகிறது இப்பவே காட்சியா தெரியும். இது ஒரு மெடிகல் மிராகல். ஹார்ம்லெஸ். இதனால இவனுக்கு எந்த ஆபத்து மில்லே. இதனால ஆபத்து மத்தவங்க மூலமா வந்தால்தான் உண்டு".

"என்னதான் பண்ணலாம் டாக்டர்?"

"வயிறு சுத்தமா இருக்கும்படி பார்த்துக்குங்க. தூங்கப் போறதுக்கு முந்தி கைகால் அலம்பிக்கிட்டு கடவுளை நினைச்சோ, இல்லே ஏதாவது பயங்கரக் கதைகளைப் படிச்சோ தூங்கச் சொல்லுங்க. இந்த மாதிரி கனவுகள் வராது".

அதிலிருந்து கொஞ்ச நாளைக்கு கனவுத் தொல்லை எதுவுமில்லாமல் நிம்மதியாகத் தூங்கினான் காயம்பூ.

"சித்தப்பா சித்தப்பா" என்று காயம்பூ கதவைத் தட்டுவதைக் கண்டு தூங்கிக்கொண்டிருந்தவர் எழுந்து வந்து பார்த்தார்.

அந்த காயம்பூ நின்றிருந்தான். அச்சமாகப் பார்த்தவாறு. டீன்-ஏஜின் கடைசிக் கட்டத்திலிருந்தான். உழைத்த உழைப்பு உடம்பை திண்ணென்று வைத்திருந்தது. விட்டால் நான்கு பேரைத் துவைப்பான் போலிருந்தது.

"என்னடா?"

"கடைத் தெருவில நகைக்கடை வைச்சிருக்காரே சேட் ஒருத்தர் அவர் உங்க சிநேகிதர்தானே?"

"ஆமாம், ஏன்?"

"அவர் கடையைக் கொள்ளையடிச்சு நாலு பேர் அவரையும் குத்திக்



கொல்லப் போறாங்க. இப்பதான் கனவுல பார்த்தேன்".

பதறிப் போனார். "யார்கிட்ட யாவது சொல்லிட்டியா!"

"இல்லே. உங்களை விட்டுச் சொல்லலாம்னுதான் வந்தேன்".

"இதப்பாரு. வாயைத்திறந்தே, வெட்டிப் போட்டுடுவேன். போடா, போய் தூங்கு போ".

"இப்பவே கூப்புட்டுச் சொல்லிடுங்க சித்தப்பா. காலையில் கடை திறந்ததும் நடக்கப் போகிற பயங்கரம். காட்சி தெரிஞ்சப்ப அங்கே இருந்த கடிகாரத்தைப் பார்த்தேன். பத்துமணி அடிச்சி இருந்தது".

"பத்து மணிக்குதானே. சொல்லிட்டாப் போச்சு. காலையிலேயே அவர் வீட்டுக்குப் போய் சொல்லிடறேன். இப்பப் போய் படு போ".

"இப்பவே போய் சொல்ல முடியாதா?" என்றவன், அவர் முறைப்பைப் பார்த்ததும், "சரி, சரி. முறைக்காதீங்க. நான் போய் படுத்துத் தூங்கறேன்" என்று போனான்.

மறுநாள் காலை ஒன்பது மணிக்குக் கிளம்பிய சித்தப்பாவோடு காயம்பூவும் கிளம்பினான். "நானும் வரேன் சித்தப்பா" என்றான் பிடிவாதமாக.

முதலில் அந்த சேட் வீட்டுக்குப் போனார்கள். சமையல் நெய் வாசம் வாசல் வரை வந்தது. அந்த வீட்டம்மாள் ஏகப்பட்ட மடிப்புகளை வயிற்றில் ஏந்தி வந்து நின்றார். "இருங்க வருவார். ஏதோ வசூலுக்குப் போயிருக்கார். எப்படியும் ப்ரேக் ஃபாஸ்ட்டுக்கு வந்துதான் கடை திறக்கப் போவார்".

காத்திருந்தவர்கள் மணி பத்தடித்துப் பத்து நிமிஷமிருக்கும்போது தான் அந்தம்மாள் சொன்னார்: "போன இடத்திலே நேரமாயிட்டா அப்படியே கடைக்குப் போயிடுவாங்கோ. நாஷ்டா கொண்டுவரச் சொல்லி சோக்ராவை அனுப்புவாங்கோ".

தலையிலடித்துக் கொண்டு காயம்பூ தொற்றிக் கொள்ள பைக்கை ஓட்டிச் சென்றார் சித்தப்பா. வழியில் பைக் தகராறு பண்ண சில ரிப்பேர்களைப் பார்த்துவிட்டு இவர்கள் போனபோது -

கடை எதிரே கூட்டத்தைப் போலீஸார் லட்டியால் வழித்துத் தள்ளிக் கொண்டிருந்தார்கள். இன்ஸ்பெக்டர் ஒருவர் அறக்கப் பறக்க அப்படியும் இப்படியுமாக ஓடிக் கொண்டிருந்தார்.




"பாவிங்கோ. பட்டப் பகல்ல சேட் கதவை திறக்கறச்ச கூடவே உள்ளே போய் ஆளைத் தீர்த்துக் கட்டிட்டு நகைங்களைக் கொள்ளையடிச்சிட்டுப் போயிட்டானுங்களே" என்று ஒருத்தர் புலம்ப –

"ராத்திரியே சொன்னேன் இப்படி நடக்கப் போகுதுன்னு. நீங்க அப்பவே ஆளை எச்சரிச்சிருந்தா இந்நேரம் ஆள் பிழைச்சி இருந்திருப்பான். போங்க சித்தப்பா" என்ற காயம்பூவை இன்ஸ்பெக்டர் பார்த்த சந்தேகப் பார்வையையும், கேட்ட கேள்விகளுக்கும் பதில் சொல்வதே சித்தப்பாவுக்குப் பெரும்பாடாக இருந்தது.

வீட்டுக்கு வந்ததும் சொல்லி விட்டார். "நீ ராத்திரியில தூங்கினா தானே வம்பு வருது. தூங்க முடியாத வேலையை வாங்கித் தரேன். என் சிநேகிதன் ஒருத்தன் பெங்களூர்ல இருக்கான். பெரிய கோடீஸ்வரன். அவன் வீட்டுக்கு நைட் வாட்ச்மேன் யாரையாவது ஏற்பாடு பண்ணச் சொல்லியிருக்கான். பேசாம அங்கே போய்ச் சேர்ந்துடு".

"சரி, சித்தப்பா".

"பகல்ல தூங்கினா இந்த மாதிரி நியூஸன்ஸ் கனவெல்லாம் வராதில்லையா?"

"இல்லே சித்தப்பா".

"அப்ப பெங்களூர் கிளம்பத் தயாராயிரு".

பெங்களூரில் முழுசாக இரண்டு கிரவுண்ட் இடத்தில் ஏகப்பட்ட பந்தோபஸ்துகளுடன் இருந்தது அந்த பங்களா. வாசலில் 'பஸவப்பன மனே' என்று கன்னடத்தில் போர்டு எழுதி வைக்கப்பட்டிருந்தது.

சித்தப்பாவின் சிபாரிசு கடிதத்துக்கு நல்ல மதிப்பு இருந்தது. அந்த பசவப்பா, கடிதத்தை அக்கறையாகப் படித்தார். "ராத்திரி தூங்கிட மாட்டியே".

## நோக்கு

பால. நடராஜன்



வான் நோக்கு - வானின்
மதி நோக்கு

கான் நோக்கு - கானின்
வளம் நோக்கு.

மான் நோக்கு - மானின்
குணம் நோக்கு.

மீன் நோக்கு - மீனின்
எழில் நோக்கு.

தேன் நோக்கு - தேனின்
சுவை நோக்கு.

தூண் நோக்கு - தூணின்
நிலை நோக்கு.

ஊன் நோக்கு - ஊனின்
திறன் நோக்கு.

வீண் நோக்கு - வேண்டாம்
இனி நமக்கு.

"இல்லே ஐயா. பகல்ல தூங்கிப் பேன்; ராத்திரி முழுக்கக் காவலிருப் பேன்".

"நம்பலாமா? பகல் தூக்கத்திலே கனவு வராதே?"

"வராது எஜமானே. அப்படியே வந்தாலும் பகல் கனவு பலிக்காதுன்னு சொல்லுவாங்களே".

"அப்ப சரி. உனக்கு வேலை தரேன். தோட்டத்திலே கூர்க்காவுக் காகக் கட்டி வைச்ச வீட்டிலேயே நீ தங்கிக்கலாம். அவன் பகல் நேர டியூட்டிக்காரன். அதனால நீ பகல்ல தூங்கிக்க. ராத்திரி நீ டியூட்டி பார்க்கிறச்ச அவன் தூங்கிப்பான். ஓ.கே!"

"சரிங்க ஐயா".

"அடுத்த ஒரு மாதம் எந்தவிதக் குழப்பமும் இல்லாமல் போயிற்று.

திருமதி பசவப்பாவுக்கும் பதி னாறு வயதுப் பெண்ணுக்கும் இவ னிடம் நல்ல பிரியம் இருந்தது. அம்மாள் நல்ல நல்ல பதார்த்தங் களுடன் சோறு போடுவார்.

பெண்தான் விளையாடும். "சைக் கிள் ஓட்டச் சொல்லிக்கொடு" என்று காரியரைப் பிடித்து வரச் சொல்லிச் சில மைல் தூரம் வரை கன்றுக்குட்டி போலப் பயந்து ஓட்டுவாள். பிறகு -

திடீர் வேகம் பிடித்து அவனைத் தடுமாறி விழ வைத்து வேகமாக முன்னேறித் திரும்பி வந்து, "ரேஸ்ல சைக்கிள் சாம்பியன். எனக்கு நீ சைக்கிள் ஓட்டக் கத்துக்கொடுக்கறியா? நடந்தே வீட்டுக்குப் போ" என்பாள். சிரித்துக் கொண்டே போய் விடுவான்.

அவ்வளவு தூரம் நடந்த களைப் புக்கு இரவில் இவன்தான் அவதிப் படுவான். தூக்கமாக வரும். பிடி வாதமாகத் தூக்கத்தைத் தவிர்த்துக் கண்விழித்துக் காவல் காப்பான். "பாரா உஷார்".

ஒரு நாள் திருமதி பசவப்பா இரவு சூப்பிட்டுச் செமத்தியாகச் சாப் பாடு போட்டாள்.

"என்னம்மா விசேஷம்?"

"ஐயா நாளைக்குக் காலையில முதல் ப்ளைட்டில மெட்ராஸ் போறார். அங்கேர்ந்து பெரிய பிஸினஸ் டூர். பாங்காக், ஹாங்காங், சிங்கப்பூர்னு போறார். கோடிக்கணக்கில பிஸினஸ். கையெழுத்து வாங்கப் போறார். அதனாலதான் இன்னைக்கு எல்லா பிரண்ட்ஸுகளுக்கும் டின்னர் கொடுத் தார். அதான் நிறைய காருங்க வந்து போச்சே பார்க்கல?"

"பார்த்தேன்".

"திருப்தியா சாப்பிடு. இன்னும் கொஞ்சம் சிக்கன் பிரியாணி போட் டுக்க. மீன் வறுவல் ரெண்டு போட் டுக்க" என்று செமத்தியாகத் தின் றான். விளைவு -

இரவு பாரா பார்க்கையில் அவனையும் மீறி சுகமாகத் தூக்கம் வந்தது. மரத்தடியில் படுத்துத் தூங்கிப் போனான்.

அப்போதுதான் அந்தப் பயங்கர மான கனவு வந்தது.

கண்விழித்தபோது மணி நாலரை. வீட்டில் எல்லா விளக்குகளும் எரிந்து கொண்டிருந்தன. ஏர்போர்ட்டில் கொண்டுவிட காரும் டிரைவரும் தயாராக இருப்பது தெரிந்ததும் ஓடி னான்.

"ஐயா. இந்த பிளேன்ல நீங்க போக வேணாம். உங்களைக் கெஞ்சிக் கேட்டுக்கறேன்".

"ஏய். என்ன அபசகுனம் மாதிரி கிளம்பறச்ச வேணாங்கறே?"

"நிசுந்தாங்க. இந்த ப்ளேன் வேணாம். இது கிளம்பின மூணாவது நிமிஷமே எரிஞ்சு விழுந்ததையும், ஒருத்தரும் பிழைக்கலன்னும் எனக்கு ராத்திரி கனவு வந்தது. என் கனவு பலிக்கும். அதனாலதான் உங்க கால்ல விழுந்து கேட்டுக்கறேன். போகாதீங்க. அம்மா நீங்களாவது சொல்லுங்கம்மா".

"வேணாங்க. இந்த ப்ளேன்ல நீங்க போக வேணாம்..."

"என்ன நீயும் உளர்றே? இவன் கனவு கண்டதுக்கு ப்ளேன் எரிஞ்சு விழுமா என்ன?"

"அது எனக்குத் தெரியாது. கிளம்ப றச்சவே இவன் போக வேணாம்னு சொன்னது எனக்கு அபசகுனமாகப் படுது. நீங்க எப்படியும் நாளைய ப்ளைட்லேதானே சிங்கப்பூர் போக நீங்க. இன்னைக்கெல்லாம் நேர மிருக்கு. பேசாம கார் எடுத்துக்கிட்டுப் போங்க. ஏழரை ஒன்பது ராகுகாலம் முடிஞ்சதும் காரில கிளம்புங்க".

"இந்த வெயில்லையா காரில் போகச் சொல்றே?"

"ஏ.ஸி. கார்லே வெயில் தெரியாது! சாக்கு சொல்லாதீங்க".

ஏழு மணிக்கெல்லாம் செய்தி ஊரை உலுக்கியது. சென்னை விமானம் டேக் ஆஃப் ஆனதுமே வெடித்து விமானதளத்திலேயே சிதறிப் போயிற்று. யாரும் உயிர் பிழைக்கவில்லை.

அரைமணி நேரம் வரை எந்த உணர்வும் பேச்சுமில்லாமல் எல் லாரும் பேயறைந்த மாதிரி நின்றிருந் தார்கள்.

காயம்பூவைக் கூப்பிட்டனுப்பினார் பசவப்பா. "நீ எப்ப கனா கண்டே?"

"ராத்திரிங்கய்யா". ".

"அதாவது வேலை நேரத்தில தூங்கிட்டேயில்லையா? சரி என் உயிரைக் காப்பாத்தினதுக்கு இந்தா என் பரிசு. இந்தப் பத்தாயிரம் ரூபாயை வைச்சுக்க. கடை கண்ணி வைச்சுப் பிழைச்சுக்க. அதோட உனக்கு வேலை கிடையாது. உடனே வெளியே போயிடு".

"எசமானே! பணத்தையும் கொடுத்து வேலையை விட்டும் போகச் சொல்றீங்களே. இதென் னங்க நியாயம்?"

"என் உயிரைக் காப்பாத்தின துக்குப் பணம் பரிசு. அதே சமயம் வேலை நேரத்தில வேலை பார்க் காமத் தூங்கிப் போனதுக்குத் தண்டனை வேலை நீக்கம். போய் வா" என்றார் உறுதியாக.

"கனவு வருகிறது" கலங்கினான் காயம்பூ. "அதுக்கு நான் என்ன செய்யட்டும்?"

ஃ

# காற்றுக்கும் நிறம் உண்டு

வானம் மழை மேகங்களைச் சுமந்து கொண்டு நிறை கர்ப்பமாய் தெரிய - மழை எந்த விநாடியிலும் பிரவாகமாகக்கூடிய நிலைமை.

ராத்திரி மணி எட்டு.



மருதமலை ரோடில் அந்த ஸ்கூட்டர் சீறிப் பாய்ந்து கொண்டிருந்தது. ரோடின் இரண்டு பக்கமும் கறுப்புப் பெயிண்ட்டைச் சீராய் பூசின மாதிரி இருட்டு. தூரத்தில் எங்கேயோ பொட்டுப் பொட்டாய் வெளிச்சம் தெரிந்தது.

ஸ்கூட்டர் பில்லியனில் உட்கார்ந்திருந்த பிரபா கணவன் சுரேஷ் இடுப்பைத் தன் வலது கையால் இறுக்கி அணைத்துக் கொண்டாள். உடம்பு பயத்தில் லேசாய் உதறியது.

"என்னங்க...?"

"ம்..."

"இவ்வளவு வேகம் வேண்டாம். கொஞ்சம் மெதுவாப் போங்க. எனக்கு அடிவயித்தையெல்லாம் கலக்குது..."

"என்ன பிரபா... புரியாமே பேசறே...? மேலே ஆகாயத்தைப் பாரு... பொத்துகிச்சுன்னா அவ்வளவுதான்... ராத்திரி பூராவும் எங்கேயாவது ஒண்டிகிட்டு நிக்க வேண்டியதுதான்..."

"அதுக்காக இப்படியா போறது...? இருட்டுல எங்கேயாவது கொண்டு போய் மோதிடப் போறீங்க..."



சுரேஷ் சிரித்தான். "உனக்கும் எனக்கும் கல்யாணம் நடந்து ரெண்டு வருஷமாச்சு. நீயும் இந்த ஸ்கூட்டர்ல ஒரு... நூறு தடவையாவது ஏறியிருப்பே...! இதுவரைக்கும் ஒரு சின்ன ஆக்ஸிடெண்டாவது நடந்ததுண்டா...?"

"சரி... சரி... பின்னாடி எவனோ லாரிக்காரன் ஹாரன் குடுத்துட்டே வர்றான். அவனுக்கு வழி விடுங்க..." ஹாரன் சத்தத்தைச் சகிக்க முடியலை..."

சுரேஷ் ஸ்கூட்டரை ரோடோரமாய் ஒதுக்கினான்.

லாரி பின்னால் அலறியது.

"போயேண்டா... ஏண்டா.. கத்தறே...?" சுரேஷ் தன் ஸ்கூட்டரின் வேகத்தைக் குறைக்காமல் - வலது கையை நீட்டி அந்த லாரிக்காரனைப் போகும்படி சொல்லிய அதே விநாடி -

ரோடோரமாய் டெலிபோன் வேலைக்காகத் தோண்டி வைத்திருந்த அந்தப் பெரிய பள்ளம் - ஹெட்லைட் வெளிச்சத்தில் தெரிந்தது.

பிரபா வீறிட்டாள்.

"எ... என்னங்க... பள்ளம்..."

சுரேஷ் ஸ்கூட்டரின் பிரேக்கை மிதிப்பதற்குள் -

"த்த்தட்ட்டீர்ர்..."



ராஜேஷ்குமார்

அந்தப் பெரிய பள்ளத்துக்குள் தலைகுப்புற விழுந்தது ஸ்கூட்டர். பின்னால் வந்த லாரி ரோடை அரைக்கிற மாதிரியான சைஸில் பிரேக்கிட்டு நின்றது.

கௌலி ப்ரௌன் ரோடில் இருந்த ஒரு மருத்துவமனை.

வெளியே மழை கொட்டிக் கொண்டிருக்க - சுரேஷ் டாக்டர்க்கு முன்பாய் நாற்காலியில் உட்கார்ந்திருந்தான். நெற்றியிலும், முழங்கையிலும் கூட்டல் குறி பிளாஸ்திரிகள். உதட்டில் ரத்தக் கசிவோடு சின்னதாய் ஒரு வீக்கம்.

டாக்டர் பொரிந்து கொண்டிருந்தார். "சொற்பக் காயங்களோடு நீங்க தப்பிச்சுட்டீங்க... ஆனா உங்க மனைவிக்குத்தான் பலத்த காயம். பாதி தண்டுவடம் நொறுங்கியிருக்கு... நியூரோ சர்ஜன் ஹரிஹரேஷ் வந்து பார்க்கிற வரை நான் எதுவும் சொல்றதுக்கில்லை..."

"டாக்டர்! பிரபாவோட உயிருக்கு...?"

"உயிருக்கு எந்த ஆபத்தும் இல்லை... ஆனா... ரெண்டு மேஜர் ஆபரேஷன்களைப் பண்ண வேண்டியிருக்கும்... நீங்க எங்கே வேலை பார்க்கிறதாய் சொன்னீங்க...?"

"ஸ்கை டச்சர்ஸ் கம்பெனியில்..."

"அது பில்டிங் கன்ஸ்ட்ரக்ஷன்ஸ் கம்பெனிதானே?"

"ஆமா..."

"என்ன டெஸிக்னேஷன்...?"

"மெக்கானிகல் என்ஜினீயர்..."

"படிச்ச ஒரு பொறுப்பான உத்யோகத்தில் இருக்கிற நீங்களே ஸ்கூட்டரை வேகமா ஓட்டிகிட்டு வரலாமா...? அந்த லாரிக்காரன் மட்டும் உங்க மனைவியை சரியான நேரத்துக்கு - ஹாஸ்பிடலுக்கு கொண்டு வராமே இருந்திருந்தா அவங்க உயிர் பிழைச்சிருக்கவே முடியாது..."

"டேய்... ராஜா..."

சுரேஷ் திரும்பினான்.

அறைவாசலில் அவனுடைய அம்மா திலகம் - தவிப்பாய் நின்றிருந்தாள். வேகவேகமாய் உள்ளே வந்து - மகனின் உடம்பைத் தடவினாள்.

"உனக்கொண்ணும் பலமா அடிபடலையே ராஜா...?"

"இல்லேம்மா... நான் குழியிலே விழாமே அந்தப் பக்கமா எகிறிப் போய் விழுந்துட்டேன்..."

"போன்ல விஷயத்தைக் கேள்விப்பட்டதும் அப்படியே ஆடிப் போயிட்டேன்டா... ராஜா..."

டாக்டர் சிடுசிடுத்தார்.

"இதோ பாருங்கம்மா...! உங்க புள்ளைக்கு வெறும் ஊமைக்காயம் மட்டும்தான். அடிபட்டுத் தண்டுவடம் நொறுங்கிப் போய் - சுயநினைவு இல்லாமே கிடக்கிறது உங்க மருமகதான்...! மொதல்ல அந்தப் பொண்ணைப் போய் பாருங்க... அப்புறமா மகனை வந்து தடவித் தடவிப் பார்க்கலாம்..."

"என்னோட ராஜாத்தியை எங்கே போட்டிருக்கீங்க... டாக்டர்...?"

"பக்கத்து ரூமுக்குப் போங்க..."

சேலைத் தலைப்பால் வாயைப் பொத்தியபடி - திலகம் ஓடினாள். "நா... என்ன... பண்ணுவேன்...?"

சுரேஷை டாக்டர் ஏறிட்டார். "உங்க மனைவிக்குச் சொந்த ஊர் எதுன்னு சொன்னீங்க...?"

"மதுரை..."

"டெலிகிராம் குடுத்துட்டீங்களா...?"

"குடுத்துட்டேன்..."

"அவங்க வீட்ல டெலிபோன் இல்லையா...?"

"இல்லை..."

"அப்படீன்னா டெலிகிராம் கிடைச்சு... இங்கே வந்து சேர்றதுக்குள்ளே விடிஞ்சுடும்..."

"ஆமா... டாக்டர்..."

இரவு. நேரம் பத்தரை மணி.

சிலிண்டர் ஆக்ஸிஜனை நாசித் துவாரத்தில் செருகப்பட்டிருந்த ரப்பர் குழாய் வழியாக - சிரமமாய் சுவாசித்துக் கொண்டிருந்தாள் பிரபா. பின்னந்தலை, வலது முழங்கை, இடது கால் - இந்தப் பிரதேசங்களில் அடர்த்தியான பாண்டேஜ் கட்டு தெரிந்தது. அதில் ரத்தக் கறைகள்.

ந்யூரோ சர்ஜன் ஹரிஹரேஷ் பிரபாவை அரைமணி நேரத்துக்கும் மேலாய் சோதித்துப் பார்த்துவிட்டு - இறுகிய முகத்தோடு அறையினின்றும் வெளிப்பட்டார். சுரேஷும், திலகமும் அவரைத் தவிப்பாய் பின்தொடர்ந்தார்கள்.

"டாக்டர்..."

ஹரிஹரேஷ் நின்று தன் முகத்தில் இருந்த கண்ணாடியைக் கழற்றிக் கொண்டு - சோர்ந்த விழிகளால் அவர்களை ஏறிட்டார்.

"அந்தப் பொண்ணோட உயிருக்கு எந்த ஆபத்தும் இல்லை. ஆனா காயங்கள் ஆறி வீட்டுக்குப் போனாலும் - தன்னிச்சையா அசைய முடியாமே ஒரு ஜடம் மாதிரி உட்கார்ந்துட்டிருக்க வேண்டியதுதான். இப்ப தலையிலும், தண்டு வடத்திலும் ரெண்டு மேஜர் ஆபரேஷன்களைப் பண்ண வேண்டியிருக்கு. இந்த மூச்சுத் திணறலை ஒரு கட்டுப்பாட்டுக்குக் கொண்டுட்டு வந்த பின்னாடிதான் ஆபரேஷனைப் பத்தி யோசிக்க முடியும்".

"டாக்டர்...! பிரபாவுக்கு உணர்ச்சிகள் திரும்பாதா?"

"வெளிநாட்டுக்குக் கூட்டிட்டுப் போய் ட்ரீட்மெண்ட் எடுத்தா ஒரு வேளை உணர்ச்சிகள் திரும்பலாம்... அதையும் நிச்சயமா சொல்ல முடியாது..."

ஹரிஹரேஷ் நகர்ந்துவிட - அம்மாவும் மகனும் ஒருத்தரையொருத்தர் திகைப்பாய் பார்த்துக் கொண்டார்கள்.

"என்னடா... டாக்டர் இப்படிச் சொல்லிட்டுப் போறார்?"

"சுரேஷ் தன் தலையை இரண்டு கைகளாலும் பற்றிக் கொண்டு அங்கிருந்த பெஞ்சில் உட்கார்ந்தான்.

ஹரிஹரேஷைக் காரில் ஏற்றி அனுப்பிவிட்டு - ஹாஸ்பிடல் டாக்டர் உள்ளே வந்தார்.

"சுரேஷ்! நீங்க போய் ரெஸ்ட் எடுத்துக்கங்க. அம்மா வேணும்ன்னா பிரபா பக்கத்துல இருக்கட்டும்..."

"நோ... டாக்டர்... என் பிரபா இப்படி இருக்கும்போது எனக்கென்ன ரெஸ்ட் வேண்டியிருக்கு...? நானும் அம்மாவும் கண்விழிச்சு பிரபாவை பார்த்துக்கிறோம்..."

"உங்க இஷ்டம்... ஏதாவது உதவி வேணும்ன்னா ஸ்டாஃப் நர்ஸைக் கூப்பிட்டுக் கேளுங்க... நான் காலையிலே வந்து பார்க்கிறேன்... டாக்டர் ஹரிஹரேஷ் சொன்னதை நினைச்சுட்டு - மனசைப் போட்டுக் குழப்பிக்க வேண்டாம். பை காட்ஸ் க்ரேஸ் எந்த அற்புதமும் நடக்கலாம்... பி... கம்ஃபர்டபிள்..."

டாக்டர் கிளம்பிவிட்டார்.

சுரேஷும் திலகமும் பிரபா இருந்த அறைக்குள் நுழைந்தார்கள். ஆக்ஸிஜனை உள்ளே இழுத்து - பெரிது பெரிதாய் சுவாசித்துக் கொண்டிருந்தாள் பிரபா. மார்புப் பகுதி 'திடும் திடும்' என்று தூக்கிப் போட்டது. இருவரும் ஸ்டூல்களை எடுத்துப் போட்டுக்கொண்டு பக்கத்துக்கு ஒருவராய் உட்கார்ந்தார்கள்.

நள்ளிரவு ஒரு மணி.

ஹாஸ்பிடல் அமைதியில் உறைந்து போயிருக்க சுரேஷும் திலகமும் தூக்கம் கெட்ட கண்களோடு - மூச்சிறைத்துக் கொண்டிருந்த பிரபாவையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஸ்டாஃப் நர்ஸ் ஒருத்தி அவ்வப்போது வந்து - நாடித் துடிப்பையும் இருதயத் துடிப்பையும் சோதித்து சார்ஜ் ஷீட்டில் எழுதிக் கொண்டிருந்தாள்.

ஒன்றரை மணி சுமாருக்கு அவள் வந்துவிட்டுப் போன பிறகு - திலகம் மகனை ஏறிட்டாள்.

"சுரேஷ்! என் மனசுல இருக்கிற ஒண்ணைச் சொல்றேன். நீ கோபிச்சுக்கக் கூடாது..."

"சொல்லும்மா..."

"பிரபா குணமாகி வீட்டுக்கு வந்தாலும் அவ ஒரு ஜடம் மாதிரிதான் வீட்ல உட்கார்ந்திருப்பான்னு டாக்டர் தீர்மானமா சொல்லிட்டார். இந்த நிலைமையில..."

"சொல்லும்மா..."

"அவ உயிரோடு இருக்கணுமா...?"

சுரேஷ் திலகத்தையே பார்த்தான்.

"என்னடா பார்க்கறே...?"

"நான் மனசுல எதைப் பத்தி நினைச்சுட்டு இருக்கேனோ... அதைத் தாம்மா நீயும் சொல்றே... கடந்த ஒரு மணி நேரமா என் மனசுக்குள்ளே இந்தப் போராட்டம்தான்... உன் கிட்டே சொன்னா நீ என்ன சொல்லுவியோன்னு பயந்துகிட்டு கம்னு இருந்தேன்..."

திலகம் மலர்ந்தாள்.

"அப்படீன்னா... காரியத்தை முடிச்சுடு... பிராண வாயு போயிட்டிருக்கிற ரப்பர் ட்யூப்பைப் பெருவிரலாலே ஒரு நிமிஷ நேரத்துக்கு அமுத்திப் பிடிச்சாப் போதும்... பிரபா உயிரை விட்டுடுவா... இவளோட அப்பாவும் அம்மாவும் மதுரையிலிருந்து புறப்பட்டு வர்றதுக்குள்ளே காரியத்தை முடிக்கணும். அவங்க வந்து பொண்ணுக்குப் பக்கத்துல உட்கார்ந்துட்டாங்கன்னா... அப்புறம் இந்தாண்டை அந்தாண்டை நகர மாட்டாங்க..."

"சரி... நீ போய் கதவுப் பக்கமா நின்னு நர்ஸ் வர்றாளா இல்லையான்னு பார்த்துக்கம்மா... நான் இவ மூச்சை நிறுத்திடறேன்..."

திலகம் எழுந்து போய் - அறைக் கதவுப் பக்கமாய் நின்று வராந்தாவை எட்டிப் பார்த்தாள். வராந்தா துடைத்த மாதிரி இருந்தது.

சுரேஷுக்கு சைகை காட்ட அவன் - எழுந்து - ஆக்ஸிஜன் சிலிண்டர் பக்கமாய் போய் - பிரபாவின் நாசிக்குப் போகிற ரப்பர் குழாயைத் தன் ஆட்காட்டிப் பெருவிரல்களால் இறுக்கிப் பிடித்தான்.

அந்தக் கணமே -

பிரபா திணற ஆரம்பித்தாள்.

வாய் பிளந்து - தொண்டைக்குள்ளிருந்து - 'சக்... சக்' என்ற சத்தம். சுரேஷ் ரப்பர் ட்யூப்பை இன்னமும் அமுத்திப் பிடிக்க - பிரபாவின் உடம்பு வெட்டிக் கொண்டது.

அதற்குப்பின் நிசப்தம்.

வேக வேகமாய் - திலகம் உள்ளே வந்தாள்.



"என்ன சுரேஷ்... முடிஞ்சுதா...?"

"ம்... ஆச்சு...! நீ அழுதுட்டிரும்மா - நான் போய் ஸ்டாஃப் நர்ஸைக் கூட்டிகிட்டு வர்றேன்..."

வராந்தாவில் ஓட்டமும் நடையுமாய்ப் போய் - ஸ்டாஃப் நர்ஸைக் கூட்டிக் கொண்டு வர - அவள் பதறினாள்.

"என்னாச்சு...?"

திலகம் மாய்மாலமாய் அழுது புலம்பினாள். "நான் என்னத்தையடிம்மா சொல்வேன்... திடீர்ன்னு விக்கினா... உடம்பு ரெண்டு தடவை தூக்கிப் போட்டுச்சு... அவ்வளவுதான்...! என் ராஜாத்தி... என்னைக்கு முழிப்பா பேசுவான்னு ஆசையா காத்திட்டிருந்தேன்..."

ஸ்டாஃப் நர்ஸ் பிரபாவை சோதித்துப் பார்த்துவிட்டு உதட்டைப் பிதுக்கினாள். "இறந்துட்டாங்க... டாக்டருக்கு போன் பண்ணிட்டு வர்றேன்..."

அவள் நகர - அம்மாக்காரியும் மகனும் சின்னச் சின்ன சந்தோஷப் புன்னகைகளோடு பார்த்துக் கொண்டார்கள்.

பிரபா போட்டோவாய் மாறி ரோஜா மாலைக்குள் இருந்தாள். மூன்றுமாதம் கரைந்து போய் இருந்தது.

அன்றைக்குக் காலை பத்து மணி.

ஆபீஸுக்குப் புறப்பட்டுப் போக - ஸ்கூட்டரை உதைத்துக் கொண்டிருந்த சுரேஷுக்குப் பக்கத்தில் வந்து நின்றாள் திலகம்.

"டேய் சுரேஷ்..."

"என்னம்மா...?"

"இன்னிக்கு சனிக்கிழமை.. அறை நாள்தானே ஆபீஸ்?"

"ஆமா..."

"மத்தியானம் உனக்கு எங்கேயும் போக வேண்டிய வேலை இல்லையே?"

"இல்லை... ஏன்...?"

"மத்தியானம் மூணு மணிக்கு மேல் ஓர் இடத்துக்குப் பெண் பார்க்கப் போறோம்..."

"என்னம்மா... திடீர்ன்னு...? பிரபா செத்து மூணு மாசம்தானே ஆச்சு...? இன்னும் ஒரு மூணு மாசம் போகட்டுமே..."

"இப்ப வந்திருக்கிறது நல்ல சம்பந்தம் சுரேஷ். கொஞ்சம் பெரிய இடம் கூட. பொண்ணு கறுப்பாயிருந்தாலும் லட்சணமா இருக்காளாம். அவங்களா பிரியப்பட்டு புரோக்கர் கிட்ட சொல்லிவிட்டிருக்காங்க..."

"சரி.. வந்துடறேன்..."

ஸ்கூட்டரைக் கிளப்பினான் சுரேஷ்.

மனசின் மையத்துக்கு பிரபா வந்து நின்றாள். பிரபா செத்து விளையாட்டுப்போல் மூன்று மாதம் ஓடி விட்டது. நல்லவேளை பிரபா செத்துப் போனதில் யாருக்கும் எந்த சந்தேகமும் விரவில்லை.

ஸ்கூட்டரை விரட்டினான்.

காந்திபுரத்தைக் கடந்து - 'டாட்டா பேட்' எச்ஸன் நுழையும் போது எல்.ஐ.ஸி. கட்டடம் பார்வைக்குப் பட - ஸ்கூட்டரின் வேகத்தைக் குறைத்தான் சுரேஷ்.

'பிரபாவின் இன்ஷூரன்ஸ் பணம் ஐம்பதாயிரம் எப்போது கிடைக்கும்? டிவிஷனல் மானேஜரைப் பார்த்துப் பேசிவிட்டுப் போய்விடலாம். இதற்காக ஒருமுறை தனியாய் வந்து கொண்டிருக்க முடியாது...'

ரோடோர பார்க்கிங்கில் ஸ்கூட்டரை நிறுத்திவிட்டு - கட்டடத்துக்குள் நுழைந்தான் சுரேஷ்.

கட்டடம் அமைதியாக இருந்தது.

'இன்றைக்கு லீவா...? இருக்காதே...! பன்னிரண்டு மணிவரைக்கும் அலுவலகம் இருக்குமே...?

க்ரௌண்ட் ஃப்ளோரின் வரவேற்பறைக்குள் நுழைந்தான். கௌண்ட்டர் வெறிச்சோடியிருந்தது.

'என்னாயிற்று...?'

சுற்றும் மற்றும் பார்த்தான்.

யாரும் தட்டுப்படவில்லை.

லிஃப்ட்டுக்கு வந்தான். பட்டனை அழுத்த, கதவு திறந்து வழிவிட உள்ளே போனான். கதவு மூடிக் கொள்ள - மூன்றாவது மாடிக்குரிய பொத்தானைத் தட்டினான். லிஃப்ட் மேலே உயர்ந்தது.

அதே விநாடிகளில் -

கட்டடத்தின் பின்பக்க அறைகளைப் பூட்டிக்கொண்டு சாவிக்கொத்தோடு முன்பக்கம் வந்தான். மெயின் ஸ்விட்ச் போர்டை நெருங்கி - அதன் விசையை அழுத்தி ஆஃப் செய்து - ஷட்டரைக் கீழே இழுத்து மூடினான்.

உள்ளே வந்த ஒரு நபர் கேட்டார்.

'ஸ்ட்ரைக் எப்ப முடியும்... பொன்னுசாமி...?'

"யாருக்குத் தெரியும்...? நேத்திக்கு மத்தியானம் திடீர்ன்னு ஆரம்பிச்சாங்க... ஒட்டு மொத்த லீவ். பேச்சு வார்த்தை நடந்துட்டிருக்கு... எப்ப முடியுமோ தெரியலை..."

"பூட்டிட்டு வீட்டுக்குக் கிளம்பிட்டே போலிருக்கு?"

"வேற வழி...? அஞ்சு மாடிக்குப் போய் ஜன்னலையெல்லாம் சாத்திட்டு - பின்பக்கம் போய் - ரிஜிஸ்டர் ஸ்டாக் குடோனையெல்லாம் சாத்திட்டு முன் பக்கம் வர்றதுக்குள்ளே உடம்பு கழண்டு போச்சு... இன்னிக்கும் நாளைக்கும் லீவு. ஈரோட்டுக்குப் போய் பொண்ணைப் பார்த்துட்டு வரலாம்ன்னு இருக்கேன்".

"போய்ட்டு வா..."

ஷட்டரை இழுத்து - தரையோடு சேர்த்து அடித்து - பெரிய பூட்டாய் பூட்டினான் வாட்ச்மேன் பொன்னுசாமி.

"'எல்.ஐ.ஸி. ஸ்ட்ரைக்'ன்னு ஒரு போர்டு எழுதி முன்னாடி வெக்கலாமில்லையா...?"

"போர்டு எழுதி வெச்சிருக்கு. அதோ... பாரு..."

"அது கொஞ்சம் மறைவா இருக்கு... 'பளிச்'ன்னு தெரியற மாதிரி கேட்டுக்கு முன்னாடி வெக்கலாமில்லையா?"

"போறப்ப வெச்சுட்டுப் போலாம்..."

மேலே ஏறிக்கொண்டிருந்த லிஃப்ட் 'கட்டக்' என்ற சத்தத்தோடு நின்று போக சுரேஷ் திடுக்கிட்டான்.

புரிந்தது.

மின்சாரம் இல்லை.

எப்படியும் மின்சாரம் வந்துவிடும் என்று இரண்டு நிமிஷம் காத்திருந்தான்.

வராமல் போகவே -

வியர்த்தான்.

இரண்டு கைகளாலும் - லிஃப்ட்டின் கனமான கதவைத் தட்டினான். பெரிய குரல் எடுத்து கத்தினான். "ஹெல்ப்... ஹெல்ப்..."

வெளியே நிசப்தம்.

மறுபடியும் தட்டினான்.

கைகள் எரிந்தது.

"ஹெல்ப்... ஹெல்ப்... நான் உள்ளே இருக்கேன்... நான் உள்ளே இருக்கேன்..."

வெளியே மௌனம்.

பயம் வயிற்றுக்குள் கெட்டியான ஒரு வஸ்து மாதிரி உருண்டது. வயிற்றை எக்கிக் குரல் கொடுத்தான்.

"ஹெல்ப்... ஹெல்ப்...."

விநாடிகள் நிமிஷங்களாக மாறிக் கரைய - அந்தச் சிறிய லிஃப்ட் காபினுக்குள் இருந்த காற்று மண்டலம் - ஆக்ஸிஜன் குறைவால் கொஞ்சம் கொஞ்சமாய் சூடேற ஆரம்பித்தது.

நுரையீரல்கள் வலிக்க - காற்றுக்காகத் தவிக்க ஆரம்பித்தான் சுரேஷ்.



# மூடிய கதவு

**சிபா**

கணேசன் செருப்புகளை அணிந்து கொண்ட பின், இரண்டு கால்களையும் தரையில் 'டப் டப்' என்று மோதிச் சப்தம் செய்தான். நான் ரெடி. நீ இன்னும் கிளம்பவில்லை என்று குற்றம் சாட்டும் அந்த ஒலிக் குறிப்புகளின் சேதி சந்திரகாந்தாவின் காதுகளை எட்டியதாகவே தெரியவில்லை. கதவுத் தாழ்ப்பாளை ஓசையுடன் திறந்தான். அதற்கும் பலனில்லை. கதவைச் சுவரில் மோதுகிற அளவிற்கு வேகமாகத் திறந்தான். அதுவும் கவனிக்கப்படவில்லை.

ஆத்திரம் அவன் முகத்தில் சிவப்பேற்றியது. என்ன திமிர் அவளுக்கு!

"ஏய்?" என்றான் குரலில் மிரட்டலைச் சேர்த்து. அவளைப் பெயர் சொல்லிக் கூப்பிட்டு வருடங்களாகி விட்டது. கூப்பிடுகிற அவசியமே இல்லாமல் அவன் முனைந்து பார்த்துக் கொண்டாலும் எப்போதாவது கூப்பிட்டுத் தொலைக்க வேண்டியிருக்கிறதே - அந்தச் சந்தர்ப்பத்தில் எல்லாம் இந்த 'ஏய்'தான். அந்த 'ஏய்'க்கும் ஏய்ப்புத்தான்.

செருப்புகளைக் கழற்றிய வேகத்தில் திசைக்கொன்றாகப் பறந்தன. விடுவிடுவென்று உள்ளறைக்குப் போனான். கதவை ஓங்கித் தள்ளித் திறந்தான்.

"என்னதான் நெனைச்சிட்டிருக்க உன் மனசில? கௌம்பறதுக்கு இஷ்டமில்லன்னா சொல்லிடு. நானாவது போய்ட்டே இருப்பேன்!"

சந்திரகாந்தா புடைவைத் தலைப்பால் ஒரு பிரேம் போட்ட புகைப்படத்தைத் துடைத்துக் கொண்டிருந்தாள். எதிர்க்கண்ணாடியில் அவனுடைய கோபமான பிம்பத்தைப் பார்க்கக் கூடிய வாய்ப்பு இருந்தும் பார்க்க முயற்சி செய்யவில்லை. போட்டோவைத் திருப்தியாகத் துடைத்தபின் அதை மேஜையில் சாய்த்து நிறுத்திப் பார்த்தாள்.

"வந்தவுடனே அவனை மயக்கறதுக்கு ஏற்பாடு ஆகிறதாக்கும்!" என்று அவன் கத்தியபோதும், அவள் திரும்பவில்லை. குனிந்து ஒற்றைக் கட்டிலின் அடியிலிருந்து அந்தப் பழைய டிரங்குப் பெட்டியை நாராச ஒலியுடன் வெளியே இழுத்தாள். செத்துப் போய் ஒட்டிக் கொண்டிருந்த இரண்டு கரப்பான்களைப் பேப்பரால் தள்ளினாள். மின்விசிறிக் காற்றில் தூசி பறக்கப் பெட்டியின் மூடியைத் திறந்தாள். பழைய துணிகள் அடைக்கப்பட்ட வாசனை அலாவுதீன் பூதம்போல விடுதலையாகி அந்த அறையை நிறைத்தது. சாயம் போன, பட்டன்கள் அற்ற சில சட்டைகள், அரை டிராயர்களை விலக்கி, பெட்டியின் ஆழத்திலிருந்து ஒரு பாலிதீன் கவர் எடுத்தாள். அதற்குள் நான்காய் மடிக்கப்பட்ட ஒரு காகிதம் மஞ்சள் வயதேறி மடிப்புகளில் உடைந்திருந்தது. அதை போட்டோவின் கீழே வைத்தாள்.

கணேசன் உள்ளே நுழைந்து காலால் பெட்டியின் மூடியை ஆத்திரத்துடன் உதைத்து மூடினான்.

முதன் முறையாக சந்திரகாந்தா திரும்பிப் பார்த்தாள். கண்களில் கனல்.

"எனக்காக நான் காத்திருக்கச் சொல்லலியே..." என்றாள். "வந்து சேர எனக்கு வழி தெரியும்..."

"உனக்கு வழி தெரியாதுன்னு யார் சொன்னது? அத்தனை தெருவும் அச்சடிச்ச மாதிரி தெரியும்னு எனக்கும் தெரியும்..." அவன் குரலில் எள்ளல் இருந்தது.

'ச்சீ போடா' என்பது போல அவனை அவள் ஒரு பார்வையால் நிராகரித்தாள். அவனுடைய ரத்தக் கொதிப்பைக் கூட்டுவதற்கென்றே கண்ணாடி எதிரில் நின்று தலையைக் கலைத்து மீண்டும் சீவ ஆரம்பித்தாள்.

"ஒரு நாள் இல்லாட்டா ஒரு நாள் இந்தத் திமிரு பாழுங் கிணத்துல கொண்டு போய் தள்ளப் போவுது..."

வீச்சு வீச்சு என்று வாசலை அடைந்து செருப்புகளைத் தேடி அணிந்து கதவை அறைந்து சாத்திவிட்டு அவன் தெருவில் இறங்கிய பிறகு, சந்திரகாந்தா பின்னலை முடித்தாள். பெட்டியைக் கட்டிலுக்கடியில் மறுபடி தள்ளிவிட்டு, ஹேண்ட் பேகை எடுத்துக் கொண்டு வாசலை நோக்கி நடந்தாள்.

வெளியே இறங்கியபோது, கணேசன் ஆட்டோ ஸ்டாண்டில் பேரம் பேசிக் கொண்டிருப்பது தென்பட்டது. அவன் ஆட்டோவில் ஏறும்வரை, பூட்டிக் கொண்டிருந்தாள். ஆட்டோ விலகியதும், அடுத்த ஆட்டோவை அவள் கூப்பிட்டாள்.

போலீஸ் ஸ்டேஷன் வாசலில் ஆட்டோவிலிருந்து இறங்கினாள். விறைப்பாக நின்று கொண்டிருந்த கான்ஸ்டபிள்கள் 'வாங்கம்மா' என்று புன்னகைத்தார்கள். சற்றே சாவகாசமாக வயிற்றைத் திறந்து காட்டிய புடைவையை சரி செய்து கொண்டு உள்ளே நுழைந்தாள்.

கணேசன் மரநாற்காலியில் கோபமாக உட்கார்ந்திருந்தான்.

"என்னய்யா இப்படி எழுதிப்புட்டான்? ஐ.ஜி. பெட்ரூம்லயே ஒளிஞ்சிருந்தானா இவங்க நிருபன்? தத்ரூபமா எழுதியிருக்கான்?" என்று ரைட்டரிடம் வாரப் பத்திரிகையின் சூடான பக்கத்தை வம்பளந்து கொண்டிருந்த இன்ஸ்பெக்டர் அவளை அரைக் கண்ணால் நிமிர்ந்து பார்த்தார்.

"என் பேரு சந்திரகாந்தா. ஜயந்தின் அம்மா..."

"சவுக்கெடுத்து விளாசப் போறாரு பாரு... அந்த நிருபனைக் கண்ட துண்டமா வெட்டிக் கடல்ல திமிங்கலத்துக்குத் தூக்கிப் போடப் போறாரு..."

"சார்... என்னை வரச்சொல்லியிருக்கீங்க..."

"சாதாரண இன்ஸ்பெக்டர் லஞ்சம் வாங்கினா ஜோக் எழுதுவானுங்க. ஐ.ஜி. அப்படி இப்படி இருந்தா பத்திரிகைல போட்டு நாறடிச்சுடறானுங்க. இந்த எடிட்டர் வீட்ல போய்ப் பாரு... நானும்"

"சார்..."

"என்னம்மா? என்றார், பொறுமையில்லாமல்.

சொன்னாள்.

"கொஞ்சம் நேரம் முன்னால கணபதின்னு ஒருத்தரு வந்தாரே..."

"கணேசன்" என்று திருத்தினான், கணேசன்.

"ஏம்மா இவர்தான் பையனோட அப்பனா?"

இன்ஸ்பெக்டரின் கேள்வியில் அடிக்குறிப்பாக இருந்த கீழ்த் தரத்தை உணர்ந்து கணேசன் கொதித்தான். சந்திரகாந்தா ரசித்தாள்.

"ஆமாம், சார்" என்றாள். 'இந்த ஒரு விஷயத்தில் நான்தானடா உனக்குச் சான்றிதழ் தரவேண்டும்' என்கிற திமிர்ப் பார்வையை கணேசனின் மீது வீசி.

"மாடிக்கு வாங்க..." என்றார் இன்ஸ்பெக்டர். படித்துக் கொண்டிருந்த புத்தகத்தை மேஜை டிராயரில் வைத்துச் சாத்தினார். "காப்பி சொல்லுய்யா" என்று ரைட்டருக்கு உத்தரவிட்டார். சுண்ணாம்பு உதிர்ந்து குற்றவாளிகள், நிரபராதிகள், காவலர்கள் அத்தனை பேருடைய வியர்வை அழுக்கையும் ததும்பாகச் சுமந்த மாடிப்படிகளில் ஏறிக் காற்றுக் குறைவாயிருந்த மாடிப் பகுதியை அடைந்தார்கள்.

பெஞ்சில் உட்கார்ந்து புத்தகம் படித்துக் கொண்டிருந்தவன் நிமிர்ந்தான்.

"ஜயந்த்!" என்றாள், சந்திரகாந்தா. பார்வை விகசித்தது. விழிப்பரப்புகள் விரிந்து அடங்கின. டீச்சரிடம் முதலில் தன் நோட் புத்தகத்தைக் காட்ட விரும்பும் மாணவன் போல, கணேசன் அவளைத் தாண்டிப் போய் அந்த இளைஞனின் கைகளைப் பற்றிக் கொண்டான்.

"ஜயந்த்! எப்படி இருக்கே? எவ்வளவு மாறிட்டே..."

ஜயந்த் கைகளை உருவிக் கொண்டு எழுந்து நின்றான்.

அப்பா, எப்படி வளர்ந்து விட்டான்! ஆறடிக்குக் குறையாமல் இருப்பான். மூக்கில் இரண்டும், கன்னத்தில் மூன்றும் பருக்கள். அடர்த்தியில்லாத இளமீசை. காதுகளுக்குப் பக்கத்தில் முடித் தீற்றல். தீரணமானதெல்லாம் உயரத்திற்கே உபயோகமாகி விட்டதைப் போல, சதைப் பற்று இல்லாத உடம்பு. போட்டிருந்த டீ ஷர்ட் இடுப்புக்கு மேலேயே நின்றுவிட்டது. சாயம் போன பேண்ட்டின் நுனியில் நூல்கள் பிரிபிரியாகத் தொங்கின. செருப்புகள் காகிதங்கள் அளவிற்குத் தேய்ந்திருந்தன.

"வீட்டுக்குப் போலாம், வாடா..." என்றான், கணேசன்.

ஜயந்த் சற்று மிரண்ட பார்வையுடன் சந்திரகாந்தாவையும் பார்த்தான்.

"போலாம், வா, ஜயந்த்" என்றாள், அவள் புன்னகையை அகலமாக்கி.

"என்னப்பா தம்பி, இவங்கதான் உன் அப்பா அம்மாவா?"

'ஆமாம்' என்று அவன் வெறுமனே தலையை அசைத்தான்.

"பேப்பர்லலாம் கையெழுத்துப் போடணும் சார்" என்றார் இன்ஸ்பெக்டர்.

"யார், நான்தானே?" என்று கணேசன் மதர்ப்பாகக் கேட்டான்.

"சார், நானும் எம்ப்ளாய்டு..." என்றாள், சந்திரகாந்தா.

"சார் போடட்டும்மா..." இன்ஸ்பெக்டர் அவர்களுடைய குழப்பத்தில் தலையிட விரும்பாதவராகி, அவரே முடிவு செய்தது போல இருந்தது.

ஜயந்தின் ஒற்றை ஜோல்னாப் பையை சந்திரகாந்தா பாய்ந்து எடுத்துத் தன் தோளில் மாட்டிக் கொண்டாள்.

அவனை மிரளச் செய்ய வேண்டாம் என்றோ என்னவோ இப்போது ஒரே ஆட்டோவில் மூவரும் பயணம் செய்தனர்.

ஜயந்த் வீட்டை ஒரு பிரமிப்போடு பார்த்தான்.

"போய்க் குளிச்சிட்டு வா, செல்லம்... உனக்குப் பிடிச்ச பால் பொங்கல், லெமன் சேவை, வெங்காய வடை எல்லாம் பண்ணியிருக்கேன்" என்று அவன் கையில் திணிக்கப்பட்ட சோப்புக்கட்டியை வெறித்தான்.

"என்னடா ஒரு வார்த்தை கூடப் பேச மாட்டேங்கறே?"

"இல்லப்பா..." என்றபோது ஜயந்தின் குரல் கரகரத்தது. எப்படி மெல்லிசாய் எலிக் கூச்சல் போல இருந்த ஆறு வயசுக்குரல் பதினைந்து வயதில் உடைந்து விரிசல் விட்டு விட்டது!

"மொதல்ல போய்க் குளிச்சிட்டு வா... அப்புறம் சாவகாசமாப் பேசிக்கலாம்..." என்று அவனைக் கிட்டத்தட்ட பாத்ரூமிற்குத் தள்ளிக் கொண்டு போனாள், சந்திரகாந்தா. அவளை அம்மா என்று உணர முடியாமல் ஒரு நடுத்தர வயதுப் பெண்மணி என்ற நிலையில் வைத்துப் பார்த்தவன் போல ஜயந்த் ஒரு கூச்சத்துடன் அவள் ஸ்பரிஸத்திலிருந்து குறுகினான்.

திடீரென்று போன் ஒலித்தது. சந்திரகாந்தா எடுத்தாள். காதில் வைத்துக் கேட்டு விட்டுப் பதில் சொல்லாமல் ரிசீவரை மல்லாத்தினாள். 'போன்' என்றாள், கணேசன் இருந்த திசையைப் பார்த்து.

அவன் வந்தான். பேசினான்.

"இன்னிக்கு வேணாம், சார்... என் பையன் வந்திருக்கான். ஆமாம்... ஜயந்த்தான். ஒம்போது வருஷம் கழிச்சு கெடைச்சிருக்கான். அதெல்லாம் இன்னும் அவன்கூடப் பேசலை சார்... நாளைக்கு வரேனே சார்... அப்படியா சார்? சரி வரேன். ஆனா டிலே பண்ணாம சீக்கிரம் அனுப்பிடணும்..." என்று சற்றுக் கோபத்துடன் ரிசீவரை அறைந்து சாத்தினான்.

பாத்ரூம் கதவைத் தட்டி, "ஜயந்த் - ஆபீஸ்ல எவனோ ஆடிட்டர் வந்து கணக்கெல்லாம் நோண்டிட்டிருக்கானாம். ஒரு பாயின்ட்ல சிக்கலாம். நான் போயே ஆகணும். ஓர் அரை மணி நேரத்துல வந்துர்றேன்..." என்று குரல் கொடுத்துவிட்டுக் கசப்புடன் வெளியேறினான்.

காட்சியமைப்பிலிருந்து அவன் விலகிப் போனதே அவளுக்குப் பெரும் மகிழ்ச்சியைத் தருவதுபோல் சந்திரகாந்தாவின் முகம் மலர்ந்து போனது.

ஆறு வயதில் சோப் தேய்த்துக் கொள்ளக்கூடத் தெரியாமல் அவள் இல்லாமல் கழுவிக் கொள்ளக் கூடத் தெரியாமல் கூச்சலிட்ட ஜயந்த் இப்போது அவளைப் போல இரண்டு மடங்கு வளர்ந்திருந்தது அவளுக்குத் திடுக்கிடலான ஆச்சரியமாயிருந்தது.

ஜயந்த் வெளியே வந்தான். அவளைப் பார்த்ததும் கூச்சத்துடன் டவலால் மார்பை மூடிக் கொண்டான். சாப்பாடு பரிமாறியபோது அவளது கேள்விகளுக்கு 'ம், ம்ஹூம், ஊம்ஹூம்' என்று ஒலிக் குறிப்புகளாக மட்டுமே பதில் சொன்னான். சாப்பாடு முடிந்தது.

நாற்காலியில் பொருந்தாமல் உட்கார்ந்திருந்தவனுக்குப் பக்கத்தில் அவள் உட்கார்ந்தாள். அவனுடைய கைகளை வாஞ்சையுடன் தடவிக் கொடுத்தாள். மையிட்டிருந்த கண்களில் கண்ணீர் கரையிட்டது.

"எங்கே போயிட்டே ஜயந்த்?"

"எங்கெங்கியோ..." அவனுடைய விரல்கள் நீளமாயிருந்தன. எலும்புகளை உணர முடிந்தது. "ரயிலேறி பெங்களூர் போயிட்டேன்... பாதை புரியலை... ஒரு டீச்சர் என்னைப் பாத்தாங்க. விசாரிச்சாங்க... எனக்கு அப்பா, அம்மா கெடையாதுன்னு சொன்னேன். தன் வீட்டுக்கு அழைச்சிட்டுப் போனாங்க..."

"ஏண்டா அப்படிச் சொன்னே?"

"என்னவோ தோணுச்சு..." என்றான் அவள் கண்களைப் பார்க்காமல். "ஒரு ஸ்கூல்ல சேர்த்துவிட்டாங்க... அஞ்சு மணிக்கு எழுந்திருப்போம்.



ரூமெல்லாம் சுத்தம் பண்ணனும். பிரேயர் சொல்லணும், படிக்கனும், கார்ப்பென்ட்டரி ஒர்க் பண்ணனும், நம்ம துணியை நாமே துவைச்சுக்கணும்... மியூசிக் கிளாஸ் இருந்துச்சு... கிதார் வாசிக்கக் கத்துக்கிட்டேன். நல்லா வாசிக்கறேன்னு எல்லாருமே சொன்னாங்க... ஸ்கூல் டே அன்னிக்கு நான் வாசிச்சது பாத்து ஜட்ஜா வந்திருந்தவரு தனியாக் கூட்டிட்டுப் போனாரு... அவருக்குத் தெரிஞ்ச ஒரு ஹோட்டல்ல என்னை கிடாரிஸ்ட்டா சேத்து விட்டாரு..."

"கேபரேயா?" என்றாள் சந்திரகாந்தா, குறுக்கில் புகுந்து.

அவன் அதற்குப் பதில் சொல்லாமல், "மெட்ராஸ் போனா சினிமால வாசிக்க சான்ஸ் கெடைக்கும்னு யாரோ சொன்னாங்க... நம்பி வந்தேன். கைல இருந்த காசு கரைஞ்சு போச்சு. சான்ஸ் கெடைக்கலை... எடுத்திட்டு வந்திருந்த கிதாரையும் வித்துட்டேன்".

"எத்தனை நாள் ஆச்சு நீ மெட்ராஸ் வந்து?"

"மூணு மாசம்".

"மூணு மாசத்துல ஒரு நாள்கூட எங்களை வந்து பாக்கணும்னு உனக்குத் தோணலை?"

அவன் தலை குனிந்து கொண்டான் - அவள் முகத்தைப் பார்க்காமல்.

"லாட்ஜ்காரங்க வாடகை தரலைன்னு உன்னைப் போலீஸ்ல பிடிச்சுக் கொடுக்கலைன்னா, இப்பக்கூட எங்க பேரை சொல்லியிருக்கமாட்டே இல்ல? வா என்கூட" என்று தரதரவென்று அவன் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு தன் அறைக்குப் போனாள். "பாரு.. நீ எழுதி வச்சிட்டுப் போன லெட்டரைக் கூட இன்னும் பத்திரமா வச்சிருக்கேன்..."

அவனுடைய சின்ன வயது போட்டோ. அதற்குக் கீழேயிருந்து, அந்த பாலிதீன் கவரை நடுங்கும் விரல்களால் எடுத்துப் பிரித்தான். உடைந்திருந்த காகிதத்தை இரண்டு கைகளிலும் ஏந்திப் படித்தான். தமிழ்கூடக் கைவராத வயது.

Dear அம்மா,

நான் விட்டை வீட்டுப் போரேன். நீயும் அப்பாவும் சன்டை போடுங்கல். எனக்கு உங்களைப் பிடிக்க வில்லை.

—ஜயந்த்

அவன் காணாமல் போனபிறகு பேப்பரில் போட்டோவுடன் கொடுத்த விளம்பரங்கள் பார்த்து சினிமாவில் வருவது போல உடனே யாரும்

அவனைத் துரத்தி மடக்கவில்லை. போலீஸ் அக்கம் பக்கத்தில் கொஞ்சம் தேடிப் பார்த்து விட்டு ஃபைலை அலமாரியில் வைத்துப் பூட்டி விட்டு அமைச்சர்களின் பந்தோபஸ்திற்குப் போய்விட்டது.

"அப்பாவும் நீயும் இன்னும் முகம் கொடுத்துப் பேசிக்கறதில்லையா?" என்று திடுதிப்பென்று அவன் கேட்டான்.

"அந்த ஆளு கிட்ட யாரு பேசு வாங்க?" இத்தனை நாளு எல்லாத் தையும் பொறுத்திட்டிருந்தேன். இப்ப நீ வந்துட்டே... இனிமேலும் நான் அந்தாளை சகிச்சுக்கத் தேவை யில்லை..."

"அப்பா மாறலையா?"

"எங்கே மாறினாரு? தாலி கட்டின பொண்டாட்டி கிட்ட பேசற பேச்சா பேசுவாரு? பேரைப் பாரு சந்திர காந்தான்னு தாசிக்கு வக்கற பேரை வச்சுக்கிட்டும்பாரு... நல்ல புடைவை கட்டுனா, கொஞ்சம் பளிச்னு மேக்கப் போட்டா, யாரை மயக்கறதுக்கு இந்த வேஷம்னு கத்துவாரு. நான் சம்பாதிக் கிறது அவரை அவமானப் படுத் தறதுக்காகன்னு நெனைச்சுக்கிட்டு குதிப்பாரு... எல்லாத்தையும் விட் டொழிச்சிட்டு. அவர் காலடில உக்காந்து அவர் பிச்சை போடற சோற்றை நக்கித் திங்கணும்னு எதிர் பார்க்கறாரு... ஆம்பிளைன்ற திமிரு..."

"அவ்வளவு மோசமா இருந்தா அப்புறமும் ஏன் இத்தனை நாள் அட்ஜஸ்ட் பண்ணிக்கிட்டே?"

"டைவர்ஸ் கிடைக்கும். எந்த ஜட்ஜா இருந்தாலும் உங்கப்பா மூஞ்சியைப் பாத்தாலே உடனே கொடுத்திரு வாரு... சம்பாதிக்கறேன், என் கால்ல நிக்க முடியும்... ஆனா தனியா ஒரு பொம்பள இந்தச் சமூகத்துல வாழ முடியாது ஜயந்த். இன்னொரு கல்யாணம் பண்ணிக்க மனசும் இல்ல, வயசும் இல்ல... தாலி கட்டின பாவத்துக்கு இதே வீட்டுல இருக் கேன். அந்தாளு தனியா இருந்தா ஹோட்டல்ல சாப்புடணும், அதுக்குப் பதிலா இங்க சாப்புடறாரு... ஆம்பிளை, பொம்பிளை ரெண்டு பேரும் தங்கியிருக்கற ஹாஸ்டல் மாதிரின்னு வச்சுக்கவேன்... இனிமே இது வேணாம்..."

"என்ன செய்வே?"

"துணைக்கு நீ இருக்கே... நாம தனியாப் போயிடலாம்".

"அப்பா?"

"சமைக்கக் கத்துக்கட்டும்... இல் லாட்டி ஹோட்டல்ல காசு கொடுத்து சாப்டுக்கட்டும்... லாண்டிரில போட்டா துணி துவைச்சுத் தரான்...




அந்தாளுக்கு இனிமே பொங்கிப் போடறதுக்கு எனக்கு இஷ்டமில்ல... நல்ல வக்கீலாப் பாத்து விவாகரத் துக்கு ஏற்பாடு பண்ணிடலாம்... சொல்லு ஜயந்த். கடைசி வரைக்கும் எனக்கு நீயாவது துணைக்கு இருப்பியா?"

"ம்" என்றான், முனகலாக. "எனக்குத் தூக்கம் வருது".

"படு... கொஞ்சம் ரெஸ்ட் எடுத் துக்க... வந்ததும் வராததுமா உன் மனசுல பாரத்தை ஏத்திட்டேன்... ஸாரி..."

விளக்குகளை அணைத்த பின்ன ரும், தூக்கம் அவனுக்குப் போக்குக் காட்டிக் கொண்டிருந்தது. தலை யணை கனத்தது. நகர்த்திவிட்டுக் கையை முட்டுக் கொடுத்து ஒருக் களித்துப் படுத்தான்.

கதவு திறந்தது. "ஜயந்த்" என்று மெல்லிசான குரல் கேட்டது. கணேசன். கதவைச் சாத்திவிட்டு வந்து பக்கத்தில் உட்கார்ந்தான்.

"தூங்கிட்டியா? உடனே பேச முடியாம ஓடிட்டேன்... எம்மேல கோபமா?"

"இல்ல..." ஜயந்த் எழுந்து உட் கார்ந்தான்.

"எப்படியிருந்த கண்ணா? எங் கெல்லாம் போயிருந்தே?"

ஜயந்த், கணேசனின் வெப்பமான கையைத் தன் மீதிருந்து விலக்கினான். சந்திரகாந்தாவிடம் சொன்னதையெல் லாம் கணேசனுக்காக இன்னொரு தடவை ஒப்புவித்தான்.

"நல்ல வேளை, இப்பவாச்சும் எங்க ஞாபகம் வந்திச்சே!" என்றான் கணேசன். "ஒம்போது வருஷம் பிரிந் திருந்த மகன் போலீஸ் ஸ்டேஷன்ல உக்காந்திருக்கான்னு தெரிஞ்சதும் ஓர் அம்மா எப்படிப் பதறிப் போகணும்? உங்கம்மா நிதானமா லிப்ஸ்டிக் தீட்டிக்கிட்டிருந்தா... திமிரு... என்னவோ தன் அழகைப் பாத்துட்டா, ஊரே ஸ்தம்பிச்சு நின்னுடும், அத்தனை பேரும் சலாம் போட்டுக் காரியத்தைப் பண்ணிக் கொடுப்பாங்கன்னு நெனைப்பு... அவ நம்மகூட இருந்தா உன் எதிர்காலம் பாழாயிடும்... உன் மனசைக் கலைச் சுருவா... உன்னை உருப்பட விட மாட்டா... நான் உனக்காக என்னென் னவோ யோசிச்சு வச்சிருக்கேன். சீட்டுக் கம்பெனியோட உள் விவ காரம், வெளி விவகாரம் எல்லாம் எனக்கு இப்ப அத்துப்படி. எனக்கு மட்டும் ஸப்போர்ட்டுக்கு ஓர் ஆள் இருந்தா, புதுசா நானே ஒரு கம்பெனி ஆரம்பிக்க முடியும்... நீ வந்துட்டே. இன்னொருத்தன் முன்னால தலை குனிஞ்சு கையெழுத்துப் போட்டுச் சம்பளம் வாங்கற நிலைமை நமக்கு வேணாம். ஒகோன்னு கம்பெனியை நாம வளர்த்துக் காட்டுவோம்... நீ இருக்கற தெம்பு ஒண்ணு போதும் எனக்கு..."

"அம்மா?"

"அந்த ராட்சஸிகூட யாரு இருப்பா? ஐந்நூறோ, ஆயிரமோ ஜீவனாம்சத்தை மூஞ்சில தூக்கி எறிஞ்சுரலாம்... டைவர்ஸ் வாங்கிட றேன், நான்... ஆனா ஒண்ணு..."

"என்ன?"

"கடைசி வரைக்கும் நீ எனக்கு ஸப்போர்ட்டா இருப்பியா ஜயந்த்?"

"ம்..." என்றான். கணேசன் கொடுத்த முத்தம் கன்னத்தை ஈரமாக்கியது.

பொழுது விடிந்தது.

காப்பிக் கோப்பையுடன் அந்த அறையில் நுழைந்த சந்திரகாந்தா அதிர்ந்தாள். ஜயந்தைக் காண வில்லை. அவன் தோளில் தொங் கிய துணிப்பையும் காணவில்லை. அதற்குப் பதிலாக –

ஒன்பது வருஷங்களுக்கு முன்பு எழுதப்பட்ட அதே சிதைந்த காகிதத் தில் இரண்டு வரிகள் எழுதப் பட்டிருந்தன.

இந்த ஹாஸ்டலில் இருக்கும் பெண்ணிற்கும், ஆணிற்கும் —நான் போகிறேன். தேடவேண்டாம். துரத்த வேண்டாம்.

—ஜயந்த்.

இந்த முறை தமிழில் எழுத்துப் பிழைகள் இல்லை.

# ஆயிரம் ரூபாய் கடன்

சோமலதா உட்கார்ந்திருக்கும் கணவனிடம் நடந்தாள். பழக்கக் காலடி அரவம் கேட்டுத் திரும்பி னான் கவிராஜன்.

"என்னங்க!"

"ம். சொல்லு..."

"தீபாவளிக்கு இன்னும் ஒரு மாசம்தான் இருக்குது. புள்ளைங் களுக்கும் நமக்கும் துணிமணி எடுக் கல. என்ன செய்யப் போறீங்க?"

"என்ன பண்றது? பதினஞ்சு வருஷமா வச்சிருந்த இரும்பு சாமான் கடையை ஹைவேஸ்காரன்க வந்து இடிச்சுத் தள்ளிட்டுப் போய்ட்டான்க. பொழைப்பே அந்தரத்ல நிக்குது. இதுல தீபாளிக் கொண்டாட்டம் தேவையா?"

"நமக்கு வேணாம், சரி. நம்ம குழந்தைகளுக்காவது துணிமணி எடுக் கணுமில்ல?"

"இப்ப என்னை நம்பி எவன் கடன் தருவான் லதா?"

"கடன் வாங்க வேணாம். வேற வழி இருக்குங்க..."

"என்ன வழி?"

"பரண் மேலே ஏராளமா சாமான் கள் கிடக்கு – கண்டதும் கழியதும். எல்லாத்தையும் ஒழிச்சா ஓரளவுக்குப் பணம் கிடைக்கும். பரணும் சுத்த மாகும்..."

கவிராஜன் சற்றே தயங்கினான். பின் ஆமோதிப்பாய் தலையாட்டி னான். அடுத்த ஒரு மணி நேரத்தில் பரண்மேல் மர ஏணி சாத்தி எல்லா வற்றையும் கீழிறக்கினான்.

இறங்கிய சாமான்களில் ஒரு கனத்த தஸ்தாவேஜ் பார்வையைக் கவர்ந்தது. எடுத்தான். கட்டைத் தரை யில் மொத்தி தூசியை விரட்டினான். அறைக்குள் சுழன்ற தூசி தும்மலைக் கிளப்பியது. தொடர்ந்து நான்கு முறை தும்மியவன் அந்த காகிதக் கட்டைப் பிரித்தான். சில சம்பந்தமில்லாத பேப்பர்கள் அசுவராசியம் கிளப்பின. தொடர்ந்து புரட்டிக் கொண்டே வந் தவன் ஒரு குறிப்பிட்ட பத்திரத்தில் நிலைத்தான். அதில் பிரிட்டிஷ் முத் திரை காணப்பட்டது.

பத்திரத்திலுள்ள தமிழ் வார்த் தைகள் விசித்திரமாய் இருந்தன. பிரம்மப் பிரயத்தனமாய் அர்த்தம் பண்ணிக்கொண்டான்.

கவிராஜனின் தாத்தா லக்ஷ்மண செட்டியார் 10.10.1931 அன்று ஆர். வெங்கடேச பிள்ளை என்பவருக்கு ரூபாய் ஆயிரம் கடன் கொடுத்திருந் தார். கடனுக்கு வட்டிவிகிதம் – கூட்டு வட்டி 12 சதவீதம் எனக் குறிப்பிடப் பட்டிருந்தது.

படித்தவன் மனைவியிடம் திரும்பி விஷயத்தைக் கூறினான்.

"தொண்ணூத்தி மூணுல முப்பத்தி ஒண்ணு போச்சுன்னா – அறுபத் திரண்டு வருஷமாகுது. இத்னி வருஷ மாவா உங்க தாத்தா குடுத்த கடனை வசூல் பண்ணாம இருந்திருப்பாரு? கடன் வசூல் ஆகலேன்னாலும் இப்ப இந்தக் கடன் பத்திரம் செல்லுமா? அப்படிச் செல்லுபடி ஆனாலும் கடன் வாங்கின ஆர். வெங்கடேச பிள்ளையை நாம எப்படிக் கண்டு பிடிக்கிறது? கண்டிப்பா அவர் செத்துப் போயிருப்பார்! அவரோட பேரப்பிள்ளைகள் நம்பள மாதிரி எங்க கிடந்து அல்லல் படுதோ?" பொரிந்து தள்ளினாள் சோமலதா.

யோசித்த கவிராஜன் உயிர்த்தான்.

"எங்க தாத்தாவுக்குப் பால்ய நண்பர் பெருமாள் தாத்தா இன்னும் உயிரோடதான் இருக்காரு. அவரக் கேட்டுட்டு வரேன் லதா..." என்றான்.

கவிராஜன் சொன்னதை முழுமை யாகக் காதில் வாங்கிக் கொண்ட பெருமாள் சன்னமான குரலில், "உங்க தாத்தா குடுத்த கடனை வெங்கடேச பிள்ளை திருப்பித் தரவேயில்லை. எனக்கு நல்லாத் தெரியும். பிள்ளை 1952ல செத்துப் போயிட்டார். இன்னிக்கு அவர் தொழிலை டெவலப் பண்ணி லட்சாதிபதியா இருக்கான் அவரு பேரன். மெட்ராஸ் முகவரி தரேன். போய்ப் பார். பத்திரம் செல்லுமோ செல்லாதோ? தாத்தன் கடன் ஆயிரத்தைப் பேரன் தராமலா போய்டுவான்?"

"சரி... பெருமாள் தாத்தா..."

"என் டிரங்க் பெட்டில ஒரு பழைய நோட்டு இருக்கும். எடு..."

எடுத்துக் கொடுத்தான்.

அவர் முகவரி சொல்லச் சொல்லக் குறித்துக் கொண்டான் கவிராஜன்.

"ரொம்ப நன்றி தாத்தா... போய்ட்டு வரேன்..."

புறப்பட்டான்.

சென்னை.

கையில் ஒரு மஞ்சள் துணிப் பையுடன் பஸ்ஸிலிருந்து இறங்கி னான் கவிராஜன். சென்னையிலிருந்து பதினைந்தாவது கிலோ மீட்டரில் அவன் தேடிய தொழிற்சாலையின் முகவரி இருந்தது.

வாசலில் நின்றிருந்த கூர்க்கா விடம், "வணக்கமுங்க..."

"யாரப் பாக்கணும்பா?" அலட்சிய குரலில் கூர்க்கா.

"முத்துக்குமரனைங்க..."

"எந்த முத்துக்குமரன்ய்யா? எங்க மொதலாளி பேர மூஞ்சில அடிச்ச மாதிரி சொல்ற?" அதட்டினான்.

"உங்க முதலாளியத்தான் பாக் கணும்..."

"அப்பாயின்ட்மென்ட் இருக்கா?" திமிராய்.

"புரியலைங்க..." குழப்பமாய்.

"அதான்... முன் அனுமதி வாங்கி யிருக்கியா?"

"இல்லைங்க..."

ஆர்னிகா நாசர்

"அப்ப போய்யா வழிய விட்டு... மொதலாளிய இப்ப யாரும் பார்க்க முடியாது. தீவாளி போனஸ் விஷயமா யூனியனோட தொடர்ந்து மூணு நாளா பேச்சு வார்த்தை நடத்திக்கிட்டு இருக்கார்... செம பிஸி..."

"அஞ்சே நிமிஷம்... உள்ள விட்டீங்கன்னா எப்படியும் பாத்ருவேன்... அறுபது வருஷ காலத்து விஷயம் ஒண்ணு அவர்கிட்ட பேசணும்..." கெஞ்சினான்.

"முடியாது. போறியா? உதை வேணுமா?"

"அவரப் பாக்காம நகரமாட்டேன்..."

"ஒரு வருஷம் நின்னாலும் உன்னைப் பாக்கமாட்டாரு..." எகத்தாளம்.

"அதையும்தான் பாப்பமே..."

கூர்க்கா கூண்டுக்கு இடப்புறம் துணிப்பையுடன் குத்துக்காலிட்டு அமர்ந்தான் கவிராஜன்.

எம்டியின் கன்டெஸா கிளாஸிக் மாலை 5 மணிக்குள் நான்கு முறை தொழிற்சாலைக்குள் போய் வந்தது. ஐந்தாவது முறை கேட்டில் தயங்கி நின்றது. காரின் முன்கதவுக் கண்ணாடி இறங்கியது. கூர்க்கா விரைந்து சல்யூட் அடித்து காருக்குக் குனிந்தான்.

"அங்க யாருய்யா மஞ்சப்பை ஆசாமி - காலையிருந்து உட்கார்ந்திருக்கிறது?"

"ஐயா! உங்களைப் பார்த்துட்டுத்தான் போவேன்னு அடம் புடிக்கிறான்..."

"எதுக்காம்?"

"கேட்டா - ஏதோ அறுபது வருஷ விஷயம் உங்ககிட்ட பேசணும்ன்றான்..."

யோசித்த முத்துக்குமரன், "சரி... அந்தாளை என் அறைக்கு அனுப்பு..."

முத்துக்குமரன் கனிவாய் வந்தவனைப் பார்த்தார்.

"சொல்லு... என்ன விஷயமா என்னைப் பாக்க வந்த?"

"உங்க தாத்தா எங்க தாத்தாக்கிட்ட ஆயிரம் ரூபாய் கடன் வாங்கியிருக்கார். அந்த ஆயிரம் ரூபாயை வாங்கிட்டுப் போக வந்தேன்..."

முத்துக்குமரன் கோபமானார்.

"என்ன மேன் உளர்ற?"

"இதோ பாருங்க சார் கடன் பத்திரத்தை" நீட்டினான் கவிராஜன். வாங்கி முழுமையும் வாசித்தார் முத்துக்குமரன். ஸ்தம்பித்தார். "உண்மைதான். தாத்தாதான் ஆயிரம் ரூபாய் கடன் வாங்கியிருக்கிறார். அந்தக் கடனில்தான் 62 வருடங்களுக்கு முன் தொழில் தொடங்கியிருக்கிறார். அந்த வித்துதான் இன்று வளர்ந்து பெரிய ஆலமரமாகியுள்ளது. இன்று நான் போகும் கார் - நான் உண்ணும் உணவு - நானிருக்கும் வீடு இவனின் தாத்தா போட்ட பிச்சை. சட்டப்படிப் பத்திரம் காலாவதியாய் போயிருக்கலாம். ஆனால் தர்மப்படி அந்தப் பத்திரத்துக்கு முழுமையாய் உயிர் இருக்கிறது!

முத்துக்குமரன் மரியாதையாய், "உட்காருங்க!" என்றார்.

தயக்கமாய் அமர்ந்தான் கவிராஜன்.

இன்டர்காமில் சீஃப் அக்கவுன்டன்ட்டை அழைத்தார்.

அக்கவுன்டன்ட் வந்தார்.

கடன் பத்திரத்தை முத்துக்குமரன் நீட்டி, "வட்டியும் அசலும் எவ்வளவு என்று கணக்கிட்டுச் சொல்லுங்கள்..." என்றார்.

"சார்... சட்டப்படி..."

"ப்ளீஸ்! எதுவும் பேச வேண்டாம். கணக்கைப் பாருங்கள்..."

அக்கவுன்டன்ட் சயின்டிபிக் கால்குலேட்டரை எடுத்துச் சில பட்டன்களை அமுக்கி நிறுத்தினார். மேல் ஸ்கிரீனில் தொகை தெரிந்தது.

ரூபாய் 10,05,308.556!

"சார்! தொகை பத்து லட்சத்தைத் தாண்டுகிறது!"

"குட்! முழுத் தொகையையும் சிங்கிள் செக்காக போட்டுக் கொண்டு வாருங்கள்..."

"எதிர்க் கேள்வி கேட்க மன்னிக்கணும். எதுக்கு செக் சார்?"

"என் தாத்தா கடனை அடைக்க..."

"நான் உங்கப்பா காலத்திலிருந்து இந்த நிறுவனத்துக்கு ஊழியம் செய்கிறேன். ஒரு பைசா தேவையில்லாமல் செலவீனம் ஆக என் மனம் ஒப்பாது. கூட்டு வட்டிக்கும் தனி வட்டிக்கும் இந்தாளுக்கு நிச்சயம் வித்தியாசம் தெரியாது. தனிவட்டி அசலுடன் 8320/- ஆகிறது. அதை வேண்டுமானால் கொடுத்து விடுவோம் சார்..."

"இந்த ஒரு விஷயத்தில் தலையிடாதீர்கள். சொன்னதைச் செய்யுங்கள்..."

சீஃப் அக்கவுன்டென்ட் செக்புக்கில் தொகை எழுதிக்கொண்டு வந்து நீட்டினார். கையெழுத்திட்ட முத்துக்குமரன் செக்கைக் கிழித்தெடுத்தார். கவிராஜனிடம் நடந்தார்.

"கடனை அடைக்க ஏற்பட்ட தாமதத்துக்கு மிகவும் வருந்துகிறேன்... இந்தாருங்கள் செக்! பத்து லட்சத்தி சொச்சம்... எந்த பேங்க்கிலும் மாற்றிக் கொள்ளலாம்..."

கவிராஜன் ஸ்தம்பித்தான்.

"ஏதோ சூது நடக்குது. ஆயிரம் ரூபா கடனுக்குப் பத்து லட்சம் எப்டி வரும்? என்னை எதுலயோ சிக்க வைக்கப் பாக்றீங்க... சார்... எனக்கு செக்கும் வேணாம் கிக்கும் வேணாம்... என் ஆயிரம் ரூபாய மட்டும் குடுங்க சார்..."

"கவிராஜன்! கூட்டு வட்டில ஒரு தொகை ஆறு வருஷத்ல ரெட்டிப்பாகும். அப்படி 62 வருஷத்துக்குக் கணக்குப் பாத்தா..."

"இந்த கதையே வேணாம். என் ஆயிரம் ரூபாய குடுங்க சார்..."

"என்ன கவிராஜன்! அடம் புடிக்றீங்க... பத்து லட்சம் வேணாம்னு எந்த முட்டாளும் சொல்வானா? பத்து லட்சத்ல - பெரிய வீடு வாங்கலாம்; டி.வி. வாங்கலாம்; ஃப்ரிட்ஜ் வாங்கலாம்; மிக்ஸி வாங்கலாம்; மீதிய பேங்க்ல போட்டு வர்ற வட்டில காலாட்டிக்கிட்டுச் சாப்பிடலாம்..."

"அடுத்தவங்க காசு எனக்கு வேணாம். என் ஆயிரம் ரூபாயக் குடுங்க. போதும்..."

முத்துக்குமரன் இரக்கமாய் கவிராஜனை உன்னித்தார்.

"கவிராஜன்! பத்து லட்சம் உங்களுக்குச் சேர வேண்டியதுதான். இப்ப வீராப்பாப் பேசிவிட்டுப் பின்னாடி ரொம்ப வருத்தப்படப் போறீங்க..."

"அந்தக் கவலை உங்களுக்கு எதுக்கு? என் ஆயிரம் ரூபாயக் குடுங்க..."

"உங்க மனைவியக் கூட்டிட்டு வாங்க. பேசிப் பாப்பம். அவங்க என்ன சொல்றாங்கன்னு கேப்பம்..."

"யார் வந்தாலும் ஒரே பதில்தான். என் ஆயிரம் ரூபாய எடுங்க..."

முத்துக்குமரன் எரிச்சலுற்றார்.

சீஃப் அக்கவுன்டன்ட், "சார்! தனியா கொஞ்சம் வரீங்களா ஒரு நிமிஷம்?"

வந்தார். "என்ன?"

"இந்தப் புத்திசாலிய கன்வின்ஸ் பண்ண ஒரு நாள் போதாது. அது நமக்கு அவசியமும் அல்ல. தயவு செய்து மனிதாபிமானத்தைத் தள்ளி விட்டு விஷயத்தை வியாபார ரீதியாய் பாருங்கள். நீங்கள் உங்கள் அறைக்குப் போங்க. நான் இந்தாள் விஷயத்தை செட்டில் பண்ணிட்டு வரேன்..."

"பாவம் அந்தாளு... விவரம் புரியாம..." தயங்கினார்.

"இப்படித்தான் பல பேர்... பணக்காரன் இரக்கம் காட்டினாலும் அத ஏழைகள் பொதுவா ஏதோ ஏமாத்



றான்னுதான் நினைப்பாங்க. பணக்காரன் - ஏழை என்ற வர்க்கப் பேதத்தின் சாபமிது. மனதைக் கல்லாக்கிக் கிட்டுப் போங்க சார்..." அரை மணி நேரம் விவாதித்து கன்வின்ஸ் செய்தார்.

எம் டி தயங்கித் தயங்கிப் போனார்.

அவர் போனவுடன் சீஃப் அக்கவுன்டன்ட் கவிராஜனிடம் வந்தார்.

"கவிராஜன்! நீ பெரிய புத்திசாலிய்யா. எங்க மொதலாளி திட்டத்த கண்டுபிடிச்சிட்டியே... பத்து லட்சம் செக் வாங்கிருந்தா - ஆளு பெரிய்ய சிக்கல்ல மாட்டிருப்ப... ஏதோ உன் தாத்தா புண்ணியம்... தப்பிச்சிட்ட..."

"எனக்குத் தெரியாதாக்கும்..."

"சரி சரி. விஷயத்துக்கு வருவோம். இந்தா நீ கேட்ட ஆயிரம் ரூபாய். (பத்து ரூபாய் நோட்டுகளாய்) பஸ் செலவுக்கு இந்தா அம்பது ரூபாய். தீபாளிய ஜாம்ஜாம்னு கொண்டாடு..."

பணத்தை எண்ணித் திருப்தியான கவிராஜனிடம் ஒரு வெள்ளைத்தாளை நீட்டினார், சீஃப் அக்கவுன்டன்ட்.

"இந்த ரெவின்யூ ஸ்டாம்ப்ல கையெழுத்துப் போடு..."

"எதுக்கு?"

"ஆயிரம் ரூபா வாங்கினதுக்கு..." போட்டான்.

கடன் பத்திரத்தை வாங்கிக் கொண்டார்.

"அப்ப... புறப்படு..."

"முதலாளியப் பாத்து ஒரு வார்த்த சொல்லிட்டுப் போயிடுரேன்..."

"எதுக்கு அநாவசியமா அந்தாளைப் பார்த்துக்கிட்டு... நீ புறப்படு..."

"பணக்காரன் பணக்காரன் தாய்யா. ஏழைதான் ஏழைக்கு உதவு வான்றது சரியாப் போச்சு. பிரச்னைய சுமுகமா தீர்த்துக் குடுத்துட்டீங்க. நன்றி. வரேன்ங்க..." புறப்பட்டான் கவிராஜன்.

சீஃப் அக்கவுன்டன்ட் மர்மப் புன்னகை வெடித்தார்.

o
oo



சுந்தா

# எண்பதாண்டு இளைஞர்!

பி.எஸ்.மணி

தியாகராயநகர் பிஞ்சால சுப்பிரமணியம் தெரு தோட்டவீட்டில் எண்பதாண்டு நிறைந்த சுந்தா சுறுசுறுப்புடன் பொன்னியின் புதல்வர் கல்கியைப் பற்றிய ஆங்கில நூலைத் தயாரிப்பதில் ஈடுபட்டிருக்கிறார்.

"உங்களுக்கும் பேராசிரியர் கல்கி அவர்களுடன் அறிமுகம் ஏற்பட்டது எப்படி?" என்று வினவுகிறேன்.

"நான் அந்தக் காலத்தில் முதலில் பி.எஸ். ராமையா நடத்திய 'மணிக்கொடி'யில்தான் சிறுகதைகள் எழுதத் தொடங்கினேன். மணிக் கொடியில் வெளிவந்த என் சிறுகதை ஒன்றை ஓர் இளைஞர் காப்பியடித்து எழுதி, அது ஆனந்த விகடனில் வெளியாகிவிட்டது. அப்பொழுது ஆனந்த விகடனில் ஆசிரியப் பொறுப்பு வகித்த கல்கி அவர்களுக்குக் காப்பி அடிக்கப்பட்ட விஷயம் குறித்து எழுதினேன். அந்த ஆரம்ப எழுத்தாளனுக்குக் காரசாரமான கண்டனம் தெரிவித்துக் கல்கி அவர்கள் எழுதியதோடு என்னை ஆனந்த விகடனுக்குக் கதைகள் எழுதச் சொல்லிக் கேட்டும் அறிமுகப் படலம் தொடர்ந்தது! அந்தக் காலத்தில் ஆனந்த விகடன் சிறுகதைப் போட்டியில் தங்கப் பதக்கம் பெற்றவன் என்ற பெருமை எனக்கு உண்டு".

"உங்கள் இளமைப் பருவத்தில் நடந்த சுவையான நிகழ்ச்சி ஏதாவது உண்டா?"

"மதுரை சேதுபதி எலிமெண்டரிப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தேன். தினம் பள்ளிக்குச் செல்லும் போது, என்னோடு சேர்ந்து படித்த ரௌடி மாணவன் வேலாயுதம் தினமும் என்னிடமிருந்து ஒரு பைசா தண்டல் வசூலித்து வந்தான். எனக்குச் சில சமயம் காசு கிடைக்காது. வேலாயுதத்திடமிருந்து எப்படித் தப்புவது என்று அழுகை அழுகையாக வரும். அம்மாவிடம் பைசா தரும்படி கேட்டால் 'நீ லோக் கடலை, மிட்டாய் வாங்கிச் சாப்பிடக் கூடாது' என்று சொல்லித் தர மறுத்து விடுவாள். ஒருநாள் நான் அழுது கொண்டே பள்ளி செல்லும்போது எனக்கு ஆறுதல் சொல்லித் தேற்றினான் நல்ல மாணவன் ஒருவன். 'ரௌடி வேலாயுதம் என்னிடம் ஒரு பைசா தண்டல் வசூலிக்கிறான். காசு தராவிட்டால் என்னை உதைக்கிறான்' என்ற தகவலை அந்த நல்ல மாணவனிடம் சொன்னேன். 'கவலைப் படாதே, சுந்தரம்! நாளைமுதல் அந்த ரௌடி உன்பக்கம் வராமல் செய்து விடுகிறேன்' என்றான் அவன். அந்த மாணவன் சொன்னபடியே அடுத்தநாள் என் பக்கம் வராமல் ரௌடி வேலாயுதம் ஒதுங்கிப் போனது வியப்பை அளித்தது. என் நேசனிடம் 'எப்படி ரௌடி வேலாயுதத்தின் கொட்டத்தை அடக்கினாய்?' என்று கேட்டேன். 'அதுவா, ஒரு போலீஸ்காரரை அனுப்பி அவனை மிரட்டினேன்!' என்றான் அவன். 'அது எப்படி? போலீஸ்காரர் உங்க சிநேகிதரா.' என்று கேட்டேன். 'அதுவா? போலீஸ்காரர் நண்பர் இல்லை. இந்த ஊர் போலீஸ் இன்ஸ்பெக்டர் என் அப்பா!' என்றார் அந்த மாணவர் ராஜன். பின்னாளில் உயர் நீதிமன்ற நீதிபதி மகராஜன். இலக்கியத்தில் இரட்டையர் என்ற புகழ் எங்கள் இரண்டு பேருக்கும் உண்டு!"

இலக்கிய மேதை சுந்தா பாளையங்கோட்டை புனித சேவியர் கல்லூரியில் இண்டர்மீடியட் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தார். அப்பொழுது அவரது நண்பர் முத்தையா பிள்ளை, 'கலைமகள்' பத்திரிகையில் கவிதைப்போட்டி ஒன்று நடத்துகிறார்கள். அதற்கு நீ ஒரு கவிதை அனுப்பி வையேன்!' என்று கேட்டுக் கொண்டார். கல்லூரியில் பிரின்ஸ் பாலைப் பாராட்டி ஆங்கிலத்தில் கவிதை எழுதி மாணவர்களின் மெச்சுதலைப் பெற்றவர் சுந்தா. கலைமகள் பத்திரிகைக்குத் தமிழ்க் கவிதை ஒன்றைப் படைத்து அனுப்பினார். அவசரத்தில் தம் விலாசத்தை அதில் குறிப்பிடவில்லை! அந்தக் கவிதைக்குக் கலைமகள் பத்திரிகை தங்கப் பதக்கப் பரிசு வழங்கியதோடு, அவரது விலாசத்தைத் தரும்படியும் பத்திரிகையில் கோரியது! அந்தக் காலத்தில் கலைமகள் கொடுத்த பரிசு சுந்தாவின் இலக்கிய ஆர்வத்தைத் தூண்டி விட்டது!

படிப்பு முடிந்ததும் சுந்தாவுக்கு மேலநத்தம் கிராம முன்சீப் வேலை கிடைத்தது. ரசிகமணி நடத்திய வட்டத் தொட்டி இலக்கியக் கூட்டத்துக்கு சுந்தா மேல நத்தத்திலிருந்து லேடீஸ்



சுந்தாவும் பி.எஸ். மணியும்



பி.பி.சி. தமிழோசையில் திரைப் பட இயக்குநர் கே. சுப்பிரமண்யத் தைப் பேட்டி காண்கிறார் சுந்தா.

சைக்கிளில் வருவார். ரசிகமணியின் புதல்வர் தீத்தாரப்பனுக்கும் சுந்தா வுக்கும் இலக்கியப் பரிவர்த்தனைப் பேச்சுகள் அடிக்கடி நிகழும். இந்த இலக்கிய வாலிபர்கள் கூட்டம் தாம்பிரவர்ணி நதி மணல் பரப்பில் அடிக்கடி கூடும். சாஹித்ய அகாதமி பரிசு பெற்ற சோமு, நாடகத் துறை சுகி, ஹாஸ்ய எழுத்தாளர் மாறன் ஆகியோரும் இந்த இலக்கியக் கூட்டத்தில் பங்கேற்பர். ஞாயிற்றுக் கிழமை தோறும் வட்டத் தொட்டி யிலும் இவர்கள் அனைவரும் பங் கேற்பது உண்டு.

திருச்சி அகில இந்திய ரேடியோ வில் சில காலம் சுந்தா 'ஸ்கிரிப்ட் ரைட்ட'ராக இருந்தபிறகு, பதவி உயர்வு பெற்று புதுடில்லி ரேடியோ வில் செய்திப் பிரிவுக்குப் பணியாற்றச் சென்றார். அங்கிருந்து லண்டன் பி.பி.சி.யில் 'தமிழோசை'ப் பிரிவுக்குப் பணிபுரியத் தேர்ந்தெடுக்கப்பட்டார். தமிழோசையில் தமிழகத்திலிருந்து வந்த ஏவி. மெய்யப்பன், ஜி.டி. நாயுடு, வைஜயந்திமாலா, டைரக்டர் கே. சுப்பிரமணியம் ஆகியோரைப் பேட்டி கண்டு அக்கரைச் சீமையில் தமிழர்களின் பெருமையைத் துலங்க வைத்தார்! லண்டன் பி.பி.சி. அனுபவ மும், லண்டன் வாழ்க்கையும் இவரது சிறப்பான கட்டுரைகளுக்கும் கதை களுக்கும் நிலைக்களனாகப் பின்னர் அமைந்தன.

புதுடில்லி ரேடியோவில் பணி யாற்றும் தருணத்தில் பாரதப் பிரதமர் நேருஜி, தமிழ் தெரியாத பாராளுமன்ற அங்கத்தினர்களுக்குத் தமிழ் கற்றுக்கொடுக்கத் தமிழ் அறி ஞர் சுந்தாவின் உதவியை நாடியது குறிப்பிடத்தக்கது.

ரேடியோவிலிருந்து சுந்தா ஓய்வு பெற்றபோதுதான், ஓர் அரிய வாய்ப்பு அவரைத் தேடி வந்தது. 'பொன்னி யின் புதல்வர்' என்ற கல்கியின் சரித்திரத்தை எழுதுவதற்கான வாய்ப்பே அது.

வாரம் தவறாமல் தொடர்கட் டுரைகளை எழுதித் தருவாரா என்ற கவலை கி. ராஜேந்திரனுக்கு ஏற்பட்ட போது,

"பேராசிரியர் கல்கியிடம் மிகுந்த ஈடுபாடு கொண்டவர் சுந்தா. அவர் சென்னைக்கு வந்து குடியேறி அந்தத் தொடரைப் பூர்த்தி செய்வார். அவரைத் தாராளமாய் எழுதச் சொல்லலாம். நானே சுந்தாவுக்குக் கடிதம் எழுதுகிறேன்!" என்று திரு. ராஜேந்திரனுக்குத் தைரியம் சொன் னேன்.

இலக்கியமேதை சுந்தா சென்னை பிஞ்சால சுப்பிரமணியம் தெரு தோட்ட வீட்டில் குடியேறி, பேராசிரி யர் கல்கி பற்றிய 'பொன்னியின் புதல்வர்' வாழ்க்கைத் தொடரை அனைவரும் மெய் சிலிர்க்கும்படி முடித்துத் தந்தது இமாலயச் சாதனை. பொன்னியின் புதல்வர் நூலுக்கு சாஹித்ய அகாதமியின் பரிசு, விருது கிடைக்காதது பெரும் குறை.

ரசிகர் சுந்தாவுக்குப் பொன்னியின் புதல்வர் பெரும் புகழை ஈட்டித் தந்தது. 'என் வாழ்க்கையிலேயே நான் செய்த அரிய சாதனை இந்த வாழ்க்கை வரலாற்றை எழுதி முடித்ததுதான்' என்று பெருமைப் படுகிறார் சுந்தா.

டில்லி வானொலி செய்திப் பிரி வில் 'சுந்தா ஒரு முன்னோடி'யாகத் திகழ்ந்தார். ஒரு சீனியர் என்ற முறையில் மட்டுமில்லாமல், செய்தி அறிக்கைகளை உருவாக்குவதிலும் இவரை ஒரு முன்னோடியாகக் குறிப் பிட வேண்டும். இவர் வானொலி மூலம் வழக்கத்துக்குக் கொண்டு வந்த தமிழச்சொற்கள் பல, நவீன தமிழ்மொழியிலும் அகராதிகளிலும் நிலையாக இடம்பெற்று விட்டன! இவை ஒரு நெடிய பட்டியலாகும். சிறப்பாகச் சிலவற்றை மட்டும் சொல்வதென்றால் - அடிக்கல்; மூலைக்கல்; அஞ்சலி; பொதுத்துறை; தனியார் துறை; சாத்தியக் கூறு; ஏவுகணை; மட்டுப்பாடு; பற்றாக் குறை பட்ஜெட்; மேம்பாடு முதலி யன.

இவ்வித சொல்லாக்கத்துக்குப் பக்க பலமாக இருந்தவர்கள் பூர்ணம் விசுவநாதன், தஞ்சை பல்கலைக் கழக முன்னாள் துணைவேந்தர் வி.ஐ. சுப்பிரமணியம், கல்வித்துறையில் சிறந்த சித்தலிங்கையா முதலானோர்! இவ்வித சொல்லாக்க முயற்சிகளுக்கு ராஜாஜி, கி.வா.ஜ. ஒ.வி. அளகேசன் முதலிய அறிஞர்களுடன் கடிதப் போக்குவரத்து மூலம் ஆலோசனை கேட்பதுண்டு.

எதிர்பாராதவிதமாக அண்மை யில் சுந்தாவுக்கு ராஜாஜி பெயர் சூடிய இலக்கிய விருது ஒன்று கிடைத்தது. லண்டன் அனுபவத்தைக் கொண்டு, 'மேரியும் மகாத்மாவும்' என்ற தலைப்புடன், காந்திஜி நூற் றாண்டின்போது இவர் எழுதிய சிறுகதையை 'ஆதர்ஸ் கில்ட் ஆஃப் இந்தியா' சிறந்த படைப்பாகக் கருதி இந்த விருதைக் கடந்த ஜூன் மாதத் தில் வழங்கியது!

பேராசிரியர் கல்கி டில்லிக்குச் சென்றபோதெல்லாம் சுந்தாவை வழி காட்டியாகக் கொண்டிருந்தார். 'அலை ஓசை' நாவலை எழுதுகையில்; அது சம்பந்தப்பட்ட தலை நகரத்துக் காட்சிகளையெல்லாம் சுந்தாவே அவ ருக்குக் காட்டினார்! அத்துடன், அந்த நாவலில் இடம்பெற்ற முக்கியமான சம்பவங்களையெல்லாம் நேர் அனுப வத்தின்மூலம் எடுத்துச் சொன்னார். கல்கியின் அனுமதியுடன் அவருடைய குமாரர் சிறுவன் ராஜேந்திரனை,

அவன் விரும்பிய இடங்களுக்கெல் லாம் அழைத்துச் சென்று சுட்டிக் காட்டினார்! சுந்தாவுடன் தம் மகனை அனுப்பும்போதெல்லாம், "பத்திர மாகக் கூட்டிக் கொண்டு விடுவது உன் பொறுப்பு!" என்று சுந்தாவுக்குக் கல்கி எச்சரிக்கை செய்வாராம்! மகன் மீதுள்ள கல்கியின் அளவிலாத பாசத் துக்குச் சான்று!

ஒருசமயம் கல்கியுடன் ரசிகமணி டி.கே.சி.யும் டில்லிக்குச் சென் றிருந்தார், அதாவது ராஜாஜி கவர்னர் ஜெனரலாக இருந்தபோது! அப் போது டில்லி தமிழ்ச் சங்கத்தின் உறுப்பினரான சுந்தா பல இலக்கிய நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்தார். டி.கே.சி.யின் தலைநகர் விஜயம் பற்றிப் , பின்னர் சுந்தா எழுதிய கவிதை ஒன்று, குருநாதர் மீது அவர் கொண்டிருந்த பக்தியை எடுத்துக் காட்டுகிறது.

*செந்தமிழ்க் கொண்டல் அவர்*
*டில்லிக்கு வந்திருந்தார்;*
*வந்த கொண்டல் உருமாற்றி*
*வைத்திட்டார் இந்நகரை.*
*தமிழ் மாரி பெய்ததிலே*
*டில்லி எல்லாம் தமிழ்வெள்ளம்;*
*யமுனை நதி பொருநை என*
*இனம் மாறி ஓடியது.*
*இக் கரையில் தமிழ்ச் சோலை*
*அக்கரையில் தமிழ்ச் சோலை;*
*இக்கரைக்கும் அக்கரைக்கும்*
*இணைந்தோடும் இசைத் தோணி.*
*கரையோர மண்டபத்தில்*
*கம்பர் கவிபாடுகிறார்;*
*உரைக்கின்றார் வள்ளுவனார்;*
*ஓங்கிய தோர் கோயிலிலே.*

டி.கே.சி.யின் நினைவாகச் சென்னையில் இயங்கிவரும் 'வட்டத் தொட்டி' இலக்கிய நிறுவனத்துக்குச் சுந்தாவே தலைவராக இருந்து வருகிறார். ஆயினும் முதுமை காரண மாக அதை ஊக்கத்துடன் இயக்க முடியவில்லை.

தமது எழுத்துப் பணியை ஒரு நகைச்சுவையாளராகத் துவங்கினார் சுந்தா. எழுத்தில் மட்டுமில்லாமல் வாய்மொழியாகவும் நகைச் சுவையை நாடு முழுவதிலும் இளமைப் பருவத் தில் பரப்பியவர். 'நவீன சுயம்வரம்' என்ற இவருடைய ஹாஸ்ய கதா காலட்சேபம் பிரசித்தமானது.

பெண்களில் நகைச்சுவையுடன் எழுதுகிறவர்கள் அபூர்வம். இப்படி அபூர்வமானவர்களில் ஸ்ரீரமாமணி சுந்தர் ஒருவர். சுந்தாவின் புதல்வி இவர் என்பது சிலருக்கே தெரிந்திருக் கக்கூடும்.

"இன்னும் ஏதாவது இலக்கிய முயற்சியில் ஈடுபட்டிருக்கிறீர்களா?" என்று கேட்டபோது, 'மிக்க ஆர்வத் துடன் ஒன்றில் ஈடுபட்டிருக்கிறேன். அது என்னவென்று இப்பொழுது சொல்லமாட்டேன்'- சீக்கிரமே தெரிய வரும்! என்று பதிலளித்தார் சுந்தா.

சமீபத்தில் அவர் வீட்டுக்குச் சென்ற போதெல்லாம் அவசரம் அவ சரமாகச் சில காகிதங்களை ஒளித்து வைப்பதை வியப்புடன் பார்த்து வந்திருக்கிறேன். அவற்றில்தான் இந்த முயற்சியின் ரகசியம் பொதிந் திருக்கிறது போலும்! விடிந்தால் தெரிகிறது வெளிச்சம்!

"உங்கள் வாழ்க்கையில் மிகச் சிறந்த நிகழ்ச்சி எது?" என்று வினவிய போது,

மகத்தான நிகழ்ச்சியொன்றைச் சுந்தா வர்ணித்துச் சொன்னார் :

தேசப்பிரிவினையை அடுத்து இலட்சக்கணக்கான அகதிகள் இந்தியப் பகுதிக்கு வந்து கொண் டிருந்தார்கள். அவர்களில் பல்லா யிரக்கணக்கானோர் குருக்ஷேத்திர முகாமில் சொல்லொணாத் துயரத் துடன் கொந்தளித்துக் கொண்டிருந் தார்கள். அவர்களைச் சமாதானப் படுத்தி ஆறுதல் அளிக்கும் முறையில் மகாத்மா காந்தி அந்த முகாமுக்குச் சென்று பேச விரும்பினார். ஆனால் அது அவர் உயிருக்கே ஆபத்தாகும் என்று பிரதம மந்திரி நேரு கருதி டில்லி வானொலி மூலம் அவர்க ளுடன் அண்ணல் பேசுவதற்கு ஏற் பாடு செய்தார்.

அதற்கு இணங்க மகாத்மாகாந்தி வானொலி நிலையத்துக்கு வந்த சமயத்தில் தற்செயலாகச் சுந்தா பிரதான வாசற்படிக் கட்டில் நின்று கொண்டிருந்தார். காந்தி மகான் காரிலிருந்து இறங்கியபோது, சம்பந் தப்பட்ட அதிகாரிகள் கீழ்ப்படியில் இறங்கி நின்று அவரைப் பக்தியுடன் வரவேற்றார்கள். மிதியடியில் காந்தி கால் வைக்கப்போன சமயத்தில் யாரோ ஓர் அம்மணி அவருக்கு முன்னே குனிந்து வணங்கினார். எதிர் பாராத அந்தச் குறுக்கீட்டால் மகாத்மா நடை தடுமாறி நிலை குலைந்தார். ஓர் இயந்திரம்போல் சுந்தா இயங்கி, அண்ணலின் கரத் தைப் பற்றி, அவர் கீழே விழாதபடி நிலைபெறச் செய்தார். "சுக்ரியா" என்ற மகாத்மாவின் சொல் சுந்தா வின் காதில் விழுந்து மெய்சிலிர்க்க வைத்தது.

மிதியடியைத் தாண்டி உள்ளே சென்றுவிட்டார் காந்தி. நின்ற இடத் திலேயே சுந்தா நின்று, "காந்திக்குக் கைகொடுத்தேன்!", "காந்திக்குக் கைகொடுத்தேன்!" என்று, படபடத்த அவர் நெஞ்சின் தாளத்துக்கேற்பச் சொல்லிக்கொண்டேயிருந்தார்! °°

## ஓ! கையூட்டே!

**- கவிஞர் கா.வேழவேந்தன்**

கையூட்டே! 'இலஞ்ச'மெனும் கொடிய பேயே!
கடமையினை முடமாக்கும் நெடிய நோயே!
வையகத்தில் உன்கரங்கள் உயர்ந்த தாலே
வாழ்விழந்தே தாழ்ந்தவர்கள் நன்றி ரண்டா?
தெய்வத்தின் கோபத்தைத் தணிப்ப தற்கும்,
தாபத்தைப் பெறுவதற்கும் 'பூ'வாய் ஆவாய்!
பைய உன்னே தூங்குகின்ற 'கோப்'பைக் கூட
பறக்கவைக்கும் 'மந்திரகோல்' நீதான்! பொய்யா?
சம்பளத்தின் பெருமையினைக் குறைக்க வந்த
சண்டாளச் 'சக்களத்தி' நீயோ? உன்பேர்
'கிம்பள'மாம்! நீ நகைக்கும் பளபளப்பில்
கிலுகிலுத்துப் போகின்றார் நல்லோர் கூட!
அம்பாலே பறவையினை வீழ்த்து தல்போல்
அற்பர்உனை ஏவிவிட்டு வெற்றி கண்டார்!
வெம்பிநிற்கும் நெஞ்சமுடன் கெஞ்சுகின்றோம்,
விளையாட்டை நிறுத்திக்கொள்! தாங்கமாட்டோம்!

பெட்டியிலே, பைகளிலே பயணம் செய்யும்
பேரரக்கன் உன்லீலை சிறிதா? சீமைப்
புட்டிகளின் வடிவத்தில் வருகின்றாயாம்!
பொய்மாதர் உருவெடுத்துச் சிரிக்கின் றாயாம்!
அட்டிகையாய் அவதாரம் எடுக்கின் றாயாம்!
அரசியலில் கட்சிநிதி ஆகின்றாயாம்!
மட்டில்லா உன்கூத்தால் இந்த நாடு
'மயானம்'போல் மாறிவிட்ட கொடுமை போதும்!

# மணிவிழாக் காணும் பம்பாய்த் தமிழ் நாடகக் கலை

செம்பூரான்

**1990** ஆம் ஆண்டு, ஏப்ரல் மாதம் 22 ஆம் தேதி; அன்றுதான் சென்னையிலுள்ள ராணி சீதை மன்ற அரங்கில் பம்பாய்த் தமிழ் நாடகக்குழு 'இந்தியன் தியேட்டர் சென்டர்' தங்களது 'சாளக்கிராமம், முரண்டு' நாடகங்களை மேடையேற்றியது. நாடகங்களைப் பார்த்துவிட்டு பிரபல திரைப்பட இயக்குநர் கே. பாலசந்தர் உணர்ச்சிப் பெருக்கோடு சொன்னார்: "தமிழ் நாட்டில் தமிழ் நாடகங்கள் செத்துவிட்டன என்று கூறும்போது, இந்த இரு நாடகங்களும், "இல்லை! தமிழ் நாடகம் இன்னும் உயிரோடிருக்கிறது; - பம்பாயில்" என்று மார் தட்டிச் சொல்லுகின்றன". அவரைத் தொடர்ந்து கோமல் சுவாமிநாதன், பாரதிராஜா, வி.எஸ். இராகவன், ராது, விழாவேந்தன் என்.கே.டி. முத்து ஆகிய நாடகத்துறை மேதைகளும், கலையன்பர்களும் தமிழ் நாடகக் கலையின் வளர்ச்சிக்கு வித்தியாசமான பம்பாய் நாடகங்கள் வழிகாட்டியாக இருக்குமென்பதை வலியுறுத்திப் பேசினர்.

மற்ற மொழி நாடகங்களுக்கொப்ப ஏற்றம் பெற்றிருக்கும் பம்பாய்த் தமிழ் நாடகம் 60 வருடத்திய வரலாறு படைத்தது. தமிழ்நாட்டிலிருந்து வேலை நிமித்தம் காரணமாக பம்பாயில் குடியேறிய சில கலையன்பர்கள் தங்கள் நாடக ஆர்வத்திற்கு வடிகாலாக மாட்டுங்கா பகுதியில் 'சித்தரஞ்சனி சபா' என்ற அமைப்பை நிறுவினர். அமைப்பின் முதல் நாடகமான 'சந்திர ஹாஸன்' 1933 ஆம் ஆண்டு ஜூன் மாதம் அரங்கேறியது. இராமாயண இசைச் சொற்பொழிவிற்காக நடத்தப்பட்ட நாடகமே, பம்பாய்த் தமிழ் நாடகக்கலையின் உதயமாகியது. அதன்பின் அந்த சபா அரங்கேற்றிய நாடகங்களில் 'சதி சுலோசனா'வும், 'நந்தனாரும்' மக்களின் ஆதரவைப் பெற்றன. காலப் போக்கில் சித்தரஞ்சனி சபாவின் நாட்டம் இசையில் சென்றபோது, அது 'தியாகராஜ சபாவா'க மாறி, தியாகராஜ உற்சவங்களை விமரிசையாகக் கொண்டாட ஆரம்பித்தது. அதன் தலைவராகப் பணியாற்றிய கல்யாணசுந்தரம் நல்ல பாடகராகவும், பெண் வேடதாரியாகவும் பெருமை பெற்றார். ஒருவரே பல பாத்திரங்களை ஏற்று நடிப்பதில் வல்லவரான சேஷய்யர், ஷேக்ஸ்பியர் நாடக நடிகராகத் திறமை பெற்றிருந்ததனால் 'ஷேக்ஸ்பியர் சேஷய்யர்' என்று அழைக்கப்பட்டார். பழம் பெருமை வாய்ந்த 'சங்கீத சபா'வோடு இணைந்திருந்த பாட்ராச்சாரியாரும் அன்று நாடகத்துறையில் தீவிரமாக ஈடுபட்டவர்.

1941 ஆம் ஆண்டு, ஜூன் 7 ஆம் தேதி, எஸ்.ஐ.இ.எஸ். பள்ளி அரங்கில் மேடையேறிய 'சுபத்ரா அர்ச்சுனா' நாடகம் பம்பாய்த் தமிழ் நாடகக் கலையின் ஒரு வெற்றிப் படிக்கல்லாக அமைந்தது. மைக் இல்லாத காலத்தில் அதன் கதாநாயகர் கலைமாமணி எஸ்.ஆர்.கஸ்தூரி 25 பாடல்களைப் பாடி, நடித்து நாடகத் துறையில் ஒரு புதிய சரித்திரத்திற்கு வழிவகுத்தார். அதை அளித்த 'மாட்டுங்கா டிராமாட்டிக் சொஸைட்டி' மேலும் பல நல்ல நாடகங்களை அரங்கேற்றி, அண்மையில் அதன் பொன்விழாவையும்



இந்தியன் தியேட்டர் சென்டரின் "சாலக்கிராமம்"



நாடகக்காரர்களின் "பாஸ்மார்க்"



மாத்துங்கா டிராமாடிக் சொஸைட்டியின் "தியாகராஜா"

கொண்டாடியுள்ளது. 1950 ஆம் ஆண்டில் மற்றுமொரு திருப்பம் ஏற்பட்டது. பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தின் அழைப்பினை ஏற்று, அவ்வாண்டு மே மாதம் 14 ஆம் தேதி கால்ஸாக் கல்லூரி மைதானத்தில் என்.எஸ்.கே. நாடகக் குழுவினர் தங்களது 'இறந்த காதல்' நாடகத்தை நடத்தினர். நாடகத்தைத் தொழிலாகக் கொண்ட நாடகக் குழு பம்பாய் வர ஆரம்பித்தபோது, பம்பாய் ரசிகர்களின் நாடக வேட்கையும் அதிகரித்தது. அதே வருடம் அக்டோபர் 14.ஆம் நாள் புதிதாகத் துவக்கப்பட்ட 'கலாநிலையம்' அரு. இராமநாதன் எழுதிய 'வானவில்' என்ற நாடகத்தை போதர் கல்லூரி அரங்கில் நடத்தினர். அதன் நிறுவனர்களிலொருவரான பி.சுப்பையா (சாமி) புதிய உத்திகளைக் கையாண்டு நாடக மறுமலர்ச்சி ஏற்படத் துணை நின்றார். நாடக நேரத்தை ஒரு கட்டுப்பாட்டுக்குள் அடக்கியவரும் அவரே. அவரது நாடகங்களில் இசையோடு நடிப்பு, உச்சரிப்பு, குரல், பாவம், ஆகியவைகளும் முக்கியத்துவம் பெற்றன. பலதுறைகளில் திறமை படைத்த எஸ்.ஆர். சாரங்கனும் பம்பாய் நாடகக் கலை சிறப்புற்று உயரப் பாடுபட்டார். அந்தேரியிலிருந்த திருமணிக்குப் பெண் வேடம் மிகவும் பொருந்தியதால் அவர் 'லேடி மணி' என்றே அழைக்கப்பட்டார். அவர் பரதநாட்டியத்திலும் தேர்ச்சி பெற்றிருந்தார். காமெடி ரோலினால் புகழ்பெற்றவர் திரு. வெங்கடாசலம். பின்னணி இசையை முதன் முதலாக நன்கு பயன்படுத்தியவர், திரு. பாண்டுரங்கன். பின்னணிப் பாடகர்களில் தலைசிறந்து விளங்கியவர் நெல்லை ஆறுமுகம். மேடைக் காட்சிகளுக்கான செட்டுகள், ஒளிவசதி ஆகியவைகளை அன்றும் இன்றும் வழங்கி வருபவர், 'மெர்கோ' கோபி.

1950-60 ஆம் ஆண்டுகளுக்கு இடையிலான பத்தாண்டு காலகட்டத்தில் பம்பாய்த் தமிழ்ச் சங்கம் சார்பில் நடந்த நாடக விழாக்களில் பல சென்னை நாடகக் குழுக்கள் பம்பாயில் நாடகங்கள் நிகழ்த்தின. 1952, 53, 54 ஆம் ஆண்டுகளில் டி.கே.எஸ். சகோதரர்கள், 1955 ஆம் ஆண்டு நவாப் ராஜமாணிக்கம் குழுவினர், 1956 ஆம் ஆண்டு சகஸ்ரநாமத்தின் சேவா ஸ்டேஜ், 1957 ஆம் ஆண்டு சிவாஜி நாடக மன்றத்தினர், 1961 ஆம் ஆண்டு எம்.ஜி.ஆர். நாடகமன்றம் போன்று பிரபல குழுக்கள் வருடாவருடம் பம்பாய் நாடக ஆர்வலர்களுக்குக் கலை விருந்தைத் தொடர்ந்து அளித்ததன் விளைவாக, மேலும் பல நாடகக் குழுக்கள் பம்பாயில் உதயமாயின. பம்பாய்த் தமிழ்ச் சங்க அங்கத்தினர்களே நாடகங்கள் நடத்தவும் துணிவு பெற்றனர். பெண் அங்கத்தினர்களே ஆண் வேடம் தரித்து நடிக்கும் ஆற்றலையும் அடைந்தனர். பம்பாய் நாடகக் கலையும் குழந்தைப் பருவத்தைத் தாண்டி முதிர்ச்சியின் எல்லையையும் தொட்டது. தொடர்ந்து பல நாடகக் குழுக்களும் தோன்றலாயின. அதே சமயத்தில் பல இழப்புகளும் நேர்ந்தன. 'சாமி' என்று அழைக்கப்பட்ட சுப்பைய்யா 1982 ஆம் ஆண்டில் காலமானார். அடுத்த இரண்டாண்டுகளுக்குள் 'அமெச்சூர் டிராமாட்டிக் கிளப்'பின் வழிகாட்டும் சுடராக விளங்கிய முரளி. கே.ராவ் தனது 34 ஆம் வயதில் அகால மரணமடைந்தார். பின்னர் அணுசக்தி நகர் கலை மன்றத்தினர் உயிராக இருந்த வெங்கட்டும், இசைக்கலைஞர் நெல்லை ஆறுமுகமும் மறைந்தது, பம்பாய் நாடக உலகிற்கு ஈடுசெய்ய முடியாத இழப்புகள்தாம்.

மகாலக்ஷ்மி லேடீஸ் டிராமா குருப்பின் "சிந்திக்க வைத்த சீதனம்"



இன்று 'மணிவிழா' கொண்டாடும் பம்பாய் தமிழ் நாடகத் துறையின் வரலாற்றிலே ஒரு சில நாடகக் குழுக்களே அதன் பிறப்பு முதல் இன்றும் இயங்கிக் கொண்டிருக்கின்றன. பம்பாயில் நாடகங்கள் தயாரிப்பதில் ஏற்படும் அதிகப்படியான செலவு, தமிழ் அமைப்புகளின்



ஆர்ட் லவர்ஸின் "ஆசை இருக்கு தாசில் பண்ண"

ஆதரவில்லாமை, 'ரிப்பீட் ஷோ'வுக்கு வாய்ப்பில்லாத சூழ்நிலை, ஒத்திகைகளுக்கு வேண்டிய இடவசதியில்லாமை, நல்ல தமிழ் நாடகாசிரியர்களின் பற்றாக்குறை, பெண் நாடக நடிகைகள் இல்லாதது ஆகியவை பம்பாய்த் தமிழ் நாடகக் குழுக்கள் தொடர்ந்து நல்ல முறையில் செயல்படாத தன்மைக்குக் கூறப்படும் சில காரணங்கள். ஆனால் அதே சமயத்தில் தமிழகத்தில் இல்லாத சில சாதகமான அம்சங்கள் பம்பாயில் இருக்கின்றன என்பதும் மறுக்க முடியாத உண்மைகள். மற்ற மொழி நாடகங்களைப் பார்த்து அதிலுள்ள சிறப்பான அம்சங்களைப் பின்பற்றும் வசதிகள் பம்பாயில் உள்ளன. தமிழ் நாட்டில் உருவாகின்ற நாடகங்கள் பார்த்தறியாத புதிய உத்திகள், மேடை நிர்மாணத்தின் நவீன முன்னேற்றங்கள், ஒளி, ஒலி நுணுக்கங்கள் ஆகியவைகளை பம்பாயிலுள்ள வளர்ச்சியடைந்த, ஆரோக்கியமான மராத்தி, குஜராத்தி, ஹிந்தி, ஆங்கில நாடகங்களிலிருந்து கற்று, அவைகளைத் தமிழ் நாடகங்களின் தேவைக்கேற்பப் பயன்படுத்தும் வாய்ப்பு பம்பாயிலுள்ளது.

தமிழ்நாட்டிற்கு வெளியே உள்ளவர்களுக்குத் 'தமிழுணர்வு' அதிகமாக இருப்பதுபோல், 'நாடக ஆர்வம்' பம்பாய்த் தமிழர்களிடையே மிகுதியாக உள்ளது. "நாடகத்தை ஒரு கோயிலாகக் கருதுகிறார்கள்" என்று அவர்கள் ஈடுபாட்டை மதிப்பிடுகிறார் கோமல் சுவாமிநாதன். சினிமாத்தனமும் வியாபார நோக்கும் பம்பாயிலுள்ள மற்ற மொழி நாடகங்களைப் போல் தமிழ் நாடகங்களையும் பாதிக்கவில்லை. "இவர்கள் படைப்பில் சினிமா வாசமில்லை; சினிமா நோய் தொற்றாததால் 'கற்பழியாமல்' நாடகங்கள் பிரமாதமாக வந்திருக்கின்றன" என்று 'சாளக்கிராமம்,

முரண்டு' நாடகங்களை ரசித்துவிட்டு சொன்னவர், பாரதிராஜா அவர்கள். அந்த நாடகங்களின் இயக்குநரான திரு. கே.ஆர். பரமேச்வர் பம்பாயில் பிறந்து, வளர்ந்தவர். மற்ற மொழி நாடகங்களைப் பார்த்து அறிவை வளர்த்துக் கொண்ட வாய்ப்பைப் பெற்றவர். நாடகத்துறையில் தேர்ச்சி பெற்ற திரு. மன்சூக் ஜோஷியிடம் மூன்று வருடகாலம் பயிற்சியும் அவரோடு சேர்ந்து கொண்டது. இந்தத் தகுதிகளின் பிரதிபலிப்பாக, அவரது நாடகங்கள் ஒவ்வொன்றிலும் புதிய உத்திகள் இடம்பெறுகின்றன. காட்சி ஜோடனைகள் அதிகமில்லாத குறியீடுகள், (சிம்பாலிக்), ஸ்பாட் லைட்டுகளைப் பயன்படுத்திப் பாத்திரங்களின் முக்கியத்துவத்தை வெளிப்படுத்துதல் போன்ற பல புதுமைகளை அவர் செய்து வருகிறார். சம்ஸ்கிருத நாடகத்தைப்போல் சூத்திரதாரியை நன்கு பயன்படுத்தி, பார்ப்பவர்களின்



மகாலக்ஷ்மி லேடீஸ் டிராமா குரூப்பின் "அக்கரைப்பச்சை"

கவனம் சிதறாமல் பார்த்துக் கொள்கிறார். பின்னணி இசையைக்கூட நாடக மையக் கருத்திற்கேற்ப அமைத்து வருகிறார். இத்தகைய தகுதிகளை பம்பாயில் பிறந்து, வளர்ந்து நாடகத்துறையில் தீவிரமாக ஈடுபடுவதற்காகவே சென்னையில் குடியேறிய பம்பாய் சாணக்கியனிடமும் பார்க்கலாம். அவரது 'நெருடும் உறவுகள்', சுதந்திர காண்டம் நாடகங்கள் தமிழ்நாட்டில் பல பரிசுகள் பெற்றிருப்பது, பம்பாய்த் தமிழ் நாடகக் கலையின் வளர்ச்சியைத் தெள்ளென எடுத்துக் காட்டுகிறது. 'வசனங்கள் மட்டும்தான் நாடகம்!' என்ற அளவில் இயங்குகின்ற பெரும்பாலான தமிழ் நாடகங்களிலிருந்து அவை மாறுபட்டிருப்பதால்தான் அவரால் தமிழகக் கலையன்பர்களின் பாராட்டுதல்களைப் பெற முடிந்தது. பம்பாயில் 'பிருத்வி', 'நேஷனல் சென்டர் ஃபார் ஃபெர்பாமிங் ஆர்ட்ஸ்' போன்ற சிறப்புமிக்க அரங்குகளிலும் நாடகம் போடும் தகுதிபெற்ற திரு.கே.ஆர். பரமேஸ்வரின் இந்தியன் தியேட்டர் சென்டரிலிருந்து அடுத்து வரும் நாடகங்களில் மேலும் பல புதுமைகளை ரசிகர்கள் எதிர்பார்க்க



இந்தியன் தியேட்டர் சென்டரின்

"கிராம ராஜ்யம்"




லாம். 'இருட்டிலே தேடாதீங்க', 'ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள்', 'தெய்வத்தின் குரல்' ஆகியவை அக் குழுவின் வரப்போகும் படைப்புகள்.

பம்பாய்த் தமிழ் நாடக உலகை இன்று பல தமிழ் இளைஞர்கள் ஆக்ரமித்துக் கொண்டாலும், அவர்களோடு மூத்த கலைஞர்கள் இன்றும் செயல்படுவது, ஆரோக்கியமான வளர்ச்சியாகக் கருதப்படுகிறது. பல வருடங்களுக்கு முன்பு கலைமாமணி எஸ்.ஆர். கஸ்தூரி நடித்த 'புரந்தர தாஸர்' நாடகத்தைப் பார்த்த கலாரசிகர் வீயெஸ்வி, "கஸ்தூரி தன் சக கலைஞர்களுடன் புரந்தரதாஸராக அரிதாரம் பூசிச் சென்னைக்கு அவதாரம் எடுத்து வந்தது நல்ல மாறுதல். ஆனால் அவர்கள் பம்பாயில் செட்டில் ஆகியிருப்பதுதான் சென்னை ரசிகர்களின் துரதிர்ஷ்டம்" என்றார்.

1965 ஆம் ஆண்டு முதன் முதலாக மேடையேறிய 'தியாகராஜர்' நாடகத்தில் இன்றும் 30 பாடல்களைப் பாடி நடித்து வருகிறார், அந்தப் பழம் பெரும் கலைஞர், 'தியாகராஜ கஸ்தூரி'. அதுபோலவே ஃபைன் ஆர்ட்ஸ் ரிக்ரியேஷனின் நாடகங்களில் தொடர்ந்து மூத்த கலைஞர்கள் எஸ். இராகவன், கே.என். ஸ்ரீனிவாசன், வி.எஸ். நாகராஜன், எஸ். கோபால் ஹாரநாத், எஸ்.ஸ்ரீதர், ஏ.சி. சுப்பிரமணியம், ராமசேஷன் போன்ற பலர் இன்றும் ஆர்வம் குன்றாமல் நடித்து வருகின்றனர். அக் குழுவிலுள்ள இராம்குமார் ஹிந்திப் படங்களிலும் பங்கேற்கும் தகுதியைப் பெற்றிருக்கிறார். 'ஆர்ட் லவர்ஸ்' என்ற குழுவில் ஷேக்ஸ்பியர் சேஷுவின் மகன் சீனிவாசன் (சீனா) தனது நாடகத்துறை அனுபவத்தை அதன் இயக்குநராக நன்கு பயன்படுத்தி வருகிறார். அக் குழுவின் அடுத்து வரவிருக்கும் 'ஒய்வு' நாடகம் திரு. அசோக் பட்டாலே எழுதிய 'ஆபி ரிடையர் ஹோதே' (மராத்தியின் தமிழாக்கம். மொழி பெயர்த்து. நாடக வடிவம் கொடுத்திருப்பவர் பம்பாயில் பிறந்து, வளர்ந்த நஞ்சுண்டான். இதுவரைக்கும் பல மராத்தி நாடகங்களைத் தமிழாக்கி மேடையேற்றியிருப்பவர்கள் 'பாம்பே கல்ச்சுரல் அஸோஸியேஷன்'. அவர்கள் வெள்ளிவிழா ஆண்டுப் பரிசாக அரங்கேற்றிய நாடகம், வஸந்த் கானேக்கரின் 'கல்யாண வசந்தம்'.

நாடகாசிரியரும், நடிகருமான பாலுவின் திறமையில் உருவெடுத்த பல நல்ல நாடகங்களை அளித்து வரும் குழு, 'நாடகக்காரன்'. அக் குழுவோடு பம்பாயில் இணைந்திருந்த கண்ணன், இன்று 'பம்பாய்க் கண்ணனாக' தமிழ்நாட்டில் வேகமாக வளர்ந்து வருகிறார். 'கிராண்ட் ரிகர்சல்', 'கிருஷ்ணா காதல் வைபோகமே!', 'நானும் நாயகன் தான்', 'வாழ்க, வளர்க!' போன்றவை அவரது ஆற்றலை வெளிப்படுத்திய நாடகங்கள். சென்னையில் அவர் அமைத்த 'நாடகக்காரன்' குழுவின் 'இருவீடு, ஒரு வாசல்' நாடகத்தின் கதை, வசனம், டைரக்ஷன் பொறுப்பையும் ஏற்றுள்ளார். அதன் இரண்டாவது படைப்பான 'வரவுக்குக் கை கொடுப்போம்' நாடகம் தொடர்ந்து தமிழகமெங்கும் நடத்தப்பட்டு வருகிறது. பம்பாயிலுள்ள பாலுவின் 'நாடகக்காரன்' குழுவோ தங்களது நாடகங்களில் புதிய கலைஞர்களை அறிமுகப்படுத்தும் பணியில் ஈடுபட்டுள்ளது. 'பனைமரத்தடியிலே' என்ற நாடகத்தில் சாக்கியர் கூத்தில் பிரபலமாகியிருக்கும் ராஜனையும் (கேரள சங்கீத நாடக அகாதமி பரிசு பெற்றவர்) அவரது மனைவியையும், அறிமுகப்படுத்தியுள்ளார். கே.டி. சந்திரனோடு அவரது மகள் சுதாவும் (மயூரி புகழ்) பிரதான பாகங்களில் நடித்துள்ளனர். அக் குழுவிலிருந்த ஜோக்கர் ராமுடுபோல் கே.டி. சந்திரனும் பல ஹிந்தித் திரைப்படங்களில் நடிக்கிறார். 'பாஸ்மார்க்' நாடகத்தில் முக்கிய பாத்திரமான பேராசிரியரின் குணநலன்களுக்கொப்ப பம்பாயில். வாழ்ந்து வரும் நேரு நட்சத்திராலயா இயக்குநர் டாக்டர். வி.எஸ். வெங்கட்வரதனையும் நடிக்க வைத்த பெருமை இயக்குநர் பாலுவுக்குரியது.

'ஆண்களுக்கு நாங்கள் என்ன சளைத்தவர்களா?' என்று சவால் விடுவதுபோல் முதன் முதலாக பெண்கள் நாடகக் குழுவை அமைத்திருப்பவர் திருமதி ஞானம் பாலசுப்பிரமணியன். அவரது மகாலக்ஷ்மி லேடிஸ் டிராமா குருப்' 'சிந்திக்க வைத்த சீதனம்', 'அக்கரைப் பச்சை', 'மாமியார் மைனஸ் இன்லா (அம்மா)', 'பெண்கள் மிரண்டால்' ஆகிய பெண்களைப் பாதிக்கும் சமூக அவலங்களைப் படம் பிடித்துக் காட்டுகிற நாடகங்களைத் தொடர்ந்து, உருவாக்கும் மற்றொரு நாடகம் 'பாசத்தின் பரிமாணம்'. முதல் இரு நாடகங்களும் சென்னை சபாக்களில் அரங்கேறியபோது, ரசிகர்களின் ஏகோபித்த பாராட்டுதல்களைப் பெற்றன. 'பம்பாயில் தமிழ் நாடகம் போடுவதையும் லாபகரமாக்க இயலும்' என்பதைச் செயலில் காட்டியிருப்பவர், நாடகத்தைத் தொழிலாகக் கொண்ட நெல்லை மணி. அவரது 'சுப்ரியா தியேட்டர்' குழு 'திடீர் மனைவி உருவாகிறாள்', 'எல்லோரும் சிரிக்கலாம்' நாடகங்களை மேடையேற்றியுள்ளது. அக் குழுவின் அடுத்து வரும் நாடகம் 'சிரிப்பதற்குச் சில நிமிடங்கள்'.

தமிழகத்தின் தற்போதைய சூழ்நிலையில் நாடகக்கலை வளருவதற்கான சாத்தியக்கூறுகள் அதிகமாக இல்லை. இப்பொழுது வெற்றிகரமாக இயங்குகின்ற நாடகக் குழுக்களிடமிருந்து தரமான நாடகங்களை எதிர்பார்ப்பதும் வீண் கனவுதான். அவை செய்யத் தவறிய பணியை பம்பாய்த் தமிழ் நாடகக் குழுக்கள் மேற்கொள்ள இயலும். அவைகளுக்கு ஒத்துழைப்பும், ஆதரவும் தரவேண்டியது, தமிழ் அமைப்புகளின் கடமையாகும்.

ஃ

## வெள்ளைப்புறாவும் சொட்டுத் தேனும்



- பொன்மணி

இது
வாழ்க்கைத் தளத்தில்
காலத்தின் நிரம்புசும் கவிதை

ஆசைக் கடலில்
ரோஜாப் படகுவிடும் வானவில்

அன்புத் திசையில்
பதியும் புஷ்பச் சுவடு

கைப்பிடித்து
என்னுடன் வரும் நட்சத்திரக் குட்டி..

சிரிப்புப் பெட்டியின்
சிவந்த உதடுகள்
சிந்தி வருவது உவகை நதி

அதில் மூச்சை அடக்கி
மூங்கிக் குளிக்க
அழைப்பது மழலை மொழி....

வருங்கால அறிவுக்கு
இது ஆரம்பப் புள்ளி
வளர் விஞ்ஞானம் கலைகளுக்கு
என்னாளும் புதிய பள்ளி....

வாலிப இந்தியாவை
வார்த்தெடுத்த நேருவின் கை
நாடியதும், அது

ஒரு அமைதிப் புறாவும்
அழகுக் குழந்தையும்.....



சித்திரம்: ஓவியர் விஜு
விளக்கம்: ரா. கணபதி

## கங்கா பானம் ஆச்சா?

சிவபெருமானைத் தாங்கும் காளையிடம் அம்பிகைக்கு அன்பு புரண்டு வந்தது. 'அமரரேறு ஏறி அமரும் ஏறு அல்லவா அது? எப்பேர்ப்பட்ட சுமையைத் தாங்குகிறது? ஐயனது கழலணியாக உள்ள அனந்தனின் ஆயிர முடிகளிலுள்ள அண்ட பகிரண்டங்கள் தொடங்கி, குழலில் கனவேகமாகப் பாயும் கங்கை வரையில்...'

கங்கையை எண்ணினாளோ இல்லையோ, தேவியின் சித்தப் போக்கு அடியோடு மாறிவிட்டது. சக்களத்திக் காய்ச்சல் தெரிந்தது தானே? 'சீ! பதியின் தலையிலா ஏறி அமர்வது? அவளாகவேயா அமர்ந்தாள்? விண்ணிலிருந்து விழுந்த அவளை இவரல்லவா குறுக்கிட்டுச் சிரசால் வகித்தார்?'

குளிர்க் கங்கையிடம் தேவிக்கு மூண்ட கோபக்கனல் கங்காதரன் மீதும் பாய்ந்து பெரும் ஜ்வாலையாயிற்று. அந்த வெப்பத்தில் ரிஷபத்துக்கு நாவுலர்ந்து தாங்கொணாத் தாகம் உண்டாயிற்று.

அப்போது ஈசன் மேலும் ஓர் 'அநியாயம்' செய்தான். பார் அனைத்திற்கும் பசி, தாகம் தீர்க்கும் அன்ன பூரணியாக அன்னை இருக்க, அவன் தன்னுடைய விடையின் விடாய் தீர்க்கச் சடைமுடியைச் சாய்த்துக் கங்கையைப் பெருக்கினான். காளையும் கங்கா பானம் செய்தது. அதன் தாகம் தணிந்தது.

ஆனால் தேவியோ ருத்திரனிடமே தணியாத ரௌத்திரம் கொண்டு புறப்பட்டு விட்டாள்.

அவன் செய்த நாடகந்தான் அது. 'அவள் அன்பாயிருக்கும்போது தானும் அன்பாயிருந்தால் தனக்கு அவளிடம் மட்டுமேயுள்ள அன்பின் உயிராழம் அவளுக்குத் தெரியாது. அவள் தன்னிடம் சீறி விழுந்து முகத்தாலடிக்கும் போதும் தான் அவளிடம் குழைந்து தழைந்தால்தான் அவள் தன் உள்ளன்பை உணர்வாள் என்பதால்தான் அவன் அவளை நன்றாகச் சீண்டிவிட்டான். அவள் சண்டியாகக் கனன்றெழுந்தவுடன், உள்ள தாஜாவும் செய்து மண்டியிட்டான்.

பிரிவற்ற சிவமும் சக்தியும் பிரேமையில் ஒன்றுகூடின.

அப்புறம் கங்கையிடங்கூட அம்பிகையின் மாற்றுணர்ச்சி மறைந்தது. நந்தியைக் கொண்டே நந்தமிழ் நாட்டிலும் கங்கையைப் பாய வைக்குமளவுக்கு நேயப்பான்மை கொண்டு விட்டாள்!

ஊடலின் ஊடாகப் பிறந்த இந்த கங்காப் பிரசாதத்திற்குச் சான்று பகர்கிறது, ஊறல் எனும் தலம். தொண்டை மண்டலத்திலுள்ள தக்கோலமே தேவாரம் கூறும் அத்திருஊறல். அங்கு சம்பந்தரின் தேவாரம் கொண்ட உமாபதீசுவரர் தவிர கங்காதரேசுவரருக்கும் ஆலயமுண்டு. அந்த கங்காதரனையும் ஆளுடைய பிள்ளையார் மறவாமல் "ஓடு புனற் சடை மேற்கரந்தான் திருவூறல்" என்று பதிகக் கடைக் காப்பில் கூறியிருக்கிறார். அப்பெருமானைச் சுற்றி சந்நிதியில் ஒரே நீர்க்காடாக இருக்குமாம். கங்கை என்றே அதைச் சொல்வார்கள். அந்த கங்கை எங்கு ஊற்றெடுத்து அத் தலத்தை 'ஊறல்' ஆக்கிற்றென்றால் மேலைப் பிராகாரத்திலுள்ள நந்தியம் பெருமானின் திருவாயிலிருந்துதான்!

நீர்ப்படுகையின் நுட்ப திட்பமறிந்து, சரியாக ஓர் ஊற்றுக்கண் உள்ள மட்டத்தில் நந்தியின் வாய் அமையுமாறு பண்டைத் தமிழகம் கண்ட அறிவியல் - சிற்பவியல் அற்புதம்! நாற்பது, ஐம்பது ஆண்டுகளுக்கு முன் வரையில், அதாவது அப் பகுதிப் புன்செய் நிலங்களில் துளைக் குழாய்கள் நிறைய இறக்கி அடிநீர்ப் போக்கை மாற்றியதற்குப் பூர்வ காலத்தில் ஊறல் நந்தியார் கங்காதரன் சந்நிதியில் பாதாள கங்கையைப் பெருகவிட்டிருக்கிறார்.

இன்று கங்கை பெருகாவிடினும் அம்பிகையின் அருளால் செந்தமிழ் நாட்டில் நந்தியம்பெருமான் கங்கை பெருக்கிய விநோதக் கதையும், அதன் பின்னணியில் இங்கு விஜு வழங்கும் ஓவியமும் தீபாவளித் திருநாளுக்கு முக்கியமான கங்கா ஸ்நான இன்பத்தை அளிக்கின்றன. ♣

# சோழமாதேவி கைலாயமுடையார் கோயில்

"ஸ்ரீரங்கம் ஸ்ரீதரன்"



கருவறை - வடக்குப் புற தோற்றம்



பிட்சாடனர் அருகே ரிஷி பத்தினி.

காவிரி ஆற்றின் இருமருங்கும் பாடல் பெற்ற கோயில்கள் பல உள்ளன. இவைகளில் பல நாயன் மார்களாலும் ஆழ்வார்களாலும் பாடல் பெற்ற திருத்தலங்களாக உள்ளன. மேலும் பல கோயில்கள் வரலாற்றுச் சிறப்பு மிக்க கல்வெட்டுகளையும் கலையழகு மிக்கச் சிற்பங்களையும் தன்னகத்தே கொண்டு தமிழகத்தின் பண்பாட்டை எடுத்துக் காட்டும் வகை யில் அமைந்துள்ளன. அத்தகைய கோயில்களில் ஒன்று திருச்சி மாவட்டம் சோழமாதேவி என்னும் ஊரில் உள்ள கைலாயமுடையார் கோயில் ஆகும்.

திருச்சியிலிருந்து தஞ்சை செல்லும் சாலையில் சென்றால் திருவெறும் பூரை அடையலாம். திருவெறும்பூரில் இருந்து தெற்கே சூரியூர் செல்லும் சாலையில் 3 கி.மீ. தொலைவில் சோழமாதேவி என்னும் சிற்றூர் உய்யகொண்டான் ஆற்றுக் கரையில் அமைந்துள்ளது. இவ்வூரில் உள்ள கோயில் அளவில் சிறிய கோயில் தான்! ஆனால் வரலாற்றுச் சிறப்புகள் பல கொண்டது. இனி கோயிலைப் பார்ப்போமா!

ஊரின் வடகிழக்கு மூலையில் கிழக்கு நோக்கி கோயில் காணப்படு கிறது. கருவறை, அர்த்தமண்டபம், மகா மண்டபம் என்ற அமைப்புகளை உடையதாக கோயில் விளங்குகிறது. மகா மண்டபத்தில் தெற்கு நோக்கி காணப்படும் தேவியின் சந்நிதி முற்றிலும் சிதிலமடைந்து உள்ளது. இம் மண்டபத்தில் காணப்படும் மாலை கட்டும் மேடை போன்றவை ஒரு காலத்தில் இங்கு சிறப்பான வழிபாடு நடைபெற்றதை மவுனமாய் நமக்கு எடுத்துரைக்கின்றன.

கோயிலைச் சுற்றி வருவோமா! இடது பக்கமாகச் சுற்றி வரலாம். பார்த்து வாருங்கள். கொஞ்சம் அசந் தால் கோயிலையே மறைத்து வளர்ந் திருக்கும் முள்செடிகள் காலைப் பதம் பார்த்து விடும். கருவறைச் சுவரின் ஐந்து தேவகோட்டங்களில் அழகிய சிற்பங்களைக் காணலாம். முதலில் காண்பது சிவபெருமான் பிச்சை உவக்கும் பெருமானாகிய பிட்சாடனர் திருக்கோலம். இடையில் ஆடையின்றி கபாலம் ஏந்தி இளநகை புரிந்த வண்ணம் நடைபோடுகின்றார். இச்சிற்பத்தின் ஏதிரே பெண் ஒருத்தி (ரிஷி பத்தினி) கரண்டியை ஏந்தி ஆடைநெகிழ நிற்கிறாள். அவளின் காலடியின் கீழே பானைகள் அடுக்கி வைக்கப்பட்டுள்ளன. சிவபெருமான் தாருகாவனத்து ரிஷிபத்தினிகளின் கர்வத்தை அடக்கும் புராண நிகழ்ச் சியைக் கூறும் சிற்பமாக இது அமைந் துள்ளது. பிட்சாடனர் திருஉருவத்தை தேவகோட்டத்தில் அமைக்கும் வழக்கம் பராந்தக சோழன் காலத்து கோயில்களிலிருந்தே துவங்கிவிட்டது எனலாம். இத்தகைய அமைப்பு பிற் கால சோழர்கள் அமைத்த கோயில் களிலும் காணப்படுகிறது. பிட்சாட னரும் ரிஷிபத்தினியும் இக்கோயிலில்

அதிட்டான பலகைச் சிற்பம் - கஜசம்கார மூர்த்தி





திருமால் சிற்பம் சோழமாதேவி ஊரில் காணப்படுகிறது. வீரசோழ விண்ணகர் பெருமானடிகள் கோயிலில் வழிபாடு செய்யப்பட்ட திருஉருவம்.



இசைக்கருவியை வாசிக்கும் - அடியவர் (உவச்சர்)

அதிட்டான பலகைச் சிற்பம்

இருப்பது போன்றே திருச்சி மாவட்டம் கோவிந்த புத்தூர் கோயிலிலும் சிற்பம் இருப்பதைக் காண முடிகிறது. பிட்சாடனர் அருகே சதுரவடிவான சிறு பிறை போன்ற அமைப்பில் விநாயகரின் திருஉருவம் அமைக்கப்பட்டுள்ளது.

அடுத்த தேவகோட்டத்தில் தட்சிணாமூர்த்தியின் உருவம் காணப்படுகிறது. ஆனால், இவ்வுருவம் முழுவதும் தேய்ந்து போய் உருவமே தெரியாதபடி உள்ளது.

மேற்கு புற தேவகோட்டத்தில் திருமால், சங்கு, சக்கரம் ஏந்தி நின்ற கோலத்தில் இருப்பதைக் காணலம். தலைக்கு மேலே இருபுறமும் சாமரங்கள் காணப்படுகின்றன. காலின் அருகே இருபுறமும் குத்துவிளக்குகள் காணப்படுகின்றது. அருமையான சோழர்கால குத்துவிளக்குகள். இத் தேவ கோட்டத்திற்கு மேலே மகர தோரணம் அழகிய வேலைப்பாடுடன் விளங்குகிறது. மகர தோரணத்தின் நடுவே கண்ணன் தன் தோழர்களுடன் உரியிலிருந்து வெண்ணெய் திருடும் காட்சியைக் காணலாம். கண்ணனின் லீலை இங்கே காணப்படுவது எந்த கோயிலுக்கும் இல்லாத சிறப்பாகும்.

தெற்குப்புறச் சுவரில் உள்ள தேவ கோட்டங்களில் பிரம்மா, துர்க்கை ஆகிய திருஉருவங்கள் நம் நெஞ்சைக் கவர்கின்றன.

கருவறையின் அதிட்டானப் பகுதியில் முப்பட்டைக் குமுத அலங்கார அமைப்புக்கு மேலே சிறு பலகைச் சிற்பங்கள் காணப்படுகின்றன. காளியமர்த்தனர், கஜசம்காரமூர்த்தி, நந்தி, நடன மகளிர், இசைக் கருவிகளை வாசிக்கும் அடியவர், ஆடவல்லான், திரிபுராந்தகர், கஜலட்சுமி, சரசுவதி, அன்னம், அய்யனார், சிங்கம், யாளி, லிங்கோத்பவர் போன்ற அழகிய சிறு வடிவங்கள் செதுக்கப்பட்டு அமைத்திருக்கும் பாங்கு நம் கண்ணையும் கருத்தையும் கவர்கிறது. விமானத்தில் கொடுங்கைக்கு கீழே எழுதகம் என்ற பகுதியில் பூத கணங்கள் பல விதமான இசைக் கருவிகளை வாசிப்பதைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம்.

விமானம் - பூத கணங்கள் பல்வேறு இசைக் கருவிகளுடன்...



இக் கோயிலின் சுவரில் மொத்தம் பதினாறு கல்வெட்டுகள் காணப்படுகின்றன. முதலாம் இராசராச சோழன், முதலாம் இராசேந்திர சோழன், அவனுடைய மைந்தன் வீரராசேந்திர சோழன் ஆகியோரது காலத்தைச் சேர்ந்தவையாகும். கல்வெட்டுகளிலிருந்து அறியப்படும் செய்திகள் சுவையானதும் வரலாற்றுச் சிறப்பும் கொண்டவையாகும்.

### ஸ்ரீகைலாயமுடையார்

கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவன் 'ஸ்ரீகையிலாயமுடையார்', 'ஸ்ரீகைலாசத்து பரமேசுவரர்' என்று அழைக்கப்படுகிறார். இவ்வூர் 'தென் கரை பிரம்மதேயம் ஸ்ரீசோழ மகாதேவிச் சதுர்வேதி மங்கலம்' என அழைக்கப்படுகிறது. காவிரியின் தென்கரையில் இவ்வூர் அமைந்துள்ளது.

### பராந்தகன் ஆதித்தபடாரியார்

இராசராச சோழனது 8ஆவது ஆட்சி ஆண்டு கல்வெட்டில் வீரசோழ இளங்கோவரையர் தேவியார் பராந்தகன் ஆதித்தபடாரியார் என்பவள் இக் கோயிலுக்கு வழிபாட்டிற்குத்

தானம் அளித்துள்ளாள். சோழர்களும், கொடும்பாளூரைத் தலைநகராகக் கொண்ட இருக்குவேளிர்களும் மண உறவு கொண்டிருந்தனர். மேலே குறிப்பிடப்பட்டப் பெண் இருக்குவேளிர் குலத்தைச் சேர்ந்தவளாக இருக்க வேண்டும்.

### நந்தவனப்புறம்

சோழமகாதேவி சதுர்வேதி மங்கலத்து ஊர் மத்யஸ்தன் (கிராம கணக்கு அலுவலர்) ஏறன் கூத்தாடியான மகாஜனப் பிரியன் என்பவன் இக் கோயிலுக்கு நந்தவனம் அமைக்க நந்தவனப்புறமாக நிலம் கொடுத்தான். அதில் மல்லிகையும், இருவாட்சியும், சிறு செண்பக மலர் ஆகியவை பயிர் செய்யப்பட்டு கோயிலுக்கு அளிக்கப்பட்டன. அந் நந்தவனத்தை நீர்க்குறைவும், வேலிக் குறைவும் மற்றும் எப்பேர்பட்ட குறையும் இன்றி பராமரிக்க வேண்டும் என்றும் கல்வெட்டு கூறிச் செல்கிறது. கோயிலுக்கு தடையின்றிப் பூக்கள் கிடைக்க வேண்டும் என்ற நல்ல நோக்கத்துடன இவ்வாறு நிபந்தனைகளுடன் நிலம் அளிக்கப்பட்டதை அறியும் பொழுது நம் நெஞ்சம் எவ்வளவு மகிழ்ச்சி அடைகிறது. அளிக்கப்பட்ட நிலத்தின் எல்லையைக் குறிக்கும் பொழுது பல நிலங்களின் பெயர்கள், வாய்க்காலின் பெயர்கள் எல்லாம் தெளிவாக கல்வெட்டில் குறிக்கப்படுகிறது.

### ஸ்ரீகோயிலுடையார்கள்

இக் கோயிலில் இருந்த ஸ்ரீகைலாசத்து உமாபட்டராகிக்கு திருவமுது படைப்பதற்காக நிலம் அளிக்கப்பட்டது. இந்நிலத்தை 'ஸ்ரீகோயிலுடையார்கள்' என்பவர்கள் பெற்றுக் கொண்டு கோயிலைப் பராமரித்து வந்தார்கள் என்பதையும் அறிய முடிகிறது.

### இராஜராஜன் பேரம்பலம்

பண்டைக்காலத்தில் ஒவ்வோர் ஊரிலும் ஊர்சபை, அவ்வூரில் இருந்த கோயிலின் மண்டபத்தில் கூடியது என அறிகிறோம். சோழமாதேவியிலும் ஊர்சபை இராசராசன் என்று பெயரிட்டு அழைக்கப்பட்ட மண்டபத்தில் கூடியது. இதனைப் பிரம்மஸ்தானம் என்ற கல்வெட்டு குறிப்பதிலிருந்து இராசராச சோழன் காலத்தில் முதன் முதலில் இவ்வூர் அமைக்கப்பட்டது என்பதையும் அறிய முடிகிறது.

### வீரசோழவிண்ணகர் பெருமான் கோயில்

இவ்வூரில் பெருமாள் கோயிலும் இருந்திருக்கிறது. சோழமாதேவி ஊர் சபையார் இவ்வூரில் இருந்த ஸ்ரீவீர சோழ விண்ணகர் பெருமானடிகள் மற்றும் நம்பிராட்டியார் ஸ்ரீதேவி பிராட்டியார்க்கும், பூமிதேவி பிராட்டியார்க்கும் அமுது செய்ய 220 கலம் நெல் அளிக்க முடிவு செய்ததை ஒரு கல்வெட்டு குறிக்கிறது. தற்பொழுது இவ்வூரில் பெருமாள் கோயில் ஏதுமில்லை. ஆனால் இவ்வூரில் கள ஆய்வு மேற்கொண்டபோது ஊரின் நடுவில் சாலையோரம் திருமால் சிற்பம் ஒன்றும், தேவியின் சிற்பம் ஒன்றும் பூமியில் பாதி அளவு புதைந்திருப்பது காணப்பட்டது. உருவ அமைப்பைக் கொண்டு பார்க்கும் பொழுது அவை 10 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததென உறுதியாகக் கூறலாம். வீரசோழ விண்ணகர் பெருமாள் கோயிலில் ஒரு காலத்தில் சிறப்புற வழிபடப்பட்ட அத் திருஉருவங்களின் இன்றைய நிலைமையைக் காணும் பொழுது நம் கண்ணில் நீர் பெருகுகிறது.

### உவச்சர்கள்

கோயில்களில் இசைக்கருவிகளை வாசிப்பவர்கள் உவச்சர்கள் எனப் பட்டனர். சோழமாதேவி கோயிலில் உவச்சப்பணி செய்ய 1. இரண்டாயிரவன் கணத்தானான சோழமாதேவி பெருவச்சன் 2. இவன் தம்பி இரண்டாயிரவன் கடம்பனான காந்தருவ பேருவச்சன். 3. இவன் தம்பி இரண்டாயிரவன் பல்லவராயன், 4. இவன் தம்பி இரண்டாயிரவன் திருவரங்கதேவன் என்ற பெயர்கள் கொண்ட ஒரே குடும்பத்தைச் சேர்ந்த நான்கு சகோதரர்கள் நியமிக்கப் பட்டனர். உவச்சப்பணி செய்ய தான

தெற்குச்சுவர் - ரிஷி பத்தினி அண்மைத்தோற்றம்

தெற்குச் சுவர் - பிள்ளையார் சிற்பம்



மேற்குத் தேவகோட்டம் - திருமால் - காலின் அருகே விளக்குகள்

மாக அளிக்கப்பட்ட நிலம் 'உவச்சப் புறம்' எனப்பட்டது. பிற்காலத்தில் ஏதேனும் ஒரு காரணத்தால் இவர்கள் பணி நடைபெறாது போனால் கோயிலில் விளக்கு எரிக்க எண்ணெய் அளிக்க வேண்டும் என்ற நிபந்தனையும் கல்வெட்டில் குறிக்கப்படுகிறது. கோயிலுக்காக அளிக்கப்பட்ட தானம் எவ்வகையிலாவது கோயிலுக்கே செலவழிக்கப்பட வேண்டும் என்ற நல்லெண்ணத்தையும் அறிந்து கொள்ள முடிகிறது.

### பஞ்ச மகாசப்தம்

சிவன் கோயிலிலும், பெருமாள் கோயிலிலும் உவச்சர்கள் 'பஞ்ச மகாசப்தம்' செய்ய நிலம் அளிக்கப் பட்டதாக இராசராச சோழனது 26 ஆவது ஆட்சி ஆண்டு கல்வெட்டினால் அறிய முடிகிறது. 'பஞ்ச மகாசப்தம்' என்றால் என்ன? பஞ்ச மகாசப்தம் பற்றிப் "பஞ்ச மரபு" என்ற இசைத் தமிழில் நூல் பாடல் வடிவில் எடுத்துரைக்கிறது.

"சொல்லிய நற்றோல் துளை துய்ய
மென்னரம்பு
கல்வி திரு கஞ்ச மிட றெனவே -
வெல்லுமதன்
அஞ்சப்படும் விழியா யாயுங்கா
லிவ்வைந்தும்
பஞ்ச மாசத்தமாய்ப் பார்".

இசைக் கருவிகள் தோல், துளை, நரம்பு, கஞ்சம், மிடறு (வாய்ப்பாட்டு) என்ற ஐந்திலிருந்து தோன்றும் இசை ஒன்று சேர்ந்து 'பஞ்சமாசப்தம்' என அழைக்கப்படுகிறது.

பஞ்ச மகாசப்தம் கொட்டுவதற்காகத் தானம் அளிக்கப்பட்டதாக திருச்செந்துறை (திருச்சி மாவட்டம்), பூவாலைக்குடி (புதுக்கோட்டை மாவட்டம்) கோயிற் கல்வெட்டுகள், திருச்செங்கோடு செப்பேடு முதலிய வற்றில் காண முடிகிறது. ஆனால் இவற்றில் என்னென்ன இசைக் கருவிகள் வாசிக்கப்பட்டது என்பதைக் குறிக்கவில்லை. சோழமாதேவி கோயில் கல்வெட்டில் 'கரடிகை', 'மத்தளம்', 'சங்கு', 'காளம்' என்ற இசைக் கருவிகள் குறிக்கப்படுவது ஒரு சிறப்பாகும். கரடிகை ஒன்றும், மத்தளம் இரண்டும், சங்கு இரண்டும், காளம் நான்கும் ஆக மொத்தம் ஒன்பது இசைக்கருவிகள் நாள் தோறும் வாசிக்கப்பட்டதை அறியும் பொழுது இக் கோயிலில் எவ்வளவு சிறப்பாக வழிபாடு நடந்திருக்க வேண்டும் என்பதை நம்மால் உணர முடிகிறதல்லவா!

### இராசேந்திர சோழன் கல்வெட்டுகள்

இராசேந்திர சோழன் காலத்திய 2 ஆவது 3 ஆவது 20 ஆவது ஆட்சி ஆண்டு கல்வெட்டுகளும் இக் கோயிலில் காணப்படுகின்றன. சந்தி விளக்கு எரிக்க தானம் அளித்த செய்தி ஒரு கல்வெட்டில் குறிப்பிடப் படுகிறது. இராசேந்திரன் பிறந்தது திருவாதிரை நாளாகும். அதனை சிறப்பாகக் கொண்டு சித்திரை மாதம் ஏழு நாள்கள் திருவாதிரை விழா இக் கோயிலில் கொண்டாடப்பட்டது.

### ஆற்று வாரியம்

இராசேந்திரனுடைய கல்வெட்டில் 'ஊர் வாரியம்', 'உய்ய கொண்டான் ஆற்று வாரியம்' என்ற அமைப்புகளின் பெயர்கள் காணப்படுகின்றன. காவேரிப்பாக்கம் கல்வெட்டில் ஊர்ப் பணிகளை கவனிப்பதற்காக ஏரி வாரியம், கலிங்கு வாரியம், கழனி வாரியம் போன்ற அமைப்புகள் இருந்ததாக அறிகிறோம். ஆனால் சோழமாதேவி கோயிலில் 'ஆற்று வாரியம்' என்ற அமைப்பினைக் குறிப்பது ஒரு சிறப்பாகும். உய்ய கொண்டான் ஆற்றுக் கரையில் இவ்வூர் அமைந்திருப்பதால் இங்குள்ள நிலங்களுக்கு நீர் முறையாகப் பாய்வதற்கு இந்த அமைப்பு செயல்பட்டிருக்க வேண்டும். பண்டைய பாசன முறை பற்றி அறிந்து கொள்ள இச் செய்தி பெரிதும் உதவுகின்றது என்றால் மிகையில்லை.

### சங்கர பாஷ்யம்

இக் கோயிலிலுள்ள வீர ராசேந்திர சோழனுடைய கல்வெட்டு மேலும் முக்கியமானதொரு செய்தியைத் தரு கிறது. அக் கல்வெட்டில் பின்வருமாறு குறிக்கப்படுகிறது.

"பாண்டிய குலாசனி வளநாட்டு
பிரம்மதேயம்
ஸ்ரீசோழமாதேவி சதுர்வேதி மங்கலத்து
பெருங்குறி சபையோம் திருமாதிருநல்
சாலை
ஆழ்வார் திருமுற்றத்து கூட்டம் குறைவறக்
கூடியிருந்து பணிப் பணியால் பணித்து
பகவத்பாதீயம் சாரீரக பாஷ்யத்திற்கு
சிதாநந்த படாரர் பண்ணின பிரதிபகம்
ஆகிற வார்த்திகம் வக்கணிப்பார்க்கு
விருத்தியாக விட்ட நிலம்".

சோழமாதேவி ஊர் சபையார் சங்கர பகவத்பாதாள் அருளிய பாஷ்யத்திற்கு சிதாநந்த படாரர் என்பவர் எழுதிய பிரதீபகம் என்னும் உரையை இவ்வூரில் விரிவுரை செய்பவர்களுக்கு நிலம் தானம் அளித்தனர் என்று கல்வெட்டினால் அறிகிறோம். வேதாந்தங்களின் (உபநிடதங்களின்) தத்துவப்பொருளை ஆய்வு செய்யும் சாஸ்திரத்திற்கு "சாரீரக மீமாம்சை" என்று பெயர். ஆதி சங்கரர் பகவத்பாதாள் பிரம்ம சூத்திரத்திற்குத் தாம் எழுதிய பாஷ்யத்தை 'சாரீக மீமாம்சை' என்றே குறிக்கிறார். அதையே இக் கல்வெட்டு 'பகவத் பாதீயம் சாரீரக பாஷ்யம்' என்று விளக்குகிறது. சங்கர பாஷ்யத்திற்கு சிதாநந்தர் என்ற ஒரு பெரியவர் விரிவுரை ஒன்று எழுதியிருக்கிறார். அதற்கு பிரதீபகம் என்றும், வார்த்திகம் என்றும் பெயரிட்டு அழைக்கப்படுகிறது. இதனைக் கல்வெட்டு 'சிதாநந்த படாரர் பண்ணின பிரதீபகம் ஆகிற வார்த்திகம்' என்று கூறுகிறது. கி.பி. 8 ஆம் நூற்றாண்டின் மத்தியில் சிதாநந்தர் என்ற ஒரு பெரியவர் காஞ்சி சங்கர மடத்தில் 36 ஆவது குருவாக அலங்கரித்துள்ளார். எனவே ஆதிசங்கரரையும் அவரது பாஷ்யத்தையும் குறிக்கும் மிகவும் தொன்மையான ஆதாரபூர்வமான கல்வெட்டு இதுவேயாகும். கி.பி. 10-11 ஆம் நூற்றாண்டுகளில் எண்ணாயிரம், திருமுக்கூடல் போன்ற ஊர்களில் கல்லூரிகள் இருந்ததையும் அங்கு வேதாந்த பாஷ்யங்கள் போதிக்கப்பட்டதையும் சோழர்கால கல்வெட்டுகளினால் அறிய முடிகிறது. எனவே சோழமாதேவி கோயில் சமய வரலாற்றிலும் முக்கிய இடம் பெறுகிறது.

### சோழமாதேவி

இராசராச சோழனுக்குப் பல தேவியர்கள் இருந்தனர். அவர்களுள் சோழமாதேவி என்ற தேவி தஞ்சைப் பெரிய கோயிலுக்கு கணபதி, ஆடவல்லான், ரிஷபவாகனர் போன்ற செப்புத் திருமேனிகளை வழிபாட்டிற்காகச் செய்தளித்திருக்கிறார். எனவே இவர் பெயரிலேயே இவ்வூரை சோழமகாதேவி சதுர்வேதி மங்கலம் என்று அமைத்திருக்கலாமோ என்ற எண்ணத் தோன்றுகிறது. இது மட்டுமா! தஞ்சைப் பெரிய கோயிலுக்கு மெய்காப்பாளர்களையும், திருப் பரிசாரகம் செய்யும் ஆட்களை அனுப்பி வைத்த பல ஊர்களில் சோழமாதேவியும் ஒன்று. இவ்வூரைச் சேர்ந்த ஒருவன் காவிரியின் வடகரையில் உள்ள திருப்பால்த்துறை என்ற பாடல் பெற்ற கோயிலுக்கு விளக்கு எரிக்கத் தானமளித்தான் என்று அக் கோயிலிலுள்ள விக்கிரம சோழனது கல்வெட்டு கூறுகிறது. இதனால் இவ்வூர் ஒரு முக்கியமான இடத்தைப் பெற்று வந்திருப்பதையும் சான்றுகளால் உணர முடிகிறது.

இவ்வளவு வரலாற்றுச் செய்திகள் அடங்கிய இக் கோயில் அமைதியாக, பொலிவிழந்து, வழிபாடின்றி உள்ளது. இதுபோன்று நம்முடைய பண்டையச் சிறப்பை எடுத்துக்காட்டும் கலைக் கோயில்களைப் போற்றி காப்பாற்ற வேண்டியது நமது கடமையாகும்.

# ஞாபக தினம்

"என்ன, இன்னுமா சாஸ்திரி வரலை?" என்று சலித்துக் கொண்டார் ஜானகிராமன்.

"வந்துடுவார்ண்ணா... இங்க பக்கத்துல எஸ்.வி. கோயில் தெருவிலே தானே வீடு" என்றான் ராஜாராமன்.

"என்னடா இவன் உடனே வான்னு லெட்டர் போட்டிருக்கான்? என்ன விஷயம்னு எழுதலையே? கூப்பிட்டவன் பணத்தையாவது அனுப்பி வெச்சிருக்கலாமே? டில்லி என்ன கிட்டத்திலியா இருக்கு?" என்று அப்பா வருத்தப்பட்டார்.



## பிரதிபா ராஜகோபாலன்

"இதை முடிச்சிண்டு, அடையாறு போகணும் ராஜா நான். லோதி காலனில, எதிர்த்த பங்களாவுல இருக்காரே சூரிய நாராயணன், அவரோட பொண்ணு இங்கதானே இருக்கா? அவளைப் பார்த்து ஒரு மேட்டர் சொல்லணும். மத்தியானம் அவ தஞ்சாவூர் பொறப்படறா. எப்போ வர்றான்னு சொல்ல முடியாது..."

ஜானகிராமன் டில்லியில் மத்திய சர்க்காரில் மூத்த அதிகாரி. சூரிய நாராயணன் அவருக்கு சீனியர்.

"நான் வேணும்னா சாஸ்திரியைப் பார்த்துட்டு வந்துடட்டுமா?"

"சாஸ்திரிக்கு, டைமுக்கு வரத் தெரியாதா, என்ன?"

"கால் மணி பார்த்துடலாம்".

ராஜாராமன் வாசலுக்கு வந்து, திண்ணையில் உட்கார்ந்தார். எதிர்த்த வீட்டில் ஏதோ விவாதம். இந்த வீட்டில்தான் ராஜாராமன் பிறந்தான். இந்தச் சந்தில்தான் கோலி விளையாடினான். எதிர்த்த வீட்டில்தான் கோபிநாத் ராவிடம் ட்யூஷன் படித்தான். இப்போதும் ராவ் இருக்கிறார். அவர் மகன்கள் இரண்டு பேரும் இல்லை. அற்பாயுசு. பேரன்களை வளர்த்துக் கல்யாணம் பண்ணி வைத்தார். கொள்ளுப் பேரன்களுடன் ராவுக்குக் காலம் நகர்கிறது.

மெட்ராஸ் ரொம்ப மாறிவிட்டது. இருபத்தஞ்சு வருஷத்துக்கு முன், இரண்டாவது அண்ணா, உடனே புறப்படச் சொல்லி ஒரு கார்டு போட்டார்.

அப்போதுதான் ராஜாராமன் எம்.ஏ.முடித்துவிட்டு, ரிசல்ட்டுக்காகக் காத்திருந்தான்.

"விஷயம் இல்லாமலா கூப்பிடுவான். பணம் இல்லைன்னா, என் வளையலைத் தர்றேன்" என்றாள் அம்மா நிதானமாக.

ஜானகிராமன், டில்லியில், மத்திய சர்க்காரின் ஏதோ ஓர் இலாகாவில் ஸ்டெனோவாக இருந்தார். அப்போது தான் அவருக்குக் கல்யாணமாகி இருந்தது.

"ஏதாவது வேலை கீலை பாத்து வெச்சிருப்பான். அதுதான் உடனே வரச் சொல்றான்" என்ற அம்மா, தயங்காமல் வளையலைக் கழற்றிக் கொடுத்தாள்.

வாங்கிக் கொண்ட ராஜாராமன், இதே திண்ணையைக் கடக்கும்போது தான் மூத்த அண்ணா ரகுராமன், வெயிலில் காய்ந்து போய், வியர்வை கசகசக்க எதிரில் வந்தார்.

"என்ன ராஜா?"

உள்ளே அழைத்துப் போய் விபரத்தைச் சொன்னான் ராஜா.

"இதுக்காக அம்மா வளையலைக் கழட்டணுமா? நான் என்னோட முதலாளிகிட்ட பணம் வாங்கித் தர்றேன்".

அரைமணியில் மூத்த அண்ணா பணத்தோடு வந்தார். அந்த இரவே டில்லி வண்டி ஏறினான். அம்மா சொன்னதைப் போல ஜானகிராமன், வெளிநாட்டு இலாகாவில், எவனையோ குல்லாப்போட்டு, வாங்கி வைத்த வேலையைக் கொடுத்தார்.

அப்புறம் இரண்டு பேரும், டில்லியின் அதிகார வர்க்கத்தின் நெளிவு சுளிவுகளை அளந்து, அதிலேயே அத்துபடியாகி, இன்றைக்குப் பெரிய அதிகாரிகளாய் இருக்கிறார்கள்.

மூன்று வருஷத்துக்கு முன் அப்பா தவறிவிட்டார்.

இன்றைக்கு அவருடைய ஞாபக தினம்.

இரண்டு நாளைக்கு முன்னமேயே இரண்டு பேரும் வந்துவிட்டார்கள்.

அம்மா, அப்பாவின் ஞாபகங்களில் மூழ்கிக் கொண்டு மூத்த மகனுடன் இருக்கிறாள்.

எதிர்த்த வீட்டில் விவாதம் இன்னும் அதிகரித்துவிட்டது. வலது பக்கம் திரும்பிப் பார்க்கையில் சாஸ்திரி வந்து கொண்டிருப்பது தெரிந்தது. சாஸ்திரி என்கிற சுப்ரமண்யம், அவனுடைய வகுப்புத் தோழர்தான். ஒன்பதாவது வகுப்பு முடித்தவுடனே வேதம் படிப்பதற்காகக் கும்பகோணம் போய்விட்டார். இந்த இருபத்தஞ்சு வருஷத்தில், ஆறேழு முறை பார்த்திருந்தால் அதிகம்தான். நேற்று, வீட்டில் பார்த்து, "இன்றைக்கு அப்பாவின் ஞாபகதினம், நீதான் நடத்திக் கொடுக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டான்.

"ரெண்டு வீட்டுக்கு வர்றதாக ஒத்திருக்கேன்... சரி... அட்ஜஸ்ட் பண்ணிக்கிறேன். நான் வந்துடறேன்" என்ற சாஸ்திரி, பழைய நினைவுகளைப் பகிர்ந்து கொண்டார்.

"நீ சௌக்கியம்தானே?"

"சௌக்கியம்னு நெனைச்சுண்டா, சௌக்கியம்தான்" என்றார் சாஸ்திரி, புன்னகையுடன்.

"ஏன், நீ படிச்ச வேதம் சௌக்கியத்தை உண்டு பண்ணலியா?"

"உண்டு பண்ணியிருக்குன்னு நெனைச்சா, உண்டு பண்ணியிருக்குன்னு வெச்சுக்கலாம். எதுக்கும் மனசுதானே காரணம் ராஜாராமன்? உன் உத்தியோகம் எப்படி இருக்கு?"

"உன் பதிலைத்தான் நானும் சொல்லணும். எல்லாத்திலேயும் சந்

தோஷமும் இருக்கு, சங்கடமும் இருக்கு. இனிமே இதிலிருந்து என்னைப் பிரிச்சுக்க முடியாது. நீயும் என்னைப் போலப் படிச்சிருந்தா, இந்த உத்தியோகத்தைவிடப் பெரிசா பார்த்துண்டிருக்கலாம். இந்த வயசுல தான் எது நல்லது, எது கெட்டதுன்னு ஓரளவு பிரிச்சுப் பார்க்க முடியறது. ஆனா, எதிலேயும் நிம்மதியைப் பார்க்க முடியலே. ஒரே அவசரம், இயந்திர வேகம், உணர்ச்சியில்லாத பொம்மை வாழ்க்கை. மனசுல இருக்கிறதை அப்படியே பேச முடியலை. வெளிக்காட்ட முடியலை..."

"உலகமே இப்படித்தான். நல்லவனைப் பிழைக்கத் தெரியாதவன்னு ஒதுக்கி வெச்சுடறோம். பித்தலாட்டம் செஞ்சு பிழைக்கிறவனைக் கெட்டிக்காரன்னு பாராட்டறோம். கடத்தல் காரனைக் கடத்தல் மன்னன்னும், மோசடிக்காரனை மோசடி மன்னன்னும் சொல்லி சந்தோஷப்படறது நம்ம வழக்கம். ஆமா, அண்ணனைப் பார்த்தியா?"

"இல்லே சுப்ரமண்யம்" என்று கையை விரித்தான் ராஜாராமன்.

"உன்னோட அப்பா ஞாபக தினம்னு அவருக்குத் தெரியுமில்லே?"

"தெரியும்னு அம்மா சொன்னா".

"அப்பப்போ, குளத்தங்கரைல பாக்கறேன். சமையல் வேலைல இருக்கறாப்ல இருக்கு".

"சமையல்னு இல்ல... அவர் செய்யாத வேலையே கெடையாது. சின்ன வயசிலிருந்தே அப்படியே வளர்ந்துட்டார். படிப்பு ஏறலே. உருப்படாதப் பயலாய்ட்டான்னு அப்பா தான் பொலம்பிண்டு இருந்தார். ஒரு நாள் கோயில்ல பூக் கட்டிட்டு இருப்பார். இன்னொரு நாள் கல்யாண வீட்டுச் சமையல்ல வெங்காயம் நறுக்கிட்டு இருப்பார். அடுத்த வாரம் வண்டியில காய்கறி வித்துட்டு இருப்பார். நடுவுல வீடு வீடாப் போய் பேப்பர் போட்டிருப்பார். ஆனா, ஒரு தினம்கூடச் சும்மா இருக்க மாட்டார். அப்பா, இவரைப் பற்றிய கவலைல, பாதி ஆயிட்டார். கல்யாணம் பண்ணி வெச்சா, சரியாயிடுவார்னு, அவரோட நாற்பது வயதுக்கு மேல, பொண்ணு கூடப் பார்த்தார். எதுவும் முடியலே. சரி, இவன் விதி இப்பிடித்தான்னு முடிவு பண்ணி விட்டுட்டார். இப்ப, அம்மா கண்டடில அண்ணா இருக்கார். எதையோ சம்பாதிக்கிறார். எப்பவோ வீட்டுக்கு வர்றார். ஆனா, மனசுல எப்பப் பார்த்தாலும் அன்பு மனம். எனக்கும், ரெண்டாவது அண்ணாவுக்கும் மாசத்துக்கு ஒரு லெட்டர் எழுதுவார். அப்படியே நேர்ல பேசறாப்ல இருக்கும். அப்படி டச்சிங்கா இருக்கும்..."

கொஞ்ச நேரம் பேசிவிட்டு வீட்டுக்கு வந்தான்.

அம்மா, மூத்த மகன் இன்னும் வீட்டுக்கு வராததைப் பற்றி வருத்தப் பட்டாள்.

"போரூர்ல கல்யாணச் சமையல்னு போனான். மூணு நாளாச்சு. இன்னைக்கு எப்படியாவது வந்துடணும்னு சொல்லி அனுப்பிச்சேன். வராம எங்கே போயிடுவேன்னு சொல்லிச் சிரிச்சிண்டே போனான். வர்றதும் வராததும் அவன் இஷ்டம் தான். சில நேரம் அவன் பேசறதே எனக்குப் புரியறதில்லே. அவனுக்குன்னு ஒருத்தி இருந்தா, அவகிட்ட ஒப்படைச்சுட்டு, உங்ககூட வடக்கே வந்திருப்பேன். இவன் இப்படி, முழுசா இல்லாம இருக்கறப்போ, எப்படி விட்டுட்டு வருவேன்..."

"சரி... எல்லாமே சரியாய்த்தான் இருக்கு. நான் இந்தப் பக்கம் எப்போ வருவேன்னு இருக்கேன். அண்ணாவை இனிமே மாத்த முடியாது. அதே சமயம் எங்களையும் மாத்த முடியாது. ஒவ்வொருத்தரும் ஒரு வட்டத்திற்குள்ளே மாட்டியாச்சு. அப்பா பேரைச் சொல்லிட்டாவது, வருஷத்துக்கு ஒருநாள் வந்து, உன்னையும் பாத்துட்டு, பழைய ஞாபகங்கள்ல மூழ்கிட்டு, அதையும் தூக்கிட்டுப் போறோம். போய், நாலஞ்சு நாள்ல அது மறஞ்சு, பொண்டாட்டி, குழந்தைகள், ஆபீஸ்னு அங்கிருக்கிற வட்டத்துல விழுந்துடறோம். எங்களுக்குன்னு சுயமா ஒரு சிந்தனை இல்லே, செயல் இல்லே... எல்லாமே இயந்திர மயம். அண்ணாவாவது மனசுக்குப் புடிச்சாப்ல, சிந்தனை பண்ணி, வேலையைத் தேர்ந்தெடுத்து, சம்பாதிச்சு, கவலை இல்லாமல் இருக்கட்டும்".

"நானும் அப்படித்தான் விட்டுட்டேன். எதிலும் பட்டுக்காம, எதுக்கும் கட்டுப்படாம இருக்கிறதுலகூட ஒரு சுத்தமான வாழ்க்கை இருக்குன்னு தோணறது" என்றாள் அம்மா.

எதிலும் பட்டுக்கொள்ளாத, எதற்கும் கட்டுப்படாத அந்த அண்ணா, இன்றைய வரை, அப்பாவின் ஞாபக தினம் என்று அம்மா சொல்லியும்கூட வந்து சேரவில்லை.

திண்ணையிலிருந்து எழுந்து கொண்ட ராஜாராமன், சாஸ்திரிகளை வரவேற்றான்.

"என் தம்பி வந்துட்டான். பேசிட்டு இருந்ததுல டைம் ஆயிடுத்து" என்று மன்னிப்புக் கேட்கும் குரலில் சொன்னார்.



"அதனாலென்னா... டைம் இன்னும் இருக்கே? உன் தம்பி என்ன பண்றான்?"

"வெஸ்லியன் யுனிவர்சிடில, புரபசரா இருக்கான்".

"அப்படியா?" என்ற ராஜாராமன் அதற்கு மேல் பேசாது உள்ளே, சாஸ்திரிகளை அழைத்துப் போனான்.

"அண்ணா, சாஸ்திரிகள் வந்தாச்சு, அம்மா எல்லாத்தையும் ரெடி பண்ணு".

ஜானகிராமன், கூடத்துக்கு வந்தார்.

"வாங்க... சுப்ரமண்யம்... ஆள், தகதகன்னு வெள்ளரிப்பழமா மாறியாச்சே?"

மூவரும் அப்பாவின் படத்துக்கு முன் உட்கார்ந்தார்கள்.

"எனக்கென்னமோ, அப்பா இன்னும் உசிரோட இருக்கறாப்லதான் ஒரு பிரமை. அப்பப்போ, எதிரே நின்னு பேசறாப்ல இருக்கு. என்ன காரியம் பண்ணினாலும், அப்பா முன்னால நின்னு அதைச் சொல்லி, ஆலோசனை கேக்கறாப்ல ஒரு ட்ரையல் பார்த்துப்பேன்..." என்றார் ஜானகிராமன்.

"மனுஷனுக்குப் பெத்தவாளை நெனைச்சுண்டே இருக்க முடியாது. சில நேரம் மட்டும் ஞாபகம் வரும். வாழ்க்கையோட நடைமுறை அவசரத்துக்கு, வேகத்துக்கு இந்த ஞாபகங்கள் ஹெல்ப் பண்ணாது, ஜானகிராமன். ஆனா மனசோட முதிர்ச்சிக்கு, நுணுக்கத்துக்கு, சிலர் மட்டும் இது போலப் பழைய ஞாபகங்களை, பாசத்தை வளர்த்துக்குவா. மனுஷன் உடம்பு ரீதியா நடமாடறது மட்டும் முக்கியமில்லே. இதுபோல உணர்ச்சிகளோட, நல்ல பண்புகளோட வாழறதுதான் முக்கியம். உங்கப்பா, உங்களைக் கஷ்டப்பட்டு, நல்ல குணங்களோட வளர்த்தார். அதையும் அவரையும் ஞாபகப்படுத்திக்கிறது ரொம்ப முக்கியம். வேஷ்டி துண்டு வெச்சு நமஸ்காரம் பண்றது பெரிய விஷயமில்லே..."

"வாஸ்தவம்" என்றார் ஜானகிராமன்.

அம்மாவும், சகோதரர்களின் மனைவிகளும், குழந்தைகளும் அப்பாவின் படத்தின் முன் உட்கார்ந்தனர்.

"என்னப்பா, ரகுவைக் காணோம்?" என்றாள், மெல்லிய குரலில் அம்மா.

"எனக்கும் வருத்தமாத்தான் இருக்கும்மா... உனக்கு அண்ணா குணம் தான் தெரியுமே? சித்தம் போக்கு சிவன் போக்குன்னு, நீயே சொல்லிண்டிருப்பியே?"

சாஸ்திரி தன் பணியில் ஈடுபட ஆரம்பித்து விட்டார்.

"அப்பாவுக்குப் புடிச்சதெல்லாம் வெச்சிருக்கியோம்மா?"

"எல்லாம் இருக்குப்பா".

பிரபல தினசரி ஒன்றின் பெயரைச் சொல்லி, "அது வாங்கி வெச்சிருக்கியா?" என்றான் ராஜாராமன்.

"வேஷ்டிக்கு மேல பாருப்பா... காலைல மொதல் வேலையா உன் பொண்ணு வாங்கி வந்துட்டா".

"தினசரி இதைப் படிக்கலைன்னா அப்பாவுக்கு எந்தக் காரியமும் ஓடாதே..." என்ற ஜானகிராமன், அப்பாவின் கண்ணாடி, மூக்குப் பொடி டப்பா, கடிகாரம் மூன்றையும், எல்லோரின் பார்வையிலும் படுகிற மாதிரி முன்னால் வைத்தார்.

"சுப்ரமண்யம், ஆரம்பிச்சுடலாமா?"

"உன் அண்ணா இன்னும் வரலையே?"

"வரலைதான், ஆனா நாழியாகறதே?"

"ஒரு பத்து நிமிஷம் பாத்துடலாமே?" என்றாள் அம்மா, சன்னமான குரலில். தன் மூத்த மகன் கலந்து கொள்ளாத வேதனை அவள் முகத்தில் தெளிவாக மண்டிக் கிடந்தது.

"சரிம்மா" என்றார் ஜானகிராமன், அரை மனத்துடன்.

"ஏம்மா, தாத்தாவுக்குப் புடிச்ச பாட்டு ஒண்ணு பாடேன்" என்று பேத்தி ஒருத்தியைக் கேட்டுக் கொண்டாள் அம்மா.

அந்தப் பேத்தி, "அம்பா மனம் கனிந்து" என்ற பாட்டைத் தன் குரலுக்கு ஏற்றவாறு பாடினாள்.

வெளியே, யாரோ இரைந்து பேசிக் கொண்டு போனார்கள். முற்றத்தின் கம்பி போட்ட ஜன்னலுக்கு வெளியே சதுரடி ஆகாயத்தில், பாதியை அடைத்துக் கொண்டு ஒரு காகம் வந்து உட்காருவது தெரிந்தது.

நடையில் ஏதோ குரல் கேட்டது.

"மெல்ல மெல்ல..."

அண்ணாவின் குரல்தான்...

அம்மாவின் முகத்தில் ஒளி வெள்ளம் புகுந்தது.

"அண்ணா வந்துட்டான்ப்பா" என்றாள், குரலில் சந்தோஷ அலை யடிக்க.

"இப்படியே வெச்சுடப்பா. நான் எடுத்துக்கறேன்..."



## உன்னதத் திருநாள்!

அசுரனை அழித்து மக்கள்
அன்பினை வளர்க்கும் திருநாள்
பட்சணங்கள் பகிர்ந்து தந்து
பாசங்கள் பெருக்கும் திருநாள்

புத்தாடை அணிந்து மக்கள்
புதுவுறவு சேர்க்கும் திருநாள்
பட்டாசு வெடித்து சிறார்கள்
பரவசம் கொள்ளும் திருநாள்

நன்மைகள் பெருக்கி மக்கள்
தீமைகள் விலக்கும் திருநாள்
உண்மைகள் வெல்ல பொய்மை
ஒளிந்திடும் உன்னதத் திருநாள்

மு. வில்லவன்

## இரவு வானம்

உயர்பல வைரக் கற்கள்
உதிர்த்த வொண்புகழ் நீல
உயரிய கம்பளம் விரித்து
ஒளிறும் எழிலைப் போலாம்
மயங்கிய இரவில் வானின்
மண்டல மெல்லாம் நோக்கின்
வியலிடம் விண்மீனாய்த் திகழ்ந்து
விரிவானம் தெரிகு தம்மா!

தண்ணறுங் கானத்து முல்லை
தளையவிழச் சிரித்த தென்ன
விண்ணினை இரவில் நோக்கின்
வானெனும் மங்கை நல்லாள்
கண்ணினைச் சிமிட்டி ஆங்கே
கணக்கின்றி உதிர்த்த உற்கை
வண்ணங்கள் ஆயிரங் கூடி
விரிவானம் தெரிகு தம்மா!

- கவிஞர் நெய்தற்கிழான்

## முருகவேல் வருகுது

துள்ளித் துள்ளி முருகவேல் வருகுது!
துன்பம் போக்கிக் கனவில் தெரியுது!
அள்ளி அள்ளி அருளை வீசுது!
ஆறுதல் வழங்கித் தானாய்ச் சிரிக்குது!

தேவர் உலகம் புகழும் வேல்! அது
தேன்தமிழ் பாவலர் நெஞ்சில் உறவு!
பாவம் தீர்க்கும் புண்ணிய வேல்! அது
பாரினை உயர்த்தும் எங்கள் வீரவேல்!

அடியவர் குறைகள் தீர்க்க முன்நிற்கும்!
ஆறுமுகன் கையில் அழகாய் மின்னும்!
இடிபோல வந்த பாவத்தை ஒழிக்கும்!
இனிய பேரின்பம் உடனே நல்கும்!

- வ. நித்தியானந்தம்

கூலிக்காரர் ஒருத்தர் கூடையை மெல்ல இறக்கி வைத்தார்.

"என்ன ரகு... எல்லாரும் காத்துண்டிருக்கோம், உனக்குத் தெரியாதா இன்னைக்கி அப்பாவோட..."

"எனக்குத் தெரியாதாம்மா? அப்பாவுக்கு மாம்பழம் புடிக்குமேன்னு, வாங்கிண்டு வரக் கொஞ்சம் நாழியாயிடுத்து..."

ரகு அண்ணா, கூடையைப் பிரித்து மாம்பழங்களை எடுத்துத் தம்பிகளிடம் கொடுத்து, "அப்பா படத்துக்கு முன்னே வையுங்கப்பா... நேத்தே பணம் கெடைச்சிருக்கணும். ஆனா, சமையல் மணிக்குக் காலம்பறதான் கெடைச்சது. அதுக்கப்புறம் எனக்குக் கெடைச்சு. டவுனுக்கு வந்து பழம் வாங்கி... மன்னிச்சிடுங்கப்பா... எனக்காகக் காத்திருந்ததே மனசுக்கு ரொம்ப இதமா இருக்கு. அப்பாவை நேர்ல பார்த்தாப்ல இருக்கு".

கண்ணீர் மல்க, குரல் நெகிழ, அப்படியே குளியலறைக்குள் நுழைந்து நாலு செம்பு தண்ணீரை மொடோர் மொடேரென ஊற்றிக் கொண்டு வேஷ்டி மாற்றி அப்பாவின் படத்தின் முன் உட்கார்ந்தார்.

சாஸ்திரிகளின் முகத்தில்கூட சந்தோஷ அலை தெரிந்தது.

அம்மாவின் கண்களில் நீர் ததும்பிக் கொண்டிருந்தது.

"ரெண்டு நாளாவே அப்பா ஞாபகம் அழுத்தமா இருந்தது. ஞாபக தினம்னு அப்பாவுக்கு என்னென்னமோ பண்றோம். அவருக்குப் புடிச்சதை வெச்சுக் கும்பிடறோம். ஆனா... அவர், நான் படிச்சு முன்னுக்கு வரணும், கல்யாணம் பண்ணி வாழ்க்கைல நல்ல முறைல செட்டில் ஆகணும்னு மனசார விரும்பினார். ஆனா என்னாலே அதைச் செய்து காட்ட முடியலே. என் போக்குதான் சரியான போக்குன்னு நெனச்சுட்டேன். ஆனா... நெனச்சுப் பார்த்தா, அப்பா விருப்பத்தை நிறைவேத்தி இருந்திருக்கலாமேன்னு இப்பத் தோணறது. ஞாபகத் தினத்துக்குச் சாஸ்திர பூர்வமா எதைச் செஞ்சாலும், அது சரி வராது. அப்பா மனசைப் புரிஞ்சு நடந்துண்டு வர்றதுதான் சரியான முறை..."

சகோதரர்கள் மூவரும் அப்பாவின் படத்தின் முன் விழுந்து நமஸ்கரித்து விட்டு, சாஸ்திரிகள் சொல்படி கேட்டு, பின் திண்ணைக்கு வந்தார்கள்.

ஜானகிராமன் முகத்தில் ஒரு தெளிவு தெரிந்தது.

"அண்ணா, உன்னைப் பார்க்கறப்பல்லாம் அப்பாவே அச்சா உயிரோடு வந்தாப்ல இருக்கு. நடைமுறை வாழ்க்கைல நாங்க ஜெயிச்சிருக்கலாம். பணம் சம்பாதிச்சிருக்கலாம். உத்தியோகத்துல முன்னேறி இருக்கலாம். வாழ்க்கைல செட்டிலாயிருக்கலாம். ஆனா, நிம்மதி இல்லே. ஒரு சாந்தி இல்லே. உன்னைப் போலவே இருந்திருக்கலாமோன்னுகூட, இப்பத் தோணறது. ரகு அண்ணா, அப்பா ஞாபக தினம்னு ஒரு காரணத்துக்காக, நாமெல்லாம் ஒண்ணாச் சேர்ந்திருக்கோம். வயசுன்னு பாத்தா, ராஜாராமனுக்கே நாப்பத்து மூணு முடிஞ்சாச்சு. எனக்கு ரிடையராகறதுக்கு ஒரு வருஷம்தான் இருக்கு. எல்லார்க்கும், எல்லாத்துக்கும் ஒரு முடிவு இருக்கு. அந்த முடிவு ஒண்ணும் ரொம்ப தூரத்தில் இல்ல. அது நம்மை நெருங்கறதும், அதை நாம் நெருங்கறதும் எந்த நிமிடத்திலும் சாத்தியம்தான். அதுக்குள்ளே, நம்மாலே முடிஞ்சவரைக்கும் நாலு பேருக்காவது நல்லது பண்ணணும்னு ஒரு முடிவுக்கு வந்திருக்கேன். நீ, நாலு இடத்துக்குப் போய், உலகத்தை, நடைமுறையைப் புரிஞ்சு வச்சிருப்பே. படிக்க வசதியில்லாத சில பசங்களுக்குப் படிக்க நாம உதவலாம். அந்த மாதிரி பசங்களைத் தேர்ந்தெடுத்துச் சொல்லண்ணா, ஒவ்வொரு வருஷமும், இந்த தினத்துல அவாளுக்கு உதவலாம்".

ரகு அண்ணா, தன் தம்பிகளை மகிழ்ச்சியுடன் பார்த்தார். அந்த நேரத்தில் சாப்பிடக் கூப்பிட வந்த அம்மாவிடம் இந்த முடிவைச் சொன்னார் ஜானகிராமன். அம்மா, "ரொம்ப சந்தோஷமா இருக்குப்பா" என்றாள். அந்த தினத்துக்கு ஒரு முழு வடிவமும் நிறைவும், அர்த்தமும் கிடைத்தால் போல, சாஸ்திரிகளும் உணர்ந்தார்.

# மகரிஷி

# வெறும் வேஷம்



சுலோசனா - சேதுராம கிருஷ்ண னின் அன்புக்கும் அனுதாபத்திற்கும் பாத்திரமான ஒரே மகள். அவள் அவரை விட்டுப் போய்விட்டாள்.

தனிமையின் வேதனை அவரை அணு அணுவாகக் கொன்றது. சுலோ சனா அவருடைய குடும்பத்தில் ஒரே பெண். அவரைப்போலவே புத்தி சாலி. எதையும் நிதான புத்தியுடன் ஆராயும் தன்மை அவளுடையது. தன் வாழ்வில் தனக்கேற்பட்ட சோகத்தை எண்ணி ஒரு நாள் கூட நிலை குலைந்ததில்லை. சோகத்தால் துயரம் மறைவதில்லை என்பதை அறிந்தபின் தன்னை மாற்றிக் கொண் டாள். அப்படிப்பட்ட திடகாத்திர மான பெண் இறந்துவிட்டாள்.

இத்தனை நாள்களைவிட இந்த ஓர் ஆண்டில்தான் சேதுராமகிருஷ்ணன் அவளுடைய மன வளர்ச்சியை நன் றாகப் புரிந்து கொண்டிருந்தார். அதே நேரத்தில் அறிவுச்சுடரால் அவள் மனம் வளர்ந்து கொண்டு வருகையிலேயே மறுமுனையை சோகம் அரிக்கத் தொடங்கி இருக்க வேண்டும். இதை சேதுராம கிருஷ்ணன் கவனிக்கவில்லை.

சபாரி கூட இப்பொழுதெல்லாம் சோர்ந்து போயிருந்தான். கொஞ்ச நாளாக அவனால் எதுவுமே எழுத முடியவில்லை. பத்திரிகைகள் அலறு கின்றன. கடிதத்தின் மேல் கடிதம் 'உடனே கதை தேவை'. "மறு தபா வில் கதையை எதிர்பார்க்கிறேன்" என்று.

சேதுராமகிருஷ்ணனுக்கு சபாரியின் இந்த மௌனம் வேதனையைக் கொடுத்தது. அவனுடைய எழுத்திலே மயங்கிய பரிசுத்தமான இலக்கிய ஆத்மா அவர். மகள் போய் விட்ட சோகத்தைவிட சபாரி இன்றெல்லாம் ஏன் உற்சாகமாக எழுவதில்லை என்பதுதான் அவருக்குப் பெரும் வியப்பாக இருந்தது. மகள் போய் விட்ட சோகத்தைக் கூட மறந்து விட்டு அவனை உற்சாகமூட்டினார்.

"உன்னுடைய பேனா ஓயவே கூடாது சபாரி. நீ நிறைய எழுத வேண்டும். எழுதிக் கொண்டே இருக்க வேண்டும். உன்னுடைய மௌனம் எழுத்துலகுக்குப் பெரும் இழப்பாக அமைந்துவிடக் கூடாது" என்று உற்சாகமூட்டிவிட்டுப் போனார். அவருக்கு ஓரளவு 'கதாசிரியர்' சோர்வுக்குக் காரணம் தெரியும். எவ்வளவோ மனோ தத்து வங்களைப் படித்தும், எழுதியும் கரைகண்ட சேதுராமகிருஷ்ணனுக்கா தெரியாது. அன்பின் தேக்கத்திலே விரியும் உற்சாகம் அன்பின் முறி விலே சிதறி ஓடி விடுகிறது என்று?

சுலோசனா சபாரி இவர்களுடைய நட்பைப்பற்றி சேதுராமகிருஷ்ணன் நன்கு அறிவார். கட்டுப்பாட்டுடன் கூடிய அவர்கள் நட்பு வரம்பு மீறிய தில்லை என்பது அவருக்குத் தெரியும்.

றுகிய காலப் பிணைப்பு. அன்பை இறுகத் தேக்கி வைத்திருக்கிறது. மாதுர்யமான நினைவின் தேக்கம் அவனது துன்ப மௌனத்திற்குக் காரணம்! இப்படித்தான் நினைத்தார் சேதுராமகிருஷ்ணன். ஆனால் அவர் நினைவுதான் எவ்வளவு தவறு?

அயர்வுடன் வீட்டில் நுழைந்தார் சேதுராமகிருஷ்ணன். மகள் இறந்த பின் அவருக்கு உலகமே சூன்யமாகப் போய்விட்டது. எத்தனையோ வியா கூலங்களுக்கிடையேயும் அவரால் புத்தகம் படிக்காமல் இருக்க முடிய வில்லை. மனநிலைக்கேற்ற புத்தக மாக இருந்தால் படிக்கலாம் என்ற எண்ணத்துடன் உள்ளே சென்று பீரோவைத் திறந்தார்.

மேல்சாரியிலே புத்தகங்கள் கலைந்து கிடந்தன. அநேகமாக அந்த பீரோவைத் திறந்து இரண்டு மாதங் களுக்கு மேல் ஆகிவிட்டன. ஒவ் வொன்றாகப் பார்த்துக் கொண்டு வரும்போது நடுவில் தடிமனான சிவப்பு நிற நோட்டு ஒன்று தென் படவே அதை உருவினார். அது அங்கே இருக்கவே நியாயமில்லை. அல்லாமலும் அது அவருடையதும் அல்ல முதல் பக்கத்தைப் புரட்டினார். அழகாக 'சுலோசனா' என்று தமிழில் எழுதி இருந்தது. மேலெழுந்தவாரி யாக அதைப் புரட்டினார். பக்கங்கள் விட்டுவிட்டு பச்சை மையிலே சுலோ சனாவின் எழுத்துகள்.

'சுலோசனாவுக்கு டைரி எழுதும் பழக்கம் கிடையாதே. திடீரென்று இது எப்படி வந்தது? இதை இவள் எத்தனை நாளாய் எழுதுகிறாள்? பாவம்! இதில் அவள் என்ன எழுதி யிருக்கப் போகிறாள்! வாழ்க்கையில் தனக்கேற்பட்ட சோகங்களைத்தான் பக்கம் பக்கமாக எழுதியிருக்கப் போகிறாள்!' என்ற எண்ணத்துடன் பீரோவைச் சாத்திவிட்டு டைரியுடன் வந்து சோபாவில் அமர்ந்தார்.

ஆரம்பத்தில் பாதிப் பக்கங்கள் காலியாகவேயிருந்தன. ஒரு பக்கத் தில், 'மனவளர்ச்சி என்பது நீர் இல்லா மல் வளரும் பெரிய விருட்சம். சில சமயம் சந்தர்ப்பம் அதற்கு அரை விநாடியில் ஆயிரம் ஆண்டு விக சிப்பைக் கொடுத்துவிடும்!' என்று எழுதியிருந்தது. சேதுராமகிருஷ்ணன் வியந்தார். மீண்டும் ஐந்தாறு பக் கங்கள் காலியாக இருந்தன. அதன் பின் சம்பவங்களைத் தொடர்ந்து எழுதியிருந்தாள். பெருவாரியான பக்கங்கள் சபரியுடன் கதையைப் பற்றி தர்க்கம் செய்த சம்பவங்கள் தாம் அதிகமாக இருந்தன. ஆனால் போகப் போக...?

"இன்று அப்பா பம்பாய் போகி றார். பிறன் பொறுப்பு சபரியிடம் விடப்பட்டிருக்கிறது.

"பத்து நாளில் திரும்புவதாகச் சொல்லிச் சென்றவர் இன்னும் பத்து நாள் ஆகுமெனக் கடிதம் போட்டு இருக்கிறார்.

"சபரி அடிக்கடி வருகிறார். சரள மாகப் பேசிப் பழகுகிறார்.

"நானும் அவருடன் சௌஜன்ய முடன் பேசுகிறேன். அவருக்கும் எனக்குமிடையே இருந்த பெரும் தடை நீங்கிவிட்டதாக ஓர் எண்ணம் நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டு போகி றது. முன்பு அவர் என்னுடன் பேசும் தோரணைக்கும் இன்றெல்லாம் நான் அவருடன் பழகும் தோரணைக்கும் பெரும் மாறுதல் தெரிகிறது.

"என் மனம் ஏதோ ஒரு பாதையில் சரிந்து போய்க் கொண்டிருக்கிறது. இதை நான் நன்கு உணர்கிறேன்".

டைரியைப் படித்துக் கொண் டிருந்த சேதுராமகிருஷ்ணனுக்கு உடம்பில் திடீரெனப் படபடப்பு உண்டானது. பரபரவென்று பக்கங் களைப் புரட்டினார்.

"இன்று மாலை சபரிக்குக் காபி கொடுத்தேன். மாலையில் வெகு நேரம் வரை பேசிக்கொண்டிருந் தேன்.

"இன்று நெருக்கம் அதிகமாகியது. நேற்று எதிரும் புதிருமாக உட்கார்ந்து கொண்டு பேசினோம். இன்று ஒரே சோபாவில் இருவரும் உட்கார்ந்து பேசினோம்.

"அவர் கதை ஒன்று பிரசுரமாகி இருக்கிறது. நல்ல கதை. 'பால பக்தை' என்று பெயர். குருட்டுக் கணவன் காட்டாற்று வெள்ளத்திலே வழுக்கி விழுந்துவிடுகிறான். அதன் பின் அவள் தன் வாழ்வின் ஆசா பாசத்தை உதறி எறிந்துவிட்டுப் பக்தையாகி விடுகிறாள். இதை அவர் மிகமிக அருமையான முறையில் எழுதியிருந்தார். பக்கத்திற்குப் பக்கம் வெறும் தத்துவங்களாகப் பொழிந்து இருக்கிறார்!

"அவர் இன்று பூராவும் வர வில்லை. அவரைக் காண வேண்டு மென்ற துடிப்பு. ஒருநாள் காணாத தால் உண்டான ஏக்கம் என்னை வாட்டுகிறது.

"மாலை அவர் வீட்டுக்குப் போனேன். இதற்கு முன் அவர் வீட்டிற்கு ஒரு முறை சென்று இருக்கிறேன். நான் போன சமயம் அவர் வெளியே வந்துகொண் டிருந்தார்.

"நாங்கள் இருவரும் அவர் வீட்டைச் சுற்றி வளர்ந்திருந்த சோளப் பயிர்களைக் கண்டுகளித்துக் கொண்டே வரப்போரமாகப் போனோம். ஐந்தாறடி உயரம் வளர்ந்து நிற்கும் இரண்டு வயல் களுக்கு இடையே குகை போல் இருக் கிறது.

"மிகமிக நெருக்கமாகப் போனோம். ஒட்டியும், ஒட்டாமலும்."

சேதுராமகிருஷ்ணன் மேல்துண்டி னால் நெற்றியிலும் பின் கழுத்திலும் அரும்பித் தேங்கிய வியர்வையைத் துடைத்துக் கொண்டார். கண்களை மூடித் திறந்தார்.

"அவருடைய கதையைப் பற்றிப் பேசினேன். நான் அவரை மனம் திறந்து புகழ்ந்தேன். 'அந்தக் கதையை எழுதியது இந்தக் கை தானா?' என்று கரத்தைத் தொடு கிறேன்.

"இல்லை அந்தக் கதையை எழுதத் தூண்டியது சோகத்தைத் தேக்கிக் கொண்டிருக்கும் இந்தக் கண்கள்தாம்' என்று என் கன்னத்தில் விரலை வைக்கிறார்.

"நான் அவரது கரத்தை முத்த மிட்டேன்! இப்படிச் செய்தது எனக்கே வியப்பாக இருந்தது. முன்பு ஒரு முறை எனக்கும் என் தந்தைக்கும் இவர் பரிச்சியமான புதிது. அப்பா என் கதையை இவ ரிடம் சொல்லி இருக்கிறார். அடுத்த வாரமே 'இருண்ட வானம்' என்னும் விதவையைக் கதாநாயகியாகக் கொண்ட சிறுகதை ஒன்று எழுதி விட்டார். கதை பிரசுரமான அன்று எங்கள் வீட்டிற்கு வந்தார்".

சுலோசனா இப்படி இதற்கு முன்னுரை எழுதிவிட்டு பாக்கி விஷ யங்களை அப்படியே அன்று நடந்த சம்பாஷணையிலேயே விளக்கி இருந் தாள்.

"வாருங்கள் அப்பாகூட இத்தனை நேரம் உங்கள் சிறுகதை 'இருண்ட வான'த்தைப் பற்றிதான் பேசிக் கொண்டு இருந்தார். அவருக்குச் சிரிப்பு தாங்கமுடியவில்லை அதைப் படித்து முடித்தவுடன்".

"அது ஹாஸ்யக் கதையில்லையே!"

'ஹாஸ்யக் கதையாக இல்லாத தால்தான் சிரித்தார்!'

"நீங்கள் படித்தீர்களா? உங்கள் அபிப்பிராயம் என்ன?"

"நான் உங்கள் எழுதும் கைக்கு விலங்கு போட வேண்டும் என்று அப்பாவிடம் சொன்னேன்!"

"ஏனோ தெரியவில்லையே?"

"இப்படி உணர்ச்சி வசப்பட்டு எழுதி எழுதி மனவெழுச்சியை வளர்த் துத்தான் இன்று சமூகம் குட்டிச் சுவராகிவிட்டது. என்னைப் பின்னணி யாகக்கொண்டு எழுதியிருக்கிறீர்கள் என்பதற்காக நான் ஆத்திரப்பட வில்லை. அந்த விதவையின் சோகத் திற்கு இப்படியோர் ஆபாசப்

போர்வை போர்த்தியிருக்க வேண்டாம் என்றுதான் சொல்லுகிறேன்".

"அப்படியொன்றும் நான் வரம்பு மீறிப் போனதாகத் தெரியவில்லையே. நீங்கள் கொஞ்சம் சொந்த வெறுப்பு விருப்புகளை விட்டு விட்டு அதைப் படிக்க வேண்டும்."

"இன்னும் வரம்பு மீற அதில் என்ன இருக்கிறது? 'என்னை உங்கள் ஆலிங்கனத்தில் ஏற்றுக் கொள்ள மாட்டீர்களா?' என்று உங்கள் கதாநாயகி-விதவை அந்த ஆடவனிடம் கேட்பதாக எழுதியிருக்கிறீர்களே, அந்த இடம் ஆபாசமாக இல்லை? அவளது வசப்பட்ட உள்ளத்தைத் தவறு என்று சொல்லவில்லை. ஆங்காங்கு தெரியும் சில கோரப் பற்களை மூடி மறைத்திருக்கலாம். ஆண்மையின் முன் பெண்மையின் அவலச் சிதறலை இப்படிப் பட்டவர்த்தனமாக எழுதியிருக்க வேண்டாம். கொஞ்சம் கண்ணியமாக எழுதியிருக்கலாம். இதனால்தான் சொன்னேன் உங்கள் கைக்குக் கொஞ்சம் கட்டுப்பாடு தேவை என்று" - என்று சொன்ன நான், இன்று எவ்வளவு தூரம் மாறிவிட்டேன்? அவரது கரத்தை முத்தமிட்டதும் பொறியில் அடித்தாற் போல இந்தச் சம்பவம் நினைவில் வந்து மோதியது.

"வானம் இருண்டு கிடந்தது. எங்கோ அடிவானத்திற்கு அப்பால் கந்தகப் புகை போல் மின்னுகிறது. கரிய மேகத்தினுள் மின்னல் ஊடுருவும்போது அந்தகாரத்தின் அகண்டத்வம் பயங்கரமாகத் தோன்றியது.

"நானும் பெண்தானே. பெண்மைக்கே உண்டான சலனம் என்னிடமும் இருக்கிறது. இதில் தவறு என்ன? நான் தவறு செய்யக் கூடாதவளா?

"வறண்ட காலப் பயிர்கள் போலச் செழுமையற்ற என் வாழ்க்கையிலே சிறு பசுமை- சபரியால்."

அவர் நினைவில் சபரி அறிமுகமான அந்த தினம் படம் விரிந்தது.

"சபரி நீங்கள்தானா?"

"ஆமாம். வாருங்கள்... நீங்கள்!"

"தீபம் பதிப்பக உரிமையாளன் சேதுராமகிருஷ்ணன்".

"வாருங்கள் உள்ளே வந்து அமருங்கள்". ஓடி வந்து நாற்காலி ஒன்றைப் போட்டுவிட்டு அவனும் உட்கார்ந்தான்.

சேதுராமகிருஷ்ணனின் திருஷ்டியில் படும் வரையில் அவன் ஓர் இருட்டறைப் பயிர். நல்ல கதைகளை எழுதியும் நல்ல முறையிலே அவன் இலக்கிய வட்டாரத்தில் அறிமுகமாகாதபடி 'இலைமறை' காயாகவே இருந்தான்.

"உங்கள் கதைகளை நான் அடிக்கடி படிக்கிறேன். அவைகளை நல்ல முறையிலே புத்தக ரூபத்தில் கொண்டு வரவேண்டுமென்று நான் ஆசைப்படுகிறேன்!"

தனிப்பட்ட முறையிலே - சபரி சிகரமாகத்தான் இருந்தான். ஆழ்ந்த கண்ணோட்டத்துடன் எழுதும் திறமை பெற்ற ஒரு துணிவுள்ள எழுத்தாளன்தான் என்றாலும் அந்தச் சிகரத்தை அழகு செய்ய இதுவரை முகிற் கூட்டம் அதில் வந்து ஒட்டி உரசி உட்காரவில்லை. அவனை இலக்கிய அரங்கிற்குப் பெருமையுடன் கைகொடுத்து அழைத்து வந்தார் சேதுராமகிருஷ்ணன்.

சேதுராமகிருஷ்ணனின் கவனம் மீண்டும் டைரிக்குச் சென்றது.

"அவர் என்னை அன்புடன் அணைத்துக்கொண்டார். சோளப் பயிர்கள் குதூகலத்துடன் காற்றிலே ஆடின!

"மனோகரமான சூழ்நிலை. மனதிலே குதூகலம். இதை நான் என்றுமே அனுபவித்ததில்லை. வாழ்வில் என்றுமே கிடைக்கப் பெறாதது என்று எண்ணி ஏங்கி வந்த இன்பம் கிடைத்து விட்டதாக சந்தோஷப்படுகிறேன்.

"அப்பா பம்பாயிலிருந்து வந்து விட்டார்.

"அப்பா இல்லாத சமயங்களில் சபரி வருகிறார்.

"அப்பாவின் பரிசுத்தமான முகத்தைப் பார்க்கும்போது என்னிடத்தில் இனம் புரியாத துயரம் குமைகிறது. அவருடைய நிர்மலமான வாழ்க்கைப் போக்கு என்னுடைய செயலால் சலனப்பட்டு விடுமோ என நடுங்குகிறேன்! அவரை நான் ஏமாற்றுகிறேனா?

"என்னுடைய செய்கை அப்பாவுக்கு தெரியுமோ?

"இந்த வாரம் ஆதர்ச தம்பதிகளை வைத்து ஒரு கதை எழுதியிருக்கிறார் அவர். இனிமையான கதைப்போக்கு. வேடிக்கைச் சம்பவங்கள் அதிகம். அந்நியோன்ய தம்பதிகளிடையே நிகழும் ஊடலை நயம் சொட்ட மனதைத் தொடும் விதத்தில் எழுதியிருந்தார்.

"வீட்டில் அப்பா இல்லை. அவர் வந்தார். நான் கலங்கிய கண்களுடன் சுவரில் சாய்ந்தபடி நின்று கொண்டு இருந்தேன். என் கலக்கத்திற்கு அந்தக் கதைதான் காரணம். வாழ்க்கையில் நான் எவ்வளவு நல்ல நல்ல இன்ப நிகழ்ச்சிகளை இழந்து விட்டேன்!

"ஏன் அழுகிறாய்?" அவர் அருகில் வந்து நின்று கொண்டு கேட்டார்.

"சும்மாதான். என் அழுகைக்குக் காரணம் வேறு உண்டா என்ன?"

"அவர் என்னைத் தொட்டார்! நான் ஜடமாக நின்றேன். என் கண்ணைத் துடைத்தார்".

சேதுராமகிருஷ்ணன் தன் கண்ணைத் துடைத்துக் கொண்டார். அவரது உதடுகள் படபடவென்று துடித்தன.

"தனிமையில்தான் துணிவு பலம் பெறுகிறது! அவருடைய அன்பு ஸ்பரிசத்தின் ஆலிங்கனத்தில்...!

"மனப் போராட்டங்களை அடக்கிக் கொள்வதிலேயே நாள்களின் வேகத்தை மறந்துவிடுகிறேன்.

"உணர்ச்சியுடன் உணர்ச்சி மோதுவதும் இயற்கை ஆசாபாசத்தில் சிதறிப் போடும் கடிவாளமிழந்த வேட்கையும் இயற்கை!

"மனம் சுயநலத் தத்துவம் பேசுகிறது."

"சுலோசனா... நீ மேதையாக வாழ்ந்திருக்க வேண்டியவள். உன்னுடைய உள்ளத்திலும் தான் எப்படிப்பட்ட கருத்துகள் வந்து மோதியிருக்கின்றன? அதை எவ்வளவு உணர்ச்சியோடு எழுதியிருக்கிறாய் பாவிப் பெண்ணே!" சேதுராமகிருஷ்ணனின் மனம் முணுமுணுத்தது.

"இயற்கையின் சங்கமத்தில்தான் எழில் பிறக்கிறது. ஆனால்... என் உணர்ச்சியின் மோதலில் பீதிதான் பிறந்தது. ஓர் உயிர் வெடிப்பின் வேகம் மற்றொரு ஜீவனின் அழிவைப் புலப்படுத்தியது. உறுதியாக்கியது.

"எனக்கு முன்பே தெரியும்! மௌனியின் கோபத்திற்கும் மௌனத்தைச் சாடிக் கொண்டு வரும் வேகத்திற்கும் எப்படி அணைபோட முடியாதோ அதேபோல் அழுந்திக் கிடந்த வேகம் வெளிக்கிளம்பும்போது தடைபோட முடியாது. அது தன் இச்சையாகச் சென்றுதான் அடங்க வேண்டும்".

படித்துக் கொண்டிருந்த சேதுராமகிருஷ்ணனின் உடம்பு நடுங்கியது! கண்களை இறுக மூடிக்கொண்டார். நீர்க்கோடுகள் புஷ்டியான கன்னத்தின் நடுவே ஓடின. மீண்டும் பக்கங்களைப் புரட்டினார். அநேக பக்கங்கள் நல்ல இடத்தில் காலியாகக் கிடந்தன. ஏடுகள் மௌனம் சாதித்தன! அதற்கு மேல் சுலோசனா ஒன்றுமே எழுதவில்லையா? அதோ... அதோ...! நீண்ட மௌனத்திற்குப் பின் மீண்டும் ஏடுகள் பேசின! இப்போது ஏடுகள் பேசவில்லை. கண்ணீர்விட்டன. பாதிக்கு மேல் உள்ளப் போராட்டமே ஏடுகளை விழுங்கியிருந்தது.

அவைகளைப் படிக்கப்படிக்க சேதுராம கிருஷ்ணனின் உடல் பதறியது. சுலோசனா தொடர்ந்து எழுதியிருந்தாள்.

"என் மனதில் நம்பிக்கை பிறந்தது. இவ்வளவு அந்நியோந்நியமாக இழைந்தவர் என் அன்புக்குப் பாத்திரமானவர், என் குறைவாழ்வில் நிறைவைக் கொடுத்தவர் என்னை இந்த நேரத்தில் கைவிடமாட்டார் என்ற நம்பிக்கையுடன் இருந்தேன். ஆனால் அந்த நம்பிக்கை சிதறிய விதத்தை வார்த்தைகளால் எழுதும் திறமையற்றவளாக நான் போய்விட்டேன். அவர் நல்லவர். மனம் நோகக்கூடாது. அவர் மனம் சஞ்சலப்பட்டால் அவரால் எழுத முடியாது. அப்பா அவர்மேல் உயிரையே வைத்திருக்கிறார். இந்த நேரத்தில் என்னையும் அவரையும் பிணைக்கும் இக்கரு வளர்ந்தால் எங்கள் இருவருக்குமே களங்கம்தானே? அவரும் மனிதர் தானே! ஏதோ உணர்ச்சி வசப்பட்டுவிட்டார். இதற்கு அவர் மட்டும் எப்படி குற்றவாளியாக முடியும்? குற்றம் இருவருடையதும்தானே? என் மனம் என்னமோ சமாதானமடைந்தாலும் உடல் அதன் பலவீனத்தை உணர்த்திவிட்டது".

இதற்கு மேல் பக்கங்கள் காலியாகவே இருந்தன. ஒன்றுமே எழுதவில்லை. சேதுராமகிருஷ்ணனுக்கு திடீரென்று பின்னோக்கி நினைவு ஓடியது. வியாபார விஷயமாக அவர் பம்பாய் சென்று திரும்பிய பின் இரண்டு மாதங்கள் ஓடிவிட்டன. திடீரென்று ஒருநாள் சுலோசனா தலைவலி ஜுரம் என்று படுத்தாள்.

இலக்கியம், வியாபாரம் இவையிரண்டும் அவரது ஜீவநாடிகள். குடும்ப விவகாரங்களில் அவ்வளவாகத் தலையிடுவதில்லை. அப்பாவுக்கு அந்த விஷயங்களில் சுலோசனா தொல்லை கொடுப்பதில்லை. அம்மா இறந்த பின், விதிவசத்தால் வீட்டோடு வந்துவிட்ட சுலோசனா நல்ல முறையிலேதான் தன் பிறந்தகத்தை நிர்வகித்து வந்தாள். இதில் சேதுராமகிருஷ்ணனுக்கு ரொம்ப நிம்மதி. ஆனால், தீராத தொல்லையைக் கொடுத்து விட்டு சுலோசனா போய்விடுவாள் என்று அவர் கற்பனைகூடச் செய்ததில்லை! விஷயம் அவருக்கு ரொம்ப நாள் கழித்துத்தான் தெரிந்தது. சுலோசனா இன்றெல்லாம் திடகாத்திரமான மனநிலையில் இல்லை. ஏதோ சோகம் அவளை வாட்டத் தொடங்கியிருக்கிறது என்பதெல்லாம் அவள் ஒருநாள் திடீர் என்று படுக்கையில் படுத்த பின்தான் தெரிந்தது. சேதுராமகிருஷ்ணன் பதறிப் போய்விட்டார். இதற்குள் நாள்கள் எத்தனையோ ஆகிவிட்டன. காலம் தாழ்த்தி வந்த அவருடைய விழிப்பு சுலோசனாவை மரணப் படுக்கையிலிருந்து எழுப்ப முடியாமல் போய்விட்டது.

கையில் பிடித்திருந்த 'டைரி' கீழே நழுவி விழுந்தது. கண்கள் தாரை தாரையாகக் கண்ணீரைக் கொட்டின. எவ்வளவு பெரிய சோகத்தைத் தாங்கி கொண்டிருந்தாயடி? எவ்வளவோ தெரிந்த நான் உன் அந்தரங்க சோகத்தை உணராமலேயே இருந்துவிட்டேன். நீ அவனைக் காதலித்தது தவறு என்று சொல்லவில்லை. உனக்கு ஓர் இணை கட்டாயம் வேண்டும். ஆனால் அந்த இணையை நீ முற்றும் பெறாமல் குறைவாழ்வுடன் போய்விட்டாயே. நீ கொண்டிருந்த நம்பிக்கை சிதறிவிட்டதாக எழுதியிருக்கிறாயே. எப்படி அது சிதறியது? அதைச் சிதற அடித்தது யார்? அப்படி என்ன நேர்ந்தது அப்பொழுது? உடைந்த பாதையில் நீர் விரைந்து ஓடுவதுபோல் சேதுராமகிருஷ்ணனின் நெஞ்சில் ஏதேதோ கேள்விகள். ஏதேதோ எண்ணங்கள். விடை காண முடியாத புதிர்கள்.

மீண்டும் அவர் மனம் முணுமுணுத்தது. உன்னிடத்திலும்தான் எப்படிப்பட்ட இலக்கிய ஆர்வம்! அவன் வாழவேண்டும், அவன் இலக்கியம் வாழவேண்டும் என்று நீ தியாகியாக மாறியிருக்கிறாய்? உன்

பேதைமையைப்பற்றி என்ன சொல்வது?

"சபரி" கலங்கிய கண்களுடன் அவன் அறையில் நுழைந்தார் சேது ராமகிருஷ்ணன்.

அவரை நிமிர்ந்து பார்த்துவிட்டுக் கண்ணீர் விட்டான் அவன்.

"ஏன் சபரி... சுலோசனா ஏன் இறந்தாள் சொல்லேன்? கடைசியில் அவள் தான் கொண்டிருந்த நம்பிக்கை சிதறிவிட்டது என்று அவள் எழுதியிருக்கிறாளே. அப்படி அவள் நம்பிக்கை சிதறும்படியாக என்ன நடந்தது சொல்லேன்".

அவனால் எதுவுமே பேச முடியவில்லை. வாயடைத்துப் போய் உட்கார்ந்து இருந்தான்.

"சொல்லு சபரி. அவள் மனம் புண்படப் பேசி விட்டாயா?"

இல்லை என்பது போல மௌனமாகத் தலையை ஆட்டினான் சபரி.

"அவள் ஏன் மனம் ஒடிய வேண்டும்?"

"விவாகம் செய்து கொள் என்றாள்..."

"அப்படியா? நீ என்ன சொன்னாய் சொல்லேன். செய்து கொள்ள மாட்டேன் என்று சொல்லிவிட்டாயா?"

'ஆமாம்' என்பது போலத் தலையை ஆட்டினான் சபரி.

"நிஜமாகவா... அப்படிச் சொன்னாய்? என்னைப் பார்த்துச் சொல்... ஏன் அப்படிச் சொன்னாய்? என்னைப் பார்த்துச் சொல்... ஏன் அப்படிச் சொன்னாய்?"

"... அவள் ஒரு விதவை என்று..."

"உன் மனதிலும்தான் எவ்வளவு பெரிய பிற்போக்குத்தனம். உன்னை நான் எவ்வளவோ நல்லவன் என்று நினைத்தேன். மற்றவர்களுக்கு ஒரு வழிகாட்டியாக இருப்பாய் என்று நான் நினைத்தேன். எந்த இடத்தில் நீ மனிதனாக நடந்துகொண்டிருக்க வேண்டுமோ அந்த இடத்தை நழுவ விட்டு விட்டாய். எவ்வளவு எழுதி என்ன? அரை விநாடி உன்னால் மனிதனாக இருக்க முடியவில்லையே? ஆயிரத்தெட்டு சீர்திருத்தங்கள் எழுதி என்ன பிரயோசனம்? பேசி என்ன பயன்? பழைய வழக்கங்கள் ஒழிய வேண்டுமென்று பேசினாய்!

"நம் முதுகின்மேல் நாமாகச் சுமந்து கொண்டிருக்கிற பிற்போக்குத்தனங்கள்தான் நம்மை முன்னேற முடியாமல் அழுத்துகின்றன.

"நாம் சுமக்கும் அந்த சநாதனச் சுமைகளைக் கீழே போட்டுவிட்டு நடக்க வேண்டும் என்று மணிக்கணக்கில் உட்கார்ந்து பேசியிருக்கிறாய். இதற்குத் துணையாக சாக்ரடீஸையும், பிளாட்டோவையும், இங்கர்சாலையும் வெட்கமில்லாமல் உதாரணத்திற்கு இழுத்துக் கொள்வாய். நமது வைதீக முறையே நம் எதிரிகள் என்று கூட நீ ஒருமுறை கூறியிருக்கிறாய்.

"ஆனால்...

"உள்ளுக்குள் நீ ஒரு போலி. உன் எழுத்துக்கும் உனக்கும் சம்பந்தமில்லாமல் வாழுகிற இரட்டை மனிதன் நீ என்பதைக் காட்டி விட்டாய்.

"இப்பொழுது உன்னை நான் நேரிடையாகவே குற்றம் சாட்டுகிறேன், உயிருக்கு உயிரான என் மகள் சுலோசனாவின் மரணத்திற்கு நீதான் காரணம். அந்த இளந்தளிரை நீதான் கொன்றுவிட்டாய். உன்னை என்னால் மன்னிக்கவே முடியாது. நீ ஒரு வேஷக்காரன்.

"உன்னைத்திட்ட எனக்கு உரிமையில்லைதான். சற்றுமுன்வரை நெருக்கமாக இருந்த நீ இப்பொழுது ரொம்ப விலகிப்போய் அந்நியனாகி விட்டாய். அவள் தாய்மையடையும் வரை பழகி விட்டு அவளை ஏமாற்றியிருக்கிறாய். உன்னை நம்பி அவள் தன்னையே சமர்ப்பணம் செய்திருக்கிறபோது அவள் ஒரு விதவை என்கிற காரணத்தைக்காட்டி...ச்சீ... நீயெல்லாம் ஒரு மனிதனா... போய் விடு இங்கிருந்து... இனிமேல் இங்கே வராதே..."

அவன் அவமானத்துடன் வெளியேறிக் கொண்டிருந்தான்.




"சலிப்பாயிருக்கிறது;
அன்றாட வாழ்க்கை
அலுப்பாயிருக்கிறது"
என்று
அங்கலாய்ப்பவர்களே!
ஒரு நிமிடம்....

காதலித்த வாழ்க்கை
கிடைக்கவில்லையா?
கிடைத்த வாழ்க்கையைக்
காதலியுங்களேன்....

வானவில் பூமிக்கு
வரமறுக்கிறது
என்பதற்காகக்
கோலத்தாமரையிடமா
கோபம் கொள்ளுவது?

வான்நிலா அழைத்தும் கூட
வரவில்லை என்பதனால்,
உள்ளங்கையில்
அமர்ந்திருக்கும்
ஊர்க்குருவியை வெறுக்கலாமா?

கனவுகளை மட்டுமே
காதலித்தது போதும்....
நிஜங்களை நேசிக்க
நேரம் ஒதுக்குங்கள்....

வட்டம் போட்டுக்கொண்டு
வரமாட்டேன் என்கின்ற
முட்டாள்தனத்துக்கு
முற்றுப்புள்ளி வையுங்கள்....

இன்னும் பாசத்தைக்
காட்டத் தெரிந்தால்,
இன்னும் அன்பாய்ப்
பேசத் தெரிந்தால்

இன்னும் உற்சாகமாய்
உழைக்கத் தெரிந்தால்
கவலைப் பூச்சிகள்
காணாமல் போகாதா?

மற்றவர்
குறைகளைக் கொஞ்சமாகவும்,
நிறைகளை அதிகமாகவும்
நினைத்திடக் கற்றால்தான்
நமக்கு
நிம்மதி நிலைத்திடும்...

மாற்றியே நினைத்தால்
காலத்திற்கும் புலம்பல்தான்
சட்டாயத் தேசியகீதம்....

அதனால்
முட்களைத் தள்ளுங்கள்.....
மொட்டுகளை
எண்ணுங்கள்....
சருகுகளைச் சபிக்காமல்
தளிர்களை இரசியுங்கள்....

— அரசு மணிமேகலை



◆ சீதை இராவணனைத் தடுத்தல்



◆ முதலிலும் முடிவிலும் இராம வந்தனை

◆ புஷ்பாஞ்சலியில் இராமரின் வர்ணனை

# துளசியும் பரதமும்

**கோமளா வரதன்**

இராம சரித்திரம் பாரத நாட்டில் மட்டுமின்றி கடல்கடந்து பரவிய மகத்தான சரித்திரம். பல நாடுகளிலும் பலப்பல மொழிகளில் புலவர்கள் பாடிப்பாடி கசிந்துருகிய கதை.

தமிழில் கம்பனைப் போல ஹிந்தியில் துளசிதாசர் இராம பிரானின் குணஇயல்புகளில் ஈடுபட்டவர். அவர் பாடிய ஸ்ரீராம சரிதமனஸ் மிகவும் புகழ்பெற்றது.

வால்மீகி இராமாயணம் முழுவதையும் வடநாட்டு மக்கள் படித்துப் பாராயணம் செய்வார்கள். அத்தனைப் பாடல்களையும் மனப்பாடமாய்ப் பாடக்கூடியவர்கள் பலர் உளர்.

'ஸ்ரீராமசரித மனஸை' சுவை குன்றாமல் பரதநாட்டிய நிகழ்ச்சியாகத் தயாரிக்கும் எண்ணம் சில ஆண்டுகளாகவே என் மனத்தில் துளிர்விட்டுக் கொண்டிருந்தது.

தென்னிந்தியாவிலிருந்து இங்கே வந்தபோது பரதநாட்டியம் நன்றாக பரவியிருப்பதையும் வட இந்திய பெண்கள்கூட விரும்பிக் கற்பதையும் கண்டேன். 'உங்கள் நாட்டியம் அழகாய் இருக்கிறது. ஆனால் மேடையில் என்ன நடக்கிறது' என்பதுதான் புரிவதில்லை' என்று பலர் சொல்ல, நான் சிந்தித்தேன்.

(திருமதி கோமளா வரதன் 'துளசியின், ஸ்ரீராமசரித மனஸ்' - காவியத்திலிருந்து சில காட்சிகளை நமக்கு அளிக்கிறார்)

◆ சூர்ப்பனகை இராவணனிடம் முறையிடுதல் : 'நீ இருக்கையில் என் கதியைப் பார்'



◆ சீதா ஸ்வயம்வரத்தில் இராமன் வில்லை முறித்தல்

பரத நாட்டிய நிகழ்ச்சிகளின் பாட்டுகள் தென்னிந்திய மொழிகள் தவிர சம்ஸ்கிருதத்தில் இருக்கின்றன (வடநாட்டு நகரங்களில் ஆடும்போது ஒப்புக்கு ஒரு ஹிந்தி பஜன் சேர்த்துக் கொள்ளப்படுகிறது) பாட்டைப் புரிந்து ரசிக்கும்போது உண்டாகும் நிறைவு இவர்களுக்குக் கிட்டுவதில்லை என்று புரிந்தது. முழு நிகழ்ச்சியையும் ஹிந்தியிலேயே தயாரித்தாலென்ன என்ற எண்ணம் எழ, துளசிதாசரின் ஸ்ரீராம சரிதமனஸைத் தேர்ந் தெடுத்தேன்.

அந்தக் காவியம் இன்று நாம் பரவலாய்ப் பேசும் ஹிந்தி மொழியில் இல்லாமல் 'அவதி' எனப்படும் உப மொழி (DIALECT)யில் கவிதைகளாய் அமைந்த பெருங்காவியம். ஒரு பரத நாட்டியக் கலைஞரின் கண்ணோடு அதைப் படித்துப் புரிந்து கொண்டு சம்பவங்களுக்கு ஏற்ற கவிதை வரிகளைத் தேர்ந்தெடுக்கவே ஈராண்டு காலமாயிற்று.

என் கணவர் வரதன் அவர்கள் துளசிதாசர் பாடல்களைக் கர்நாடக முறையில் இசையமைக்க, பிறகுதான் நடன அமைப்பு தொடர்ந்தது.

ஆதிகவி வால்மீகி எழுதிய இராம காதையை வெவ்வேறு மொழிப் புலவர்கள் அவரவர் மொழியில் பாடும் போது அந்தந்த மாநிலங்களுக்குரிய தனிப்பட்ட குணநலன்களைக் கருத்தில் கொண்டே பாடினார்கள்.

இராவணன் சீதையைக் கவர்ந்து சென்ற கதை எல்லோரும் அறிந்ததே. கம்பன் பாடும்பொழுது தமிழ்ப்பண்பினைக் கருத்தில் கொண்டு அவன் அவளைத் தொடாமலேயே குடிசையோடு பெயர்த்து எடுத்துச் சென்றதாகப் பாடியுள்ளான். ஆனால் துளசி இராமாயணத்தில் 'மிகுந்த குரோதத்துடன் அவளைத் தூக்கி ரதத்தில் அமர்த்தினான். ஆகாய மார்க்கமாய் மிகுந்த பயத்துடன் தாறுமாறாய் விரட்டியடித்துக் கொண்டு சென்றான்" என்று பாடப்பட்டிருக்கிறது.

இராம காதையைத் துளசிதாசர் ஒன்பது முறை பாடினாராம். ஸ்ரீராமசரித மனஸ் எனப்படும் இந்த காவியத்தில் கதை முழுவதும் பார்வதி கேள்வி கேட்பதும் சிவன் அவளுக்கு விளக்குவதுமான சம்பாஷணை முறையில் அமைந்துள்ளது. இன்று மிகப் பிரபலமாகப் பேசப்பட்டுவரும் லட்சுமண ரேகை சம்பவமே இதில் குறிப்பிடப் படவில்லை என்பதும் ஒரு விசேஷம்.

தில்லி மற்றும் ஹிந்தி பேசும் மாநிலங்களும் மட்டுமின்றி பிறமொழி மாநிலங்களிலும் இந்த நிகழ்ச்சிக்குக் கிடைத்த வரவேற்பு உற்சாகத்தைக் கொடுத்தது.



◆ சீதையிடம் தன் விரதத்தைக் கூறி வேகமாய்த் திரும்புமாறு இராமன் கூறுதல்

◆ இராவணன் சீதையை வலுக்கட்டாயமாக இழுத்தல்





◆ மானைப் பிடித்துத் தரும்படி சீதை இராமனை வேண்டுதல்

ஒரு கலைப் பாலம் இணைக்க விரும்பினேன். வடநாட்டில் பிரபலமான காவியம் ஸ்ரீராமசரிதமனஸ். தென்னாடு என்றாலே நினைவுக்கு வருவது பரதநாட்டியம். ஸ்ரீராம சரித மனஸின் மூலமாகப் பரத நாட்டியத்தை வடநாட்டவர்க்கும் பரதத்தின் மூலமாக துளசியின் அழகும் கம்பீரமும் மிகுந்த படைப்பைத் தென்னாட்டவர்க்கும் நெருக்கத்தில் காட்டுவதே என் முக்கிய நோக்கம். அதில் வெற்றியும் பெற்றுள்ளதாகத் தான் கருதுகிறேன். ஃ



சித்ரா ஸ்வயம்வரம்

◆ இராமன் பொய் மானை வில்லால் அடித்தல்





நாட்டிய நாடகம் :

◆ கோமளா வரதன்

# பிரமிக்க வைக்கும் தாய்லாந்து

**1991-92** இல் தமிழகத்திற்கு வருகை புரிந்த சுற்றுலாப் பயணிகளின் எண்ணிக்கை 3.33 லட்சத்தில் இருந்து 1992-93 இல் 4.18 லட்சமாக உயர்ந்திருக்கிறது. வெளிநாட்டுப் பயணிகளின் வருகை என்றாலே அந்நியச் செலாவணி வரவு, அதிக வேலை வாய்ப்பு, தமிழகக் கைவினைப் பொருட்களின் விற்பனை மற்றும் எவ்விதத் தொழிற்சாலையும் இல்லாத இடங்கள் சுற்றுலாத் தலமாக இருந்தால் அங்கு பொருளாதார முன்னேற்றம் ஏற்படும் என்பது யாவரும் அறிந்த ஒன்று.

பாரதத்திற்கு வருகின்ற வெளிநாட்டுப் பயணிகளில் ஏறக்குறைய தமிழகத்திற்கு வருகை புரிபவர்களில் 19.08 சதவீதம் அமெரிக்க நாடுகளில் இருந்தும், 16.33 சதவீதம் இங்கிலாந்தில் இருந்தும், 4.72 சதவீதம் பிரான்சிலிருந்தும், 4.27 சதவீதம் ஜெர்மனியிலிருந்தும், 18.23 சதவீதம் அண்டை நாடுகளும், தமிழினம் அதிகமுள்ள நாடுகளுமான இலங்கை, சிங்கப்பூர், மலேசியா மற்றும் தென் ஆப்பிரிக்கா ஆகிய நாடுகளிலிருந்தும் வருகின்றனர். இவர்களில் ஆண்கள் 52.8 சதவீதமும், பெண்கள் 47.2 சதவீதமும் உள்ளனர். மேலும், சுற்றுலாப் பயணிகளில் 25 - 34 வயதுக்குட்பட்டவர்கள் 40.56 சதவீதமும், 35 - 44 வயதுக்குட்பட்டவர்கள் 30.93 சதவீதமும் ஆவர்.



ப. சிவகாமி

1991 ஆம் ஆண்டில் 'ரைட்ஸ்' நிறுவனம் எடுத்த சர்வேபடி பெரும்பாலான சுற்றுலாப் பயணிகள் (76.3%) தமிழகத்திற்கு வருவது பொழுது போக்கவும், சுற்றுலாத் தலங்களைச் சுற்றிப்பார்க்கவும் என்பது உறுதியாகி விட்டது. 3.7% தான் தமிழகத்தில் கிடைக்கும் சில பிரத்யேகப் பொருட்களை வாங்க வருகின்றனர் என்று தெரிகிறது.

இதிலிருந்து தமிழர் வாழும் அண்டை நாடுகளிலிருந்தும், 25 - 44 வயதுக்குட்பட்ட ஆங்கிலேயர்களும், அமெரிக்கர்களும் உல்லாசமாகப் பொழுது போக்கவும், பிரசித்தி பெற்ற சரித்திரப் புகழ்வாய்ந்த சுற்றுலாத் தலங்களைக் கண்டுகளிக்கவும் வருகிறார்கள் எனத் தெரிகிறது.

இவர்களில் ரூ. 45,000 முதல் ஓர் லட்சம் ரூபாய் வரை செலவு செய்பவர்கள் 52.04 சதவீதமும், ரூ. 45,000த்திற்கும் குறைவாக செலவு செய்

பவர்கள் 43.52 சதவீதமும் ஆவர். ரூபாய் ஓர் லட்சத்திற்கு மேல் செலவு செய்பவர்கள் மிகக் குறைவான எண்ணிக்கையிலேயே தமிழகத்திற்கு வருகிறார்கள்.

இவ் வெளிநாட்டுப் பயணிகளை அதிக எண்ணிக்கையில் கவர்ந்திழுக்க தமிழகத்தின் எண்ணற்ற சுற்றுலாத் தலங்களையும் அவற்றின் பெருமை களையும் சுற்றுலாப் பயணிகள் தங்கிக் களிக்கும் வசதிகள் பற்றியும் வெளி உலகத்திற்கு எடுத்துரைப்பது மிகவும் அவசியம்.

எப்படி?

சிறு கையேடுகள், அழகான துண்டுப் பிரசுரங்கள் மற்றும் வெளி நாட்டுப் பத்திரிகைகளில் விளம் பரங்கள் செய்வது மூலமும், வெளி நாடுகளில் நடக்கும் சுற்றுலாக் கண் காட்சிகளில் கலந்து கொள்வதன் மூலமும் செய்யலாம். முக்கியமான நாடுகளில் மைய அரசின் சுற்றுலா அலுவலகம் இவ்வேலையைச் செய்து கொண்டிருக்கிறது. என்றாலும் அந்தந்த மாநிலங்களின் பெருமை யினை அவரவர் தனிப்பட்ட முறையில் எடுத்துக் கூறுவதும் அவசியமாகிறது.

அந்த வகையில், சுற்றுலாத் துறை யின் இயக்குநர் மற்றும் சுற்றுலா வளர்ச்சிக் கழகத்தின் நிர்வாக இயக்கு நர் என்ற வகையில் மலேசியா, சிங்கப் பூர், மொரிஷியஸ், தென் ஆப்பிரிக்கா, ஜெர்மனி, பிரான்சு ஆகிய நாடுகளுக்கு அண்மையில் சென்று வந்தேன்.

இந் நாடுகளுக்குச் செல்வதற்கு முன்பாக தேசிய உற்பத்திக் குழு (ஆசிய உற்பத்திக் குழுவின் இந்திய அங்கம்) என்னும் நிறுவனம், ஆசிய நாடுகளின் சுற்றுலா வளர்ச்சி பற்றிய "பன்னாட்டு ஆய்வுக் குழுவில்" இந்தியாவைப் பிரதிநிதித்துவப்படுத்தி என்னைத் தேர்ந்தெடுத்திருந்தது. அந்த வகையில் தாய்லாந்தும் சென் றிருந்தேன்.

1992 ஆம் ஆண்டில் நவம்பர் மாதம் தாய்லாந்து சென்றிருந்தேன். தாய் லாந்தின் தலைநகரான பாங்காக் விமான நிலையத்தில் விமானம் தரை யில் இறங்கியதும் மறுபடியும் தவறி சென்னை வந்து விட்டோமா என் றிருந்தது. சூரிய வெளிச்சமும், வெப்பமும் என்னைத் தாக்கின. ஓரளவு சுற்றுப்புறமும்கூட அப் படியே இருந்தது. ஆனால், மனிதர் கள் சராசரியைவிடச் சற்றுக் குள்ளமாக, சிவப்பாக வாய் நிறைய 'தாய்'மொழி யில் (தாய்மொழி அல்ல - தாய்லாந் தின் மொழி 'தாய்' என அழைக்கப் படுகிறது). வரவேற்றபோதுதான் இது வேறு ஓர் இடம்தான், சந்தேகமில்லை என உறுதி செய்து கொண்டேன். விமான நிலையத்தில் இருந்து நான் தங்கியிருந்த "ஏஷியா ஹோட்டலுக்குச்



செல்வதற்குள்... அடேயப்பா வாகன வரிசைகள்... உங்களுக்குத் தெரியுமா ஆசியாவிலேயே ட்ராபிக் ஜாம் - ஆல் தொல்லைப்படுவதில் முதலிடம் வகிக்கும் நகரம் பாங்காக்தான்... போதும் போதும் என்றாகிவிட்டது. ஆனால், அவை யாவும் 'ஏஷியா' ஹோட்டல் சிப்பந்திகளின் அன்பான வரவேற்பாலும், வரவேற்பறையில் வைத்திருந்த பிரம்மாண்டமான 'பூ' அலங்காரங்களாலும் மறந்து விட்டது. குளிர்ச்சியாகவும், கண்ணைக் கவருவ தாகவும் சற்று நேரம் நின்று பார்க்கும் படியாகவும் இருந்தது அந்தப் பூ அலங்காரம்.

அறையில் சற்று நேர ஓய்வுக்குப் பின் தாய்லாந்தின் ஆங்கில நாளேடு களைப் பிரித்துக் கண்ணோட்டம். கொட்டை எழுத்தில் தலைப்புச் செய்தி - முதல் பக்கத்தில். பாங்காக் கில் - தாய்லாந்தில் விபசாரத்தை ஒழிக்க வேண்டும். தாய்லாந்து மக்களவையில் அமளி துமளி... அடுத்த பக்கத்தைப் புரட்டினேன். விதம் விதமான விளம்பரங்கள், அழகான பெண்கள் படங்களுடன். உங்களுக்குத் தாய்லாந்தைச் சுற்றிக் காட்டுவாள் இவள். ஆண்களுக்கு இடங்களைச் சுற்றிப் பார்க்க பெண் துணை தேவையெனில், பெண்களுக் கும் ஆண் துணைக்குப் பஞ்சமில்லை என்பதாக விளம்பரங்கள். பின்னும், பலவிதமான மசாஜ் பார்லர்கள் பற் றிய மசாஜ் அழகிகளுடன் விளம் பரங்கள்...

முரண்பாடுகள் எங்குமே வாழ்க்கையாகிவிட்ட நிலையில் தாய் லாந்து மட்டும் விதிவிலக்காகிவிட முடியுமா என்ன?

என்னைப்போல் பிரதிநிதிகள் 21 நாடுகளிலிருந்து வந்திருந்தனர். ஏஷியா ஹோட்டல் கான்பெரன்ஸ் அறையில் ஆய்வுக் குழுவின் அலு வல்கள் துவங்க ஆரம்பித்தன. பிரதிநிதிகள் தத்தம் நாட்டின் சுற்றுலாத் திட்டங்கள் அடங்கிய அறிக்கை ஒன்றை வாசித்தார்கள். அதில் தமிழ் தெரியாத தமிழரும் அடங்குவர். அவர்தான் பிஜித் தீவைச் சேர்ந்தவர். அவரின் மூதாதையர் தமிழராம். எனக்கு உடனே கரும்புத் தீவும், தமிழர்கள் கொத்தடிமை யாக அழைத்துச் செல்லப்பட்டதும், தொடர்ந்து பாரதியார், கண்ண தாசனின் கவிதை வரிகளும் ஞாபகத் திற்கு வந்தன. ஆனால், இந்தத் தலைமுறையினர் முன்னேறி விட் டனர். அங்கே குடியேறிய மற்ற இனத்தோடு கலந்து விட்டனர். தமிழர் மற்றும் தமிழ் பற்றிய கதைக ளெல்லாம் அவர்கள் வரலாற்றில் சில வரிகளாகச் சுருக்கப்பட்டு விட்டன. என்றாலும், அவர் 'தமிழர்' என்றே நினைத்துக் கொண்டேன். எத னாலோ?

மற்ற நாடுகளில் சுற்றுலா வளர்ச்சி பற்றிப் பிறிதொரு கட்டுரையில் விளக்குவேன். தாய்லாந்தைப் பற்றித் தொடர வேண்டிய கட்டாயம் தற்போது உள்ளது. தாய்லாந்தைப் பொறுத்தவரையில், சுற்றுலாவானது மிக அதிக அளவில் அந்நியச் செலா வணி ஈட்டித் தருகின்ற தொழிலாகக் கருதப்படுகிறது. அது வருடந் தோறும் அதிகரித்துக் கொண்டே வருகிறது. 1985 ஆம் ஆண்டு சுற்றுலா மூலம் 1.2 பில்லியன் அமெரிக்க டாலர் களாகக் கிடைத்த அந்நியச் செலா வணி 1990 இல் 4.3 பில்லியன் அமெரிக்க டாலர்களாக அதிகரித் துள்ளது. அதேபோல், தாய்லாந்துக்கு வரும் அயல் நாட்டினரின் எண்ணிக் கையும் 1980 இல் 1.85 மில்லியனாக இருந்தது. 1990 இல் 5.3 மில்லியனாக உயர்ந்துள்ளது. முக்கிய சுற்றலாத் தலங்களான அரசர் மாளிகை, மரகத புத்தர் கோயில், பாட்டாயா கடற்கரை போன்ற எல்லா இடங்களிலும் குளிர் சாதனப் பேருந்துகளில் வந்து கூட்டம் கூட்டமாக இறங்கும் அமெரிக்கர்கள், ஐரோப்பியர்களைப் பார்க்கலாம். அண்டை நாடுகள் மற்றும் ஜப்பான் போன்ற நாடுகளிலிருந்தும்கூட அதிக எண்ணிக்கையில் சுற்றுலாப் பய ணிகள் அங்கு வருகின்றனர். 1986 ஆம் வருடத்தில் 1,17,000 ஹோட்டல் அறைகள் மட்டுமே தாய்லாந்தில் இருந்தன. அதில்கூட வருடந்தோறும் அறுபது சதவிகிதம்தான் பயணிகள் தங்கியுள்ளனர். ஆனால், 1990 ஆம் வருடத்தில் ஹோட்டல் அறைகள் 1 லட்சத்து 69 ஆயிரம் என அதிகரித்த தோடல்லாமல் தங்கும் விகிதமும்



25.9 சதவிகிதமாக உயர்ந்துள்ளது. இந்த வளர்ச்சி 1991 மற்றும் 1992 இல் குன்றியுள்ளதாக நான் படித்த அறிக்கைகள் கூறுகின்றன. அதைப் பின்னர் பார்ப்போம்.

அரசர் மாளிகைக்குச் சென்றோம். அதையொட்டி புத்தர் கோயில். பனிச் சென்று கழுவிவிட்டாற்போல் தூய்மை. சுற்றிலும் பச்சைப் புல்வெளிகள். பூ மரங்கள். மாளிகைக்குள் நுழைவதற்கு முன்னால் தற்போதைய தாய்லாந்து அரசரின் சாதனைகள் பற்றிய விளக்கப் படம் ஒன்று 70 மி.மீ. திரையில் 100 இருக்கைகள் கொண்ட ஓர் அறையில் போட்டுக் காட்டப் பட்டது. தாய்லாந்து அரசரை மக்கள் தெய்வமாக மதிக்கும் அதேவேளை யில் அரசரும் பழங்காலம்போல் அல்லாது நவீன மோஸ்தர் உடையில் வயலுக்கும், விஞ்ஞான கூடங்களுக் கும், தொழிற்சாலைகளுக்கும் சென்று மக்கள் நலனுக்காகப்பாடுபடுவதுதான் அந்த விளக்கப்படத்தின் சுருக்கம்.

அரசர் மாளிகையின் முற்பகுதி தாய்லாந்தை ஆண்ட அரசர்களின் உருவப்படங்கள் அடங்கிய கலைக்கூட மாக இருந்தது. மரகத புத்தருக்குத் தாமரை மலர்களால் அஞ்சலி செய் கிறார்கள். தமிழ்நாட்டில் பல்லவ ருடைய ஆட்சிக் காலத்தில் அரச செல்வாக்குப் பெற்று இருந்த புத்த மதம் சோழர் ஆட்சிக் காலத்தில் புறக்கணிக்கப்பட்டு விட்டது. இந்து மதத்தில் வளர்ந்து வந்த பக்தி மார்க் கமும், மதச் சீர்திருத்தங்களும் புத்த மதத்தை ஒரேயடியாக வேரறுத்து விட்டன தமிழ்நாட்டில். அரசச்செல் வாக்கு இழந்த புத்த பிக்ஷுக்கள் கூட்டமாகச் சிலர் தாய்லாந்து மற்றும் பல கீழை நாடுகளுக்குச் சென்று விட்டார்கள். அவர்கள் வகுத்ததுதான் இன்றைய புத்த மார்க்கமாக அந்நாடு களில் விளங்கி வருகிறது. புத்தமதம் இங்கு வேரூன்றவில்லையென்றாலும், நமது பண்டைய தமிழ் இலக்கியங் களான சிலப்பதிகாரம், மணிமேகலை யில் புத்தமதக் கொள்கைகள் ஒரு வாழ்வு மார்க்கமாக சித்திரிக்கப்பட் டுள்ளன. அம் மதம் தமிழர் வாழ்வு, பண்பாடு, கலை, ஓவியம் இவற்றில் குறிப்பிடத்தக்க தாக்கம் ஏற்படுத்தி யுள்ளது. இங்கு வேரூன்ற முடியாத புத்தர் அங்கு ஆல்போல் தழைத்து விதவிதமான கோயில்களில் குடி யிருப்பது எனக்குப் பழைய வர லாற்றை நினைவூட்டியது.

"பாட்டாயா" என்பது தாய்லாந்தின் மிக முக்கியமான கடற்கரைச் சுற்றுலா நகரம். அங்கு தாய்லாந்துப் பெண் களுடன் கைகோத்துக் கொண்டு செல்லும் ஐரோப்பியர்களைச் சர்வ சாதாரணமாகப் பார்க்க முடிகிறது. அங்கே அப் பெண்கள் கவர்ச்சிகர மான உடையணிந்து அதிக அளவில் சீட்டு ஆடுவதையும் தெருவில் போவோரை அவர்கள் விளையாட்டில் கலந்து கொள்ளச் சொல்லி அழைப் பதையும்கூடப் பார்க்கலாம். "பாட் டாயா" கடற்கரையையொட்டிநிறையப் பொழுதுபோக்கு கடற்கரை வளாகங் கள் உள்ளன. தாய்லாந்துக்கு மிகப் பெரிய அந்நியச் செலாவணியை ஈட்டித் தரும் 'பாட்டாயா' அழகு குறைந்து வருவது பற்றியும், மாசடைந்து வருவது பற்றியும் பல சர்ச்சைகள் கிளம்பியுள்ளன. கவலை அடைந்த தாய்லாந்து அரசாங்கம் 'புக்கெட்'என்ற மாற்றுக்கடற்கரையைச் சுற்றுலாவுக்காகத் தேர்வு செய் துள்ளது. அதுவும் இதுபோல் மாசு அடைந்து விட்டால் என்ன செய்வார் களோ? நான் விரும்பி ரசித்தது பாட்டாயாவுக்கு போகும் வழியில் உள்ள 'ஆர்க்கிட்' பூக்களின் அணி வகுப்பும், தாய்லாந்து மக்களின் கிராம வாழ்க்கை, பழக்க வழக்கங் களைச்சித்திரிக்கும் வகையில் அமைந் திருந்த கலை விழாவும், பிரம்மாண்ட மான யானைகளின் கண்காட்சியும் அவைகளின் விளையாட்டும்தான்.



இன்னொன்றுகூட, 'குட்டி தாய்லாந்து' என்று அழைக்கப்படும் தாய்லாந்தி லுள்ள மற்றும் உலகப் பிரசித்திப் பெற்ற கட்டடங்களின் குட்டி வடி வங்கள் அமைக்கப் பெற்ற பூங்காவு மாகும். தாய்லாந்து அரசாங்கம் சுற்றுலா வளர்ச்சிக்காகப் பல ஐந் தாண்டு திட்டங்கள் மற்றும் வெளி நாட்டுப் பொருளாதாரக் கூட்டுறவு நிதி (Overseas Economic Co-operation Fund) உதவி பெற்று ஏராளமான சுற்றுலாத் திட்டங்களைத் தீட்டி நடை முறைப் படுத்தி வருகிறது. அவற் றில் பழைய கட்டடங்களைப் பழுது பார்த்தல், அதனுடைய பழைமைக்கு ஊறு விளைவிக்காமல் புதிய பொலி வுடன் விளங்கச் செய்தல், சுற்றுப் புறத்தை வளப்படுத்துதல் மற்றும் கையேடுகள், விளக்கப்படங்கள் தயார் செய்து உலகெங்கும் விநியோகம்



செய்தல், போக்குவரத்து மற்றும் ஹோட்டல் வளர்ச்சிக்கெனக் கணிச மான தொகை ஒதுக்கிட்டு அவற்றுக்கு முன்னுரிமை கொடுத்து சுற்றுலாப் பயணிகளுக்கு வசதிகள் செய்து கொடுத்தல் ஆகிய பலவற்றைச்செய் துள்ளன. தாய்லாந்து, ஆண்கள் அதிக அளவு செல்லும் இடமென்ற ஓர் எண்ணத்தை (Image)மாற்றிக் குடும்பத் தோடு சுற்றுலாப் பயணிகள் வரக் கூடிய இடம் என்ற எண்ணத்தை (Image) ஏற்படுத்துவதற்காகப் பல முயற்சிகளை எடுத்து வருகிறது. "குடும்பத்தோடு பார்க்கக் கூடிய படம்" என்று சில விளம்பரங்களும், கவர்ச்சிக் கன்னிகள் படம் தாங்கி வருகிற சில "குடும்பப் பத்திரிகை களும்" அந்த வாசகத்தை விளம்பர மாக உபயோகிப்பதுபோல் இதுகூட விளம்பர உத்திதானோ என்னவோ யார் கண்டது!

கேபிள் டி.வி.யைப் பார்த்து விட்டுத் தூங்க ஆரம்பித்த பொழுது. விழிப்பும், தூக்கமும் இல்லாத நிலை. மனசு கொஞ்ச நாளாகவே ஒரு நிலையில்லாமல் அலை பாய்கிறது. விழிப்பில் வெட்கப்பட வைக்கும் எண்ணங்கள், இரவுத் தூக்கத்தில் அரங்கேற்றமாகிறது. சுரங்கமான மனத்தடத்தில் சொக்க வைக்கும் வசந்தங்கள். மலரை ஒற்றை விர லால் நிரடும் சுகம்.

அம்மாவுக்கு இந்த அந்தரங்கம் தெரியாது. கட்டுப்பெட்டித்தனமான வளர்ப்பில், உணர்வுகள் அடங்கி ஒடுங்கிப்போன அடிமைத்தனத்தால் வாலிபத்தின் வசந்த விழிப்பு தெரிய வில்லை.

"ஏம்மா சிரிக்கிறே?"

"கல்யாணம் உனக்குத் தாண்டா!"

எதிர்பாராத அடி. சமாளித்துக் கொள்கிறான். ஓர் ஆணுக்குப் பெண்ணை எதிர்த்துச் சமாளிக்க முடியவில்லை என்றால், அவன் என்ன ஆண்பிள்ளை? படிக்காத பட்டிக்காட்டுப் பெண்ணைச் சமாளிப்பதா கஷ்டம்?

"எனக்கு இப்பக் கல்யாணம் வேண்டாம்மா".

"ஏண்டா ராசா? நல்லாப்படிச்சுக் கைநிறையச் சம்பளம் வாங்கறே. அப்புறம் என்ன? எதுவும் காலா காலத்துல நடக்கணும். அந்தப் பொண்ணு நல்லா சமையல் பண் ணும். பத்து விரலும் பத்து காரியம் பண்ணும். வீட்டை சுத்தமா துடைச்சுத் துடைச்சு வச்சுக்கும்".

மோகன் கலகலவென்று நகைக் கிறான்.

"ஒரு பெண்ணுக்குச் சமையல் தெரிஞ்சா போதுமாம்மா."

கரண்டியைப் பாத்திரத்தில் போட்டவள் அவனை அதிசயமாகப் பார்க்கிறாள். "வேற என்னடா தெரிய ணும்?"

"பாடத் தெரியணும்; ஆடத் தெரி யணும்; நறுக்குனு நாலு வார்த்தை பேசத் தெரியணும். இப்படி எத்தனையோ இருக்கும்மா. இதை எல்லாம் தெரிஞ்சுகிட்டு வரவ, சமை யலையும் தெரிஞ்சுக்குவா. அரிசியை மடியில கட்டிகிட்டுத் திங்க ஒண்ணும் மாட்டோம்" என்கிறான் எரிச்சலாக.

அம்மாவுக்கு நெஞ்சை அடைக் கிறது. "மொத்தத்தில நீ டிராமா.. டிராமானு அலையறியே? அதுக்கு ஒத்துப் போறவளா இருக்கணும். கூத்தாடறவளா வரணும். அப்படித் தானே?"

அம்மா சொல்வது வாஸ்தவம் தான். வந்தனா அவனுடைய நாடகக் குழுவில் வந்து சேர்ந்த பின்பே அவனுடைய போக்கு மாறித்தான் போகிறது.

டைரக்டர் சுந்தரகுமார் அறிமுகம் செய்து வைத்ததும் அசந்துதான் போகிறான் மோகன். இப்படி ஓர் அழகா?

"மிஸ்டர் மோகன், அப்படியே அசந்து போயிட்டீங்க!"



# மேலு விரல் அவன் உனக்கு

## லட்சுமி ராஜரத்தினம்

தலையை உலுப்பிக் கொண்டு சிரிக்கிறான். "உங்க அழகு அசத்தற அழகுதான். சினிமாவுல சான்ஸ் கிடைக்கலையா?"

உதட்டைப் பிதுக்குகிறாள். "அதுக் கெல்லாம் தனித் திறமை வேணுங்க".

"பெண்ணாக இருக்கிறதே தனித் திறமைதானே!"

"அப்படிங்கிறீங்களா! பார்க்க லாம்".

இந்தப் பார்க்கலாம் என்பதற்கு அப்பொழுது பொருள் புரியவில்லை.

"என் மகன் என் சொல்லை மீற மாட்டான்"என்ற பெருமை.

பள்ளத்தைப் பார்த்து வெள்ளம் பாயும் என்ற விதியை மறந்த பெருமை.

"மோகன் இன்னும் ரெண்டு நாள்ல நம்ம கிராமத்துல பெண் பார்க்கப் போறோம்ப்பா. இது என்ன ஆடியா? ஆவணியில இல்லாட்டி ஐப்பசியில முகூர்த்தம் வைக்கச் சரியா இருக்கும்".

தேங்காய்ப் பாலில் தோய்த்த இடியாப்பத்தை வாயில் திணித்துக் கொள்ள இருந்தவன், "யாருக்கும்மா கல்யாணம்?" என்று கேட்கிறான்.

காரமான குழம்பை ஒரு தட்டில் ஊற்றி மகன் முன்பு நகர்த்திய அம்மா பலமாகச் சிரிக்கிறாள்.

இரவு ரிகர்ஸல் நீண்ட நேரமாகி விட வந்தனா தவித்துப் போகிறாள். உடன் நடித்தவர்கள் வெவ்வேறு பகுதிக்குப் போக வேண்டியிருப்ப தனால் அவளுக்கு உதவத் தயாராக இல்லை.

"ஏன் வந்தனா, கையைப் பிசைஞ் சுண்டு நிக்குறீங்க?"

"ரொம்ப லேட்டாயிடுச்சு. ஆட்டோ வெல்லாம் இங்க கிடைக்காது. எப்படிப் போறதுன்னுதான்".

"அட, இதுக்குப் போயா கவலைப் படறீங்க! பின்னால ஏறிக்குங்க. சிட்டாப் பறந்து கொண்டு போய் இறக்கிடறேன்".

ஸ்கூட்டரின் வேகத்தினால் அவன் மேல் மோதும் பொழுது மென் பஞ்சுக் குவியலைப் போல் இருந்தாள். பெண்ணுக்கு இத்தனை மென்மையா!

அவள் வழி சொல்லிக் கொண்டே வர... அவள் வீட்டு வாசலில் அவளை இறக்கி விடுகிறான்.

"தாங்க்யூ மிஸ்டர்..."

"மோகன்".

அவன் வண்டியை உதைத்துக் கிளப்பும்வரை கையை ஆட்டிக் கொண்டு நிற்கிறாள்.

இரவு அவனுக்கு ஏனோ உறக்க மில்லை. அவளின் உடம்பு இடித்த தன் தோள் பகுதியைத் தொட்டுப் பார்த்துக் கொள்கிறான். திடீரென்று புதுமை ஒன்று தன்னுள் புகுந்து விட்டாற் போன்ற உணர்வு. கண் களை மூடினால் வந்தனாவே வந்து நிற்பது போன்ற அலைபாய்வு. அவள் தன்னருகில் வந்திருப்பது போன்ற பிரமை.

கை நிறையச் சம்பளம். பிக்குப் பிடுங்கல் இல்லாத குடும்பம். அவ னும் அம்மாவும் மட்டும்தான். இதனா லேயே பெண்ணைப் பெற்றவர்கள் ஈ மாதிரி மொய்த்தார்கள். நாடகம் அவனுக்குப் பொழுது போக்குதான். ஆனாலும் நடிப்புக்கலை அவனை ஈர்த்து விட்டது. சினிமாவில் நடிக்க வேண்டும் என்ற ஆசை. இப்பொழுது வந்தனாவின் தரிசனம் அவனுடைய நடிப்பு ஈடுபாட்டை அதிகரித்து விட்டது.

"டப்போவ். அசத்திட்டிங்க மோகன். நடிப்புக்கு இன்னொரு சிவாஜினு பிரமிச்சுப் போயிட்டோம். நீங்க மட்டும் சினிமா ஃபீல்டுக்கு வந்தா அவ்வளவுதான். ஃபீல்டே கலகலத்துப் போயிடும்" என்று வந்தனா பாராட்டியதும் அவன் இம யத்துக்குப் போயே போய் விட்டான்.

"வந்தனா, நான் ஒரு பரிசு தரு வேன். வாங்கிப்பீங்களா?"

வந்தனா முத்துப்பல் தெரியச் சிரிக்கிறாள். "முதல்ல இந்த மரியாதையை விடுங்க. நல்ல நண்பர் தர்ற பரிசை நான் கண்டிப்பாக ஏத்துக்குவேன். ஏன் இந்த சந்தேகம்!" என்று கேட்டவள், அவன் தந்த விலை யுயர்ந்த புடைவையைக் கண்டு மலைத் துப் போகிறாள்.

"இப்ப எதுக்கு இந்தப் பரிசு?"

"நீங்களும் நானும் சந்தித்துச் சரியா இரண்டு மாதம் ஆகிறது. அதுக்காகனு வச்சுக்கலாம். ரெண் டாவது, இன்னும் பதினைஞ்சு நாள்ல தீபாவளி வருது. அதுக்காக நான் தர்ற அன்பளிப்பாகவும் இருக்க லாம்".

தீபாவளி அன்று நடந்த நாட கத்திற்கு அவள் அவன் வாங்கிக் கொடுத்த புடைவையை உடுத்திக் கொண்டு வருகிறாள்.

"எப்படி இருக்கு?"

"ஏஞ்சல் மாதிரி இருக்கே!"

அவள் வெட்கத்துடன் குனிந்து கொள்கிறாள்.

"இன்னிக்கு நாடகம் முடிஞ்சதும் என் கூட வர்றியா?"

"எங்கே?"

"கடற்கரையில் கொஞ்ச நேரம் பேசிக்கிட்டு இருக்கலாம்".

"சரி வரேன்".

தீபாவளி முடிந்த அமாவாசை இரவு. இருள் கரும் போர்வை போர்த்தி இருந்தது. பேச்சு நடிப்பைப் பற்றி, அவள் தன் அனுபவத்தைப் பற்றி, அவன் தன்னைப் பற்றி என்று ஓடியது.

"போகலாமா? நேரமாச்சு" வந்தனா எழுந்திருக்கிறாள்.

அவன் அவள் கையைப் பற்றி இழுத்து வந்து, "ஐ லவ் யூ ஸோ மச்" என்று தன் கன்னத்தில் அவள் கையை அழுத்திக் கொள்கிறான்.

சற்றைய மௌனத்தில் நிமிடங்கள் கரைய, "போகலாம்" என்று தன் கரத்தை விடுவித்துக் கொண்டு நடக் கிறாள் வந்தனா.

"என்னை வீட்ல ட்ராப் பண் ணிடுங்க".

இறங்கியவள் டாட்டா காண்பித்து விட்டு நடக்கிறாள்.

அடுத்த நாள் ரிகர்ஸலுக்கு வந்தனா வரவில்லை. மோகனின் கண்கள் வாசற் பக்கமே பதிந்திருக் கிறது.

"என்ன பிரதர், வந்தனாவைப் பார்க்கிறீங்களா? அவளுக்கு, மேரேஜ் ஆகி ஒரு குழந்தையும் இருக்கிறது. வயத்துப் பிழைப்புக்காக அவ நடிக்க வரா. புருஷன் சீக்காளினு கேள்வி." சக நடிகன் குமார்தான் கூறுகிறான். "அதனாலதான் அவ வரல்லையோ என்னமோ?" என்றபடி போகிறான்.

இந்தச் செய்தி கேட்ட இரவு தான் வீட்டிற்கு வந்த பின்பு கேபிள் டி.வி. பார்த்தும், தூக்கம் வராமல் தவிக் கிறான். வந்தனாவைத் தன்னால் மறக்க முடியுமா? அவள் தன்னை நேசிக்கவில்லையா? கல்யாணமான தன்னை இவன் நேசிக்கிறானே என்று கீழ்த்தரமானவன் என்று எண்ணி இருப்பாளோ! கல்யாணமானவள் என்று தன்னிடம் அவள் சொல்லவே இல்லையே...

ஃபோன் அடிக்கிறது. இந்த நள்ளிரவில் யாராக இருக்கும்? குழம்பிய நிலையில் இப்படி ஒரு தொல்லையா? படுத்தபடியே எட்டி எடுக்கிறான்.

"ஹலோ" தூக்கக் கலக்கக் கொட் டாவி.

"நான்தாண்டா சுந்தர் குமார் பேசறேன்"

"நடு ராத்திரியிலே என்னடா இத்தனை அவசரம்?"

"இருக்குடா. சிங்கப்பூர், மலேசி யாவுல பத்து நாள் தொடர்ந்து நாடகம் கேட்டிருக்காங்க"

மோகனுக்கு உற்சாகம் பீறிட்டது. "செஞ்சுரலாம் பிரதர்".

"வாயாலே சொல்லிப் பிரயோ சனம் இல்லை. நம்மகிட்ட ஒன்பது நாடகங்கள்தான் இருக்கு. புதுசா ஒண்ணை சேர்த்துக்கிடணும்".

"சேர்த்துக் கொள்ளலாம்".

"கதையைச் சொல்லட்டா... சின் னதா சுருக்கமா?

"என்னடா விளையாடறியா? மணி என்ன தெரியுமா?"

"நாடகக் காரனுக்கு மணி பார்த்தா சரிப்படுமா?"

"எனக்குத் தூக்கம் வருது. காலை யில பார்த்துக்கலாம்".

"கதை எங்கிட்ட இருக்குது. நீ ரிகர்ஸலுக்கு வரே காலையில பத்து மணிக்கு".

"சரி... வரேன். ஆபீஸுக்கு மட்டம் போடச் சொல்றே... ஹீரோயின் யாரு?"

சற்று நேரம் மௌனமாக இருந்த சுந்தர் குமார் கலகலவென்று நகைக் கிறான். "இப்பப் போட்ட நாடகம், புதுசாப் போடற நாடகம் ரெண் டுக்கும் உன் ஆளுதான் ஹீரோயின்".

"டேய்... என்னடா உளர்றே?" பதறினான் மோகன்.

"நம்ம டிராமா க்ரூப்லே பேசிக் கறதை நான் சொல்றேன்".

"அவளுக்குக் கல்யாணமாகி ஒரு கைக்குழந்தை இருக்கிறதாக் கேள்வி".

"இதெல்லாம் பெரிய விஷயம் இல்லை".

"எனக்குப் பயமா இருக்கு".

"பயப்படாதே... குட்நைட்".

மறுநாள் காலையில் எழுந் திருக்கும் பொழுதே அவனே கேள்வி

யாகவும், அவனே பதிலுமாகவும் இருந்தான். ஒரு பக்கம் சிங்கப்பூர் வந்தனாவுடன் போகும் மகிழ்ச்சி. இன்னொரு பக்கம் அவள் திருமணம் ஆனவள் என்று தூரத்தில் நிறுத்தி வைத்துத் தரும் மரியாதை.

*சீ...* இதெல்லாம் சகஜம். அவளுக்குத் தன் சீக்காளி கணவனைப் பிடிக்கவில்லை. அதனால என்னை லவ் பண்றா. இது என்ன தப்பு? டைவோர்ஸ் எல்லாம் சகஜம். பழைய பத்தாம் பசலியாக இருக்கக்கூடாது. "என்ன வேண்டுமோ எடுத்துக் கொள். விலையைக் கொடுத்து விடு" என்ற பழமொழி தனக்காகத்தான் எழுதப் பட்டிருக்கிறதோ? அந்தச் சீக்காளி கணவனுக்குப் பணத்தை வீசி எறிந்தால் நீட்டிய தாளில் கையெழுத்துப் போட மாட்டானா என்ன!

மனசு உற்சாக வெள்ளத்தில் நீச்சலடிக்க செண்டை வாரித் தெளித்துக் கொள்கிறான்.



# அதற்குப் பிறகு!




அதற்குப் பிறகு!... அதற்குப் பிறகு!...
அதுதான் கணக்கில் உண்மை வரவு!

உணர்ச்சியின் கிளர்ச்சியில் காதல் பிறக்குது
இணைப்பின் மலர்ச்சியில் எல்லாம் மறக்குது
இருமனக் காதல் மணத்தில் முடியுது
திருமண அரங்கிலே வாழ்க்கை தொடங்குது!
அதற்குப் பிறகு!... அதற்குப் பிறகு!...
அதுதான் கணக்கில் உண்மை வரவு!

பயணம் போகிறோம் பலவும் பார்க்கிறோம்
அயர்வை ஒதுக்கி அலைந்து திரிகிறோம்
கால இழப்பு கைப்பொருள் இழப்பு
நாலும் இழந்தும் அதிலொரு களிப்பு!
அதற்குப் பிறகு!... அதற்குப் பிறகு!...
அதுதான் கணக்கில் உண்மை வரவு!



வாழ்க்கைப் பயணம் வகைவகை யானது
சேர்ப்பது பெறுவது செய்வது அழிப்பது
எழுவது உறங்கி விழுவது, ஒருநாள்
எழுவதை மறந்து உறங்கிப் போவது!
அதற்குப் பிறகு!... அதற்குப் பிறகு!...
அதுதான் கணக்கில் உண்மை வரவு!

அவன் நாடக அரங்கத்தில் நுழையும்பொழுது, சுந்தர் குமார், "வா மாப்பிள்ளே... கனஜோரா வரே?" என்று வரவேற்கிறான்.

நாற்காலியில் உட்கார்ந்திருந்த வந்தனா "ஹாய்" என்று கையை அசைக்க இவனும் கையை அசைக்கிறான்.

தன் காதலை இவள் அங்கீகாரம் செய்தாள் போன்ற ஒரு பரவசம். "டேய், மாப்பிள்ளை, டயலாக் என்னனு பார்க்கிறியா?" என்று சுந்தர் குமார், இரவு பூராவும் அவசரமாக எழுதிய டயலாக்கை நீட்டுகிறான்.

"டேய், நான் மாப்பிள்ளையாடா?" என்று இரகசியமாக மோகன் சீறுகிறான்.

"பின்ன இல்லையா? நீ இவளைக் கல்யாணம் செய்துகிட்டா நம்ம ட்ராமாக்கும் நிரந்தரமாக இருக்கும்ங்கற சுயநலம்தான். ரெண்டு நாடகம் போட்டப்புறம் ஹீரோயினைத் தேட வேண்டி இருக்குது" என்றான் சுந்தர் குமார்.

"சரி... சரி.. டயலாக்கைச் சொல்றேன். பார்".

"நான் நாடக சிச்சுவேஷனைச் சொல்றேன். கணவனை விட்டுப் பிரிந்து இன்னொருத்தனோட மனைவி போகப் போகிறாள். அப்ப கணவன் தன் சோகத்தைக் கொட்றான். நீதான் சோகத்தைக் கொட்ற அந்தக் கணவன். எங்கே டயலாக்கைச் சொல்லு பார்க்கலாம்".

"பிச்சு உதறிடறேன்" என்ற மோகன் உரக்கப் பேசுகிறான் - "இங்கே பாரு சுமதி, நீ இன்னொருத்தனை விரும்பறது என்னைப் பொறுத்தவரைக்கும் தவறுதான். உன் அழகுக்கு நான் பொருத்தமில்லாதவன். அடிக்கடி உடம்பு வேற சரியில்லாமப் போயிடறது. ஆனா நீ நம்பிப் போறயே, அந்தப் புதுக் காதலனையும் நீ கொஞ்ச நாள்ல உதற மாட்டேங்கறது என்னம்மா நிச்சயம்? அப்ப அவன் என்னோட நிலையிலேதான் இருப்பான். புரியுதா? இப்ப உனக்கு என்ன வேணும்? விடுதலைதானே! தாராளமாத் தரேன். எங்கே கையெழுத்துப் போடணும்? எத்தனை கையெழுத்துப் போடணும்? சொல்லு போடறேன். ஆனா... நீ கண்ணீர் விடாம வாழணும்ங்கறதுதான் என் ஆசை".

முதல் தடவையாகப் படிக்கிறோம் என்ற உணர்வு இன்றி, வேகமாக கண்ணீர் மல்கி, தழுதழுத்து... முகம் வியர்த்துப் போய்...

"ஃபன்டாஸ்டிக் பிரதர்" என்று சுந்தர் குமார் தாவி வந்து கட்டி அணைத்துக்கொள்கிறான்.

"இந்த நாடகம் என்னையே பாதிச்சுடுச்சு. நான் கொஞ்ச நேரம் வெளியே நாற்காலியிலே உட்கார்ந்துட்டு வரேன்".

வராந்தா நாற்காலியில் அவன் அமர, எடுபிடிப் பையன் காப்பித் தம்ளரை நீட்டுகிறான். காப்பித் தம்ளரை வாங்கியவனின் பார்வை சுவரோரம் போகிறது. மடியில் குழந்தையைப் போட்டுத் தட்டியபடி ஒருவன்... எலும்பை எண்ணுவது போன்ற உடம்பு வாகு.

"அம்மா இப்ப வந்துரும் ராஜா. சமர்த்தா தூங்கு" அவன் குழந்தையைத் தட்டுகிறான்.

தானும் இவனைப் போல் பொறுப்புள்ள அப்பனாக இருக்க வேண்டும். நினைப்பே சிரிப்பாக இருக்கிறது.

"ஏம்ப்பா, குழந்தையோட அம்மா வெளியே போயிருக்காங்களா!" விசாரணையில் இறங்க -

"இல்லீங்க. உள்ளே போயிருக்காங்க. நாடகத்துல ஹீரோயினா நடிக்குதே... அது.."

மனதிற்குள் டமாரம் ஓயாமல் தட்ட... "நீங்க வந்தனாவுக்கு என்ன ஆகணும்?"

"எம் பெஞ்சாதிதாங்க அது. பஞ்சாலையில வேலை பார்த்தோம். பஞ்சு உடம்புக்கு ஆகலே. டி.பி. ன்னு சொன்னாங்க. சாப்பிட்டாகணுமே. கைல உள்ளதெல்லாம் வைத்யச் செலவுக்கே போயிடுச்சு. எம் பேர்ல அதுக்கு உசிருங்க. அதான் நீங்க உட்கார்ந்திட்டு இருங்க. நான் நடிச்சு சம்பாதிக்கிறேன்னு கிளம்பிடுச்சு. இப்ப இவனுக்கு உடம்புக்கு சுகமில்ல. அதுகூட இன்னிக்கு வரமாட்டேன்னு சொல்லிச்சு. அது நடிக்காட்டி சாப்பாட்டுக்கு வழி இல்லையே. நான்தான் புள்ளைய இங்கேயே வச்சுட்டு இருக்கேன். நீ நடிம்மானு சொன்னேன்."

அவன் பேசிக் கொண்டே இருக்கிறான். தான் நடித்த கணவனின் போர்ஷன் நினைவுக்கு வர...

இவனுக்கென்று ஒரு மனம் இருக்கிறது. அதில் தான் புகுவது நியாயமில்லை. தான் பேசிய வசனங்களை இவன் பேசினால்... கடற்கரையில் வந்தனா பேசாத காரணம் புரிகிறது.

நடிப்பில் தன்னைக் கரைத்துக் கொள்ள உள்ளே போகும்பொழுது, அவன் மனசு லேசாகி இருந்தது. இப்பொழுது காற்றில் கரைந்த செண்ட் அவனிடமிருந்து மணக்கவில்லை.

ஃ

# கம்பனின் ஏர் எழுபது

தியாகச்செம்மல் அன்பு வேதாசலம்

இன்றைய சமுதாயத்தின் இணையற்ற கவிஞனாகிய பாரதி தமிழுக்கும், தமிழிசைக்கும் இறவாத இனிய கவிதைகளை ஈந்து உலகப் புகழ் பெற்றுள்ளான். அவனது உணர்ச்சி நிறைந்த செந்தமிழ்க் கவிதைகள் இன்று உலகெங்கும் முழங்குகின்றன.

சென்ற நூற்றாண்டில் பழுதில்லாத தமிழ்த் திறத்தை அடிப்படையாகக் கொண்டு காலத்திற்கும், சமுதாயத்திற்கும் ஏற்றவாறு புத்தம் புதிய உயிர்த் துடிப்புள்ள கவிதைகளை அளித்துள்ளான். அப் பெருங் கவிஞன், "யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல், வள்ளுவன்போல், இளங்கோவைப்போல் பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை உண்மை, வெறும் புகழ்ச்சியில்லை" என கம்பனை வியந்து வியந்து பாராட்டியுள்ளான். அத்துடன் நின்றான் இல்லை, தமிழகத்தின் பெருமையைப் போற்றிப் புகழ்ந்துரைக்க விளைந்த பாரதி கம்பன் பிறந்த தமிழ் நாடு எனக் குதூகலிக்கின்றான்.

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இராம காதை இந்தியத் திருநாடு முழுவதும் பக்தி பூர்வமாகப் பரவி மிளிர்ந்து திகழ்ந்தது என்றாலும், வட மொழியில் வால்மீகி முனிவர் இயற்றிய இராமாயணமும், தமிழில் கம்பன் இயற்றிய இராம காதையும் மிகச் சிறப்புடையன.

சிலப்பதிகாரம், புறநானூறு போன்ற பழம்பெரும் காப்பியங்களிலும் இராமாயணக் காதையின் சிறப்புகள் எடுத்து இயம்பப்படுகின்றன.

ஒரு சிறந்த கவிதையின் சீரிய இலக்கணங்களை, கோதாவரி நதியையும், பம்பை பொய்கையையும் வருணிக்கும்போது கம்பனே சிறப்பாக விளக்கியுள்ளான். நல்ல கவிதை ஆழ்ந்த பொருளையும், இசையையும், இனிமையையும், பெருமித நடையையும், ஆழம், அமைதி, தெளிவு என்பனவற்றையும் தன்னகத்தே கொண்டு மக்கள் மனத்தை வளப்படுத்தி, இலக்கியத்திற்கே ஒரு சிறந்த எடுத்துக் காட்டாகவும் அணியாகவும் விளங்குகிறது. மேற்கண்ட பண்புகள் அனைத்தும் நிறைந்த காப்பியத்தை இயற்றியவர் என்ற காரணத்தால் ஆன்றோர் கம்பனை கவிச் சக்கரவர்த்தி எனப் போற்றிப் புகழ்ந்து மகிழ்ந்தனர்.

அத்தகைய உலகப் பெருங்கவிஞனாகிய கவிச் சக்கரவர்த்தி கம்பன் தொன்மைச் சிறப்பு மிக்க செந்தமிழில் பல நூல்களை இயற்றியுள்ளான். அவற்றுள் மணிமுடியாகத் திகழ்வது மாபெரும் காப்பியமாகிய கம்ப இராமாயணம்.

கம்பன் இயற்றிய கவிதைகள் பல இன்று நமக்குக் கிடைத்திலது. நாம் செய்த தவப் பயனால் சில கவிதை நூல்கள் மட்டும் இன்று கிடைத்துள்ளன. சரசுவதி அந்தாதி, சடகோபர் அந்தாதி, சிலை எழுபது, ஏர் எழுபது, திருக்கை வழக்கம் போன்ற கவிதை நூல்களைப் பெறுகின்ற பேற்றை நாம் பெற்று இருந்தாலும் கம்ப இராமாயணத்தை அறிந்து சுவைக்கும் அளவிற்கு மற்ற நூல்களை அறிந்து சுவைத்து மகிழ்கின்ற பெரும் பேறு கிடைத்திலது.

விலைமதிக்க ஒண்ணா வைர மணிகளிலே ஒரு சிலதான் சிறப்பாக ஒளிரும். அத்தகையச் சிறப்புடைய நூல் கம்பனால் இயற்றப்பட்ட ஏர் எழுபது ஆகும்.

ஏர் எழுபது என்ற நூல் வேளாண்மையையும், வேளாண்குடி மக்களையும் சிறப்பித்து இயற்றப் பட்டதாகும்.

தவத்திற்கும் தவமுடைய சான்றோர்க்கும் உழவர்களை முன் வைத்தார் வள்ளுவப் பேராசான். ஆனால் தேவர்க்கும் பின்னை மூவர்க்கும், முதல்வர்க்கும் முதல்வராய் உழவரை வைத்த பெருமை கவிச் சக்கரவர்த்தி கம்பனையே சாரும்.

"தொழுங்குலத்தில்..." என்று தொடங்கும் பாடலிலும், நூலின் முதற் பாடலாகிய "வேதியர்" எனத் தொடங்கும் பாடலிலும், "தொழுதுண்டு பின் செல்பவர் யார், எவர்?" என்பதைக் கவிஞர் மிகச் சிறப்பாக விளக்கியுள்ளார்.

எருதுகளின் கழுத்தில் கட்டப்படும் கயிறுதான் நிலமகளின் "மங்கல நாண்" என எடுத்து இயம்பும் கருத்தழகும், "கண்ணுதற் கடவுளின் கண்டத்திலுள்ள கறை விண்ணவரை வாழ்வித்தது. எருதின் கழுத்தின் மேல் உள்ள கறையோ மண்ணுலகத்தையும், விண்ணுலகத்தையும் ஒருங்கே காக்கின்றது" என்று கூறும் இலக்கிய இன்பமும் கற்பாருக்குக் களிபெருவகை தருவனவாம்.

சோழ மண்டலத்தின் சிறப்பைக் கூற வந்த கம்பன்,

"ஈழ மண்டலம் முதல்என உலகத்து
என்னும் மண்டலத்து எறிபடை வேந்தர்
தாழும் மண்டலம். செம்பியன் மரபோர்
தாம்எல் லாம்பிறந்து இனிபல் வளத்தின்
வாழும் மண்டலம். கனகமும் மணியும்
வரம்பில் காவிரி குரம்பினில் கொழிக்கும்
சோழ மண்டலம் இதற்கிணை என்னச்
சொல்லும் மண்டலம் சொல்வதற்கு
இலையே!"

எனக் கூறுவான்.

வேளாள் குடிச்சிறப்பைக் கூற வந்த கவிஞன்,

"தொழும் குலத்தில் பிறந்தால் என்?
சுடர்முடிமன் னவர் ஆகி
எழும் குலத்தில் பிறந்தால் என்?
இவர்க்குப் பின் வணிகர் எனும்
செழுங்குலத்தில் பிறந்தால் என்?
சிறப்புடையர் ஆனால் என்?
உழும் குலத்தில் பிறந்தாரோ,
உலகு உய்யப் பிறந்தாரே".

எனப் பகர்வான்.

மேழிச் சிறப்பைக் கூற வந்த கம்பன்,

"வாழிநான் மறையோர்கள்
வளர்க்கின்ற வேள்விகளும்
ஆழியால் உலகளிக்கும்
ஆடல் வேந்தர் பெருந்திருவும்
ஊழியே ரினும் பெயரா
உரையுடைய பெருக்காளர்
மேழியால் விளைவதல்லால்
வேறு ஒன்றால் விளையாவே!"

என இயம்புவான்.

ஏர் நடத்தும் சிறப்பை எடுத்து இயம்புகின்ற கவிஞன்,

"கார்நடக்கும் படிநடக்கும்
காராளர் தம்முடைய
ஏர்நடக்கும் எனில் புகழ்சால்
இயலிசை நா டகம் நடக்கும்
சீர்நடக்கும் திறம்நடக்கும்
திருஅறத்தின் செயல் நடக்கும்
பார் நடக்கும் படை நடக்கும்
பசி நடக்க மாட்டாதே".

எனப் போற்றிப் புகழ்ந்துரைக்கின்றான்.

பயிர் விளைத்தல் பற்றிப் பகர்கின்ற கவிஞன்,

"ஏராலே சேறாக்கி
எருவாலே கருவாக்கி
நீராலே பைங்கூழை
நிலைப்பிப்பார் தமை அன்றிக்
காராலே காவேரி
நதியாலே காசினியில்
ஆராலே பசிதீர்வார்
அகலிடத்தில் பிறந்தோரே?"

என்றுரைப்பான்.

சோறு இடும் சிறப்பைக் கூறவந்த கம்பன்,

"அறம்காணும் புகழ்காணும்
அருமறையின் ஆகமத்தின்
திறம் காணும் செயல் காணும்
திருவளர்க்கும் நதி காணும்
மறம் காணும் கருங்கலியின்
வலிதொலைத்த காராளர்
புறம் காணும் சோறிட்டுப்
புறம் காணப் புகுந்திடினே"

என இயம்புவான்.

வாழ்வின் வளத்திற்கும் - வேள்வி நலத்திற்கும் - உயிர்களின் வலிமைக்கும், எருதுகளின் வலிமையே மூல காரணம்.

ofo





# எட்டாவது பத்தினி

## ஜெயரதன்

அரை மயக்கத்தில் இருந்த நோயாளியைப் பார்த்த டாக்டர் முத்துக்குமரனுக்கே ஆச்சரியம் கலந்த அதிர்ச்சியாக இருந்தது.

"ஏம்மா... இவங்க ஜகதீசனோட அம்மா, அலமேலு மாமிதானே?"

அவரையும் மீறிக்கொண்டு மெலிதான அதிர்ச்சி குரலில் பதிவாயிற்று.

கைத்தாங்கலாய்ப் பிடித்து அழைத்துக் கொண்டு வந்திருந்த பெண், டாக்டரை வியப்புடன் பார்த்தாள்.

"இவங்களை உங்களுக்கு ஏற்கெனவே தெரியுமா, டாக்டர்?"

பதிலுக்குத் தலையசைத்தவர், அருகே ஸ்டூலில் அமர்ந்து கொண்ட அலமேலுவையே கூர்மையாய்ப் பார்த்தார்.

மூச்சுவிடச் சிரமப்படுவதில் இருந்தும், மூச்சுக் காற்றோடு காதில் விழுந்த இழுப்புச் சத்தத்தின் ஆக்ரோஷத்தில் இருந்தும் நெஞ்சில் கபம் பாறையாய் இருகி இருக்கிறது என்று புரிந்தது. கண்கள் செவ்வரி படர்ந்து சுரந்து துவண்டு கிடப்பதில் இருந்தே காய்ச்சல் நூற்றி இரண்டு டிகிரிக்கு மேலாக இருக்க வேண்டும் என்று தெரிந்தது. உட்கார முடியாமல் முதுகை வளைத்துக் கொண்டு அமர்ந்து சிரமம் தாங்காது, 'அம்மா... முருகா...' என்று மெலிதாய் முனகவும் அந்த முனகல் தந்த அதிர்ச்சி தாங்காது, புயல்போல் ஓர் இருமல் ஆட்கொள்ள, குடலே வெளியே வந்துவிடும் போல் இருமிய வேகத்தில் இருந்தும் நெஞ்சிலிருந்து வெளிக்கிளம்பிய இழுப்புச் சத்தத்தில் இருந்தும் குறைந்தது பத்து நாள்களுக்கு முன்னரே நெஞ்சில் கபம் கட்டத் தொடங்கியிருக்க வேண்டும் என்பதும் தெளிவாயிற்று. மிகவும் அலட்சியப் படுத்தியதால், பாறையாய் இறுகிப் போயிருக்கிறது என்பதும் பார்த்த மாத்திரத்திலேயேப் புரிந்தது.

"டாக்டர்... எனக்கு எனக்கு..." என்று தன் உடல்நிலையை விவரிக்க முயன்றவளைக் கைச்சாடையாலேயே அமைதிப் படுத்திவிட்டு, ஸ்டெதாஸ்கோப்பால் பரிசோதிக்கலானார்.

இதயத்துடிப்பைச் சோதித்துவிட்டு, இரத்த அழுத்தத்தைச் சோதிக்கிற போதுதான் கழுத்தில் மஞ்சள் கயிறு இல்லாததைக் கவனித்தார் டாக்டர் முத்துக்குமரன். முகத்தில் ஏதோ குறைகிறதே என்று மனத்தில் தோன்றிய உறுத்தல் விடை பெற்றது.

மூக்குத்தி இல்லாத வெற்று மூக்குகள்.

வைரமூக்குத்தியும், பேசரியும் டாலடிக்கிற முகத்துடன் மென்சிரிப்புத் தவழ அந்த அம்மாள் பேசியதெல்லாம் நினைவுக்கு வந்தன.

"இந்த மாமியோட ஹஸ்பண்ட்... பேர்கூட... ஹாங்... கோபால சுப்பிரமணியம்... இங்கிலீஷ் புரொபஸர்லே?... எப்போ?".

பரிசோதனை செய்து கொண்டே, கூட வந்த பெண்ணை நோக்கிக் கேட்டார் முத்துக்குமரன்.

"இந்த ஆடிக்கு ஏழு மாசம் ஆறது... சதாபிஷேகம் ஆன பத்து நாளுக்குள்ளேயே போயிட்டார்... ராத்திரி நன்னா சாப்பிட்டார். பாகற்காய் பிட்ளைன்னா உசிரு அவருக்கு. அன்னிக்கு ராத்திரி ஆசையாக் கேட்டார். பண்ணிப் போட்டுது... சந்தோஷமாச் சிரிச்சுப் பேசிட்டுப் படுத்துண்டார்... அவ்வளவுதான் காலம்பர மூச்சே இல்லே... எப்பப் போச்சுன்னே தெரியல்லே..."

கண்ணீர் துளிர்த்ததாய்ப் பாவித்துப் புடைவைத் தலைப்பால் கண்களை ஒற்றிக் கொண்டாள் அந்தப் பெண்.

ஏழு மாதத்திற்கு முன் எண்பது வயது தாண்டிய மாமனார் மரணமடைந்தது எப்படி மருமகளுக்குக் கண்ணீரை வரவழைக்கும் துக்கமாயிருக்க முடியும் என்று எண்ணிக் கொண்டே மளமளவென்று பரிசோதனைகளைத் தொடர்ந்தார் முத்துக்குமரன்.

மூச்சுவிடும் சிரமம் தாங்க முடியாமல், ஜுர வேகத்தை ஏற்க உடலில் வலுவில்லாமல் அலமேலு அம்மாள் முனகினாள். கண்களைத் திறந்து பார்க்க முயன்று முடியாமல் மீண்டும் கண்களை மூடிக் கொண்டாள்.

"ப்ளட், யூரின், மோஷன் டெஸ்ட் எல்லாம் பண்ணணும். இவங்க இருக்கிற நெலையிலே... யூ கேனாட் லுக் ஆஃப்டர் ஹர் இன் தி ஹவுஸ்... இங்கேயே அட்மிட் பண்ணிடுங்க. உங்க ஹஸ்பண்ட்கிட்ட சொல்லிடுங்க. எனக்கு ஃபோன் பண்ணச் சொல்லுங்க..."

மளமளவென்று கட்டளைகளைப் பிறப்பித்த முத்துக்குமரன், இன்டர்காமில் கூறவும், தள்ளுவண்டியை எடுத்துக் கொண்டு இரண்டு சீருடை ஊழியர்களும், ஒரு நர்ஸும் விரைந்து வந்தனர். நர்ஸ் கொண்டு வந்த ஊசி மருந்தைப் புஜத்தில் செலுத்திய முத்துக்குமரன், ஸ்ட்ரெச்சரில் அலமேலு அம்மாளை அழைத்துக் கொண்டு போவதையேப் பார்த்துக் கொண்டிருந்தார். தொட்டுத் தூக்கும் போது உடல் சிலிர்ப்பதைக் கவனித்தார். உடல்நிலை மட்டும் சற்றுச் சுமாராயிருந்தால் இப்படிப் பிறர் தொட்டுத் தூக்குவதை அனுமதிப்பாளா இந்த அம்மாள் என்ற எண்ணமும் எழுந்தது. மதிப்பும் மிகுந்தது.

→

"அவர் போனதுமே ஒடைஞ்சு போயிட்டார். இவரோட பலம், தைரியம் எல்லாமே மாமனாரோடயே போயிடுத்தோன்னு எங்களுக்கெல்லாம் தோணும். மாமனார் இருக்கறப்போ எவ்வளவு தைரியமாப் பேசுவார், எவ்வளவு காரியம் செய்வார் தெரியுமோ? அடேயப்பா! எழுபத்தாறு வயசுக்கு இத்தனை தெம்பானு நானே நெனைச்சப்பேன்... என் கண்ணே பட்டுடுத்துப் போலிருக்கு..."

அந்தப் பெண், அலமேலு மாமியின் மருமகள் – மீண்டும் குரல் நெகிழ, புடைவைத் தலைப்பால் கண்ணீரை ஒற்றிக் கொள்ளும் பாவனையில் ஈடுபட்ட நயத்தை ரசிக்க முடியவில்லை முத்துக்குமரனால்...

வாஸ்தவம். என்ன தைரியம்! என்ன திடம்! எப்படி இருந்த அந்த அம்மாள் எப்படிப் போய்விட்டாள்!

டாக்டர் முத்துக்குமரன் சிந்தனையில் ஆழ்ந்தார்.

ஒன்பது வருஷங்களுக்கு முன்னால் மதுரையில் 'ப்ராக்டீஸ்' தொடங்கிய பொழுது. வடக்காவணி மூல வீதியில் ஒரு சிறு அறையில், காற்றே வராத அறையில் – மின்விசிறி என்னவோ அசுரவேகத்தில் சுற்றிக் கொண்டிருக்கும் – தொழில் ஆரம்பித்த புதிது. யாராவது நோயாளிகள் வரமாட்டார்களா, நாம் படித்த வைத்தியம் மறந்து போகும் முன் ஒரு நோயாளியையாவது பார்த்துவிட மாட்டோமா என்று ஏக்கம் செல்லரிக்கும் நேரம் அது.

இந்த அம்மாள் - அலமேலு அம்மாள் - இவரைப் பார்க்க வந்தாள்.

பளீரென்ற முகத்தில் செக்கச் செவேலென்று குங்குமம் மின்ன, மூக்கில் வைர மூக்குத்தி ஜொலிக்க, உள்ளே நுழைந்த அந்த அம்மாளைப் பார்க்கவே பிரமிப்பாய் இருந்தது. முதுமைக்கும் இவ்வளவு காம்பீர்ய அழகு இருக்க முடியுமா என்று வியந்து போனார் முத்துக்குமரன்.

முதல் நோயாளியே மங்களகரமாய் அமைந்துவிட்டதில் மகிழ்ச்சி அவருக்கு.

"வாங்க... உக்காருங்க அம்மா..." என்று உபசரித்தார்.

'நீதான் டாக்டரா?' என்கிற தோரணையில் அவரை ஏற இறங்கப் பார்த்த அந்த அம்மாள், "மீனாக்ஷியை தரிசனம் பண்ணிட்டு வரேன். இந்தாங்கோ பிரசாதம்" என்று தனது வலது கையை நீட்டினாள்.

பயபக்தியுடன் குங்குமத்தை எடுத்து நெற்றியிலிட்டுக் கொண்டார்..

"கோவில்லேர்ந்து திரும்பி வரபோது, கல்லு கால்லே இடிச்சு, சிராச்சிடுத்து... அதான் உங்ககிட்டக் காமிக்கலாம்னு வந்தேன்..."

வலதுகால் நடுவிரலில் – மெட்டியணிந்த அந்த நீண்ட விரலின் நுனியில் – கண்ணுக்கே தெரியாமல் ஒரு சிராய்ப்புத் தெரிந்தது.

'சை' என்று போயிற்று முத்துக்குமரனுக்கு. அதுவாகவே சரியாய்ப் போய்விடுகிற இதற்குப் போய்த் தன்னைப் பார்க்க வந்த அந்த அம்மாளின் மீது மெலிதாய்க் கோபம்கூட வந்தது.

'இதெல்லாம் ஒண்ணுமில்லே... அதுவாச் சரியாயிடும்' என்று அவர் கூறத் தொடங்கும்முன் அந்த அம்மாளே பேசினாள்.

"காயம் பெரிசில்லே... இருந்தாலும் சமையக்கட்டுலே எப்பவும் ஜலத்திலேயும், ஈரத்துலேயும் நின்னுண்டு காரியம் செய்யறபோது, ஏதாவது சீழ் கோத்துண்டு பெரிசாப் போய் ரெண்டு நாள் நடக்க முடியாமப் போயிடுத்துன்னா என்ன பண்றது...? அதான் மொதல்லேயே பார்த்துடலாம்னு வந்தேன்..."

அந்த அம்மாளின் ஜாக்கிரதை உணர்ச்சியும் உடலைப் பராமரிக்க வேண்டும் என்ற எண்ணமும் அவரைக் கவர்ந்தன. மருந்தை எழுதிக் கொடுத்ததும் அதற்காக அந்த அம்மாள் ஐந்து ரூபாய் கொடுத்தது அவருக்கு ஆச்சரியமாய் இருந்தது.

"...இதுக்கெல்லாம் பணம் வேண்டாம்மா..." என்று மறுத்தார்.

"ஊஹூம்... அதெல்லாம் தப்பு. நீங்க பணத்தைச் செலவழிச்சுப் படிச்சுட்டு வந்திருக்கேள். சும்மா வைத்தியம் பண்ணிண்டா எப்பிடி? அதெல்லாம் அவருக்குப் பிடிக்காது... இதிலெல்லாம் ரொம்பக் கரெக்டா இருக்கணும்பார் அவர்..."

"சார் என்ன பண்றாரு?"

"அவர் பெரிய புரொபசர், இங்கிலீஷ்லே. லெக்சர் பண்ணினார்னா இன்னிக்குப் பூரா கேட்டுண்டே இருக்கலாம். பைப்பைத் தெறந்தா தண்ணி கொட்டுமே அதுமாதிரி இங்கிலீஷ் பேசுவார்... அவர் பேசறதைக் கேக்கறதுக்குன்னே மத்த வாத்தியார்களெல்லாம் அவர் கிளாஸுக்கு வருவான்னா பாத்துக்கோங்களேன்... டே அப்பா! இங்கிலீஷ்னா இங்கிலீஷ்... அப்பிடிப் பேசுவார்..."

ஏற்கனவே அழகிய முகத்திற்குப் பெருமிதம் மேலும் அழகு சேர்த்தது.

"இப்ப என்ன பண்றார்? வயசாயிருக்குமே... ரிடையராயிருப்பாரே...?" என்றார் முத்துக்குமரன் அந்த அம்மாளின் வயதைக் கணித்துக் கொண்டே.

"ரிடையர் ஆறதுக்கு முன்னாடியே அவருக்கு ஒடம்புக்கு வந்துடுத்து... ஒருநா கிளாஸ்லே பேசிண்டிருக்கறபோதே மயங்கி விழுந்துட்டார்... பெஷர் ஜாஸ்தியாகி, ஒரு பக்கமா இழுத்துடுத்து... கண்ணும் சரியாத் தெரியல்லே... படுக்கேலதான் இருக்கார். கையைப் புடிச்சு பாத்ரூம் கூட்டிண்டு போகணும்... சாதத்தைப் பெசஞ்சு அவர் முன்னாலே வைக்கணும். அப்பத்தான் சாப்பிட முடியும் அவராலே...'

"ஓ...! ரொம்ப சிரமம்...பத்துப் பதினைஞ்சு வருஷமாவா அப்படியிருக்கார்? வைத்தியம் பாத்தீங்களா?"

"பாக்காமெயா? ஊரிலே ஒரு டாக்டர் பாக்கிக் கிடையாது. முழுசாக் குணமாகாதுன்னுட்டா... ஐம்பத்து நாலு வயசிலே படுத்துண்டார். இப்ப எழுத்தொரு வயசாறது. எப்படிப் பேசிண்டிருந்தவர், பேசமுடியாமெ அவஸ்தைப் படறதைப் பாக்க மனசாகலே. மீனாக்ஷியை தினம் பாத்து ஒரு குரல் அழுதுட்டு வருவேன். சரி நாழியாயிடுத்து. அவருக்குச் சந்தி பண்ணப் பஞ்சாத்திரம் உத்தரணி எடுத்து வைக்கணும்... வரேன் டாக்டர்..."

அந்த அம்மாள் சென்றதும், அறையிலிருந்து வெளிச்சம் ஒன்று வெளியே போனதுபோல் இருந்தது, முத்துக்குமரனுக்கு. உடம்புக்கு இயலாத கணவன்மீது வைத்திருந்த பெருமிதமான பக்தியும் பரிவும் அவர் இழந்துவிட்ட திறமையின்மீது கொண்டிருந்த மதிப்பும் அந்த அம்மாளை அவர் கணிப்பில் மேலே மேலே உயர்த்தின.

அதற்குப் பிறகு அந்த அம்மாள் அடிக்கடி வரத் தொடங்கினாள். "டாக்டர் சார்... இருமல் வரும் போல இருக்கு... ஏதாவது மருந்து குடுங்களேன்" என்பாள் ஒருநாள்.

"வரும்போல இருக்கிறதுக்கெல்லாம் மருந்து குடுக்கறதில்லை... வரட்டும் பாப்பம்..."

"இருமல் வந்து நான் படுத்துக்கணுமா? மருந்து உண்டா, இல்லையா?"

சிரித்துக் கொண்டே ஒரு பாட்டில் இருமல் மருந்து கொடுப்பார்.

இப்படிப் பலமுறை. தொடர்ந்து இரண்டு நாள்கள் தலைக்குத் தண்ணீர் விட்டு ஸ்நானம் செய்துவிட்டாளாம். தலையில் நீர் கோத்துக் கொண்டு ஜுரம் வந்துவிட்டால் என்ன செய்வது என்று கவலையுடன் வருவாள் ஒருமுறை. தலையைச் சுற்றுகிற மாதிரி இருக்கிறது. ரத்த அழுத்தத்தைச் சோதிக்கச் சொல்லி ஒருமுறை. அடிக்கடி ஒய்ச்சலாய் இருக்கிறது, டயபடீஸ் இருக்கிறதா என்று சோதிக்கச் சொல்லி இன்னொரு முறை. நடக்கிறபோது படபட வென்று வருகிற மாதிரி இருக்கிறது என்றும், இதயத்தில் கோளாறு

இருக்கிறதா என்றும் பார்க்கச் சொல்லி வேறொரு முறை. பசிக்கச் சற்றுத் தாமதமாகிறது என்றும், வயிற்றில் கோளாறு இருக்குமோ என்றும் சந்தேகப்பட்டு மறுமுறை. இதுபோல் சிறு சந்தேகம் ஏற்பட்டாலும் உடலைப் பேணி, ஆரோக்கியத்தைக் காப்பாற்றுகிற முன் ஜாக்கிரதையை எண்ணி வியந்து போவார் முத்துக்குமரன்.

"அம்மா... உங்களை மாதிரி ஹெல்த் கான்ஷியஸா எல்லாரும் இருக்க ஆரம்பிச்சுட்டாங்கன்னா, டாக்டர்கள் எல்லாரும், கவர்மென்ட் டிரஷரிலே குமாஸ்தா வேலைக்குப் போக வேண்டியதுதான்...." என்று ஒருமுறை வேடிக்கையாகக் கூறினார் முத்துக்குமரன்.

ஓரிரு ஆண்டுகள் கழித்துச் சென்னையில் ஒரு பிரபல டாக்டர் - பெரிய தனியார் மருத்துவமனையின் சொந்தக்காரர் - தனது ஒரே டாக்டர் மகளை முத்துக்குமரனுக்கு மணம் முடித்துச் சென்னைக்கு அழைத்துப் போனார். அதன் பிறகு முத்துக்குமரனைப் பார்க்க முன்னாலேயே பதிவு செய்து கொள்ள வேண்டிய அளவுக்கு அவரது அந்தஸ்து உயர்ந்து போயிற்று.

மதுரையிலிருந்து சென்னை புறப்படுவதற்கு முன் தினம்கூட அந்த அம்மாள் முத்துக்குமரனிடம், "டாக்டர்... கையிலே லேசா அரிக்கற மாதிரி இருக்கு... ஏதாவது தோல் வியாதி வந்துடப் போறது... மருந்து கொடுங்களேன்..." என்று கூறிக் கொண்டே வந்ததும், "அடேயப்பா! உங்களை மாதிரி சென்ஸிடிவ் பேஷண்டை, கேர்ஃபுல் பேஷண்டை நான் பாத்ததே இல்லேம்மா" என்று சிரித்துக் கொண்டே கூறி, மருந்து எழுதிக் கொடுத்ததும் நினைவுக்கு வந்தது...



முன் ஜாக்கிரதைக்கு ஓர் உதாரணமாய், தேக ஆரோக்கியத்தைப் பேணுவதில் இணையில்லாத எச்சரிக்கை உணர்வு கொண்டவளாய் இருந்த அந்த அலமேலு அம்மாளா இப்படிக் கடுமையான நிமோனியாவை வரவழைத்துக் கொண்டிருக்கிறாள் என்று நினைக்க ஆச்சரியமாய் இருந்தது முத்துக்குமரனுக்கு. 'இருமல் வந்துடும் போலேருக்கு' என்று மருந்து சாப்பிட்ட அந்த அம்மாளுக்கா நெஞ்சில் கபம் பனிப்பாறை அடுக்குகளாய் இறுகிக் கிடக்கிறது? பதினைந்து இருபது நாள்களாகவா அலட்சியப் படுத்தியிருக்கிறாள்?

முத்துக்குமரனுக்கே நம்ப முடியவில்லை.

தேக ஆரோக்கியத்தைப் பேணுவதில் அதீத கவனம் செலுத்திய ஒரு பெண்மணியால் எப்படி இவ்வளவு அலட்சியப்படுத்த முடிந்தது? இது எப்படிச் சாத்தியம்?

மறுநாளே டில்லிக்கு ஒரு மாநாட்டிற்குச் செல்ல வேண்டியிருந்ததால், தனது உதவியாளர்களிடம் அலமேலு அம்மாளைக் கவனமாய்ப் பார்த்துக் கொள்ளச் சொல்லிவிட்டுச் சென்றார் டாக்டர் முத்துக்குமரன்.

ஒருவாரம் கழித்துத் திரும்பியதும் ஒவ்வொரு நோயாளியாய்ப் பார்த்துக் கொண்டே வந்தவர், அலமேலு அம்மாளிடம் வந்ததும், கட்டிலில் சாய்ந்து படுத்துக் கொண்டு ஏதோ புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்ததைப் பார்த்ததும் அவர் முகத்தில் நிறைவு தெரிந்தது. உடல்நிலை விளக்க அறிக்கையைப் பார்த்ததும் மேலும் திருப்தி அடைந்தார். நல்ல அபிவிருத்தி பதிவாகியிருந்தது.

"ஒடம்பு தேவலைன்னாலும் இப்படியெல்லாம் புத்தகம் படிச்சு ஸ்ட்ரெய்ன் பண்ணிக்கக்கூடாது..."

புத்தகத்தை விலக்கியவள் டாக்டர் முத்துக்குமரனைப் பார்த்ததும் எழுந்து உட்கார முயன்றாள்.

பின்னலூர் மு. விவேகானந்தன்

## துள்ளி வா! அள்ளி வா!

கங்குலினைப் பகலாக்கி
கடும் உழைப்பால் வளமாக்கி
எங்குமினை எமக்கில்லை
என்று வா! - நாங்கள்
சிங்கமென சிலிர்த்தெழுந்து
வென்று வா!

பயனுள்ள பாட்டாலே
பாமரனும் பாராட்டும்
செயலோடு சொல்லதனைச்
சேர்க்கவா! - புயலுக்கு
முந்திய வான்முகில் நாமென்று
ஆர்க்க வா!

கயமைகளைக் கண்டிங்கு
கண்மூடிப் போகாமல்
பயமறியாக் கன்றினைப் போல்
துள்ளி வா! - தமிழ்
மொழிபேணி பெரும் புகழை
அள்ளி வா!

"வேணாம்... வேணாம்... எழுந்திருக்காதீங்க... இப்போ எப்படியிருக்கு?"

"தேவலை டாக்டர்... திரும்பவும் உங்களைப் பாப்பேன்னே நெனைக்கல்லே.... என் புள்ளை ஜகதீசனுக்கு மெட்ராஸுக்கு டிரான்ஃபர் ஆச்சு... நாங்களும் மெட்ராஸுக்கு வந்துட்டோம்... நீங்க எப்படி இருக்கேள் டாக்டர்? எத்தனை கொழந்தைகள்?"

குரலில் தட்டிய பிசிறு. இன்னமும் தொண்டையில் கபன் இருப்பதை உணர்த்திற்று.

"சார் காலமாயிட்டாராமே? உங்க மருமகள் சொன்னாங்க. சாரி... வெரி சாரி..."

பளிச்சென்ற அந்த அம்மாளின் முகம் வாடிப் போயிற்று.

"ஆமா... போயிட்டார் பூ உதிர்ராப்பலே... பகல்லே போயிருக்க விட்டிருக்க மாட்டேன். சாவித்திரியாட்டமா எமனோட சண்டை போட்டாவது மீட்டிருப்பேன். பாவி ராத்திரிலே நன்னா அசந்து தூங்கி தொலைச்சிருக்கேன். பிராணன் போயிடுத்து. மூச்சுப் போறதுக்கு முன்னாடி என்ன நெனைச்சிண்டாரோ, என்ன சொல்ல ஆசைப்பட்டாரோ! பாவி நன்னாத் தூங்கியிருக்கேன்... அப்படித் தூங்கலாமா, ஒரு பொம்மனாட்டி! தூங்கியிருக்கேனே..."

குரல் உடைந்து கண்கள் கலங்கின.

"ஓ!... சாரி... அழப்படாது. இவ்வளவு உணர்ச்சிவசப்படுவீங்கன்னு தெரிஞ்சா நான் கேட்டிருக்கவே மாட்டேன்.... உங்க உடம்புக்கு ஆகாது... யூ ஆர் வெரி வீக்..."

"இந்த உடம்புக்கு இனிமே என்ன ஆனா என்ன? என்ன வேணும்னாலும் ஆகட்டும்..."

முகத்தில் அலுப்பும் அலட்சியமும் தென்பட்டன.

"நான் உங்களை அரை மயக்கத்திலே நெஞ்சு நெறையக் கபத்தோட பாத்தபோது ஆச்சரியப்பட்டுப் போனேன். உங்களுக்கு எப்படி இவ்வளவு மோசமா உடம்புக்கு வந்ததுன்னு... 'தலைவலி வந்துடும் போலிருக்குன்னு மருந்து கேப்பீங்க. கால்லே லேசா சிராய்ப்பு இருந்தா, சீழ் கோத்துடுமோன்னு பயந்து எச்சரிக்கையா மருந்து போட்டுக்குவீங்க... அப்படி ஜாக்கிரதையா இருந்த நீங்களா நெஞ்சு நெறையக் கபத்தை' வரவழைச்சுக்கிட்டீங்க... நம்பவே முடியலியேம்மா? எப்படி இவ்வளவு அஜாக்கிரதையா இருக்க உங்களாலே முடிஞ்சது?

முத்துக்குமரன் கேட்கவும் பதில் சொல்லாமல் தலை குனிந்து கொண்டாள் அலமேலு அம்மாள்.

"சொல்லுங்கம்மா... என்னாலே நம்பவே முடியல்லே..."

விடாமல் கேட்டார் முத்துக்குமரன்.

பதில் சொல்லாமல் சுற்றி நின்று கொண்டிருந்த உதவி மருத்துவர்கள் நர்ஸுகள் ஆகியோரைப் பார்த்து முகத்தை மீண்டும் தாழ்த்திக் கொண்டாள்.

அவளது உள் மனத்தினைப் புரிந்து கொண்ட டாக்டர் சுற்றியிருந்தவர்களைப் போகச் சொன்னதும் அனைவரும் அகன்றனர்.

"எல்லாரும் போயிட்டாங்கம்மா... இப்பச் சொல்லுங்க என்ன ஆச்சு?"

சிறிது நேரம் மௌனத்துடன் தலை குனிந்து அமர்ந்திருந்தவள், தொண்டையைச் செறுமிக் கொண்டு பேசலானாள்.

"என் தேக ஆரோக்கியத்தைப் பாத்துண்டு என்ன ஆகணும் டாக்டர்? அவர் இருக்கற வரைக்கும் நான் உடம்பு நன்னா இருந்தாக வேண்டியிருந்தது. தலையைக் காலை வலிச்சு நான் படுத்துண்டா, அவரை யார் கவனிச்சுப்பா? அவருக்குத் தேவையானதைப் பாத்துப் பாத்து யார் குடுப்பா? அவர் கஷ்டப்படுவாரே! அதுனாலேதான் எனக்கு உடம்புக்கு வராமெ ஜாக்கிரதையாப் பாத்துண்டேன்... அதோட, எனக்கு ஹார்ட் அட்டாக், பிரஷர் அப்பிடி இப்பிமன்னு ஏதாவது வந்து நான் போயிடக்கூடாதுன்னுதான் என் உடம்பை ஜாக்ரதையாப் பாத்துண்டேன்... நித்யம் மீனாக்ஷி கோயிலுக்குப் போனேன். என்ன வேண்டிண்டேன்னு நெனைக்கறேள்? 'அம்பிகே, பரதேவதே, அவருக்கு முன்னாலே என்னை இழுத்துண்டுடாதே அம்மா! நான் இல்லாமெ அவர் கஷ்டப்படப்படாதுடி... அவர் இல்லாமெ நான் கஷ்டப்பட்டாப் பரவா இல்லே. நான் இல்லாமெ அவர் கஷ்டப்படப்படாதுடி... எனக்குப் பூவும் பொட்டும் வேண்டாம். அவருக்கு அப்பறம்தான் - போகணும்டி'ன்னுதான் வேண்டிண்டேன். அவ என் பிரார்த்தனைக்குச் செவி சாச்சாள்! புஷ்பமாட்டமா அவர் போயிட்டார்...

"அவர் போனப்பறம் என் உடம்பு எப்பிடிப் போனா என்ன? அதனாலேதான் நான் மருந்து சாப்பிடவே இல்லே... காச்சல் ஜாஸ்தியானதும் என் மாட்டுப் பொண்ணே உங்ககிட்டக் கூட்டிண்டு வந்துட்டா...

"இனிமே இந்த உடம்பு எப்படிப் போனா என்ன டாக்டர்..."

அவ்வளவு நேரம் பேசிய சிரமம் தாங்காமல் கண்களை மூடிக் கொண்டாள் அலமேலு அம்மாள்.

பிரமித்துப் போய் உட்கார்ந்திருந்தார் முத்துக்குமரன்.

தன் கணவனைக் கூடையில் அள்ளிப் போட்டுக் கொண்டு ஒரு பத்தினிப் பெண், போகக்கூடாத இடத்திற்குப் போனாள் என்று புராணத்தில் படித்ததெல்லாம் பொய்யில்லை. இன்றும் அப்படிப்பட்ட பத்தினிகள் இருக்கிறார்கள் என்று நினைத்துக் கொண்டதும் குபீரென்று மேனி சிலிர்த்துப் போயிற்று.

# உருகும் பனிப் பாறைகள்

**திவ்யா-பிரசாந்த்**

"திவ்யாக்கா... இவுங்க நம்மை வெளியே கூட்டிக்குனு போக மாட்டாங்களா... வீட்டிலே ரொம்ப போரடிக்கிது. எதிர்வீட்டு சுஜாதாவை அவுங்க பாட்டி லீவிலே ஜாலியா பெங்களூருக்குக் கூட்டிட்டுப் போயிடுறாங்க. ஸ்கூல் லீவு முடியற வரை ஊரைச் சுத்திட்டு போட்டோ எல்லாம் எடுத்துக்கினு வந்து பெருமையா காட்டுறா... நமக்குப் பாட்டி, தாத்தா கிடையாதா?".

"நமக்கும் அப்பா பாட்டி, தாத்தா, அம்மா பாட்டி, தாத்தா எல்லாரும் இருக்காங்க. நம்ப அம்மாவும் அப்பாவும் அவுங்களைக் கேட்காம கல்யாணம் பண்ணிக்கிட்டாங்களாம். அதுதான் அவுங்க நம்ப வீட்டுக்கு வர்றது கிடையாது".

"இவுங்க ஏன் அவுங்க கையிலே சொல்லலே. மெட்ராஸிலே எல்லார் கையிலேயும் சொல்லியிருப்பாங்க இல்லையா. பாவம் அவுங்க கையிலேயும் சொன்னா என்ன?".

"போடா முட்டாள். அம்மாவும் அப்பாவும் ஒருத்தரையொருத்தர் விரும்பிக் கல்யாணம் பண்ணியிருக்காங்க. சினிமாவிலேகூட வருவாங்களே அந்த மாதிரி. நம்ம அம்மாவைக்கூட சினிமாவிலே ரஜினி அங்கிள், கமல் அங்கிள், பிரபு அங்கிள் எல்லாரும் பாட்டுப் பாடிட்டு வீட்டிலே சண்டை போட்டுட்டுக் கல்யாணம் பண்ணிக்குவாங்களே.. அந்த மாதிரி".

"அப்ப நாம எங்கே இருந்தோம்? நீ குட்டிப் பொண்ணா... நான் குட்டிப் பையனா இருந்தோமா?

"இல்லவே இல்லே. நாம கல்யாணத்துக்குப் பிறகுதான் வந்தோமாம்".

நீண்ட நேரமாய் குழந்தைகள் பேசிக் கொண்டிருந்தன. இவையெல்லாம் காதில் விழுந்தனவே தவிர கதிரேசனுக்கோ சுமதிக்கோ எதுவும் உணர்வில் உறைக்கவில்லை. உணர்ச்சியில்லாமல் கோவளம் ஃபிஷர் மேன் கோவின் புல் வெளியில் இருள் கவிந்ததே தெரியாமல் அமைதியாக அமர்ந்திருந்த அவர்களின் மயான மௌனத்தைப் பிள்ளைகளே கலைத்து அழைத்துச் சென்றன. வீடு திரும்பிக் கொண்டிருந்தார்கள். நாளையோடு இந்த பந்தமும் அறுந்து விடும். இணைவதற்காக எத்தனையோ ஆண்டுகள் காத்திருந்த அவர்களுக்குப் பிரிவதற்காகக் காத்திருந்த இந்த ஓராண்டு நீண்டு வளர்ந்து இன்றோடு முடிகிறது.

**சுமதி**

நாளை இவர் விவாகரத்துத் தீர்ப்புக்குப் பிறகு எங்கே போகப் போகிறார்?

கல்லூரிப் பேராசிரியர். தமிழ் சொல்லிக் கொடுக்கிறார். இலக்கியத்தில் காதல், இணைபிரியாத உறவு, பிறவிகள் தோறும் தொடர்கிற பந்தம் இவற்றைப் பற்றியெல்லாம் எத்தனை மேற்கோள்களுடன் வகுப்பிலும், பட்டி மன்றத்திலும், கவியரங்கத்திலும் பேசிக் கொண்டிருக்கிறவர் – நாளைமுதல் தனிப்பறவையாய்த் தவிப்பாரா..? இல்லை விடுதலை என்று நிம்மதிப் பெருமூச்செறிவாரா. சில நாள்களில் என்னைப் பற்றிய நினைவுகளைக் கரைத்துவிட்டு வேறு ஒருத்தியுடன் வாழ்க்கையைப் புதுப்பித்துக் கொள்வாரா..! என்ன செய்யப் போகிறார்?

நானும்தான் என்ன செய்யப் போகிறேன்? யார் எனக்கு ஆதரவாக இருக்கப்போகிறார்கள்! யார் என்மீது அன்பு செலுத்தப் போகிறார்கள்? இதற்காகவா காதலித்தோம்; இதற்காகவா காத்திருந்தோம்? இதற்காகவா கனவுகள் வளர்த்தோம்? இன்றென்ன இரவு இப்படி நீண்டு விட்டது. இமைகள் இறுகத் தவிக்கிறதே... இதயம் கனக்கிறதே. இவரை நான் சந்தித்திருக்கவே கூடாது, 'உறவுகள்' திரைப்படத்தின் நூறாவது நாள் விழாவுக்கு வந்திருந்தார். பிரபலமான கல்லூரிப் பேராசிரியர் பட்டிமன்றங்களிலெல்லாம் பிரமாதமாகப் பேசுகிறவரல்லவா. என்னை மிகவும் வர்ணித்துப் பேசினார். என் கண்களை இன்றைக்கெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கலாமாம். மிகவும் அளந்தார். சராசரி ரசிகனின் பார்வைக்கும் சற்று அப்பால் என்னில் அவர் ஏதோ ரசித்திருக்க வேண்டும். ஒரு நாள் தொலைபேசியில் அழைத்தேன், வந்தார். நான்-வெஜிடேரியன் போலிருக்கிறது. புலால் வகைகளை வரவழைத்துச் சூடு பண்ணி ஒரு சுவையான விருந்தால் அவரைத் திக்குமுக்காட வைத்தேன். எனக்கும் இலக்கியத்தில் ஆர்வமிருந்தது. கேட்டதற்கெல்லாம் விடையும் கிடைத்தது. விளக்கமும் கிடைத்தது. இலக்கிய நாயகிகளாய் என்னைக் கருதியும் நாயகர்களாய் அவரைக் கருதியும் கனவுகளில் மிதப்பேன். பேராசிரியர் கதிரேசனின் அறிமுகம் நட்பாய் நகர்ந்து, காதலாய் நிமிர்ந்தது வரை நான் இந்த பூமியில் கால் பாவவில்லை.

திருமணமான பிறகு இந்தச் சுவை, இந்த இன்பம் மெல்ல மெல்ல விலகுவது போல் எனக்கும் அதிக வேலை. அவருக்கும் வெளியூர் நிகழ்ச்சிகள். ஓஹோவென்று வளர்ந்திருந்ததில் ஓய்வில்லாமல் தவித்தேன். திவ்யாவை உண்டானேன். வயிற்றில் அவள் இருக்கிற போதே ஒரு தயாரிப்பாளர் என்னைப் பிள்ளைத் தாச்சியாய் நடிக்க வைத்துப் பணம் பண்ணிக் கொண்டார். நல்லவேளை பிரசவ வார்டுக்கு காமிராவையும் லைட்டுகளையும் எடுத்து வரவில்லை.

"உனக்குப் புகழ் மயக்கம். ஏதோ சின்ன வயசிலே சினிமாவிலே உடம்பைக் காட்டினே. சரி. இனிமே எதுக்கு இந்தத் தொழில்? ரெண்டு குழந்தைகள் ஆய்ட்டாங்க. கைநிறையக் காசு இருக்கு. சொத்து சுகத்துக்குக் குறைவில்லே. பேசாம நடிப்புக்கு ஒரு முழுக்குப் போட்

## ஏர்வாடி எஸ். இராதாகிருஷ்ணன்

டுட்டுக் குடும்பமும் குடித்தனமுமா இருக்கக் கூடாதா...?"

"குடும்பம் நடத்தாம நானென்ன கூத்தியாத்தனமா பண்ணிட்டிருக்கேன்?"

"யாருக்குத் தெரியும். எந்த நேரமும் என்னோடவா இருக்கே. அந்நிய ஆண்களோடதானே அதிக நேரம் இருக்கே. இதிலே அடிக்கடி வெளியூர் சூட்டிங் வேறு. எல்லாத்துக்குமா நான் கூட வர்றேன்?"

இதைவிட அவர் கொள்ளிக் கட்டையால் என் இதயத்தைச் சுட்டிருந்தால் கூடத் துடித்திருக்க மாட்டேன். இத்தனை விகாரங்களை மனதில் வைத்துக் கொண்டா அன்பாய் இருப்பது போல் நடித்துக் கொண்டிருந்தார். திரையில் மட்டுமே நடிக்கிற எனக்கு வெளியில் நடிக்கிற இந்த வித்தியாசமான மனிதர்கள் இதுவரை தெரியாதிருந்திருக்கிறார்களே.. இத்தனை கேவலமான மதிப்பீடுகளோடு என்னை அணைக்கும் போதெல்லாம் மனைவியாகவா மதித்திருப்பார். விலைக்கு வந்தவளைப் போலல்லவா கருதியிருப்பார். இந்தப் பிள்ளைகளைக்கூட, தனதாய் நினைத்திருக்கிறாரோ இல்லையோ... நானும் புழுவாய் நெளிந்து தவித்தேன். இந்தத் தவிப்புக்கு இன்று தான் கடைசி நாள். நாளை இந்த நரகத்திலிருந்து எனக்கு விடுதலை.

**கதிரேசன்**

நாளை சட்டப்படி பிரிந்து விடுகிறோம். சேர்ந்திருந்து தனித் தனியாய் வாழ்ந்த நினைவுகள். நாளை அதுவுமில்லாமல் கலைந்து கனவாய்ப் போகப் போகிறது. சுமதிக்கு இதில் அத்தனை பாதிப்பில்லை. ஏழெட்டு ஆண்டுகளாய் நடந்து முடிந்த ஒரு திரைப்படப் பிடிப்பின் கடைசி நாளாகத்தான் அவளுக்கு இது இருக்கும். மிகவும் தாமதமாய் வளரும் ஒரு படத்தில் குறிப்பிட்ட அந்தக் கதாநாயகனோடு நடித்து முடிக்கக் கொடுத்த கால்ஷீட் போல என்னோடு ஒரு தாம்பத்தியம், நன்றாக நடித்து முடித்திருக்கிறாள். தன்னோடு நடித்த எத்தனை நடிகர்களை இவள் நினைவில் வைத்திருப்பாள். அப்படித்தான் நானும் இவள் வாழ்வில் வந்து போகிறேனோ என்னவோ! இவளோடு என்ன வாழ்ந்து கிழித்தேன்? நேரில் முகத்துக்கெதிரே இல்லையென்றாலும் பின்னால் என்னவெல்லாமோ பேசுகிறார்கள். நான் முன்பே இதை யோசித்திருக்க வேண்டும். ஒரு நடிகையைத் திருமணம் செய்து கொள்கிறவனுக்கு வாழ்க்கை வசதிகள் கிடைக்கக் கூடும். இன்னார் தான் கணவன் என்று கூடத் தெரியாமல் அடைபட்ட பெருச்சாளிபோல் நெற்பானைக்குள் உண்டு கொழுக்கிற வாழ்க்கை அது. அவளுக்கு மட்டுமே உரிய புகழிலும் பெயரிலும் பிரபலத்திலும் எங்கோ அமுந்தி மனம் புழுங்கிக்கிடக்கிற வாழ்க்கையை நான் உணராதிருந்திருக்கிறேன். அன்று அவளுடைய அழகு, கவர்ச்சி இவற்றில் மயங்கிக் கிடந்த ஆடவர் ஜனத்திரளில் நான் மட்டுமே அவள் நெஞ்சத்தில் இடம்பிடித்த மமதையிலும் எத்தனையோ இளைய கனவுகளின் நாயகி எனக்கு மட்டுமே உரிமையாகிய பெருமையிலும் இந்த மனப் போராட்டத்தை நான் எதிர் பார்த்திருக்கக் கூட மாட்டேன். ஆனால் இன்று கதை வேறு. நான் தவறாகக் கூட இருக்கலாம். எல்லோரையும் ஒரே கல்லில் உரைத்துப் பார்க்க முடியாது. இருந்தாலும் எனக்கிந்த செயற்கையான வாழ்க்கை பிடிக்கவில்லை. யார் யாரோ என் கண் முன்னாலேயே இரவு பகல் என்றில்லாமல் அவளை அழைத்துக் கொண்டு போவதும், கொண்டு வந்து விடுவதுமாய் இத்தனை பெரிய வீட்டில் நான் காவலாளியாக, கூர்க்காவாகத்தான் இருந்து கொண்டிருக்கிறேன். இவளுடைய கணக்கு வழக்குகள், கால்ஷீட்டுகள் இவைகளைக் கவனித்துக் கொள்ளக் கூட என்னிலும் அதிக உரிமை உள்ளவன் போல் ஒரு செக்ரட்டரி. இவளது உடல் நலம், உடை தேவைகளைக் கவனித்துக் கொள்ள இன்னும் நெருக்கமாய் ஓர் ஆயா. நான் கணவன் என்ற பெயரில் ஓர் ஆண் துணை. பிள்ளைகளுக்கு ஒரு இனிஷியல். அவ்வளவுதான். எந்த சுவாரஸ்யமும் இல்லாமல், எந்தப் பணிவிடைகளையும் அனுபவியாமல் எந்தப் பெருமைகளையும் சொல்லிக் கொள்ள முடியாமல் ஒளியிழந்து, உறவுகளை அறுத்துக் கொண்டு, ஊரைப் பகைத்துக் கொண்டு என் விரல்களுக்கு அதிகமாய் வீங்கிக் கொண்டு வருடங்களைக் கழித்தாயிற்று. நாளை விடுதலை. போக்கிடம் புலப்படவில்லை. ஆனாலும் விடுபடுகிறோம் என்பதே வியர்வையை வருடுகிற தென்றலின் இதத்தைத் தருகிறது.

**திவ்யா – பிரசாந்த்**

"திவ்யாக்கா... இவுங்க ரெண்டு பேருக்கும் என்ன ஆச்சு? காலையிலேர்ந்து ஒரு மாதிரியா இருக்காங்க. மம்மிக்கு இன்னிக்குக் காலையிலே கமல் அங்கிளோட சூட்டிங். காலையிலேயே ஃபோன் பண்ணி உடம்பு நல்லால்லே, சூட்டிங் வேண்டாம்ன்னுட்டாங்க. இன்னிக்குப் பார்த்து நிறைய ஃபோன் கால்ஸ். பேப்பர்காரங்க வேறு நிறையப் பேர் வந்துட்டுப் போறாங்க. என்ன விஷயம், என்னக்கா ஆச்சு?"

"பிரசாந்த் நீ பேப்பர் பார்க்கலியா. அப்பாவும் அம்மாவும் விவாக ரத்து பண்ணிக்கிட்டாங்க. கோர்ட்டிலே தீர்ப்பாயிருக்கு".

"விவாக ரத்துன்னா...?"

"நீ சின்னப்பையன். உனக்குப் புரியாது. விவாக ரத்துன்னா அப்பாவும் அம்மாவும் தனித்தனியாப் பிரியறாங்கன்னு அர்த்தம்".

"அப்படீன்னா நாம..?"

"நாம அப்பா கூட இருக்கணும்ன்னு கோர்ட்டிலே உத்தரவாயிருக்கு".

"அப்படீன்னா அம்மா...?"

"தனியா இருப்பாங்க. நாம அம்மாகூட இருக்க முடியாது. ஆனா வந்து பார்த்திட்டுப் போகலாமாம்".

"நோ. நான் இதுக்கு ஒத்துக்க மாட்டேன். எனக்கு ரெண்டு பேரும் வேணும். அம்மா அப்பா ரெண்டு பேர் மேலயும் காலைப் போட்டுப் படுத்தாத்தான் எனக்குத் தூக்கமே வரும்".

"அதெல்லாம் முடியாது. நாம அம்மாவை விட்டுப் பிரிஞ்சி போயிட வேண்டியதுதான். டாடி சொன்னாங்க இன்னிக்கு மத்தியானம் நாம எல்லாரும் ஜாலியா ஃபிஷர் மேன் கோவுக்குப் போறோமாம். சீபாத், போட்டிங், ஈட்டிங் எல்லாம் உண்டு. இதுதான் கடைசி அவுட்டிங்".

**கதிரேசன்–சுமதி–திவ்யா–பிரசாந்த்**

"டாடி. இன்னிக்கு மாதிரியே நாம என்னிக்கும் இருக்கக் கூடாதா?"

"நோ. திவ்யா. மம்மி இஸ் ஆல்வேஸ் பிஸி இன் ஆக்டிங். இனிமே நாம ஒண்ணா இருக்க முடியாது. கோர்ட் உத்தரவு. இன்னிக்கு ராத்திரியே நாம நம்ம புது வீட்டுக்குப் போறோம், பெசன்ட் நகர்லே".

"மம்மி...?"

"..."

சுமதி மௌனத்தையே பதிலாய் ஆக்கினாள். கண்கள் மட்டும் லேசாய் பனித்திருந்தன. உற்சாகமாகப் பிள்ளைகளோடு விளையாடியதுகூட நடிப்பாயிருக்க வேண்டும். சோகம் என்னவோ அவளைப் பீடித்திருந்தது. திவ்யா தந்தையின் பக்கம் திரும்பி வெடித்தாள்.

"இதெல்லாம் எங்களுக்குப் பிடிக்கலே. உங்க ரெண்டு பேருக்கும் வேணும்னா இது விளையாட்டா இருக்கலாம். ஆனா எங்களுக்கு விளையாட்டில்லே. ஸ்கூல் பசங்க கிண்டல் பண்றாங்க. எப்பவும் உங்க ரெண்டு பேரோட போட்டோவும் அல்லது அம்மா போட்டோ மட்டும் தான் பேப்பர்லே வரும். எங்களை நீங்க பிள்ளைகள்னே யார்கிட்டேயும் பெரிசா சொல்லிக்கறதில்லே. அது

கூடப் பரவாயில்லே. ஆனா இப்போ உங்களுக்கே நாங்க பிள்ளைகள் இல்லேன்னா எப்படி? உங்களுக்குத் திரும்பவும் கல்யாணம் ஆகலாம். அப்பாவுக்கு இன்னோர் அம்மா வருவாங்க. அம்மாவுக்கும் கல்யாணம் ஆகும். இன்னோர் அப்பா வருவாங்க. ஆனா எங்களுக்கு நீங்க தானே எப்பவும் அம்மாவும் அப்பாவுமா இருக்க முடியும். தனித்தனியா ஏன் வெவ்வேற வீட்டிலே இருக்கப் போறீங்க. நம்ம வீடு பெரிய வீடு தானே. தனித்தனியா வெவ்வேற ரூமிலே இருங்களேன். பிரிஞ்சி இருங்க. ஆனா பிரிஞ்சி போயிடாதீங்க. மம்மி. எத்தனையோ பேரோட என்னென்ன ரோல்லேயோ நடிக்கிறீங்க. யாருன்னு தெரியாத எங்களை மாதிரி பசங்களுக்குக்கூட அம்மாவா நடிச்சிருக்கீங்க. எங்களுக்காகக் கொஞ்சம் நடிக்கக் கூடாதா? டாடியும் நீங்களும் ஒன்னா இருக்கறதா நடிக்கக் கூடாதா? எங்களுக்கு உங்களோட அன்பு வேணாம். ஆசை வேணாம். உங்களாலே எந்த வசதியும் வேணாம். ஆனா மத்தவங்க கிண்டல் பண்ணாம இருக்கிற உதவியை மட்டும் செய்யுங்க. நீங்க இதை வீடா நினைக்க வேணாம். ஒரு செட்டா நினைச்சுக்கங்க. எங்களை நீங்க உங்க பிள்ளைகளா நினைக்க வேணாம். படங்கள்லே நடிக்கிற குழந்தை நட்சத்திரங்களா நினைச்சிக்குங்க. நீங்க நடிச்சா நாங்க நிம்மதியாப் படிக்க முடியும். ஒழுங்கா ஸ்கூலுக்கு போக முடியும். யாரும் எங்களைக் கிண்டல் பண்ண மாட்டாங்க. அம்மாவா நடிக்க கால்ஷீட் தர்றீங்களா? நீங்க சரின்னு சொன்னாத்தான் நாங்க சாப்பிடுவோம்". திவ்யா வெடித்தாள்; சிறுமியானாலும் கொதித்திருந்தாள்.

கதிரேசனுக்கும் சுமதிக்கும் பதில் சொல்லத் தோன்றவில்லை. அமைதி நீண்டது. மேஜை மீது பரிமாறப்பட்ட உணவு வகைகள் அப்படியே ஆறிக் கொண்டிருந்தன. பெற்ற நெஞ்சங்கள் போராடிக் கொண்டிருந்தன. சற்று நேரத்தில் அந்த நீண்ட அமைதி கலைந்தது. மௌனமாய் இரு கரங்கள் அந்தப் பிள்ளைகளுக்கு உணவூட்டின. சட்டம் பிரித்த அந்த ஆணும் பெண்ணும் பெற்றோராய் அந்தப் பிள்ளைகளுக்கு உணவூட்டி இணைந்தபோது பிஞ்சு விழிகள் சொரிந்த நன்றிக் கண்ணீரில் அந்தக் கருணைக் கரங்கள் நனைந்தன. உடைக்க முடியாத பனிப்பாறைகளாய் இருந்த இதயங்கள் உருகி வழிந்தன. ❖



# ஹம்ஸ வாகினி வாணீ

சித்திரம் : ஸி.ந.ராமசந்திரன்

ஹம்ஸம் என்றால் அன்னப் பறவை.

இங்கு பரமஹம்ஸம் என்பது பரம்பொருளான பரப்பிரும்மத்தைக் குறிப்பதாகும். வாக்கு தேவதை வாணீ. அவள் வாக்கே வேதம். அன்னத்தில் வாக்கு தேவதை வீற்றிருக்கிறாள் எனில் வேதசொருபிணியாய் பிரும்மத்திலே நிலைத்த பிரும்ம சொருபிணியாயிருப்பவள் என்பதாம்.

நான்கு வேதங்களறிந்த படைக்கும் பெருமான், நான்முகனின் நாயகி, பிரம்மனுக்கு ஏற்றவளாதலின் 'பிராஹ்மி' என்றழைக்கப்படுகிறாள். ஆயகலைகள் அறுபத்தி நான்கும் கலைமகளிடமிருந்தே தோன்றியவை.

பிரணவாகார ஸாமவேத ஒலியே அன்னத்தின் ஒலியாம் 'ஹம்ஸத்வனி'. மகரயாழின் இசையால் அன்னத்தின் மீதமர்ந்த தேவி சாமகானத்தைப் பொழிகிறாள். இதனை பிரும்மா, விஷ்ணு, சிவன் முதல் முப்பத்து முக்கோடி தேவர்களும் கேட்டு ஆனந்திக்கின்றனர். இதனால் வையமெல்லாம் செழித்துப் பூரிப்படைகிறது.

ஜெபமாலை, ஜெபம், தவம், தியானோபாசனைகள், யக்ஞங்கள் மற்றும் ரிக்வேதத்தையே தன் கரத்தில் வைத்திருப்பதால், அவற்றை சாதகர்கள் எளிதில் பயின்றும் பயன் பெற திருவருள் புரிகிறாள் இவ்வித்யாதாயினி. ஏடும், ஜெபமாலையும் தன் கரங்களிலிருப்பதால் அவள் இனி கற்க வேண்டியிருப்பதைக் காட்டுகிறது என்பதாகக் கருதக்கூடாது. சர்வவித்தாகையாலும், எல்லாமறியும் பிரும்ம சொருபிணியாயிருப்பதாலும் அவள் எதையும் புதிதாகக் கற்க வேண்டியதேயில்லை. அவள் வித்தையைத் தன்னை நாடுவோருக்கு அருளுவதால் தன் திருக்கரங்களிலவற்றை ஏந்தியிருக்கிறாள்.

யஜுர் வேதம், தர்ம சாத்திரம் போன்ற ஏடுகளைத் தன் இடது கரத்திலிருப்பதால், உபாசகர்களுக்கு வேத உட்பொருட்களை உணர்த்துபவளாயும், வாக்கு வன்மையை பிரசாதிப்பவளாயும், பாண்டித்தியத்தை அருளியும், நீதிநெறிகளைத் தெரிவிப்பவளாயுமிருக்கிறாள் என்பதால் கம்பரும் சரசுவதியருள் பெற்றவராய் மாபெரும் கம்பராமாயணம் காவியத்தை உருவாக்கினார்.

அன்னத்தின்மிது வாணீ அமர்ந்திருப்பதால், அதாவது அவள் பிரும்மத்தில் நிலையாய் நிலைத்திருப்பதால் யாவையும் அறியும் 'ஸர்வக்ஞ' யாகவும், வேதவித்தாகவும் விளங்குகிறாள்.

தேவியின் இரு திருவடிகளில் ஒன்று அன்னத்தின் மீதும், மற்றது வெண்தாமரையிலுமுள்ளது. இதய உணர்வுகளால் உருவாவது கலைகள். மூளையறிவால் உருவாவது உயர் கல்வி. அவளது இரு திருப்பாதங்களும் கலையிலும், கல்வியிலும் தேர்ச்சியை அருள்பவையாயுள்ளன. மற்றும் பக்தி, ஞானம் எனும் இத்திருவடிகளை மனிதர் உபாயமாகப் பற்றி முக்தி பெறலாம் என்பதை விளக்குகிறாள் வாணீ.



'ஹம்ஸோஹம்' என்ற வேதக் கருத்தில் 'அன்னமே நான்' என யாவரும் தம்மை உணர வேண்டும் என்று அன்னத்திலமர்ந்த தேவியின் மூலம் இங்கு போதிக்கப்படுகிறது. அன்னம் என்பது பிரும்மத்தைக் குறிப்பதால், பிரும்மத்தில் எல்லா உயிர்களும், உடல்களும், உலகங்களும் அடங்கியிருப்பதையும் உணர்த்தப்படுகிறது. அதனால் எல்லாமறிபவராக அவரை 'ஸ:' என்றோ 'ஸா' என்றோ அழைக்கிறார்கள். பிரும்ம நிஷ்டர்கள், தியானத்தில் 'பிரும்மமே நான்', இதயத்திலுள்ள ஆத்மாவிற்கு ஆத்மாவான பரமாத்மாவே எங்குமுள்ள அந்த பரப்பிரும்மம் என்றுணர்ந்து ஆனந்திப்பர். ஒவ்வோர் உயிரிலுமுள்ள பரமாத்மாவே அந்தர்யாமியாய் நம்முள் இருப்பதால், ஒவ்வொன்றையும் அறியும் அந்த சாட்சியோடு நம் மனமும், உயிரும் லயிக்க வேண்டுமென வேதவாக்கியம் தெரிவிக்கிறது.

வேத சாத்திரங்களையறியாத போதிலும், தூய உள்ளம் படைத்த சீவனையும் தெய்வம் கண்காணித்து ஆட்கொள்கிறது என்பதை சிறு தாமரை அன்னத்தின் அருகே நீட்டியிருப்பதிலிருந்து தெரிகிறது. வாணியின் பின்னால் பிரும்மலோகமே தெரிகிறது, வானமும், நீரும் ஒன்றாயுள்ளன.

தேவியின் சந்நிதியிலிருப்பினும், எண்ண அலைகளான நீரலைகளில் நான்கு கமல நெஞ்சங்களும் நிலை கொள்ளாமல் ஆடுகின்றன. ஆனால் தேவியின் திருவடியைத் தொடும் தாமரை உள்ளம் மட்டுமே நிலை பெற்றுத் தெளிவு பெறுகிறது.

நம் ஐம்புலன்களும் தேவிக்கு அர்ப்பணிக்கப்படும் தூய வெண்கமலங்களாக ஆகவேண்டும்.

'யாகுந்தேந்து ஷார ஹார தவளா
யாசுப்ரவஸ்த்ராவிருதா
யாவீணாவரதண்டமண்டிதகரா
யாசுவேத பத்மாசனா ।
யா பிரும்மாச்சுத சங்கர
ப்ரப்ருதிபிர்தேவை:ஸதா பூஜிதா
ஸா மாம் பாது சரஸ்வதீ,
பகவதிநிஸ்லேஷ ஜாட்யாபஹா ॥'
ஓம் தத் ஸத்

— ஸ்ரீமதி மாலினி நாராயணன்

அறமும் அருளும் பெருகும் திருநாள்
அருள்வழி உள்ள முற்றோர் திருநாள்
பாங்குடன் குழந்தைகள் மகிழும் திருநாள்
சாதிகள் இல்லா சமத்துவத் திருநாள்
தீக்குணம் துறந்த சீரியோன் திருநாள்
துவர்க்குணம் கண்டு துடிப்போர் திருநாள்
மானுடம் நோயற்று வாழும் திருநாள்
மண்ணக வாழ்வில் விண்ணகத் திருநாள்
நலிவுகள் நீங்கி நலமுறும் திருநாள்
மனவிருள் மாய்த்த மாயவன் திருநாள்

## மாயவன் திருநாள்

- புதுவை நித்திலன்

# மதுச்சாலை!



எனது "மதுச் சாலை"யிலே
என்ன "மது" இருக்கிறது?
கிண்ணத்தில் ஊற்றுங்கள்
கிழக்கு வெளுக்கும் வரை!
விஷமான தேன்குடத்தின்
விளிம்பெல்லாம் அமுதூற்ற...
வசமான கற்பனைகள் - என்னை
வழிநடத்திச் செல்லட்டும்!
(அதோ -
ஒரு பழைய மதுச்சாலை!)

மின்னலிலே வழியமைத்து
மின்மினியில் விளக்கேற்றிக்
கண்மணியை இழந்தவர்கள் - அங்கே
கதறி அழுகின்றார்.
பொய்யிலே பூமாலை கட்டிப்
புகழைப் பிணமாக்கி
முகவரியைத் தொலைத்தவர்கள்
முன்நடந்து வருகின்றார்.

வெட்டவெளி மாளிகையில்
விழுந்து புரண்ட இடம்
மெத்தையென நினைத்தபடி - இங்கே
எத்தனைபேர் உறங்குகிறார்.

வந்து இருந்து
வைத்திழந்து
அந்தி மயக்கத்தில் - அவர்கள்
அடிவானம் ஆனார்கள்!

சுள்ளியிலே கூடுகட்டி - இன்றும்
வெள்ளி முளைக்கவில்லை - இனி
விடியல் வரப் போவதில்லை!
மதுரசத்தின் குணம் மாற்றிப்
புதுவசந்தத் தேனூற்றி - நான்
நாளும் தவமிருந்தேன்.
எனது மதுச்சாலையிலே
இதயக் கோப்பையிலே

ஞான'மது' இருக்கிறது.
மனிதர்களே - மனிதர்களே - இது
மனம் கொடுத்து வாங்கும் மது!
பிணம் சுமந்த பல்லக்கில்
'பெருவாழ்வு' பவனிவர
மதுச்சாலை வெள்ளத்தைப்
பன்னீராய்த் தெளித்திடுவீர்!
மதுவென்றால் மதுவல்ல - அது
வாழ்க்கை உருவகத்தின் குறியீடு!

கவியரசு. நா. காமராசன்

உங்களுக்கு ஆத்மநாதனைத் தெரியுமா?

தெரியாதென்றால் உங்களுக்கு ஆன்மிகத்தில் ஈடுபாடு இல்லை என்று பொருள்.

ஆன்மிக உலகில் பரமனுக்கு அடுத்த இடம் ஆத்மநாதனுக்கு அளிக்கப்பட்டிருக்கிறது என்றேகூடச் சொல்லலாம். அவ்வளவு பிரபலம் அவர்.

'ஆத்மா' என்றாலே போதும்; அந்த இடத்தில் ஆன்மிகம் மணம் கமழும். அழகு தமிழ் அருவியெனப் பொழியும்!

அவர் தமிழ்நாட்டில் சுற்றாத ஊரே இல்லை; ஆன்மிகச் சொற்பொழிவு நிகழ்த்தாத கோயில் மண்டபமே இல்லை. மாதத்தில் இருபத்தொன்பது நாள் அவரை வீட்டில் பார்க்கவே முடியாது. ஓர் ஊருக்கு நிகழ்ச்சிக்காக அவர் போகும்போதே, அடுத்த ஒன்பது நிகழ்ச்சிக்கான அழைப்புகளும், ஏற்பாடுகளும் அவரைத் திணறச் செய்துவிடும்.

ஆனாலும் மனிதர் சளைக்க மாட்டார். மக்களைத் திரள் திரளாகச் சந்திப்பதும், தனக்குச் சித்தித்துவிட்ட தமிழ் நடையில் தித்திக்கத் தித்திக்கப் பேசி அனைவரையும் திளைக்கச் செய்வதும் அவருக்குக் கைவந்த கலை.

சொற்பொழிவு, உபந்யாசம், கதா காலட்சேபம் என்று நிகழ்ச்சிகளின் பெயர்கள் மாறினாலும், அவருடைய பக்திப் பரவசமும், பகவானின் அருமை பெருமைகளை எடுத்தியம்புகிற இயல்பும் மாறவே மாறாது. சொற்களைப் பிழிந்து பல்வேறு சுவைகளில் ரசவாதம் செய்துகாட்டி அனைத்திலும் பக்தி மணமே கமழச் செய்கிற கலை அவருக்கு மட்டுமே கைவந்தது.

ஆத்மநாதனின் சொற்பொழிவு என்றால், அது பக்திப் பிரசாரமாக இருக்குமே என்றுகூட எண்ணாமல் நாத்திகவாதம் புரியும் இளைஞர்களும்கூட வந்து கூடுவது வழக்கம். கேட்டால் அவர்களே பெருமையுடன் சொல்வார்கள், 'அந்த மனிதரிடம் தமிழ் விளையாடுகிறது சார். ஒவ்வொரு சொல்லுக்கும் ஓராயிரம் பொருள் கூறும் வல்லமை அவர் ஒருவரிடம் மட்டுமே இருக்கிறது; அவருடைய ஒரு சொற்பொழிவைக் கேட்பது நூறு தமிழ் நூல்களைக் கற்பதற்குச் சமம்' என்று.

அப்படிப்பட்ட மேதைதான் இப்போது சொற்பொழிவுகள் என்றாலே என்னவென்று எனக்குத் தெரியாது என்று சொல்பவரைப் போல் வீடே கதியென்று விழுந்து கிடக்கிறார், கடந்த சில வருடங்களாக. ஏன், என்ன நிகழ்ந்தது என்கிறீர்களா?

ஒவ்வோர் உணர்வும் ஓர் உச்சநிலைக்குப் பிறகு வடிகாலைத் தேடி அலைகின்றது. ஆத்திகத்தின் எல்லையில் நாத்திகம் பிறக்கிறது.

# ஆத்மாவின் மௌனம்



நாத்திகத்தின் எல்லையில் ஆத்திகம் பிறக்கிறது. இந்த விசித்திரங்களைப் போல்தான் ஆத்மநாதனின் மனக் கதவுகளிலும் தாழ்ப்பாள் விழுந்து விட்டது. ஆனால் ஒரு வித்தியாசம். அவர் தெய்வ மறுப்பு வாதியாகி விடவில்லை. இதயக்கதவை இறுக்கி மூடி, உள்ளுக்குள் தன் உணர்வு களைச் சிறை வைத்துக் கொண்டு விட்டார். மௌனமே இப்போது அவர் மொழி. அதுவே அவரது உபதேசம்!

ஆத்மநாதன் அழகு தமிழில் அமுத மொழியில் அருளுரை நிகழ்த்திய நாள்களில் அவரது ஸ்பெஷல் சப் ஜெக்ட் 'மீனாட்சி திருக்கல்யாண' உபந் யாசம்தான்.

இந்த நிகழ்ச்சியை ஓர் அற்புத மான கலை நிகழ்ச்சி என்றே சொல்ல லாம். மீனாட்சி திருக்கல்யாண உபந் யாசத்தின்போது ஆத்மநாதன் ஓர் உபந்யாசகராக மட்டுமின்றி நடிக ராகவும் ஆகிவிடுவார். பாவனை களோடு பேசுவார். இதற்கு அவ ருடைய எடுப்பான தோற்றமும் ஒத்துழைக்கும்.

நல்ல கட்டான உடலும், களையான முகமும், கழுத்து வரை அளவாக வெட்டிவிடப்பட்ட சுருள் சுருளான கேசங்களும் அவருக்கு எப்போ தும் ஒரு கதாநாயக அந்தஸ்தையே அளிக்கும். சாதாரணமாக எப்போ தும் வெள்ளைக் கதர் ஜிப்பா அணிந் திருக்கும் அவர், கோயில் மண்ட பங்களிலோ, பள்ளிக்கூடங்களிலோ பக்தி உபந்யாசங்கள் புரியும்போது ஜிப்பாவைக் கழற்றிவிட்டு, திறந்த மேனியில் சந்தனம் அணிந்து, கழுத்தில் சிறு ருத்ராட்ச மணிமாலை ஒன்றை அணிந்து மிக எளிமையாக வும், கம்பீரமாகவும் இருப்பார்.

அவருடைய உபந்யாசங்கள் பக்தியை எவர்மீதும் திணிப்பதுபோல் அமையாது. சமுதாயத்தையும், அதன் ஆழமான பிரச்னைகளையும் கூர்ந்து நோக்குகிற அவர் அவற்றை எதார்த்த மாக எடுத்து இயம்புவார். பக்தி, மனக்கட்டுப்பாடு, தெய்வத்தின் மேன்மைகள் ஆகியவற்றை சன்னமாக தங்க இழைகளைப்போல் பிறர் மனங்களில் பின்னிவிடுவார்.

சொல் வல்லமை நிறைந்த அவ ருடைய சொற்பொழிவுகள் திடீரென்று அடைபட்டுப் போனதற்குக் காரணம் ஒரு சோகமயமான சம்பவம். அந்தச் சம்பவத்திற்குப் பிறகுதான் அவ ருடைய மனம் இப்படி ஊமையாகிக் கிடக்கிறது.

பிறர் நலம் பேணும் பெருந் தன்மையும், ஞான மேன்மையும், கல்வியும், கலைகளும், கவின்தமிழும் விளையாடும் கனிந்த இதயமும் பெற்ற அவருக்குப் பிறந்த பிள்ளை களே பெருந்துன்பங்களைச் சுமை சுமையாக இதயத்தில் ஏற்றி, வாடி நலிய வைத்தனர்.

அவரது ஒரே புதல்வன் பன்னி ரண்டு வயதுவரை பளிச்சென்று வளர்ந்துவிட்டு, ஒருநாள் பொட் டென்று ஆற்றின் புதுவெள்ளத்தில் நீச்சலடிக்கப்போய், ஆற்றை அடுத்த ஊர் மதகில் வடிகட்டிப் பிணத்தைத் தேடி எடுத்த கதையெல்லாம் வேறு விஷயம்.

ஆத்மநாதன் தன் ஒரே மகனுக்கு நாவுக்கரசன் என்று பெயர் வைத் திருந்தார். அவன் நமனுக்கு விருந் தானபின் அவருடைய நாவிலே நடுக்கமொன்று குடியேறியிருந்தது. ஆனாலும் முக்கண்ணன் அருளினால் மூன்று பெண்கள் மீனாட்சியும், காமாட்சியும், சிவகாமியும் கோயில் விக்ரகங்களைப்போல், கொலு பொம்மைகளைப் போல் அழகோடு விளங்க, 'அப்பா, அப்பா' என்று அழைத்து அன்பு மழையைப் பொழிந்து அவருடைய மனத்தைக் குளிரச் செய்து கொண்டிருந்தனர்.

மகனை இழந்த சோகத்தையும் தூக்கியெறிந்து விட்டு அவர் மீண்டும் தன்னைப் பக்திப் பிரவாகத்திலே இணைத்துக் கொண்டு உபந்யாசங் களில் கரைந்து கொண்டிருந்தார்.



இரண்டு மூன்று வருஷம் கழித்து அவருடைய இளையமகள் காமாட்சி, அந்தப் பெயர்ச்சொல்லே பெரிதாக விரைந்து ஆட்சி செய்யும் வயதில் கனவுச் சிறகுகளை விரித்துக் கொண்டு ஒரு காதலனுடன் ஓடிவிட்டாள். அவள் ஓடியதே அந்தக் குடும்பத்தைக் கெடுக்கும் ஓர் பேரிடி என்றால், அதைவிடப் பேரிடி அவள் வேறு ஜாதி வாலிபனோடு ஓடிப்போனது.

ஊர் முழுதும் ஒரே வாயாகப் பிளந்து ஓயாதப் புயலாக இந்தப் பிரச்னை உருமாறி வீசியபோது ஆத்மநாதன் மிகவும் குலைந்துதான் போனார். எனினும் அவர் ஒரு காலத்தில் தமிழாசிரியராகவும், ஒரு தீவிர வாதப் போக்கில் மனம் செலுத்தியவராகவும் இருந்த அனுபவத்தின் பேரிலும், பின்னாளில் சமரசம் பாடிய ஜோதி வள்ளலாரிடம் கொண்ட ஈடுபாட்டின் காரணமாகவும் இதைத் தாங்கிக் கொள்ள அவர் பெரிதும் முயன்றார்.

தீவிரவாத அனல் வீசி சில ஈரங்கள் உலர்ந்து போயிருந்த அவருடைய நெஞ்சிலே வள்ளலாரின் ஈடுபாடுதான் வீரத்தை ஈரமாக்கி விவேகத்தைத் தழைக்கச் செய்து, அன்பும் பக்தியுமான ஞானக் கனிகளை விளையச் செய்திருந்தது. அதனால் அவர் பேதங்களையும் புரிந்து கொண்டிருந்தார். வேதங்களையும் புரிந்து கொண்டிருந்தார்.

பேதங்களில் மிரண்டுபோய் தவிப்போரை அழைத்து, பாலும் சர்க்கரையும் பேதப்பட்டிருப்பது பிரித்து அழிக்கும் நோக்கத்தினாலன்று, மீண்டும் சேர்த்துச் சுவைப்பதற்கே என்பார். கீரைக்குப் பாத்திக் கட்டுவதும், நெல் வயலில் வரப்புக் கட்டுவதும் எந்தவிதக் கொடுமையின் கீழும் அல்ல என்பதையும் தெளிய வைப்பார்.

காற்றிலே விதைத்துக் கனவிலே உழுது வாழ்விலே விளையவில்லையென்று வாடி அழுகின்ற மாந்தரைக் கூட்டி, காலம் உணர்த்துகிற கருத்துக்களையெல்லாம் தெளிவாக உரைத்து அறிவுக்கனலாய் - அருட்புனலாய் திகழ்ந்தவர் ஆத்மநாதன். சமயச் சிந்தையோடு, சமுதாயச் சிந்தையும் அவருக்கு இருந்தது.

இப்படி ஓர் இயக்கமாக நடமாடிக் கொண்டிருந்த அந்த மனிதருக்கே மகளின் செயல் இழிவையும், இன்னலையும் தேடித் தந்து விட்டது. அந்த அதிர்ச்சியில் இருந்து அவர் மீள முயல்வதற்குள் அவருடைய அடுத்த புதல்வி வீணை கற்றுக் கொள்கிறேன் என்று சொல்லி ஒரு கலைராணியின் வீட்டுக்குச் செல்ல ஆரம்பித்தாள்.

ஆத்மநாதனால் தன் மகளைத் தடுக்க முடியவில்லை. 'வீணை கலைமகளின் கரங்களில் தவழ்வதாயிற்றே, அதைப் பயில்வதும் ஒரு குற்றமா' என்று கேட்டு அவர் வாயைத் திறக்கவிடாமல் செய்துவிட்டாள்.

இளசுகளின் ஆர்வங்களை அடக்க முடிவதில்லை. அழிவையும் தவிர்க்க முடிவதில்லை. எதற்கும் ஒரு முறையான பாதையைத் தேடிக் கொள்ளும் பக்குவமும் இருப்பதில்லை. தேடித் தரச் சொல்லிக் கேட்டுக் காத்திருக்கும் பொறுமையும் இல்லை. 'பெரிசுகள் எதைச் சொன்னாலும் அதை மீறி நட' என்கிற தத்துவம் இளசுகளின் மனத்தில் ஆழப் பதிந்துவிட்ட ஒரு காலத்தின் பிரதிபலிப்பு இப்படித்தான் இருக்க முடியும். என்ன செய்வது? ஆத்மநாதன் மௌனியாகி, வாழ்க்கையின் பார்வையாளனாக மட்டுமே இருக்க முடிந்தது.

சிவகாமி ஒருநாள் வீணை ஆசிரியையின் மூலம் சினிமாவில் நடிக்கப் போகிறேன் என்றாள். 'பிரபல உபந்யாசகர் மகள் சினிமா நடிகையாகிறார்' என்று பத்திரிகைகளில் சிவகாமியின் படங்களுடன் பேட்டிகள் பிரசுரமாயின. இரண்டொரு படங்களில் துணை நடிகையாகவும் நடித்தாள். அதற்குள் அவளுக்கு யார் யாரோ துணையாக இருக்க விரும்பினார்கள். அவள் வயிறு கனத்தது.

அவள் எப்படியெல்லாம் குழம்பிப் போயிருந்தாளோ, அது போலவே அவளுக்கு வந்த ஜனனமும், மரணமும் ஒன்றாகக் குழம்பியது. அவள் கதை ஓர் ஆஸ்பத்திரியில் முடிந்தது. பிரபல பத்திரிகைகளில் அவளுடைய சவ ஊர்வலம் நடந்து முடிந்தது.

இத்தனைக்கும் பிறகு ஆத்மநாதன் பகவானைப் பற்றிப் பிரசங்கம் செய்து கொண்டிருந்தார் என்றால் அது அவருடைய மூத்தபெண் மீனாட்சியை நினைத்துதான். குணத்திலும், அழகிலும் பூரணமாகத் திகழ்ந்த அவளுக்கு இருபத்தெட்டு வயதாகியும் திருமணநாள் வரவேயில்லை. ஆத்மநாதனோ மேடைக்கு மேடை அதி விமரிசையாக மீனாட்சி கல்யாணத்தை நடத்திக் கொண்டிருந்

ஆனால் ஆத்மாவின் இல்லத்திலோ ஒரே ஒரு திருமணம்கூட நிகழவில்லை. மீனாட்சி திருக்கல்யாணம் நிகழ்ந்து கொண்டிருந்த வேளைகளிலெல்லாம் அவரது மூத்த மகள் மீனாட்சி திருமணக் கனவுகளை மனத்தில் பரப்பிக் கொண்டு நலிந்து மெலிந்து கொண்டிருந்தாள். வருகிற வரனெல்லாம் அந்தக் குடும்பத்தின் இழிவுகளைப் பற்றி எடுத்து விரிவுரையாற்றும் - புண்ணைக் கிளறிவிட்டுப் போய்ச் சேர்ந்துவிடும். மீனாவோ மனப்பூரணி. தந்தையின் நெஞ்சிலே தன்னாலும் ஒரு பேரிடி விழுந்து விடக் கூடாது என்று தன்னில் கரைந்து கொண்டிருந்தாள். காலமோ சோதனைகளையும், வேதனைகளையும் மட்டுமே தந்து கொண்டிருந்தது. அவள் நினைத்து நினைத்து ஒரு முடிவுக்கு வந்தாள். அதற்குக் காரணம், அப்போதுதான் அவளுக்கு ஒரு திருமண ஏற்பாடு நடந்து நிச்சயதார்த்தமும் முடிந்தது. ஒரு நாற்பது வயது மனிதனென்றாலும் தன் வாழ்க்கைக்கு ஓர் அர்த்தம் மலரப் போகிறதே என்று அவள் மகிழத் தொடங்கியிருந்தாள். அந்தச் சமயம் பார்த்து, மாப்பிள்ளை, வயற்காட்டில் பாம்பு கடித்து இறந்துவிட்டார் என்று தந்தி வந்து சேர்ந்தது. அன்று ஆத்மநாதன் ஊரில் இல்லை. வழக்கம்போல் வெளியூர் ஒன்றில் மீனாட்சித் திருக்கல்யாண உபந்யாசம் ஒன்றுக்காக அவர் போயிருந்தார். நாளை காலையில் அவர் வந்தவுடன் இந்தத் தந்தியைப் பார்த்து விட்டு, 'அம்பாளின் திருமணத்தை ஆயிரம் முறை விவரித்துச் சிறப்பித்த என்னால் என் சொந்த மகளுக்குச் சிறப்பாக ஒரு கல்யாணம் செய்து பார்க்க முடியாமல் போய்விடும் போலிருக்கிறதே' என்று கூறிப் புலம்புவதைக் கேட்டுக் கொண்டு இருப்பதைவிட - ஓயாது தூற்றும் ஊர்வாயை மூட முடியாமல் அவமானப்பட்டு அலைக்கழிவதைவிட இந்தப் பாழும் உலகில் வாழும் ஆசையை விட்டு விடுவோமே என்று முடிவு செய்துவிட்டாள் அவள்.

எல்லாத் துன்பங்களிலும் மனம் இறுகிப் போய் கல்லாய்க் கிடந்த அவளுடைய தாய் அன்றிரவு கூடத் தில் உறங்கிக் கொண்டிருந்தாள். மீனா அப்பாவின் பூஜை அறைக்குள் சென்று பெரிய அளவில் தங்க பிரேமிட்ட மீனாட்சியம்மன் திருவுருவப் படத்தின் கீழே அமர்ந்து கொண்டு தனக்கு மண்ணெண்ணெய் அபிஷேகம் செய்து கொண்டு பூஜை அறையில் எரிந்து கொண்டிருந்த குத்துவிளக்கினாலே அக்னி அபிஷேகமும் செய்து கொண்டாள். தனக்குப் பிறர் தீ மூட்டுவதையோ - தான் பிறருக்கு நெஞ்சில் தீ மூட்டுவதையோ விரும்பாத அந்த அழகுத் திருமகளின் பொன்மேனியில் தீ பாய்ந்து படர்ந்தது.

விஷயம் தெரிந்தது. ஊர் கூடியது. எதுவும் பயனில்லை. மறுநாள் ஊர் திரும்பிய அருள்மொழி ஆத்மநாதன் பேச மொழியின்றி மௌனமாய் அழுதார். மனத்திற்குள் புலம்பினார். அன்று முதல் இன்றுவரை அவர் மீனாட்சி திருக்கல்யாணம் மட்டுமில்லை, வேறு எந்த உபந்யாசத்துக்குமே செல்வதில்லை. மௌனமே மொழியாய் - தவமாய், நடமாடும் கற்சிலையாய் மாறிவிட்டார். ஃ

# இசைக் கலைஞர்களோடு இனிய அனுபவங்கள்...

**1976**ஆம் ஆண்டு அக்டோபர் 2ஆம் தேதி (காந்தி ஜெயந்தி மற்றும் விஜயதசமி) நன்னாளிலிருந்து 1983, ஜனவரி 22ஆம் தேதி வரை விஜய வாடா நகரில் நான் தனி ஆளாக - தலைவர், உபதலைவர், காரியதரிசி, காசாளர், ஆபீஸ் பையன், என்றெல் லாம் தனித் தனியாக நிர்வாகிகள் இன்றி, 'எல்லாமே நானாக' - 'கான ப்ரியா' என்ற சங்கீத சபாவை நடத் தினேன்.

சபாவைத் தொடங்கியபோது ஏற்கனவே அந்த ஊரில் நடந்து வந்த சபாக்களின் நிர்வாகிகள் என்னை ரொம்பவுமே பயமுறுத்தி இருந் தார்கள். "கலைஞர்களைச் சமாளிப் பது மிகவும் சிரமமான காரியம். அவர்கள் எதை, எப்போது கேட் பார்கள் என்று சொல்ல முடியாது. கேட்டதைக் கொடுக்க முடியாவிட்டால் நிகழ்ச்சியில் தடை ஏற்படுமா அல்லது ஏனோ தானோ என்று அமையுமா என்று முன்கூட்டியே சொல்ல முடி யாது. ரசிகர்களுக்கும், கலைஞர் களுக்குமிடையே அகப்பட்டுக் கொண்டு திண்டாடுவது அவசியமா என்று யோசியுங்கள்" என்று அச் சுறுத்தினார்கள்.



'முன் வைத்த காலைப் பின் வைக்கக் கூடாது' என்ற பிடிவாதத் துடன் சபாவை நடத்தியபோது எனக்குக் கிடைத்த அனுபவங்கள் அநேகமாய் 'மிக இனியையமானவை' யாக அமைந்தது என் அதிர்ஷ்டத் தினாலா, அல்லது 'கலைஞர்களும் நம்மைப் போன்ற மனிதர்கள்தான், அவர்களைத் தக்கபடிக் கவனித்துக் கொண்டால் எதையுமே சமாளிக்க லாம்' என்று ஓரிருவர் கூறியது உண்மை என்பதனாலா அல்லது இரண்டினாலுமா என்ற கேள்விக்கு விடை தேட வேண்டியதில்லை.

அப்போது நான் பெற்ற மூன்று இனிய அனுபவங்களை இந்தத் தீபா வளி நந்நாளில் நேயர்களுடன் பகிர்ந்து கொள்ளலாம் என நினைக்கிறேன். மூவருமே 'சங்கீத கலாநிதி'கள் - ஆம், செம்மங்குடி சீனிவாசய்யர், எம். எஸ். சுப்புலக்ஷ்மி, டாக்டர் எம். பாலமுரளி கிருஷ்ணா ஆகியோருடனான அனுப வங்களைப் பற்றி மட்டுமே சொல் கிறேன்.

★ ★ ★

பாலமுரளி கிருஷ்ணா பாடகர் மட்டுமல்லர், சிறந்த வாக்கேயக்கார ரும் கூட. தமிழிலும் சில கீர்த்த னைகள் செய்திருக்கிறார். தவிர அவ ருடைய வர்ணங்களும், தில்லானாக் களும் புகழ் மிக்கவை. பாட்டுக் கச்சேரிகளைத் தவிர நடன நிகழ்ச்சி களிலும் அவை இடம் பெற்று வரு கின்றன.

"நீங்கள் எங்கள் 'கானப்ரியா'வில் ஒரு கச்சேரி செய்ய வேண்டும். அதில் உங்களுடைய தமிழ்க் கீர்த் தனைகள் முக்கிய பங்கு வகிக்க வேண் டும்" என்று அவரிடம் சொன்னபோது அவர் சிரித்தார்.

"உங்கள் ஊரில் தமிழ்ப் பாட்டுப் பாடினால் ஒப்புக் கொள்வார்களா?" என்று கேட்டார்.

"விஜயவாடா உங்கள் ஊர்தானே?" என்றேன்.

"இல்லை, இல்லை. இப்போது என் ஊர் மதராஸ்தான். நீங்கள் அங்கே இருப்பதால் அது உங்கள் ஊர்!" என்று கூறி மீண்டும் சிரித்தார்.

"சரி, அப்படியே இருக்கட்டும். ரசிகர்களைப் பற்றிய கவலையை எனக்கு விட்டு விடுங்கள். உங்கள் தமிழ்ப் பாடல்களை விஸ்தாரமாக - நிரவல், ஸ்வரத்தோடு பாட வேண் டும்" என்றேன்.

"சரி..." என்று சற்றுத் தயங்கி விட்டு, "இது இரண்டு பேருக்குமே பெரிய சவால். ஆகவே எனக்குச் சன்மானம் வேண்டாம். ஏதாவது நல்ல ஹோட்டலில் இரண்டு நாள் தங்க ஏற்பாடு. கச்சேரி முடிந்து, இரவு ஜி.டி.யில் திரும்பி வர ஃபர்ஸ்ட் க்ளாஸில் ஒரு பெர்த் ரிசர்வ் செய் யுங்கள்" என்றார்.

தம் குருவான பாருபள்ளி ராம கிருஷ்ணைய பந்துலுவின் ஆராதனை விழாவைப் பாலமுரளியும் அவ ருடைய இசை நண்பர்களும் விஜய வாடாவில் ஆண்டுதோறும் நடத்துவது வழக்கம். 17.7.1980 அன்று அந்த ஆண்டுக்கான விழாவில் பாலமுரளி பாட இருந்தார். ஆகவே, அதற்கு அடுத்த நாளான 18.7.1980 அன்று அவருடைய (தமிழ் இசைக்) கச்சே ரிக்கு, அதே 'ஹநுமந்த ராய கிரந் தாலயா' அரங்கில் ஏற்பாடு செய் தேன்.

"இதென்ன பைத்தியக்காரத்தனம்? முதல் நாள் இலவசமாக அவருடைய கச்சேரியைக் கேட்கப் போகிறார்கள். அடுத்த நாள் காசு கொடுத்து யார் வருவார்கள்? அதுவும் தமிழ்ப் பாட் டென்றால் கல்லை எறிவார்களே"

ஸ்ரீராம்

என்று நிஜமாகவும், கேலியாகவும் பலர் சொன்னார்கள்.

நான் தயங்கவில்லை. 'பால முரளியின் உள்ளம் கவரும் தமிழ்ப் பாடல்களைக் கேட்க வாருங்கள்' என்று விளம்பரத் துண்டுப் பிரசுரம் விநியோகம் செய்தேன். தினசரி களிலும் விளம்பரம் செய்தேன்.

17ஆம் தேதி பாருபள்ளி விழாவில் பாலமுரளியின் கச்சேரி நடந்தது. எக்கச்சக்கக் கூட்டம். எனக்கேகூட உள்ளுக்குள் கிலி உண்டாயிற்று. அடுத்த நாள் மாலை 6.30க்கு எங்கள் சபாக் கச்சேரி. ஐந்தரை மணியி லிருந்து கூட்டம் சேரத் தொடங்கி, ஆறு மணிக்கு 'ஹவுஸ் ஃபுல்'. பால முரளியைப் பார்க்க ஹோட்டலுக்கு ஓடினேன். "இன்றைய கச்சேரிக்கு இப்போதே ஹவுஸ் ஃபுல். நிறையப் பேர் வெளியே நின்றிருக்கிறார்கள். மேடையில் ஒரு ஐம்பது, அறுபது பேரை உட்கார வைக்கட்டுமா?" என்று கேட்டேன்.

"என் மடிமீது யாரும் உட்காராமல் இருந்தால் போதும். ஜமாயுங்கள்" என்றார்.

"நீங்கள் சீக்கிரம் புறப்படுங்கள். 6.30க்குக் கச்சேரியை ஆரம்பித்து விட வேண்டும்" என்றதும், என்னுடனேயே புறப்பட்டு விட்டார்!

அரங்கத்துக்குள் நுழையவே சிரமப்பட்டோம். மேடையும் நிரம்பி வழிந்தது. "நான் டிபன் சாப்பிடாமல் வந்துவிட்டேன்" என்று பாலமுரளி சொல்ல, ஒரு பையனை அருகி லிருந்த ஹோட்டலுக்கு விரட்டினேன். அந்தச் சமயம் பார்த்து மின்சாரக் கோளாறு - எங்கும் இருள்! என் காரி யாலய நண்பர் - மின்சார என்ஜினியர் - உடனடியாகக் கோளாறைச் சரிப் படுத்தவும் பையன் டிபனைக் கொண்டு வரவும் சரியாக இருந்தது. ஆயினும் பாலமுரளி கைக்கடியாரத் தைப் பார்த்துவிட்டு, "6.29 ஆகிவிட்டது. கச்சேரி முடிந்த பின்தான் டிபன்!" என்று கூறியபடி, பாட உட்கார்ந்து விட்டார். (வழக்கமாக அவர் விஜய வாடாவில் அரை மணி, முக்கால் மணி தாமதமாகத்தான் கச்சேரியை ஆரம்பிப்பார்).

வயலின், மிருதங்க வித்வான்களும் உட்கார்ந்த பிறகு, பாலமுரளி, "ரசிகர்களுக்கு ஒரு மனவி (விண் ணப்பம்). இக் கச்சேரியை ஏற்பாடு செய்திருக்கும் சௌந்தரராஜன்காரு வுக்கு ஓர் ஆசை; ஒரு தெலுங்கன் தமிழில் கீர்த்தனை பண்ணியிருக் கிறானே, அவை எப்படியிருக்கும் என்று கேட்க ஆவல். ஆகவே, இன் றைய கச்சேரியில் சற்றுக் கூடுத லாகவேத் தமிழ்ப்பாடல்கள் இருக் கும். கேட்டு ரசிக்க வேண்டுகிறேன்" என்று அறிவிப்பு செய்துவிட்டு, "ஓஓஓம்ம்ம்" என்று ஆரம்பித்தார். ஷண்முகப்ரியாவில் அவருடைய வர் ணம், 'ஓம்காரப் பிரணவ நாதோ ஸ்ருதி லய ஸ்வரூப' என்று பிரண வத்துடன் கம்பீரமாக் ஆரம்பிக்கும். அதோடு தொடங்கிய கச்சேரியில், ஹம்சத்வனியில் விநாயகர் மீதான "பிறையணியும் பெருமான் மைந் தனே' என்ற பாடல், முருகர் மீதான பந்துவராளி கீர்த்தனை; 'வருக வருக மாமயில் மீதேறி; (அதில் 'அளவிலா இகமோகத்தால் உளமதில் தீராத் துயருற்றேன்' என்ற சரணத்தில் நிரவல்); தொடர்ந்து, 'ஆய கலைக் கெல்லாம் அரசி நீயே' (ராகம்-தானம்-பல்லவி என்ற உத்தியை உள்ளடக்கிய) சரஸ்வதி மீதான மோகனராகப் பாடல், அடுத்து மிரு தங்கத் தனி. கொசுறாக ('திருவிளை யாடல்' பாடல்) 'ஒருநாள் போது மா'வை ஆரம்பித்தபோது சபையில் ஒரே கோலாகலம். வழக்கமாகக் கச்சேரியின் இடையில் 'ஓர் இடை வெளி' விடுவது அவர் வழக்கம். அன்று அதையும் தவிர்த்து, ஒரு மூன்று மணி நேரம் தொடர்ந்து கானமழை பொழிந்தார்.

அன்றிரவு 12 மணிக்கு பால முரளியை ('ஜி.டி') ரயிலில் ஏற்றி வழியனுப்ப ஹோட்டலுக்குச் சென் றேன். "இன்றைய கச்சேரி 'டாப் க்ளாஸ்', 'கேட்' வசூலும் நிறைய. ஆயிரம் ரூபாய் கொண்டு வந்திருக் கிறேன்" என்று அவரிடம் தரப் போனேன்.

"நோ, நோ! நான் உங்களிடம் கேட்டது ஹோட்டலில் இரண்டு நாள் தங்கும் வசதி, திரும்பிப் போக ரயிலில் 'ரிசர்வேஷன்'. இரண்டையும் செய்து விட்டீர்கள். கச்சேரியும் எதிர்பார்த்ததைவிட அதிகம் வெற்றி. சன்மானம் வேண்டாம்" என மறுத்து விட்டார். வற்புறுத்தினேன். "அதை என் டொனேஷனாக வைத்துக் கொண்டு இசைச் சேவையைத் தொட ருங்கள்" என்று சொல்லிவிட்டார்.

எங்கள் சம்பாஷணையைக் கவ னித்து வந்த ஹோட்டல் அதிபர் போஜா ராவ், "எங்கள் ஹோட்டல் 'பில்'லையும் நீங்கள் தரவேண்டாம். என்னுடைய டொனேஷனாக வைத்துக் கொள்ளுங்கள்" என்று சொன்னபோது எனக்கு மயக்கம் வராத குறை.

★ ★ ★

**31-8-1982** நான் வேலை யிலிருந்து ஓய்வு பெற வேண்டிய நாள். ஆகவே அதற்குள் (அந்த 1982ஆம் ஆண்டில்) எப்படியாவது 'எம்.எஸ்', செம்மங்குடி, டி.கே. பட்டம்மாள் முதலியவர்களை எங்கள் சபாவில் பாடவைக்க வேண்டும் என்று உறுதி செய்து, 1981 டிஸம்பர் மாத நிகழ்ச்சிப் பிரசுரத்தில் துணிந்து முன் அறிவிப்பும் செய்து விட்டேன்.

முதலில் 'எம்.எஸ். கச்சேரி. இரண்டு முறை 'எம்.எஸ்'ஸை (அதா வது டி. சதாசிவம் அவர்களை) அணுகினேன். "விஜயவாடா ரேடியோவில் ஒரு 'ரிகார்டிங்' கேட் டிருக்கிறார்கள். அடுத்த பிப்ர வரியில் நடக்கலாம். அப்போது உங்கள் சபாவிலும் கச்சேரி வைத்துக் கொள்ளலாம்" என்று கூறினார். உடனே அப்போதைய விஜயவாடா வானொலி நிலைய இயக்குநர் பி. ஸ்ரீநிவாசனைத் தொடர்பு கொண் டேன். "பிப்ரவரி 6ஆம் தேதி 'ரிகார் டிங்' வைத்துக் கொள்கிறேன். நீங்கள் 7-2-82இல் உங்கள் சபாவில் அவ ருடைய கச்சேரியை ஏற்பாடு செய்து விடுங்கள்" என்றார். மீண்டும் 'எம். எஸ்.ஸை அணுகி, அவர்கள் சம்மதம் பெற்றேன். சன்மானம் விஷயமாகப் பேச முயன்றபோது, "எல்லாம் ஆத்மாவிடம் விட்டுவிட்டேன்" என்று பதில் வந்தது. 'ஆத்மா' என்ற ஆத்மநாதன் அவர்களுடைய காரிய தரிசி, என்னுடைய உறவினரும்கூட. "அது பற்றி நீ கவலைப்படாதே.

ஏற்பாடுகளைக் கவனி" என்று ஆத்மா உற்சாகமாகக் கூறிவிட்டார்.

"குறைந்த கட்டணத்தில் - கீழ்மட்டத்தில் இருப்பவர்களும் எம்.எஸ். கச்சேரியைக் கேட்க வசதி செய்ய வேண்டும். 50,100,200 ரூபாய் என்றெல்லாம் டிக்கட் வைக்க விரும்பவில்லை" என்று நான் சொன்னபோது, "அதற்காக ஒரேயடியாகக் குறைத்து விடாதே!" என்று 'ஆத்மா' கேட்டுக் கொண்டார். கச்சேரி முடிந்த பிறகு சென்னை திரும்ப எட்டு பெர்த்கள் முதல் வகுப்பில் 'ரிசர்வ்' செய்யச் சொன்னார்.

1982ஆம் ஆண்டு ஜனவரியில் 'எம்.எஸ். குண்டூரில் ஒரு கச்சேரி செய்தார். அந்தக் கச்சேரிக்குப் போகும் வழியில் விஜயவாடாவில் என் இல்லத்துக்கு அவருடைய குழுவினர் வந்தனர். சிற்றுண்டி சாப்பிட்டுவிட்டு, "நாங்கள் 6ஆம் தேதியே வருகிறோம். ஹிந்தி 'மீரா' படத்தை விஜயவாடா ஃபிலிம் சொஸைடி திரையிடப் போகிறார்கள். ஆகவே, 6,7 தேதிகளில் உங்கள் வீட்டிலேயே தங்குகிறோம். இதுவே நன்றாயிருக்கிறது. ஹோட்டல் எல்லாம் வேண்டாம்" என்று சதாசிவம் சொல்லி விட்டார்.

திட்டமிட்டபடி 6-2-82 வானொலி 'ரிகார்டிங் நடக்க முடியாதபடி ஏதோ தடை நேரிட்டது. 'கச்சேரியும் பணால்' என்று நான் திகிலடைந்த போது, "கச்சேரி நடக்கட்டும். நாங்கள் 6ஆம் தேதி வருகிறோம்" என்று சதாசிவம் உதவிக்கரம் நீட்டினார். கச்சேரி சமயம் நான் வெளியிட விருந்த ஒரு சிறு 'ஸவனி'ருக்கு ஒரு விளம்பரமும் வாங்கித் தந்தார்.

புதிதாகக் கட்டப்பட்டிருந்த 'க்ஷேத்ரய்ய கலாக்ஷேத்ரா' என்ற அரங்கில் கச்சேரி ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ரூ 5,10,15 என்று மட்டுமே டிக்கெட் வைக்கப்பட்டது. அரங்கில் இருந்த 1200 இருக்கைகளோடு, இண்டு இடுக்குகளில் மேலும் 100, நாற்காலிகளை நிரப்பினோம். மேடையிலும் 200 பேர் உட்கார 'எம்.எஸ்'ஸின் ஒத்துழைப்போடு வசதி செய்தோம்.

ஜனவரி 25ஆம் தேதியே 1500 டிக்கட்டுகளும் விற்றுப் போகவே, "இனி டிக்கட்டுக்கு எங்களை அணுகாதீர்கள்" என்று 'ஹிந்து'வில் விளம்பரம் செய்தேன். இருந்தும் கடைசி நாள் வரை டிக்கட்டுக்காக, சாரி, சாரியாக மக்கள் என் வீட்டைப் படையெடுத்தார்கள். 7ஆம் தேதி பிற்பகல் பெருங்கூட்டமே என் வீட்டு வாசலில் 'தர்ணா'' செய்ய, சதாசிவமே வெளியே வந்து, "இன்று நிகழ்ச்சியை 'கேன்ஸல்' செய்து விடுங்கள்" என்று சொல்லிவிட்டுப் போனார். அப்புறம் தான் ஜனங்கள் கலைந்து போனார்கள்.

சத்யசாயிபாபாவின் பக்தர்கள் விஜயவாடாவில் ஒரு பிரார்த்தனை மண்டபம் கட்ட முடிவு செய்திருந்தார்கள். அந்தக் கட்டடத் திருப்பணிக்கு நிதி உதவி செய்பவர்களுக்கு முதல் வரிசையில் 200 நாற்காலிகளை ஒதுக்க, (சதாசிவத்தின் அனுமதியோடு) முடிவு செய்தோம். ஆனால் பாபா அதற்கு ஒப்புதல் அளிக்காததோடு, சத்யசாயி சேவா சமிதித் தொண்டர்கள் கச்சேரி நன்கு நடக்க ஒத்துழைக்க வேண்டும் என்று கூறிவிட்டார். கச்சேரி தினத்தன்று பிற்பகல் 2 மணியிலிருந்து இரவு 10.30 வரை 30 தொண்டர்கள் ஒரு தலைவருடன் ஆற்றிய தொண்டை விவரிக்க வார்த்தைகளே இல்லை. கச்சேரிக்கு வந்தவர்களை அவரவர்களின் இருக்கையில் அமரச் செய்து, கச்சேரி



பூராவும் அமைதி காத்ததுடன், கலைஞர்களை வெகு ஜாக்கிரதையாக அரங்குக்கு அழைத்து வந்து, கச்சேரி முடிந்தபின் வீட்டுக்கும் அழைத்து வந்துவிட்டனர்.

அன்று மாலை 5.30லிருந்து 6 மணி வரை தைப்பூசத்தையொட்டி, முருகப் பெருமானுக்குப் பூஜை - அரங்கத்திலேயே ஒரு குட்டி மண்டபம் அமைத்து நடத்தினோம். 6.15க்குக் கச்சேரி ஆரம்பம். 6.15க்கு 'எம்.எஸ்' கச்சேரி மேடையை நோக்கிப் புறப்பட்ட போது ஒருபெரும் புள்ளி (தமிழர்) அவரை அணுகி, "அம்மா, ஒரு நிமிஷம். என் குடும்பத்தினர் வந்து கொண்டிருக்கிறார்கள். உங்களைச் சந்தித்துப் பேச வேண்டும்' என்றார். புன்னகை பூத்தவாறு, "என்னை க்ஷமிக்கணும். டைமுக்குக் கச்சேரி ஆரம்பிக்க வேண்டும். அப்புறமாக அவர்களைப் பார்க்கலாம்" என்று எம்.எஸ். கூறிவிட்டு, மேடையில் உட்கார்ந்தார். மாலை அணிவித்த பிறகு கச்சேரி 6.15க்குத் தொடங்கியது.

வராளியில் சிவனின் 'காவாவா' காம்போஜியில் தீக்ஷிதரின் 'ஸ்ரீசுப்ரமண்யாய நமஸ்தே' இரண்டுமே தைப்பூச விசேஷ அயிட்டங்களாக விளங்க கச்சேரி பிரம்மாண்டமாக அமைந்தது. மூன்றரை மணி நேரக் கச்சேரியில் கடைசி முக்கால் மணி நேரம் மட்டும் பல மொழிப் பாடல்கள் இடம் பெற்றன. ராஜாஜியின் 'குறையொன்றுமில்லை' என்ற பாடலும் உண்டு.

வானொலி இயக்குநர் ஸ்ரீநிவாஸனின் கண்கள் பனித்தன. "ரொம்ப நாள் கழித்து எம்.எஸ்.ஸின் கச்சேரியைக் கேட்க முடிந்ததப்பா. சமீப காலத்தில் அவர் பக்திக்கு அதிக இடமளித்து, இசைக்கு இரண்டாம் இடம்தான் தருகிறார். ஆனால் இன்று..." என்று வார்த்தைகள் வராமல் தவித்தார்.

அன்று இரவு விஜயவாடாவில் இணைக்கப்படவிருந்த 'ரிசர்வ் செய்த' முதல் வகுப்புப் பெட்டியில் 'எம்.எஸ்' கோஷ்டியினர் உட்கார்ந்து என் குடும்பத்தினரோடு அளவளாவிக் கொண்டிருந்தனர். சென்னையிலிருந்து கச்சேரிக்காகவே வந்திருந்த என் மகனும், மருமகளும்கூட அதே பெட்டியில் இருந்தனர். சென்னை திரும்ப ஹைதராபாத்திலிருந்து வரவேண்டிய 'எக்ஸ்பிரஸ்' வண்டி ஒரு மணி தாமதமாக வந்து கொண்டிருந்தது.

"இரண்டு நாள்களும் எங்களுக்காக ரொம்ப சிரமப்பட்டிருக்கிறீர்கள். போய் ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள்" என்று 'எம்.எஸ்' என் மனைவியிடமும் மகளிடமும் மீண்டும் மீண்டும் சொல்லிக் கொண்டிருந்தார். இடையில் சதாசிவம், "என்ன, பிள்ளைக்கும் மாட்டுப் பெண்ணுக்கும் ஏதோ ஸ்பெஷலா டப்பாவில் கொண்டு வந்திருக்கிறீர்களோ" என்று கேட்க, "ஒன்றுமில்லை, கொஞ்சம் நொறுக்குத் தீனி. மிக்ஸர்!" என்று என் மனைவி சொல்ல, "ரயில் புறப்படும் வரை ஏதாவது செய்ய வேண்டுமே. டப்பாவை இப்படித் தாருங்கள்" என்று வாங்கி, அதன் மூடியிலேயே கொஞ்சம் மிக்ஸரைப் போட்டுக் கொண்டு, கொறிக்கலானார்! அத்தனை அந்நியோன்னியம். எல்லாம் ஒரே 'மோக்ளா' தான் - கல்கி பாஷை

யில். அத்தனை நெருக்கத்தில் சன்மான விஷயத்தை எல்லோருமே மறந்து விட்டோம். (ஒரு வாரம் சென்று, சென்னைக்குப் போய் ஏதோ பெயருக்குச் 'சன்மானம்' என்று தர, 'ஆத்மா' ரசீதும் கொடுத்தார் என்பது வேறு விஷயம்).

★ ★ ★

செம்மங்குடிக்கு அப்போது வயது 74. ஆகவே அவருடைய கச்சேரியை ஏற்பாடு செய்வது சிரமமாக இருந்தது. "இங்கே (ராயப்பேட்டையிலேர்ந்து மாம்பலம் போய்ப் பாடிட்டு வர்றதே சிரமமாயிருக்கு. அத்தனை தூரம் விஜயவாடா வந்து பாடமுடியுமான்னுதான் யோசிக்கிறேன்" என்று என்னிடம் சொன்னார்.

"நீங்கள் விஜயவாடா வந்து ஒரு வாரம் ஓய்வெடுங்கள். அப்புறம் பாடலாம். சபா அரங்கு என் வீட்டுக்கு அருகில்தான் இருக்கிறது" என்றேன்.

"பார்க்கலாம்" என்று கூறிச் சிரித்தார். ஆயினும் என் மகன் அவரை அடிக்கடி போய்ப் பார்த்து வந்தான். தவிர டி. சதாசிவம், லால்குடி ஜெயராமன், காரைக்குடி மணி ஆகியோரும் வற்புறுத்தவே கச்சேரிக்கு ஒப்புக் கொண்டார். 'ஆகஸ்ட் 14' என்று 'தாற்காலிகமாக' ஒரு தேதியும் கொடுத்தார். ஆனால் 'சன்மானம்' பற்றி ஒரு வார்த்தை பேசவில்லை!

"செம்மங்குடி பண விஷயத்தில் ரொம்ப கறார். முன்கூட்டியே நிச்சயம் செய்து கொண்டு விடுங்கள். பிற்பாடு தகராறு வரக்கூடாது" என்று சிலர் பயமுறுத்தினார்கள். "செம்மங்குடி கடைசி நிமிஷத்தில் ஏமாற்றி விடுவார். ஆகவே 'ஸ்டெப்னி'யாக வேறொரு கலைஞரைத் தயார்ப் படுத்தி விடுங்கள்" என்று மற்றொரு கலைஞரே திகில் மூட்டியிருந்தார். "செம்மங்குடியா? சாப்பாடு விஷயத்தில் அவர் ஏக கெடுபிடி. மடி, ஆசாரம் எல்லாம் பார்ப்பவர். அவருக்கு உபசாரம் செய்து மீள முடியாதே" என்று வேறொரு சபா நாயகர் கவலையை உண்டாக்கினார். கடைசி விஷயத்தில் என் மனைவியும் மகனும் எனக்குத் தைரியம் கூறினார்கள் - அவரை நன்கு கவனித்துக் கொள்ளுகிறோம் என்றார்கள்.

14-8-82 அன்று நல்லபடியாக விடிந்தது. காலை 'ஹெளரா மெயி'லில் செம்மங்குடி மாமா வந்து இறங்கினார். கூடப்பாட வி. சுப்ரமண்யம், கடையநல்லூர் வெங்கட்ராமன், வயலின் வித்வான் லால்குடி, மிருதங்க வித்வான் காரைக்குடி மணி.

15-8-82 அன்று நடக்கவிருந்த கச்சேரியை நடத்த லால்குடி



ஜி.ஜே.ஆர். கிருஷ்ணன் - விஜி - அகிலா கிருஷ்ணன் (வயலின் ட்ரியோ), ஆர். ரமேஷ் (மிருதங்கம்) தவிர லால்குடியின் மனைவி, அகிலாவின் பெற்றோர், என் மகன், மருமகள்... என எல்லோரும் வந்திறங்கினர். ப்ளாட்ஃபாரத்திலிருந்து நாங்கள் புறப்பட்டபோது ரயிலில் ஏற அவசர அவசரமாக வந்த ஒரு பிரயாணி தன் பெட்டியை என் காலில் பலமாக மோத, முட்டியில் படு காயம், ரத்தக் களறி. பார்த்த செம்மங்குடி, "என்ன, களபலியா?" என்று விசாரித்தார். "இல்லை, கால் பலி!" என்று நான் சொல்ல வலியோடு சிரிப்பு. வீட்டினை அடைந்த பிறகு, "என்ன, ஒரு இரண்டு மணிநேரம் பாடினால் போதுமா?" என்று செம்மங்குடி கேட்டபோது, "யதா சௌகர்யம். நீங்கள் கானப்ரியா மேடையேறினாலே திருப்தி" என்றேன்.

அன்று மாலை 6 மணியளவில் கச்சேரி அரங்கம் நிரம்பி வழிந்தது. மேடைக்கு வந்து கூட்டத்தைப் பார்த்த சங்கீத கலாநிதி, "என்னை அருகில் அழைத்து காதோடு காதாக, "நீங்கள் ஏதோ சேம்பர் ம்யூசிக்குக்கு அழைக்கிறேன்னு நெனச்சிண்டு வந்தேன். இப்படி பிரம்மாண்டமா கூட்டம் சேர்ப்பேள்னு எதிர்பார்க்கலை, ரெண்டு மணி அவகாசம் பாடினா இவா ஒத்துப்பாளா?" என்றார்.

ஆக, கச்சேரி முடிந்தபோது இரவு மணி 9.45. மூன்றேகால் மணி நேரம் இசைப் பிரவாகம்தான். கச்சேரி நடக்க ஒரு வாரம் இருந்தபோது அவருக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தேன். அவருடைய 'மாஸ்டர் பீஸ்'கள் என்று சொல்லத்தக்க ஒரு டஜன் கீர்த்தனைகளைக் குறிப்பிட்டு, "இவற்றில் ஓரிரண்டினைப் பாடினால் மகிழ்வேன்" என்று கோரியிருந்தேன். அந்தப் பொல்லாத 'சங்கீத பிதாமகர்' நான் கேட்டிருந்த அத்தனை பாடல்களையுமே விஸ்தாரமாகப் பாடி விட்டார்.

இரவு வெகு நேரம் அவர் வி. சுப்ரமணியத்துடன் பேசிக் கொண்டிருந்ததாக அடுத்த நாள் காலை சுப்ரமணியம் சென்னார் : "மாமாவுக்குப் படு சந்தோஷம். சாப்பாடு, டிபன், காபி, உபசரணை எல்லாமே ரொம்ப திருப்தி. எல்லாவற்றையும் விட, இப்படிப்பட்ட பரம ரசிக ஜனங்களை எப்படி இவர் சேர்த்து வச்சிருக்கார் என்று பாராட்டிக் கொண்டேயிருந்தார்".

"சன்மானம்..." என்று நான் ஆரம்பிக்க, "கவலையை விடுங்கள். உங்களால் முடிந்ததைக் கொடுங்கள். போதும். சந்தோஷமாக வாங்கிப்பார்" என்றார்.

பிற்பகல் போஜனத்துக்குப் பிறகு, ஒரு தட்டில் வெற்றிலைப் பாக்குடன் ஒரு கவரில் சில நூறு ரூபாய் நோட்டுகளை வைத்து அவரிடம் நிட்டினேன் - "பொன் வைக்க வேண்டிய இடத்தில் பூ வைத்திருக்கிறேன்" என்று கூறியபடி.

அவர் சொன்ன பதில் என்னைத் தூக்கி வாரிப்போட்டது : "நான் கேட்டேனா சன்மானம்? உங்கள் பிள்ளை எத்தனையோத் தடவை என்னைத் துளைத்தெடுத்தாரே, நான் வாயைத் திறந்தேனா, கேளுங்கள்" என்று தட்டை வாங்க மறுத்தார்.

"நீங்கள் கேட்காவிட்டாலும் என் கடமை.." என்று ஆரம்பித்தேன்".

"உங்கள் மாதிரி இந்தக் கடமையை யார் செய்யப் போறா? சங்கீத சேவைக்குன்னு ஒரு குடும்பத்துலே அத்தனை பேரும் இப்படி உழைக்கிறதைப் பார்த்து எத்தனை சந்தோஷப்பட்டுண்டிருக்கேன் தெரியுமா? என் சந்தோஷத்தைக் கெடுக்காதீர்கள்" என்று சொன்னபோது அவருடைய இன்னொரு கச்சேரியைக் கேட்டது போலிருந்தது.

"நீங்க எல்லாரும் தீர்க்காயுசா இப்படியே சங்கீதத்துக்குச் சேவை செய்துண்டிருக்கணும்" என்று ஆசீர்வதித்து, பிறகு லால்குடி, மணி முதலியவர்கள் சொன்னதற்காகத் தட்டை வாங்கிக் கொண்டார். ◦◦

# இலவசமாய் வந்த தொல்லை

தொல்லை சாமிக்கண்ணுவின் வடிவத்தில் தங்கவேலுவின் வீட்டு காலிங்பெல்லை அழுத்தியது.

கண்ணாடி பீரோவுக்குள் அடுக்கி வைக்கப்பட்டிருந்த புத்தகங்களை ஒழுங்கு செய்துக் கொண்டிருந்தான் தங்கவேலு. புத்தகங்கள் என்றால் தங்கவேலுவுக்கு உயிர். புத்தகங்கள் என்றுகூட இல்லை. அச்சிடப்பட்ட எதுவும். மனம் சற்றே சோர்ந்தால் அதிலிருந்து மீள அவன் கையாண்ட வழி புத்தக பீரோவுக்குள் பயணம் செய்வது. உற்சாகமாக இருந்தாலும் அவன் மனம் புத்தக பீரோவைத்தான் நாடும். மகா லோபி உண்டியலைத் திறந்து ரூபாயை எண்ணுவது போல ஆசையும் அன்பும் கண்களில் மின்ன, புத்தக அடுக்குகளில் கண்கள் மேவும் போது மனம் பளிச்சென்று சிமிட்டி எடுக்கச் சொல்லும் புத்தகத்தைத் தொடும்போதும், புத்தகங்களின் பக்கங்களில் கை விரல்கள் புரளும் போதும், அதன் பிரத்யேக மணம் மெல்லப் பரவும்போது அதன் நுகர்ச்சியிலும் மனம் கொள்ளும் பரவசத்தில் திளைக்கும் பித்தன் அவன்.

புத்தகங்களுடனான உறவைத் துண்டித்த காலிங்பெல் சத்தம் அவனுக்கு எரிச்சலூட்டியது. சமையல் கட்டில் இருந்த மனைவி வந்து கதவைத் திறக்கட்டும் என்று எண்ணியவனாகப் புத்தகங்களைப் புரட்டிய படியே நின்றான். மனைவி வெளியே வருவதாக இல்லை. காலிங்பெல் மீண்டும் ஒலித்தது.

தரையில் பரப்பி வைத்திருந்த புத்தகக் குவியலில் கால் படாமல் நடந்துபோய்க் கதவைத் திறந்தான். சாமிக்கண்ணு, மூக்குக் கண்ணாடியை ஜிப்பா நுனியால் துடைத்துக் கொண்டிருந்தார். மெலிந்த உருவத்தில் படர்ந்திருந்த சோகை அவருடைய உயரத்தை அதிகரித்துக் காட்டியது. தென்னிந்திய ரயில்வேயில் ஏதோ வேலை. இந்த விஷயம் சாமிக்கண்ணுவுக்கு மிக நெருக்கமான சிலருக்கு மட்டுமே தெரியும். ஏன் சாமிக்கண்ணுவுக்கே சம்பள நாள்களில் மட்டும்தான் ஞாபகம் வரும். மற்ற நாள்களில்...? இலக்கிய விசாரம், எழுத்து, பட்டி மன்றம், பத்திரிகைப் பேட்டிகள், டி.வி. ஸ்பான்சர்ட் நிகழ்ச்சித் தயாரிப்பு என்று எத்தனையோ வேலைகள். அத்தனை படைப்புகளிலும் தவறாமல் மனிதாபிமானத்தையும், சமூகப் பிரக்ஞையையும், கடமை உணர்வையும் வற்புறுத்துவது அவர் வழக்கம். என்றாலும் இன்றைய தேதியில் தமிழ்நாட்டில் நாலு பேருக்குத் தெரிந்த நபராக அவரை ஆக்கியிருந்தது இதுவல்ல. தடாலடியாக எடுத்தேன் கவிழ்த்தேன் என்று நெத்தியடியாக அவர் அவ்வப்போது தெரிவிக்கிற அபிப்பிராயங்கள்.

இப்போதும் அதே தோரணையில் ஆரம்பித்தார். "ம்... பணத்தைப் பாழ் பண்ணியிருக்கீரே அய்யா... என்னத்துக்கு இந்தக் கண்றாவியை எல்லாம் சேர்த்து வச்சிருக்கீர்..." தமிழகத்தின் தலைசிறந்த எழுத்தாளர் என்று கொண்டாடப்படுகிற பெரியவரின் அத்தனை புத்தகங்களின் மீதும் அருவருப்பான பார்வையைப் படரவிட்ட படி, "அத்தினியும் ட்ராஷ்" என்றார். தங்கவேலு, இதை எதிர்பார்த்தவன் போல மென்முறுவல் சிதையாமல் புத்தகங்களை எடுத்து பீரோவுக்குள் அடுக்கியவாறிருந்தான்.

"இதென்ன... க.பா. எழுதியதெல்லாம் ஒண்ணுவிடாமல் வாங்கி வச்சிட்டிராக்கும். பேஷ்! படிக்கறதுன்னாலும் நல்லதைப் படிக்க வேணாமா? நட் ஹாம்சன் வச்சிருக்கீரா? சிங்கர் படிச்சிருக்கீரா..." சாமிக்கண்ணு, தங்கவேலுவுக்கு உதவியாகத் தாமும் ஒரு கட்டு புத்தகங்களை எடுத்து பீரோவுக்குள் வைக்கப் போனார்.

"சார்... சார்..." என்று அவரைத் தடுத்தான் தங்கவேலு. "அதெல்லாம் சொந்தப் புத்தகமில்லை சார். இரவல் புத்தகம். இந்தப் பக்கம் அடுக்கிலே தனியா வக்கணும்".

"இரவல் புத்தகமா? பேஷ்! அப்படிப் போடு!" சாமிக்கண்ணு சிரித்தார். "உம்மைப் போலப் புத்தகம் சேகரிக்கிற பேர்வழிங்க ரொம்பப் பேர் இப்படித்தான். இரவல் புத்தகங்களைத்தான் சேர்த்து வைப்பாங்க...."

தங்கவேலுவுக்கு சிவுக்கென்று ரோஷம் பொத்துக் கொண்டு வந்தது. "இங்க பாருங்க சார். எல்லாரையும் போலத்தான் நானும்னு நெனச்சிருக்காதீங்க. அப்படி ஆயிடக்கூடாது, எம் புத்தகத்தோட கலந்துடக் கூடாதுன்னுதான் இரவல் புத்தகங்களை தனி அடுக்கிலே அடையாளமா வச்சிட்டிருந்து பத்திரமாத் திருப்பிக் குடுக்கறது என் வழக்கம். தெரிஞ்சுக்குங்க... அதே மாதிரிதான் எங்கிட்டேயிருந்து புத்தகம் போனாலும் டைரியிலே எழுதி வச்சிருந்து ஞாபகமா திருப்பி வாங்கிருவேன்..."

திருமதி தங்கவேலு காப்பித் தம்ளரை சாமிக்கண்ணுவின் எதிரில் வைத்துப் போனாள்.

சாமிக்கண்ணு மறுபடியும் சிரித்தார். கேலியா, பாராட்டா, அவநம்பிக்கையா, நேரப்போக்கா என்று தெரிந்து கொள்ள முடியாத, ஒரு கலவைச் சிரிப்பு. "நம்பகிட்ட இந்த வேலையே கெடையாது. படிச்சமா போட்டமான்னு புத்தகங்க தானா கெடக்கும். யாராவது எடுத்துக்கிட்டுப் போனாலும் கேக்க மாட்டேன். வாங்கிட்டு வந்தாலும் திருப்பித் தரணுமேன்னு ஞாபகம் இருக்காது".

சாமிக்கண்ணு காப்பியை சுவைத்துக் குடிக்கலானார். கொள்ளைக்காரனின் பிடியில் அகப்பட்டுக் கொண்ட கல்யாணக் கோஷ்டியின் நிலைமையில் இருந்தது தங்கவேலுவின் மனம். புத்தகங்களை இரவல் வாங்கிக் கொண்டு போனால் திருப்பித் தர மாட்டாராமே... எமகாதகன்... இப்பேர்ப்பட்ட ஆசாமி வரும்போதுதானா வீடெல்லாம் புத்தகத்தை வாரியிறைத்து வைத்திருக்க வேண்டும்? இதிலிருந்து நாலு புத்தகத்தை மனுஷன் கேட்டுத் தொலைத்தால் என்ன பண்ணுவது? வாங்கிய புத்தகத்தைத் திருப்பித்தரும் வழக்கமில்லாத உமக்குப் புத்தகத்தை இரவல் தர என்னால் முடியாதென்று தாட்சண்யமில்லாமல் தெளிவாகச் சொல்லிவிட வேண்டியதுதான்.

சாமிக்கண்ணு, புத்தகங்களை மேலோட்டமாகப் பார்த்து ரத்னச் சுருக்கமாக அபிப்பிராயங்களைச் சொல்லிக் கொண்டிருந்தார். "தாகூர் போல இருக்குது. ஒண்ணு ரண்டு சிறுகதை நல்லா எழுதியிருப்பான்... இது என்னா? குஷ்வந்த் சிங்கா... இவனையெல்லாம் சுண்ணாம்புக் காளவாயிலே போடணுமய்யா... இது

திலகவதி

என்ன... டால்ஸ்டாய்... அவன் பரவா யில்ல சுமாரா எழுதியிருப்பான்..." என்றவர், சட்டென்று எதையோ நினைத்துக் கொண்டவராக... "ஆமா... கண்டதையும் படிக்கிறீரே... குருப் போட 'சுந்தரிகளும் சுந்தரன்மாரும்' படிச்சிருக்கீரா... அதைப் படியுமே... பொதுவாகவே என்.பி.டி. புத்தகம் லாம் சுமாரா இருக்கும்... எதைப் படிச்சாலும் படிக்காட்டியும், தாராசங்கர் பந்தோபாத்யாவோட, "ஆரோக்கிய நிகேதனத்தை" அவசியம் படியும். அற்புதமா எழுதியிருக்கான். என்கிட்டே கெடக்கு. நாளைக்கு நாளன்னிக்கு இந்தப் பக்கம் வர்றப்ப கொண்டாந்து போட்டுட்டுப் போறேன்".

தங்கவேலு, பீரோவைப் பூட்டி விட்டு இடுப்பைப் பிடித்துக் கொண்டு நிமிர்ந்தான்.

"இப்பத்திக்கு வேணாம் சார். நெதானமா பாத்துக்கலாம்". நீங்க தாம் பார்த்தீங்களே. திருப்பித்தர வேண்டிய புத்தகங்க நெறைய இருக்குது. மொதல்ல அதையெல் லாம் படிக்கணும்..."

சாமிக்கண்ணு சிரித்தார். "அட... அதுபாட்டுக்கு கெடந்துட்டுப் போவுது. சௌகர்யப் படறப்ப படிக்கறது..."

அந்த வாரத்திலேயே ஒருநாள் அவன் ஆபிசிலிருந்து வருவதற்குள் 'ஆரோக்கிய நிகேதனம்' வந்து டேபிள் மேல் உட்கார்ந்திருந்தது. வெளிர் பச்சைநிற அட்டையின் நடுவே கறுப்பு வண்ண இலைகள் இறைந்து கிடக்க கிளிக்குச்சியாக ஒரு மரம்; அதனருகே பனிவண்ணமாக இன்னொரு மரமு மாக புத்தகம் பார்க்கவே அழகாக இருந்தது. அலுவலகக் களைப்பே பறந்து போய்விட்டது போல இருந் தது. தங்கவேலு, பின்னட்டையில் இருந்த கதைக் குறிப்பை ஆர்வமாகப் படித்தான். நல்ல புத்தகமாய்த் தானிருக்க வேண்டும். எப்படியும் இந்த வாரத்தில் படித்துவிட வேண் டும் என்று தீர்மானித்துக் கொண் டான். தீர்மானித்தபடியேவா எல் லாம் நடந்து விடுகிறது?

"நீங்கதான் இப்பத்திக்கு படிக்க நாப்ல இல்லேன்னீங்களே. உங்க சிநேகிதர் ராம்பாபு கேட்டார். நான்தான் எடுத்துட்டுப் போங்க. உடனடியா படிக்கறதுக்கு அவர் கிட்டே இரவல் புத்தகங்க நெறைய இருக்கு. நீங்க படிச்சட்டுக் குடுங் கன்னு சொன்னேன்... தப் பில்லையே..." என்றாள் மனைவி.

தப்பு என்று அப்போது உறைக்க வில்லை. சில மாதங்களுக்குப் பின்னால் தற்செயலாகப் பெரியவர் சுப்பையா பேசியதைக் கேட்டபோது உறைத்தது. "என்ன தங்கவேலு... இரவல் புத்தகத்தைத் திருப்பித் தராத களவான்களின் பட்டியலில் நீங்களும் சேர்ந்துட்டீங்க போல இருக்குதே..."

சாமிக்கண்ணு, சுப்பையா வீட் டுக்குப் போனாராம். சுப்பையா வைத்திருந்த புத்தகங்களைக் கேட்டா ராம். அவை தங்கவேலுவின் புத்த கங்கள். புத்தகங்களைக் கணக்காக வாங்கிக் கணக்காகத் திருப்பித் தரு கிற அவனுக்குத் தாமும் அவ்வாறே குறித்த காலக்கெடுவுக்குள் தருவது தான் முறையென்பதால் சாமிக் கண்ணுவுக்குத் தருவதற்கில்லை என்றாராம். உடனே சாமிக்கண்ணு தமது ஸ்பெஷல் பிராண்ட் சிரிப்பை உதிர்த்தபடி ஆரோக்கிய நிகே தனத்தை தங்கவேலு எப்படி அபேஸ் செய்து விட்டார் என்பதை சொல்லி விட்டுப் போனாராம்.

கேட்கக் கேட்க தங்கவேலுவின் ரத்தம் கொதித்தது. என்னவானாலும் சரி முதலில் அந்தப் புத்தகத்தைத் தேடிப் பிடித்துக் கொண்டு போய் சாமிக்கண்ணுவிடம் ஒப்படைத்து விட்டுத்தான் மறுவேலை பார்ப்ப தென்று வீரசபதம் செய்து கொண்டு கிளம்பினான்.

"உன் வீட்டம்மாதான் நீ ஒண்ணும் அதைப் படிக்கிற வழியாயில்லன் னுச்சி. சாமிக்கண்ணு புத்தகம்தானே. அவர்தான் கொடுத்த புத்தகத்தைத் திருப்பிக் கேக்க மாட்டாராமே. நிதானமா படிச்சாப் போச்சுன்னு வச்சிருந்தேன். சூர்யா வந்து லாவிட் டான்" ராம்பாபு நெட்டிமுறித்து நெளிந்தான்.

ஒரு வழியாக, திருவல்லிக்கேணி சந்துகளில் திரிந்து ஒண்டுக் குடித்தன' வாசியான சூர்யாவைக் கண்டு பிடித்ததும், "என்னது? ஆரோக்கிய நிகேதனமா... ஏதோ பத்தொன்பதாம் நூற்றாண்டு வைத்திய தீபிகை மாதிரியில்ல இருக்குது? அதை நான் எடுத்துக்கிட்டு வந்தேன்னா பாபு சொல்றான்... ம்..." நெற்றியைத் தட்டிவிட்டுக் கொண்டான். "வெறுங் கையை வீசிகிட்டு நடக்க ஒரு மாதிரியா இருக்குதேன்னு எதையாவது எடுத்து கிட்டு வந்திருப்பேன். எங்கியாவது கெடக்கும்... பார்த்துத் தர்ரேனே..." என்றான் ஒரு நாள். "நீ சொல்ற மாதிரி புத்தகம் எதையும் எடுத்தாந் தாப்பல ஞாபகமே இல்லியேப்பா" என்றான் இன்னொரு நாள். "ராம் பாபு மறுபடியும் இங்க வந்து எடுத்து கிட்டுப் போய்ட்டான்னு நெனைக் கிறேன்" என்றான் மற்றுமொரு நாள்.

"அப்படியா சொல்றான்? அவனைக் கொன்னுடறேன் பாரு" என்றான் ராம்பாபு.

இனிமேல் ராம்பாபுவையும் சூர்யா வையும் பிடித்துக் கொண்டு அலை வதில் உபயோகம் இருக்கப் போவ தில்லை என்று தங்கவேலுவுக்குப் பட்டது. மனசு குறுகுறுத்தது. சாமிக் கண்ணு எங்காவது கண்ணில் பட்டு விடுவாரோ என்று நெஞ்சு பதுங் கியது.

"என்னங்க நீங்க... ஒரு பதி னாலரை ரூபாய் புத்தகம் காணாமப் போயிட்டதுக்கு இப்படிப் புலம்பிக் கொட்டறீங்க... ஒண்ணு சொன்னா கோவிச்சுக்க மாட்டீங்களே. எங்க மாமா பிள்ளை மகா லைப்ராரியிலே தானே வேல பாக்குது. அதுகிட்ட கேட்டுப் பாருங்க. அங்கேன்னா பணத்தைக் கட்டிட்டுப் புத்தகத்தை நாம்பளே வச்சுக்கலாம்" என்றாள் தங்கவேலுவின் மனைவி.

மகா என்கிற மகாதேவனின் பெயரைக் கேட்டதும் பல்வேறு காரணங்களால் எரிச்சல் மண்டிக் கொண்டு வந்தது தங்கவேலுவுக்கு. "ஆமா உங்க மாமா பிள்ளை மகாதான் தமிழ்நாட்ல இருக்கிற லைப்ராரிங்களுக் கெல்லாம் தலைவரு. அவரு கிட்ட போய் நான் கையைக் கட்டிகிட்டு கெஞ்சறேன்".

"அவரு ஒண்ணும் தலைவருன்னு நான் சொல்ல வரலை. சாதாரண கிளார்க்குதான், இல்லேங்கல. தலைவ ருங்கெல்லாம்' இன்னிக்கு வருவாங்க நாளைக்குப் போவாங்க. மகா வந்து இருபத்தி ரண்டு வருஷமா அங்கியே இருக்குது. எத்தினி தடவை இன்ஸ் பெக்ஷன், கேம்ப்னு போயி தமிழ் நாட்டுல இருக்கிற மூலை முடுக்குல இருக்கிற லைப்ராரியெல்லாம் அலசி யிருக்குது. இந்தப் புத்தகம் பேரைச் சொன்னதும் டக்குன்னு எடுத்துக் குடுத்தாலும் குடுக்கும். என்னமோ ஓயாத கவலைப்படறீங்களேன்னு சொன்னேன். கேட்டாக் கேளுங்க விட்டா விடுங்க..."

மனசைத் தட்டிக் கொடுத்துத் தாஜா பண்ணி ஒரு மாதிரி சமா தானம் செய்து கொண்டு தங்கவேலு ஸ்வீட், பூ, பழம், பிஸ்கெட் இத்யாதி களுடன் மகாதேவன் வீட்டுக்கு விஜயம் செய்தான். சும்மா சொல்லக் கூடாது மகாதேவனும் வஞ்சனையில்லாமல் புத்தகத்தைத் தேடிக் களைத்தான். சில இடங்களில் காணவில்லை. சில இடங்களில் கண்டெம் பண்ணியிருந் தார்கள். நாள்கள் நகர்ந்து கொண் டிருந்தன.

"எங்க லைப்ராரி ரெகார்டுங்களிலே பார்த்தா இந்தப் புத்தகத்தை சாகித் திய அகாடமிதான் வெளியிட்டிருக் குது. அவங்ககிட்ட கிடைக்கலாம். குறைந்தபட்சம் லைப்ராரி காப்பின்னு ஒண்ணாவது வச்சிருப்பாங்க. அங்க முயற்சி பண்ணிப் பாருங்களேன்...



நான் அதுக்குள்ள ஏதாவது தனியார் லைப்ரரி, காலேஜ் லைப்ரரி, ஸ்கூல் லைப்ரரியில கெடைக்குமான்னு பார்க்கறேன்".

தங்கவேலு திகைத்துப் போனான். சாகித்ய அகாடமியா? அது டில்லியில் அல்லவா இருக்கிறது? அங்கே அவனுக்கு யாரையும் தெரியாதே.

"அடடா... நீங்க என்ன தம்பி? இதுக்காக உங்களை டில்லிக்கா போகச் சொல்வேன்? இங்க எல்டாம்ஸ் ரோடிலேயே ஒரு கிளை இருக்கு... அங்க போய் வெசாரிங்க..."

விசாரித்தான். ரீஜினல் டைரக்டர் கிருஷ்ணமூர்த்தி நல்ல மனிதர். எள் என்றால் எண்ணெயாக நின்றார். "தாராசங்கரோட 'கணதேவதா', 'கவி' எல்லாம் இருக்குது. எடுத்துக்குங்களேன்" என்றார். பிறகு கம்ப்யூட்டர் மூலம் என்னன்னவோ செய்து குறிப்பிட்ட புத்தகம் அவர்களுடைய எந்தக் கிளையிலும் இல்லையென்று தகவல் சொல்லி விட்டார்கள். மறுபிரசுரம் செய்ய எண்ணம் இருக்கிறதாம். இரண்டொரு வருடங்களில் புதிய பதிப்பு வெளி வரலாம் என்றார்கள்.

தங்கவேலு சோர்ந்து போனான். "இந்தப் புத்தகத்தை நுங்கம்பாக்கம் ஜயம் கம்பெனிதான் பப்ளிஷ் பண்ணியிருக்காங்க. கோடம்பாக்கம் ஸ்ரீ.பி. எல்.எஸ். பிரஸ்லதான் புத்தகம் அச்சாகி இருக்கு. ஒருவேளை அவங்ககிட்ட உபரிப் பிரதிகள் இருக்க வாய்ப்புண்டு. என்ன சங்கடம்னா எழுபத்திரண்டுலே புத்தகம் வந்திருக்கு. இருபது வருஷத்துக்கு மேலே ஆச்சே..."

களைத்துப் போன தங்கவேலுவின் மனம் இந்த முயற்சியைக் கைவிடும் படி கேட்டுக் கொண்டது. அதன் இறைஞ்சுதலுக்கு தங்கவேலுவும் செவிசாய்த்தான். இனி புத்தகங்கள் இரவல் பெறும்போது அதிக கவனம் எடுத்துக் கொள்ள வேண்டுமென்றும் சபலம் கொள்ளக் கூடாதென்றும் பதிலுக்கு நிபந்தனை விதித்தான். கொஞ்சம் ஆறுதலாக இருந்தது. இந்த ஒரு பழி இருந்துவிட்டுப் போகட்டும்; வேறென்ன செய்வது என்று ஆசுவாசப்படுத்திக் கொண்டான். இந்த அமைதி கொஞ்ச நேரம்தான் நீடித்தது. பெரியவர் சுப்பையாவிடம் சொன்னதைப் போல் இன்னும் எத்தனை பேரிடம் சாமிக்கண்ணு சொல்லியிருப்பாரோ. சொல்லிக் கொண்டு திரிகிறாரோ என்று தோன்றியபோது சமாதானம் குலைந்து போயிற்று. எதற்கும் அந்த அச்சகத்தில் ஒருமுறை கேட்டுவிடலாம் என்று

## காலம் தீட்டும் பரமன் பவனம்

டாக்டர் கிருஷ்ணா ஸ்ரீநிவாஸ்

மானிடப் பிறவி நாடகத் தோற்றம்,
கண்ணீர் பொழியும் காவிய கீதம்,
முடிவே காணா ஓயாப் பயணம்.

அங்கே, காலை மலர்வது இல்லை.
அங்கே, மாலை மடிவது இல்லை.
இருளின் பரப்பில் துடிக்கும் உணர்வு,
தாவிடும் தூசியின் கவ்விடும் பாய்ச்சல்.

உள்ளம் புகுந்த துன்பக் கனல்கள்
பாலை வனம்போல் கொதித்துப் பரவி
மண், விண், நீர், காற்று
தாபச் சுடர்கள், கோரக் கதிர்கள்.

அகிலம் அகண்ட அக்கினிக் குண்டம்
புரளும் சடைமேல் கிழிந்த உடல்கள்;
கோபம் தாபம் சீறிப் பொங்கி
வானம் எங்கும் வெண்ணிலா வீசி
ஒளிகள் மருண்டு சுடராய்ச் சிதறின...

நெடுநாள் குவிந்த சக்திகள் மலரத்
துக்கச் சாயல் அறவே மறைய,
பாறைகள் அகண்டு,
மக்கள் திரண்டு,
முடிவிலா இன்பம் தூசியின் பிடியில்
ஆட்சி புரியும்; நீளும் நரகம்
வீடு, வாசல், குறுகிய வீதிகள் காரிருள் பூண்டு

விழிகள் பிதுங்கி, உதடுகள் உலர்ந்து,
காலைப் பொழுதில் புள்ளினம் ஆர்ப்பக்
கதிரவன் முன்னே சோர்வுகள் அகலக்
கொடுமைப் பசியும் தீப்பொறி எழுப்பி
உருகும் அலையில் மருண்டு மடிந்து
தாபம் இழக்க,
விடுதலை மீட்க -
கடலுடன் கலக்கும் மலையின் கொடுமுடி!

பாரிஸ்!
லண்டன்!
டோக்கியோ எல்லாம்
அழிக்கக் கொதித்திடும் கோரக் கனல்கள்
அமைதி இழந்து நேர்மை அகன்றே
உலகை எரிக்க ஓங்கிடும் தீச்சினம்
என்றோ ஒருநாள் மடிந்தே தீரும்.
வீங்கும் பேரொலி பாச உலகை
அடித்து, உடைத்து, விடுதலை நாட்டும்.

மனிதன் மனிதனாய் மாறி
மங்கை மங்கையாய் ஆகி
அமைதி நிலவும் அவனி எங்கும்!
தூசியின் அழிவில்
சுவர்க்கம் துளிர்க்கும்!
மனிதன் மங்கை எழுப்பிய உலகம்
காலம் தீட்டும் பரமன் பவனம்!

எண்ணி அச்சகத்தைத் தேடிப் போனான்.

கோடம்பாக்கத்தில் பி.எல்.எஸ். பிரஸ் இருபது வருடங்களுக்கு முன்பு இருந்த இடத்தில் இப்போது சினிமாத் தேவைகளுக்கான விக் தயாரிப்பது நடந்து கொண்டிருந்தது. ஜயம் கம்பெனி இருந்த ஜோசியர் தெரு வீட்டில் வற்றல் தொத்தலாய் ஒரு டாக்டரம்மா குழந்தை வைத்தியம் பார்த்துக் கொண்டிருந்தார். துப்பறிந்து இதைக் கண்டுபிடிப்பதற்குள் தங்கவேலு களைத்தே போனான்.

டாக்டரம்மா சொன்ன விலாசத்தைத் தேடி அண்ணாநகரில் அலைந்து ஒரு காலத்தில் ஜயம் கம்பெனியின் உரிமையாளராக இருந்த பெரியவரை தங்கவேலு சந்தித்தான்.

"ம்... ஞாபகமிருக்கு. நாங்க போட்ட புத்தகம்தான். அதுக்கப்புறம் என்னென்னவோ நடந்து. பார்ட்னர்ஷிப் உடைஞ்சி. கம்பெனி கலைஞ்சிடுச்சி. நான் என் கணக்கைத் தீர்த்துக்கிட்டு வெளியே வந்துட்டேன். ஸ்டாக்கெல்லாம் தம்பிங்க வச்சிக்கிட்டாங்க". அவர் ஆற்காடு ரோடு அம்பேத்கர் சிலைக்கு எதிரில் இருந்த சந்தில் இடது, வலது என்று பல வளைவுகள் சொல்லி ஒரு விலாசம் தந்தார்.

"ஆரோக்கிய நிகேதனமா... ரொம்ப அற்புதமான புத்தகம் சார் அது. மிண்ட் குடோனில் இரண்டொரு காப்பி இருக்கலாம். இத்தனை வருஷம் கழிச்சு இத்தனை சிரமப்பட்டு வந்து கேக்கறீங்களே. ரொம்ப சந்தோஷம். ரெண்டு நாள் டைம் குடுங்க. எடுத்தாந்துடறேன்". பொறையும் டீயும் கண்ணில் சந்தோஷமுமாக உபசாரம் நடந்தது.

சாமிக்கண்ணு கொடுத்ததைவிட புத்தம் புதியதாய் இருந்தது புத்தகம்.

"ரெண்டு காப்பியையும் நீங்களே வச்சுக்குங்க சார்". தங்கவேலு எவ்வளவு சொல்லியும் பணத்தை வாங்கிக் கொள்ள மறுத்துவிட்டார்.

வீட்டில் ஒரு பிரதியை வைத்து விட்டு தங்கவேலு படு உற்சாகமாக சாமிக்கண்ணுவைத் தேடிப் போனான்.

"எனக்கு எதுக்கய்யா இது? நான் தான் படிச்சு முடிச்ச புத்தகத்தை சேகரிச்சு வக்கறதில்லியே. நீரே வச்சுக்கும்..."

தங்கவேலுவுக்கு கண்மண் தெரியாத எரிச்சல் வந்தது. "இருக்கட்டும் சார். நான சொந்தமாகவே வேற ஒண்ணு வாங்கிட்டேன். இதை நீங்களே வச்சுக்குங்க. இல்லாட்டி யாருக்காவது குடுங்க" என்றவாறு சாமிக்கண்ணுவின் அருகே புத்தகத்தை வைத்துவிட்டு வெளியேறினான்.

மீண்டும் சில மாதங்கள் கழித்து ஞாபகம் வர படிக்கலாம் என்று புத்தக அடுக்கைத் தங்கவேலு துழாவியபோது ஆரோக்கிய நிகேதனம் மறுபடியும் காணாமல் போயிருந்தது.

# புதுவையில் வ.ரா.

"வ.ரா" என்று எல்லோராலும் அன்பாக அழைக்கப்பட்ட வ. ராமஸ்வாமி அய்யங்கார் ஓர் தேச பக்தர், தீரர், எழுத்தாளர், பாரதியாரை உலகிற்கு "மகாகவி" என்று அறிமுகப் படுத்தியவர். இவர் தஞ்சையில் 1889 இல் பிறந்தவர்.

ஜனவரி 1910இல் கல்கத்தாவிற்கு ஓடிப் போனதாக வ.ரா எழுதுகிறார். அங்கு மாயவரத்தைச் சார்ந்த வெங்கடராமனைச் சந்தித்ததாகவும், பல அரசியல் விஷயங்களைப் பற்றிப் பேசினதாகவும், இறுதியில் சுரேந்தர நாத் பானர்ஜியைச் சந்திக்கவேண்டும் எனவும் கூறினார். "பார்! நீ ஓர் முட்டாளாக இருக்கிறாயே! ஏன் அந்த வயோதிகரைச் சந்திக்க வேண்டும்? நீ அவசியம் யாரையாவது காண வேண்டுமென்றால், அரவிந்த கோஷைச் சந்தி" என்று வெங்கடராமன் பதிலளித்தார்.

வ.ரா முன்னமேயே அரவிந்த கோஷைப்பற்றிக் கேள்விப்பட்டிருந்தார். "மனக்டோலா" வெடிகுண்டு பற்றிய செய்தியையும் படித்திருந்தார். ஜட்ஜ் பீச் கிராப்ட் அளித்த தீர்ப்பையும், அரவிந்தர் விடுதலை அடைந்ததும் தெரியும். அரவிந்தரின் 'கர்மயோகி' பத்திரிகையைப் பற்றியும் அறிவார். இதனால் அரவிந்தரைக் காண அவா கொண்டார்.

இவ்விருவரும் அரவிந்த கோஷைத் தேடி, காலேஜ் சதுக்கத்தில் உள்ள கிருஷ்ண குமார் மித்தர் வீட்டிற்குச் சென்றனர். வீடு பூட்டியிருந்தது. சுற்றிலும் சி.ஐ.டி. போலீஸ் காவல். அரவிந்த கோஷ் கல்கத்தாவில் இல்லை என்பதைப் பின்னர் அறிந்தனர். அவர் சந்திரநாகூர் சென்று விட்டார் எனவும் கேள்விப்பட்டனர்.

சில மாதங்களுக்குப்பின், தஞ்சை வக்கீல் என்.கே. ராமஸ்வாமி அய்யர், வாய் தவறி, கொடியாலம் வி. ரங்கசாமி அய்யங்காரிடம், தற்சமயம் அரவிந்தர் புதுச்சேரியில் இருப்பதாகக் கூறிவிட்டார். உடனே, வ.ராவை அழைத்து, புதுச்சேரி சென்று, அரவிந்த கோஷ் வந்திருப்பது உண்மைதானா என்று அறிந்து வரச் சொன்னார். கொடியாலம் அய்யங்கார், 1906 முதல் தென்னிந்திய நிலச் சுவான்தார் தொகுதிக்குப் பிரதிநிதியாக டில்லி சட்டசபையில் அங்கம் வகித்தார்.

வ.ராவிற்கு மிக ஆனந்தம். ஒன்று அரவிந்த கோஷைச் சந்திப்பது, மற்றது சுப்ரமணிய பாரதியாரைப் பார்ப்பது. 1910ஆம் ஆண்டுக்கு முன்னமேயே, பாரதியாரின் சுதேச கீதங்களைப் படித்துப் பரவசமானவரில் வ.ரா. ஒருவர்.

காலையில் சுமார் ஐந்தரை மணிக்கு ரயில் வண்டி புதுச்சேரியை அடைந்தது. "புஷ்" வண்டியில் ஏறு முன், வண்டி ஆளைப் பார்த்து, "உனக்கு பாரதியார் வீடு தெரியுமா?" எனக் கேட்டார். அதற்கு அவன் "பட்டணத்து எஜமான், பாட்டு பாடுகிற எஜமான், மீசை வச்சிருக்காங்களே, அவுங்கதானே? அவங்க இருக்கிற வீடு நல்லாத் தெரியுமே" எனப் பதிலளித்தான். ஈஸ்வரன் தர்மராஜா கோயில் வீதியின் ஓர் கோடியில் இருந்த வீட்டின் எதிரே வண்டியை நிறுத்தினான். வாடகை அதிகமாகவே கொடுத்து வண்டிக்காரனை அனுப்பியபின் "ஸார்" என்று மூன்று தரம் கூப்பிட்டபின் ஓர் இள வயதுப் பையன் வந்து "யார்? என்ன வேண்டும்?" என்று கேட்டான். பதிலுக்கு 'சுப்ரமண்ய பாரதி' எனக் கூற, மேலே வரும்படி கூறிச் சென்றான்.



பாரதியைக் கண்டதுமே, சாஷ்டாங்கமாய் வ.ரா. நமஸ்காரம் செய்தார். புலி பாய்வதைப் போலப் பாய்ந்து, வ.ரா.வைத் தூக்கி நிறுத்தி, "நமஸ்காரம் வேண்டாம். நீர் யார்? வந்த கார்யத்தைச் சொல்லும்" என்றார். வ.ரா. ஆங்கிலத்தில் பதிலளித்தார். இதை பாரதியார் ரசிக்கவில்லை. "ஒரு தமிழன் மற்றொரு தமிழனோடு இன்னும் எவ்வளவு காலம் ஆங்கிலத்திலேயே பேச வேண்டும்?" என வருத்தத்துடன் கூறினார். வ.ரா.வுக்கு அழுகை வந்துவிட்டது; நேரே பதில் அளிக்க நா எழவில்லை.

பின்னர், வ.ரா. தான் வந்த காரணத்தைக் கூறினார். பிற்பகல் சுமார் நான்கு மணி அளவில், வெளியே புறப்பட்டுச் சென்றனர். மண்டயம் சீனிவாசாச்சாரியாரைச் சந்தித்தனர்; அரவிந்தரைச் சந்திக்க வ.ரா. வந்துள்ளதாகத் தெரிவித்தார்.

மூவரும் சங்கரன் செட்டியார் வீட்டை அடைந்தனர். வீட்டுத் திண்ணையில் வ.ரா.வைப் உட்கார வைத்து விட்டு அவ்விருவர்களும் உள்ளே சென்றார்கள். பாரதியார், வ.ராவை மூன்றாவது மாடிக்கு அழைத்துச் சென்றார். ஒரு மூலையில் ஒதுக்குப் புறத்தில், அரவிந்தர் தன்னந்தனியே உட்கார்ந்து கொண்டிருந்தார். அரவிந்தரை நமஸ்காரம் செய்தபின் இம் மூவரும் உட்கார்ந்தனர். வ.ரா.வை "தமிழ்நாட்டு தேச பக்தன்" என்று பாரதியார் அறிமுகம் செய்து வைத்தார்.

முதலில் வ.ரா. தூதுவராக வந்து அரவிந்தரைச் சந்தித்தபின், திருச்சி சென்று, கொடியாலம் ரங்கசாமி அய்யங்காருடன் திரும்பி வந்தார். அரவிந்தருடன் அய்யங்கார், பேசுகையில், தம் குருநாதர், நாகை ஜபதா என்னும் யோகியார், மகாசமாதி அடையுமுன், அவருக்குப் பின் யாரை குருவாகக் கொள்ளலாம் எனக் கேட்க, "தமிழ் நாட்டுக்கு அண்மையில் வரப்போகும் உத்திரயோகி ஒருவரைக் குருவாகக் கொள்ளலாம்" என ஜபதா பதிலளித்தார். மேலும் அந்த உத்திர யோகியை அறிந்து கொள்வதற்காகச்

என்.கே.கிருஷ்ணமூர்த்தி

சில குறிப்புகளையும் சொன்னார். அரவிந்தரே 'உத்திரயோகி' என்று தாம் படித்த பத்திரிகைக் குறிப்புகளிலிருந்தும் அறிந்து கொண்டார். பல முறை புதுச்சேரிக்கு ரகசியமாக வந்து அரவிந்தரைச் சந்தித்தார். அரவிந்தருக்கு உதவும் பொருட்டு, வ.ரா. அங்கேயே தங்க ஏற்பாடும் செய்தார். அரவிந்தரின் கடின வாழ்க்கையைக் கண்டு அவருக்குச் சிறிது காலம் பொருளுதவி செய்து வந்தார்.

அரவிந்தர் வீட்டில் தினமும், பாரதியார், மண்டயம் ஸ்ரீனிவாசாச்சாரியார், வ.வே.சு . அய்யர் ஆகியோர் மாலை நான்கு மணி அளவில் பேச ஆரம்பித்தால் இரவு பத்து மணி வரையிலும்கூட நீளும். இச் சம்பாஷணைகளில் பலவகையான விஷயங்களைப் பற்றியும், நவரசங்கள் ததும்பும்படியாகவும், இலக்கியச் சுவையுடனும் பேசுவார்கள்.

பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்து நூற்றுக்கணக்கான போலீஸார் புதுச்சேரிக்கு வந்து முகாம் இட்டனர். எப்படியாவது அரவிந்தர், பாரதியார் உள்ளிட்ட தேச பக்தர்களை வெளியேற்றிட வேண்டும் என முயற்சித்தனர்.

இவர்களுக்குப் பிரஞ்சு புதுச்சேரி குடியிருப்புப் பாத்தியம் இல்லாமல் செய்ய வேண்டும் எனப் போலீஸ் விரும்பியது. அதன் பொருட்டு பிரஞ்சு இந்திய சட்ட சபையில் "அந்நியர் சட்டம்" என்று ஒரு புதிய சட்டம் இயற்றுமாறு பிரஞ்சு அரசாங்கத்தைத் தூண்டினர். இச் சட்டம் அமுலுக்கு வந்தால் எப்படியேனும், இச் சுதேசிகளை வெளியேற்றலாம் என்பது போலீசாரின் எண்ணம். 1911-12இல் பிரான்சு தேசத்தின் நிலைமை மோசமாக இருந்தது. பிரிட்டிஷ் உதவியை நாடியது. இதை பிரிட்டிஷ் அரசாங்கம் நன்கு பயன்படுத்திக் கொண்டது. இச் சட்டம் அமுலுக்கு வந்த தேதிக்கு முன்னால், ஒரு வருஷகாலம் புதுச்சேரியில் வசித்திருக்கும் அந்நியர்கள், ஐந்து ஆனரரி மாஜிஸ்ட்ரேட்டுகளிடம் இருந்து கையெழுத்து வாங்கி,பிரஞ்சுப் போலீஸாரிடம் பதிவு செய்து கொண்டால் அவர்கள் குடியிருக்கலாம் என்ற ஷரத்து அந்தச் சட்டத்தில் புகுத்தப்பட்டது. ஒரு வருஷ ஷரத்து தான் சுதேசிகளுக்குக் கடைசி அடைக்கலமாகும். எப்படியாவது ஐந்து மாஜிஸ்ட்ரேட்டுகளைப் பிடிக்கவேண்டும். இதைப் பற்றி அரவிந்தர், பாரதியார், சீனிவாசாச்சாரியார், வ.வே.சு. அய்யர் ஆகியோர் கூடி ஆலோசித்தனர். பாரதியார், வீடு திரும்புமுன், வ.ரா.வைக் கூப்பிட்டுத் தன்னை மறுநாள் காலை சந்திக்கும்படி சொல்லிச் சென்று விட்டார்.

மறுநாள் காலையில் குறித்த நேரத்தில் வ.ரா., பாரதியாரை வீட்டில் சந்தித்தார். இருவரும் கலவை சங்கரன் செட்டியார் வீட்டை அடைந்தனர். அவரிடம் இப்புதுச் சட்டத்தைப்பற்றிக் கூறப்பட்டது. உடனே செட்டியாரும் இரண்டு மணி நேரத்திற்குள் காரியத்தை முடித்துத் தருகிறேன் எனக் கூறினார். கையெழுத்துப் போட வேண்டிய தஸ்தாவேஜுகளை எழுதித் தன்னிடம் தரச் சொன்னார். ஞாபகமாக, பாரதியாரைப் பார்த்து ஒரு பாட்டைப் பாடச் சொன்னார். பாரதியார் "ஜயமுண்டு பயமில்லை மனமே" என்ற பாட்டைப் பாடினார். பிற்பகல் மூன்று மணிக்குள், கையெழுத்தாகி, அரவிந்தர், பாரதியார், அய்யர், சீனிவாசாச்சாரி மற்றும் சிலர், பிரஞ்சுப் போலீஸில் பதிவு செய்து கொண்டனர். பிரிட்டிஷ் போலீஸார் ஏமாந்தனர்.

ஐயர் வீட்டில் ஒரு நாள் காலையில் ஓர் அற்புதம் நடந்தது. வேலைக்காரி கிணற்றிலிருந்து தண்ணீர் இழுக்கையில், வாளியில் ஏதோ தட்டுப்பட்டது போலத் தோன்றியது. அதை அய்யரிடம் சொன்னாள். கிணற்றைத் துழாவித் துழாவி, நன்றாக சீல் வைக்கப்பட்ட மை ஜாடி ஒன்று அகப்பட்டது. இது எதிரிகளின் சூழ்ச்சி என்று அறிந்து கொண்டு, இதைப் பற்றி அரவிந்தர், பாரதியாரிடம் தெரிவித்தார். ஜாடியை பிரஞ்சு போலீஸாரிடம் ஒப்படைத்து, அது கிடைத்த வகையைப் பற்றி வாக்கு மூலம் கொடுத்தார். போலீஸார் சீலைத் திறந்து பார்க்கையில், அதனுள் பல துண்டுப் பிரசுரங்களும், வெடிகுண்டு செய்யும் முறையும், சில ஆணிகளும், ஊசிகளும் இருந்தன.

பிரஞ்சுப் போலீஸார், சுதேசிகளின் வீடுகளைச் சோதனை செய்தார்கள். பிரஞ்சு பிராஸிக்யூடிங் இன்ஸ்பெக்டர், அரவிந்தரின் பங்களாவிற்கு வந்ததும், மேஜைமீது இருந்த கிரேக்க, லத்தீன் பாஷைப் புத்தகங்களைக் கண்டார். அரவிந்தருக்கு இப்பாஷைகள் தெரியுமா என்று கேட்டார். தெரியும் என அரவிந்தர் பதிலளித்தார். அதன் பின் சோதனையே இல்லை. அதிகாரி போய் விட்டார்.

சுதேசிகளுக்கு வரும் பணத்தைப் போலீஸார் தடுத்தனர்; தேடி வருபவர்களையும் துன்புறுத்தினர். அரவிந்தரிடம் பணம் இல்லாமல் போய் விட்டது. அவர் வீட்டில் முறைவைத்து சமைப்பர்; அதில் வ.ரா. ஒருவர். ஒருநாள் காலையில் அன்று சமைப்பதற்கு ஒன்றுமே இல்லை; காய்கறி வாங்கக் கூடக் காசில்லை. என்ன செய்வது என்று அரவிந்தரைக் கேட்டனர். என்ன சாமான் மிச்சமிருக்கிறது என்று திருப்பிக் கேட்டார். அரிசி, மிளகாய் வற்றல், நல்லெண்ணெய், உப்பு என்று பதிலளித்தனர். அப்படியானால், சாதம் வடித்து, மிளகாய் வற்றலைப் பொரித்து, வையுங்கள். என அரவிந்தர் கூறினார். அம்மாதிரியே செய்யப்பட்டது. அரவிந்தர் முதலியோர் பொரித்த வற்றலைச் சாதத்தில் கலந்து உப்பையும், சேர்த்து, வழக்கம் போல் உண்டனர். அன்றைய தினமே, ஒரு நண்பர் அரவிந்தருக்கு ரூபாய் இரண்டாயிரம் தந்தார்.

ஒரு வங்காளி, கல்கத்தா சிபாரிசுடன், அரவிந்தரிடம் வேலைக்கமர்ந்து விட்டான். ஆறு மாதங்களுக்குப்பின் இரவு சுமார் பதினொரு மணிக்கு அரவிந்தரின் காலடியில் விழுந்தான். தான் ஒரு பிரிட்டிஷ் உளவாளி என்றும், தான் பெற்ற ஐந்து மாத ஊதியத்தையும் காலடியில் வைத்துச் சரணடைந்தான். தான் இப்போது மாறி விட்டதாகக் கூறினான். தன்னை எந்த விதமான தண்டனைக்கும் உட்படுத்தலாம் என்றான். அரவிந்தர் அவனைப் பார்த்து மன்னிக்க அவசியமில்லை. அவனே வருத்தப்பட்டு, மனம் திருந்தினதால், அவன் எவ்வளவு காலம் வேண்டுமனாலும் அவர் வீட்டிலேயே தங்கலாம் எனப் பதிலளித்தார்.

ஸ்ரீ அரவிந்த ஆசிரமத்தில் வாழ்ந்து வந்த "அமிர்தா", தான் சிறுவனாக இருந்தபோது, எப்படி வ.ரா.வை நண்பராக்கிக் கொண்டு 1913இல் ஸ்ரீ அரவிந்தரின் தரிசனமும், அறிமுகமும் ஏற்பட்டது முதலிய நிகழ்ச்சிகளை "ஸ்ரீ அரவிந்த தரிசனம்" என்ற நூலில் எழுதியுள்ளார்.

புதுச்சேரியில் இருந்த நாள்களில் வ.ரா. வால்மீகி ராமாயணம் படிக்க ஆரம்பித்தார். மேலும் நளினி காந்த குப்தாவிடம் வங்காள மொழியைக் கற்றுக் கொண்டார். பங்கிம் சந்திர சட்டர்ஜி எழுதிய "ஜோடி மோதிரங்கள்" என்ற சிறுகதையையும் தமிழ்ப் படுத்தினார். கையெழுத்து முத்து முத்தாகவும், பொடிப்பொடியாகவும் இருக்கும். தன் எழுத்துகளை பாரதியாருக்குக்காட்டாமல் இருக்கமாட்டார்.

வ.ரா.விற்குத் தன் தாயினிடத்தில் அதிக வாஞ்சை. தன் தாயைப் பார்த்து ஓர் ஆண்டிற்கு மேல், ஆனதனால் தஞ்சை போகவேண்டும் எனத் தீர்மானித்தார். அரவிந்தர் இவர் செல்வதை விரும்பவில்லை. ஆயினும் வ.ரா. பிடிவாதமாக 1913இல் தஞ்சைக்குச் சென்று விட்டார். ൦൦





இங்கிலாந்து, லெவன் ஹால், கம்ப்ரியாவில் உள்ள அழகிய பூங்கா. மரங்கள், செடிகள், புல்தரை அனைத்தும் அழகாக, சீராக வெட்டி விடப்பட்டுள்ளன. இப்படியோர் அழகான பூங்காவை எங்காவது பார்த்திருக்கிறீர்களா?

மலைகள், காடுகள், பசுமை பூத்துக் குலுங்கும் பள்ளத்தாக்குகள், அமைதியான ஏரிகள், ஓசை எழுப்பும் அலைகள் தவழும் கடற்கரைகள், வானளாவிய கட்டடங்கள், படகுகள் மிதக்கும் தேம்ஸ் நதி, நகரத்தின் பரபரப்பு, கிராமத்தின் அமைதி, பழமைப் பெருமை, புதுமையின் சிறப்பு



# எழில் கொஞ்சும் இங்கிலாந்து

வி. பாநு



கண்ணைக் கவரும் வண்ணப் பூங்கா. இது கிராம்ப்பியன் நகரில் இருக்கிறது.





ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தின் எழில்மிகு தோற்றம். பின்பனிக் காலத்தில் எடுக்கப்பட்ட படம்.

இத்துணையும் ஒருங்கே அமையப் பெற்ற நாடு இங்கிலாந்து!

வெளிநாடுகளுக்குச் சென்று விடுமுறையைக் கழிக்க விரும்புகிறவர்களுக்கு, இங்கிலாந்து ஒரு சொர்க்க பூமி. எல்லாப் பருவங்களிலும் சுற்றுலாப் பயணிகளைக் கவர்ந்திழுக்கும் நாடு அநேகமாக இங்கிலாந்து ஒன்றுதான் என்று சொல்லலாம்.



கார்ன்வாலில்-

நடுக்கடலில் அமைந்துள்ள செயின்ட்' மைக்கேல் குன்றம்.



உலகெங்கும் ரசிகர்கள் உள்ள ஒரே விளையாட்டான கிரிக்கெட்டின் ஜன்மபூமி இது. அதற்கு அடுத்த இடத்தைப் பிடித்துள்ள டென்னிஸின் விம்பிள்டன் விளையாட்டரங்கம் இருப்பதும் இங்கிலாந்தில்தான். குதிரைப் பந்தயப்

தேம்ஸ் நதிக் கரையில் 'பிக் பென்' என்று செல்லப் பெயர் கொ.ண்ட பிரிட்டிஷ் பார்லிமெண்ட் கட்டடம்.

பிரிட்டிஷ் அரசியின் பிறந்த நாளன்று, பாண்டு வாத்தியக் கோஷ்டியின் ஊர்வலம், ஒரு கண்கொள்ளாக் காட்சி.

பிரியர்களுக்கு மட்டுமே புரியக் கூடிய 'டெர்பி', 'ராயல் அஸ்காட்' போன்ற வார்த்தைகள் அவதரித்ததும் இங்குதான்!

இங்கிலாந்தின் தலைநகரம், லண்டன், ராஜவம்சத்திற்கு இன்னமும் மரியாதை தெரிவிக்கும் பண்பு, இங்கிலாந்தின் தனிச் சிறப்பு, அரசி வசிக்கும் பக்கிங்ஹாம் மாளிகையில், காவலர்கள் 'டூட்டி' மாற்றிக் கொள்ளும் நிகழ்ச்சி அன்றாடம் காலை 11.30 மணிக்கு நடைபெறும்.

இந்தச் சம்பிரதாயச் சடங்கைப் பார்வையிட மக்கள் கூடுகிறார்கள். காலை 8.00 மணி முதலே மக்கள் வந்து, நிகழ்ச்சியைக் கண்டு



மயிர்க் கூச்செறியும் விளையாட்டு, பிரிட்டிஷாருக்குப் பிடித்தமான பொழுதுபோக்கு. பாரசூட்டில் பறக்கிறார். கடலில் குதிக்கப் போகிறாரோ?

களிக்க, ஏற்ற இடத்தைப் பிடித்து அமர்ந்து விடுகிறார்கள். வெஸ்ட் மினிஸ்டர் 'அப்பே' என்ற இடத்தில், இங்கிலாந்தின் மிகச் சிறந்த அறிஞர்கள், அரச பரம்பரையினர், எழுத்தாளர்கள், பிரபல அரசியல்வாதிகள் ஆகியவர்களின் கல்லறை இருக்கிறது. இங்கு வந்து, அமரராகிவிட்ட பிரபல யுக புருஷர்களுக்கு அஞ்சலி செலுத்த ஒவ்வொரு நாளும் ஆயிரக் கணக்கில் மக்கள் வந்து குழுமுகிறார்கள்.

பிக்காடலி சர்க்கஸ், டிராஃபால்கார் ஸ்குயர், நெல்சன் கார்னர் ஆகியவை மக்கள் அதிகமாக நடைபழகும் பகுதிகள். மிக முக்கியமான வியாபாரக் கேந்திரங்கள் இங்கு உள்ளன.

ஜனநாயக ஆட்சி முறையை உலகுக்கு வழங்கிய இங்கிலாந்தின் பார்லிமெண்ட் கட்டடம் தேம்ஸ் நதிக்கரையில் அமைந்திருக்கிறது.

இங்கிலாந்தின் பழம் பெருமைகளை எடுத்துக் காட்டும் அருங்காட்சியகங்கள் ஏராளம் இருக்கின்றன. இருண்ட காலம் தொடங்கி 17வது நூற்றாண்டு வரை உலகில் நடைபெற்ற போர்களைப் பற்றி, அவைகளின் அழிவுகளைப் பற்றி 'லண்டன் டன்ஜன்' என்ற மியூசியத்தில் பார்க்கலாம். லண்டன் நகரின் இரண்டாயிரம் ஆண்டு வாழ்க்கையைப் பற்றி, நிகழ்ந்துள்ள மாற்றங்கள் பற்றி 'டவர் ஹில் பெஜன்ட்' என்ற மியூசியத்தில் பார்க்கலாம். காரில் அமர்ந்து கொண்டே இந்த ஓவியங்களைப் பார்க்கலாம். ஷேக்ஸ்பியர் காலம் தொடங்கி, இன்றைய ஆரம்ப கால இளம் நாடகாசிரியரின் நாடகம் வரை பார்த்து மகிழ கவன்ட் கார்டனில் 'தியேட்டர் மியூசியம்' இருக்கிறது. மேடம் டஸ்ஸாட் (Madame Tussaud) உலகின் பிரபல தலைவர்களின் சிற்பங்களை மெழுகில் வடித்து வைத்திருக்கிறார். இந்த அருங்காட்சியகங்கள் போல், உலகில் வேறு எங்கும் இருப்பதாகத் தெரியவில்லை.

ஷேக்ஸ்பியர் பிறந்த ஊரான ஸ்ட்ரட்ஃபோர்டு — அபான்-ஏவன் (Stratford-Upon-Avon) சுற்றுலாப் பயணிகளைக் கவர்ந்திழுக்கும் ஒரு முக்கிய 'டூரிஸ்ட்' ஸ்பாட்.

எடின்பரோ கோமகனின் நினைவை நிலைப்படுத்த, ஸ்காட்லாந்த் மாநிலத்தின் தலைநகருக்கு எடின்பர்க் எனப் பெயரிட்டுள்ளனர். பசும்புல் தரைகள் மைல் கணக்கில் நீண்டு பரந்து கிடக்கும் காட்சியைப் பார்த்து ரசித்துக் கொண்டேயிருக்கலாம்.

வேல்ஸ். அரச குடும்பத்துடன் இணைந்த மற்றொரு பெயர் இது. இது இன்று ஒரு மாநிலம். இங்கு இயற்கை அழகு கொஞ்சும் பூங்காக்கள், தோட்டங்கள், ஏராளம், ஏராளம். இந்த இயற்கைச் செல்வத்தைப் போற்றிப் பாதுகாக்க இவர்கள் மே மாதம் தொடங்கி அக்டோபர் வரை விழா எடுக்கிறார்கள்.

இங்கிலாந்தைச் சுற்றிப் பார்க்க டூரிஸ்ட் பஸ்கள் இருக்கின்றன. நானூறுக்கு மேற்பட்ட டூரிஸ்ட் சென்டர்கள், சுற்றுலாப் பயணிகளுக்கு உதவுகின்றன. பஸ், சின்ன ரயில், தேம்ஸ் நதியில் படகு, கடற்கரைப் பகுதிகளில் சிறு ஸ்டீமர் போட் ஆகிய சாதனங்கள் மூலம் எழில் கொஞ்சும் இங்கிலாந்தின் அழகை ரசித்து மகிழலாம். ஃ



# சக்தி

பராசக்தியைப் பாடுகின்றோம்.
இவள் எப்படி உண்டாயினாள்? அதுதான் தெரியவில்லை.
இவள் தானே பிறந்ததாய், 'தான்' என்ற பரம் பொருளினிடத்தே.
இவள் எதிலிருந்து தோன்றினாள்? "தான்" என்ற பரபொருளிலிருந்து
எப்படித் தோன்றினாள்? தெரியாது.
படைப்பு நமது கண்ணுக்குத் தெரியாது; அறிவுக்கும் தெரியாது.
சாவு நமது கண்ணுக்குத் தெரியும்; அறிவுக்குத் தெரியாது.
வாழ்க்கை நமது கண்ணுக்குத் தெரியும், அறிவுக்கும் தெரியும்.
வாழ்க்கையாவது சக்தியைப் போற்றுதல்; இதன் பயன் இன்பமெய்தல்.
உள்ளம் தெளிந்திருக்க; உயிர் வேகமும் சூடும் உடையதாக; உடல்
அமைதியும் வலிமையும் பெற்றிருக்க.
மஹா சக்தியின் அருள் பெறுதலே வாழ்தல்; நாம் வாழ்கின்றோம்.
நம்மை வாழ்வுறச் செய்த மஹா சக்தியை மீண்டும் வாழ்த்துகின்றோம்.

— மகாகவி பாரதியார்.

# பாபூஜியின் ஃபட் ஓவியங்கள்

லக்ஷ்மி ரமணன்




விருது பெறும் ஜோஷி



ஓவியம் தீட்டும் திரு ஜோஷி

எடுக்க எடுக்க குறையாத குபேரனின் செல்வத்தைப்போல் எழுத எழுதப் புதிது புதிதான விஷயங்கள் நிறைந்தது ராஜஸ்தான். இங்கிருக்கும் கோட்டைகளையும் சரித்திரத்தையும் போல் கலைச் செல்வங்களும் இங்கு ஏராளம். அவற்றில் ஃபட் (PHAD) ஓவியங்களும் ஒன்று.

சுமார் எழுநூறு ஆண்டுகளுக்கு முன்னர் இந்த மாநிலத்தில் எங்கோ துளிர்த்து வளர்ந்த பரம்பரை இது. நாட்டியத்துக்கு வகுக்கப்பட்ட பாணியைப்போல் (இதை ஷைலி என்கிறார்கள்) ஓவியத்துக்கு பரம்பரை (பரம்பரா) என்கிற சொல் பயன்படுத்தப்படுகிறது. இந்தக் கலை வளர்ந்து உயிருடன் பிரபலமாக இருப்பது பில்வாடா என்னும் ஊரில்தான். பில்வாடா டெக்ஸ்டைல்களுக்குப் பெயரெடுத்த இடம். ஃபட் ஓவியங்கள் தங்கள் பெயரை நாட்டிக் கொண்டு விட்ட இடமும் இதுதான்.

Phad (ஃபட்) என்கிற பெயர் இதற்கு எப்படி வந்தது என்பதை விளக்குகிறார் ஓவியர் திரு. சாந்திலால் ஜோஷி.

'இது கதை சொல்லும் படம். 'பட் சித்ர கதா' என்கிற வார்த்தை மருவி 'ஃபட்' என்றாகிவிட்டது'. மற்ற ஓவியங்களைப் போலல்லாமல் இதில் ஒவ்வொன்றிலும் ஒரு கதை அடங்கியிருக்கிறது. இதைத் தீட்டும் ஓவியர்களுக்கு 'சித்தேரா' என்று பெயர். இந்த ஓவியங்களிலேயே தொன்மையும் புகழும் வாய்ந்தவை பாபூஜியின் ஃபட் ஓவியங்கள். (PABUJI KI PHAD).

பாபூஜி என்பவர் மார்வாரைச் சேர்ந்த போர்வீரர். மார்வார் அரசர் ராவ் ஜோதா தன் நம்பிக்கைக்குப் பாத்திரமான ஹர்பூஜி சாங்க்லா (HARBUJI SANKHLA) மற்றும் பாபூஜி (PABUJI) என்னும் இரண்டு வீரர்களையும் மண்டூரை ஜெயித்து வரும்படி அனுப்பினாராம். எதிரிகளோடு மோதி எப்படி பாபூஜி சண்டையிட்டார் என்று அவர் வீர பிரதாபங்களை இந்த ஓவியங்கள் விளக்குகின்றன.

இதுபோன்று பாபூஜியின் வீர பராக்கிரமங்களை சித்திரிக்கும் பல குட்டிக் கதைகள் இந்த ஓவியங்களில் இடம் பெறுகின்றன.

"பாபூஜி திருமண மண்டபத்தில் அமர்ந்திருந்தாராம். கன்யாதான வேளை நெருங்கிக் கொண்டிருக்கை

ராம்தேவ் கதை (ஃபட் ஓவியத்தில்)





ஃபட் ஓவியம்

யில் கள்ளர் கூட்டம் கிராமத்தில் புகுந்து கால்நடைகளைக் கடத்திச் சென்று கொண்டிருப்பதாகச் செய்தி வந்ததாம். அவற்றில் சாரனி என்கிற பெண்மணியின் கால்நடைகளே அதிகமிருந்ததாம். மணமகன் பாபூஜி வெகுண்டெழுந்து ஒட்டகத்தின் மீதேறி தன் கால்நடைகளைக் காப்பாற்றப் புறப்பட்டதை சாரனி அறிந்து, அவருக்கு உதவ 'கேசர் காலி' என்கிற கறுப்புநிற குதிரையைக் கொடுத்தாளாம். கள்ளர் கூட்டத்தைத் தாக்கி வீர சாகசத்தோடு சண்டையிட்டாலும் இறுதியில் பாபூஜி வீர மரணம் அடைய மணப்பெண்ணான அரசிளங்குமரி தீக்குளித்தாளாம்' என்கிற ரீதியில் இன்னோர் ஓவியம் சமைக்கப்படுகிறது.

பாபூஜியின் படக்கதைகளை கிராமப்புறங்களில் இரவு நேரங்களில் தெருச் சந்துகளின் கூடல்களில் கணப்பெழுப்பி போபா (BHOPA) போபின் (BHOPIN) என்பவர்கள் கால்களில் சதங்கையைக் கட்டிக் கொண்டு ரன்வதா என்கிற இசைக் கருவியை மீட்டிக் கொண்டு பாடி தெருக்கூத்து போல் நடத்தி எடுத்துச் செல்வது வழக்கமாம். ஹோலிப் பண்டிகையில் துவங்கி சீதலாஷ்டமி வரையில் மட்டும் இப்படிப்பட்ட பாட்டுக் கூத்து நடத்துவது நின்றுவிடுமாம். ஆதி நாட்களில் இந்த போபாக்களே ஓவியம் தீட்டுவதிலும் வல்லவர்களாய் இருந்தார்கள் என்றும் சொல்லப்படுகிறது.

ஃபட் ஓவியங்களில் சிகப்பு, மஞ்சள், சாம்பல் நிறம், கறுப்பு ஆகிய வண்ணங்கள் பிரதான்யம் வகிக்கின்றன. இந்த வண்ணங்களைக் கற்களிலிருந்தும், தாவர வண்ணங்களில் இருந்தும் சேகரிக்கிறார்கள். கற்களைப் பொடியாக்கி மாவு போன்று தூளாக்கிக் கொண்டு கோந்து போன்ற பிசினைக் கரைத்த நீரில் குழைத்துக் கொள்கிறார்கள். பிசினைச் சேர்த்து தீட்டுவதால் ஓவியம் மங்காமல் நீடித்த நாள் இருக்குமாம்.

இதற்கான தூரிகை அணில்களின் வால்களிலிருந்து எடுக்கப்படும் மயிரினால் தயாரிக்கப்படுகிறது. இவை மயிரிழைபோல் மெலிதாக இருப்பதால் தூரிகையை மனம் போன படியெல்லாம் இழுத்து ஓவியம் தீட்ட முடியுமாம்.

ஃபட் ஓவியங்கள் சில்க் அல்லது பருத்தித் துணியின் மீதுதான் தீட்டப்படுகின்றன. இதற்கு காகிதம் (Paper) பயன்படுத்தப்படுவதில்லை. கோதுமை அல்லது அரிசி வடித்த கஞ்சியை இந்தத் துணியின் மீது ஊற்றி தேய்த்து காயவைத்து இதற்கான 'கான்வாஸ்'ஐ தயாரித்துக் கொள்கிறார்கள். வரைய வேண்டிய ஓவியத்தின் சம்பவங்களை மனதளவில் தீர்மானித்து அதை இத்தனை கட்டங்களில் அமைக்க வேண்டும் என்பதையும் நிர்ணயித்துக் கொள்கிறார்கள். பிறகு சிகப்பு அல்லது மஞ்சள் நிறத்தில் உருவங்களின் 'அவுட் லைன்' தயார் செய்து கொள்கிறார்கள். 'சித்திரமும் கைப்பழக்கம்' என்று சொல்வதுண்டு. ஓவியங்களை பென்சிலால் முதலில் வரைந்து கொள்ள வேண்டிய அவசியமே இவர்களுக்கில்லை. நேரடியாய் தூரிகையை எடுத்து கோடுகளை இழுக்கையில், பழக்கம் காரணமாய் மனம் நினைத்ததை இவர்கள் கை பேசுகிறது. இந்த ஓவியங்கள் பார்க்க நளினமாகவும், அதே சமயத்தில் 'மார்டன் ஆர்ட்' போலவும் உள்ளன. குதிரை, யானை போன்ற பிராணிகளை கறுப்பு அல்லது கருஞ்சிகப்பு நிறங்களில் மட்டுமே சித்திரிக்கிறார்கள்.

பாபூஜியின் கதைகள் தவிர தேவ நாராயண் கதை, தேஜாஜி, கோகாஜி, ராம்தேவ் போன்றவர்களின் வீர வரலாறுகள், ராணா பிரதாப்பின் சரித்திரம், இராமாயண, பாகவத பாரதத்திலிருந்து சுவாரஸ்யமான காட்சிகள் ஆகியவற்றையும் ஓவியமாய் தீட்டுகிறார்கள். இதன் அகலம்

பாபூஜியின் கதை





அதிகபட்சம் மூன்றடி இருக்குமாம். நீளம் ஒன்றரை அடியில் துவங்கி அவரவர் எடுத்துக் கொள்ளுகிற கதையின் சம்பவங்களை ஒட்டி இருக்கும் என்று தெரிகிறது.

ஃபட் ஓவியம் தீட்டுவதில் பெயரெடுத்து,' மாஸ்டர் கிராப்ட்ஸ்மென்' விருது பெற்றுள்ள திரு சாந்திலால் ஜோஷி இதுவரை 39 அடி நீளமுள்ள ஓவியம்கூட தீட்டியுள்ளாராம். இவர் அகில இந்திய அளவில் பல கண் காட்சிகளை நடத்தியுள்ளார். இவர் தீட்டிய ஓவியங்கள் பிரபல ஐந்து நட்சத்திர ஹோட்டல்களிலும், வெளி நாட்டு தூதராலயங்களிலும் சுவர்களை அலங்கரிப்பதைக் காணலாம்.

ஃபட் ஓவியங்களின் புகழ் ஆதி நாள்களிலேயே மாளவம், கூர்ஜரம் (குஜராத்), சிந்த் ஆகிய பிராந்தியங்களில் பரவி இருந்தது. சிக்கலில்லாத இந்த ஓவியங்களை ஆதிநாளில் பிறந்த 'மாடர்ன் ஆர்ட்' என்றும் சொல்லலாம். முதலில் வெள்ளை காதி துணிகள் மட்டுமே இந்த ஓவியத்துக்கு ஏற்றதெனக் கருதப்பட்டதாம். இப்போது மில் துணியையும் பயன் படுத்துகிறார்கள்.

பச்சை, நீலம் போன்ற நிறங்களை Basic நிறங்களான கறுப்பு, மஞ்சள், சிவப்பு ஆகியவற்றோடு எலுமிச்சை, அமோனியம் போன்றவற்றுடன் கலந்து உண்டாக்கிக்கொள்கிறார்கள்.

"இந்த ஓவியங்களில் பெண்களின் வீரச் செயல்களையும் சாகசங்களையும் ஏன் தீட்டுவதில்லை?" என்று கேட்டதற்கு, "ஏன் இல்லை, பத்மினியின் கதை, ஹாதி ராணியின் வீர வரலாறு ஆகியவற்றையும் நாங்கள் தீட்டுகிறோமே" என்றார், திரு. ஜோஷி. இந்திராகாந்தியின் வாழ்க்கை குறிப்புகளைப் படித்து சம்பவங்களை அமைத்து ஓவியம் தீட்டவேண்டும் என்கிற ஆசை இவருக்கிருக்கிறது. அதேபோல் 1857 இல் நடந்த சிப்பாய்க்கலகத்தில் துவங்கி பல ஊர்களில் நடந்த கலகங்களைச் சித்திரித்து, இந்திய சுதந்திரப் போராட்டத்தையும், இந்தியா சுதந்திரம் அடைந்த வரையில் சம்பவக் கோவையாய் தொகுத்து சுமார் நூறு அடி நீளமுள்ள ஓவியமாய் தீட்டவும் நினைத்து ஆரம்பித்துள்ளதுடன் அதற்கான விபரங்களைப் பல புத்தகங்களைப் படித்து சேகரிப்பதிலும் இவர் நேரம் கழிகிறது.

பில்வாடாவில் ஃபட் ஓவியங்களைத் தீட்டும் சுமார் 15 குடும்பங்கள் மட்டுமே உள்ளன. சிறு பிராயம் முதலே தங்கள் வாரிசுகளுக்கு இக்கலையில் ஒரு ஈடுபாட்டை ஏற்படுத்த பெரியவர்கள் முயற்சிக்கிறார்கள்.

"நாங்கள் எம்போரியம்களுக்கும் பிரபல கடைகளுக்கும் எங்கள் ஓவியங்களை விற்பதில்லை. அதனால் எங்களுக்கு லாபமில்லை. மிகச் சிறிய தொகை ஒன்றிற்கு எங்கள் ஓவியங்களை வாங்கிவிட்டு அதைவிட ஐந்து மடங்கு விலை குறித்து அவர்கள் விற்கிறார்கள். அதுமட்டுமல்ல, இவற்றைக் காப்பி அடித்து தங்களுக்குத் தெரிந்த ஓவியர்களை ஓவியம் தீட்டச் சொல்லியும் விற்கிறார்கள். அதில் எங்கள் தனித்தன்மை அழிந்து போகிறது. உண்மையான கலாரசிகர்கள் எங்கள் ஓவியங்களை வாங்குவதைத்தான் நாங்கள் விரும்புகிறோம்" என்கிறார் இவர். இவருடைய விசிட்டிங் கார்டில் இவர் அமர்ந்து ஃபட் ஓவியம் தீட்டுவது போல் புகைப்படத்துடன் புதுமையாக அமைத்திருக்கிறார்.

ஃபட் கதைகள் பாடப்பட்டதும், வரையப்பட்டதும், மக்களின் வீர உணர்வுகளைத் தட்டி எழுப்பி, தேசிய உணர்ச்சிகள் விழிப்படையச் செய்யத்தான் என்கிற அடிப்படை எண்ணம் இப்போது மறைந்து இவை வெறும் ஓவியங்களாக, சுவரை அலங்கரிக்கும் அழகுப் பொருளாகத் தான் இப்போது உள்ளன. ஃபட் ஓவிய நாயகர்கள் எல்லாருமே கைகளில் கத்தியும், கேடயமும், ஈட்டியும் வைத்திருப்பது ஒரு கலை நயத்துக்காக என்கிற கண்ணோட்டத்துடன்தான் இப்போது பார்க்கப் படுகிறது. இவற்றை பிளாக் (Block) தயார் செய்து அச்சடித்து 'இதுதான் ஃபட்' ஓவியம் என்று நகல்களை அசலாக்கி விற்கும் அளவுக்கு சிலர் இதன் தரத்தை இறக்கிவிட்டார்கள்.

அசலான ஃபட் ஓவியங்கள் மிக நளினமானவை. நுணுக்கமானவை. இதில் வெற்றியுடன் பெயரெடுக்க அயராத உழைப்பு மிகவும் அவசியம். ஓவியங்களில்கூட மேலே சொன்ன 'இன்ஸ்டென்ட் தயாரிப்புகள்' வந்து விட்ட பிறகு இந்தக் கலையை எப்படி உயிருடன் வைத்திருக்கிறார்கள்?

"சிரமம்தான். அதுவும் இந்தக் காலத்துக் குழந்தைகள் படித்துவிட்டு உத்தியோகம் பார்க்கிறேன் என்று தான் கிளம்புகிறார்கள். இந்தக் கலையைக் கற்க நிறையப் பொறுமையும், நேரமும் வேண்டும். அப்படி உழைத்தாலும் அதற்கான ஆதாயம் இருக்குமா என்பது மிகப் பெரிய கேள்விக்குறிதான். சில ஆண்டுகளுக்கு முன்பு ஓர் அமெரிக்க தம்பதியர் வந்து இந்த ஃபட் ஓவியம் தீட்டுகிறவர்களைப் பற்றி செய்திப்படம் எடுத்தார்கள். அதன் பிறகு ஒரு மறு மலர்ச்சி ஏற்பட்டது. உண்மையான கலைக்கு ஒருபொழுதும் தாழ்வு ஏற்படாது. எங்களுக்கு வருகிற ஆர்டர்களை நிறைவேற்றி வைக்கவே எங்களுக்கு நேரம் சரியாக இருக்கிறது" என்கிறார் திரு ஜோஷி.

இதில் ஈடுபட்டுள்ள அனைவருமே 'ஜோஷி' குடும்பங்கள்தாம். மருமகளுக்கு இந்த ஓவியங்களைத் தீட்ட பயிற்சி அளிக்கும் இவர்கள் வீட்டுப் பெண்களுக்கு இதை கற்பிப்பதில்லையாம். திருமணமாகி புக்ககம் போகும் பெண்கள் அங்கே அதை உற்சாக மூட்டி வளர்ப்பவர்கள் இன்றி மறந்து போய் விடுகிறார்களாம்.

எல்லாக் கலைஞர்களுக்குமே தங்களுக்கு அரசாங்கம் சரியான ஆதரவு தரவில்லை என்கிற குறை உள்ளது.

முன்னாளில் இப்படிப்பட்ட அபூர்வ கலைகளை வளர்க்க ராஜாக்கள், மகாராஜாக்கள் இருந்தார்கள். கலைஞர்களை அவர்கள் ஆதரித்ததை இன்றும் அவர்கள் வாழ்ந்த அரண்மனைகளில் தீட்டப்பட்டிருக்கும் ஓவியங்களைக் கண்டு உணர முடிகிறது. கலைஞர்களுக்கு அவர்கள் மானியங்களும், நிலமும், வீடும் கொடுத்து ஆதரித்தார்கள் என்பதையும் மறுக்க முடியாது. இன்று மாநில, மத்திய அரசுகள்தாம் இந்த மகாராஜாக்களின் இடத்திலிருந்து கொண்டு இவர்கள் குறைகளைத் தீர்த்து வைக்க வேண்டும்!

# பூஞாஆவின் கதை

நாகராஜகுமார்

**1.1.1928** அன்று பிறந்த 'பூந்தமல்லி ஞானசாகரம் ஆனந்த கிருஷ்ணன்' என்றால் எத்தனை பேருக்குத் தெரியும்? ஆனால் 'பிலிம் நியூஸ் ஆனந்தன்' என்றவுடன் அத்தனை பேருக்கும் சட்டென்று நினைவுக்கு வரும், நெற்றியில் குங்குமப் பொட்டு, ரவுண்ட் நெக் சட்டை, கையில் நிறையக் காகிதங்களுடன் ஒரு ஃபைல், தோளில் ஹாண்ட் பேக், நிரந்தரப் புன்னகையுடன் கூடிய நெடிய உருவம்.

சினிமா சம்பந்தப்பட்டவர்களையும், பத்திரிகைத் துறை அன்பர்களையும் மீறி சினிமா ரசிகர்களுக்கும் பரிச்சயமாகிவிட்ட பிலிம் நியூஸ் ஆனந்தனை மலருக்காகச் சந்தித்தபோது தொலைபேசியில் ரசிகர் ஒருவருக்கு நடிகை ஒருவரின் முகவரியைச் சொல்லிக் கொண்டிருந்தார்.

சினிமாவைப் பிரதிபலிக்கும் பேப்பர்ஸ் - ஃபைல்ஸ், 100 ஆவது நாள் பட விருதுகள், பாராட்டுப் பத்திரங்கள், சுற்றுலாப் பொருட்காட்சியில் சிறந்த அரங்கத்திற்காகக் கிடைத்தக் கேடயங்கள், விரல் நுனியில் புள்ளி விவரங்கள்... இதுதான் வீட்டில் நாம் பார்த்த பிலிம் நியூஸ் ஆனந்தனின் மறுபக்கம்.

மெல்லிய குரலில் வார்த்தைகள் தெளிவாய் வந்து விழுந்தன.

"சின்ன வயதிலேயே போட்டோ கிராபராக ஆகணும்னு ஆசை. பள்ளி நாள்களில் நாடகங்களில் பங்குபெற்ற அனுபவமுண்டு. கல்லூரி நாள்களை முடித்தபோது ஒய்.ஜி.பி. நாடகக் குழுவில் ஸ்டேஜ் இன்சார்ஜாகப் பணியாற்றினேன். அது ஏதோ விருப்பமில்லாமல்தான் இருந்தது. ஆனாலும்



பிலிம் நியூஸ் ஆனந்தன்

கேமிரா மோகம் உள்ளுக்குள் வளர்ந்து கொண்டிருந்தது. இதற்கு வடிகாலாக 1954 இல் என்.எஸ். கிருஷ்ணன் கேமிராமேன் சி.ஜே. மோகனிடம் கேமிரா தொழில் நுட்பத்தைக் கற்றுக் கொள்ள முடிவு பண்ணினேன்.

அப்போ ஒரு பாக்ஸ் கேமிரா வைச்சிருப்பேன். அந்த பாக்ஸ் கேமிராவிலேயே ஒரே பிலிம்மில் ஓர் உருவத்தைப் படம் எடுத்துட்டு ரீ-வைண்ட் பண்ணாமல் அட்டையை மறைச்சு எடுக்கும் டெக்னிக்கில் இரண்டு உருவம் வரும் முறையைக் கண்டுபிடித்து எடுத்தேன்.

என் ஆர்வத்தைப் பார்த்த சி.ஜே. மோகன் 'நல்ல கேமிரா ஒண்ணு வாங்கிக்க. உனக்கு நல்லாப் படம் எடுக்க வருது' என்றார். அந்த நாளில் விலை ரூபாய் 4000 கொடுத்து ஜெர்மன் கேமிரா ஒன்றை வாங்கினேன்.

கீழ்ப்பாக்கத்தில் பிரபலமான ஸ்டூடியோ நியூடோன். அங்கேதான் சி.ஜே. மோகன் இருப்பார். அவரைப் பார்த்துத் தொழில்நுட்பத்தைக் கற்றுக்கொள்ள தினம் தவறாமல் போவேன். நியூடோன் ஸ்டூடியோவிலே நிறைய ஷூட்டிங் நடக்கும். படப்பிடிப்பு ஒய்வு நேரத்தில் பிரபல நடிகர்களெல்லாம் வெளியே உட்கார்ந்து பேசிக் கொண்டிருப்பார்கள். ஒருநாள் 'ராஜா ராணி' படப்பிடிப்பில் சிவாஜி நடித்துவிட்டு வெளியே உட்கார்ந்திருந்தார். அந்தப் படத்திலே 'விநாயக முதலியார்' என்கிற

சுற்றுலாப் பொருட்காட்சி அரங்கத் திறப்பு விழா



தெலுங்குப் படஉலகம் கௌரவிக்கிறது



ஒரு 'பிலிமோகிராபி'யைத் தயார் செய்தேன். அதில் ஹீரோ - ஹீரோயின் - கம்பெனி பெயர்களோட படத்தில் நடிக்கிற மற்ற நடிகர் - நடிகைகள், ஒளிப்பதிவாளர், எடிட்டர், ஆர்ட் டைரக்டர், இசை அமைப்பாளர், பாடலாசிரியர்கள், இயக்குநர், கதை - வசனகர்த்தா - பின்னணிப் பாட்கர்கள், பாடல் பதிவான தியேட்டர், லேப், புகைப்படக் கலைஞர், ஸ்டுடியோ, பப்ளிசிடி, படத்தோட நீளம், ரிலீஸ் தேதி, சென்சார் விவரம், திரையிடப்பட்ட அரங்குகளைக் குறித்து வைக்க ஆரம்பித்தேன்.

இதை மொத்தமாகச் சேர்த்து அந்த வருஷத்திலே வந்த படங்களையும், நடித்த நடிகர்களையும், மற்ற கலைஞர்களையும் பார்க்கிற போது எனக்குள்ளே ஓர் எண்ணம் வந்தது. எண்ணத்தைச் செயலாக்கினேன். அதாவது இதையெல்லாம் தொகுத்து 1955 இல் ஒரு பட்டியல் போட்டு எல்லாப் பத்திரிகைகளுக்கும் அனுப்பினேன். இதற்கு நல்ல வரவேற்புக் கிடைத்தது.

தமிழில் மட்டுமில்லாமல் தென்னிந்திய மொழிப் படங்களான தெலுங்கு, மலையாளம், கன்னடப் படங்களுக்கும் ஒரு பட்டியல் தயாரிக்கிற ஆர்வமும் வந்தது. செய்தேன். இதனால் நிறையப் பேர் அறிமுகமானார்கள். பத்திரிகையாளர்கள் நண்பர்களானார்கள்.

இதை நான் ஆரம்பித்தது 1955 இல். தமிழ்ப்பட உலகம் தொடங்கியது 1931 இல். எனக்குள்ளே இன்னொரு வேகம், 'ஏன் 31ஆம் வருஷத்திலே இருந்து சேகரிக்கக் கூடாது?'ன்னு.

அந்த ஆசையும் நான் பார்க்கிற - பேசுகிற நபர்கள் - இடங்களில் நிறைவேறியது. அந்த பிலிமோகிராபியோட அந்தந்தப் படங்களோட பாட்டுப் புத்தகம், இசைத்தட்டுகள், கதை - வசனங்களையும் சேகரித்து வைத்தேன்.

இவ்வளவு கஷ்டப்பட்டுச் சேகரித்ததைத் தங்கள் உபயோகத்திற்கு வாங்கிக் கொண்டு போகிற சில பத்திரிகைக்காரங்க திருப்பித் தரா மல் போவது கஷ்டமாக இருக்கிறது.

ரிஷிகேஷ் முகர்ஜி பாராட்டுகிறார்





திரைப்படப் பவள விழாவில் கிடைத்த பாராட்டு

சரி, அதை விடுங்க. விஷயத்திற்கு வர்றேன்.

நான் எடுத்த போட்டோக் களுடைய ஆல்பம், சேகரித்த பிலிமோ கிராபியை ஒரு நாள் பாண்டி பஜார்லே நண்பர் தேவராஜ் பார்த் தார். எல்லாமெ செட்டிற்கு வெளியே எடுத்த தனிப் படங்களாக இருக்கவே அசந்துட்டார். அதையெல்லாம் 'பிலிம் நியூஸ்' என்கிற பத்திரிகையிலே வெளியிட்டார்.

வேறெந்த பத்திரிகையிலும் வராத - அந்தப் பத்திரிகை வெளியிட்ட பிரத்யேகப் படம் என்பதற்காக போட்டோவுக்குக் கீழே பத்திரிகை பெயரோடு என் பெயரையும் சுருக்கிச் சேர்த்து, 'பிலிம் நியூஸ் ஆனந்தன்' என்று போட்டார். இந்தப் பெயர் வெகு விரைவாகப் பரவியது. இப்படி வளர்ந்த நேரம் -

1956. நடிகர் சங்கத்திலே, 'நடிகன் குரல்' என்று நடிகர் சங்கத்திற்காக ஒரு பத்திரிகை வந்து கொண் டிருந்தது. நடிகர் சங்கத் தலைவர் தான் - 'நடிகன் குரல்' பத்திரிகைக்குப் பப்ளிஷர். நிரந்தர ஆசிரியர் வித்வான் வே. லட்சுமணன்.

சிறந்த அரங்கத்திற்கான கேடயம் பெற்ற நிகழ்ச்சி




எம்.ஜி.ஆர். நடிகர் சங்கத் தலைவராக இருந்ததாலே அவர்தான் பப்ளிஷர். பணி நிமித்தமாக தினமும் எம்.ஜி.ஆரைச் சந்திக்கிற வாய்ப்புக் கிடைத்தது. 'நாடோடி மன்னன்' பட வேலைகள் நடந்து கொண்டிருந்த நேரம். எம்.ஜி.ஆர். பிக்சர்ஸ் மானேஜர் ஆர்.எம். வீரப்பன்.

அப்போதெல்லாம் பட ஸ்டில் களைப் பத்திரிகைகளுக்குத் தருவது விளம்பர ஏஜென்ஸியோட வேலை. எந்தப் பத்திரிகை நிறைய ஸ்டில் களை வெளியிடுகிறதோ அதற்கெல் லாம் ஏஜென்ஸி விளம்பரம் தரும். அந்த முறை இருந்த வேளையில் ஒருநாள்:

'நாடோடி மன்னன்' பட ஸ்டில் வீரப்பன் மேஜை மேலே இருந்தது. அதைப் பார்த்த நான், 'நான் வேணு மானால் இந்த ஸ்டிலைப் பத்திரி கைக்குத் தரட்டுமா?' என்று கேட்டேன். 'செய்யேன்' என்றார்.

பத்திரிகை நண்பர்கள் அந்த நேரத்தில் ரொம்பப் பேர் தெரிஞ் சிருந்ததாலே நிறைய ஸ்டில்கள் எல்லாப் பத்திரிகைகளிலும் ஒட்டு மொத்தமாகச் செய்திகளோடு வெளி வந்தன.

எம்.ஜி.ஆருக்கு ஒரே ஆச்சர்யம். அதற்குப் பிறகு நானே 'நாடோடி மன்னன்' பட சம்பந்தப்பட்ட எல்லாச் செய்திகளையும் தர ஆரம்பித்தேன். படம் ரிலீஸுக்கு முன்னால் பத்திரி கையாளர் காட்சி நடத்தினேன். படம் நூறு நாள் விழா கொண்டாடியது.

'நாடோடி மன்னன்' படத்திற்குப் பிறகு எம்.ஜி.ஆர். நடித்த கடைசிப் படம் வரை அவருக்கு நான்தான் பி.ஆர்.ஓ. ஆனால் எம்.ஜி.ஆர். 'நாடோடி மன்னனில்' பி.ஆர்.ஓ. என்று தனியாக டைட்டில் கார்டு போட வில்லை.

முதன் முதலாக சினிமா உலகில் பி.ஆர். ஓ. என்று தனியாக ஒரு ஸ்தானத்தை ஏற்படுத்தி, 'பி.ஆர்.ஓ. பிலிம் நியூஸ் ஆனந்தன்' என்று டைட்டில் கார்டு போட்டவர் பாண்டிச் சேரியில் இருந்த தயாரிப்பாளர் ஒருவர். படம் - 'நாட்டுக்கொரு நல்லவன்',.

அதில் இருந்து மற்ற டைரக்டர் களும் பி.ஆர்.ஓ. என்று டைட்டில் கார்டு போட ஆரம்பித்தார்கள். இந்த விஷயம் ஆரம்பித்தது 1958ஆம் ஆண்டிலே.

எம்.ஜி.ஆர். பத்திரிகையாளர் காட் சிக்கு ஏற்பாடு செய்தால் காலை சரியாக 10 மணிக்குதான் தொடங்கு வார். பத்திரிகையாளர்களுடன் படம் பார்ப்பார். நேரம் தவறி 10.10க்கு யார் வந்தாலும் உள்ளே விடமாட்டார். அப்படியொரு கண்டிப்பு இருக்கும்.

# தவமும்

# பலித்தது

சுதந்திர வேட்கை தணியாத நிலையில் நாட்டின் விடுதலைக்காக விறுகொண்டெழுந்த ஸ்ரீஅரவிந்தருள்ளம்,இறைவனின் குரல் கேட்டு, பணிந்தது. "சுதந்திரம் கிடைப்பது நிச்சயம். நான் வேறு பணியை நிர்ணயித்துள்ளேன். புதுவைக்குப் போ" என இறைவனின் குரல் ஆணையிட்டதை ஏற்று புதுவைக்கு வந்தார் பகவான். அவரை 'கிருஷ்ணா' எனக் கண்டு உலகெங்கும் தேடிய அன்னை, புதுவையில் அவரைக் கண்டு இவரே நான் தேடும் கிருஷ்ணா என அவருடன் நிரந்தரமாகத் தங்கினார்.

இந்திய ரிஷிகள் மலைகளில் வாசம் செய்தனர்.அத்துடன் பக்திப் பெருகும் மனத்தில் வாசம் செய்தனர். இமயமலை தவசிகள் வாழும் இடம். தமிழ்நாடு பக்தர்கள் வாழும் இடம். பக்தர்கள் நிறைந்த தமிழ்நாடு சான்றோருடைய பகுதி ஒன்றையும் அதற்கு சிகரமாக வேதபுரியையும் உடையது. அகத்தியர் வாழ்ந்த இடம் இது என்பது ஆன்மிக மரபு. ஸ்ரீஅரவிந்தர் வேரூன்றியது அந்த வேதபுரியில்.

அன்னையும், ஸ்ரீஅரவிந்தரும் அவதாரபுருஷர்கள். அவர்களை தெய்வமாக வழிபடலாம். தெய்வங்களுக்கும் மேலாகக் கருதும் பாங்குடையது பக்தருள்ளம். அவர்கள் மேற்கொண்டது பூரணயோகம். மனிதன் தன்னால் செய்யமுடியாது என உணரும் யோகம் பூரணயோகம். அவர்களை அறிவது தவம், யோகம். அவர்கள் எழுதிய நூல்களைப் பயில்வது தவம் பலிப்பதாகும். பகவான் ஸ்ரீஅரவிந்தர் எழுதிய யோக நூல்களில் தலை சிறந்தது,

## LIFE DIVINE

இதைப் பயில்வது தவம் பலிப்பதாகும். இதை உடன் வைத்திருப்பது அன்னார் திருவுடலால் தீண்டப்படுவதாகும். அதனை உள்ளுவது உயிருக்கு உயர்வு. மனித வாழ்வை தெய்வ வாழ்வாக மாற்றும் தத்துவம் ஸ்ரீஅரவிந்தம். ஸ்ரீஅரவிந்தம் மணப்பது *Life Divine.* அவரது அடுத்த முக்கிய யோகநூல் *Synthesis of Yoga.*

காட்சி முடிந்ததும் மதிய உணவு இருக்கும்.

இந்த மாதிரி நான் 58 ஆம் ஆண்டிலேர்ந்து வளர்ந்து வருகிற நேரத்திலே சிவாஜியோட நூறாவது படம் ரிலீசானது. நூறாவது படத்தை முன்னிட்டு அவர் நடித்த 100 படங்களோட ஸ்டில்லை வைத்து ஒரு காட்சி நடத்தினேன். மக்களிடம் பெரிய வரவேற்பு கிடைத்தது. மலர் ஒண்ணும் வெளியிட்டுப் பலரோட ஆதரவைப் பெற்றேன்.

அடுத்தடுத்து கே.ஆர். விஜயா, ஜெயலலிதா, சிவகுமார் ஆகியோரின் 100 ஆவது படத்தைக் கொண்டாடி னேன். முக்கியமாக மலர் தயாரித்து வெளியிட்டேன். இனங்களோட ஆதர வும், கலைஞர்களோட ஒத்துழைப்பும் கிடைக்கக் கிடைக்கத் தனியாக ஒரு பொருட்காட்சி வைக்கிற தைரியம் வந்தது.

இந்த நேரத்திலேதான் தமிழ் சினிமாவுக்குப் பொன்விழா ஆண்டு வந்தது. சின்னச் சின்னப் பொருட் காட்சி வைத்துப் புகழ் கிடைத்த நேரத்திலே பெரிய பொருட்காட்சியாக தமிழ் சினிமா பொன் விழாப் பொருட்காட்சியைக் கொண்டாட முடிவு செய்தேன். 'லக்ஸ்' கம்பெனிக் காரங்க ஸ்பான்ஸர்ஷிப் செய்ய முன் வந்தார்கள். இதைக் கேள்விப்பட்ட பிலிம் சேம்பர் 'ஏன் எங்களோட சேர்ந்து செய்யக் கூடாது? என்று கேட் டார்கள். 'நல்லாச் செய்யலாமே'ன்னு ஒத்துக்கிட்டேன்.

கோல்டன் ஜூப்ளி கமிட்டி அமைத்து ஒரு வாரம் பொருட்காட்சி யோட பெரிய விழாவும் நடத்த முடிவு செய்தார்கள். அதற்கான செலவைக் கணக்குப் போட்டுப் பார்த்தால் இரண்டு கோடி ரூபாய்கிட்டே வரவே, 'கப்சிப்'ன்னு அடங்கிக் காணாமல் போயிட்டாங்க.

கொஞ்ச நாள் கழித்து ஒருநாள் மட்டும் நடத்தலாம்னு சொன்னாங்க. 'என்னிடம் இவ்வளவு கலெக்ஷன் இருக்கு. இதை ஒரு நாள்லே யாராலும் பார்க்க முடியாது. அத னாலே ஒரு நாள் என்றால் வேண் டாம்' என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டேன்.

'சரி நாங்களே நடத்திக்கிறோம். ஆனால் பொருட்காட்சி முடிந்ததும் உங்கள் கலெக்ஷன் மொத்தத்தை யும் எங்களுக்குக் கொடுத்துடணும். முப்பது ஆயிரம் ரூபாய் கொடுத் திடறோம்' என்று சொன்னார்கள்.

எனக்கு வந்ததே கோபம். நேரே வெளியே வந்துட்டேன். கோல்டன் ஜூப்ளி கமிட்டி விஷயமாக வந்திருந்த பழனியப்பன் ராமசாமி, என் வீட் டிலே பார்த்த கலெக்ஷனை மதிப் பிட்டு எனக்கு உதவி பண்ண முன் வந்தார். அதுவும் இடப் பற்றாக்குறை காரணமாக சரிப்பட்டு வரலை.

மனதை தளர விடவில்லை. அதற்கு பிறகு ஏழு நாள் நிகழ்ச்சி யாக ராயப்பேட்டை ஆதர்ஸ் வித் யாலயாவில் பள்ளி முதல்வர் ஒத் துழைப்பிலே ஆர்.எம். வீரப்பன் திறந்து வைக்கப் பொருட்காட்சியை என் சொந்தப் பணத்தைச் செலவு பண்ணிச் சிறப்பாக நடத்தினேன்.

ஏழு நாள்களுக்கு ஏழு கலைஞர் களைக் கௌரவித்தேன். அதி லேர்ந்து சேம்பர் மேலேயும் பெரும் புள்ளின்னு சொல்லிக் கொள்கிற வர்கள் மேலேயும் மகா வெறுப்பு.

ஒண்ணுமில்லை. திடீர்னு ஒரு மூத்த கலைஞர் இறந்து விட்டார் என்று வையுங்க. உடனே பத்திரிகைக் காரங்க ஓடிவந்து படம் கேட்கிறாங்க. இதோ வீட்டிலே இருக்கு. சட்டென்று எடுத்துக் கொடுத்து உதவ முடியுது. சேம்பர் தருகிற முப்பதாயிரம் ரூபாயை வாங்கிட்டு எல்லா கலெக் ஷனும் உள்ளே தூங்கினால் யாருக்கு லாபம்? அதான் என் வெறுப்புக்குக் காரணம்.

இதுவரை என்னிடம் 2000 தென்னிந்தியப் படங்களோட முழு விவரங்கள், 10000 பட ஸ்டில்ஸ், 3000 பட சம்பந்தப்பட்ட புத்தகங்கள் – பாட்டுப் புத்தகங்கள் சேர்த்து வைத் திருக்கிறேன்.

இதையெல்லாம் ரசிகர்கள் பார்த்து வியக்கணும்னு நினைத்து சுற் றுலாப் பொருட்காட்சியிலே நிறைய நஷ்டப்பட்டு ஸ்டால் வைத்தேன். மூன்று வருஷம் தொடர்ச்சியாகச் சிறந்த ஸ்டாலுக்கான விருது என் அரங்கத்திற்குக் கிடைத்தது மகிழ்ச்சி யாக இருக்கிறது.

1978 ஆம் ஆண்டு 'திரைக்கலைத் தொகுப்பு' என்று சினிமா நடிகர், நடிகைகள், தொழில்நுட்பக் கலை ஞர்கள், தயாரிப்பாளர்கள் மற்றும் சினிமா சம்பந்தப்பட்ட எல்லாரோட முகவரிகளோடு ஒரு புத்தகம் வெளி யிட்டேன். அது ரொம்ப வித்தியாச மாக, உபயோகமாக இருந்தது என்று பலர் பாராட்டினார்கள்.

சினிமா சரித்திர ஆராய்ச்சியாளர் என்ற ஒதுக்கீட்டில் 'கலைமாமணி' பட்டம் கிடைத்தது.

தென்னிந்திய சினிமா சம்பந்தப் பட்ட துறையில் ஆராய்ச்சி செய்கிற வர்கள் ஜெர்மனி, பிரான்ஸ், அமெரிக்கா, சுவிட்சர்லாந்து ஆகிய நாடுகளில் இருந்தெல்லாம் வந்து என் கலெக்ஷனை வைத்து ஆராய்ச்சி செய்துள்ளார்கள். இதுவரை அப்படி 60 பேர் ஆய்வு செய்து டாக்டரேட் பட்டம் வாங்கியுள்ளனர்.

என்னோட 60 ஆவது பிறந்த நாள் மணிவிழாவுக்கு ஒரு குழு அமைக்கப் பட்டது. சிவாஜி சேர்மனாகவும், தலைவராக ஏவி.எம். சரவணனும், செயலாளராக சிவகுமாரும் இருந்து ஒரு லட்சத்து அறுபதாயிரம் ரூபாய் கொடுத்து என்னைக் கௌரவித் தார்கள். கலைஞர் தலைமையில் விழா நடந்தது.

எம்.ஜி.ஆர். மறைவுக்குப் பிறகு எம்.ஜி.ஆர். நினைவாலயத்தில் அவர் நடித்த 138 படங்களோட ஸ்டில்களை அங்கு வைக்க ஓர் ஏற்பாடு. இதற்கு யாரும் உதவ முன்வராத நேரத்தில் நடிகர் சத்யராஜ் மொத்தச் செலவை யும் தானே ஏற்று உதவினார்.

ஆபாவாணனின் 'வாரிசுகள் உரு வாகிறார்கள்' முயற்சியில் என் மகன் டைமண்ட் பாபுவும் இப்போது பி.ஆர்.ஓ.வாக நல்ல முறையில் பணி யாற்றிக் கொண்டிருக்கிறார்.

என்னோடு பணியாற்றிய கிளாமர் கிருஷ்ணமூர்த்தி இப்போது பெரிய அளவில் பி.ஆர்.ஓ.வாக இருப்பது மகிழ்ச்சியாக உள்ளது.

இப்போதெல்லாம் பி.ஆர்.ஓ. வேலை என்றால் பத்திரிகையாளர் காட்சிக்கு ஏற்பாடு செய்து பட ஸ்டில் கொடுப்பதோடு முடிந்துப் போகு துன்னு நினைத்துச் செயல்படு கிறார்கள். இது ஒரு நல்ல வளர்ச்சி இல்லை.

குறிப்பாக, தமிழ்நாட்டில் சினிமா நடிகர் – நடிகைகள் மீதுள்ள ஆர்வம், சினிமாக் கலை மீது இல்லேன்னுதான் சொல்வேன். ஆனால் மற்ற தென்னிந் திய மொழிகளான மலையாளம், தெலுங்கு, கன்னடத்திலே சினிமா வோட மற்ற நுட்பங்களின் மேலேயும் உள்ள ஈடுபாடு, தமிழ்நாட்டு ரசிகர் களுக்குக் குறைவுதான். இதை நான் ஹைதராபாத், திருவனந்தபுரம் போன்ற இடங்களில் பொருட்காட்சி நடத்தியபோது தெளிவாகப் புரிந்து கொண்டேன்.

தமிழ் அன்பர்கள் அத்தனை பேருக்கும் 'அமுதசுரபி' மூலமாக தீபாவளி வாழ்த்துகளைச் சொல்லி விடுங்கள்".

விடை பெற்றார் பிலிம் நியூஸ் ஆனந்தன். உரையாடலின் இடையில் இரண்டு நிமிடங்களுக்கு ஒருமுறை தொலைபேசி மணி அழைத்து கலைஞர்களின் முகவரிகளை, படப் பிடிப்பு நடக்கும் இடங்களை, பட சம்பந்தமான பல்வேறு கேள்வி களைக் கேட்டது. சளைக்காமல் சொல்லிவிட்டு வருபவர் – உரையாட லில் பாதியில் நின்ற இடத்தில் இருந்து புள்ளி பிசகாமல் தொடர்ந் தது வியப்பாக இருந்தது. ○



# இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க!

புவனேஸ்வரிதாசன்

'சிவபெருமானே பஞ்சபூதங்களுக்குத் தலைவன், நவக்கிரகங்களுக்கு இறைவன், தேவேந்திரனுக்கும் மேலானவன். உலக பாரத்தைத் தாங்குபவன், ஏழைக்கு இரங்கும் வள்ளல்' எனப் பெரிய புராணம் இறைவனைப் பற்றி வர்ணிக்கும்.

"நம: பார்வதீபதயே ஹர ஹர மகாதேவா, தென்னாடுடைய சிவனே போற்றி, என்னாட்டவர்க்கும் இறைவா போற்றி, சம்போ மகாதேவா" என்றெல்லாம் நெக்குருக வேண்டுவர். அன்பின் நெகிழ்ச்சியால் அந்த எல்லாம் வல்ல இறைவனைப் போற்றுவர். வழிபடுவர்க்கு வாரி வழங்கும் வள்ளல் சிவபெருமான். அன்பே வடிவானவன் இறைவன். சிவன் என்ற சொல்லுக்கு மங்களம் என்ற பொருள் உண்டு. கருணாஸமுத்திரம் என்று சொல்வார்களே அந்த இறைவன் சிவபெருமான். அடியார்களின் அன்பு பொருட்டு பரமேஸ்வரன் நடத்திய திருவிளையாடல்கள் அநேகம். அதற்காக எடுத்த அவசரத் தோன்றல் அற்புதம். பிட்டுக்கு மண் சுமந்தான், பிரம்படி பட்டான், செருப்புக் காலால் மிதிபட்டான், ஏன் கொடிய விஷமே உண்டான். எங்கும் ஸர்வ வியாபியாய் இருந்து பக்தர்களுக்கு அருளும் பேரருளான் ஈஸ்வரன். கருணை வள்ளல் என்று ஆன்றோர்கள் அன்பாய் அழைப்பார்கள். மெய்யடியார்கள் உய்வதற்குத் தனிக் கருணைப் பெருங்கடலாய் திகழ்பவன் சிவபெருமான். அடியார்கள் வாயால் தன்னைப் பாடவேண்டும் என்பதற்காகவே இறைவன் எடுத்த திருக்கோலங்கள் நடத்திய லீலா வினோதங்கள் மெய்சிலிர்க்க வைக்கும்.

✦ உத்திராகரம் கிரீடம் அணிந்து சிவபூஜை செய்கிறார் ஸ்ரீமத் புவனேச்வரி ஸ்வாமிகள்.



✦ மரகத சிவலிங்கங்களை ஆராதனைக்கு எடுத்துச் செல்கிறார் ஸ்ரீமத் பரத்வாஜ்.

இறைவன் உருவம் அற்றவன் என்பதற்கு சிவவழிபாடு ஒரு பெரிய சான்று. 'நீள்நாகம் அணிந்தவர்க்கு நிகழ்குறியாம் சிவலிங்கம்' என்பது பெரியபுராண வாக்கு. நீள்நாகம் என்றால் திருநீறு என்று பொருள் வழங்கும். திருநீற்றின் சிறப்பை விளக்கவே இறைவன் காடுடைய சுடலைப் பொடியை அங்கமெல்லாம் பூசிக்கொள்கிறான். இவன் வசிக்குமிடம் மகாச்மாசானம் என்று சொல்லப்படுகிற மயானம். எல்லா ஆன்மாக்களும் இறுதியில் போய்ச் சேருகிற இடம் மயானம். ஆன்மாக்கள் உய்வதற்கு இறைவன் மயானத்திலே இருக்கிறான். என்னே இவனது பெருங்கருணை. இந்த இறைவனை லிங்கமாய் வழிபடுவது தொன்று தொட்டு வருகிற மரபு.

'தெள்ளந்தெளிந்தார்க்கு ஜீவன் சிவலிங்கம்'. பக்தர்களின் ஜீவனே சிவலிங்கமாம். ஜீவனே சிவமாயிற்று என்று இந்த மேற்கண்ட வாக்கியம் விளக்குகிறது. சிவபிரானின் ராஜதானி காசி க்ஷேத்திரம். எல்லா ஜீவர்களையும் ரக்ஷிக்கும் பொருட்டே காசியில் அரசோச்சுகிறான். ஆதிசங்கரர் திருக்கயிலாயத்திலிருந்து கொண்டு வந்த ஸ்படிக லிங்கங்களை நம் பாரதத்தில் நான்கு பீடங்களில் ஸ்தாபித்தார். ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபகர். இறைவனே லோககுரு. ஆதிசங்கரர் ஜகத்குரு. அந்த ஆதிசங்கரர் வழியே இன்று போற்றுதற்குரிய அருள் பீடங்கள். அந்த பீடங்களின் ஆசார்யர்கள் வரிசையிலே இன்று மெய்த்தவவேந்தராய் திகழ்பவர் பரமஹம்ஸ ஸ்ரீபுவனேஸ்வரி சுவாமிகள்.

புவனேஸ்வரி சுவாமிகள் ஸ்படிக லிங்கமொன்றினைத் தமது பாரத்வாஜ ஆச்ரமத்தில் பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள். அந்த ஸ்படிக லிங்கத்தினை பிரதோஷ காலம், மாத சிவராத்திரி, மகா சிவராத்திரி போன்ற தினங்களில் பக்தர்கள் தங்கள் கைகளினால் தொட்டு, அபிஷேகம் செய்து, அர்ச்சனை செய்யலாம். 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற உயர் நோக்கோடு சுவாமிகள் இந்த ஏற்பாட்டினைச் செய்திருக்கிறார்கள். மகாசிவராத்திரி நன்னாளில் நடந்த வைபவத்தை இந்தக் கட்டுரையில் படித்து ஆனந்தம் கொள்ளலாம்.

சென்னை அம்பத்தூர் பஸ் நிலையத்திலிருந்து ரெட்ஹில்ஸ் சாலையில் அமைந்துள்ள கங்கை நகர் பகுதியில் ஸ்ரீபாரத்வாஜ ஆச்ரமத்தில் ஒரே விழாக்கோலம். பக்தர்கள் நெற்றியில் விபூதிப்பூச்சு, உத்திராக்ஷ மாலைகள் கழுத்தில். மாலை ஏழு மணி, பஞ்ச வாத்தியம் இசைத்தட்டில் முழங்குகிறது. சங்கின் ஒலி ஓங்காரத்தை நிரப்புகிறது. மணியோசை சிவ பஞ்சாட்சரத்தைப் பரப்புகிறது.

"சிவசிவ ஹர ஹர, ஹர ஹர சிவ சிவ" - இந்த திருமந்திரம் ஜயகோஷமிட அங்கு புவனேஸ்வரி சுவாமிகள் தேஜோமயமாய், பொன்னார் மேனியராய் அகில உலகத்துக்கெல்லாம் ஈஸ்வரனை - ஸ்படிக லிங்கப் பெருமானை இரு கைகளிலும் தாங்கி ஆச்ரம மேல் விதானத்தில் அமைந்துள்ள கைலாய மண்டபத்தில் எழுந்தருளச் செய்கிறார். மரகத ஆவுடையார் ஸ்படிக லிங்கத்தைத் தாங்குகிறது. ஸ்படிக லிங்கத்தின் திருநாமம் அம்ருத ஜ்யோதீலிங்கேஸ்வரர். விஷத்தை முறிப்பது அம்ருதம், அஞ்ஞானத்தைப் போக்குவது ஞானம் என்ற ஜோதி. காமம் குரோதம் என்ற விஷத்தைப் போக்கி, அஞ்ஞானம் என்ற இருட்டை விலக்க ஞான ஜோதியாய் - ஸ்படிகலிங்கமாய் காட்சி கொடுக்கிறான் இறைவன். சுத்த ஸ்படிகம் என்று சொல்வார்களே அதேபோல நிர்மலமாய் இறைவன் பிரகாசிக்கிறான். நேபாளத்தில் பசுபதிநாத் சுவாமியின் தேவாலயத்தில் பூஜிக்கப்பட்டுக் கொண்டு வந்த லிங்கம். புவனேஸ்வரி சுவாமிகள், லட்சக்கணக்கில் பசுபதிநாத் க்ஷேத்திரத்தில் சிவபஞ்சாக்ஷரத்தை உருவேற்றி, சக்தி ஏற்றி அமைத்த லிங்கம் இந்த ஸ்படிக லிங்கம். இதனுள்ளே ஸ்வர்ண ரேகை என்பதான ஒரு கோடு ஓடுகிறது.

மூகாம்பிகை சந்நிதியில் உள்ளது போலவே இங்கும் அதே காட்சி. இந்த ஸ்படிக லிங்கத்தினைச் சுற்றி



திசைக்கு ஒன்றாக நான்கு மரகத சிவலிங்கங்கள் அமையப் பெற்றிருக்கின்றன. சிவபூஜாராதனையை பக்தியோடு தொடங்குகிறார் சுவாமிகள். 'ஓம் நமோ பகவதே ருத்ராய' என ருத்ரம் காதிலே தேனாய் பாய்கிறது. யஜுர் வேதத்தில் உள்ளது ருத்ரம். இதனைச் சொல்லித்தான் அபிஷேகம் செய்யவேண்டும். இதனைச் சொல்வதால் அத்தனை செல்வங்களும் சொல்பவரது இடத்திலே தானே வந்து சேருகிறது. ருத்ர ஜபத்தால் மகிழ்பவன் இறைவன். எந்த வேதம் கற்றாலும், யஜுர் வேதத்திலுள்ள ருத்ரத்தைச் சொல்வதினாலேயே எம்பெருமான் ஆனந்தம் கொள்கிறான். ருத்ரத்தில் ரகசியமாய் அடங்கியது சிவபஞ்சாக்ஷரமான 'ஓம் நமசிவாய' மந்திரம். ஏழு பண்டிதர்கள் ஸ்வரத்தோடு ருத்ரம் சொல்கிறார்கள். இந்த ஆராதனம், பூவுலகை மறக்கச் செய்கிறது. பாலும் தேனும், தயிறும், இளநீரும் இறைவன் திருமேனிக்கு சுவாமிகள் அபிஷேகம் செய்கிறார்கள். சந்தனச்சாந்து ஈஸ்வரனை மறைக்கிறது. குங்குமப்பூக்கலவை எம்பிரானின் சிரஸில் சூரியனாய் மின்னுகிறது. ஸ்படிக லிங்கத்தினை எடுத்துத் தம் கையில் தாங்கி வஸ்திரத்தால் உலர்த்தி சந்தனத்தை வட்டமாய் இடுகிறார் சுவாமிகள்.

சிவ ஸஹஸ்ரநாமம் பிரணவத்துடன் திருத்தமாய் ஸ்ரீபாரத்வாஜருடைய திருவாயிலிருந்து வெளிப்படுகிறது. சாந்தம் தவழும் முகம், பாலா தேவி மந்திரத்தை உருவேற்றி பிரகாசிக்கும் கண்கள். தனது தந்தை புவனேஸ்வரி சுவாமிகளிடத்தில் உபதேசம் பெற்ற அருள். பரத்வாஜ் ஒவ்வொரு சிவநாமாவளியைக் கூற சுவாமிகள் சந்தனக் கலவையில் வில்வத்தை ஒவ்வொன்றாய் தோய்த்து ஸ்படிக லிங்கத்தின் மீது அர்ச்சிக்கிறார். 'ஓம் நமசிவாய' என நாமாவளிக்கு முன்னும் பின்னும் பஞ்சாட்சரத்தை இணைத்து பக்தர்கள் எல்லோரும் ஒரே குரலுடன் ஓங்கி விண்ணைப் பிளக்கின்ற சப்தம். அது சப்தமல்ல மந்திர ஒலியின் நாதம். சிவபெருமானுக்குரிய பதினோரு ஸஹஸ்ரநாமங்கள் கூறி அர்ச்சனை. மந்திர உச்சாடனத்தில் லயிக்கின்றனர் அனைவரும்.

இப்படிப் பதினோரு தடவை அபிஷேகம். அபிஷேகம் முடிந்து வில்வார்ச்சனை, மூன்று தளம், பதினோரு தளம் அடங்கிய மகாவில்வம், குவியல் குவியலாய் ஈஸ்வரனின் மேனியை முழுவதுமாய்த் தழுவுகிறது. வில்வக் காட்டிலே முழுச் சந்திரன் போன்று ஸ்படிக லிங்கம் ஜொலிக்கிறது. மாலை ஏழு மணிக்கு ஆரம்பித்த சிவராத்திரி மகோத்ஸவம் மறுநாள் விடியலில் முடிகிறது. வாத்தியம் முழங்க, வேத கோஷத்தோடு உபசாரம், களியும், பிட்டும், பாலன்னமும், கனிவர்க்கமும் சிவபிரானுக்குப் படைக்கிறார் சுவாமிகள். அகிற்புகையும் சாம்பிராணிப் புகையும் அந்த மண்டபத்துக்குப் புனிதம் சேர்க்கிறது. பனிமலை இங்கு வந்து விட்டதோ என்று எண்ணத் தோன்றுகிறது. "சம்போ மகாதேவா சம்போ மகாதேவா சம்போ மகாதேவா சம்போ" என்று பஜனைப் பாடல் பாடிக் கொண்டு அந்த மண்டபத்தை வலம் வருகிறார்கள். புவனேஸ்வரி சுவாமிகள் அவர் பின்னால் ஸ்ரீபரத்வாஜ், அவருக்குப் பின்னால் ஏழுபண்டிதர்கள். மஞ்சள் ஆடை அணிந்து, அங்கமெல்லாம் உத்திராக்ஷம், நாவுக்கரசர் சொன்னதுபோல், கழுத்திலே உத்திராக்ஷம், நாவிலே தேவாரம், மனத்திலே சிவநாமம் - அதே காட்சிதான் இங்கேயும். இதே போன்றுதான் தீபாவளித் திருநாளன்றும் காசியிலே ஸ்ரீவிஸ்வநாத சுவாமிக்கு நடைபெறும் ஸப்தரிஷி போன்றே இந்த ஆச்ரமத்திலே நடக்கும்.

கைலயங்கிரியிலே அன்று விண்ணாட்டாவர்கள் கண்ணாரக் கண்டார்களே அதே அற்புதக் காட்சி, இன்று மகாசிவராத்திரியில் இறைவனைக் கண்டார்கள் பக்தர்கள். 'ஓம் நவசிவாய' என ஆயிரம் முறை நீட்டிச் சிறியவர் முதல் பெரியவர் வரை வண்டின் ரீங்காரம் போன்று நாம ஜபம் ஜபிக்க மறுபடி விபூதி வர்ஷிக்கிறார் சுவாமிகள். லோக பூபதி, விபூதி அபிஷேகத்தால் ஆனந்தம் கொள்கிறான். ருத்ராக்ஷ மாலைகள் ஸ்படிக லிங்கத்திற்கு அணிகலனாய் சாத்தப்படுகிறது, பட்டாடை அலங்காரத்திற்காக ஒப்பனை செய்யப்படுகிறது. கண்டாமணி ஒலிக்கிறது. உடுக்கை அடிக்கப்படுகிறது. பக்தர்கள் பரவசப்படுகிறார்கள். சுவாமிகளின் அணுக்கத் தொண்டர்கள் சுவாமிகளின் தலையில் உத்திராக்ஷக் கிரீடத்தை அணிவிக்கிறார்கள். ஆயிரம் உத்திராக்ஷங்களால் ஆன கிரீடம் அது. சிவக்கோலம் - சுவாமிகள் பூண எல்லாம் சிவமயம். மண்ணுலகை எல்லோரும் மறந்தனர். சிவபிரானுக்குக் கண்ணேறு பட்டுவிடும் என்பதற்காக கற்பூர ஜோதி ஏற்றுகிறார் சுவாமிகள். 'ஹர ஹர சிவ சிவ' என்று கன்னத்தில் போட்டுக் கொள்கிறார்கள். நந்தி தேவன் எப்போதும் சிவபிரானைப் பார்த்து மகிழ்வானே அதே மகிழ்ச்சி. பத்து மணி நேரம் நடந்த இந்த ஆராதனையில் தளர்ச்சி ஏற்படவில்லை. தொய்வில்லை. மாறாய், சிவசக்தி உள்ளே புகுந்தது போன்ற உணர்வு. பூஜித்த வில்வமும், விபூதியும் சுவாமிகள் அருளுகிறார். இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க - சிவபுராணத்தைப் புலம்பிக்கொண்டே கண்களில் கண்ணீர் குளமாய் பக்தர்கள் தரிசித்துக் கொண்டே நீங்காமல் நீங்கினார்கள். கண்ணை விட்டுப் போனாலும் கருத்தை விட்டுப் போகாமல் இருந்தது இந்த தரிசனம்!

காலத்தினால் அழிபவை
கவிதைகள் அல்ல - உயர்
கவிதைகள்தாம் பிறப்பதெல்லாம்
காலத்தை வெல்ல
ஞாலத்தினை இயக்குவதோ
கவிதையெனும் தேன் - அந்தக்
கவிதைகளைப் படைப்போனே
கவிஞன் ஆகின்றான்.

இறப்பறியாக் கவிதைகளை
இயற்றிடும் போது - முடிவாம்
இறப்புவரும் என்ற அச்சம்
கவிஞனுக் கேது
பறவைபோல வாழ்வதிலே
பரவசம் கொள்வான் - அந்தப்
பரவத்தில் பாரைக் கவரும்
பாக்களைச் சொல்வான்

புவிபுகழும் இறப்பில் அவன்
புதிதாய் எழுவான்! - இந்தப்
பொய் உடம்பை என்றும் அவன்
பொருளாய் மதியான்!
கவிதை எனும் அவன் உடம்போ
காலத்தின் வெற்றி! - என்றும்
காணுமந்த உடலுக்குள்ளே
கனலும் சக்தி



இளங்கம்பன்




இருபதாம் நூற்றாண்டு மக்களாகிய நாமெல்லாம் இரண்டு தவிர்க்க முடியாத பழக்கங்களுக்கு அடிமையாகி யிருக்கிறோம்.

ஒன்று காலை காப்பி, மற்றது காலை நியூஸ் பேப்பர்.

இந்த இரண்டில் ஒன்றைத்தரத் தவறிவிட்டாலும் போயிற்று. அன்று முழுவதும் ஏதோ ஒன்றை முக்கியமான ஒன்றை – பறிகொடுத்துவிட்டது போலவே உணர்கிறோம்.

காலையில் எழுந்ததும் 'செய்திப் பத்திரிகை'யைப் படித்துவிட்ட பிறகுதான் மற்ற காரியங்களில் நிம்மதியாக ஈடுபட முடிகிறது. நேற்றிரவு நாம் விட்டுவிட்டு வந்த ஒரு உலகத்தோடு இன்று காலையில் நம்மைத் தொடர்புபடுத்தி நம்மை உலக நடப்புகளுடன் "நெருக்கமாக கைகோத்துக் கொண்டு" வாழ்க்கைப் பயணத்தில் மேல் செல்ல உதவுகிறது செய்திப் பத்திரிகை.

பத்திரிகைகள் இல்லாத நாடே இன்று இல்லை. சுதந்திரமாகவோ, அரை குறை சுதந்திரத்துடனேயோ, அரசாங்கக் கருவியாகவோ, – ஏதோ ஒரு விதத்தில் எல்லா நாட்டிலும் பத்திரிகைகள் இருக்கின்றன.

காரணம், நாட்டை ஆளும் யந்திரத்திற்கும் நாட்டு மக்களுக்கும் இடையே தவிர்க்க முடியாத ஒரே பாலமாகப் 'பத்திரிகை' அமைந்துவிட்டிருக்கிறது.

அந்தப் பாலம் சுதந்திரப் பாலமாக அமைந்துள்ள நாடுகளில் ஜெர்னலிசம்' மகத்தான சாதனைகளைக் கண்டிருக்கிறது. மகத்தான 'பேனா' மன்னர்கள் தோன்றி இருக்கிறார்கள்; அவர்களுடைய ஒவ்வொரு எழுத்தும் தேசத்துக்கு வழிகாட்டும் 'சர்ச் லைட்'டாக இருந்து வழிநடத்திச் சென்றிருக்கிறது.

பதவி ஆசை, பண ஆசை காரணமாக எளிதில் தடம் புரண்டு விடக்கூடிய இயல்பு படைத்த ஆட்சியாளர்களுக்கு 'லகான்' போட்டு அவர்கள் வழி தவறாது லட்சியம் தவறாது சரியான பாதையில் இட்டுச் சென்றிருக்கிறது.

ஜனநாயகத்திற்கு உரம் ஊட்டியிருக்கிறது; ஆக்கம் நல்கியிருக்கிறது; வளர்ந்திருக்கிறது; புகழ் சேர்த்து இருக்கிறது.

அது மட்டுமல்ல, வெளி வராதிருந்த பல அநீதிகளைப் பத்திரிகைகள் அம்பலப்படுத்தியிருக்கின்றன. அரசியல் சதிகளை வெளிப்படுத்தியிருக்கின்றன. வரப்போகும் தீங்கை மோப்பம் பிடித்து எச்சரித்திருக்கின்றன.

பத்திரிகை நிருபரின் 'கண்' சமூகத்தின் விழிப்புள்ள ஒரு"ராடார் கண்". பத்திரிகைகளின் தலையங்கம் தேசத்தின் முன் வழிகாட்டிச் செல்லும் கைவிளக்கு".

பாராளுமன்றத்துக்கோ, சட்டமன்றத்துக்கோ தேர்ந்து எடுக்கப்பட்ட மக்கள் பிரதிநிதிகள் தங்கள் கடமைகளில் இருந்து நழுவிவிடாமல் பத்திரிகைகள் ஆற்றிவரும் பணிகள் மகத்தானவை.

மக்கள் பிரதிநிதிகள் நடவடிக்கைகளை அன்றாடம் மக்கள் முன் வைத்துக் கொண்டிருக்கின்றன, பத்திரிகைகள். இதனால் அவர்கள் மிகுந்த விழிப்புடன் நடந்து கொண்டு வர வேண்டிய நிலையில் இருக்கிறார்கள்.

நாட்டு மக்களின் அறிவைத் தூண்டி வளர்ப்பதிலும் பத்திரிகைகள் மிகச் சிறந்த சேவை செய்து வருகின்றன.

உலகில் எங்கோ ஒரு மூலையில் ஒரு விஞ்ஞான அற்புதம் நிகழ்ந்தால் அதை மக்களுக்கு, மக்கள் புரிந்து கொள்ளக்கூடிய மொழிகளிலேயே எழுதிப் பத்திரிகைகள் வெளியிடுகின்றன. மிகச் சிறந்த விஞ்ஞான மேதைகள் மட்டுமே விளங்கிக் கொள்ளக்கூடிய விஷயத்தைக்கூட சாதாரண எழுதப்படிக்கத் தெரிந்த பாமரனும் புரிந்துகொள்ளும்படிச் செய்யும் சாதனைகளைப் பத்திரிகைகள் செய்து வருகின்றன. மக்களின் தரத்தை உயர்த்தி வருகின்றன.

பத்திரிகைகள் இல்லை என்றால் உலகில் நடைபெறும் பல விஷயங்கள் மக்கள் மத்தியில் பரவ வழி இல்லாமலே போய்விடும்.

நாட்டில் இருக்கும் பத்திரிகைகளைப் படித்து, உலகத்துக்கும் அந்த நாட்டுக்கும் தொடர்பு ஏற்படுத்தி, அங்குள்ள மக்களையும் விழிப்புடன் இருக்கச் செய்யும் மகத்தான பணிகளைச் செய்து வருகின்றன பத்திரிகைகள்.

மொழி வளர்ச்சியில் பத்திரிகைகள் ஆற்றிவரும் பங்கு மிகப் பெரியது. திறமை வாய்ந்த பல்கலைக் கழகங்கள்கூடச் செய்ய முடியாத சாதனையைப் பத்திரிகைகள் மொழித் துறையில் ஆற்றி வருகின்றன. புதுப் புதுச்சொல் ஆக்கங்களையும் புதுப்புது சொற்றொடர்களையும் மக்கள் பேசுகின்ற மொழிகளில் இருந்தே எடுத்து அவர்களுக்குப் புரியும்படியாக அமைத்துக் கொடுக்கின்றன. மிகச் சிக்கலான விஷயங்களைக்கூடச் சிக்கல் இல்லாமல் சொல்லக்கூடிய மொழி ஆற்றலைப் பத்திரிகைகள் வளர்த்து வருகின்றன.

சுதந்திரமாக நடைபெறவேண்டிய நீதிமன்றங்கள் நீதியிலிருந்து வழுவி சர்வாதிகாரிகளின் கைப்பாவைகளாகச் செயல்படாமல் அவைகளைக் கண்காணித்தும் வருகின்றன பத்திரிகைகள்.

நீதிமன்றங்களும், காவல்துறைகளும் கைவிட்ட எத்தனையோ கொலைக் குற்றவாளிகளைப் பத்திரிகை நிருபர்கள் காட்டிக் கொடுத்திருக்கிறார்கள். பத்திரிகைகள் அந்தக்

பகீரதன்

குற்றவாளிகளை மக்கள் மன்றத்தில் கொண்டு வந்து நிறுத்தி இருக்கின்றன. சமுதாயத்துக்குப் பத்திரிகைகள் ஆற்றிவரும் பணியை எடுத்துக் காட்டும் ஆற்றல் எந்த மொழிக்கும் இல்லை. அவ்வளவு சக்தியுடன் அவை செயலாற்றி வருகின்றன.

அமெரிக்காவில் ஒவ்வொரு பத்திரிகையும் நூறு பக்கங்களுக்கு மேல் இருக்கும். விளையாட்டு, மார்க்கெட் பொழுதுபோக்கு, அரசியல், கலை, இலக்கியம் என்று ஒவ்வொன்றுக்கும் ஏழெட்டு பக்கங்கள் இருக்கும். ஒவ்வொரு ஏழெட்டு பக்கத்தையும் ஒரு தனி ஆசிரியர் குழு தினசரி தயாரித்துக் கொடுக்கும். எல்லாவற்றையும் ஒன்றாக்கி முழு பத்திரிகையாகக் கொடுப்பார்கள்.

அப்படிப்பட்டப் பத்திரிகை ஒன்றின் 98 ஆம் பக்கத்தில் சிதறிக்கிடந்த நூற்றுக்கணக்கான செய்திகளுக்கிடையே, ஒரு நாலு வரிச் செய்தி, ஒருநாள் ஒரு நிருபர் கண்ணில் பட்டது. சாதாரணமாக எவர் கவனத்தையும் கவராத ஓர் இடத்தில் அது இருந்தது.

நிருபர்கூட அதைத் தற்செயலாகத்தான் கண்டார். ஒரு பெயரைச் சொல்லி இன்ன ஆசாமியின் மகளின் ஈமச்சடங்கு, நாளை மறுநாள் இன்ன இடத்தில் நடைபெறும் என்று அந்தச் செய்தி சொல்லிற்று.

செய்தியைப் படித்த நிருபருக்குத் தூக்கி வாரிப் போட்டது. அது ஒரு பெரிய புள்ளியின் பெயர். அவர் அமெரிக்கக் காங்கிரஸின் செல்வாக்கு மிக்க உறுப்பினர். அப்பேர்ப்பட்டவரின் மகளுடைய ஈமச்சடங்கு ஏன் இப்படி ஒரு 'மூலை'யில், சத்தமின்றி நடக்கிறது?

இந்தச் சந்தேகம் தோன்றியதும் இதில் ஏதோ மர்மம் இருக்கிறது என்று நிருபர் முடிவுக்கு வந்தார். உடனே விமானத்தைப் பிடித்து, அந்தக் காங்கிரஸ் உறுப்பினரின் மாநிலத்துக்கு ஓடினார். அவர் வீட்டில் யாருமில்லை. எங்கோ ஒரு குக்கிராமத்தில் ஈமச்சடங்குக்கு எல்லாரும் போயிருப்பதாக வேலைக்காரன் தயங்கித் தயங்கிச் சொன்னான். உடனே நிருபர், உள்ளூரில் இருந்த உறுப்பினரின் குடும்ப டாக்டரிடம் ஓடினார். டாக்டர் முதலில் பேட்டியே தர மறுத்தார். பிறகு தாம் இறந்தவளைப் பார்க்கவில்லை என்றும் இறந்துவிட்டதாக சர்டிபிகேட் மட்டும் கொடுத்ததாக அரைகுறையாகச் செய்தி சொன்னார். நிருபர் உடனே கிராமத்துக்கு ஓடினார். அங்கும் எல்லாம் ஊமை நாடகமாக இருந்தது. எந்தத் தகவலையும் அறிய முடியவில்லை. இதற்கிடையே நிருபருடைய உயிருக்கே ஓர் ஆபத்து வந்து பயமுறுத்தியது. நிருபர் நகருக்கு வந்து கவர்னரைப் பார்த்தார். பப்ளிக் பிராசிகியூடரைப் பார்த்தார். இதற்கிடையே இந்த விஷயமாகச் சில பூர்வாங்கச் செய்திகளைத் தம் பத்திரிகையில் வெளியிட்டார். ஏராளமான தடயங்கள், மிரட்டல்கள் எல்லாம் வந்தன. அவருக்குப் போலீஸ் உதவிகூடக் கிடைக்கவில்லை. ஆனால் நிருபர் எப்படியோ சமாளித்து இந்த மரணம் மர்மம் பற்றிப் பத்திரிகைகளின் குரலை எழுப்பி, அதை நாடெங்கும் கேட்கும்படிச் செய்துவிட்டார். அதன் எதிரொலியாக அரசே முன் வந்து பிணத்தைக் கைப்பற்றும்படிக் கட்டளையிட்டது. அவள் கன்னியாக இருந்து கருவுற்றதால், கருக்கலைப்பு செய்யப்பட்டத்தில் இறந்தாள் என்கிற மர்மம் வெளிப்பட்டுவிட்டது.

நிருபர்களின் பணி அத்தகையது. நிருபர்கள் கொண்டுவரும் செய்திகளுக்கு என்ன முக்கியத்துவம் கொடுப்பது என்பதை நிர்ணயிப்பவர்கள் பத்திரிகை ஆசிரியர்கள். அந்த முக்கியத்துவமே சமுதாயத்தில் எதிரொலித்து சமுதாயத்தின் குரலாக உருவெடுக்கிறது.

அதை வன்மையாகவும், உரிய ஆய்வுடனும், தலையங்கப் பகுதியில், சக்தி வாய்ந்த மொழியில் வெளிப்படுத்துபவர் ஆசிரியர்.

பத்திரிகையின் தலையங்கம் மகத்தான சக்தி வாய்ந்தது. தேசத்தின் முக்கியமான பத்திரிகைகளின் கருத்து என்ன என்பதை அந்தந்த தேசத்தின் ஆட்சியாளர்கள் வெகு கவனமாகக் கவனிக்கிறார்கள்; தேசத்தின் தலைவிதியை நிர்ணயிக்கும்போது அதைக் கணக்கில் கொள்கிறார்கள்.

தேச நலனில் ஒப்பற்ற 'காவலனாகப்' பத்திரிகைகள் இருக்கின்றன. அதனாலேயே ஆளும் கட்சியுடனும், ஆட்சியில் உள்ளவர்களிடமும் பல சமயம் அவை முரண்படுகின்றன. கட்சிகளும், கட்சித் தலைவர்களும் தங்கள் கட்சி நலனையும் தங்கள் சொந்த நலனையும் முதன்மையாகக் கருதுகிறார்கள்.

ஆனால் பத்திரிகைகளுக்குக் கட்சிகள் கிடையா. அவை அரசாங்கப் பதவிகளில் எதிலும் இல்லை. ஆகவே அவை தாம் இருக்கும் நாட்டு நலனையே இயற்கையாக, முதன்மையாகக் கருதுகின்றன. அந்த நலனை அடிப்படையாகக் கொண்டே எதையும் ஆராய்கின்றன, எழுதுகின்றன, எப்போதும் நீதியின் நியாயத்தின், சத்தியத்தின் பக்கம் அழுத்தமாக நிற்கின்றன.

ஜப்பான் இரண்டாவது மகா யுத்தத்திற்குப் பிறகு அமெரிக்க ஆதிக்கத்தின் கீழ் வந்தபோது ஒரு சம்பவம் நடைபெற்றது.

ஜப்பானைப் புனருத்தாரணம் செய்யப் பல திட்டங்கள் தீட்டப்பட்டன. அவைகளில் முக்கியமான ஒரு திட்டம் தயாரானதோ, ஜப்பானிய சர்க்காரின் அனுமதி பெற்றதோ, பரம ரகசியமாக வைக்கப்பட்டிருந்தது. ஜப்பானுடன் அது சம்பந்தமாக ஒப்பந்தம் செய்து கொள்ள அமெரிக்க உயர் ராஜ தந்திரி ஒருவர் வந்து இறங்கினதும்தான் ஜப்பானிய பத்திரிகைகளுக்கு விஷயம் தெரிந்தது. உடனே அவை திட்டத்தைக் கண்டித்துக் குரல் எழுப்பின.

சில நாள்களுக்குப் பின் அந்த ராஜ தந்திரி ஜப்பானியப் பத்திரிகையாசிரியர்கள் சிலருடன் தனிப்பட்ட முறையில் பேசிக் கொண்டிருந்தபோது "இத்திட்டம் உங்களுக்கு நல்லது செய்யக்கூடியதல்லவா? ஏன் இதை எதிர்க்கிறீர்கள்?" என்று கேட்டார்.

"அது சரி, ஐயா... ஆனால் முதலில் அதை எங்களிடம் வெளியிட்டு எங்களை அல்லவா நீங்கள் 'கன்வின்ஸ்' செய்திருக்க வேண்டும்? அரசு தரப்பில் இருந்து எது வந்தாலும் எதிர்ப்போம் - அதுதான் அதை ஜனநாயகப் பாதையிலேயே வைத்திருக்கும்" என்றார் அந்தப் பத்திரிகை ஆசிரியர்.

ஜனநாயகம் என்ற மாளிகையை நான்கு பெரும் கற்றூண்கள் தாங்கி நிற்கின்றன. சுதந்திரமான பார்லிமெண்ட், சுதந்திரமான நீதித்துறை, சுதந்திரத்தை நேசிக்கும் மக்கள், சுதந்திரமான பத்திரிகைகள்.

இதனாலேயே பத்திரிகைகளை "Fourth Estate" என்று அழைக்கிறார்கள்.

"ஃபோர்த் எஸ்டேட்" என்று நான் சொல்லும்போது, தங்கள் ஆசாபாச விருப்பு வெறுப்புகளையே செய்திக் கட்டுரையாக்கி 'Flash' செய்யும் நாலாந்தர ஏடுகளான நம் நாட்டு சில மாலை, காலைச் செய்தி ஏடுகளையோ, வார, மாத வெளியீடுகளையோ நான் குறிப்பிடவில்லை.

'ஹிந்து' போன்ற எத்தனையோ மேலை நாட்டு ஆங்கில தினசரிகளையே குறிப்பிடுகிறேன். அவைகளே அரசாங்கத்துக்கு நிகரான பலம் பொருந்திய சக்திகளாகத் திகழ்கின்றன.

ஏன், அரசாங்கங்களையும்விடச் சக்தி வாய்ந்தது. "ஃபோர்த் எஸ்டேட்" அதன் சக்திக்கு எல்லையே கிடையாது.

அந்தச் சக்தியை அதற்குத் தந்தது எது?

## பட்டுப் புழுவும் பாட்டுப் புழுவும்

கலைதேர் கவிஞன் என்பவனோ
கற்பனை என்ற கூடுகட்டி
உலக இன்பம் அத்தனையும்
ஒருங்கே மறந்தே அதனுள்ளே

காலம் எல்லாம் கைதியைப் போல்
கழித்தே கனவிலும் விழித்திருக்கும்
காலை பெய்வதே பாட்டாகும்
கவிதைப் பிறப்பின் தவமாகும்!

தன்னுடை விருப்பம் ஆசையைப்போல்
தாவித் திரிந்தே வாழாமல்
தன்னை மூடிக் கூடுகட்டித்
தானே சிறையை ஏற்படுத்தி

வாழும் போழ்தே கூட்டுப்புழு
மதிக்கும் பட்டு நூல் தருமாம்!
பாடும் கவிஞனும் பாட்டுப்புழு
வாகும் போழ்தே கவிபொழிவான்



தமிழ் முடி

அதன் நேர்மையான, உண்மைக்கே தன்னை அர்ப்பணித்துக் கொண்ட பேனா வீரர்களின் தன்னலமற்ற பணிதான் அதற்கு அளவற்ற சக்தியைத் தந்திருக்கிறது.

கொடிய 'நாபாம்' குண்டுமாரிக் கிடையிலும், தண்ணீரற்ற பயங்கரப் பாலைவனத்திலும், அபாயம் நிறைந்த யுத்த களங்களிலும் புகுந்து செய்திகளைச் சேகரிக்கும் நிருபர்கள் அளித்த பலம் அது.

நிருபர்களையும், 'காலம்னிஸ்டு களையும்', அவர்கள் சேகரித்த செய்திகளின் மூலாதாரத்தையும் வைத்துக் கொண்டு அரசியல் அக்கிரமத்திடமிருந்து மக்களைக் காக்கும் பத்திரிகை ஆசிரியப் பெருமக்கள் அளித்த பலம் அது.

அது தீரர்கள் நிரம்பிய உலகம்.

அமெரிக்காவில் அந்தத் தீரர்கள், எடுத்துக்கொள்ளும் சபதமும், வாசகமும், 'அப்போது கடைப்பிடிக்கப்படும் நடைமுறையும், அவர்களுடைய பணியின் சிறப்பை நன்கு விளக்குகின்றன.

'டெல்டா சிக்மாச்சி' (Delta Sigmachi) என்பது ஒரு உச்சிமட்ட பத்திரிகையாளர் சங்கம். அதில் அங்கத்தினராவதே ஒரு பத்திரிகையாளனின் பெரும் பேறாகக் கருதப்படுகிறது.

அதில் ஒரு பத்திரிகையாளர் அங்கத்தினராகச் சேர்த்துக் கொள்ளும் நிகழ்ச்சி இவ்வாறு ஆரம்பமாகிறது.

ஒரு பெரிய கூடத்தில் எல்லாரும் கூடுகிறார்கள். விளக்குகள் அணைக்கப்படுகின்றன. ஒரு மெழுகுவர்த்தி மட்டும் மேஜை மீது எரிகிறது. டெல்டா சிக்மாச்சியின் மாவட்ட அலுவலர், அங்கத்தினராகப் போகிறவரின் கையைப் பிடித்து அந்த மெழுகுவர்த்தியைச் சுற்றிச் சுற்றிக் காட்டிவிட்டு. பக்கத்தில் உள்ள ஒரு இருண்ட அறைக்குள் அவரை அழைத்துச் செல்வார்.

அங்கே கீழ்க்கண்ட சபதத்தை எடுத்துக்கொள்ளும்படிச் செய்வார்.

"பத்திரிகைத் தொழில் என்பது மகோன்னதமானது. மக்களுக்கு, மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் அரசு மக்களை ஏமாற்றி யதேச்சாதிகாரமாகப் போகாதபடி பார்த்துக் கொள்வேன் என்று ஆண்டவன்மேல் ஆணையாக உறுதி கூறுகிறேன். சுதந்திரம் என்ற விளக்கு அணைந்து சர்வாதிகார இருள் கவ்வும் பொழுது இழந்த சுதந்திரத்தை மீட்பதுதான் என் முதல் பணி. இந்தப் பணியில் எந்தவிதமான இன்னல்கள் ஏற்பட்டாலும். இடையூறுகள் ஏற்பட்டாலும் அதைச் சகித்துக் கொள்வேன் இது சத்தியம்".

இந்தச் சபதம்தான் 'பத்திரிகை' என்ற சொல்லுக்கு உரிய ஒவ்வொரு நாளேட்டின் லட்சிய வாசகமாக இருக்க முடியும்.

இந்த லட்சியத்தை நோக்கியே ஒவ்வொரு பத்திரிகாசிரியரும் ஒவ்வொரு நிருபரும் – ஏன் சுதந்திரத்தையும் ஜனநாயகத்தையும் நேசிக்கும் ஒவ்வொரு குடிமகனும் குடிமகளும் தெரிந்தோ, தெரியாமலோ வழி நடக்கிறார்கள்.

மனசிலும், நினைப்பிலும் ஊறிப்போன இந்த "வித்தே" ஒவ்வொரு பத்திரிகை ஆசிரியரிடமிருந்தும் நாள் தோறும் வாரந்தோறும் தலையங்கமாக வெளிப்படுகிறது. அவைகளே நாட்டை, மக்களை வழிநடத்திச் செல்கின்றன.

அரசியல்வாதிகள் வருவார்கள்; போவார்கள்; மாவீரர்கள் வருவார்கள் போவார்கள்; வீராங்கனைகள் வருவார்கள்; வீழ்வார்கள்.

ஆனால் பத்திரிகைகள் என்றும் நிலைத்து இருக்கும். அவற்றின் குரலும் என்றும் ஒலிக்கும். அது சத்தியத்தின் குரல், தர்மத்தின் குரல், நீதியின் குரல்.

அது சிரஞ்சீவிக் குரல்!

பத்திரிகைகள் மேற்கொண்டுள்ள லட்சியம் மிகப் புனிதமானது எனச் சொன்னேன். ஆனால் புனிதமானவை எல்லாவற்றுக்கும் 'கிரகணம்' பிடித்துக் கொண்டிருக்கும் காலம் இது.

மனித மதிப்புகள், மனித உரிமைகள் எல்லாவற்றையுமே நசுக்கும் முயற்சிகள் திடீர் திடீரென்று பல்வேறு வேடங்களில் ஆங்காங்கே திடீர் திடீர் என்று வெடித்து எழுகின்றன.

அந்த மாதிரி சூழ்நிலைகளில் ஜனநாயக நாடுகளில், கைவிளக்கான பத்திரிகைகளுக்கே முதலில் கிரகணம் பிடிக்கிறது. அந்தப் புனித விளக்கு முதன் முதலில் அணைக்கப்படுகிறது.

அவ்வாறு அணைக்கப்படாமல் தன் சுதந்திரத்திற்காக அந்தக் கைவிளக்குகள் போராட வேண்டியிருக்கிறது. அந்தப் போராட்டத்தில் தனி அங்கமான பத்திரிகைகள் அதிக நாள் தாக்குப் பிடிக்கப்படாமலும் போகிறது.

அவைகளைக் காக்க ஒன்றுபட்ட முயற்சிகள் தேவைப்படுகிறது. பத்திரிகைகளின் சுதந்திரத்தைக் காக்க, சர்வதேச நிறுவனங்களின் உதவி தேவைப்படுகிறது.

அப்படிப் பிறந்த நிறுவனங்களில் ஒன்றுதான் ஐ.பி.ஐ. (International Press Institute) இதன் தலைமையகம் சுவிட்சர்லாந்தில், ஜுரீச் நகரில் இருக்கிறது. பத்திரிகைகளின் சுதந்திரத்திற்காக இந்த நிறுவனம் போராடி வருகிறது. உலகம் முழுவதிலும் இன்றைய தினம் வெளியாகும் பத்திரிகைகளின் இன்றைய நிலையைப் பற்றிய செய்திகளைத் தாங்கி ஐ.பி.ஐ. ரிப்போர்ட் (I.P.I. Report) என்ற மாத இதழ் ஒன்றையும் வெளியிட்டு வருகிறது.

சுதந்திரமாகப் பிறந்த மனிதனுக்குச் சுதந்திரமாக வாழவும், சுதந்திரமாக உலகைத் தெரிந்து கொள்ளவும் உரிமையுண்டு.

நாளடைவில் மனிதனின் உன்னதமான இயல்புகளே வெற்றிபெறும். மனிதன் மாக்களைப்போலப் பட்டிகளில் வாழவே மாட்டான்.

அவனுக்குக் காலை காப்பியும் வேண்டும்; கட்டுக் கதையற்ற, சுதந்திரமாகச் செய்திகளைக் கொண்டு வந்து காலடியில் வைக்கும் பத்திரிகைகளும் வேண்டும். ●

# கண்ணன் கவி ஓவியங்கள்

பாரத நாட்டின் அழகுத் தெய்வம் கண்ணன்.

அழகை வழிபடும் கவிஞர்களில் அவனைப்பாடி மகிழாதவர்கள் குறைவு.

திருமாலின் முழு-பூரண அவதாரமாக அவனைக் கொள்வர்.

வளர்ந்த கண்ணனைக் காட்டிலும் குழந்தைக் கண்ணனிடம் மனதைப் பறிகொடுத்தவர்கள் ஆழ்வார்கள்.

அவர்களிலும் பெரியாழ்வார் கண்ணனைப் பாடிய பாடல்கள், கவிதைச் சிறப்பு மிக்கவை.

எங்கோ, வடமதுரையில் பிறந்தவனைத் தமிழ்நாட்டுத் திருக்கோட்டியூரில் பிறந்தவனாக மகிழ்ந்து கொண்டாடுவார் அவர்!

"வண்ண மாடங்கள் சூழ்திருக்கோட்டியூர்
கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில்
எண்ணெய் சுண்ணம் எதிர் எதிர்தூவிடக்
கண்ணன் முற்றம் கலந்து அளறாயிற்றே"

பிறந்த குழந்தையைத் தொட்டிலில் இட்டுத் தாலாட்டுவார் அவர். அவர் தாமே, யசோதையாக மாறிப் பாடுகிறார்.

'மாணிக்கம் கட்டி வயிரம் இடைகட்டி
ஆணிப் பொன்னாற் செய்த வண்ணச் சிறுதொட்டில்
பேணி உனக்குப் பிரமன் விடுதந்தான்
மாணிக்குறளனே! தாலேலோ! வையம்
அளந்தானே! தாலேலோ!'

குழந்தைக்குப் பிறந்த நாள் பரிசாக நான்முகன்' அளித்துள்ள தொட்டில் இது!

படைப்புக் கடவுள் அளிக்கும் பரிசு என்றால், அது 'மாணிக்கம் கட்டி, வயிரம் இடை கட்டி, ஆணிப் பொன்னால் செய்த வண்ணச்சிறு தொட்டிலாக' இருப்பதில் என்ன வியப்பு!

இங்கே, பிரமன் தொட்டில் பரிசளித்ததில் ஒரு குறிப்பு இருக்கிறது!

பிரமன் நாராயணனின் செல்வக் குழந்தை! தன் நாபியில் மலர்ந்த தாமரைத் தொட்டிலில் வைத்து என்றும் காப்பவன் இன்று குழந்தையாக வந்திருக்கிறான். அவனுக்குத் தொட்டில்தானே உகந்த பரிசு!

ஆழ்வார் தாலாட்டுப் பாட்டில் ஒரு பொடி வைத்திருக்கிறார்!

'மாணிக்குறளனே தாலேலோ
வையமளந்தானே தாலேலோ'

என்கிற அடிகளில்.

ஆம், "உன்னைச் சின்னஞ்சிறு குழந்தைக் கண்ணனாகக் கருதி அதற்கேற்ற சிறிய தொட்டிலைப் பரிசளித்திருக்கிறேன்.

"இதில் சமத்தாக, சின்னஞ்சிறு குழந்தையாகப் படுக்க வேண்டும். முன்பொரு அவதாரத்தில் வாமனனாக வந்து மாவலியிடம் மூன்றடி மண்கேட்டு திரிவிக்கிரமனாக வளர்ந்து மூவுலகையும் அளந்ததுபோல் நீ வளரத் தொடங்கிவிட்டால் இத் தொட்டில் போதாது!" என்ற குறிப்பைத் தரும் அழகை அனுபவிக்க வேண்டும்.

✧ ✧ ✧

கண்ணக் குழந்தை சோனியல்ல. பாலும் தயிரும் வெண்ணெயும் உண்டு திண்ணென்றிருப்பவன். அவன் வலிமையைத் தொட்டிலில் காட்டுவான்!

ஒரு உதை விட்டால் தொட்டில் உடையும்!

தொட்டில் கிழிந்ததே என்று இடுப்பில் எடுத்துக் கொண்டால் ஒரு உதை... இடுப்பு முறியும்போல வலி எடுக்கும்.

அவனைத் தூக்கி வைத்துக் கொள்ளவும் ஒரு வலிமை வேண்டும்.

"கிடக்கில் தொட்டில் கிழிய உதைத்திடும்
எடுத்துக் கொள்ளின் மருங்கை இறுத்திடும்
ஒடுக்கிப்புல்கில் உதரத்தே பாய்ந்திடும்
மிடுக்கிலாமையால் நான் மெலிந்தேன் – நங்காய்"

கண்ணன் என்ன! இன்றுகூட

"இந்த குண்டோதரனை என்னால் தூக்க முடியவில்லையே" என்று செல்லமாகக் குறைப்படும் தாய்மார்களை நாம் பார்த்திருக்கிறோமே!

✧ ✧ ✧

கண்ணன் கதை சொல்பவர்கள் கண்ணன் மண்ணை உண்டான். தாய் பார்த்துவிட்டாள். வாயைத் திறக்கச் சொன்னாள்! திறந்த வாய்க்குள் மூன்று உலகங்களையும் கண்டாள் என்று சொல்வதைக் கேட்டிருக்கிறோம். கண்ணன் வாயில் 'மண்ணைப் போட' கவிஞர் பட்டர் பிரானுக்கு – பெரியாழ்வாருக்கு விருப்பம் இல்லை. அவர் காட்டும் காட்சி புதுமையானது!

பழங்காலங்களில் குழந்தைக்கு, வாக்குத் தெளிவு ஏற்படவும் தூய்மைக்காகவும் மஞ்சளை இடித்து அதைக் கொண்டு நாக்கு வழிப்பார்கள்!

'நோக்கிய சோதை நுணுக்கிய மஞ்சளால்
நாக்கு வழித்து நீராட்டுவாள்'

அப்படி ஒரு நாள் நீராட்டத்தின் போது ஓர் அனுபவம். குழந்தையைக் குளிப்பாட்டுவது லேசானதல்ல. அது ஓர் அருங்கலை.

அதிகச் சூடும் கூடாது. ஆறிப் போகவும் கூடாது. அப்படி வெந்நீர் அமைய வேண்டும். தன் கைகளில் விட்டுச் சூடு பார்த்து, குழந்தையை நீட்டிய கால்களில் படுக்க வைத்து, கைகால் விரல்களைச் சொடுக்கி, நீராட்டுவார்கள் தாய்மார்கள்!

'கையும் காலும் நிமிர்த்துக் கடாரநீர்
பையவாட்டிப் பசுர்சிறு மஞ்சளால்
ஐய நாவழித்தாளுக் கங்காந்திட
வையம் ஏழும் கண்டாள் பிள்ளை வாயுளே'.

அப்படி யசோதை, நாக்கு வழித்த போதுதான், கண்ணன் வாயைத் திறந்தான்!

'வாயுள் வையகம் கண்ட மடநல்லார்
ஆயர் புத்திரன் அல்லன்! அருந் தெய்வம்'
என்று ஒரு கணம் அறிந்தனர்!

✧ ✧ ✧

கண்ணன் மிகவும் விரும்பி உண்ணுவது வெண்ணெய். அந்த வெண்ணெயையும் அவன் கேட்டு வாங்கிச் சாப்பிட மாட்டான்!

திருடித்தான் உண்பான்! அது தான் அவனுக்குப் பிடிக்கும். இப்படி வெண்ணெய் திருடும் கண்ணனிடம் தம் உள்ளத்தைப் பறிகொடுத்தனர் ஆழ்வார்கள்!

வெண்ணெய் சாப்பிட்டுச் சும்மா இருக்கமாட்டான். அந்த வெண்ணெய் இருந்த பாத்திரத்தைத் 'தடார்' என்று கீழே போட்டு, அந்த ஓசையைக் கேட்பதில் அவனுக்கு ஒரு மகிழ்ச்சி!

அது அவன் கற்ற கல்வி!

பாரதி சுராஜ்

"வெண்ணெய் விழுங்கி வெறுங்கலத்தை

வெற்பிடையிட்டு அதன் ஓசை கேட்கும்

கண்ணபிரான் கற்ற கல்வி"

என்பார் பெரியாழ்வார்.

அவன் வெண்ணெய் உண்ட வரலாற்றை அற்புதமாகப் படம் பிடிக்கிறார் "நாலு கவிப் பெருமாள்" என்று பெயர் பெற்ற திருமங்கையாழ்வார் - தம் சிறிய திருமடலில்.

கண்ணன் நந்தகோபனின் மகன். ஊருக்கே தலைவன் நந்தகோபன். அவனிடம் பசுக்களுக்குக் குறைவு இல்லை.

இது போதாதென்று ஊர்ப் பசுக்களையெல்லாம் மேய்ப்பவன் கண்ணன். அவனுக்குக் கிடைக்காத பாலா? தயிரா? வெண்ணெயா?

ஆனால் ஊராநிறை மேய்த்த அவன் செய்த செயல் என்ன தெரியுமா?

உலகத்தையெல்லாம் பிரளய காலத்தில் உண்டு உமிழ்ந்தவன் - கண்ணனாக வந்திருக்கிறான். உலகை உண்டும் ஆறாத பசி அவனுக்கு!

ஒரு நாள் ஆயர்பாடியில் தன் வீட்டில் குழந்தைக் கண்ணன் ஒன்றும் அறியாதவன் போல் தூங்கிக் கொண்டிருக்கிறான்.

யசோதை தயிர் கடைகிறாள். வெண்ணெய் . திரண்டு வருகிறது! வெண்ணெய் கடைவது அத்தனை எளிதல்ல ஆயர்பாடியில்! முப்போதும் வெண்ணெய் கடையும் ஊர் அது.

'ஏரார் இடைநோவ எத்தனையோர் போதுமாய்' அவள் வெண்ணெய் கடைந்து, வெண்ணெயைத் திரட்டி. வேறு கலத்தில் இட்டு, உயரமான உறியில் பத்திரப்படுத்தினாள்.

சுற்றுமுற்றும் பார்த்தன அவளது 'போரார் வேற்கண்கள்!' கண்ணன் தூங்குகிறான். பக்கத்து வீட்டுக்குச் 'சற்று' நேரம் சென்று வரலாமென்று புறப்பட்டாள்.

தாய் சென்றது தெரிந்ததும், குழந்தைக் கண்ணனின் 'பொய்யுறக்கம்' கலைந்தது. 'உறங்குவான் போல யோகு செய்த பெருமானல்லவா' அவன். எழுந்தான்!

உயரம் அவனுக்கு ஒரு பொருட்டன்று பாத்திரங்களை அடுக்கி மேலே ஏறினான். உறியிலிருந்த வெண்ணெயை எடுத்தான். எப்படி? கொஞ்சமா?

"தாரார் தடந் தோள்கள் உள்ளளவும்
கைநீட்டி
ஆராத வெண்ணெய் விழுங்கி'

அத்துடன் விட்டானா?




*கொத்துக் கொத்தாய் முகிலிறங்கி*
*முத்து முத்தாய் சிதறுவது!*
*அதை*
*நாலெடுத்து கோர்க்கப்போய்*
*நொடிப் பொழுதில் மறையுது!*

*துளித்துளியாய் தரையின்மேலே*
*துள்ளித்துள்ளிக் குதிக்குது*
*அதைக்கையில் அள்ளிச்*
*சேர்க்கப் போனால்*
*கணப் பொழுதில் மறையுது!*

*வானிருந்து பூமி நோக்கி*
*வந்த நோக்கம் என்னவோ?*
*மக்கள் மகிழ்ச்சியோடு*
*மழையை எண்ணிக்*
*குதுகலமாய் துள்ளவோ!*

தாமரைச்செல்வி சுந்தர்

அருகிருந்த மோரார் குடத்தை உருட்டினான். முன்னிருந்த இடத்திற்கு வந்து ஒன்றும் செய்யாதவன் போல உறங்கத் தலைப்பட்டான்.

தாயார் திரும்பி வந்தாள். வந்ததும் அவள் பார்வை உறியின்மீது சென்றது... உறியில் வெண்ணெய் இல்லை.

வயிறடித்தாள்.

யார் இங்கு வர முடியும்?

இவனைத் தவிர யாரும் இதைச் செய்திருக்க முடியாது. 'ஐவர் இவரல்லால்' என்று பாடுகிறார் ஆழ்வார். இந்தப் பெரிய மனிதர் செய்த காரியமா இது?

தாங்க முடியாத கோபத்துடன், தயிர் கடையும் கயிறாலேயே அவனை (உரலுடன்) கட்டிப் போட்டாள் யசோதை! இந்த அற்புதமான கவி ஓவியத்தை வாய்விட்டுப் படியுங்கள்.

'ஊர் ஆநிறை மேய்த்து, உலகெல்லாம்
உண்டுமிழ்ந்தும்
ஆராத தன்மையனாய், ஆங்கொருநாள்
ஆய்ப்பாடி
சீரார்கலையல்குல் சீரடிச் செந்துவர்வாய்
வாரார் வனமுலையாள் மத்தாரப் பற்றிக்
கொண்டு
ஏரார் இடைநோவ எத்தனையோர்
போதுமாய்
சீரார் தயிர் கடைந்து வெண்ணெய்
திரண்டதனை
வேரார் நுதல்மடவாள் வேறோர் கலத்திட்டு
நாரார் உறி ஏற்றி நன்கமைய வைத்ததனை
போரார் வேற்கண்மடவாள் போந்தனையும்
பொய் உறக்கம்
ஓராதவன் போல் உறங்கி அறிவுற்று
தாரார் தடந்தோள்கள் உள்ளளவும் கைநீட்டி
ஆராத வெண்ணெய் விழுங்கி - அருகிருந்த
மோரார் குடமுருட்டி முன்கிடந்த தானத்தே
ஓராதவன் போல் கிடந்தவனைக் கண்டவளும்
வாராத்தான் வைத்தது காணாள் -
வயிறடித்திங்கு
ஆரார் புகுதுவார் 'ஐவர்' இவரல்லால்
'நீராம் இது செய்தீர்' என்றோர் நெடுங்
கயிறால்
ஊரார்களெல்லாரும் காண உரலோடே
தீரா வெகுளியளாய்ச் சிக்கெனவார்த்தடிப்ப
ஆராவயிற்றினொடு ஆற்றாதான்'
'கண்ணி நுண் சிறுத்தாம்பினால்
கட்டுண்ணப் பண்ணிய பெருமாயன் - என்
அப்பன்'

என்று இக் காட்சியைப் பாடுவார் மதுரகவி ஆழ்வார்.

கண்ணனை அத்தனைச் சுலபமாகக் கட்டிவிட முடியுமா? அவன் ஓடினான். பின்னால் ஓடி ஓடிக் களைத்தாள் யசோதை. அவன் கொண்டு வந்த கயிறுகள் அவனைக் கட்ட முடியாமல் சிறுத்துப் போயின. கடைசியில் தாய்க்கு இரங்கி அவன் கட்டுப்பட்டான்!

✧ ✧ ✧

தேவர்களுக்கு அரியவனான பரம் பொருள் ஆயர்குலப் பெண்ணிடம் அத்தனை எளியவனாகக் கட்டுப் பட்டதை, மொத்துண்டதை எண்ணி ஆறுமாத காலம் மோகித்துக் கிடந்தாராம் நம்மாழ்வார் என்ற ஞானி! ஆழ்வார்களில் தலையாயவர்.

'பத்துடை அடியவர்க்கு எளியவன் - பிறர்
களுக்கு அரிய
வித்தகன் - மலர்மகள் விரும்பும் நம் அரும்
பெறல் அடிகள்
மத்துறுகடை வெண்ணெய் களவினில்
உரவிடை ஆப்புண்டு
எத்திறம்! உரலினோடு இணைந்திருந்
தேங்கிய எளிவே!

என்பது அவரது பாடல்.

ஆழ்வார்களுக்குள் கவிதைச் சிறப்புக்குப் பரிசு தருவதென்றால் அப் பரிசுக்கு முற்றிலும் தகுதியான வர் குலசேகரர். கொல்லிகாவலன், கூடல் நாயகன், கோழிக் கோனாகிய அந்த மாமன்னர் இராமனிடம் தான் பக்தி கொண்டவர். ஆனால் தாமே தேவகியாக மாறி, யசோதையின் பெருமையைப் பாராட்டுவதாக அமைத்த தேவகி புலம்பல் என்ற பதிகத்தில் இந்த வெண்ணெய் உண்டு, கண்ணன் கட்டுப்பட்ட செய்தியை அற்புத ஓவியமாக அவர் தீட்டி இருக்கிறார்.

கவிதை ரசிகர்கள் படித்துப் படித்து மகிழ - ஓவியர்களின் தூரிகைகள் தீட்டித் தீட்டி மகிழ வேண்டிய கவி ஓவியம் இப் பாடல்.

வைத்த வெண்ணெயை மீதம் வைக்காமல் கைகளால்

அளைந்து உண்டன அவன் தாமரைக் கைகள்.

அகப்பட்டவனை அடிக்க தாம்பு கொண்டுவந்தாள் தாய்.

"அம்மா! அடிக்காதே! அடிக்காதே" என்று கெஞ்சுகிறான்.

வெண்தயிர் தோய்ந்த சிவந்த வாய் காட்டிக் கொடுத்து விட்டது!

அழுதான். அடம்பிடித்தான். தாய்க்குப் பயந்து நடுங்கும் நோக்கு! அவன் செஞ்சிறுவாய் நெளிகிறது.

"இல்லையம்மா... இல்லை... இனி செய்ய மாட்டேன்" என்று.

உலகமே தொழும் அவன், தனது கைகளை இணைத்துத் தாயை வணங்குகிறான்.

யசோதை பெற்ற இந்த அனுபவத்தை விடப் பேரின்பம் ஒன்று வானுலகத்தில் வேறு என்ன இருக்கிறது!

குலசேகரரின் பேசும் கவிதை இது!

'முழுதும் வெண்ணெய் அளைந்து தொட்டுண்ணும்
முகிழ் இளம் சிறு தாமரைக் கையும்
எழில் கொள் தாம்பு கொண்டு அடிப்பதற்கு எங்கு
நிலையும் வெண்தயிர் தோய்ந்த செவ்வாயும்
அழுகையும், அஞ்சி நோக்கும் அந்நோக்கும்
அணிகொள் செஞ்சிறுவாய் நெளிப்பதுவும்
தொழுகையும் இவைகண்ட அசோதை
தொல்லை இன்பத்து இறுதி கண்டாளே!' ೦೦



# கல்யாணமே! வைபோகமே!

நா. ராமச்சந்திரன்

சமாஜக் கட்டடம் நிரம்பி வழிந்தது. தினமுமே நல்ல கூட்டம் கூடும். இன்று பிரதி தினம் வரும் கூட்டத்தைவிட மும்மடங்கு அதிகம் இருந்தது. சமாஜத்தின் பெரிய ஹால் நிரம்பி, சுற்றியிருந்த தாழ்வாரங்கள் நிரம்பி, வெளியிலும் காம்பௌண்ட் சுவர் வரை ஆண்களும் பெண்களுமாக ஜனத்திரள் அலையெனப் பெருகியிருந்தது. இவ்வளவிற்கும் அன்று காலை முதல் நல்ல மழை பெய்திருந்தது. மாலை நான்கு மணி அளவில்தான் மழை நின்றிருந்தது. அதனால் சமாஜ நிர்வாகிகள் இவ்வளவு பெருந்திரளாக கூட்டத்தைக் கொஞ்சங்கூட எதிர்பார்க்கவில்லை.

ராம பாகவதரின் உபந்நியாசம். கடந்த ஒருமாத காலமாக அவர் கதாப் பிரசங்கம் செய்து கொண்டு வருகிறார். இன்று ருக்மிணி கல்யாணத்தோடு உபந்நியாசம் முடிவடையப் போகிறது. எதிர்பார்க்காத அளவிற்குக் கூட்டம் கூடியிருப்பதைக் கண்டு அவருக்கே திகைப்பும், வியப்புமாக இருந்தது.

பெரிய ஜனத்திரள்முன் உபந்நியாசம் செய்வது நிரம்பக் குதூகலத்தையும் உற்சாகத்தையும் கொடுத்தது ராமபாகவதருக்கு. ருக்மிணி கல்யாண வைபவத்தைப் புங்கானுபுங்கமாக எடுத்துச் சொல்லிக் கூட்டத்தின் பாராட்டுதலையும், கையொலியையும் பெற்றபோது பாகவதர் அடைந்த பரவசத்திற்கு எல்லையேயில்லை.

குறிப்பாகப் பாகவதர் ருக்மிணி கிருஷ்ணனுக்கு எழுதிய கடித ரூபமான ஸ்லோகத்தை எடுத்துக் கூறி எல்லோருடைய பாராட்டுதல் களையும் பெற்றார். "சுருத்வா குணான் புவன சுந்தரா" என்று ஆரம்பிக்கும் அக்கடிதத்தில் ருக்மிணி தன் உள்ளக் கிடக்கையைப் பூர்ணமாக வெளிப்படுத்தியிருந்தாள். கிருஷ்ணனை உடனே வந்து தன்னைத் திருக்கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்று விண்ணபித்திருந்த அந்தச் சுலோகம் பாகவதக் கிரந்தத்தில் மிக உயர்வானது. இலக்கியச் சுவை மிகுந்தது. படிக்கப் படிக்கத் தெவிட்டாதது.

"இந்தச் சுலோகத்தை விடாமல் படிக்கும் கன்னிப் பெண்களுக்கெல்லாம் விரைவாகக் கல்யாணம் ஆகும். பல கல்யாணங்கள் நிகழ்ந்திருப்பதற்கு நானே சாட்சியாக இருந்திருக்கிறேன்" என்று கூறி இரண்டொரு சம்பவங்களைப் பாகவதர் கூறி முடித்தவுடன் கூடியிருந்த ஆண்களும், பெண்களும் அதை ஆமோதிப்பதைப்போல 'ஆஹா' காரம் செய்தார்கள்.

உபந்நியாசத்தை முடித்துக் கொண்டு பாகவதர் தன் விடுதிக்கு வரும்போது இரவு மணி பத்தாகி விட்டது. அவர் இறங்கித் தன் அறைக்குள் போவதும் வாசலில் ஓர் ஆட்டோ வந்து நிற்பதும் ஒரே சமயமாக இருந்தது.

ஆட்டோவிலிருந்து ஒரு மாது சிரோமணி கீழே இறங்கினாள். தலையில் நரையே இல்லாத நடுத்தர வயது. பிரகாசமான முகம். ஒல்லியும் இல்லை; பருமனும் இல்லை. அப்படியொரு தோற்றம். நல்ல மஞ்சள் நிறம்.

பாகவதர் தன் அங்கவஸ்திரத்தைக் கொடியில் மாட்டிவிட்டு, தன்னுடன் வந்திருந்தவர்களை விடை கொடுத்து அனுப்பிவிட்டுச் சாய்வு நாற்காலியில் சாய்ந்தவுடன் அந்த மாது சிரோமணி பாகவதரின் அறைக்குள் நுழைந்தாள்.

"யாரம்மா நீ... உன்னை எங்கேயோ பார்த்ததைப்போல..." பாகவதர் பேசி முடிப்பதற்குள் அந்த ஸ்திரி "நான் தினமும் தங்கள் கதைக்கு வந்துகொண்டுதானே இருக்கிறேன். அங்குதான் என்னைப் பார்த்திருக்கிறீர்கள்" என்று கூறியபடி பாகவதரை நமஸ்காரம் செய்தாள்.

"பாகவதருக்கு ஒரு விண்ணப்பம்! 'சுருத்வா குணான் புவன சுந்தரா' என்ற கடித சுலோகத்தைப் படிப்பவர்களுக்குக் கட்டாயம் கல்யாணம் ஆகும் என்று தாங்கள் சொன்னீர்களே..." சொல்லி முடிக்கவில்லை அவள்.

"ஆமாம் இதில் என்ன சந்தேகம்? அந்த சுலோகத்தைப் படிப்பவர்களுக்குக் கட்டாயம் அவர்கள் விரும்பும் புருஷன் கிடைப்பான். இது உறுதி" என்று இடைமறித்தார் பாகவதர்.

"எனக்கு வயது நாற்பதாகிறது. இதுவரை திருமணம் செய்து கொள்ளாமல் இருந்து விட்டேன். ஒரேயோர் அண்ணன் இருந்தான். அவனும் போன வருடம் இறந்து போனான். தனியாக ஒரு பெண் ஆண் துணையில்லாமல் வாழ முடியாது. என் அண்ணனுக்கு நான் கல்யாணம் செய்து கொள்கிறேன் என்று வாக்குக் கொடுத்துவிட்டேன். அன்றிலிருந்து இந்த சுலோகத்தை விடாமல் படித்துக் கொண்டு வருகிறேன்..." மூச்சு விடாமல் பேசினாள் அவள்.

ராமபாகவதருக்கு ஒரே திகைப்பு. எதிரில் நின்றுகொண்டிருந்தவளை ஏற இறங்க ஒருதடவை பார்த்து விட்டு, "கவலைப் படாதேம்மா; கட்டாயம் உனக்குக் கல்யாணம் நடக்கும். உன் மனோரதப்படி நீ விரும்புகிற புருஷனே உனக்குக் கிடைப்பான். நம் புராணங்கள் சொல்வது ஒரு போதும் பொய்த்துப் போனதில்லை," அன்பு ததும்பக் கூறினார். ராம பாகவதர்.

"நிச்சயம் நான் விரும்புகிற புருஷர் எனக்குக் கிடைப்பாரா?" கேட்டுவிட்டு அன்பு ததும்ப ராமபாகவதரைப் பார்த்தாள் அந்த மாது.

"உனக்கு எதற்கம்மா அந்தச் சந்தேகம்? நான் உறுதியாகச் சொல்கிறேன். நீ விரும்பும் ஆடவனே உனக்கு மணாளனாகக் கிடைப்பான்" ராமபாகவதர் கூறிவிட்டுத் தான் வணங்கும் ராம விக்ரகத்தை ஒரு முறை சேவித்து விட்டு "ஹே ராமா! இவள் விரும்பும் கணவனை இவ

ளுக்குக் கொடு. குணாதிசயத்தில் அவள் உன்னைப் போலவே இருக்கட்டும்" என்று மெய்சிலிர்க்கப் பிரார்த்தித்துக் கொண்டார்".

"ஸ்வாமி! என் மனோரதம் நிறைவேறிவிட்டது என்றுதான் நினைக்கிறேன். என் பெயர் சீதை. எனக்கு ஒரு ராமன்தான் வேண்டும்".

"உன் பெயர் சீதையா? நிச்சயம் உனக்கு ஒரு ராமன் கிடைப்பான்".

"கிடைப்பார் என்ன? கிடைத்தே விட்டார்" என்று சொல்லியபடி சீதை ராமபாகவதரின் பாத கமலங்களை மீண்டும் ஒருமுறை வணங்கிவிட்டு, "ஸ்வாமி நான் விரும்பும் ராமன் நீங்கள்தான். உங்களையே நான் பதியாக அடையவேண்டும் என்று தீர்மானித்து விட்டேன். அதற்குத்தான் இங்கு ஓடோடி வந்தேன். நான் தினமும் மனனம் செய்து கொண்டு வரும் ருக்மிணியின் கடித சுலோகம் என்னைக் கைவிடாது என்று நிச்சயமாக நான் நம்புகிறேன்..." சொல்லிக் கொண்டே சீதை பாகவதரை மீண்டும் நமஸ்கரித்தாள். அவள் கண்களிலிருந்து மாலைமாலையாகக் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது.

சீதையின் பேச்சு பாகவதரைத் தூக்கி வாரிப்போட்டது. தன் கண்கள் முன் எல்லாமே சுழல்வதைப் போல இருந்தது. ஐம்பது வயது நிரம்பி விட்ட தனக்குக் கல்யாணமா? உண்மையிலேயே கடவுள் தன்னைச் சோதிக்கிறாரா?

"சீதை நீ என்ன சொல்கிறாய்? ஒன்றுமே எனக்குப் புரியவில்லையே?" என்று கூறிவிட்டுச் சற்று பயத்தோடு பார்த்தார் பாகவதர்.

"நான் தங்களைக் கல்யாணம் செய்து கொள்ள விரும்புகிறேன். இவ்வளவு வயதிற்குப் பிறகு ஆண் துணை இல்லாமல் என்னால் இருக்க முடியாது. தங்களுடைய பக்தியிலும் ஆசாரத்திலும் என் மனம் பேதலித்து விட்டது. தங்களையே முறைப்படி விவாகம் செய்து கொள்ள வேண்டும் என்று விடாமல் ருக்மிணியின் 'சுருத்வா குணான் புவன சுந்தரா' சுலோகத்தைப் பாராயணம் செய்து கொண்டு வருகிறேன்..."

பாகவதர் இடை மறித்தார். "சீதா நடக்காத காரியத்தில் வீண் பிரயத்தனம் செய்யாதே. பகவானின் சங்கீர்த்தனத்தில் ஈடுபட்டு இவ்வளவு காலம் பிரம்மசாரியாகக் காலங்கழித்து விட்டேன். என்னை வீணாகத் தொந்தரவு செய்யாதே" ஆத்திரத்தோடு பாகவதர் கூறிவிட்டு உள்ளே போக எத்தனித்தார்.

சீதை விடுவதைக் காணோம். 'தன்னை எப்படியும் அவர் திருமணம் செய்து கொள்ளத்தான் வேண்டும்' என்று வற்புறுத்தி மீண்டும் மீண்டும் சொல்லி அழுது கொண்டிருந்தாள் அவள்.

பாகவதருக்குக் கல்யாணத்தில் விருப்பமில்லை. 'சம்சார பந்தத்தில் ஏன் ஈடுபட வேண்டும்?' என்ற எண்ணமே அவர் மனதில் மேலோங்கி நின்றது. மெதுவாக சீதையை சமாதானப்படுத்தி ஓர் ஆட்டோவில் ஏற்றி அனுப்பிவிட்டு வந்து படுக்கையில் படுத்துக் கொண்டார் பாகவதர்.

அன்றைய உபந்நியாச நிகழ்ச்சி வெகு கோலாகலமாக முடிவடைந்திருந்தது. பாகவதருக்கு வெள்ளிப் பாத்திரங்களும், சால்வைகளும் ஏராளமாக வந்திருந்தன. சம்பாவனைக்கோ குறைவில்லை. இதையெல்லாம் நினைத்துக் கண்களை மூடினால் சீதை வந்து எதிரில் நின்றாள். சீதையின் நினைவு வராவண்ணம் இருக்க என்னவெல்லாமோ பிரயத்தனம் செய்து பார்த்தார். எவ்வளவு முயன்றும் அது முடியவில்லை. தூக்கம் கொஞ்சங்கூட வரவில்லை. பொழுது விடியும் சமயம்தான் அவர் அயர்ந்து தூங்கிப் போனார்.

பாகவதர் கண்விழிக்கும்போது காலை மணி ஏழாகிவிட்டது. அன்றைய தினம் அவர் அந்த ஊரை விட்டுக் கிளம்பி திருச்சிராப்பள்ளி செல்ல வேண்டும். நாளை மறுநாள் முதல் தில்லை நகரில் உபந்நியாசம். காலைக் கடன்களை எல்லாம் இயந்திரம் போலத்தான் செய்தார். சீதை அவர் நெஞ்சை விட்டு அகலவேயில்லை. மாலை மூன்று மணி அளவில் திருச்சிக்குச் செல்வதாக இருந்த அவர் பகல் போஜனம் ஆனவுடனேயே கிளம்பி விட்டார். அவர் தங்கியிருந்த இடத்திலிருந்து திருச்சி ஐம்பது கிலோ மீட்டர் தூரம்தான் இருக்கும். நிர்வாகிகள் கார் வசதிக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள்.

தான் கிளம்புமுன் சீதை எங்கு வந்துவிடுவாளோ என்ற பயம் பாகவதருக்கு இருந்தது. இருந்தாலும் மனத்திரையில் எங்கோ ஒரு மூலையில் 'சீதை வரமாட்டாளா? அவளைப் பார்க்கமாட்டோமோ' என்றோர் ஏக்கம் அவருக்கு இருக்கத்தான் செய்தது. ஆனால் சீதை, பாகவதர் கிளம்பும் வரை வரவே இல்லை. அவள் வராமல் இருந்தது பாகவதருக்கு ஆறுதலாகத்தான் இருந்தது. ஆனாலும் அவருடைய உள்மனது சமாதானம் அடையாமல், அலைபாய்ந்து கொண்டிருந்தது.

திருச்சியில் மூன்று நாள்கள்தான் உபந்நியாசம். அதை முடித்துக் கொண்டு அவர் சென்னை வர வேண்டும். எப்போதும் போலக் கோலாகலமாகப் பிரவசனம் நடந்து கொண்டிருந்தது. சீதையின் ஞாபகம் கொஞ்சம் கொஞ்சமாக மனத் திரையிலிருந்து நீங்குவதும் வருவதுமாக இருந்ததை பாகவதர் உணர்ந்தார். ஆனாலும் சீதையை அவரால் முற்றிலும் மறக்க முடியவில்லை. அவள் மெல்ல மெல்லத் தன் அருகே நடந்து வருவதைப் போலவும் ஏக்கத்துடன் 'மணந்து கொள்ளுங்கள்' என்று மன்றாடுவதுமாக ஒரு காட்சி அவர்முன் தோன்றித் தோன்றி மறைந்து கொண்டிருந்தது.

இரண்டாம் நாள் இரவு பாகவதர் உபந்நியாசத்தை முடித்துக் கொண்டு தன் விடுதியில் தங்கியிருந்த போது அழைப்பு மணி ஒலி கேட்டது. பாகவதர் எழுந்து சென்று மெதுவாகக் கதவைத் திறந்தவுடன், வியப்பும் திகைப்பும் அடைந்தார்!

சீதை கதவுக்கருகே கை கூப்பிய வண்ணம் நின்று கொண்டிருந்தாள்! "உள்ளே வரலாமா?" என்று புன்னகையுடன் கேட்டாள். வெள்ளை மத்தாப்பூ சுடர்விட்டு எரிந்து அணைவதுபோல இருந்தது அவளுடைய சிரிப்பு.

சீதை அறையினுள் நுழைந்து, பாகவதர் அருகில் இருந்த நாற்காலியில் உட்காரச் சொன்னபின்தான் அமர்ந்தாள். பாகவதரும் எதிர் நாற்காலியில் அமர்ந்துகொண்டார். கொஞ்ச நேரம் இருவரும் பேசவில்லை. சீதை பாகவதரைப் பார்ப்பதும், பாகவதர் சீதையைப் பார்ப்பதுமாகப் பொழுது கழிந்து கொண்டிருந்தது.

பாகவதரே முதலில் மௌனத்தைக் கலைத்தார். "சீதை இந்தச் சமயத்தில் இங்கு எங்கு வந்தாய்?"

"நதி எதைத் தேடிப் போகும்? கடலைத் தேடித்தானே! உங்கள் உள்ளம் கடல் போன்றது. எனக்கு அதில் கொஞ்சம் இடம் கிடைக்காதா?"

"சீதை! நீ அநாவசியமாகப் பிடிவாதம் செய்கிறாய். நான் திருமணம் செய்து கொள்ளாமல் இதுவரை இருந்து விட்டேன். இனிமேல் கல்யாணம் செய்துகொண்டால் ஊர் உலகம் சிரிக்கும்... என்னை அநாவசியமாகத் தொந்தரவு செய்யாதே!" மன்றாடினார் பாகவதர்.

"என்ன வயது பொல்லாதது ஆகிவிட்டது? நானும் வயதானவள்தானே. வயதான காலத்தில் திருமணம் செய்து கொண்டவர்கள் இப்போது ஏராளமாக இருக்கிறார்கள். உங்களைப் போன்ற பாகவதோத்தமர்கள் சிலரைச் சொல்லட்டுமா?" சொல்லிவிட்டுப் பாகவதரைக் கனிவுடன் பார்த்தாள் சீதை.

நேரமாகிக் கொண்டிருந்தது. பாகவதர் ஒன்று சொல்ல, சீதை







எதிர்மாறாக ஒன்று சொல்ல இருவருக்கும் தர்க்கம் முற்றிக்கொண்டே போனது. சீதை சொல்லும் காரணங்களைப் பாகவதர் ஒப்புக்கொள்வதாக இல்லை. சீதையோ 'மணந்தால் அவரைத்தான் மணப்பேன் , இல்லையானில் பிராணத் தியாகம் செய்து கொள்வேன்' என்று உறுதியாகச் சொன்னாள். மூன்றாம் மனிதர் ஒருவரை அழைத்து இந்த வழக்கைத் தீர்த்துக் கொள்வதில் பாகவதருக்குக் கொஞ்சம்கூட விருப்பமில்லை. பரந்தாமன் ராமனின் மேல் பாரத்தைப் போட்டு ஒரு முடிவுக்கு வந்தார் அவர். சீதையைப் பார்த்துச் சொன்னார் :

"சீதை வீணாக அடம் பிடிக்காதே இரவு மணி பத்தாகிவிட்டது. இங்கு நீ இனியும் இருப்பது உத்தமம் இல்லை. நாளை இதற்கு ஒரு முடிவு கட்டலாம். பகவானின் முன் திருவுளச் சீட்டுப் போட்டு அவர் சொல்படி நடப்போம்".

பாகவதரின் இந்த ஏற்பாடு சீதைக்குச் சம்மதமாகப்பட்டது. தனக்குத் தெரிந்தவர் வீட்டில் தான் தங்கியிருப்பதாகச் சொல்லிவிட்டுப் பாகவதரை மீண்டும் நமஸ்கரித்து விட்டு, அவரிடமிருந்து விடைபெற்றுக் கொண்டாள், அவள் வெளியே செல்வதைப் பார்த்துக் கொண்டிருந்த பாகவதரின் மனச் சுமை சற்றுக் குறைந்தது போல இருந்தது.

மறுநாள் உபந்நியாசத்தின் கடைசி நாள். பாகவதர் இயந்திரம் போலத் தான் பிரசங்கம் செய்தார். அவருடைய எண்ணங்கள் எல்லாம் சீதையைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தன. கூட்டத்தின் மத்தியில் அவள் உட்கார்ந்து இருப்பதை அவர் கவனிக்காமல் போகவில்லை. எப்படியோ உபந்நியாசத்தை முடித்துக்கொண்டு அவர் விடுதிக்கு வந்து சேர்ந்தார். காரிலிருந்து கீழே இறங்கியவுடன் அவரை விடுதி வாசலில் முதலில் வரவேற்றது சீதைதான்.

பாகவதர் ஆசுவாசப் படுத்திக் கொண்டு கட்டிலில் வந்து உட்கார்ந்து கொண்டார். "சீதை என்னை விட மாட்டாய் போலிருக்கிறதே. இப்போது என்ன செய்யச் சொல்கிறாய்?" கேள்வியில்தான் எரிச்சல் இருந்ததே தவிர பாகவதரின் உள்ளத்தில் இல்லை.

"இன்று தை வெள்ளிக்கிழமை. நிறைந்த நாள். இப்போதே திருவுளச் சீட்டுப் போட்டு விடலாம்" என்று கூறினாள் சீதை.

பாகவதரும் சற்று யோசித்து விட்டு "அப்படியே செய்யலாம். ஒரு சீட்டில் 'கல்யாணமே வைபோகமே' என்றும் மற்ற சீட்டில் ஒன்றும் எழுதாமலும் போடுகிறேன். நீயே எடு. 'கல்யாணமே வைபோகமே' என்ற சீட்டு வந்தால் நிச்சயம் நம் கல்யாணம்" என்றார் பாகவதர்.

சீட்டுகளை எழுதி தான் வணங்கும் ராமகிருஷ்ண விக்கிரகங்களுக்கு முன் நன்றாகக் குலுக்கிப் போட்டார் பாகவதர்.

சீதையின் கண்களில் நீர் முட்டி நின்றது. பாகவதரை ஒருமுறையும் ராம கிருஷ்ண விக்கிரகங்களை ஒரு முறையும் வணங்கவிட்டு "ஹே கிருஷ்ணா நான் ருக்மிணி எழுதிய கடிதமான "சுருத்வா குணான்" லிகித சுலோகத்தை பக்தி சிரத்தையுடன் படித்தது உண்மையென்றால் என் மனோரதம் நிறைவேறட்டும்" என்று கண்களை மூடிய வண்ணம் ஒரு சீட்டை எடுத்து பாகவதரின் முன் நீட்டினாள்.

பாகவதரின் கைகள் நடுங்கின. சீட்டை மெதுவாகப் பிரித்துப் படித்து விட்டுச் சீதையிடம் அந்தச் சீட்டைக் கொடுத்தார்.

"கல்யாணமே வைபோகமே" என்று எழுதியிருந்த அந்தச் சீட்டைப் படித்தவுடன் சீதைக்குக் கட்டுக் கடங்காத மகிழ்ச்சி ஏற்பட்டது.

சரியாக ஒரு வாரம் கழித்து அவர்களின் திருமணம் சென்னையிலுள்ள கிருஷ்ணன் கோயிலில் எளியமுறையில் நடந்தேறியது. திருமணத்திற்கு பாகவதருக்குத் தெரிந்த சில பெரிய மனிதர்கள் வந்திருந்தார்கள். 'வயதாகிக் கொண்டு இருக்கும் காலங்களில் ஒருவருக்கொருவர் துணை வேண்டியது அவசியம்தான்' என்று திருமணத்தின் போது எல்லோரும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

பாகவதருக்கென்று சொந்த வீடொன்று பழைய மாம்பலத்தில் இருந்தது. திருமணம் முடிந்தவுடன் இருவரும் அங்கு வந்து சேர்ந்தார்கள்.

அன்றிரவு பாகவதர் கட்டிலில் படுத்தவண்ணம் ஏதோ யோசனை செய்து கொண்டிருந்தார். ஆரவம் கேட்டுக் கண்களைத் தூக்கியவுடன், எதிரில் சீதை சர்வாலங்கார பூஷிதையாகப் பால் டம்ளருடன் நின்று கொண்டிருந்தாள். பாகவதர் தன்னைப் பார்த்தவுடன் கைவளையல் குலுங்கப் புன்னகையுடன் பால் டம்ளரை அவர் முன் நீட்டினாள். பாகவதர் மெல்ல எழுந்திருந்து சீதை நீட்டிய டம்ளரைப் பெற்றுக் கொண்டார்.

அவர் பாலை ருசித்து மெதுவாகப் பருகிக் கொண்டிருக்கும்போது, சீதை, "நான் எவ்வளவு கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன் தெரியுமா? திருவுளச் சீட்டு வேறு விதமாக விழாமல் இருக்க வேண்டுமே என்று வேண்டாத தெய்வங்களையெல்லாம் வேண்டிக் கொண்டிருந்தேன்..." என்றாள்.

பாகவதர், "அடிப் பயித்தியமே! வேறு மாதிரியாகச் சீட்டு எப்படி விழும்? நான்தான் இரண்டு சீட்டு களிலும் "கல்யாணமே வைபோகமே" என்று எழுதியிருந்தேனே..." என்று சொல்லிவிட்டு உவகை பொங்க நின்றிருந்த சீதையை மெல்ல அணைத்துக் கொண்டார்.

**கவிஞர் குடந்தை புகழேந்தி**



நுங்கும் நுரையும் சுழியிட்டு
நோய்க்கு மருந்தாய் நடந்தாய்நீ!
எங்கும் பயிர்கள் பசுமையதாய்
எழிலாய் வளரச் செய்தாய்நீ!
தங்கும் திருவே உன்னால்தான்
தமிழகம் செழிக்கச் செய்தாய்நீ!
கங்குல் பிரியக் கடமையொடு
களிப்பாய் நடந்தாய் காவேரி!

தஞ்சை மண்ணை வளமாக்கித்
தங்கமாய் ஆக்கி நின்றாய்நீ!
அஞ்சி அஞ்சிச் சாகாமல்
அமுதம் அளித்தாய் காவேரி!
கஞ்சி குடிக்கும் விவசாயி
களஞ்சியம் கட்ட வழிசெய்தாய்!
நெஞ்சம் மகிழும் படியாக
நடந்தே சென்றாய் காவேரி!

குடகில் பிறந்தாய், ஆனாலும்
குடந்தை நகரில் நீபுகுந்தாய்!
சுடராய் ஒளியில் நின்றாய்நீ!
சுதந்தர மாக நீநடந்தாய்!
அடவி தழுவி வந்திடினும்
அன்பால் தமிழகம் மணந்தாய்நீ!
குடதிசை உதித்து வந்தாலும்
குணதிசை கண்டாய் காவேரி!

உனக்கும் வறுமை வந்துளதோ?
ஊமை யாகித் தூங்குவதேன்?
எனக்கு வறுமை வந்தாலும்
இதயம் கலங்கி விடமாட்டேன்!
கனகம் கொழிக்கச் செய்தவளே!
காதல் மணக்கச் செய்தவளே!
உனக்கு வறுமை வருமோடி?
உருகி நெகிழ்ந்தேன் காவேரி!

நீயே எங்கள் தாயாக
நிமிர்ந்தே நடந்தாய் நாளெல்லாம்
தாயே! உனக்கேன் இந்தநிலை?
தரணி பார்க்கப் பொறுக்காது!
நாயேன் உன்னை எண்ணிநிதம்
நடுங்கிக் குலைந்து போகின்றேன்!
நோயேன் உனக்கு வந்ததுவோ
நோன்பால் தீரும் காவேரி!

ஆடியில் அழகாய் ஓடிடுவாய்!
அணங்காய் நீயும் சிறந்திடுவாய்!
ஆடி அசைந்து வந்திடுவாய்!
அனைவரும் மகிழச் செய்திடுவாய்!
கூடி நாங்கள் கும்பிடவே
குழைந்தே வருவாய் செழிப்புடனே!
வாடி வதங்கும் மக்களுக்கு
வளமை சேர்ப்பாய் காவேரி!

**வெடிகுண்டு அரக்கனை மாய்க்க வேண்டும் தீபாவளி**

ஓங்கியுயர்ந்(து) உலகமெலாம் உற்று நோக்கும்
ஒப்பரிய பேரிமயம் வடக்கில் காக்க;
ஓங்கார மந்திரத்தை யொலித்துக் கொண்டே
ஓய்வின்றி முக்கடலும் அலைக்க ரத்தால்
நீங்காது திருவடியை வருடிப் போற்ற
நின்றுதவம் செய்குமரி தெற்கில் காக்க,
பூங்காவாம் அமைதிக்குப் பாரதம் என்றே
பூவுலகோர் போற்றுகின்ற புனிதப் பூமி

புத்தர்மகா வீரரோடு நாயன் மார்கள்,
புகழார்ந்த ஆழ்வார், ஆச் சாரியார்கள்,
சித்தர்பலர் திருமூலர்; ராம கிருஷ்ணர்,
சீடர்விவே கானந்தர், ராமலிங்கர்

எத்தனையோ முனிவரர்மா குரவர் தோன்றி
இப்பெரிய உலகிலுள உயிரி னங்கள்
அத்தனையும் படைத்தவன்அவ் ஒருவன் எல்லாம்
அவன்மக்கள் எனும்உண்மை புகட்டு நாட்டை,

விண்ணதிரும் வெடிகுண்டுக் களமாய் ஆக்கி
வெறிபிடித்த பேயரக்கர் சில்லோர், இன்று
மண்ணதிர மக்கள்துடி துடித்துச் சாவ
மாகொடுமை புரிகின்றார் அந்தோ! அந்தக்
கண்ணபிரான், இந்நரக அசுரர் தம்மைக்
கடிதிலே அழித்(து)அமைதி நிலவ வேண்டிப்
பண்ணுகின்ற பூசையாய்க் கொள்வோம் இந்தப்
பண்டிகைதீ பாவளியை; இனிதே வாழ்வோம்!



கட்டுரை, வண்ணப்படங்கள்

ஜெயாதரா

# என்றும் திகட்டாத எம்பெருமான் தரிசனம்

சுமார் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் முதன் முறையாக திருப்பதிக்குச் சென்று பகவானைத் தரிசிக்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது.

அப்போது எஸ்.எஸ்.எல்.சி. பரீட்சை எழுதி இருந்த நேரம். குறிப்பாக அந்த வருடம் கேள்வித் தாள்கள் மிகவும் கடினமாக இருந்தன. காஞ்சிபுரம் பச்சையப்பன் பள்ளியில் பரீட்சை எழுதிய நானும் எனது நண்பர்களான, தணிகைவேல், தாஸ், மாரிமுத்து, மாணிக்கம் ஆகியவர்களும் சேர்ந்து, "ஏழுமலையானே, இந்தப் பரீட்சையில் எங்களை எப்படியாவது 'பாஸ்' செய்ய வைத்துவிடு. நாங்கள் ஐவரும் சேர்ந்து திருப்பதிக்கு வந்து மொட்டையடித்துப் பிரார்த்தனை செலுத்துகிறோம்" என்று வேண்டிக் கொண்டோம். தேர்வில் வெற்றி பெற்றுவிட்டதால் நாங்கள் சேர்த்து வைத்திருந்த ஒரு சிறு தொகையை எடுத்துக் கொண்டு திருப்பதிக்குப் புறப்பட்டோம். கீழ்த் திருப்பதி வரை பஸ்ஸில் பயணம் செய்த பிறகு திருமலைக்கு நடந்தே சென்றோம். வாழ்க்கையில் முதன் முறையாக மலைப்பாங்கான இடத்தின் அற்புதமான அழகைக் கண்டு ரசிப்பதே மனத்திற்கு ரம்யமான உணர்வுகளை அந்த நாள்களில் ஏற்படுத்தியது. நண்பர்களோடு உற்சாகமாக பேசிக் கொண்டே நடந்ததால் அந்த இளமைப் பிராயத்தில் மலைமீது ஏறிச் சென்றதில் களைப்பே தெரியவில்லை.



விஸ்வரூப ஆஞ்சநேயர். நடைபாதை பயணிகளை முதலில் ஆசீர்வதிப்பவர்



திருமலையின் ஒரு பகுதி

ஐந்து பேரும் முடி இறக்கிப் புனித குளத்தில் நீராடினோம். நாங்கள் சென்ற மாதம் புரட்டாசி மாதம் என நினைக்கிறேன். மிக அதிகமான கூட்டம். சுமார் எட்டு மணி நேரம் சிரமத்திற்கிடையே வரிசையில் நின்று 'கோவிந்தா, கோவிந்தா' என்ற நாமத்தை உச்சரித்துச் சென்று தெய்விக தரிசனத்தைப் பெற்றோம். 'இறைவா திரும்பவும் தங்கள் திருமேனி தரிசிக்கும் பொன்னான வாய்ப்பு எப்போது கிடைக்குமோ?' என்ற கேள்விக்குறியுடனே திருமலையிலிருந்து மிகுந்த மன நிறைவோடு திரும்பினோம். ஆனால் பகவான் பாலாஜியின் கிருபையால் அதன் பிறகு எவ்வளவோ முன்னேற்றங்கள். எண்ணிக்கை கூற இயலாத அளவுக்குத் திருப்பதிப் பயணங்கள்; ஒவ்வொரு பயணத்தின் போதும் ஒவ்வொரு விதமான அனுபவங்கள். எப்பொழுது திருப்பதி சென்று திரும்பும் போதும் மீண்டும் இந்தத் தரிசன இன்பத்தைத் துய்க்க எப்போது போவோம் என்கின்ற ஆவலை மனத்தில் தேக்கிக் கொண்டே வீடு திரும்புவது வழக்கமாகிவிட்டது. திருவேங்கடமுடையவனை பல்வேறு அலங்காரத்தில் பல்வேறு சந்தர்ப்பங்களில் தரிசிக்கும் பெரும் பாக்கியம் எனக்குக் கிடைத்திருக்கிறது.

என்னுடைய ஒன்றுவிட்ட சகோதரர் ஜெனித் சங்கர் ஒரு சிறந்த போட்டோக் கலைஞர். அவர்தான் என் குரு. அவர் தன்னுடைய வருமானத்தில் ஒரு சிறு பங்கை தினமும் எடுத்து ஓர் உண்டியலில் சேமித்துக் கொண்டே வருவார். ஒவ்வொரு வருடமும் காணும் பொங்கல் அன்று ஒரு வாடகைக் காரை அமர்த்திக் கொண்டு என்னையும் மற்றும் குடும்பத்தினரையும் அழைத்துக் கொண்டு திருப்பதி சென்று உண்டியலில் அந்த காணிக்கையைத் தவறாது செலுத்து



பாபநாசம்

வது அவர் வழக்கம். போட்டோக் கலையை அவரிடமிருந்து கற்றுக் கொண்டதோடு, எனது வருமானத்தில் ஒரு சிறு தொகையைச் சேமித்து வைத்து அவ்வப்போது திருப்பதி போகும் போதெல்லாம் சேர்ந்த அந்த தொகையை உண்டியலில் செலுத்தும் பழக்கத்தையும் அவரிடம் கற்றுக் கடைபிடித்து வருகிறேன். என்னுடைய கிருஸ்துவ நண்பர்கள் கூறுவார்கள் : 'பைபிளில் ஓர் இடத்தில்' உன் வருமானத்தில் பத்து சதவீதத் தொகையை இறைவனின் பணிக்காகக் கொடு. கடவுள் அந்தத் தொகையைப் போல நூறு பங்கு உனக்குத் திரும்ப அளிப்பார்' என்று குறிப்பிட்டிருப்பதாக. அதேபோல் திருவேங்கட கடவுள் 'பாலாஜிக்கு' காணிக்கையாக அர்ப்பணிக்கும் நேரத்திலெல்லாம், திரும்ப பல மடங்கு வருமானம் கிடைக்கும் படியான அனுபவத்தை நானே உணர்ந்திருக்கிறேன். ஆனால் ஒருபோதும் கடவுளைப் பிரார்த்தனை செய்யும்போது 'கடவுளே எனக்கு இந் நன்மைகளைச் செய்து தர வேண்டும்' என்று வேண்டிக் கேட்டதே இல்லை. நம் தேவைகளை நம்மை படைத்த பகவான் நன்கு அறிவான். அதன்படி நம் வாழ்க்கையை அவர் பொறுப்பேற்றுக் கொள்வார். இந்தப் புண்ணிய பூமியில் ஜனனம் செய்ய வைத்து, அர்த்தமுள்ள ஒரு வாழ்க்கையை வாழ இறைவன் கருணை புரிந்திருப்பதற்காக மட்டுமே, 'கடவுளே நன்றி! நன்றி! உம்மால் நான்



திருமுடி காணிக்கை

பெற்றிருக்கும் எல்லா நன்மைக்கும் நன்றி' என்று கூறி பிரார்த்தனை செய்வேன். இன்றைய நாள் வரை பகவான் எல்லா நலன்களையும் இன்பங்களையும் அளித்து, இனிய மனைவி மக்களையும், நல்ல நண்பர்களையும் அளித்து, போதிய செல்வத்தையும், ஓரளவுக்குப் புகழையும் அளித்து மனநிறைவான வாழ்க்கையை வாழ எனக்கு வரம் அளித்திருக்கிறாய். பகவானே உனக்கு நன்றி" என்று மனநிறைவாக கூறித்தான் வணங்குவேன்.

எப்படி முதன் முதலாக திருப்பதி சென்ற பயணம் மனத்தில் பசுமையாக நிலைத்து நிற்கிறதோ அதே மாதிரி சமீபத்தில் அமுதசுரபி ஆசிரியர் கலைமாமணி விக்கிரமனுடனும் அவரது துணைவியாருடனும் எனது மைத்துனரும் விக்னேஷ் ஸ்டுடியோ உரிமையாளருமான குமாருடனும் திருப்பதி சென்ற பயணம் மறக்க முடியாத சிறந்த அனுபவம்.

சென்னையிலிருந்து மாலை ஆறுமணிக்குக் காரில் புறப்பட்டோம். பயணத்தின்போது திருப்பதி பற்றிய பல விவரங்களை விக்கிரமன் கூறிக் கொண்டே வந்தார். சுமார் பதினைந்து வருடங்களுக்கு முன்னால் ஒரு நாள் முழுவதும் பகவான் பாலாஜியின் சந்நிதானத்தில் இருந்து காலை முதல் இரவு வரை நடைபெற்ற பல்வேறு பூஜைகளைக் கண்ணாரக் கண்டு அந்த அனுபவத்தை அந்த வருட தீபாவளி மலரில் எழுதி இருப்பதாகக் கூறினார்.

"இந்த பூலோகத்தில் நமது பாரத பூமியே புண்ணிய பூமி என்று கூறுவார்கள். இந்த பாரத பூமியில் மிகுந்த புண்ணிய க்ஷேத்திரமாக விளங்குவது நம் பரமன் கோவிந்தன் அருள்புரியும் வேங்கடாசல க்ஷேத்திரமே. இதுவே கிருதயுகத்தில் அஞ்சனாத்ரி என்றும், திரேதா யுகத்தில் நாராயணகிரி என்றும், துவாபர யுகத்தில் சிம்ஹாசலம் என்றும் வழங்கப்பட்டது. கலியுகத்தில் ஸ்ரீ வேங்கடாசலம் என அழைக்கப்படுகிறது. இதன் பெருமை சொல்லற்கரியது.

"ஸ்ரீ வேங்கடாசலத்தில், ஸ்ரீநிவாசனின் ஆலயத்தின் வடபுறத்தில் ஸ்ரீ வராக மூர்த்தியின் சன்னிதியில் அமைந்திருக்கும் ஸ்ரீ சுவாமி புஷ்கரணி தீர்த்தமே மிகவும் தெய்விகமான தீர்த்தம். இதற்கு ஈடான புண்ணிய தீர்த்தம் வேறு எங்குமே இல்லை. மூன்று உலகங்களிலுமுள்ள புண்ணியத்தை அல்லது பாவ நீக்கத்தை ஒருவன் சுவாமி தீர்த்தத்தில் நீராடுவதால் பெற்றுவிடலாம். இது ஒரு வரப்பிரசாதமான தீர்த்தம். யார் யார் எதை எதை எவ்வாறு பிரார்த்திக்கிறார்களோ அவர்களுக்கு அவ்வாறே அருள்புரியும் ஆற்றல்மிக்கது இத்தீர்த்தம். இங்கே நீராடி ஸ்ரீ வேங்கடேசனை வழிபடுவோன் அறிவு, லட்சுமி கடாட்சம், புகழ், செல்வம், ஞானம், தர்மம், பற்றற்ற தன்மை,

மனத்தூய்மை முதலியவற்றைப் பெறுகிறான்" என்று விக்கிரமன் விவரித்தார்.

மேலும் விக்கிரமன் கூறுகையில், "இப்புனித தீர்த்தத்தில் நீராடி பரமனைத் தரிசித்து பாவசுமை நீத்த ஒருவனின் கதையும் பழைய இதி காசத்தில் விளக்கப்பட்டுள்ளது. அதாவது மகாபாரதப் போருக்குப் பிறகு அர்ஜுனன் பேரன் பரீட்சித் என்ற மன்னன் அஸ்தினாபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தான். ஒரு சமயம் அவன் காட் டிற்கு வேட்டையாடச் சென்றபோது, ஒரு மானை துரத்திச் சென்று தனது முகாமிலிருந்து வெகுதூரம் விலகி வந்து விட்டான். நெடுநேரமாகி விடவே பசியும் தாகமும் அவனை வாட்டத் தொடங்கின. அவனை அலைக்கழித்த மான் ஒரு முனிவரின் ஆசிரமத்தருகே சென்று புதர்களுக் கிடையே மறைந்துவிட்டது. மானைத்



குளித்து முடித்த பெண்கள் தலை வாரிக்கொள்ளும் காட்சி



பாபநாசத்தில் நீராடுதல்

துரத்திச் சென்ற மன்னவன் முனி வரின் ஆசிரமத்தைக் கண்டு உள்ளே சென்றான். அங்கு சமீகர் என்ற முனிவர் புலன்களையெல்லாம் அடக் கியவராக தவத்தில் ஆழ்ந்திருந்தார். அவர் தியானத்தில் இருப்பதாகக் கருதி மன்னன் மானைப் பற்றிக் கேட்டான். தன்னை மறந்திருந்த முனிவரின் செவிகளில் மன்னனின் கேள்விகள் விழவே இல்லை. பல முறைக் கேட்டும் முனிவர் பதிலளிக் காதது கண்டு மன்னன் வெகுண்டான். தன்னிலை இழந்தான். சுற்றும் புறமும் பார்த்தான். தூரத்தில் பாம்பு ஒன்று இறந்து கிடந்ததைக் கண்டான். 'செத்தாரைப் போல் வேடம் போடும் கபட யோகியே! இந்த செத்த உடலையே மாலையாக ஏற்றுக் கொள்!' எனக் கூறி பாம்பின் உயிரற்ற உடலை அவர் கழுத்தில் மாலையாக அணிவித்து விட்டுக் கோபத்துடன் திரும்பிச் சென்றுவிட்டான்.

"சமாதியில் ஆழ்ந்திருந்த முனிவர் சமீகருக்குச் இருங்கி என்றொரு மகன் உண்டு. அவன் நண்பன் ஒருவன் மன்னன் வந்து சென்ற சற்று நேரம் கழித்து ஆசிரமத்துக்கு வந்தான். தன் நண்பனின் தந்தையின் கழுத்தில் பாம்பின் உடலை மாலையாகப் போட் டிருப்பதைக் கண்டு பயந்தவனாக அலறிக்கொண்டே ஓடி இருங்கியிடம் சென்று கூறினான். நண்பர் சொல் கேட்ட இருங்கி உடனே சினம் கொண்டு, "என் தந்தையின் கழுத்தில் இறந்த பாம்பின் உடலைப் போட்ட



கோயில் முகப்பு - இரவில்

தீய செய்கையைச் செய்தவன் எவனா யினும் தக்ஷகன் என்ற பாம்பினால் ஏழு தினங்களுக்குள் கடிக்கப்பட்டு மரணம் அடைவானாக" என்று சாப மிட்டான்.

"முனிவர் மகன் சாபமறிந்த மன்னன் செய்வதறியாது திகைத் தான். வலியச் சென்று பாம்பின் வாயில் சிக்கிய தேரையின் வாழ்வு போல ஆகிவிட்டதே தன் வாழ்வும் என வருந்தி நின்றான். கங்கைநதியின் மையத்தில் ஒரு மண்டபம் அமைத்து எவ்விஷத்தையும் நீக்க வல்லவர்கள், மருத்துவக் கலைஞர்கள் மற்றும் பல முனிவர்கள் சுற்றி அமர மன்னன் பரீட்சித் அம் மண்டபத்திற்குக் குடி பெயர்ந்தான். தக்ஷகன் பாம்பு வராம விருக்க எல்லாவிதப் பாதுகாப்பு ஏற்பாடுகளும் செய்யப்பட்டன.

அந்நாட்டில் காச்யபன் என்றோர் அந்தணன் வாழ்ந்து வந்தான். மந்திர சாஸ்திரங்களில் கரைகண்டவன். எத்தகைய கடும் விஷத்தையும் நீக்கும் ஆற்றல் பெற்றவன். அவன் வறுமை யில் வாடினான். மன்னனின் சாபம் பற்றிக் கேள்விப்பட்டான். 'தக்ஷகன் என்ன அவன் ரக்ஷகனே வந்தாலும் என் மந்திர சக்தியால் மன்னனை காப்பாற்றி விடுவேன்!' என்று நினைத் தான். மன்னனிடமிருந்து அதிகமான செல்வத்தைப் பெறலாம், சுகமான வாழ்வு வாழலாம் என்று எண்ணி மன்னனைக் காணப் புறப்பட்டான்.

"சாபத்தின் கெடு முடிகிற ஏழாம் நாள் காலை காச்யபன் மன்னன் மண்டபம் அமைத்து தங்கி இருக்கும் நகரினுள் நுழைந்து கொண்டிருந் தான். அவ்வமையம் தக்ஷகன் (பாம்பு) ஒரு பிராமணனின் உருவில் அவன் முன்பு தோன்றி, 'தாங்கள் எங்கு செல்கிறீர்கள்?' என்று கேட்டான். 'மன்னன் பரீட்சித் தக்ஷகனால் கடிபட் டால் அவ்விஷத்தினின்று காக்கவே செல்கிறேன். நீ யார்?' என வினவி னான்.

'அன்பனே, நான்தான் தக்ஷகன். எனது விஷத்தை முறியடிக்கும் ஆற்ற லுள்ளது எதுவும் இவ்வுலகில் இல்லை. உன்னால் முடியாது. திரும்பிச் செல்' என்றான்.

"தக்ஷகனே என் வழியில் குறுக்கிடு றான் எனின், என் மந்திரத்தின் வலிமை பற்றிச் சொல்லவும் வேண் டுமோ. 'என் மந்திர சக்தியின் முன் உன் ஆற்றல் நில்லாது போ' என்றான் காச்யபன். இதனைக் கேட்ட தக்ஷகன் வெகுண்டு அருகில் செழித்து படர்ந்து வளர்ந்திருந்த ஒரு பெரிய மரத்தைச் சுட்டிக் காட்டி, 'காச்யபனே, இதோ பார்!' என்று கூறி அதைத் தீண்டிய கணமே அம்மரம் விஷத்தீயால் எரிந்து சாம்பலாகி சரிந்துவிட்டது. உடனே காச்யபன், 'இதோ பார் என் மந்திரத் தின் ஆற்றலை' எனக் கூறி தன் ஜபத்தின் சக்தியால் அதற்கு உயிர் ஊட்டினான். அதைக் கண்டு வியந்த தக்ஷகன் காச்யபனை நோக்கி, 'அந் தணரே! உமக்குப் பொருள்தானே வேண்டும். மன்னவன் எவ்வளவு கொடுப்பானோ அதைப்போல இரு மடங்கு பொன்னும் பொருளும் தருகிறேன். மன்னனின் ஆயுள் முடியப் போகிறது. வந்த வழியே



தங்க விமானம்

திரும்பிச் செல்லும். சுகமாக வாழும்" என்றான்.

பேராசை கொண்ட காச்யபன் மன்னன் உயிரைப் பற்றிக் கவலைப் படாமல் தக்ஷகன் கொடுத்த செல்வத் துடன் தன் இல்லம் திரும்பினான்.

பின்பு முனிவர்கள் மன்னனுக்குக் காணிக்கையாக அளித்த பழங்களுள் ஒரு பெரிய இலந்தைப் பழத்தினுள் ஒரு புழுவாக தக்ஷகன் புகுந்து கொண்டான். மன்னன் அந்தப் பழத்தை எடுத்து வாயில் போட்டு மென்ற போது தொண்டையில் கடிந்து மன்னனைக் கொன்றான் தக்ஷகன்.

தன் இல்லம் திரும்பிய காச்ய பன் இனி ஊரில் சுகமாக கௌரவ மாக வாழலாம் என்று எண்ணி இறு மாந்து இருந்தான். திடீர் பணக் காரனாக ஆன அவனை உற்றாரும் உறவினரும் வெறுத்து ஒதுக்கி னார்கள். இது கண்டு மனம் நொந்த காச்யபன் அவ்வூரில் வாழப் பிடிக் காமல் வேறு ஊர் சென்றான். அவன் எங்கு சென்றாலும் காரணமின்றி வெறுப்புக்கு ஆளானான். அப்போது சாகல்யர் என்ற முனிவரைப் பற்றிக் கேள்விப்பட்டு அவரைத் தேடிச் சென்று, "ஐயனே! நான் அறிந்த நாள் முதல் ஒரு பாவமும் செய்தவன் இல்லை. என்னைச் சேர்ந்தவர்களும் என் உறவினர்களும் என்னை ஒதுக்கி விட்டார்கள். என்ன காரணம் என்று அறியாமல் தவிக்கிறேன். தாங்கள் தான் காப்பாற்ற வேண்டும்" என் றான்.

'காச்யபா! தக்ஷகனின் விஷத்தை நீக்கும் ஆற்றல் உனக்கிருந்தும் நீ மன்னனைக் காக்காமல் பொருளாசை காரணமாகத் தவறு செய்து மன்னன் இறக்கக் காரணமாகிவிட்டாய்' என்றார் முனிவர்.

'ஐயனே தவறை உணர்ந்து வருந்து கிறேன். இப்பாவம் நீங்க எனக்கு ஓர் உபாயம் கூற வேண்டும். இனி இதுபோன்ற தவறு செய்ய மாட்டேன். இது உறுதி' என்று கூறிப் பணிந்து நின்றான் காச்யபன்.

"காச்யபா! உன் பாவத்திற்குப் பரிகாரம் கூறுகிறேன். லக்ஷ்மியின் பதியான ஸ்ரீநிவாசன் வேங்கடாத்ரி மலையில் குடிகொண்டுள்ளான். அதற்கு ஈடான திருத்தலமே கிடை யாது. எல்லா பாவங்களையும் அழித்து மங்கலம் நல்கும் ஸ்வாமி 'புஷ்கரிணி' என்ற பரமபாவன தீர்த் தம், இத்திருக் கோயிலின் வட புறத்தில் அமைந்துள்ளது. உடனே வேங்கடகிரியைச் சென்றடைந்து மங்கலம் நல்கும் ஸ்வாமி தீர்த்தத்தில் முறைப்படி ஸங்கல்பம் செய்து கொண்டு நீராடி, அதன் கரையில் எழுந்தருளி இருக்கும் ஸ்ரீவராஹ



திருவேங்கடப்பெருமாள் - உற்சவர்

மூர்த்தியை வழிபட்டுப் பாவம் நீங்கப் பிரார்த்தித்துக் கொள். தேவர்க் கெல்லாம் தேவனும், மூவர்க்கும் நாதனுமான ஸ்ரீநிவாசன் அங்கு எழுந்தருளியிருக்கிறான். பக்தர் களைக் காப்பதே தலையாய கடமை என்று கருதி பரமனால் எடுக்கப்பட்ட பரிபூரண அர்ச்சாவதாரம் இது. தன்னை வணங்குவோர் இடர்நீக்க சக்கரத்தையும், அவர் வாழ்வில் யாவற்றிலும் வெற்றிகாணச் சங்கை யும் உடையவனாக எழுந்தருளி இருக்



பிரம்மோத்ஸவம்



கடைத் தெரு - கோவிலின் முன்பு



பெண்கள் - பாசிமணி விற்கிறார்கள்

கிறான். அவன் திருவடித் தாமரைகளை உறுதியாகப் பற்றிக் கொண்டு விடு. உன் பாவங்கள் நீங்கி நலம் பெறுவாய்' என்று கூறி முனிவர் ஆசிர்வதித்து அனுப்பினார்.

"காச்யபன் உடனே கிளம்பி பல நாள்கள் பயணம் செய்து திருவேங்கட மலையை அடைந்து நியமத்துடன் முறைப்படி சங்கல்பம் செய்து ஸ்வாமி தீர்த்தத்தில் நீராடினான். ஸ்ரீவராக பெருமானை வணங்கி வேண்டிக் கொண்டான். பின் திருக்கோயில் உள்ளே சென்று மாலவன் அழகில் மயங்கி மனமுருகிப் பிரார்த்தித்து. பேராசையால் தான்செய்த பாவம் குறித்து வருந்தி அழுதான். இனம் தெரியா இன்ப உணர்வு உள்ளத்தில் நிறைய ஊர் திரும்பினான். அவனைச் சார்ந்தவர்களிடத்தே பெரும் மாற்றம் ஏற்பட்டிருப்பதைக் கண்டான். எல்லா நாட்டினரும், உறவினரும், மற்றவரும் திருவேங்கடவனைத் தரிசித்துவரும் காசியபனை ஊர் எல்லையிலேயே பூர்ண கும்பத்துடன் வரவேற்றனர். இவனுக்கு முன்போலவே கௌரவம் அளித்துப் போற்றினர். ஸ்ரீஸ்வாமி புஷ்கரிணி தீர்த்தத்தின் மகிமையையும், பரமனின் தயையையும் எண்ணி எண்ணி பக்தி பரவசத்திலேயே ஆழ்ந்தவனாகி விட்டான் காச்யபன்" என்று கதையை சொல்லி முடித்தார் டாக்டர் விக்கிரமன் அவர்கள்.

இரவு பத்து மணிக்கு திருமலையை அடைந்தோம். ஆவணி மாதத்தின் ஜிலு ஜிலு காற்று உள்ளத்திற்கும் உடலுக்கும் இதமாக இருந்தது. 'நாராயணகிரி தங்கும் விடுதிகளுக்கு நடுவே சமீபகாலத்தில்தொடங்கப்பட்டிருக்கும் 'மயூரா' உணவு விடுதி பக்தர்களுக்கு ஒரு வரப்பிரசாதமாக அமைந்திருக்கிறது. சுகமான இரவு உணவை அங்கே முடித்துக்கொண்டு நாராயணகிரி தங்கும் விடுதியில் தங்கினோம்.

மறுநாள் நான்கரை மணிக்குப் பகவானுக்கு சஹஸ்ரநாம அர்ச்சனையைக்கண்டுகளிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. தலைக்கு 200 ரூபாய் கட்டணம். நாங்கள் நான்கு பேரும் விடியற்காலை இரண்டு மணிக்கே கண்விழித்துக் குளித்து முடித்து தயாராகி மூன்றரை மணிக்கெல்லாம் 'வைகுந்தத்தை' அடைந்து விட்டோம். அப்போது உள்ளே 'சுப்ரபாதம்' தரிசனம் நடந்து கொண்டிருந்தது. 'பொழுது புலர்ந்தது யாம் செய்த தவத்தால்.கோசலைக் குமரனே பள்ளி எழுந்தருள்வாய் கௌசல்யா சுப்ரஜா ராமா' என்று ஸுப்ரபாதம் பாடும் ஒலி திருமலை எங்கும் ஒலித்துக் கொண்டிருந்தது. 'தோமாலசேவைக்குப் பிறகு சஹஸ்ர

நாம அர்ச்சனையின் போது நாங்கள் உள்ளே அனுமதிக்கப்பட்டோம். திருவேங்கடவனின் புகழ்பாடும் ஆயிரத்தெட்டு நாமங்களைக் கூறி அர்ச்சனை செய்தார்கள். அரைமணி நேரத்திற்கு மேலாக சுவாமி சந்நிதானத்தில் உட்கார்ந்திருந்து கம்பீரமாக நின்று காட்சி தரும் ஸ்ரீநிவாசனைத் தரிசிக்கும் பாக்கியமே பெரும் பாக்கியம். டாக்டர் விக்கிரமனும், அவரது துணைவியாரும், எனது மைத்துனர் விக்னேஷ்குமாரும் தாமரை மலர் போன்று அமைந்த உயர்ந்த பீடத்தில் நான்கு கரங்களுடன் காட்சியளிக்கும் ஸ்ரீநிவாச பெருமானைப் பார்த்துப் பார்த்து நெகிழ்ந்து போனார்கள்.

மனநிறைவான தரிசனம் பெறும் பாக்கியமே மிகப் பெரிய பாக்கியமாக மகிழ்ந்து, கோயிலில் இருந்து புறப்பட்டு 'மயூராவில்' சுவையான காலை உணவை உண்டோம். அப்போது டாக்டர் விக்கிரமன் அவர்கள் கூறினார்:

"திருப்பதி மலையும் அகோபில மலைத் தொடரும் ஸ்ரீசைலம் மலைகளும் ஆதிசேஷனுடைய உடல்போல அமைந்துள்ளன. பூமிநூல் ஆராய்ச்சிப்படி நோக்கினாலும் பெரும் பாம்பு ஒன்று சயனித்திருப்பது போல தோற்றத்தை மேற்படி மலைத் தொடர் அளிக்கும். காளஹஸ்திவாயாகவும், திருமலை தலையாகவும், அகோபிலம் முதுகாகவும் ஸ்ரீசைலம் வாலாகவும் விளங்குகின்றன. தொல்காப்பியர் முதல் பாரதியார்வரை வியந்து பாடிய திருவேங்கடத்திலுள்ள பெருமானுக்குப் பல்லவர்களும், சோழர்களும், பாண்டியர்களும் திருப்பணி செய்திருக்கிறார்கள். விஜயநகர மன்னர்கள் திருமலைக்குச் செய்த கைங்கர்யம் கொஞ்ச நஞ்சமன்று. அதனால்தான் கிருஷ்ணதேவ ராயர் தமது அரசியுடன் சேவித்து நிற்கும் சிற்பத்தைக் கோயிலில் வைத்திருக்கிறார்கள். திருமலை திருக்கோயில் சிறப்புற்று திகழ்வதற்கு ஸ்ரீராமானுஜரும் ஒரு முக்கியக் காரணம். கோயில் நிர்வாகம் நித்ய பூஜை முறைப்படி நடைபெற வழிவகைகள், விதிமுறைகள் வகுத்தவர் உடையவர். அவரது சீடர்கள் இன்றும் ஒழுங்குமுறை தவறாமல் திருவேங்கடவனுக்கு நித்திய கைங்கரியங்கள் செவ்வனே நடைபெறச் செய்து வருகிறார்கள்" என்றார்.

திருமலையிலிருந்து ஒரு கிலோமீட்டர் தூரத்தில் உள்ள 'சிலா தோரணம்' என்கின்ற இடத்திற்குக் காரில் சென்றோம். மிகவும் நூதனமான கற்பாறைகள் அங்கே காணப்பட்டன. தொல்பொருள் துறையினரின் அறிவிப்பின்படி அந்தப் பாறைகள் 150 கோடி ஆண்டுகளுக்கு முற்



மலைவாழ் பக்தைகள் தரிசனத்திற்காக...



150 கோடி வருடத்திய கற்பாறைகள்.

பட்டவை என அறிந்தோம். அங்கு தான் ஆதி வேங்கடேசபெருமாள் அவதரித்து, அப்பாலுள்ள வேங்கட மலைக்குப் குடிபுகுந்தார் என அறிந்தோம்.

கடந்த இருபத்தைந்து வருடங்களாக தனியாகவும், குடும்பத்தாருடனும், தொலைக்காட்சி நிலைய இயக்குநர் திரு. ஏ. நடராசன் போன்ற வி.ஐ.பி.க்களுடனும், பத்திரிகை நண்பர்களுடனும், வெளிநாட்டு நண்பர்களுடனும் பல்வேறு சந்தர்ப்பங்களில் திருப்பதி திருமலை தரிசனத்திற்கு நான் வரப்பெற்றிருந்தாலும் இன்றைக்குத்தான் இந்த அரிய பாறைகளைப் பார்க்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்திருக்கிறது. பலருக்கு இந்த விஷயம் பற்றித் தெரியாததால் திருமலைக்கு வரும் பக்தர்களில் பலர் இந்தப் புராதன தெய்விகப் பாறைகளைப் பார்க்கும் வாய்ப்பை அடைவதில்லை.

அந்த இடத்திலிருந்து மூன்று கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள திருமலை தேவஸ்தானம் நடத்தும் வேத பாடசாலைக்கு சென்றோம். சமீபத்தில் காஞ்சிப் பெரியவர் ஜெயேந்திரரால் திறந்து வைக்கப்பட்ட பாடசாலை இது. சிறுசிறு குடில்களாக அழகாக கட்டப்பட்டக் கட்டடங்கள். ஆங்காங்கே மாணவர்கள் உட்கார்ந்து வேதம் படித்துக் கொண்டிருந்த காட்சி மனத்திற்கு ரம்மியமாக இருந்தது. நகரத்தின் பாதிப்பு ஏதும் இல்லாமல் இயற்கையான சூழ்நிலையில் வேதபாடம் ஒன்றே குறிக்கோளாகக் கொண்டு இங்கு கல்வி பயிலும் மாணவர்கள் மிகுந்த பேறு பெற்றவர்கள். எட்டு வருடப் படிப்பு, பன்னிரெண்டு வருடப் படிப்பு என்று இரண்டு வகையாக மேற்கொள்ளப்பட்டு வேதம் கற்பிக்கப்பட்டு வருகிறது. சமீபத்தில் ஓர் 'ஆடியோ கேசட்' மூலம் ராயல்டி தொகையாக தனக்குக் கிடைத்த 20 லட்சம் ரூபாயை இசைமேதை எம்.எஸ். சுப்புலட்சுமி அவர்கள் முழுவதுமாக இந்த வேத பாடசாலைக்கு நன்கொடையாக அளித்திருக்கிறார்கள். தமிழர்களின் பெருமையை தன் பங்குக்கு இப்படி எம்.எஸ். உயர்த்திக் கொண்டே போவதால், நாம் என்றென்றும் அவருக்குக் கடமைப்பட்டவராக இருக்கிறோம். கடந்த இருபத்தைந்து வருடங்களாக திருமலையைப் பற்றி அறியாத எவ்வளவோ தகவல்களை டாக்டர் விக்கிரமன் அவர்கள் கூற அறிந்து கொண்ட முழுமையான மனநிறைவுடன் சென்னை திரும்பினேன்.

திரும்பவும் திருப்பதிக்கு எப்போது போவோம் என்ற ஆவல் உள்ளத்தில் அதிகமாகவே இருக்கிறது.


வேதபாடசாலை


திருப்பதி- திருமலையின் அழகிய இரவு தோற்றம்

# திருப்பதி



மலையடிவாரம்



முதல் கோபுரவாசல்

# இந்தியர்களாகப் பிறப்பதில் பெருமை

பேராசிரியர்
ஜே.ஜி. கண்ணப்பன்

இரண்டாம் உலகப் போரில் பணிபுரிந்த எனது தந்தையார் கேப்டன் ஜே.எஸ். கங்காதரன், கப்பல் மற்றும் விமானம் மூலம் வெளிநாடு சென்றது எனது இளம் வயதில் மனதில் பட்டு, வெளிநாடு செல்ல ஆர்வம் ஊட்டியது. அதேபோல் பள்ளி, கல்லூரி வாழ்க்கையில் வெளிநாடு செல்ல வேண்டுமென்ற வேட்கை அதிகரித்து வந்தது. எனது 14ஆம் ஆண்டு அகவையிலிருந்து 59 ஆண்டுகளில் இந்த ஆர்வம் நடைபெற்று நிறைவு பெற்றுள்ளது என்றால் எனக்கே ஆச்சரியமாகத்தான் இருக்கிறது.

முதல் வெளிநாட்டுப் பயணம், எனது 35ஆம் வயதில், மத்திய அரசின் பரிந்துரையின் பெயரில் லண்டனில் பல் மருத்துவத்துறையின் சிறப்புப் பயிற்சிக்காக அனுப்பப்பட்டேன். அன்று முதல் இன்றுவரை உலகிலுள்ள எல்லா நாடுகளுக்கும் சென்று வரும் பாக்கியம் எனக்குக் கிடைத்துள்ளது.

பயணம் ஒரு சிறந்த படிப்பு முறையாகும். பொது அறிவு, நாட்டின் சரித்திரம் மற்றும் உலக இருப்பு முறைகளை அறிய பயணம் ஒரு சாதகம் ஆகும்.

எல்லா நாடுகளிலுமே ஆதிகால கலாசாரம் சிறந்தோங்கி உள்ளது. மாடமாளிகைகளும், கூடகோபுரங்களும் மற்றும் அந்தப் பெரிய கட்டடங்களில் வரையப்பட்ட சித்திரங்களும் சிறப்பு வாய்ந்தவையாக உள்ளன. அரண்மனைகளின் கூரைகளில்கூட அழகிய சித்திரங்கள் வரையப்பட்டுள்ளதைக் காண்கிறோம். இந்தக் கூரைகளில் வரையப்படுகின்ற சித்திர முறை நமது நாட்டிலும் உள்ளது.



✦ ஜெர்மனியில் பெர்லின் மாநகரத்தில் முருகர் வள்ளி தெய்வானை சந்நிதி

எல்லா சித்திரங்களிலும் மிகையாகத் தென்படுவது பெண்களின் அழகிய தோற்றம் ஆகும். எல்லா நாட்டு மக்களும், தங்களது ரசனையைப் பெண்களின் வடிவப் படைப்பில்தான் மிகையாகக் காட்டுகிறார்கள்.

பண்டைக் காலத்தில், எல்லா நாட்டிலும் அரசன் முறையில்தான் ஆட்சி அமைக்கப்பட்டிருந்தது. இந்த ஏகாதிபத்திய அரசன் ஆட்சி முறையில் பல சிறந்த அம்சங்கள் உண்டு. குடிமக்களின் பணிவுதன்மையிருப்பதால், சாதனைமிக்கப் பெரு முயற்சிகள் சாதகமாகியுள்ளன. பெரிய பெரிய அரண்மனைகள் சித்திரக் கூடங்கள், கடவுள் வழிபாட்டு ஆலயங்கள் மற்றும் ஏனைய பெரும் கட்டட அமைப்புகள் விநோத வடிவுடனும் கலைகள் நிறைந்த கூடங்களாகவும் திகழ்கின்றன.

இன்றைய நாளில், அப்படிப்பட்ட கட்டடங்களைக் காண்பது அரிது. பெட்டி கணக்காகக் கட்டடங்கள் எழுப்பப்படுகின்றனவேயன்றி, விசித்திரமாகப் பார்வைக்குக் கலைகள் இல்லை.

எல்லா மேலை மற்றும் கீழை நாடுகளிலும் இந்தியர்கள் குடியேறியுள்ளார்கள். எத்தனை ஆண்டுகளுக்கு முன்னர் குடியேறியுள்ளார்கள் என்று கணக்கிட முடியாது. அவர்களுடைய மூதாதையர்கள் குடியேறிய காலம் பல தலைமுறைகளுக்கு முன்னர் என்றுதான் கூறமுடியும். இவ்வழியில் இன்றைக்கு அங்கு வாழும், இந்தியர் அந்தந்த நாட்டுக் கலாசாரத்தைத் தழுவியது மட்டுமில்லாமல், தங்கள் மூதாதையரின் தாய்மொழியினையும் அறியார். அதாவது அவர்களுடைய வாழ்க்கை மற்றும் தினசரி அடிப்படை விதிமுறைகள் எல்லாமே முழுவதுமாக, அந்தந்த நாட்டின் வகையாகவே மாறிவிட்டது. ஆனாலும், நமது நாட்டினரைக் காணும்போது, அவர்களுக்கு ஏற்படும் உள்ள உணர்வு மிகவும் பாசத்துடன்



✦ ஆஸ்ட்ரேலியா, சிட்னி மாநகரில் வழிபடுகின்ற அருள்மிகு முருகர் சிலை

அறியலாம். பொங்கிவரும் அன்பு, உறவாடும் தன்மை, உந்தப்படும் உணர்ச்சி இவைகளெல்லாம் அவர்களுக்குள் ஏற்படும் இன அபிமான உணர்வைத் தெளிவுபடுத்துகிறது. அவர்கள் அறிமுகமில்லாமலேயே, நமது அருகில் வந்து அன்புடன் பேசிப்பழக விழைவது, ஓர் அறிய முடியா ஆனந்தமாகும். இதனை நான், சென்ற நாடுகளிலெல்லாம் உணர்ந்தேன்.

எல்லா நாடுகளிலும் குடியேறிய இந்தியர்கள் தங்களுடைய தனிச் சிறப்புத் தன்மையை வெளிப்படுத்தத் தவறியதில்லை. இந்தியர்கள் திறமை படைத்தவர்கள் என்று கூறாதவர் யாருமில்லை. அந்த அளவில், பல உயர்ந்த பதவியிலும், மதிப்புக்குரிய சமூக நிலையிலும் இந்தியர்களைக் காணலாம். பல நாடுகளில், குறிப்பிடத்தக்க வகையில், மிகவும் அபிமான பதவியில் இருப்பது மட்டுமின்றி, அந்தந்த நாட்டின் உயர்ந்த விருதுகளையும் பெற்று இருப்பது நமக்கெல்லாம் பெருமை தரும் காரியம் ஆகும். மேலும் நாடு திறம்பட இயங்க, சிறப்பு ஆலோசகராகவும் நமது இந்தியர்கள் உள்ளார்கள்.

கடல் கடந்த நமது இந்தியர்கள் சமய உணர்வில் குறை வைக்கவில்லை. அவர்கள் சென்ற இடத்தில் சமய உணர்வைப் பற்றாகப் பற்றி, அதற்கான ஆவன பணிகளைச் செய்துள்ளார்கள். அடிக்கடி ஒன்றுகூடி, கூட்டுப் பிரார்த்தனைகளைச் சளைக்காமல் செய்து வருகின்றார்கள். மேலும் உண்டியல் மூலம், நிதி திரட்டி, அதனைப் பெருக்கி, அதன் மூலம் நிலம் வாங்கி, இந்தியக் கோயில் அமைப்புகளை ஏற்படுத்தியுள்ளார்கள். நமது நாட்டு கடவுள்களாகிய சிவன், முருகன், விநாயகர், வெங்கடாசலபதி மற்றும் மீனாட்சி கோயில்களை அங்கே காணலாம். கோயில்களில் கர்ப்பக்கிருகம் எனப்படும் இடத்தில் அழகிய தெய்வக்கலை பொருந்திய சிலைகளைப் பொருத்தி வழிபாடு செய்வதைப் பார்த்தால் பக்திப் பரவசமும், ஆனந்தமும் அடைகிறோம்.

நமது நாட்டு வழிபாட்டு முறைகள் தத்ரூபமாகக் கடைபிடிக்கப்படுகின்றன. சமய விழாக்கள் செவ்வனே கடைப்பிடிக்கப்படுகின்றன. எல்லா மக்களும் அதுபோல ஒன்றுகூடி மகிழும்போது ஏற்படும் இன்பநிலையை நாம் பார்த்து அனுபவிக்க வேண்டும். எல்லோரும் நல்ல விளைவு பெற வேண்டுமென்ற உணர்வு அவர்களிடம் உள்ளது. பக்தியின் பரவசம் என்றால் அங்குதான் மிகுதியாகவும், மிளிரவும் காணமுடிகிறது.

மற்ற நாட்டினருடைய வாழ்வு முறையை ஆராய்வோம். கேளிக்கையை விரும்பும் அவர்கள் ஆடம்பரம் கொள்ளுவதில்லை. அன்றாடத் தேவைகளான உணவு, உடுப்பு மற்றும் தினசரித் தேவைகளை அபரிமிதமாகப் பெறுகிறார்கள். ஆகையினால் அவர்களுடைய அன்றாட வாழ்க்கை சிறப்பாகச் செல்லுகிறது.

எல்லா நாட்டிலும், இலக்கிய வளர்ச்சி என்பதில் ஆர்வம் காட்டப்பட்டாலும், அறிவியல் துறையில் காட்டப்படும் ஆர்வம் அதிகம். எல்லா நாட்டின் அடிப்படை பொருளாதார வளர்ச்சியும் அந்தந்த நாட்டின் தொழில் வளர்ச்சியின் பரிணாமத்தைக் கொண்டதாகும். ஆகையினால் அரசு, தொழிற்வளர்ச்சிக்கு அளிக்கும் ஆதரவு மற்றும் ஊக்கம் மிகையாக உள்ளது.

தொழில் வளர்ச்சியில், அந்த நாட்டுப் பொருள்களின் தரம் ஒன்றாக, சீராக உள்ளது. நமது நாட்டின் இருதரப்பட்ட தரம் அங்கு இல்லை. அதாவது உள்நாட்டு விநியோகத் தரம்; ஏற்றுமதிக்கு என்ற தரம் (Export Quality) என்ற முறை வேறு எந்த நாட்டிலும் இல்லை.

ஆகையினால்தான் முன்னேற்றமடைந்த நாட்டில் பொருளாதார உயர்வினைக் காண்கிறோம். அந்தச் சூழ்நிலையை நமது நாட்டிலும் கடைப்பிடித்து நாணயமாக இருப்போமேயானால், இந்தியாவும் தொழில் வளர்ச்சியில் அதிவிரைவாக முன்னேற்றம் அடையலாம். நில வளம், கடல் வளம் மற்றும் எல்லா வளமும் இந்திய நிலம் என்னும் நல்லாள் பெற்று இருக்கிறாள். ஆனால் விடாமுயற்சியும், ஆக்கத் தன்மையும், தன்னம்பிக்கையும், வேகமும் கொண்ட மக்கள் தேவை.

சுபிட்சம் என்பது முன்னேற்றமடைந்த நாடுகளிலே காணப்பட்டாலும், மிருகம் போன்ற விரோத மனப்பான்மையினால் மனித வர்க்கத்தினுள்ளே விரோதங்களை நாம் இன்று பத்திரிகை வாயிலாகக் காண்கிறோம். விரோத மனப்பான்மையினால், நாட்டின் வளர்ச்சி தடைப்படுகிறது. நல வாழ்க்கையின்றி மக்கள் நோய் நொடியினால் அவதியுறுகிறார்கள். ஆதிவாசிகள் போன்று அடிப்படை சவுகரியங்கள்கூட இல்லாத குடிசைகள், தட்பவெப்ப சூழ்நிலை மாறுபாட்டுக்குப் பாதுகாப்பின்றித் தவிப்பதைக் காண்கிறோம். போர்க்கோலம் கொண்ட மக்கள் மனிதக் கொலை செய்வதில் தயங்கவில்லை. இதனை நாம் நமது தொலைக்காட்சியில் காண்கிறோம். இப்படிப்பட்ட சூழ்நிலையைச் சில நாடுகளில் காண்கிறோம்.

✦ ஃபோட்டோ : ஜே.ஜி. கண்ணப்பர்

நமது நாட்டின் அரசுக் கொள்கை மிக மகத்தானது. சுதந்திரம், சுபிட்சம், சமாதானம் கடைப்பிடிக்கின்ற தத்துவங்கள் என்றும் போற்றப்படுபவை. அதனால்தான் சுதந்திரப் போராட்ட நாள்களிலும், இது போன்று மக்கள் அழிவை நாம் அதிகம் உணரவில்லை. படிப்படியான, நல்ல வாழ்க்கையினை நாம் பெற்று வருகிறோம். பொருளாதார வளர்ச்சியில் இந்தியாவின் பங்கும் பெருமைப் படக்கூடிய அளவில் வளர்ந்துள்ளது. இதனை உறுதிப்படுத்த நான் கண்ட ஒரு நிகழ்ச்சி :

நமது ரூபாய் நாணயம், வெளிநாட்டில் செல்லுபடியாகாத காலம் முன் இருந்தது.

வெளிநாடு செல்லும் நமது மக்கள் வெளிநாட்டுச் செலாவணியினைப் பெற்றுச் செல்ல வேண்டும். அதுவும் அடிக்கடி வெளிநாட்டுப் பயணம் செல்ல முடியாது. அமெரிக்க டாலர் குறிப்பிட்ட அளவுதான் கொடுக்கப்படும்.

இன்று அப்படியில்லை. தேவையான அளவில் வெளிநாட்டுச் செலாவணியை நாம் நமது வங்கிகளில் பெற்றுச் செல்லலாம். அது மட்டுமில்லாமல், வெளிநாட்டிலே, நமது நாட்டு ரூபாய்க்கும், அந்தந்த நாட்டு நாணயங்கள் மாற்று கிடைக்கின்றன இதனை நாம் முன் அறியாதவர்கள் ஆவோம்.

மேலைநாட்டில் தனிப்பட்ட மக்களின் திடமான உணர்வு மிகவும் அறியப்பட வேண்டும். முன்னேற்றமடைந்த நாடுகளில் அதிகார ஆட்சித் தலைவர்கள், தீவிர தைரியம் கொண்டிருந்தாலும், அவர்கள் உலக பலசாலிகளாக இருந்தாலும் அங்கு வாழ்பவர்கள் ஏனையோர் போலும் சாதாரணமானவர்களே. அவர்கள் அநீதிக்குப் பயப்படுபவர்கள், பாபம் செய்யத் துணியாதவர்கள். உலக சுபிட்சம் மற்றும் சமாதானம் வேண்டுபவர்கள். அவர்களின் மனப்பான்மை மனித நேயத்தைக் கொண்டதாக இருக்கிறது. அடிப்படை மனித உணர்வு என்பது எல்லா மக்களும் இன்புற்றிருக்க நினைப்பதுதான். அதனை ஏற்கனவே நமது சமுதாயக் கொள்கையாகக் கொண்டவர்கள் ஆவோம்.

இந்தியர்களாகப் பிறந்திடவே எத்தனை மாதவம் செய்திட்டோம் நாம்.

ஃ



லிவர்மோர் சிவ-விஷ்ணு ஆலயத்தில்...



யுனிவர்ஸல் ஸ்டுடியோவில்...

# யூனிவர்ஸல் ஸ்டுடியோவில்...

இளவயதில் இரு தடவை அமெரிக்காவில் மேல்படிப்புப் படிப்பதற்கான வாய்ப்பு என்னைத் தேடி வந்தது; ஆனால் நான் தவறவிட்டேன்.

வேலையிலிருந்து ஓய்வு பெற்று ஏழு ஆண்டுகளுக்குப் பின் மீண்டும் வாய்ப்பு என் கதவைத் தட்டும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. இந்தத் தடவை சொல்லும்படியான பொறுப்பு எதுவும் இல்லாததால், கனகுஷியாகக் கிளம்பிவிட்டேன். பிப்ரவரி முதல் தேதி, சிங்கப்பூர் டோக்கியோ வழியாக ஸான்பிரான்ஸிஸ்கோவிற்குப் பறந்தேன்.

பாலோ ஆல்டோவில் (PALO ALTO) ஹாலிடே இன் என்ற ஒட்டலில் மூன்று நாள் தங்க நேர்ந்தது. உலகப் பிரசித்திப் பெற்ற ஸ்டான்ஃபோர்டு பல்கலைக்கழகம் இருக்கும் ஊர். மிகவும் அமைதியானது. முழுச் சைவச் சாப்பாட்டைத் தேடி மெக்ஸிகன் ரெஸ்டாரெண்டென்ன, அராபி ஒட்டலென்ன, சைனீஸ் உணவு விடுதியென்ன என்று அலையாய் அலைந்தேன். சைனீஸ் டிம்ஸம்மையும் (நம்ம ஊர் கொழுக்கட்டை), அராபி பலாபல்லையும் (சப்பாத்திக்குள் வடை), மெக்ஸிகன் பீன் புர்ரிட்டோவையும் (பீன்ஸ் திணிக்கப்பட்ட பரோட்டா) சாப்பிட வேண்டுமென்று தலையில் எழுதியிருந்தது போலும்! இரண்டாம் நாள் கண்டேன் மசால் தோசையை! நான் இருந்த ஒட்டலுக்குப் பக்கத்திலேயே ஒரு தெலுங்குப் பெண் தயாரித்துக் கொண்டிருந்தாள். சென்னையில் ஒரு நாளும் சீந்தாத மசால் தோசையைப் பாலோ ஆல்டோவில் சாப்பிட்டபோது என் கரிய முகத்தில் எப்படிப் பால் வழிந்தது என்பதைப் புகைப்படத்தில் காணலாம்!

உலகத்திலேயே மிகப் பெரிய சினிமா, டெலிவிஷன் ஸ்டுடியோ ஹாலிவுட்டில் இருக்கிறது. யுனிவர்ஸல் ஸ்டுடியோ. 420 ஏக்கர் பரப்பளவில் அமைந்த மாயா உலகம்.

அந்தக் காலத்தில் சக்கைப்போடு போட்ட படங்களுக்காகத் தயாரிக்கப்பட்ட செட்டிங்குகள் எல்லாம் அப்படி அப்படியே பாதுகாக்கப்பட்டிருக்கின்றன. உதாரணத்திற்கு, ஆஸ்கர் விருது வாங்கின 'The Sting' என்ற படத்தில் வரும் தெரு. பஸ்ஸில் பிரயாணம் செய்கையில் நிஜ ஊர் வழியாகப் பிரயாணம் செய்யும் பிரமை தட்டுகிறது. கடைகள், ஸ்கூல்கள், ஆஸ்பத்திரிகள் எல்லாம் பெயர்ப் பலகைகளுடன் காட்சியளிக்கின்றன. டாக்டர்களின் விஸிட்டிங் நேரம் உள்பட!

யூனிவர்ஸல் ஸ்டுடியோவில் 'ஷோ'க்கள் தொடர்ந்து நடந்தவண்ணமிருக்கும். இவற்றைப் பார்த்தால் சினிமாவில் வரும் தந்திரக்காட்சிகளின் மர்மமெல்லாம் வெட்ட வெளிச்சமாகும். திகில் மன்னன் ஆல்பிரெட் ஹிட்ச்காக் எப்படித் தன் படங்களில் மாயாஜாலக் காட்சிகளை அமைத்தார் என்பதைத் தீர்க்கமாக விளக்குகிறது ஒரு படம். ஸ்டண்ட் காட்சிகளின் பின்னணியை விளக்குகிறது இன்னொரு படம். மர்மக் காட்சிகளை நடிகர்கள் நேரில் தோன்றி நடித்தும் காட்டுகிறார்கள்.

ஜி. எஸ். பாலகிருஷ்ணன்



லிவர்மோர் சிவ-விஷ்ணு ஆலயத்தின் அருகில்...

இதைத் தவிர, பார்வையாளர்களை நடிக்க வைத்தே, நம் கண்முன்னே, படங்களில் காட்சிகளைத் தயாரித்துக் காட்டுகிறார்கள். நான் சென்ற தினம் விஞ்ஞான நாவலின் ஒரு காட்சி படமாக்கப்பட்டது. துண்டு துண்டாக எதை எதையோ 'ஷுட்' செய்தது முதலில் ஏமாற்றமளித்தது. டப்பாவைக் கொட்டும் பையன், தடுக்கி விழும் கிழவன், சக்கரத்தைச் சுற்றும் பெண் என்று பலரை வரிசையாகச் 'சுட்டு'த் தள்ளினார்கள். ஒழுங்காக எடிட் செய்து திரையில் காட்டின போது, அது உணர்ச்சி மிக்க காட்சியாக மாறியிருந்தது; மயிர்க்கூச்செரிய வைத்தது.

இன்னொரு 'ஷோ'வில் சினிமாவில் நடிப்பதற்குப் பயிற்சி அளிக்கப்பட்ட மிருகங்கள் (எலி முதல் மனிதக் குரங்கு வரையில்) மனிதன் செய்யும் அத்தனை காரியங்களையும் அனாயாசமாகச் செய்து காட்டுகின்றன. ஒரோரு சமயம், மனிதன் ஆட்டி வைப்பதற்குப் பதிலாக மிருகங்கள் அவனை ஆட்டி வைக்கின்றன!

யுனிவர்ஸல் ஸ்டுடியோவைச் சுற்றி டிராமில் வருகையில், விஞ்ஞானத்தின் உதவியினால் என்னென்ன விந்தைக் காட்சிகளை எப்படி எப்படி அமைக்க முடியும் என்பது விளங்குகிறது. திடீரென்று பூமி அதிர்ச்சி ஏற்பட்டு, நாம் பிரயாணம் செய்யும் டிராம் குலுங்கு குலுங்கென்று குலுங்குகிறது. பக்கத்திலிருக்கும் கட்டடத்தின் உத்திரம் தடாலென்ற சத்தத்துடன் கீழே சாய்கிறது. விளக்குகள் நொறுங்குகின்றன. ஆட்டம் அதிகரிக்க அதிகரிக்க, நிஜமான பூமி அதிர்ச்சி ஏற்பட்டுவிட்டதோ என்று அஞ்சுகிறோம்!

'THE RIVER' என்ற ஹாலிவுட் படத்தில் வருவதுபோல் வெள்ளம் டிராமை நோக்கி ஓடி வருகிறது. நிமிஷத்திற்கு நிமிஷம் வேகம் கூடுகிறது. இப்பொழுது பிரவாகம் மேலே எம்புகிறது. 'ஓ' என்ற இரைச்சல் காதைத் துளைக்கிறது. நீர் நம் சட்டையை நனைக்கிறது. மரங்கள் குடை சாய்கின்றன.

'JAWS' என்ற படத்திற்காகத் தயாரிக்கப்பட்டச் சுறாமீன் டிராமை நெருங்குகையில் பீதி நம்மை ஆட்கொள்கிறது. துடை நடுங்கிகள் அலறுகிறார்கள்... அதைவிடப் பயங்கரம் கிங்-காங்கின் தோற்றம். 1300 பவுண்ட எடையும், 30 அடி உயரமும் உடைய கிங்-காங் டிராமிற்குள் எட்டிப் பார்த்து கர்ஜிக்கையில் சப்த நாடியும் ஒடுங்குகிறது.

யுனிவர்ஸல் ஸ்டுடியோவைச் சுற்றி வருகையில், எம்போரியம் கடைக்கருகிலும், பார்க்கிலும், ஹாலிவுட்டின் பழைய பிரபலங்களான சார்லி சாப்ளின், மார்லின் மன்ரோ, கிளார்க் கேபிள், லாரல் ஹார்டி முதலியவர்கள் நம்மை ஆர்வத்துடன் வரவேற்றுக் கை குலுக்குகிறார்கள். வேஷப்பொருத்தம் பிரமாதம்! லாரலும், ஹார்டியும், 'இந்தியாவில் இருந்தா? நமஸ்தே' என்று கூறி என்னுடன் படமெடுத்துக் கொள்கிறார்கள்.

ஹாலிவுட்டில் காதில் விழுந்த ஒரு கொசுறுச் செய்தி. 'CHARLTON HESTON' என்ற நடிகருக்கு 'பத்துக் கட்டளைகள்' என்ற படத்தில் மோஸஸ் என்ற முக்கிய கதாபாத்திரமாக நடிக்க எப்படி வாய்ப்புக் கிடைத்தது தெரியுமா? கால் பந்தாட்டத்தில் அவர் மூக்கின் நுனி உடைந்திருந்ததனால்!

FISHERMAN'S WHARF' என்ற இடத்தில், ஒரு டாலர் தந்தால் உங்களை க்ஷணப் பொழுதில் 'தத்ரூபமாக' வரைந்து காட்டத் தயாராயிருக்கிறார்கள் சித்திரக்காரர்கள். கிரெக் என்ற சைத்ரீகர் என்னை இரண்டே நிமிஷத்தில் வரைந்தார்; அவசரத்தில் என் வயதில் பத்தைக் குறைத்து விட்டார்!

லிவர்மோர் சிவ-விஷ்ணு ஆலயத்திற்குப் போனபோது நம்ம ஊருக்குத் திரும்பிய பிரமை தட்டியது. மந்திரோச்சாடனம் பிரமாதம்! பிரசாதமாக திராக்ஷைப் பொட்டலமும், ராட்சஸப்பழமும் தந்தார்கள். அது மட்டுமா? நெய் சொட்டும் சர்க்கரைப் பொங்கல், புளியோதரை... அவ்வளவு தூரத்தில் அவற்றின் சுவையே தனிதான்!




FISHERMAN'S WHARF

# வானுலகிலிருந்து கங்கை பூவுலகுக்கு வந்தாள்

"நதிகளில் நான் கங்கையாக இருக்கிறேன்" என்று கீதையில் கண்ணன் மொழிகிறான். 'காலனுக்கு அஞ்ச வேண்டாம்; ஒரு துளி கங்கை நீரைப் பருகுங்கள்" என்கிறார் ஆதி சங்கரர். "இன்னறு நீர்க்கங்கை ஆறு எங்கள் ஆறே; இங்கிதன் மாண் பினுக்கு எதிரெது வேறே" என்பது மகாகவி பாரதி வாசகம்.

லோகங்களுக்கு மேலான லோகம் பிரம்மலோகம். எல்லாப் புண்ணிய தீர்த்தங்களுக்கும் மேலானது கங்கை. தேவர்களுக்கு ஹவ்யமும், நாகர்களுக்கு அமிர்தமும் பித்ருக்களுக்குக் கவ்வியமும் எப்படியோ அதைப் போன்று மானுடர்களுக்குக் கங்கா தீர்த்தமாகும். கங்கையில் ஸ்நானம் செய்பவன் பல்லாண்டுகள் தவம் செய்த பலனைப் பெறுகிறானாம்.

வானுலகை விட்டு மண்ணுலகு வந்த கங்கையின் கதை ஒரு விந்தைக் கதையாகும்; காவியச் சீருடைய வரலாறாகும். தவச்செல்வனின் விடா முயற்சிக்குப் பரிசாக வந்தவளே கங்கை.

விசுவாமித்திரர், ஸ்ரீராமனுக்குக் கங்கை தோன்றிய கதையை வால்மீகி இராமாயணத்தில் ஏழு சருக்கங்களில் விவரிக்கிறார். இராமனுடைய முன்னோர்களில் ஒருவன் சகரன். சகரனுக்குப் பிள்ளைப் பேறு இல்லை. சுமதி, கேசினி ஆகிய தம் இரு மனைவியருடன் பிருகு முனிவரிடம் செல்கிறான். பிருகு முனிவர் அரசனிடம், 'உன் வம்சம் விளங்க ஏக புதல்வனை ஒரு மனைவியும் அறுபதாயிரம் பிள்ளைகளை மற்றொரு மனைவியும் பெறுவார்கள்" என்று கூறுகிறார்.

பாரதி காவலர்
டாக்டர் கே. ராமமூர்த்தி



போட்டோ: பகீரதன் தவம் சிற்பம் - மல்லை

சுமதி அறுபதினாயிரம் பிள்ளைகளையும், கேசினி ஒரு பிள்ளையைப் பெறவும், இசைந்தார்கள். முனிவரின் ஆசிபெற்ற சகரனின் மனைவிகள் உரிய காலத்தில் புத்திரர்களைப் பெற்றனர். கேசினியின் ஒரே மகன் அசமஞ்சன். அவனுடைய மகன் அம்சுமான். சீருடன் பண்பாளனாக வளர்ந்து வந்தபோது சகரன் அசுவமேத யாகம் செய்ய எண்ணினான். யாகக் குதிரையை அம்சுமான் பாதுகாத்து நின்றும் தேவேந்திரன்

# மலைபோல் நிமிர்ந்திடுவாய்!

'கவிமாமணி' அ. மறைமலையான்

மலைமேல் ஏறி நடக்கின்றேன் – அந்த
மகிழ்ச்சியில் பாடல் தொடுக்கின்றேன்
வலையில் அடங்குமோ மலையழகு? – உளி
வடிக்கச் சிரிக்குமே சிலையழகு!

பாதைகள் பாம்பாய் நெளிந்திருக்கும் – ஓங்கும்
பசுமரச் சோலை நிறைந்திருக்கும்;
சோதனைப் புயல்பல சூழ்ந்தாலும் – மலை
துவளா ஞானியாய் வாழ்ந்திருக்கும்!

பனியும் முகிலும் உடல்தழுவும் மனம்
படிந்த அழுக்கை மலை கழுவும்;
மனிதனே! அச்சம் உமிழ்ந்திடுவாய்! – நீதி
மனத்தால் மலைபோல் நிமிர்ந்திடுவாய்!



ஒருநாள் குதிரையைப் பிடித்துச் சென்று விட்டான்.

சகரன் குதிரையைத் தேடும் பணியிலே தம்முடைய அறுபதினாயிரம் பிள்ளைகளையும் நாடு நகரமெங்கும் அனுப்பினான். பூலோகத்தில் கண்டு பிடிக்க முடியாமல் போகவே, பாதாள லோகம் புகுந்தார்கள். அங்கே கபில முனிவரின் அருகில், தங்களுடைய யாகக் குதிரை நிற்பதைக் கண்டதும் கபில முனிவருடன் போர் தொடுக்க முனைந்தனர்.

தவம் கலைந்து, முனிவர் கண் விழித்தார். அந்த விழிகளின் சீற்ற நெருப்பில் அறுபதினாயிரம் சகர புத்திரர்களும் சாம்பலானார்கள். ஆண்டுகள் பல உருண்டோடின. குதிரையைத் தேடிச் சென்ற சகர புத்திரர்கள் சாம்பலானதை அறிந்து, அந்த அறுபதினாயிரம் பேருக்கும் தர்ப்பணம் செய்து முடித்தான் அம்சுமான்.

நாடு திரும்பும்போது அவனெதிரே கருட பகவான் தோன்றினார். "அரசனே, நீ தர்ப்பணம் செய்தது சாதாரண நீரினால்தானே! கங்கை நீரைக் கொண்டு தர்ப்பணம் செய்தால்தான் உன் முன்னோர்கள் கரையேறுவார்கள் என்று கூறியருளினார்.

அம்சுமான், கருடபகவான் சொன்னதையே யோசித்தான். தந்தை சகர மன்னனிடம் கூறினான். "வானுலகத்தில் உள்ள கங்கையை பூவுலகுக்குக் கொண்டு வருவதெப்படி" என்ற சிந்தனையில் மூழ்கிய அம்சுமான் தன் மகன் திலீபனிடம் நாட்டை ஒப்படைத்துவிட்டுக் கானகம் புகுந்தான். திலீபனும் கங்கையைக் கொணரும் வழிகாணாது தவித்தான். பின்னர், தன் மகன் பகீரதனுக்குப் பட்டம் சூட்டிவிட்டுச் சொர்க்கம் புகுந்தான்.

பகீரதன் மன்னனான மறுகணமே, கங்கையைக் கொண்டுவருவது ஒன்றே தம்முடைய வாழ்வின் முக்கிய குறிக்கோள் என்று தீர்மானித்தான். நாட்டை மந்திரிகளிடம் ஒப்படைத்தான். பகீரதன், கோகர்ண க்ஷேத்திரம் சென்றான். பஞ்சாக்னியின் நடுவில் நின்று கைகளை உயரத் தூக்கினான். காற்றையே ஆகாரமாகக் கொண்டு ஏகாக்ரக சித்தத்துடன் பல்லாயிரம் ஆண்டுகள் தவம் புரிந்தான்.

பகீரதனுடைய கடுமையான தவத்தைக் கண்டுமகிழ்ந்த பிரம்மாதி தேவர்கள், பகீரதன் முன்பாக ப்ரத்யக்ஷமானார்கள். "இஷ்வாகு திலகமே உன்னுடைய தவத்தின் வலிமையை மெச்சினோம். உன் லட்சியம் என்னவென்று சொல்க" என்றனர். பகீரதன், சகரபுத்திரர்கள் கரையேற கங்கை பூமிக்கு வரவேண்டுமென்று பணிந்து கேட்டான்.

"பகீரதா, உன் தவத்திற்கு இரங்கிக் கங்கை வருவாள். ஆனால் அவளோ வேகவாகினி. அவள் வரும் வேகத்தில் பூமியே பிளந்து விடும். கங்கையின் வேகத்தைக் கட்டுப்படுத்த வல்லவர் பரமசிவன் ஒருவரே" என்றனர்.

தேவர்கள் கூறியதைக் கேட்டு, பகீரதன் பரமசிவனைக் குறித்துக் கடுந்தவம் செய்யத் தொடங்கினான். காலின் கட்டைவிரலில் நின்று அன்ன ஆகார நித்திரை ஒழித்துப் பல்லாண்டு காலம் மீண்டும் தவம் புரிந்தான். பகீரதனின் விடாமுயற்சி, பிரயத்தனம் பலித்தது. பரமேச்வரன், பகீரதன் முன்பாகத் தோன்றினார்.

பகீரதனுடைய வேண்டுகோளின் படி, கங்கை வானத்திலிருந்து இறங்கி வருகிறாள். "இந்தப் பரமனை பாதாளத்தில் வீழ்த்துவேன்" என்று கர்வத்துடன் பாய்ந்து வரும் கங்கையை ஈசன் தம் சடைமுடியில் சிறைப்பிடித்துவிட்டார். சிவனாரின் செஞ்சடையில் ஜீவகங்கை.

கங்கை வானிலிருந்து வருவதைப் பகீரதன் கண்ணாரக் கண்டான். ஆனால், அந்த கங்கை மண்ணில் அல்லவா பாய்ந்தோடி வர வேண்டும். "மண்ணில் கங்கை பாய்ந்து வரவில்லையே" என்று பகீரதன் கவலை தோய்ந்த முகத்துடன் பரமனை நோக்கினான். பகீரதன் உள்ளக் கிடக்கையை ஈடேற்றுகிறார் பரமன்.

பரமனின் சடையிலிருந்து கங்கை பிரவாகிக்கிறாள். ஆம், பகீரதனின் வேண்டுதல்படி, சிவபெருமான் கங்கையை ஏழு பிரவாஹங்களாக வெளியில் விடுகிறார். பகீரதனின் மகிழ்ச்சி அளவற்றதாகிறது. பகீரதன் களிகொண்டு, இரதத்திலேறி முன்செல்ல, அவன் பின்னே கங்கை பாய்ந்து ஓடி வருகின்றாள்.

ஜஹ்னு முனிவர் யாகம் செய்து கொண்டிருந்தார். முனிவரின் யாகப் பொருட்களையெல்லாம் கங்கை அடித்துச் சென்றதும், முனிவர் கோபம் கொண்டார். கோபத்தில், முனிவர் நதிநீரையெல்லாம் குடித்து விட்டார்.

இதைக் கண்டதும் பகீரதன் உள்ளம் பதறினான். தன் முயற்சி இவ்வாறு ஆகிவிட்டதே எனக் கலங்கினான். முனிவரிடம் நடந்த கதை முழுவதையும் ஆரம்பத்தி லிருந்து விவரித்தான். முனிவரும் அன்புகொண்டு, தமது காதுவழியே கங்கையை வெளிவரச் செய்தார்.

ஜானவி என்ற பெயருடன் கங்கை பகீரதனுடன் செல்கிறாள். பாதாள லோகத்தில் சாம்பலாகிக் கிடந்த சகரபுத்திரர் அறுபதினாயிரம் பேரையும் புனித நீரால் நனைத்து, உத்தம லோகத்துக்கு அனுப்பி வைத்தான்.

பகீரதனின் தவ வலிமையாலும், "பகீரதப் பிர்யத்தனத்தாலும்" வானுலகிலிருந்து பூவுலகுக்கு வந்தவளே பாகீரதி. பரமேச்வரனின் திருமேனியிலிருந்து வெளிப்பட்டவள் ஆனதாலே பாவன கங்கையாகிறாள். பாபங்களைப் போக்கும் புண்ணிய தீர்த்தமாக, கங்கை போற்றப்படுகிறாள். தீபாவளித் திருநாளில் கங்கா ஸ்நானம் செய்து புண்ணியம் பெறுகிறோம்.

ஸ்ரீ

# கை காட்டும் கைரேகை

பத்மினி பட்டாபிராமன்

இன்னும் ஓரிரு ஆண்டுகளில் நூற்றாண்டு காண இருக்கிறது சென்னை காவல் துறையின் கைரேகைப் பிரிவு!

கைரேகை மூலம் குற்றவாளிகளை அடையாளம் காணும் முறை தமிழ்நாட்டில்தான் 1895 இல் ஹென்றி ரிச்சர்ட் என்பவரால் ஆரம்பிக்கப்பட்டது. இன்று எல்லா விதங்களிலும் இந்தியாவிலேயே முன்னணியில் நிற்பது தமிழகத்தின் கைரேகைப் பிரிவுதான் என்று மிகப் பெருமையுடன் சொல்கிறார் அதன் முதல் பெண் இயக்குநரான திருமதி. பிரகதாம்பாள் அவர்கள்.

ஆண்களுக்கே ரிஸ்க் ஆன இந்தத் துறையில் ஒரு சர்ச்சர் (Searcher) ஆக 1955 இல் சேர்ந்து இன்று, ஆசியாவிலேயே கைரேகைப் பிரிவின் முதல் பெண் இயக்குநர் என்ற பெருமையை அடைந்திருக்கும் திருமதி. பிரகதாம்பாள் தனது சுவையான "கண்டுபிடிப்புகளை"க் கூறுகிறார்... "ஒரு கோடி ரூபாய் பட்ஜெட்டில் தமிழ்த் திரைப்படம் எடுத்துக் கொண்டிருந்தார் ஒருவர். அதற்கு முந்தைய சில தினங்களில் நகரில் வினோதத் திருட்டு. இரவு 12 மணியிலிருந்து நான்கு மணிக்குள்ளாக வீட்டில் மனிதர்கள் இருக்கும்போதே ஜன்னல் கம்பியை வளைத்து உள்ளே வந்து திருடிக்கொண்டு இருந்தான் ஒருவன். சுமார் 34 இடங்களில் பதிவான கைரேகைகளும் ஒத்திருந்தன. அதாவது ஒரே ரேகை ரிபீட் ஆகிக் கொண்டிருந்தது. "Single digit" என்று சொல்லப்படும் மாநில கைரேகைப் பிரிவுகள் இந்தியாவில் 26 உண்டு. எல்லாவற்றிலும் உள்ள குற்றவாளிகளின் ரேகைகளோடு நாங்கள் ரேகைகளை ஒப்பிட்டுக் கொண்டிருந்தோம். இறுதியில் திருவனந்தபுரம் கைரேகைப் பிரிவில் இருந்த ஒரு குற்றவாளியின் ரேகையோடு ஒத்துப் போயிற்று. அதே நேரம் அவன் அடையாறில் ஒரு வீட்டில் திருடிக் கொண்டிருந்தான். கடைசியில் தற்செயலாக ஒப்பிட்டால் கோடி பட்ஜெட் படம் எடுத்துக் கொண்டிருந்தானே, அவன் ரேகைதான் அது! குற்றவாளி அவன்தான்! இந்த அழகில் அவனது படப்பிடிப்புகளுக்குப் போலீஸ் பாதுகாப்பு வேறு கேட்டு வாங்கியிருந்தான்!"



● திருமதி பிரகதாம்பாள்

இன்னொரு கொள்ளைக்கூட்டம்! உருது, தெலுங்கு, தமிழ் என்று சரளமாய் பேசிக்கொண்டு தாங்கள் நுழைகிற ஒவ்வொரு வீட்டிலும் சுமார் 4 மணிநேரம் சாவகாசமாய் தங்கி, வீட்டில் உள்ளவர்களை மிரட்டி ஒரே இடத்தில் அடைத்து விட்டு, எல்லாப் பொருட்களையும் சுருட்டிக் கொண்டு போகும்... ஐந்து நாள்கள் தினமும் நடந்தது இந்தக் கொள்ளை. ஐந்தாவது நாள் அன்று சென்னையில் என். டி. ராமராவ் அவர்களின் மகன் வீட்டில் கை வரிசை... என்.டி. ராமராவ் அவர்களின் மருமகளிடம், வந்தவர்களில் ஒருவன் அபேட் என்ற இடத்தைப் பற்றி ஏதோ ஒரே ஒரு சொல்லை சொல்ல, அந்த இடம் ஹைதராபாத்தில் இருப்பதை அறிந்த காவல் துறை, இவர்களை அணுக, திருமதி. பிரகதாம்பாள் தலைமையிலான குழு அன்றே ஹைதராபாத் சென்று ஒரே நாளில் குற்றவாளிகளைக் கண்டு பிடித்தாயிற்று!

குற்றம் நடந்த இரண்டு மணி நேரத்துக்குள் கைரேகைகளை எடுத்தால்தான் தெளிவாகக் கிடைக்குமாம். ஈரப்பதம் (Moisture) போய் விட்டால் ரேகை தெளிவாக இருக்காது என்று கூறும் திருமதி. பிரகதாம்பாள், உடனே எடுத்த ரேகைகள் இருந்தால் எத்தனை வருடம் கழித்து வேண்டினாலும் திருடனைப் பிடிக்க முடியும் என்று உதாரணத்துக்கு ஒரு சம்பவத்தை விவரிக்கிறார்.

"ரயில்வே லைன் ஓரமாக இருக்கிற வீடுகளில் அமாவாசைக்கு முன்னோ, பின்னோ திருட்டு அடிக்கடி நடந்தது. 42 கேஸ்களில் ஒரே ரேகை ரிபீட் ஆகியது. எங்கெங்கோ தேடினோம்... சரியாக எதுவும் ஒத்து வரவில்லை. கடைசியில் கல்கத்தாவில் பழைய ரெகார்டுகளில் இருந்த ஒரு குற்றவாளியின் கைரேகையோடு ஒத்துப் போயிற்று. பாகிஸ்தான் பிரிந்தபோது அவனும் லாகூருக்குப் போய் விட்டான். கடைசியில் பத்து வருடங்கள் கழித்து அவனைப் பிடித்தார்கள். கைரேகை ஒத்துப் போனதால் அவன் தப்பிக்க முடியவில்லை..."

"இப்போதுதான் திருடர்கள் சாமர்த்தியமாக கிளவுஸ் (கை உறை) அணிந்து திருடுகிறார்களே, அப்படி இருக்க உங்களுக்கு எப்படிக் கை ரேகை கிடைக்கும்?"

"கிடைக்கும்..." புன்னகைத்தார் டைரக்டர் அம்மா.

"எப்பேர்ப்பட்டவனும் எப்படியும் தன்னையும் அறியாமல் எங்காவது ரேகை பதித்து விடுவான். அதைக் கண்டுபிடிப்பது எங்கள் சாமர்த்தியம்... நாங்கள் அதை வேடிக்கையாக "திருடனின் அடையாள அட்டை" (Burglar's Visiting Card) என்று குறிப்பிடுவதுண்டு..."

கையே உபயோகிக்காமல் நடந்த ஒரு திருட்டைக் கண்டு பிடித்ததை நினைவுகூர்கிறார்.

"ஊரிலிருந்து பிள்ளை பணம் அனுப்பிக் கொண்டே இருந்தான்... இங்கே கைநாட்டு அம்மா... திடீரென பணம் வருவது நின்றுவிட்டது. 2 வருடம் ஆகிவிட்டது. தாயும் மகனும் சந்தித்தார்கள். பணம் அனுப்பினேனே என்று பிள்ளை மணியார்டர் ரசீதுகளைக் காட்ட, தாய்க்கோ பணம் வரவில்லை... எங்கே போயிற்று? கடைசியில் பார்த்தால் மணியார்டர் கூப்பனில் கால் பெருவிரலை அடையாளம் வைத்து, ஒருவர் பணத்தைத் தானே எடுத்திருப்பது தெரிந்தது. கால் பெருவிரல் (Foot Print) ரேகையை வைத்துக் குற்றவாளியைக் கண்டு பிடித்தோம். திருடிய பாத்திரங்களை திருடன் கிணற்றில் வீசிவிட்டுப் போக, அவற்றை எடுத்துக் காய வைத்து ரேகைகள் எடுத்த வேடிக்கையான சம்பவங்களும் உண்டு..."

1895 இல் சென்னை ஐ.ஜி. அலுவலகத்தில் இரண்டு இன்ஸ்பெக்டர்களுடன் ஆரம்பிக்கப்பட்ட கைரேகைப் பிரிவு. இன்று ஆண்டுதோறும் சுமார் 1200 குற்றவாளிகளை அடையாளம் காட்டுகிறது. அதன் மூலம் போலீஸுக்கு 8500 கேஸ்கள் பிடிபடுகின்றன. இது ஒரு பெரிய சாதனையாகும். இன்று இவர்களிடம் 5 லட்சம் குற்றவாளிகளின் கைரேகைகள் உள்ளன.

நூற்றாண்டுக்கு முன் "ஆன்த்ரோபாமிஸ்ட்ரி" (Anthropalmistry) முறை தான் இருந்ததாம். அதாவது குற்றவாளியின் முக நீளம், தோள் அளவு, கை விரல்கள் நீளம்... இப்படியாக அளவுகள். ஒத்துப் போகிறதா என்று சரிபார்ப்பது...

ஆனால் இதில் நடைமுறைச் சிக்கல்கள் நிறைய...

"கைரேகைகள் மனிதனுக்கு மனிதன் மாறுபடுகிறது. கடவுள் தந்த இந்த மிகப் பெரிய வரத்தினால் குற்றவாளிகளை மிகத் துல்லியமாகக் கண்டுபிடிக்க முடியும். குற்றம் நடந்த இடத்திலிருந்து எங்களுக்கு ஒரு முழு கைரேகைகூடத் தேவையில்லை. ஒரு பகுதி கிடைத்தால்கூடப் போதுமானது. குறைந்தபட்சம் எட்டு பாயிண்டுகள் ஒத்துப் போகவேண்டும். ஒன்று வேறுபட்டால்கூட ஆள் அவன் இல்லை எனலாம். சிலநேரம் ரேகை வளைவுகள் ஒரே போலிருந்தால்கூட இடம், கோணம் (Position, Angle) மாறுபடும். இதனால் குற்றவாளிகளை அடையாளம் காட்டிவிட முடிகிறது. ரொம்பப் பொறுமையாகச் செயல்பட வேண்டியிருக்கிற துறை இது. அதனால்தானோ என்னவோ கைரேகைப் பிரிவு அலுவலகத்தில் வேலை செய்வோரில் 60 பேர் பெண்கள்..."

*"குற்றம் நடந்த இடத்தில் எங்கெல்லாம் கைரேகை இருக்கும் என்று உங்களுக்கு எப்படிக் கண்டுபிடிக்க முடியும்?"*

"அனுபவப்பட்ட எங்களுக்கு, சாதாரண கண்களுக்கே (Naked eye) கைரேகை இருக்கும் இடங்கள் புலப்படும்... அதன் மேல் கெமிகல் பொடி தூவி போட்டோ எடுத்து பிரிண்ட் செய்வோம்... துணிகளில் கை ரேகை கிடைத்தால் அதை 'டெவலப்' செய்ய ஸில்வர் நைட்ரேட் முறை (Silver Nitrate method) உள்ளது. ஆனால் அதெல்லாம் ரொம்ப நுணுக்கமான, கடினமான முறை. இறந்த உடல் மீது உள்ள ரேகைகளை எடுக்க Lazer Beam முறை நவீன முறையாகும்... "பத்மநாபா" கொலை வழக்கில் பயன்படுத்திய கார் சில நாள்களுக்குப் பிறகே கண்டுபிடிக்கப்பட்டது. அதில் ஸ்டியரிங்கில் இருந்த ஒரு கைரேகை, ராஜீவ் காந்தி கொலை வழக்கில் சம்பந்தப்பட்ட "குண்டு சாந்தன்" கைரேகைகளோடு ஒத்திருந்தது. இறந்த "தானு"வின் ரேகையோடு, அவன் வைத்திருந்த கைப்பையில் இருந்த ரேகைகளும் ஒத்துப் போனதால், இறந்தவனை அடையாளம் காண முடிந்தது. நடிகை கே.ஆர். விஜயாவின் வீட்டில் திருடு போயிற்று. ஜன்னல் மரக்கட்டையைப் பிடித்து திருடன் ஏறிவந்திருந்ததால், அந்த மரக்கட்டையிலிருந்து குற்றவாளியின் கைரேகைகள் கிடைத்தன".



*"குற்றவாளியின் ரேகைகள் மீது வீட்டில் உள்ளோர் ரேகைகள் தெரியாமல் படிந்துவிட்டால்...?"*

"Over lapping இருந்தாலும்கூட, குற்றம் செய்தவனின் ரேகையின் ஒரே ஒரு பகுதி வெளியே தெரிந்தாலும், அதை வைத்துக் கண்டுபிடித்து விடலாம். வீட்டில் உள்ளோரின் ரேகைகளை முதலில் கண்டுபிடித்து, eliminate செய்துவிடுவோம்".

தடய இயலில் நவீன முறைகள் வந்திருந்தாலும்கூட – உதாரணத்துக்கு ஒரு மண்டையோடு கிடைத்து – அதை super impose செய்வது போன்ற முறைகளில் – ஆள் இறந்த பிறகுதான் அதை வைத்துக் கண்டு பிடிக்க வேண்டியுள்ளது.

கைரேகையைப் பொறுத்தவரை – சந்தேகத்துக்கு இடமேயின்றி, திருட்டு போன்றவை நடந்த உடனே குற்றவாளியைப் பிடித்துப் பொருட்களை மீட்க முடிகிறது. செங்கல்பட்டு மாவட்டத்தில் 16 முகமூடிக் கொள்ளைகள் தொடர்ந்து நடந்தபோது, 12 கேஸ்களில் ஒரே மாதிரியான ரேகைகள் கிடைக்கவே, வட இந்தியாவைச் சேர்ந்த கொள்ளைக் கூட்டத்தை டில்லி கைரேகைப் பிரிவின் உதவியுடன் பிடிக்க முடிந்ததாம்.

திருமதி. பிரகதாம்பாள் சந்தித்த குற்றங்களில் பயங்கரமானது ஒன்பது கொலை செய்த 'ஜெயப்பிரகாஷ் கேஸ்' என்கிறார். பல மணி நேரம் அங்கே தங்கியிருந்து குற்றவாளியின் கை ரேகைகளைச் சேகரித்தாராம்.

ஒன்பது உடல்கள் ஒன்றின் மீது ஒன்றாய் கோரமாய் அடுக்கியிருக்க, ஒரு சிறு குழந்தையின் தலையையே பின்பக்கமாய் திருகியிருந்தானாம் அவன்.

"பல நாள்கள் என்னால் சாப்பிடவோ, தூங்கவோ முடியவில்லை... தாங்க முடியாத நாற்றம்" என்கிறார்... ''

கொலைக் கேஸ்களில் ரத்தத்தில் கைரேகைத் தடயம் பதிந்திருந்தால் போட்டோ, பிரிண்ட் இல்லாமல் அப்படியே உபயோகிக்கலாமாம்.

கொலையோ, கொள்ளையோ நடந்தவுடன் முதலில் ஆஜராக வேண்டியவர்கள் இவர்கள்தாம்... குற்றம் நடந்த விதத்தைப் (Modes operandi) பார்த்ததுமே எத்தகைய குற்றவாளிகள் செய்திருப்பார்கள் என்று ஊகித்து விடுகிறார்கள். நெகிழ வைத்த கேஸ்கள்.

"மகள் திருமணத்துக்காகப் பாடு பட்டுச் சேர்த்து வைத்த பணத்தையும் 7 பவுன் நகையையும் பறிகொடுத்து விட்டுக் கதறினார் ஒரு ஏழைத் தகப்பன். கைரேகை உதவியுடன் அன்று மாலையே குற்றவாளியைக் கண்டுபிடித்து நகையையும் பணத்தையும் மீட்டு அவரிடம் கொடுத்த போது அவரது ஆனந்தக் கண்ணீர்... எங்களுக்கு விலை மதிப்பில்லாப் பரிசு அது.

அமெரிக்கப் பல்கலைகழகப் பேராசிரியராக பணிபுரிந்த ஒரு தமிழர், அங்கே தவறி ஏரியில் விழுந்து இறந்துவிட்டார். இறந்தவரின் கைரேகையை எடுத்து அமெரிக்க போலீஸ் இந்தியராக இருக்கலாம் என்ற ஊகத்தில் இந்தியாவுக்கு அனுப்ப, அவர்கள் முயற்சியால் இறந்தவர் இன்னாரென்று அடையாளம் கண்டுபிடிக்கப்பட்டு, அவரது குடும்பத்தாருக்குச் சொல்லப்பட்டது.



குற்றம் நடந்த இடத்திலிருந்து எங்களுக்கு ஒரு முழு கைரேகை கூடத் தேவையில்லை. ஒரு பகுதி கிடைத்தால் கூடப் போதுமானது.

ஒருமுறை ஒரு கைரேகை அதிகாரியால் அடையாளம் சொல்லப் பட்டுத் தண்டனை பெற்ற கைதி ஒருவன், பரோலில் வெளியே வநத சமயம், அவரைப் பழிவாங்கக் கத்தியும் கையுமாக அவரது வீட்டுக்குப் போயிருக்கிறான். ஆனால் அவரது வீட்டில் வயதான தாய் தந்தையார், நோயாளி மனைவி, நிறையக் குழந்தைகள், ஏழ்மையான பரிதாபமான சூழ்நிலையைப் பார்த்துவிட்டு மனமிரங்கித் திரும்பி வந்துவிட்டானாம்! நிறையப் பயமுறுத்தல்கள் (Threatening) உள்ள துறைதான் இது என்கிறார். "நிறையப் பணம் தருகிறோம்... காட்டிக் கொடுக்காதீர்கள்" என்பது போன்ற கெஞ்சல்களும் உண்டாம். இன்று குற்றங்கள் அதிகரித்து வருகின்றன என்று கவலைப் படும் திருமதி. பிரகதாம்பாள், இளைஞர்களும் நிறைய கல்லூரி மாணவர்களும் திருட்டுகளில் ஈடுபடுவது அதிகரிக்கிறது என்கிறார். "தினமும் எங்களிடம் Suspect என்ற பெயரில் பலரது கைரேகைகள் நிறைய வந்த வண்ணம் உள்ளன".

இவரது வெற்றிக்குப் பின்னே கடும் உழைப்பும், உறுதியும், விடா முயற்சியும் இருக்கின்றன. குடும்பத்தினரின் ஒத்துழைப்பு மிக முக்கிய காரணம் என்கிறார். இவரது கணவர் திரு. கணேசன், ரெஜிஸ்ட்ரார் அலுவலகத்தில் பணிபுரிகிறார். மகன் ஒரு கம்ப்யூட்டர் என்ஜினீயர். மகள் என்ஜினீயரிங் கல்லூரியில் படிக்கிறார்.



ரேகையின் ஒரே ஒரு பகுதி வெளியே தெரிந்தாலும் அதை வைத்துக் கண்டு பிடித்து விடலாம்.

*"காவல் துறையில் குற்றவாளிகளைக் கண்டுபிடிப்பதில் மிக முக்கிய பங்கு வகிக்கும் கைரேகைப் பிரிவினர் சமீபகாலமாக ஸ்ட்ரைக்கில் ஈடுபட்டுள்ளது ஏன்?"*

"காவல்துறையில் போலீஸ் அதிகாரிகளுக்கான status எங்களுக்கும் அளிக்கப்படவேண்டும் என்று கோருகிறோம்" என்கிறார். நியாயமான கோரிக்கையில் வெற்றியடையட்டும்.

ஃ



# வ.வே.சு. ஐயர் தமிழ்ப்பணிகள்

## பெ.சு. மணி

வரகனேரி வேங்கட சுப்பிரமணிய ஐயர் எனும் வ.வே.சு. ஐயர் மண்ணுலகில் வாழ்ந்த காலம் நாற்பத்து நான்கு ஆண்டுகளே (1881-1925) ஆகும். இந்தக் காலகட்டத்தை ஐந்து வகைகளாகப் பிரிக்கலாம். பிறந்து வளர்ந்து படித்துப் பட்டம் பெற்று திருச்சிராப் பள்ளியில் வாழ்ந்த காலம் இருபத் தைந்து ஆண்டுகள், இலண்டனில் முப்பது மாதங்கள், பாரிசில் ஆறு மாதங்கள், புதுச்சேரியில் பத்தாண்டுகள், சென்னை - சேரமாதேவியில் ஆறு ஆண்டுகள் என 'வீர விளக்கு' வ.வே.சு. ஐயர் வாழ்க்கை வரலாற்றுக் காலகட்டத்தை வகுத்தறியலாம்.

1907 ஆம் ஆண்டு இறுதியில் இலண்டனில் வீர சாவர்க்கர் துணையுடன் மலர்ந்த வ.வே.சு. ஐயர் அரசியல் பணிகள் 1925, ஜூன் 3 வரையில் பல்வேறு நிலைகளில் தியாக வாழ்க்கையின், போராட்ட வாழ்க்கையின் பொன்னேடுகளாக அமைந்தன. தனி நபர் 'பயங்கர வாதம்' என்னும் புரட்சிகர அரசியல் தளத்தில் இருந்து, காந்தியடிகளின் அரசியல் தளம் வரையில் வ.வே.சு. ஐயர் மேற்கொண்ட அரசியல் பயணம் தனி ஆய்விற்குரியது. அவருடைய தமிழ்ப்பணிகள் அறிந்து கொள்ளப் படவேண்டிய அளவிற்கு அறியப்பட வில்லையாதலால், அது மட்டும் இங்கு தனி ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப் படுகிறது.

தமிழ்மொழி, இலக்கியச் சிந்தனைகள், படைப்பிலக்கியம், கம்ப ராமாயண ஆய்வு, ஒப்பியல் ஆய்வு, மொழிபெயர்ப்புத் துறை, பத்திரிகைத் துறை முதலான நோக்குகளில் வ.வே.சு. ஐயர் தமிழ்ப்பணிகள் ஆய்வு செய்வதற்குரியன.

### தமிழ்மொழி, இலக்கியச் சிந்தனைகள்

தமிழகத்தில் தமது சமகால அரசியல் தலைவர்களிடம் வெளிப்படாத தனிப்பெரும் சிறப்பு வ.வே.சு. ஐயருக்கு உரியது. 'சங்க இலக்கியப் புலமை'தான் அந்தத் தனிப்பெரும் சிறப்பு. "குறுந்தொகையிலும், கலித் தொகையிலும் சில செய்யுள் தெரிந்தெடுத்து ஆங்கிலத்தில் மொழி பெயர்த்திருக்கின்றேன்" என்று வ.வே.சு. ஐயர் 1920 இல் தமது நண்பர் ஒருவருக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார். தமிழர் கவனக் குறைவால் இந்த மொழி பெயர்ப்பு தொலைந்து போய்விட்டது.

வ.வே.சு. ஐயரின் சங்க இலக்கியப் பற்றைப் பின்வரும் அவருடைய வாக்கினாலும் அறிகின்றோம். "பதிற்றுப் பத்து, கலித்தொகை, புறநானூறு, குலிஸ்தான், போஸ்தான் முதலிய இன்சுவை நிரம்பிய பாடல்களை எத்தனை முறை படித்தாலும் தெவிட்டாது". 'பாலபாரதி' எனும் தமது அரிய தமிழ் இலக்கிய மாத இதழில் "ராஜகோபாலன் கடிதங்கள்" என்னும் தலைப்பில் எழுதிய கடிதம் ஒன்றில் அகநானூறு, பட்டினப் பாலையில் இருந்து விரிவாக எடுத்துக் காட்டியுள்ளார்.

சங்க இலக்கியப் புலமையுடன், திருக்குறளிலும் புலமை பெற்றவர் வ.வே.சு. ஐயர். கட்டுரைகள் பல வற்றுள் குறட்பாக்களை விளக்கியும், மேற்கோள்களாகவும் பயன்படுத்தியுள்ளார். திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து, அதில் அவர் எழுதிய நீண்ட ஆங்கில முன்னுரை திருக்குறள் ஆய்வு வரலாற்றுக் களஞ்சியங்களில் சேர்க்கத்தக்கதாகும்.

"காவிய உத்தியானம்" என்னும் அவருடைய இலக்கியச் செழுமை கொழிக்கும் கட்டுரையைப் படிப்போர் எவரும் வ.வே.சு. ஐயரின் உலக இலக்கியப் புலமையைக் கண்டு வியப்புறுவர்.

"தமிழில் புதிய நடைகளும், புதிய கவிதைகளும், புதிய துறைகளும் அவைகளுக்கேற்ப புதிய இலக்கணங்களும் வேண்டும்" எனக் குறிப்பிட்டு, தமிழில் "மறுமலர்ச்சி" ஏற்படவேண்டும் என அவாவியவர் வ.வே.சு. ஐயர். 'மறுமலர்ச்சி' என்னும் தலைப்பில் அவர் எழுதிய அற்புதமான ஆய்வுக் கட்டுரையில் சங்க இலக்கியம் முதல் பாரதி இலக்கியம் வரையில் ஓர் ஆரியத் திறனாய்வைச் சுருக்கமாகச் செய்துள்ளார், வ. வே.சு. ஐயர். "மறுமலர்ச்சி" எனும் சொல்லைப் படைத்தவரே வ.வே.சு. ஐயர் என்று பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை முதலானோர் கருதுகின்றனர். மறுமலர்ச்சி இயக்கத்தின் தலைவராக பாரதியாரைச் சுட்டிக் காட்டினார், வ.வே.சு. ஐயர்.

கல்கியின் சிவகாமியின் சபதம், பார்த்திபன் கனவு, பொன்னியின் செல்வன் முதலானவற்றைப் போன்று தமிழ் நாவல்களை எழுதவும் வ.வே.சு. ஐயர் திட்டமிட்டிருந்ததை அவர் வாய்மொழியிலேயே பின்வருமாறு அறிகின்றோம்!

"தமிழ்நாட்டின் மகாயுகங்களை நினைக்குங்காலத்தில் என் மனம் பூரிக்கிறது. என் தோளில் புதிய வன்மை பிறக்கிறது. நான் புதிய மனிதனாகவே போய்விடுகிறேன்". 'தமிழ் நாகரிகத்தின் பழைமை' என்னும் கட்டுரையில் தமிழ் நாகரிகத்தின் தொன்மையையும், மேன்மையையும் தமிழ் நெஞ்சம் குளிர எடுத்தோதியுள்ளார், வ.வே.சு. ஐயர்.

1909 இல் நமது நாட்டின் பழம் பெருமையைப் போற்றிக் கொண்டு வருமிடத்தில், "சோழன், பாண்டியன் புரந்தளித்தத் தாய்த்திருநாடு" என்றும் குறிப்பிட்டுள்ளார், வ.வே.சு. ஐயர்.

வ.வே.சு. ஐயர் தமிழ்மொழிச் சிந்தனையில் தமிழ் வளர்ச்சியைப் பற்றியக் கருத்துகளைக் காண்கின்றோம். தமிழ் மொழி மூலம் கல்வி கற்க வேண்டும் என்பதை பின்வருமாறு வலியுறுத்தியுள்ளார், வ.வே.சு. ஐயர்:

"தமிழ் மொழிக் கல்வியை கைவிட்டுவிட்டு, ஆங்கிலத்தைக் கைப் பற்றுவதாவது? உலகத்தில் சிரிப்பார்கள். எந்த ஜாதியாராவது தங்கள் பாஷையை விட்டுவிட்டு, வேறு பாஷையை சுயமாக்கிக் கொண்டிருப்பதாக நாம் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை. தாய்ப்பாலுடன்கூட கல்லாத

பாஷையில் ஒருவன் உலகம் மெச்சும் படியான காவியங்கள் எழுதுவேனென்கிறது அறியாமை".

தமிழ் உரைநடை நடைபேதங்களால் வளம்பெற வேண்டும் என்னும் கருத்தை வலியுறுத்த வ.வே.சு. ஐயர் 1916 இல் எழுதிய "பிரயோக இலக்கணம்" எனும் கட்டுரை தமிழில் அன்று புதுமையானது. கட்டுரைத் தொடரின் முன்னுரையில் கூறப் பெற்றுள்ள பின்வரும் கருத்து, கவனிக்கத்தக்கது.

"ஒரு பொருண்மொழிகளின் சூட்சுமமான பேதா பேதங்களைக் காட்டும் இலக்கணம் ஒன்று தமிழுக்கு அவசியமாக வேண்டும் என்பதைப் பற்றி நாம் அதிகம் எழுதவேண்டியதில்லை. இந்த நூல் வசனம் எழுதுபவர்களுக்குப் பிரயோசனமாகுமாறு எழுதப்பட்டு வருகிறது. இதில் காட்டப்படும் பேதங்கள் காவியம் எழுதப் புகுவோருக்கு அத்தனை பயன்படாது; ஆனால் வசன நூல்களை எழுதுவோருக்கு மிகவும் பயன் தரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது".

வ.வே.சு. ஐயர் மொழிச் சிந்தனைகளில் 'சந்தி இலக்கணம்' பற்றியச் சிந்தனையும் ஒன்றாகும். கம்பராமாயணம் அயோத்தியா காண்டம் 1843லேயே சந்தியாக்கப் பட்டு அச்சாகியுள்ளது. ஆனாலும் தமிழ்ப் புலவர்கள் சந்தி பிரித்து அச்சிடுவதைக் கடுமையாக எதிர்த்துள்ளனர். தமிழ்த் தென்றல் திரு.வி.க.வும் தமது 'தேசபக்தன்' இதழில் சந்தி பிரித்தலை எதிர்த்துள்ளார். வ.வே.சு. ஐயர் சந்தி பிரித்து வெளியிட்ட, "கம்பராமாயண பாலகாண்டச் சுருக்கம்" பற்றிய விமர்சனத்தில் இந்த எதிர்ப்பு வெளி வந்தது. இதற்குப் பதிலாக வ.வே.சு. ஐயர் எழுதிய "காவியங்களைச் சந்தி பிரித்து அச்சிடுவது முறை தவறா?" எனும் கடிதம் 'தேச பக்தன்' நாளிதழில் (1918 பிப்ரவரி, 2) வெளியிடப்பட்டது. இந்தக் கடிதத்தில் சந்தி பிரித்தல் தமிழ் இலக்கியப் பயிற்சிக்கு பயன் தருவது என வாதிட்டுள்ளார், வ.வே.சு. ஐயர்.

### படைப்பிலக்கியத் துறையில்...

பழந்தமிழ் பெருமை பேசுவதுடன், புதிய தமிழ் வளர்ச்சிக்கும் பாடு பட்டவர் வ.வே.சு. ஐயர். புதிய தமிழ் வளர்ச்சியில் படைப்பிலக்கியம் புதிய திருப்பத்தைத் தந்தது. படைப்பிலக்கியத்தில் சிறுகதை வடிவம், மேல் நாட்டு இலக்கிய வடிவத்தை வரித்துக் கொண்டு தமிழில் தோன்றியது. 1917 இல் வெளிவந்த வ.வே.சு. ஐயரின் "மங்கையர்க்கரசியின் காதல்" முதலிய சிறுகதைகள் தமிழ்ச் சிறுகதைத் துறையில் முன்னோடியாகத் தோன்றின. வ.வே.சு. ஐயர், தமது 'கம்ப நிலையம்' பதிப்பகத்தின் மூலம் வெளியிட்டார். முதல் பதிப்பில் 'மங்கையர்க்கரசியின் காதல்', 'காங்கேயன்', 'கமலவிஜயம்', 'அழேன் முக்கே', 'குளத்தங்கரை அரசமரம்' ஆகிய ஐந்து சிறுகதைகள் அடங்கியுள்ளன. வ.வே.சு. ஐயர் மறைவிற்குப் பிறகு, மேற்படி சிறுகதைளுடன் மேலும் மூன்று சிறுகதைகள் சேர்க்கப்பெற்று இரண்டாம் பதிப்பு வ.வே.சு. ஐயர் மனைவி பாக்யலட்சுமி அம்மையார் சார்பில் 'சங்கு' எஸ். கணேசன் அவர்களால் வெளியிடப் பட்டது. 'பாலபாரதி'யில் வ.வே.சு. ஐயர் எழுதிய 'லைலா மஜனுன்', 'எதிரொலியாள்', 'அனார்கலி' ஆகியன சேர்க்கப் பெற்ற மூன்று சிறுகதைகளாகும். சிறுகதை உத்தி புதிது என்பதை 'நீதி புதிது' என்னும் குறிப்பால் தமது முன்னுரையில் குறிப்பிட்டார், வ.வே.சு. ஐயர்.

வ.வே.சு. ஐயரின் "குளத்தங்கரை அரசமரம்" சென்னை 'விவேக போதினி'யில் 1915 ஆம் ஆண்டு செப்டம்பரிலும், அக்டோபரிலும் அவர் மனைவி பாக்யலட்சுமி அம்மாள் பெயரில் வெளி வந்தது'. கவிஞர் தாகூரின் 'காடேர் கதா' (படித்துறையின் கதை)யின் சிறுகதை உத்தியை வ.வே.சு. ஐயர் 'குளத்தங்கரை அரச மரத்'தில் கையாண்டுள்ளார். சிறு கதைகளில் சோக ரஸத்தை வெளிப்படுத்துவதில் வ.வே.சு. ஐயர் ஆர்வம் காட்டினார். "சிறுகதைக்குத் தமிழில் உருவும், உயிரும் கொடுத்தவர் அவர். இவரை 'சிறுகதையின் பிதா' என்று ஆங்கில மரபை யொட்டிக் குறிப்பிடலாம். குளத்தங்கரை அரசமரத்தை யார் தான் மறக்க முடியும்? அவருடைய லைலா மஜ்னுன், எதிரொலியாள், அழேன் முக்கே முதலிய கதைகளில் அன்னிய நாட்டு கதாபாத்திரங்கள் மிகவும் திறமையாகச் சித்திரிக்கப் பட்டிருக்கின்றன. அய்யரவர்களின் சிறுகதைகள் மிகவும் உயர்ந்த ரகத்தைச் சேர்ந்தவை". இவ்வாறு சிறுகதை மன்னர் புதுமைப்பித்தன் சாற்றியுள்ளார்.

புதுமைப்பித்தன் கூறியது போல் வ.வே.சு. ஐயர் சிறுகதையின் தந்தை எனும் கருத்து விவாதத்திற்குரியதாகியுள்ளது. திருமணம் செல்வக் கேசவராய முதலியாரும், பாரதியாரும் வ.வே.சு. ஐயருக்கு முன்பே சிறுகதைகளைப் படைத்துள்ளனர் என்று கூறப்பட்டு வருகிறது. சிறுகதையின் இலக்கணம் பற்றி அவரவர் நோக்கில் கூறப்பெற்று வரும் கருத்துகள், ஒரு புறமிருக்க, வ.வே.சு. ஐயர் சிறுகதை முன்னோடிகளுள் ஒருவர் என்பது விவாதத்திற்கு அப்பாற்பட்ட வரலாற்று உண்மையாகும்.

### கம்ப ராமாயண ஆய்வு

கம்பராமாயணத்தைப் பற்றி 1908 இல் இலண்டன் யூனிடேரியன் சர்ச்சில் வ.வே.சு. ஐயர் ஆங்கிலத்தில் பேசியுள்ளார். இந்தப் பேச்சு, லண்டனில் பிபின் சந்திரபால் ஆசிரியராகவிருந்த 'ஸ்வராஜ்யா' எனும் மாதமிருமுறை இதழில் வெளிவந்தது.

1917 இல் "கம்பராமாயணம் (சுருக்கம்) பாலகாண்டம்" எனும் பதிப்பை வ.வே.சு. ஐயர் தமது கம்ப நிலையம் வெளியீடாக வெளியிட்டார். இந்தப் பதிப்பு நூலில் வ.வே.சு. ஐயர் எழுதியுள்ள முகவுரை, கம்ப ராமாயணத்தை ஒப்பியல் ஆய்வு நோக்கில் முன்னோரில்லாதது எனப் பாராட்டியுள்ளது.

கம்பராமாயணத்தைப் பிற இலக்கியங்களுடன் ஒப்பிட்டு ஆய்வு செய்யப் பெற்ற நூல்களுள் 'கம்ப ராமாயண ரசனை' முன்னோடியாகத் திகழ்கின்றது.

வ.வே.சு. ஐயர், பத்தாண்டு காலம் கம்பராமாயண ஆய்வில் தோய்ந்து, எழுதத் தொடங்கிய பொழுதே, கம்ப ராமாயணத்தின் தனிப்பெருஞ் சிறப்பைப் பின்வருமாறு எடுத்துரைத்தார்.

"கம்பனுடைய இராமாயணமானது மற்ற கவிகள் எழுதிய ராமசரிதைகளையும், தமிழில் எழுதப்பட்ட இதர காவியங்களின் பெரும்பாலானவற்றையும்கூட, வெயிலிடைத் தந்த விளக்கொளி போலாக்கிவிட்டது. இது மாத்திரமில்லை; கம்பராமாயணமானது ஹோமர் எழுதிய இலியாதையும், விர்க்கிலியன் எழுதிய ஏனயிதையும், மில்டனுடைய சுவர்க்க நஷ்டத்தையும், வியாசபாரதத்தையும் தனக்கே முதல் நூலாக இருந்த வால்மீகி ராமாயணத்தையும்கூடப் பெருங்காப்பிய லட்சணத்தின் அம்சங்களுள் அநேகமாய் எல்லாவற்றிலும் வென்றுவிட்டது என்று சொல்வோம். இவ் விமர்சனத்தைத் தொடர்ந்து வாசிப்போருக்கு எமது இவ்வபிப்ராயத்தை மெய்ப்பிக்க முயலுவோம்".

திருமணம் செல்வக் கேசவராயர் சுட்டிக்காட்டிய சிறு குறிப்பிற்குப் பிறகு, ஒப்பியல் ஆய்வுவிலும் நோக்கிற்கு ஏற்ப தகுந்த மேற்கோள்களுடன் திறனாய்வு நெறி வழியே கம்ப இராமாயணத்தை தன்னேரில்லாக் காப்பியமாக நிறுவினார், வ.வே.சு. ஐயர். 'பி.ஏ. பட்டப்படிப்பில் பொருளாதாரத்தை ஒரு பாடமாக எடுத்த போதிலும், இலத்தீன் மொழியையும் ஒரு பாடமாக எடுத்ததினால் வ.வே.சு. ஐயர் கிரேக்க இலக்கியங்களை மூலமொழியிலேயே கற்க வாய்ப்பு ஏற்பட்டது. நூலின் தலைப்

பிற்கேற்ப கம்பன் ரசனைச் சுவையை பண்டைய கிரேக்க இலக்கியங்களுடன் ஒப்பிட்டுள்ளார் வ.வே.சு. ஐயர். வால்மீகி ராமாயணத்தையும் ஒப்பிட்டுள்ளார்.

## KAMBARAMAYANA - A STUDY

வ.வே.சு. ஐயரின் கம்பராமாயண ஆய்வின் மணிமகுடமாகத் திகழ்வது அவருடைய 'கம்பராமாயணம் ஓர் ஆய்வு' எனும் ஆங்கில நூலாகும். 1921 இல் பெல்லாரி சிறையில் ஒன்பது மாத சிறைவாசம் காலத்தில், "Study of Kamban" எனும் தலைப்பில் எழுதியதே பிற்காலத்தில், "Kamba Ramayana - A Study" என்னும் பெயரில் வெளிவந்தது. முற்றுப் பெறாமல் கையெழுத்துப் படியில் இருந்த இந்த நூலை டில்லித் தமிழ்ச் சங்கம் 1950 இல் வெளியிட்டது. இந்த நூலில் உள்ள சீதை பாத்திரப் படைப்பு ஆய்வு மட்டும், டில்லித் தமிழ்ச் சங்க உறுப்பினர் ஒருவரால் எழுதப்பெற்றுச் சேர்க்கப்பட்டது.

'பாலபாரதி'யில் வெளிவந்த கம்ப ராமாயண ஆய்வுக் கட்டுரைத் தொடருக்கு முன்பு எழுதப்பெற்றது, இந்த ஆங்கில நூல் ஆகும்.

இராமன், இலக்குவன், இந்திரஜித், விபீடணன், கும்பகர்ணன், வாலி, சுக்கிரீவன், அனுமன், இராவணன், பரதன் என வரிசையாக பத்து பாத்திரங்களின் பண்பு நலன்களை ஒப்பாய்வு நெறியில் ஆய்ந்துள்ளார், வ.வே.சு. ஐயர். வால்மீகி ராமாயணம், துளசிதாசர் ராமாயணம், பாஸ்கரர் தெலுங்கு ராமாயணம் முதலானவற்றுடன், சுவர்க்க நீக்கம் தெய்விக நாடகம், எனியாத், இலியாத் முதலான மேனாட்டுக் காப்பியங்களையும் இந்த நூலில் ஒப்பாய்விற்கு எடுத்துள்ளார், வ.வே.சு. ஐயர்.

"ராமாயணத்தை ஓர் சிற்பியால் சமைக்கப் பெற்ற அரண்மனையாகப் பாவித்து, அவ்வரண்மனையின் ஒவ்வோர் அவயத்துக்கும் மற்ற அவயங்களுக்கும் உள்ள பொருத்தத்தையும், அவயங்களுக்கும் அரண்மனையின் சமக்ர அமைப்புக்கும் உள்ள பொருத்தத்தையும் விவரித்து எடுத்துக் காட்டும் விமரிசனங்கள் இது வரையில் வெளிவரவில்லை". இவ்வாறு வ.வே.சு. ஐயரே குறிப்பிட்டு, அந்தக் குறையை நிறைவு செய்தார்.

பாரதியாரின் 'கண்ணன் பாட்டு' முன்னுரையிலும், தமிழறிஞர் பொ. திருகூட சுந்தரம் பிள்ளையின் 'இதய உணர்ச்சி' என்னும் நூலிற்கு எழுதிய முன்னுரையிலும், வ.வே.சு. ஐயரின் ஒப்பியல் ஆய்வுக் குறிப்புகள் காணக் கிடைக்கின்றன. 'இதய உணர்ச்சி' முன்னுரையில் மார்க்க அரேலியசையும், திருவள்ளுவரையும் ஓரளவு ஒப்பிட்டுள்ளார், வ.வே.சு. ஐயர்.

### மொழிபெயர்ப்புத் துறையில்...

வ.வே.சு. ஐயரின் மொழி பெயர்ப்புப் பணி முதன் முறையாக புதுச்சேரியில் இருந்து வெளிவந்த 'இந்தியா' இதழில் தொடங்கியது. பிரெஞ்சுப் புரட்சிக்கு தூண்டுதல் அளித்த ரூஸ்ஸோவின் (1712-1778) 'சமுதாய ஒப்பந்தம்' என்னும் நூலை வ.வே.சு. ஐயர் தமிழில் மொழி பெயர்க்கத் தொடங்கினார். "ழான் ழாக் ரூஸோ எழுதிய ஜன சமூக ஒப்பந்தம்" எனும் தலைப்பில் அவர் மொழிபெயர்க்கத் தொடங்கியது 1909 ஜூன் 5 ஆம் தேதி, 'இந்தியா' இதழில் வெளிவந்தது. "இதுவரையில் இதை ஒருவரும் எடுத்துக் கொள்ளாமல் இருக்கிறபடியாலும், முதல் நூலின் அருமையையும், அதை பாஷாந்தரம் படுத்தவேண்டியதின் அவசியத்தையும் கருதி, "ரூஸ்ஸோவை மொழி பெயர்க்கத் தொடங்கியதாக வ.வே.சு. ஐயர், "மொழிபெயர்த்தான் குறிப்பில்' எழுதியுள்ளார்.

இவருடைய அடுத்த மொழி பெயர்ப்பும், 'இந்தியா' இதழில் தொடர்ந்தது. வீர சாவர்க்கரின் 'முதல் இந்திய சுதந்திர போர், 1857' என்னும் தலைப்பில் எழுதியதை "ஹிந்துஸ்தான் ஸ்வதந்திர யுத்த சரித்திரம்" என்னும் தலைப்பில்

→

## படம் மாறிப் போனால்...

தம்பி. சீனிவாசன்

என்ன சிரிப்பு வருகுது,
இந்தப்படங்கள் காரணம்!

சின்ன எறும்புப் பாடம் எதிரே
சீறும் சிங்கம் உள்ளதே!

வண்ணக் கிளியின் படத்தின் எதிரே
வாழை மரப் பாடலாம்!

கதையில் பீமசேனன் வருவான்
கத்த ரிக்காய் படத்திலே!

விதைகள் வளரும் பாடம் எதிரே
வீரன் பீமன் தோன்றுவான்!

ஆட்ட வீரர், ஓட்ட வீரர்
அனைவ ரையும் பார்க்க லாம்!

நாட்டுவர லாற்று நூலில்
நடுநடுவே தோன்றுவார்!

நித்தம் எனது ஆசைத் தம்பி
கத்த ரிக்கும் படங்களை

பித்தன் போல பாட நூலில்
பிடித்த பக்கம் பதிக் கிறான்!

என்ன சிரிப்பு வருகுது,
இந்தப் படங்கள் காரணம்!

## அந்திப் பொழுதாம் மாலையிலே..

கவிஞர் முருகுவண்ணன்

அந்திப் பொழுதாம் மாலையிலே
அமைதியும் இன்பமும் மலர்ந்திடுமே!
செங்கதிர் மேலைக் கடலினிலே...
திருமுழுக்காடும் அழகினிலே... (அந்தி)

வானில் சித்திர மேகங்கள்; - அங்கு
வண்ணப் பறவைகள் - கோலங்கள்!
கானில் மயில்கள் ஆடல்கள்! - இளங்
காதலர் தனிமையில் கூடல்கள்! (அந்தி)

வீசும் தென்றலும்; அலைகடலும்; - மலை
வீழும் அருவியின் இசை முழக்கும்;
மாசில் நிலவும் பூச்சிரிப்பும் - நாம்
மகிழ்ந்திட இயற்கை, பரிந்தளிக்கும் (அந்தி)

வ.வே.சு. ஐயர் தமிழில் மொழி பெயர்த்தது. 'இந்தியா' இதழில் 1909 ஆகஸ்ட் 7 இல் வெளிவரத் தொடங்கியது. இதன் தொடர்பான பின்வரும் அவருடைய குறிப்பும் நோக்கத்தக்கது.

"இந்த அற்புதமான சரித்திரம் நம்முடைய பாஷையில் எழுதப்பட வேண்டுமென்ற அவாவினால் மகாராஷ்டிர பாஷையில் இருந்து இங்கிலீஷ் பாஷையில் மற்றொரு தேசமித்திரன் செய்து கொண்டு வருகிற பாஷாந்தரத்திலிருந்து அவர்களுடைய அனுமதியின் பேரில் இந்தச் சரித்திரத்தை மொழி பெயர்க்கலானோம்".

வ.வே.சு. ஐயரின் மொழி பெயர்ப்புப் பணி, பாரதியாரின் 'இந்தியா' இதழிற்குப் பிறகு சுப்பிரமணிய சிவாவின் 'ஞானபானு'வில் தொடர்ந்தது. இதாலிய கிறிஸ்துவ சமயஞானி புனித அகஸ்டின் (354-430) அவர்களின் "My Confessions in Thirteen Books" என்னும் நூலின் முதல் புத்தகத்தின் ஒன்பது அத்தியாயங்களை மட்டும் இலத்தீன் மொழியில் இருந்து தமிழாக்கம் செய்தார். தமது மொழிபெயர்ப்பிற்கு, "அகஸ்தீன் என்னும் மகாத்மாவின் விண்ணப்பம்" என்று தலைப்பிட்டார், வ.வே.சு., ஐயர். இந்த மொழிபெயர்ப்பு 'ஞானபானு'வில் 1914 இல் ஜனவரி முதல் அக்டோபர் வரையில் வெளிவந்தது.

### திருக்குறள் மொழிபெயர்ப்பு

"திருவள்ளுவரையும், கம்பரையும் தமது வழிபடு தெய்வங்களாகவே வ.வே.சு. ஐயர் கொண்டாடி வந்தாரென்று சொல்லலாம்" என அமரர் வெ.சாமிநாத சர்மா குறிப்பிட்டுள்ளார்.

வ.வே.சு. ஐயர் திருக்குறளை ஆங்கிலத்தில் 1914 இல் ஐந்தே மாதங்களில், அரசியல் நெருக்கடியானச் சூழலில் மொழிபெயர்த்தார். 1916 இல் முதல் பதிப்பு வெளிவந்தது. பதிப்பாளர் பெயராகச் சுப்பிரமணிய சிவாவின் பெயர் அச்சாகியுள்ளது. "The Kural Or the Maxims of Tiruvalluvar" எனும் பெயரில் வெளிவந்த நூலிற்கு 44 பக்கங்களில் அரிய ஆய்வுரையை எழுதியுள்ளார் வ.வே.சு. ஐயர்.

ஆங்கிலம், பிரெஞ்சு, இலத்தீன் மொழிகளில் 1820 முதல் 1886 வரையில் வெளிவந்த பலமொழி பெயர்ப்புகளைப் படித்த பிறகு, தாம் தனியாக ஒரு மொழிபெயர்ப்பு செய்ய வேண்டும் என விரும்பியதாக வ.வே.சு. ஐயர் கூறியுள்ளார். மொழிபெயர்ப்பிற்கு புனித பைபிளின் ஆங்கில நடையை தேர்ந்தெடுத்தார், வ.வே.சு. ஐயர்.



அமெரிக்க அறிஞர் மெர்சனின் 'செல்ப் ரிலையன்ஸ்' என்னும் நூலை தமிழில் 'தன்னம்பிக்கை'யென்றும் மொழிபெயர்த்துள்ளார், வ.வே.சு. ஐயர். 'கம்பராமாயணம் ஓர் ஆய்வு' என்னும் ஆங்கில நூலில் உள்ள பாடல்கள் வ.வே.சு. ஐயரால் மொழி பெயர்க்கப்பட்டவை. தாகூரின் 'காபூலிவாலா' என்னும் சிறுகதையை தமிழில் 'காபூல்காரன்' என்று மொழிபெயர்த்துள்ளார்.

### பத்திரிகைத் துறையில்...

திரு.வி.க. ஆசிரியராக இருந்த 'தேசபக்தன்' நாளிதழில் 1920 ஜூலை 31 இல் வ.வே.சு. ஐயர் ஆசிரியர் பொறுப்பேற்றார். 1921 செப்டம்பர் 19 இல் தேசபக்தனில் வெளிவந்த ஒரு கட்டுரைக்காக வ.வே.சு. ஐயர் ஒன்பது மாத சிறைத்தண்டனையை ஏற்க வேண்டியதாயிற்று. இந்தக் கட்டுரை மற்றொருவரால் எழுதப்பட்டது. இவருடைய பார்வைக்கு வராமல், அவர் ஊரில் இல்லாத சமயத்தில், பத்திரிகையில் வெளியிடப்பட்டது. பத்திரிகை ஆசிரியர் என்னும் ஒரே காரணத்திற்காக வ.வே.சு. ஐயர் தண்டிக்கப்பட்டார்.

### பாலபாரதி

கல்கத்தாவில் ராமானந்த சட்டர்ஜி என்னும் புகழ் பூத்த ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த 'மாடர்ன் ரெவ்யூ' என்னும் ஆங்கில மாத இதழ் அக் காலத்தில் தேசபக்தர்களைக் கவர்ந்தது. வ.வே.சு. ஐயரும் 'மாடர்ன் ரெவ்யூபோல் தமிழில் ஒரு பத்திரிகையைத் தொடங்கினார். இந்தப் பத்திரிகைக்கு 'பாலபாரதி' என்று பெயரிட்டார். இது, மாத இதழாக 1924 அக்டோபரில் சேரமாதேவி பாரத்வாஜ் ஆசிரம வெளியீடாக வந்தது.

பத்திரிகைக்குப் பெயர் வைத்த காரணத்தைக் குறிப்பிடுமிடத்தில் வ.வே.சு. ஐயர், தமது நண்பர் பாரதியாரிடம் கொண்டிருந்த பெருமதிப்பை பின்வருமாறு அறிய முடிகிறது.

"வெண்டாமரையில் வீற்றிருக்கும் எம்பிராட்டியின் பேரை இப்பத்திரிகைக்கு வைத்துள்ளோம். எம்பிராட்டிக்கு ஆயிரம் ஆயிரம் நாமங்கள் இருக்கையில் பாரதி என்ற பெயரை ஏன் தெரிந்து கொண்டோமென்றால், அத்திரு நாமம் எமது நண்பரும், இன்றைக்கு இருபது வருஷங்களுக்கு முன் தமிழ்நாட்டுக்குப் புத்துயிர் அளிக்க முயன்ற புண்ணியாத்மாக்களில் ஒரு பிரமுகருமான காலம் சென்ற சி. சுப்ரமண்ய பாரதியின் ஞாபகம் இம் மாஸிகையைப் படிக்கும் அனைவர் மனதிலும் என்றும் அழியாமல் பசுமையாக இருந்து வரவேண்டுமென்றேயாகும்".

தமிழ் இலக்கியத்தொண்டிற்கும், உலக இலக்கியங்கள் அறிமுகத்திற்கும் 'பாலபாரதி'யைப் பயன்படுத்தினார், வ.வே.சு. ஐயர். "ஆலோகன அவலோகனம்" எனும் பகுதியிலும், "ராஜகோபாலன் கடிதங்கள்" எனும் பகுதியிலும் வ.வே.சு. ஐயர் எழுதி வந்ததோடு, சிறுகதைகளையும், கம்பராமாயண ஆய்வுகளையும் எழுதி வந்தார்.

1925 ஜூன் வரையில் அவர் அமரராகும் வரையில் 'பாலபாரதி'யின் ஆசிரிராக இருந்தார், வ.வே.சு. ஐயர். அவர் மறைவிற்குப் பிறகு கவியோகி சுத்தானந்த பாரதியார் ஆசிரியர் பொறுப்பில் 'பாலபாரதி'யின் சில இதழ்கள் வெளிவந்தன.

வ.வே.சு. ஐயரின் தமிழ்ப் பணிகளைப் போற்றாத நெஞ்சம், தமிழ் நெஞ்சமல்ல.

ஃ


உதவிய நூல்கள் :-

மகாகவி பாரதியார் - வ.ரா

புதுவையில் பாரதி - பி. கோதண்டராமன்

ஸ்ரீ அரவிந்த தரிசனம் - அமிர்தா

ஸ்ரீ அரவிந்தரின் சரிதங்கள் (பல)

FREE INDIA Dec. 10 - 1950

# படப்பாடல் காட்டும் பாட்டாளிகள்

'சேயோன்'

மக்கள் தொடர்பு சாதனங்களில் (Mass Communication Media) மணிமுடியாகத் திகழ்வது திரைப்படம்! எத்தனையோ திரைப்படங்களை நாம் பார்த்திருப்போம். அவற்றின் கதைகள் நம் மனத்தில் பதிந்திருக்கும்; பாத்திரங்கள் நம்மிடம் பேசும்; பாடல்கள் நம்மை முணுமுணுக்கச் செய்யும். இவை படம் பார்த்த சில நாள்களுக்கு அல்லது ஒரு சில மாதங்களுக்கு மட்டும்தான்! ஆனால் அந்தத் திரைப்படப் பாடல் மட்டும் நம் நெஞ்சில் நீங்கா இடம் பெறுகிறதே! ஏன்? ஆயிரக்கணக்கான திரைப்பாடல்களை எழுதியுள்ளனர் கவிஞர்கள். அவற்றில் ஒரு சிலவற்றை மட்டும் நாம் நினைவில் வைக்கிறோம். ஏன்? அவை கருத்துச் செறிவும், கற்பனை வளமும், நடைச் சிறப்பும் மிக்க பாடல்கள்! அத்தகைய பாடல்கள் எங்கு ஒலித்தாலும் நம் கவனத்தை ஈர்த்து நம்மையும் உடன் பாட வைக்கும்; அதன்வழி திரைப் படக் காட்சிகளை நினைவூட்டும்; சிந்தனையைச் சிலிர்க்க வைத்த உரையாடல்களையும் நினைக்கத் தூண்டும். இத்தகைய திரைப்படப் பாடல்கள் தான் 'இலக்கியம்' எனும் அந்தஸ்தை – நிலையைப் பெறவல்லன!

இலக்கியத் தரம் மிக்க திரைப்படப் பாடல்களில் 'தாலாட்டு', 'தூது', 'தத்துவ முத்துக்கள்', 'கதைக் கொத்துக்கள்' முதலானவை மண்டிக் கிடக்கின்றன. கருத்தைக் கவரும் காதலர்களையும், பாலூட்டிச் சீராட்டும் தாலாட்டும் தாய்மார்களையும், தத்துவம் பேசும் வித்தகர்களையும் இனங்காட்டும் திரைப்படப் பாடல்கள் பாட்டாளிகளைக் காட்டத் தவறுமா என்ன?

"பாடுபடுபவர்க்கே இந்தப் பாருலகம்
சொந்தமய்யா!
காடுதிருத்தி நல்ல கழனியெல்லாம்
செய்வது அவரலவோ!"

என்றார் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள்!

"சிற்றூரும் வரப்பெடுத்த வயலும் ஆறு
தேக்கியநல் வாய்க்காலும் வகைப்படுத்தி
நெற்சேர உழுதுழுது பயன்விளைக்கும்
நிறை உழைப்புத் தோள்களெலாம்
எவரின் தோள்கள்?
கற்பிளந்து மலைபிளந்து கனிகள் வெட்டிக்
கருவியெலாம் செய்துதந்த கைதான்
யார்கை?
பொற்றுகளைக் கடல்முத்தை
மணிக்குலத்தைப்
போய் எடுக்க அடக்கிய மூச்சு
எவரின் மூச்சு?"

என்று புரட்சிக் கவிஞர் பாரதிதாசனார் விடுக்கும் வினாக்களுக்குரியவர் யார் எனத் தெரிகிறதல்லவா? ஆம்! அவர்கள்தான் பாட்டாளிகள்! அந்தப் பாட்டாளிகளைப் படப் பாடல்கள் எப்படி இனங்காட்டுகின்றன?

## 1

"உழவுத் தொழிலைச் செய்யும் விவசாயி கடவுள் எனும் முதலாளி கண்டெடுத்த தொழிலாளியாம்!" இப்படிக் கூறுகிறார் திரை இசைக் கவிஞர் மருதகாசி.

அப்படிப்பட்ட விவசாயினுடைய குணம் எப்படிப்பட்டது தெரியுமா? 'முன்னேற்றம்' என்பதையே இலக்காகக் கொண்டு அதனை அடைவதற்கு முழு மூச்சுடன் நாள்தோறும் உழைக்கும் தொழிலாளியே விவசாயி!

மனிதர்களில் சிலர் கறுப்பாக இருக்கலாம். சிலர் சிவப்பாக இருக்கலாம். இந்த நிற வேற்றுமையைக் கருத்தில் கொள்ளாமல் எல்லோரும் ஒற்றுமையாய் இருக்க வேண்டும். நிறம், மொழி, இனம் – இந்த வேற்றுமைகளை ஒரு பொருட்டாகக் கருதக்கூடாது. எல்லோரும் இந்தியர் என்ற ஒருமித்த சிந்தனையோடு உழைத்தால் தனி மனித உயர்வோடு நாட்டின் உயர்வும் நனி சிறக்கும். இப்படிப் பெரியோர்கள் சொன்ன கருத்துகளை எல்லாம் சிந்தையில் கொண்டு சிறப்புடன் நிலத்தில் பாடுபட்டால் உணவுப் பொருள் உற்பத்தி பன்மடங்கு பெருகுமே! இத்தகைய அரும்பணியைச் செய்பவனே விவசாயி!

வண்ணச் சித்திரங்கள்
மாருதி


1
2


3
4


5
6


7
8

மக்களாட்சி நாடாகையால் இங்கே எத்தனையோ கட்சிகள் உண்டு. அவற்றைக் குறிக்கும் வண்ணக் கொடிகள் பல பட்டொளி வீசிப் பறப்பதும் உண்டு. இந்தக் கொடிகளெல்லாம் அந்தந்தக் கட்சிகளின் குறிக்கோளை உணர்த்தும் வண்ணம் பறக்கும். ஆனால் அனைத்துக் கட்சியினரும் எவ்வித வேறுபாடுமின்றி ஏற்கும் ஒரு கொடி நாட்டில் பறக்க வேண்டும். அதுதான் நமது நாடு உணவு உற்பத்தியில் தன்னிறைவு பெற்றுவிட்டது எனும் செய்தியை உலகுக்கு உணர்த்தும் கொடியாக இருக்கும். அந்தக் கொடிக்கு என்ன பெயர் வைக்கலாம் என எண்ணிய விவசாயி கூறுகிறான், 'அன்னக் கொடி' என்று. உணவுப் பஞ்சம் இல்லை என்பதை உலகுக்கு உணர்த்தும் வண்ணம் பறக்கும் கொடி அதுவே என அறுதியிட்டுக் கூறுகிறான்.

"விவசாயி... விவசாயி!
கடவுளெனும் முதலாளி
கண்டெடுத்த தொழிலாளி – விவசாயி!
முன்னேற்றப் பாதையிலே மனசை வச்சு
முழுமூச்சாய் அதற்காகத் தினம் உழைத்து
மண்ணிலே முத்தெடுத்துப் பிறர்வாழ
வழங்கும் குணமுடையோன் விவசாயி!
என்ன வளம் இல்லை இந்தத் திருநாட்டில்
ஏன் கையை ஏந்தவேணும் வெளிநாட்டில்
ஒழுங்காய் பாடுபடு வயல் காட்டில்!
உயரும் உன்மதிப்பு அயல்நாட்டில்! (விவ)
கருப்பென்றும் சிவப்பென்றும்
வேற்றுமையாய்
கருதாமல் எல்லோரும் ஒற்றுமையாய்
பொறுப்புள்ள பெரியோர்கள் சொன்னபடி
உழைத்தால் பெருகாதோ சாகுபடி! (விவ)
இருந்திடலாம் நாட்டில் பல வண்ணக்கொடி
எத்தனையோ கட்சிகளின் எண்ணப்படி
பறக்கவேணும் எங்கும் ஒரே
சின்னக்கொடி – அது
பஞ்சம் இல்லையெனும் அன்னக்கொடி!
(விவ)

படம் : விவசாயி. பாடல் : கவிஞர் மருதகாசி

## 2

மனிதனின் இன்றியமையாத் தேவைகளுள் உணவை அடுத்து இடம் பெறுவது உடை. அந்த உடைகளைப் பல வண்ணங்களில், பல்வேறு நூல் இழைகளினால் பின்னிப் பட்டுச் சேலைகளாகவும், கைத்தறிப் புடைவைகளாகவும், வேட்டிகளாகவும், பலவகைத் துணிகளாகவும் நெய்து கொடுக்கும் அற்புதத் தொழிலைச் செய்பவர்கள் நெசவாளிகள் அன்றோ? நெசவுத் தொழிலாளர்கள் கைத்தறிகளிலும், மின் விசைத்தறிகளிலும் பல மணி நேரம் பணிபுரிந்து அணிபவர்களின் கண்ணையும், கருத்தையும் கவரும் வண்ணம் ஆடைகளை நெய்து தருகிறார்கள். அவ்வாறு பல நூலிழைகளை ஒருங்கிணைத்து ஓராடையை உருவாக்கும் நெசவாளி கூட்டுறவினால் – நூல்களின் கூட்டுறவினால் ஆடையை உருவாக்கும் அரும்பணியைச் செய்கிறான். அதன் வழி ஏற்படும் தொழிலாளர்களின் ஒற்றுமையினால் தொழில்வளம் பெருகும்; நாட்டின் வளம் மிகும். அதனால் அகில உலகில் பாரத நாட்டின் புகழ் ஓங்கும் என்பதையும் அனைவருக்கும் உணர்த்துகிறான், தனது நெசவுத் தொழிலினால்! ஏனெனில் தன் மானம் காக்கும் உடைகளைத் தயாரிப்பவனல்லவா நெசவாளி! விதவிதமான பறவைகளைப் போலப் பலப் புது விதவிதமான உடைகளைத் தயாரிப்பதில் வல்லவனல்லவா நெசவாளி! நமது நாட்டினர் மட்டுமன்றிப் பிற நாட்டினரும் விரும்பி அணியும் வகையில் தரமும் திறமும் மிக்க ஆடைகளை உருவாக்குபவனல்லவா நெசவாளி!

பல்வேறு தரத்து மக்கள் பெறும் பயனையும் வியந்து பாடியிருப்பவர் யார் தெரியுமா? பாட்டாளிகளின் உணர்வுகளையும் உத்வேகங்களையும் தன் பாடல்களிலெல்லாம் பரிணமிக்கச் செய்யும் பாட்டுக்கோட்டையின் வேந்தர் பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம்தான்!

நெசவுத் தொழிலாளர்கள் தம் பணியினால் யார் யாருக்கெல்லாம் பயன்படுகிறார்கள் என்பதை நெசவுத் தொழில் புரியும் ஒரு பெண்ணின் வாயிலாகப் பட்டியலிட்டுக் காட்டுகிறார் பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம்! அந்தப் பெண்ணோடு நெசவுத் தொழிலைக் கண்ணும் கருத்துமாகச் செய்யும் அனைத்துப் பெண்களும் பாடுகிறார்கள். நாட்டின் பல்வேறு திறத்தினரும் வியந்து போற்றும் அளவிற்கு விதவிதமான ஆடைகளைத் தரமாகத் தருவது தமது கடமை என்பதையும் அவர்கள் உணர்ந்து பாடுவது பெரிதும் பாராட்டத்தக்கது. அப்படி அவர்களைப் பாடவைக்கிறவர் நமது பட்டுக்கோட்டைக் கவிஞர் அல்லவா?

"சின்ன சின்ன இழை
பின்னிப் பின்னி வரும்
சித்திரக் கைத்தறிச் சேலையடி
நம்ம தென்னாட்டில் எந்நாளும்
கொண்டாடும் வேலையடி!
தையாரே தந்தன்ன தானா
தையாரே தந்தன்ன தானா
அன்னையர் தந்தையர் வண்ணக்
குழந்தைகள்
புன்னகை மங்கையர் போற்றிப் புனைந்திடும்
ஆடையடி, நெய்துமடி போடுங்கடி
(சின்ன சின்ன)
சிந்தனைச் சிற்பிகள் தேசத்தறிஞர்கள்
செந்தமிழ்ச் சோலையில் பூத்த கலைஞர்கள்
மங்கா மாநிலம் எங்கள் மாநிலம்
காக்கும் மறவர் யாவரும் புவிவாழ்வை
உயர்த்தும் மக்கள் எல்லோரும்
வாங்கி மகிழும் பொன்னாடையடி!
தையாரே தந்தன்ன தானா
தையாரே தந்தன்ன தானா
உழைத்திடும் எளியவர் அடிக்கடி
துவைத்து வந்தாலும்
மங்காது பார்வை சிங்காரப் போர்வை
பணப்பசை மிகுந்தவர் படித்தவர் பெருத்தவர்
நாடும் பச்சைப் பட்டாடை
பார்த்தால் கிளி ஜாடை (சின்ன சின்ன)
ஒற்றுமையோடு அத்தனை நூலும்
ஒழுங்காய் வந்தால் வளரும்
இதில் ஒரு நூல் அறுந்தால் குளறும்
இதை ஒட்டும் ஏழைக் கூட்டுறவாலே
உலகில் தொழில்வளம் உயரும்
இந்த உலகில் தொழில் வளம் உயரும்!
என்னடி கண்ணம்மா இன்னும்
சொல்ல வேணுமா?
வள்ளுவரின் வழி வந்த பெரும்பணி
வாழ்வில் நன்மை உண்டாக்கும்
தன்மானம் காக்கும்
தன்மானம் காக்கும்
புதுவகைப் புடவைகள்
விதவிதப் பறவைகள் போல
நல்ல நிறம் காட்டும்
நாளும் புகழ் நாட்டும் (சின்ன சின்ன)

படம் : புதையல். பாடல் : கவிஞர் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம்

## 3

உண்ணும் உணவுப் பொருட்களை உற்பத்தி செய்யும் விவசாயிகளையும், உடுக்கும் ஆடைகளை நெய்யும் நெசவாளர்களையும் பற்றிப் பாடிய கவிஞர்களின் கவித்திறனை அறிந்த நாம் அந்த ஆடைகளின் அழுக்கினைப் போக்கித் தூய்மை செய்து அழகுற மடித்து புத்தாடை போல மீண்டும் அளிக்கும் சலவைத் தொழிலாளர்களைப் பற்றி அறிய வேண்டாமா?

மனிதனின் இன்றியமையாத் தேவைகளுள் உணவை அடுத்து இடம் பெறுவது உடை. அந்தத் துணிகளின் அழுக்கைப் போக்கி, நன்கு உலர்த்தி, அழகுற மடித்துப் பின் உரியவர் களுக்கு வழங்கும் அரும்பணியைச் செய்கிறவர் வண்ணான். அவருக்குத் துணையாய் பெண்களும் பணிபுரிவர். இப்படித் துணிகளை ஆற்றின் பாறைகளில் துவைத்து, அவற்றின் அழுக்கைப் போக்கி உலரவைக்கும் ஆண்களும், பெண்களும் தத்தம் தொழில் குறித்தும், சமுதாய நிலை குறித்தும் பாடுகின்றனர். அந்தப் பாடல் வழி 'வெள்ளாந்துறை' எனப்படும் துணி வெளுக்கும் ஆற்றின் ஒரு பகுதியையும், வெளுப்பவர்களின் மனநிலையையும், மதிநுட்பத்தையும் படக்காட்சிபோல் நம் கண்முன் காட்டுகிறார் கவியரசர் கண்ணதாசன்!

அழுக்குத் துணிகளை ஆற்றின் பாறைகளில் துவைத்து, அவற்றின் அழுக்கினைப் போக்கி, உலரவைக்கும் சலவைத் தொழிலாளர்களின் தொழில் நிலை குறித்தும், சமுதாயச் சூழல் பற்றியும், அவர்தம் மனநலம், மதி நுட்பம், தொழில் முதலானவை குறித்தும் அவர்களே பாடுகின்றனர். எங்கே? எப்போது? வெள்ளாந் துறையில் அழுக்குத் துணிகளைத் துவைத்துக் காய வைக்கும்போது பாடுகின்றனர். வெள்ளாந்துறை, ஆற்றில் ஒரு பகுதியினர் துவைத்துக் கொண்டே பாடிக் கொண்டிருக்கும் நிலை, காயவைக்கும் மகளிர் மறுபக்கம் இப்படி அனைவரையும் பாடல்வழி படக்காட்சிபோல் நம் கண்முன் நிறுத்துகிறார் கவியரசர் கண்ணதாசன்!

துணிவெளுக்கும் சலவைத் தொழி லாளர்கள் அதிகாலையில் எழுந்து அழுக்குத் துணிகளை நதிக்கரைக்குக் கொண்டு செல்வர். அங்குக் குறிப் பிட்ட இடத்தில் அந்த ஊரில் உள்ள அனைத்து சலவைத் தொழிலாளர் களும் காணப்படுவர். ஆற்றில் ஓடிவரும் நீரில் உள்ள பாறைகள் சுத்தமாக இருக்கும். அந்தப் பாறை களில் துணிகளை நன்கு துவைத்து, ஓடிவரும் நீரில் அலசிப் பிழிந்து ஆற்றின் கரையோரத்தில் உலர வைப்பர். இது சலவைத் தொழி லாளர்களின் நிலை!

இப்படி துணிவெளுக்கும் வண் ணான்களும், வண்ணாத்திகளும் ஒரு பக்கம் சேர்ந்து பாடிக்கொண்டிருப் பதைக் கேட்கிறார் ஒரு சிவனடியார். அப்போது அவர் தமது துணியைத் துவைத்துக் கொண்டிருக்கிறார். அந்தப் பாடலைப் பாடியவர்களின் காதில் விழும்படி சிவனடியார் பாடு கிறார்.

# காந்திவழி காண வழி

**வீ.சே. கந்தசாமி**

இமயமலை கங்கைநதி இணையே யில்லா
இருவரியில் ஆனதிருக் குறளி னோடு
சமமேதும் இல்லாத உபநிட தங்கள்
தத்துவங்கள் வேதங்கள் பிறந்த நாட்டில்
அமைதியிலா வாழ்க்கையிலே மக்கள் வீழ்ந்து
அல்லல்பட் டாற்றா து கண்ணீர் விட்டு
தமது உடன் பிறப்பென்றும் எண்ணிடாமல்
சாதிமதச் சண்டைகளில் அழிய லாமோ?

கொள்ளைவழி குறுக்குவழி பொருளைச் சேர்த்துக்
குவிக்கின்ற பேர்களுமோர் காசைப் போட்டால்
வள்ளலென அவர்களையும் வாழ்த்திப் பாடி
வாழும்நெறி கெடுத்துவரும் ஈனர் இங்கே
வெள்ளமெனப் பெருக்கெடுத்து நிற்கக் கண்டு
வேறுவழி இனிஏது என்றே எண்ணி
கள்ளமிலாச் சிந்தையினர் கறந்து வாழ்ந்தால்
காந்திவழி நாட்டினிலே காணப் போமோ?

பக்கத்து வீட்டினிலே பெருந்தீப் பற்றிப்
பரவுகின்ற வேளையினில் நமது வீடு
எக்கதிக்கு ஆளானால் என்ன வென்று
எவரேனும் இருப்பாரோ அதுபோல் நாட்டில்
பக்கபலம் உடையோர்கள், பணம்படைத்தோர்,
பலர்வாழ்வை சுயநலத்தால் கெடுக்கும் போது
அக்கண மே அக்கொடுமை தடுத்து நாட்டில்
அனைவர்நலம் ஓங்கிடவே செய்தல் வேண்டும்.

ஈரெட்டு வயதுடைய அழகு மங்கை
ஏகவிலை நகையணிந்து இரவு வேளை
ஊரெல்லாம் தனியாகச் செல்லும் போதும்
ஊறெதுவும் நேராது என்ற நாளே
பூரணமாம் சுதந்திரத்தைப் பெறும் நாளென்று
புகன்றமகான் காந்திவழி மக்கள் சென்று
சீரோங்கித் திகழ்ந்திடவே அண்ணல் கொள்கை
செயலாக்கிக் காட்டிடுவோம் நாட்டில் இன்றே

வெல்லுவது அறவழியே என்றே தேர்வோம்
வேறுவழி என்றென்றும் வென்ற தில்லை
நல்லதெலாம் வாழ்கவென்று வாழ்த்தி விட்டு
நம்கடமை தீர்ந்ததென்று உறங்கி விட்டால்
புல்லர்களே ஆதிக்கம் செலுத்த லாகும்
பொது வாழ்வு அந்நிலைக்குப் போகா வண்ணம்
நல்லவர்கள் பொதுவாழ்வில் ஈடு பட்டு
நாட்டுக்கு வழிகாட்டி வருதல் வேண்டும்.



'கந்தையிலே அழுக்கிருந்தா கசக்கி எடுத்து
விடு - வெள்ளையப்பா! உன்
சிந்தையிலே அழுக்கிருந்தா சிவனடியை
நாடிவிடு - வெள்ளையப்பா!
உயிரே அழுக்குத் துணி! உயர் மண்ணே
நம்பிறப்பு!
பூவுலக வாழ்க்கை எல்லாம் பொல்லாத
கல்லினிலே
மோதி அடிக்கையிலே முற்றும் கசக்கையிலே
ஆதிசிவன் என்றும் ஆற்றில்வரும்
வெள்ளத்திலே
அழுக்கெல்லாம் வெளுக்குதடா
வெள்ளையப்பா!
அவனருள் என்னும் நிழல்தனிலே - இந்த
உயிரெல்லாம் வாழுதடா! -
வெள்ளையப்பா!
பஞ்சிலே நூலை வைத்தான்
நூலிலே ஆடை வைத்தான்
ஆடையிலே மானம் வைத்தான்
மானத்திலே உயிரை வைத்தான்
பக்தருக்கு அருட்குறிப்பு
பாமரர்க்கு பொருட்குறிப்பு
சத்தியத்தின் ஒரு குறிப்பு வெள்ளையப்பா - அது
முக்திதரும் திருக்குறிப்பு வெள்ளையப்பா!'
(ஆற்று வெள்ளம்)

இப்படி சிவனடியார் பாடும் பாடலில் தத்துவ முத்துகளை எல்லாம் வழங்கியுள்ளார் பண்ணரசர் கண்ணதாசன்! அழுக்குத் துணிகளைத் துவைப்பதையே தம் தொழிலாகக் கொண்ட வண்ணான் - வண்ணாத்திகளின் உள்ளக் கருத்தைத் தெள்ளத் தெளிவாக விளக்கிய கவியரசர் இல்லற வாழ்வைத் துறந்து சிவனடித் தொண்டரான ஒருவர் தமது அழுக்குத் துணியைத் துவைக்கும் போது எப்படிப் பாடுவார் என்பதை அவர் நிலையிலிருந்து கூறியிருப்பது தான் பெரிதும் பாராட்டத்தக்கது.

(படம் : திருவருட்செல்வர்)



கடலின் ஒரு கரையிலிருந்து மற்றொரு கரைக்குப் பயணிகளைப் படகில் ஏற்றிப் பத்திரமாகச் சேர்க்கும் பொறுப்புமிக்கவன் படகோட்டி. அவன் தனது மனைவி, மக்களைக் காப்பாற்றுவதற்காகக் கடலில் படகை ஓட்டிப் பிழைக்கிறான். அதோடு கடலில் உள்ள மீனைப் பிடித்து கரைக்குக் கொண்டு வந்து விற்றுப் பணமாக்கித் தன் குடும்பத்தைக் காப்பாற்றுகிறான். நிலத்தில் காரோட்டிப் பிழைக்கும் டிரைவரைப்போல, வானில் விமானத்தைச் செலுத்தும் விமான ஓட்டியைப் போலக் கடலில் படகைச் செலுத்திப் பொருளீட்டும் படகோட்டியின் மனநிலையைத் தத்ரூபமாகக் காட்டியுள்ளார் கவிஞர் வாலி!

"தரைமேல் பிறக்க வைத்தான் - எங்களைத்
தண்ணீரில் பிழைக்க வைத்தான்
கரைமேல் இருக்க வைத்தான் -
பெண்களைக்
கண்ணீரில் குளிக்க வைத்தான்
கட்டிய மனைவி தொட்டில் பிள்ளை
உறவைக் கொடுப்பவர் அங்கே...
அலை கடல்மேலே அலையாய் அலைந்து
உயிரைக் கொடுப்பவர் இங்கே...
வெள்ளி நிலாவே விளக்காய் எரியும்
கடல்தான் எங்கள் வீடு
முடிந்தால் முடியும் தொடர்ந்தால் தொடரும்
இதுதான் எங்கள் வாழ்க்கை! (தரைமேல்)
கடல்நீர் நடுவே பயணம் போனால்
குடிநீர் தருபவர் யாரோ?
தனியாய் வந்தோர் துணிவைத் தவிர
துணையாய் வருபவர் யாரோ?
ஒருநாள் போவார் ஒருநாள் வருவார்
ஒவ்வொரு நாளும் துயரம்!
ஒருசாண் வயிறை வளர்ப்பவர் உயிரை
ஊரார் நினைப்பது சுலபம் (தரைமேல்)"

இந்தப் பாடலில் நிலத்தில் பிழைப்பவரைக் காட்டிலும் கடல்நீரில் பிழைப்பவரின் தொல்லைகளையெல்லாம் பாடுவோர் உள்ளம் நெகிழும் வண்ணம் சொல்லியுள்ளார் கவிஞர். 'கடல்நீர் நடுவே குடிநீர் தருபவர் யாரோ? தனியாய் வந்தோர் துணிவைத் தவிர, துணையாய் வருபவர் யாரோ?' என்று படகோட்டி கேட்கும் வினாக்களுக்கு என்ன விடைசொல்வது? இருட்டில் கடல் நீரைக் கடப்பது எவ்வளவு கடினம்? அப்போது வானத்து நிலாதான் ஒளி வழங்கி வழிகாட்டுகிறது.

'முடிந்தால் முடியும் தொடர்ந்தால் தொடரும்
இதுதான் எங்கள் வாழ்க்கை'

என்றெல்லாம் படகோட்டி பாடுவது நம் உள்ளத்தை உலுக்குகிறதல்லவா? இப்படிப் படகோட்டியைப் பாடச் செய்த கவிஞர் வாலியை எப்படிப் பாராட்டினாலும் தகும்!



மனித வாழ்வுக்கு இன்றியமையாத உணவுப் பொருள்களை உற்பத்தி செய்யும் விவசாயியையும், உடைகளின் அழுக்கை அகற்றும் அரும் பணி புரியும் வண்ணானையும், கடல் நீரைக் கடக்கவும், கடல் மீன்களைப் பிடித்து வழங்கவும் செய்யும் படகோட்டியையும் நம் கண்முன் படம் பிடித்துக் காட்டிய திரையிசைக் கவிஞர்கள் நிலத்தில் நாள்தோறும் தம் வித்தைகளை எல்லாம் காட்டிப் பொது மக்களிடமிருந்து பணத்தைப் பெறும் கழைக்கூத்தாடியின் நிலையையும் கூறத் தவறவில்லை.

இரு கம்புகளின் நடுவில் கட்டிய கயிற்றில் நடப்பது, ஏணியில் ஏறி ஏணியுடனே நடப்பது, ஓரடிக் கம்பிக்குள் நால்வர் நிற்பது போன்ற பற்பல அற்புதத் திறமைகளை எல்லாம் காட்டிக் காண்போர் மனதை நெகிழ் வித்துப் பின் அவர்கள் விரும்பிக் கொடுக்கும் காசுகளைப் பெற்றுத் தம் வயிற்றுப் பசியை நீக்கி வாழ்க்கை நடத்துவதே கழைக்கூத்தாடியின் நிலை. அவன் ஒருநாள் வித்தை காட்டாவிடினும் பட்டினிதான். அங்கு மிங்கும் ஓடி ஓடி உழைத்தால்தான் ஊதியம் ஈட்ட முடியும் என்பதை உணர்ந்து பாடுகிறான். இல்லை அப்படிக் கழைக்கூத்தாடியைப் பாட வைக்கிறார் கவிஞர் புலமைப்பித்தன்!

"ஓடி ஓடி உழைக்கணும்
ஊருக்கெல்லாம் கொடுக்கணும்
ஆடிப்பாடி நடக்கணும்
அன்பை நாளும் வளர்க்கணும் (ஓடி ஓடி)
வயித்துக்காக மனுஷன் இங்கே
கயித்திலாடுறான் பாரு! ஆடி முடிச்சி
இறங்கி வந்தா அப்புறம் தாண்டா சோறு!
நான் அன்போடு சொல்லறதக் கேட்டு
நீ அத்தனை திறமையும் காட்டு!
இந்த அம்மாவைப் பாரு அய்யாவைக் கேளு
ஆளுக்கொண்ணு கொடுப்பாங்க! (ஓடி ஓடி)
சோம்பேறியாக இருந்துவிட்டாக்கா
சோறு கிடைக்காது தம்பி!
சுறுசுறுப்பில்லாம தூங்கிக்கிட்டிருந்தா
துணியும் இருக்காது தம்பி! - இதை
அடுத்தவன் சொன்னா கசக்கும்
கொஞ்சம் அனுபவம் இருந்தா இனிக்கும்
இதுக்கு ஆதாரம் கேட்டா ஆயிரம் இருக்கு
அத்தனையும் சொல்லிப் போடு! (ஓடி ஓடி)
வலிமையுள்ளவன் வச்சதெல்லாம்
சட்டமாகாது தம்பி - பிறர்
வாழ உழைப்பவர் சொல்லுவதெல்லாம்
சட்டம் ஆகணும் தம்பி!
நல்ல சமத்துவம் வந்தாகணும்
அதிலே மகத்துவம் உண்டாகணும்
நாம பாடுற பாட்டும் ஆடுற கூத்தும்
படிப்பினைத் தந்தாகணும் - நாட்டுக்குப்
படிப்பினைத் தந்தாகணும்! (ஓடி ஓடி)

கழைக்கூத்தாடியின் வாழ்க்கை நிலையையும், சூழ்நிலையையும், மனநிலையையும் எடுத்துரைக்க எண்ணிய கவிஞர் அவன்வழி நாட்டு மக்களுக்கு அறிவுரை கூறுவதை மறக்கவில்லை. ஏனெனில் பற்பல வித்தைகளைக் காட்டுவதோடு அற்புதமான கருத்துகளைச் சொல்வதிலும் வல்லவன் அவன் என்பதை நிரூபிக்கிறார். கலைத்திறனைப் பார்ப்போர் பலராக இருக்கலாம்; அவனது சொல்லாற்றலையும் எடுத்துரைக்கும் உத்திகளையும் அறியவேண்டாமா? மேலும் அவர்களின் வித்தைகளைக் காண வந்த கூட்டத்தில் பல நல்ல கருத்துகளையும் சேர்த்துச் சொன்னால் அவர்கள் மனதில் பதியும் என்பதற்காகவும் கவிஞர் அன்பின் வலிமை, உழைப்பின் திறன், சுறுசுறுப்பின் பயன், பிறர் நலம் பேணல், சமத்துவ உணர்வு, நாட்டுப்பற்று முதலான நற்குணங்களை நாட்டு மக்கள் வளர்க்க வேண்டும். அதனால் தனிமனித மேம்பாடு வளர்வதோடு, நாட்டுப் பொருளாதார நிலையும், நாட்டு ஒற்றுமையும் ஓங்கும். இத்தனைக் கருத்துகளையும் கழைக் கூத்தாடி வாயிலாகச் சொன்ன கவிஞர் புலமைப்பித்தன் அவர்களைப் பெரிதும் பாராட்டவேண்டுமல்லவா?

படம் : நல்ல நேரம். பாடல் : கவிஞர் புலமைப்பித்தன்




தூய வாழ்க்கைக்குப் பறவை இனமே நற்சான்று. அதே போன்று மலர்கள் அரும்பியது முதல் வாடும் வரை பிறரை மகிழ்விக்கக்கூடிய குணமுடையது. மனதால் பிறரை ஈர்த்துத் தம்மை ஏற்கச் செய்யும் குணமுடையன மலர்கள். இறைவனின் திருமேனியில் தவழும் நற்பாக்கியம் பெற்றவையும் அவையே! பிறந்த நாள், மணநாள் என அனைத்து மங்கல விழாவிலும் இடம்பெறும் மலர் மாலைகள் மரண விழாவிலும் கலந்து கொள்ளத் தவறுவதில்லை. இறைவனடி சேர்ந்தவரை அலங்கரிப்பதும் மாலைகளே!

பூத்துக் குலுங்கித் தனித்தனியாக மலர்ந்திருக்கும் அந்த மலர்களைப் பறித்து அவற்றை நல்லதொரு நாரினால் தொடுத்து மாலையாகத் திருக்கோயில் வீதிகளிலும் பூக்கடைகளிலும் விற்பவர்களை நாள்தோறும் பார்க்கலாம். குறிப்பாகப் பூக்களைத் தொடுப்பதும், தொடுத்தவற்றை விற்பதிலும் பூவையரே மிகுதி. அப்படிப் பூவிற்கும் பூக்காரியின் பூக்கூடையில் என்னென்ன மலர்கள் இருக்கின்றன தெரியுமா? ரோஜா, முல்லை, மல்லிகை, சம்பங்கி, செவ்வந்தி, தஞ்சாவூர்க் கதம்பம். இவற்றை விற்கும் பெண்களுக்குள் போட்டி இருப்பது இயல்பே. மற்றவர்கள் மனதைக் கவரும் வகையில் ஒரு பூக்காரி முப்பது பைசாவுக்கு மூணு முழம் தருவதாக அங்குமிங்கும் ஓடி ஓடி பாடிக்கொண்டே பூ விற்கிறாள்.

"முப்பது பைசா மூணு முழம்
முல்லை மல்லிகை கனகாம்பரம்
இப்பத் தானுங்க மலர்ந்ததுங்க
நாரெடுத்து நானே தொடுத்ததுங்க!
ரோஜா முல்லை மல்லிகை சம்பங்கி
செவ்வந்தி தஞ்சாவூருக் கதம்பம்! (முப்பது)
வெள்ளிக் கிழமை விளக்கு வச்சா
வீட்டிலிருக்கும் பெண்டாட்டி
அள்ளி முடிக்க மல்லிகைப் பூவை வாங்கித்
தாய்யா கை நீட்டி
அவ அழகாயிருப்பா! உன்மேல் அன்பா
இருப்பா!
நீ சொன்னாக் கேட்பா! புன்னகைப்பூப்பா!
உன்னை அணைப்பா! (முப்பது)
இந்தா தம்பி செந்தாமரைப் பூவிருக்கிற
துட்டை நீபோடு!
நம் கண்ணா இருந்து நெஞ்சில் நிறைந்த
அண்ணா சிலைக்குப் பூப்போடு!
நீ வாசனைப் பூவா நல்லா வாழணும் தம்பி!
சில காகிதப் பூ கண்ணைப் பறிக்கும்
போகாதே தம்பி! (ரோஜா முல்லை)
வாடிக்கையாக நான் பூவிக்கும்போது
வேடிக்கையா நீ பார்க்காதே!
உன் பார்வை என்ன புரிஞ்சுக்கிட்டேன்டா
முக்கு முகரை ஜாக்கிரதை!
நான் பயப்பட மாட்டேன்டா
உனக்கு வசப்பட மாட்டேன்டா
கைபட்டா டாப்பு எகிறிப்போகும்
தொட்டுப் பாரேன்டா! (முப்பது)

படம் : பூக்காரி பாடல் : வாலி




ஒருவர் மனதை ஒருவர் அறிய உதவும் ஒப்பற்ற சாதனம் கடிதம். அதனை உரியவரிடம் கொண்டு சேர்க்கும் அரிய பணியைச் செய்பவர் தபால்காரர். எண்ணற்ற கடிதங்களைக் கையில் ஏந்திக் கொண்டு ஒரு சைக்கிளில் அங்குமிங்கும் சென்று, வீட்டிலுள்ளவர்களை வெளியில் வருவதற்காகவும் தனது வருகையை அறிவிப்பதற்காகவும் சைக்கிள் மணியை ஒலிப்பார் தபால்காரர்!

தபால்காரரின் வருகைக்காக நாள் தோறும் வாசற்படியில் காத்து நிற்கும் வேலை இல்லா இளைஞர்களைப் பார்க்கலாம். வேலை பார்க்கும் மகனிடமிருந்து பணம் எப்போது வரும் என ஏக்கத்துடன் எதிர்நோக்கும் வயது முதிர்ந்த பெற்றோரைப் பார்க்கலாம். கணவன் – மனைவி உறவையும், பெற்றோர் – பிள்ளைகள் உறவையும், உடன் பிறந்தோர் உறவையும், நண்பர்களின் நட்பையும், காதலர்களின் எண்ணங்களையும் எடுத்துரைக்கும் உறவுப் பாலமாக உதவுவது கடிதம். நாள்தோறும் கடிதம் பெறும் பல்திறத்தாரின் முகபாவம் அறிந்து கடிதத்தின் தரத்தை எடைபோடும் குறிப்பறிந்திருப்பவரும் தபால்காரர்தான்! கடிதம் சுகத்தையும் கொடுக்கலாம்; துக்கச் செய்தியையும் தரலாம். இறைவன் அருளால் அனைவரும் நலமாய் வாழ்க! என தபால்காரன் வாழ்த்திச் சொல்கிறானாம். இது கவியரசர் கண்ணதாசனின் சொல்லோவியம்!

"ஒருவர் மனதை ஒருவர் அறிய
உதவும் சேவை இது – வாழ்வை
இணைக்கும் பாலமிது!
தாயைப் பிரிந்த பிள்ளை என்றாலும்
உடன் பிறந்தோரின் பிரிவென்ற போதும்
பிரிவு துயரம் பேசிடும் கடிதம் (ஒருவர்)
காலமென்னும் தெய்வமகள்
கலங்க வைப்பாள் சிரிக்க வைப்பாள்
எந்தெந்த உறையில் என்னென்ன கதையோ
எந்தெந்த முகத்தில் என்னென்ன வருமோ
சுகமும் வரலாம் துன்பமும் வரலாம்
இறைவன் அருளால் நலமே வருக! (ஒருவர்)"

படம் : கௌரி கல்யாணம். பாடல் : கவிஞர் கண்ணதாசன்

கடிதங்களை உரியவர்களுடன் வழங்கும் தபால்காரனின் சேவையை உணர்ந்து பாடியுள்ளார் கவியரசர்.




வீடு தேடிப் பொருள்களை விற்பவர்களில் இன்றியமையாதவர் பால்காரன்! அவன் நாள்தோறும் அதிகாலையில் வீட்டிற்கு வந்து கதவைத் தட்டி பாலை வழங்குகிறான் எனில் நாள்தோறும் அவன் 2 இல் இருந்து 3 மணிக்குள் எழுந்திருக்க வேண்டும். மாட்டிலிருந்து பாலைக் கறந்து பின்னர் நுகர்வோர்க்கு வழங்குகிறான் பால்காரன்! இப்படிப் பாலை நாள் தோறும் வழங்கும் பால்காரன் பாடுகிறான் :

"வந்தேன்டா பால்காரன் - அடடா
பசுமாட்டைப் பத்திப் பாடப் போறேன் - புது
பாட்டுக் கட்டி ஆடப் போறேன் (வந்)
புல்லு கொடுத்தாப் பாலு கொடுக்கும்
ஒன்னால முடியாது தம்பி! - அட
பாதிப்புள்ள பொறக்குதப்பா
பசும்பாலத் தாய்ப்பாலா தம்பி! (வந்)
தன் ரத்தத்தில் ஒருபாதி பாலாகப் பிரிப்பது
பசுவோட வேலையப்பா!
அது பிரித்தாலும் பாலோடு
தண்ணீரைக் கலப்பது
மனிதனின் மூளையப்பா!
சாணம் விழுந்தா உரம்பாரு!
எருவை எரிச்சா திருநீறு!
உனக்கு என்ன வரலாறு?
உண்மை சொன்னா தகராறு!
நீ மாடுபோல ஒழைக்கலையே! - நீ
மனுஷனை ஏச்சுப் பொழைக்கிறியே! (வந்)
தனா தந்தனா தந்தனா தந்தநான...
அட மீன் செத்தா கருவாடு
நீ செத்தா வெறுங்கூடு
கண்ணதாசன் சொன்னாருங்க!
பசு இருந்தாலும் பாலாகும்,
செத்தாலும் தோலாகும்
நான் கண்டு சொன்னாருங்க!
அண்ணல் காந்தி குடிச்சதெல்லாம்
ஆயுள் வளர்க்கும் ஆட்டுப் பாலுங்க!
அண்ணாமலை நான் குடுப்பதெல்லாம்
அன்பு வளர்க்கும் மாட்டுப் பாலுங்க
அன்னை வாரிக் குடுத்தது தாய்ப்பாலு
என்னை வாழ வைத்தது தமிழ்ப்பாலு! (வந்)"

படம் : அண்ணாமலை. பாடல் : வைரமுத்து.

இப்படிப் பால் வழங்கும் பால்காரனைப் பாட வைத்தவர் கவிஞர் வைரமுத்து!

சுத்தமான பாலைப் பசு தந்தாலும் அதில் தண்ணீரைக் கலக்கும் புத்தி மனிதனுக்கு இருக்கிறது என்று அந்தப் பால்காரன் வாயிலாகக் கூறுவது சிறப்புடைத்து. ஐந்தறிவினமாகிய பசுகூடப் பாலை சுத்தமாகக் கலப்பில்லாமல் தருகிறது. ஆனால் ஆறறிவு படைத்த மனிதன் மட்டும் அந்தப் பாலில் நீரைக் கலக்கும் கொடுமையைச் செய்கிறான். அதனைத் தவிர்த்துக் கறந்த பாலை அப்படியே நீர்க் கலப்பு இல்லாமல் நுகர்வோர்க்கு வழங்க வேண்டும் என்பதைப் பால்காரன் வாயிலாகக் கவிஞர் வைரமுத்து குறிப்பிடுவது இன்றைக்குப் பால் வழங்கும் அனைத்துப் பால்காரர்களுக்கும் நல்லதோர் அறிவுரை என்றே கூறவேண்டும்.

மாடு இருந்தாலும் இறந்தாலும் மற்றவர்களுக்குப் பயனுடையதாய் இருக்கிறது. ஆனால் மனிதன் மட்டும் வாழும் போதே பிறருக்குதவி வரலாறு படைக்காமல் இருக்கிறான். மாடுபோல மனிதன் ஏன் உழைக்க முன்வராமல் இருக்கிறான்? எதற்காக மற்றவர்களை ஏமாற்றிப் பிழைக்கிறான்? இப்படிச் சிந்தனையைத் தூண்டும் வினாக்களைப் பால்காரன் பாட்டு மூலம் எழுப்புகிறார் கவிஞர் வைரமுத்து! பால்காரன் மூலமாகப் பல நல்ல கருத்துகளை நெஞ்சைத் தொடும் வண்ணம் சொன்ன கவிஞரை நம் ஒரு நாவால் பாராட்டவும் முடியுமோ?

இப்படிப் படப் பாடல்கள் காட்டும் பாட்டாளிகளை அடுக்கிக் கொண்டே செல்லலாம். படப் பாடல்கள் மூலம் பாட்டாளிகளைப் பாட வைத்த பாவலர்கள் இன்னும் பலர் உள்ளனர். ஆயிரக்கணக்கான படப் பாடல்களில் பாட்டாளிகளை இனம் காட்டும் இந்தப் பாடல்கள் பன்முறை பாடி மகிழத் தக்கவை! பலமுறைச் சிந்தித்து வாழ்வில் பின்பற்றத்தக்கவை! உழைப்பின் உன்னதத்தையும், உழைப்போரின் உற்ற திறனையும், உள்ளக் கருத்துகளையும் பலரறிய எடுத்துரைப்பவை!

°°°



ஸ்ரீ வைத்தீஸ்வர சுவாமி ஸ்ரீ தையல் நாயகி சந்நிதிகளின் தோற்றம்

# வைத்தீசுவரன் கோயில் வைத்தியநாதர்

தாமரைக் கண்ணன்

## இருப்பிடம்

மண் வளமும் மனவளமும் கொழிக்கும் தஞ்சை மாவட்டத்தில் சீர்காழிக்குத் தெற்கே ஆறு கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ளது, வைத்தீசுவரன் கோயில். விழுப்புரத்தில் இருந்து மயிலாடுதுறைக்குச் செல்லும் ரயில் பாதையில், 'வைத்தீசுவரன் கோயில்' ரயில் நிலையம் உள்ளது. இறங்கி இரண்டு பர்லாங் தூரம் நடந்தால் கோயிலை அடையலாம்.

சீர்காழியிலிருந்தும் மயிலாடுதுறையிலிருந்தும் நகரப் பேருந்துகள் இவ்வூருக்கு நிரம்பச் செல்கின்றன.

## வைத்தீசுவரன் கோயில் பெயர்க் காரணம்

இவ்வூர் 1400 ஆண்டுகளுக்கு முன்பு, 'புள்ளிருக்கு வேளூர்' என்று அழைக்கப் பெற்றது. திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் தம் பதிகங்களில் 'புள்ளிருக்கு வேளூர்' என்றே பாடியுள்ளனர்.

புள் - பறவை; வேள் - அரசன். பறவைகளுக்கு அரசன். ஆற்றல் மிக்க சம்பாதி, சடாயு எனும் இரு பறவைகளுள் தலைவனாக விளங்கியது, சடாயு. சடாயு (புள்) இவ்வூர் இறைவனை நாள்தோறும் வழிபட்டு இங்கே தங்கியிருந்ததால், 'புள் இருக்கும் வேளூர்' என்ற பெயர் ஊருக்கு வந்தது.

வைத்தீசுவரன் கோயில் என்ற பெயர் வந்த பிறகு 'தலபுராணம்' வேறொரு செய்தியைக் கூறுகிறது.

இறைவி தையல் நாயகி, இவ்வூருக்குத் தைலபாத்திரம், சஞ்சீவி மூலிகை, வில்வமரத்தடி மண் மூன்றையும் எடுத்துக் கொண்டு வந்த போது, சுவாமி வைத்தியநாதராக வந்து இங்கிருந்த வேப்பமரத்தடியில் தங்கினார்; சடாயு (புள்), வேதம் (இருக்கு), முருகன் (வேள்) ஆகிய மூவரும் இறைவனைப் போற்றி வணங்கினர்; அதனால் இது 'வைத்தீசுவரன் கோயில்' எனப் பெறுகிறது என்கிறது, தலபுராணம்.

சுவாமியின் பெயரே ஊருக்கும் வழங்கும் வழக்கப்படி இது 'வைத்தீசுவரன் கோயில்' எனப்பெற்றது.

இங்குள்ள இறைவனை சடாயு வணங்கியதால் சடாயுபுரி என்றும், இருக்கு வேதம் வணங்கியதால் வேதபுரி என்றும், முருகன் வணங்கியதால் கந்தபுரி என்றும், சூரியன் வணங்கியதால் பரிதிபுரி என்றும், செவ்வாய் வணங்கியதால் அங்காரகபுரம் என்றும், அம்பிகை வணங்கியதால் அம்பிகாபுரம் என்றும் இவ்வூருக்குப் பல பெயர்கள் உண்டு என்பர்.

## கோயில்

இக் கோயில் காவிரியின் வட கரையில் உள்ள கோயில்களில் பதினாறாவது ஆகும். மேற்கே நோக்கிய கோயில். உயர்ந்த மதிற்சுவர்களோடு


பிரசார மண்டபம்

கூடிய இரண்டு திருச்சுற்றுகள்; கிழக்கிலும் மேற்கிலும் மிகப்பெரிய இராஜ • கோபுரங்கள் செம்மாந்து நிற்கின்றன.

கிழக்கே வைரவக் கடவுளும், மேற்கே வீரபத்திரரும், வடக்கே கொற்றவையும், தெற்கே கற்பக விநாயகரும் வீற்றிருந்து இக் கோயிலைக் காக்கின்றனர் என்பதை,

'தெற்கில் கணேசன் திகழ்மேற்கில்
வைரவனார்
நோக்க வடக்கில் நொடர்காளி -
மிக்க கிழக்கு
உள்ளிருக்கும் வீரனையும் உற்றுப்பணிந்
துய்ந்நோம்
புள்ளிருக்கும் வேளூரில் போய்'

எனும் பாடல் விளக்குகிறது.

இறைவனுக்கு புள்ளிருக்கு வேளூ ரான், வைத்தியநாதன், வினைதீர்த் தான் ஆகிய திருப்பெயர்கள் உண்டு. இவ் இறைவனை வணங்கினால் நம் வினை (பாவம்) மறையும் என்கிறார், திருநாவுக்கரசர்.

'குற்றம் இல்லியைக் கோலச் சிலையினால்
செற்றவர்புரஞ் செந்தழலாக்கியைப்
புற்ற ரவனைப் புள்ளிருக்கு வேளூர்
பற்ற வல்லவர் பாவம் மறையுமே'

என்பது அவர் பதிகம்.

புள்ளிருக்கு வேளூரானைப் போற் றாத நாள் வீண் நாளே என்றும் கூறுகிறார்.

'பேராயிரம் பரவி வானோர் ஏத்தும்
பெம்மானைப் பிரிவிலா அடியார்க்கு
என்றும்
வாராத செல்வம் வருவிப் பானை
மந்திரமும் தந்திரமும் மருந்து மாகித்
தீராநோய் தீர்த்தருள வல்லான் தன்னைத்
திரிபுரங்கள் தீயெழத்தின் சிலைகைக்
கொண்ட
போரானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கினேனே'.

## அன்னை தையல்நாயகி

இறைவியின் திருப்பெயர் தையல் நாயகி. ஆம்... உலகில் உள்ள அழ கிய பெண்களுக்கெல்லாம் தலைவி இவள். இவள் திருக்கோயில் தெற்கு நோக்கி அமைந்துள்ளது.

## செல்வ முத்துக்குமாரசாமி கோயில்

திருக்குமரன், இங்கே செல்வ முத்துக்குமார சுவாமி எனும் பெய ருடன் எழுந்தருளியுள்ளான்.

இங்குள்ள புள்ளிருக்கு வேளூரான் மக்களின் பிறவி நோயைத் தீர்ப்


கோபுர வாசல்



பிராகாரத்தில் ஒரு தோற்றம்

பவன்; இறைவி தையல்நாயகி மக்களின் மனநோயைப் போக்குபவள்; முத்துக்குமார சாமியோ கலிநோயை நீக்கும் அருளுடையவன்!

முருகன் மீது, குமரகுருபர சுவாமிகள், 'முத்துக் குமாரசாமி பிள்ளைத் தமிழ்' எனும் நூலைப் பாடியுள்ளார். அருணகிரிநாதர் பதினான்கு திருப்புகழ்களில் ஏற்றிப் போற்றியுள்ளார்.

பச்சைக் கர்ப்பூரம், குங்குமப்பூ இரண்டையும் சம எடையில் எடுத்து சந்தனத்துடன் கலந்து அரைத்து முத்துக்குமாரசாமிக்கு நடுயாமத்துப் பூசையில் சாத்துகின்றனர். இது நேத்திரப்படி சந்தனம் எனப் பெறுகிறது. இதனை அணிந்து கொண்டால் நினைத்தது நடக்கும். உள்ளுக்கு உண்டால் குன்மம் போன்ற நோய்கள் நீங்கும்.

கார்த்திகை தோறும் முருகனுக்குச் சிறப்பான அபிடேக ஆராதனைகள் உண்டு. மக்கள் திரளாக வந்து வழிபடுகின்றனர்.

## சடாயு குண்டம்

கோயிலின் தெற்குத் திருச்சுற்றில் சடாயு குண்டம் உள்ளது. இராமன், சடாயுவை இங்கு தகனம் செய்ததாகக் கூறப்படுகிறது. இக் குண்டத்தில் உள்ள சாம்பல் எப்போதும் குறைவதில்லை. இச் சாம்பலை நெற்றியில் இட்டுக் கொண்டால் தோல் தொடர்பான நோய்கள் நீங்குகின்றன.

## திருச்சாந்து உருண்டை

சுக்கிலபட்சத்தின் நல்ல நாளில் அங்கசந்தளனத் திருக்குளத்தில் நீராடி, குளத்து மண்ணைப் புதுப் பாத்திரத்தில் எடுத்து வந்து, அத்துடன் சடாயு குண்டத்துத் திருநீற்றைச் சேர்த்து, சித்தாமிர்த குளத்தின் தண்ணீரில் பிசைந்து, குமரவேள் கோயிலில் உள்ள குழியம்மியில் இட்டு ஐந்தெழுத்து மந்திரத்தை ஆயிரத்து எட்டு முறை சொல்லிக்கொண்டே அரைத்து எடுத்துக் கடுகளவு உள்ள சிறுசிறு உருண்டையாகச் செய்து



புஷ்கரணி

காயவைத்துத் தையல்நாயகியின் திருவடிகளில் வைத்துப் பூஜித்து, பின் அவ் உருண்டைகளை உண்டால் தீராத நோய்கள் தீரும்.

### சித்தாமிர்த தீர்த்தம்

சித்தாமிர்த திருக்குளம், தையல் நாயகி கோயிலுக்கு எதிரில் உள்ளது. இதுவே இக் கோயிலின் புண்ணிய திருக்குளம். சித்தர் கணங்கள் தேவாமிர்தத்தால் இறைவனுக்குத் திருமுழுக்காட்டியபோது, தேவாமிர்தம் இக் குளத்தில் கலந்ததால் இப்பெயர் வந்தது.

இக் குளத்தில் பாம்புகளோ, தவளைகளோ எந்நாளும் இருப்பதில்லை என்பது தனிச்சிறப்பு.

### தனிச் சிறப்புகள்

இக் கோயிலின் தலத்தரு, வேப்பமரம். இது கோளிலித் தலங்களுள் ஒன்று. செவ்வாய் தோஷம் உடையவர்கள் இத் தலத்தை வணங்குதல் நல்லது. இது எமவாதனையை நீக்கும் இடம் ஆதலால், பேய், பிசாசு, பில்லி சூனியம் பிடித்தவர்கள் இவ் இறைவனை வணங்கி நற்பேறு பெறலாம்.

### வரலாற்றுக் குறிப்புகள்

அச்சுதப்ப நாயகர் ஆட்சிக் காலத்தில் கி.பி. 1583 இல் திருவாலிப்பற்று, மணிபள்ளம் போன்ற ஊர்களிலிருந்து வந்த வரிகள் கோயிலுக்குக் கொடையாகக் கொடுக்கப்பெற்றன. இச் செய்தி, கிழக்குக் கோபுரம் உட்பக்கத்தில் பொறிக்கப்பட்டுள்ளது.

திருக்குளத்தின் இடப்பக்கம் உள்ள கல்வெட்டு, கி.பி. 1767 இல் (சர்வசித்தி ஆண்டு ஆவணித் திங்கள்) இரண்டாவது திருச்சுற்று மதிற்சுவர், திருமாளிகைப் பட்டி, அம்மன் கோயில் மண்டபம், தட்டிச் சுற்றி மண்டபம் ஆகியவற்றைத் திருப்பணி செய்து புதுப்பித்ததைத் தெரிவிக்கிறது.

### தருமபுர ஆதீனத்தின் திருப்பணிகள்

தற்போது இத் திருக்கோயில் தருமபுர ஆதீனத்தின் கீழ் சிறப்புறத் திகழ்கிறது.

கி.பி. 1770 இல் தருமபுர ஆதீனம் திருப்பெருந்திரு முத்துக் குமாரசாமித் தம்பிரான் அவர்கள், நாச்சியார் சிலையை எடுப்பித்துள்ளார்கள். திருக்குளம், மண்டபம் ஆகியவற்றுக்குத் திருப்பணி செய்தார்கள். சீகாழிச் சீர்மையைக் காடவராயர் ஆண்டபோது இத் திருப்பணிகள் நடைபெற்றன.

இச் செய்தியிலிருந்து ஏறத்தாழ 300 ஆண்டுகளாகத் தருமபுர ஆதீனத்தின் சிறந்த மேற்பார்வையில் இக் கோயில் இயங்கி வருவதை அறியலாம்.

ஃ

## இருக்கிறேன் பாட்டி

அடியார்க்குநல்லான்



அந்தநாள் பள்ளிக் கூடம்
அழுகின்ற சிறுவன் என்னை
தந்திர மாகப் பேசி
தவறாது கூட்டிச் சென்ற
எந்தையின் தாயே பாட்டி
எங்குநீ சென்றாய் உந்தன்
சிந்தனை நெஞ்சில் மோத
சிறியவன் அழுகின் றேனே!

பூசனைப் புரிவாய்; நிற்பேன்
பொரிஅவல் வெல்லம் தருவாய்!
நேசமாய் முருகன் பாடல்
நித்தமும் சொல்லித் தருவாய்!
பாசமாய் இரவில் நீதான்
பாரதக் கதைகள் சொல்வாய்!
வாசமே வாஞ்சைக் குன்றே!
வாடிய பயிராய் ஆனேன்!

பெரியவர் அப்பா, ஊரில்
பெரியநம் வீடு வாசல்
உரியவர் வருவார், நீயும்
வரித்தான் தருவாய்; நானும்
அரியநல் தருமம் செய்த
ஆச்சிநீ எங்கே சென்றாய்?

கரிமுகக் காலன் உன்னைக்
கவர்ந்தது விதியின் குற்றம்!

வாழ்ந்தது கொஞ்சம் அல்ல
விதிமுறை மாறிச் சொத்து
வீழ்ந்தது கொஞ்சம் அல்ல
வீண்பழி செய்து சுற்றம்
சூழ்ந்தது கொஞ்சம் அல்ல
சூழினும் நெறியில் நாங்கள்
தாழ்ந்தது இல்லை பாட்டி
தருமத்தை வெல்வார் உண்டோ?

சாத்திரம் பலவும் கற்றேன்
சபையினில் ஏற்றம் பெற்றேன்
தோத்திரம் செய்தேன், காளி
துணையருள் நிரம்பப் பெற்றேன்
பூத்திடும் கவிதை, அதனால்
புகழையும் பெற்றேன், அன்பாய்
காத்தநீ எங்கே பாட்டி
கவர்ந்த அக்காலன் மாய்க!

தேருண்டு தெப்பம் உண்டு
திருவிழா மாதம் உண்டு
நீருண்ட மேகம் மோதும்
நெடியகோ புரங்கள் உண்டு
சீருண்டு தமிழில் நாளும்
சிந்துகள் சிந்தும் முற்றம்
நேருண்டு? நீதான் இல்லை
நினைவுகள் திதியா பாட்டி?

சொத்துகள் கெட்டுப் போகும்
சொந்தங்கள் விட்டுப் போகும்
வித்திட்ட அப்பா அம்மா
விதிவர போவார், காதல்
பித்திட்ட மனையாள் கூடப்
பிழையாக போகக் கூடும்
செத்திட்ட நீயோ நெஞ்சில்
சிரஞ்சீவி ஆனாய் பாட்டி.

# திருவருள் மடல்கள்

தமிழகத்துத் திருமடங்கள் ஞானக் களஞ்சியங்கள். திருக்கோயில்களை நிர்வகித்து, கடவுளுணர்வும், கலையுணர்வும் பெருகக் காலங்காலமாகத் தொண்டாற்றி வரும் திருவருட் கருவூலங்கள். தமிழ் மொழியைச் செழிக்கச் செய்யும் அறநூல்களும், அருள் நூல்களும் உருவாகச் செந்தண்மை பூண்ட அருட்செல்வர்களைப் பெற்ற ஆன்மிகத் தமிழ்ப் பண்ணைகள் வாழ்வாங்கு வாழ வழி உணர்த்தவென்றே வகுத்த அறத் திருக்கூடங்கள்.

இத்தகைய திருமடங்களில் - தெய்வ நலம் சிறக்கவும், உய்யும் வழி உணர்த்தவும் அருளாட்சி செய்து வருகின்ற அருள்ஞானச் செல்வர்களை, 'அமுதசுரபி' தீபாவளி மலருக்கென 'அரிய அருளுரைகள்' வழங்க வேண்டுமென, அன்போடும் பணிவோடும் கேட்டுக் கொண்டோம்.

அதென்ன 'அரிய அருளுரைகள்'?

செந்தமிழ் நாட்டுத் திருமடங்கள் அனைத்தும் வந்தனைக்குரிய வரலாற்றுச் சிறப்புமிக்க அருள் நூல்கள் சிலவற்றைத் தங்கள் திருமடத்திற்கே உரிய திருவருட் சொத்துகளாகக் கொண்டுள்ளன. அத்தகைய தமிழ் நூல்களிலிருந்து அவரவரும் ஏதாகிலும் ஒரு கருத்தை நல்கி, நலமளித்துத் திருவருள் பாலிக்க 'வேண்டியிருந்தோம். அருள் ஞானச் செல்வர்கள், தங்கள் திருமடத்தின் வரலாற்றுக்குப் பொலிவூட்டும் திருநூல்களிலிருந்து, கருத்துரைகளைக் கனிவூட்டும் அருளுரைகளாக வழங்கியுள்ளார்கள். திருமடத்திற்கு உரிய உறவுடன் கூடிய நூல்களிலிருந்து நல்வழி காட்டும் நன்னெறிகளைத் தெரியச் செய்திருப்பதால், 'அரிய அருளுரை', என இதனை அழைக்கலாந்தானே? அருளாளர்களின் திருவருட் சிந்தனையாக அருளுரைகள் மலர்ந்து மணம் அளிப்பதால் அவை, 'திருவருள் மடல்கள்' எனப் போற்றப் பெறுகின்றன.

'திருவருள் மடல்கள்' உருவாக்கும் பொறுப்பை ஆசிரியர் கலைமாமணி விக்கிரமன், மிகுந்த நம்பிக்கையுடன் அடியேனிடம் வழங்கினார்கள். ஆசிரியரின் நம்பிக்கைக்குப் பாத்திரனாகும் முயற்சியில் வெற்றி பெற்றுள்ளதாகவே கருதுகிறேன்.

அருட்செல்வர்களின் அரிய அருளுரைகளை ஒருசேரக் காணும் அற்புதமாக 'திருவருள் மடல்' மாட்சி பெற்றுக் காட்சி அளிக்கிறது!

— குன்றக்குடி
பெரியபெருமாள்

## உடம்பினை விளக்கி உறுபொருள் காண்க

சீர்வளர் சீர்
சிவப்பிரகாசப் பண்டாரச் சந்நிதி சுவாமிகள்
திருவாவடுதுறை ஆதீனம்

"எல்லாம், இந்த உடம்பு என்ற ஒன்று இருக்கிறதே, என்ன செய்வது? எப்படியாவது அதற்கு இரை போட வேண்டுமே. அதற்காகவே இத்தனை பாடுபட வேண்டியிருக்கிறது!"

சலித்துப்போன மனத்தோடு இப்படிப் பலர் பேசக் கேட்கிறோம். உண்மைதான். உடம்பு இருப்பதும் உண்மை.



அதற்கு இரை போட வேண்டுவதும் உண்மை. "மக்கள் யாக்கை உணவின் பிண்டம்" என்று பழைய தமிழ் நூலும் சொல்லுகிறது.

இருந்தாலும், உண்ணுவதற்காகத் தான் உடம்பா? இதனையும் எண்ணிப் பார்க்க வேண்டாமா?

'முன்பெல்லாம் இந்த உடம்பினைப் 'பொல்லாப்புலால்' எனவும் 'பண்டம் பெய் கூரை' எனவும் இப்படிப் பலவாறாகப் பழித்தும் இழித்தும் வந்தேன். ஆனால் அதற்கும் மேலான உண்மை ஒன்றினை இப்போது உணர்ந்து கொண்டேன். அது என்ன தெரியுமா? உத்தமன் அத்தன் ஆகிய நம் உடையவன் தனக்கு ஒரு சிறந்த கோயிலாகக் கொண்டது இவ்வுடம்பு. இத்தகைய நடமாடும் திருக்கோயிலாகிய உடம்பினை இதுவரை இழுக்கு என எண்ணிப் பேணிக் கொள்ளாது விட்டேனே!

'இப்போது இந்த உடம்பின் சிறப்பினை, உண்மைச் சிறப்பினை உணர்ந்து கொண்டேன். எம் தலைவனாகிய சிவபெருமான் எழுந்தருளியிருந்து எனக்கு அருளி நிற்கும் இடமான உடம்பாகிய இத்திருக் கோயிலை எவ்வகையாலும் கேடுபடாமல் பாதுகாப்பதன்றே இனி யான் செய்யக் கடவது! அதனை இங்குச் செய்து வருகின்றேன்.'

"உடம்பினை முன்னம் இழுக்கு என்று
இருந்தேன்;
உடம்பினுக்கு உள்ளே உறுபொருள்
கண்டேன்;
உடம்புளே உத்தமன் கோயில்
கொண்டான் என்று,
உடம்பினை யான் இருந்து ஓம்பு
கின்றேன்".

(திருமந்திரம் 725)

தம் அநுபவத்தில் உணர்ந்து உணர்த்திய இத்திருமூலர் தமிழை ஒவ்வொருவரும் சிந்தையில் கொள்ள வேண்டும். "காயமே கோயிலாக" என்ற அப்பர் பெருமான் திருவாக்கும் இங்கும் நினைக்கத்தகும். இதுவே நாம் உடம்பைக் காண்பதில் சிறந்த பார்வையாகும்.

உடம்பிறுக்கு உள்ளே உறு பொருளைக் காணல்வேண்டும். அதற்கு முதலாவதாக அந்த உத்தமன் கோயி லாகிய அரிதாகப் பெற்ற உடம்பினை அவனுக்கு நடமாடும் திருக்கோயில் என்று உணர்ந்து மனிதனின் உணவு உடை நடைமுறைகள் முதலியவற்றால் பேணி பழுதுபடாமல் பாதுகாக்க வேண்டும். ஆக்கமுறச் செய்ய வேண்டும்.

"உள்ளம் பெருங்கோயில், ஊன்
உடம்பு ஆலயம்,
வள்ளல்பிரானுக்கு வாய் கோபுர
வாசல்,
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன்
சிவலிங்கம்,
கள்ளப் புலன் ஐந்தும் காளா மணி
விளக்கே"

(திருமந்திரம் 1823)

என்ற உயர்ந்த பார்வையில் ஒவ் வொருவரும் அவரவர் உடம்பைக் காண வேண்டும். அவ்வாறு காணும்போது இன்றைய வாழ்க்கையில் உணவும் நடைமுறையும் ஒழுங்காகும். மனித வாழ்க்கையும் மாண்புடைய வாழ்க்கை யாகும்.

## உளனாய எந்தை

ஸ்ரீஸ்ரீ ஜீயர் சுவாமிகள்
திருக்குறுங்குடி திரு
ஜீயர்மடம்

உளனாக வேயெண்ணித் தன்னை
யொன்றாகத் தன்செல்வத்தை
வளனாக மதிக்கும் இம்மானிடத்தைக்
கவிபாடி யென்,
குளனார் கழனிசூழ் கண்ணன்
குறுங்குடி மெய்ம்மையே
உளனாய எந்தையை எந்தைபெம்
மானை ஒழியவே?

— ஸ்ரீ நம்மாழ்வார்

பகவான் ஸ்ரீமந் நாராயணன் ஸகல கல்யாண குணங்களும் ஸௌலப்ய ஸௌசீல்ய வீர்ய தீர்ய பராக்ரமமுடைய வன். அது போலே, ஸ்ரீநம்பி என்றாலும் மேலே சொல்லப்பட்ட சகல குணங் களையும் உடையவன் என்றே கருது கிறது ஸ்ரீவைஷ்ணவ சமயம்.

பகவான் ஸ்ரீவைகுண்டத்தில் நித்திய சூரிகளுடன் இருக்கிற இருப்பைக்



காட்டிலும், இந்த மண்ணுலகில் மனி தர்கள் நடுவே இருப்பதைச் சந்தோஷ மாகத் திருவுள்ளம் கொள்கிறான்.

மனிதர்கள் நடுவே - இராம, கிருஷ்ணாத்யவதாரங்கள் பண்ணி லீலைகள் செய்தும் பக்தர்களுக்கு நல்லறிவு கொடுத்தும் உஜ்ஜீவிக்க செய்ய எண்ணியே, தான் உகந்த புண்ணிய நிலங்களான- திருக் குறுங்குடி, ஸ்ரீரங்கம், திருமலை, காஞ்சிபுரம் முதலான திவ்ய தேசங் களில் நித்திய வாசமாய், அர்ச்சவ தாரத்தோடு எழுந்தருளி இருக்கிறான். ஸ்ரீமத் பாகவதத்தில் ஸ்ரீசுகப்ருஹமரிஷி அருளியிருக்கிறபடி - நாராயணனை கவிபாடித் தோத்திரம் செய்யக்கூடிய நாராயண பக்தர்களாக ஆழ்வார்கள் ஆசாரியர்கள் அவதரிக்கப் போகி றார்கள் என்று முன்னமேயே திருவாய் மலர்ந்தருளியுள்ளார்.

திருக்குறுங்குடி ஸ்ரீநம்பிதான் ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்துக்கே முதன்மையானவர்! ஸ்ரீநம்பியே நம்மாழ் வாராக அவதரித்து 'திருவிருத்தம்' 'திருவாசிரியம்' 'பெரிய திருவந்தாதி' 'திருவாய்மொழி' என்ற நான்கு திவ்ய ப்ரபந்தங்களை அருளிச் செய்தான்.

திருமங்கையாழ்வார் ஸ்ரீரங்கத்தில் அரங்கனுக்கு அநேக திருப்பணிகள் செய்தும் "வீடு" வேண்டும், என்று அரங்கனிடம் கேட்டதில் "நம் தெற்கு வீட்டுக்குப் போகவும்" என அருளிச் செய்ய, அதன்படி தெற்கு வீடான திருக்குறுங்குடி வந்து ஸ்ரீநம்பிக்கு திருப்பணிகள் செய்து 'வீடு' பெற்றார் என்பது ப்ரஸித்தம்.

இவ்வளவு மேன்மையான திருக் குறுங்குடி நம்பியை ஸ்ரீநம்மாழ்வார் "உளனாகவே எண்ணி" எனத் தொடங் கும் பாசுரத்தில் சிறப்பித்துப் போற்றி யுள்ளார்.

'தம்மையும், தம் செல்வங்களையுமே நம்பிக்கிடக்கும் மானுடத்தை நான் பாடேன்' எனத் திருவாக்கருளிய ஸ்ரீநம்மாழ்வார், குறுங்குடி மேவியுள்ள மெய்ம்மையை, எந்தை பெருமானையே பாடுவேன் என அருளியுள்ளார்.,

குறுங்குடியைக் 'கண்ணன் குறுங் குடி' என்று, திருக்குறுங்குடியின் மகிமையைச் சகலரும் அறியச் சொன்னதே.

என்றென்றும் 'உளனாய' மெய்ம்மை ஸ்ரீநம்மாழ்வார் போற்றிப் பரவும் தந்தை யாகவும், பெம்மானாகவும் காட்சி யளிக்கிறார்.

குற்ற குணங்களையுடைய மானுடர் களை பாடுவதில், போற்றுவதில் பயன் என்ன? பயன் ஒன்றுமில்லை என அருளியுள்ளார் ஸ்ரீ நம்மாழ்வார். நற்றம் உடைய நாயகரை ஸ்ரீ நம்பியைப் பாடுவேன் என்கிறார்.

நாமும் ஸ்ரீ நம்பியையே போற்றி அர்ச்சித்து புகழுக்குரிய ஸ்ரீபாதம் பெற்று நாடும் 'வீடு' பெறுவோம்.

## உனக்குப் பணிசெய்ய எனக்கு வரம் அருள்க

ஸ்ரீலஸ்ரீ சண்முக
தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்
தருமை ஆதீனம்

பரம்பொருளைப் போற்றி வழி படவும், நினைக்கவும், அவனருளே நமக்குத் துணைசெய்ய வேண்டும்.

இதுபற்றியே மணிவாசகர், "அவனருளாலே அவன்தாள் வணங்கி" என்று அருளிச் செய்தார். நம்பியாண்டார் நம்பிகளும், "என்னை நினைந்து அடிமைகொண்டு என் இடர்க் கெடுத்துத் தன்னை நினையத் தருகின்றான்" என்கின்றார். அவனருளால்தான், நாம் இன்று மனிதர்களாக உயர்ந்துள்ளோம் என்பதை உணர்ந்தால் அவனருள் நமக்கும் இருக்கிறது என்பதை உணரலாம். உணர்ந்தால் இறைவனுக்குப் பணி செய்தலும், வாழ்த்தலும், நினைத்தலும் செய்யலாம். இதுவே தவமாகும். இத்தவத்தை நாம் நாளும் செய்து வந்தால் முடிவாக உள்ள ஞானம் நமக்குக் கிடைக்கும். இந்த ஞானம் வந்தால் நமக்கேன் கவலை? துன்பம்! இவற்றையெல்லாம் உணர்ந்த அனுபவஞானி ஸ்ரீகுருஞானசம்பந்தர், ஆக்கவும், காக்கவும், நீக்கவும் வல்ல சொக்கநாதப் பெருமானைப் பார்த்து ஒரு வரம் கேட்கிறார். அதுதான் "உனக்குப் பணி செய்யவும் உன்னை எந்நாளும் நினைக்கவும்" வேண்டிய வரம். பணி செய்யவும், நினைக்கவும் வரம் வேண்டினாலும் இனம் பற்றி வாழ்த்தலையும் வேண்டினார் என்றே கொள்ள வேண்டும். எந்நாளும் நினைக்க என்று மனத்திற்கு வேண்டியபோதிலும், எந்நாளும் என்ற சொல்லை இடைநிலைத் தீவகமாகக்கொண்டு மனம், வாக்கு, காயம் என்னும் முக்கரணங்களுடனும் சேர்த்து எந்நாளும் பணி செய்யவும், எந்நாளும் நினைக்கவும், எந்நாளும் வாழ்த்தவும் வரம் வேண்டுவதாகவே கொள்ளவேண்டும்.

எனவே ஆக்கவும் நீக்கவும் காக்கவும் வல்லமையுள்ள நின்மலனை (நின்மலன் - மலமற்றவன், அதாவது அழுக்கில்லாதவன்) தென்மதுரை மேவித் திருந்திய செங்கோல் செலுத்தும் செந்தமிழ்ச் சொக்கநாதனைச் சரணடைந்து, அவனை மனத்தால் நினைத்தும், வாக்கால் வாழ்த்தியும், உடலால் (காயத்தால்) வணங்கியும் எந்நாளும் வழிபட்டால் துன்பம் என்பதே நம் அகராதியில் இடம் பெறாது. "காலை எழுந்து தொழுவார் தங்கள் கவலை களைவாய் கறைக் கண்டா" என்று அருளிச் செய்கிறார் சுந்தரர். இதனை, எதிர்மறை முகத்தால் "தனக்குவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க் கல்லால், மனக்கவலை மாற்றல் அரிது" என்றார் வள்ளுவரும்.



இத்தகைய அற உபதேசத்தைச் செய்த ஸ்ரீ குருஞானசம்பந்தர்தான் தருமபுர ஆதீனத் திருமடத்தை நானூறு ஆண்டுகட்கு முன் தமிழகத்தில் நிறுவி ஞானப்பயிர் வளர்த்தவர். அவர் சிறந்த அநுபூதிமான். தகைசார்ந்த மெய்யுணர்வாளர். அவர் சிவசமாதி கூடிய இடமே தருமபுரத்தில் ஸ்ரீஞானபுரீசுவரர் திருக்கோயில். அவரை நினைத்தாலே நம் வினை போயறும். என்றும் இன்பம் தழைக்க இருக்கலாம். அவருக்கு மதுரையில் பொற்றாமரைக் குளத்தில் திருவருளால் கண்ணுக்கினிய பொருளாகக் கரத்தில் கிடைத்தவரே தருமையிலுள்ள ஸ்ரீ சொக்கநாதப் பெருமான். அச்சொக்கநாதரைத் தமது ஆத்மார்த்த பூஜாமூர்த்தியாகக் கொண்டு அவரைப் பூசிக்கும்போது தோத்திரமாக அருளிய தூய தமிழ்ப்பாடல்களே "சொக்கநாத வெண்பா" எனும் நூலாகத் திகழ்கிறது. அதில் ஒரு பாடல் "உனக்குப் பணி செய்ய" என்று தொடங்குவது. பல்வேறு உண்மைகளை உணர்த்தும் இது போன்ற அநுபூதிப் பாடல்கள் இந்நூலில் 139க்கு மேல் உள்ளன. படித்துப் பயன் பெறுவோமாக.

உனக்குப் பணிசெய்ய உன்ற
னையெந் நாளும்
நினைக்க வரமெனக்கு நீதா -
மனக்கவலை
நீக்குகின்ற தென்மதுரை நின்மலனே!
எவ்வுலகும்
ஆக்குகின்றசொக்கநா தா.

— ஸ்ரீ குருஞானசம்பந்தர்

# உய்வளிக்கும் தெய்வசிகாமணி

தவத்திரு குன்றக்குடி அடிகளார்
குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம்

அருள்தரு தெய்வசிகாமணி தேசிகேந்திரன் புகழ்பாடும் நான்மணிமாலை தத்துவச் செறிவுடையது. சிவஞானம் பொதுளும் பெருமையுடையது.

அருள்! - அன்பீனுங் குழவி, அருள்! அன்பு வளர்ந்த நிலையில் அருளாகிறது; அன்பு தற்சார்புடையது; உறவு முறை பற்றியது; உதவிகள் நாடுந் தன்மையது; நன்றி நாடுவது! அருள், பிறர் நலச் சார்புடையது; உறவு முறைகளைக் கடந்தது. திருவள்ளுவர் எடுத்துக் காட்டும் மருந்து மரம் அருளுக்கு ஒரு விளக்கம். அறம் செய்ய வேண்டுமாயின் அருளுணர்வு வேண்டும். பயன் நோக்கிய பணி அறமன்று. தற்சார்புடைய பணி அறமன்று. பயன் கருதிய பணி அறவிலை வாணிகமேயாம்! பிறர் நலம் கருதிய பணிகளே அறம்; அர்ப்பணிப்புணர்வுடன் செய்வதே அறம்!

உயிர்க் குலத்திற்கு அருள் நலஞ் செறிந்த அறங்கள் செய்து வாழ வேண்டுமெனில் பொருள் வேண்டும். அந்தப் பொருளும் நல்ல வழியில் ஈட்டிய பொருளாக இருக்க வேண்டும். "அவ்வருளும் நல்ல பொருள் உண்டெனில் உண்டு". பிறர் பங்கைத் திருடிய பொருள் நல்ல பொருள் ஆகாது. சலத்தாற் செய்த பொருள் நல்ல பொருள் அல்ல! பழியஞ்சி, பழிபடரா நிலையில் உழைப்பினால் திரட்டிய பொருளே நல்ல பொருள். நல்ல பொருளுண்டெனில் அறமுண்டு; இன்பமுண்டு. துய்ப்பன போக மலம் துய்க்கும் வாழ்நெறியே உய்யும் நெறியின் தொடக்கம். இன்பம் துய்த்தலும் மல வழிப்பட்ட செயலே! ஆயினும் உய்யுமாறு உய்த்துச் செலுத்தும் போகம் இன்பம்!

ஆன்மிக வாழ்க்கையில் தெளிதல் இன்றியமையாதது. "சிந்தையுள் தெளிவுமாகி தெளிவினுட் சிவமு

மாகி" என்பார் அப்பரடிகள். "தெய்வம் தெளிமின்" என்பார் இளங்கோவடிகள். இருளிலிருந்து - அறியாமையிலிருந்து மீள்வதற்குரிய தெளிவுண்டெனில், அந்



தெருளைத் தெளிவை வழங்கியருள, தேவசிகாமணிச் சிற்குரு உண்டு!

தேவசிகாமணிச் சிற்குருவின் அருட்பார்வையில் ஆன்மாக்களிடம் தெளிவு தோன்றுகிறது; அறியாமை அகலுகிறது; ஞானம் தலைப்படுகிறது. ஞானம் தலைப்பட்டவுடன் இருள் அகலுகிறது. இருள் அகன்றவுடன் நல்ல பொருள் கிடைக்கிறது. நல்ல பொருள் கிடைத்தவுடன் அறம் தலைப்படும் வாழ்க்கை தொடங்குகிறது. அறத்தின் வழியாக அருள்நலம் கிடைக்கிறது. இவையெல்லாம் கிடைப்பதற்குக் காரணம் தெய்வசிகாமணி தேசிகேந்திர குருமூர்த்தியின் கடைக்கண் பார்வையேயாம்!

"அருள் உண்டு எனில் உண்டு அறங்க
ளெல்
லாம்; அவ் வருளும் நல்ல
பொருள் உண்டு எனில் உண்டு;
போகியர்க்
கேளிவர் போகமலை
இருள் உண் டெனில் உண்டுஇங்
கெல்லாம்
வராமல் இருந்தும் ஒரு
தெருள் உண்டு எனில் உண்டு தேவ
சிகாமணிச் சிற்குருவே"

என்பது நமது ஆதீன முதல்வராகிய அருள்தரு தெய்வசிகாமணி நான்மணி மாலை என்னும் நூலின் திருப்பாடல் களில் ஓர் அருட்பாடல்!

## மங்களாஸாசனம்

ஸ்ரீலஸ்ரீ வரத யதிராஜ ஜீயர் சுவாமிகள்

ஸ்ரீ பெரும்புதூர் ஸ்ரீ எதிராஜ ஜீயர் மடம்

"பூ மன்னுமாது பொருந்திய மார்பன்
புகழ்மலிந்த
பாமன்னு மாறன் அடிபணிந்
துய்ந்தவன், பல்கலையோர்
தாம்மன்ன வந்த இராமானுசன்
சரணாரவிந்தம்
நாம் மன்னி வாழ நெஞ்சே
சொல்லுவோமவன்
நாமங்களே"

— திருவரங்கத்தமுதனார் பணித்த இராமானுச நூற்றந்தாதியின் முதற் பாடல்.

ஆழ்வார்களின் அமுதவாயினில் ஊறி மயர்வற மதி நலங்களான 108 திவ்விய தேசங்களிலும் எம்பெருமானார் நிறைந்துள்ளார் என்பதை



கருத்தில் கொண்ட ஸ்ரீராமானுசா நூற்றந்தாதியில் 108 பாடல்கள் இடம் பெற்றுள்ளன என்பது அறிந்து மகிழ்தற்குரியதாம்.

ஸ்ரீராமானுசர் புரட்சிகரமான சமய, சமுதாய சீர்திருத்தங்களை ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே செயலில் செய்து காட்டித் தமது உள்ளக்கிடக்கையை உலகறியச் செய்துள்ளார் என்பது நினைவு கூரத்தக்கது.

தாயன்பிற்கு இலக்கணமாய்ப் பூமலராள், செந்தாமரையாள் ஸ்ரீமந் நாராயணனின் வலமார்பிலே என்றும் பிரியாதிருந்து, பக்தர்களின் கஷ்டங்களை அறிந்து விரைந்து, அக்கஷ்டங்களைப் போக்கிடச் சமயத்தில் நாராயணனுக்கு பரிந்துரை செய்து வருபவள். பிராட்டியினால் ஸ்ரீமந் நாராயணனின் பெருமை ஓங்கி உலகளந்தது. அத்தகைய நாராயணனின் பெருமைகளைப் பக்தியினூடே நான்காவது வருணத்தில் பிறந்த மாறன் தம் பாக்களினால் பண்ணிசைத்து நாரணன் அடியார்களிடையே சாதி, மத, மொழிகட்கு இடமில்லை என்பதை நிலைநாட்டி வடமொழி வேதங்களை தமிழ்ப்படுத்தி விளக்கியதால் புகழ் மலிந்த மாறன் என்று தன்னிகரில்லாச் சிறப்புப் பெற்றான்.

அத்தகைய மாறனின் அடிபணிந்து உய்ந்து நண்ணி அவரின் தடங்கள் பற்றியே "எம்பெருமானார் தரிசனம்" என்ற வாடாமலரைத் தோற்றுவித்துச் சமுதாயம் சிறப்புறச் செயல்பட்ட இராமானுசரின் திருவடிகளை நினைந்து நெஞ்சங்கள் அவனது திருநாமத்தைச் சொல்லி பிரபத்தியில் ஈடுபடுவோம் என்பது பாடலின் சுருங்கிய உரையாம்.

நம்மாழ்வார் ஒருவரே வடமொழி. நான்கு வேதங்களையும் தூய ஏற்றமிகு தமிழில் வளமாக மொழி பெயர்த்தார். இந்நான்கு வேதங்களுக்கும் ஆறு உபநிஷத்துக்கள் அங்கங்களாய்த் திகழ்வது போன்று திருமங்கை ஆழ்வார், "மாறன் பணித்த தமிழ் மறைக்கு மங்கையர் கோன் அறங்கம் ஈந்த" என்றபடி ஆறு தமிழ்ப் பிரபந்தங்களை அங்கங்களாகத் தொகுத்தருளினார். மற்ற ஆழ்வார்களின் பிரபந்தங்கள் மங்கையர்கோனின் அங்கங்களுக்கு உப அங்கங்களாக விளங்குகின்றன.

அவயவங்களைத் தாங்கும் பொருளை அவயவி என்பது பண்பைத் தாங்கும் பொருளைப் பண்பி என்று கூறுவது போன்றதாம். இந்நிலையில் ஸ்ரீமந் நாரணன் - அவயவியாகவும் அங்கங்களாம் பிரபந்தங்கள் அவயவ

மாகவும் விளங்குகிறார் என விளிப்பது ஸ்ரீமந் நாராயணனை.

நெஞ்சு என்பது நஞ்சு போன்ற தீய எண்ணங்கள் இல்லாத சத்தியம், தர்மம், நியாயம், ஞானம், தன்னலமற்ற இறையுணர்வுடன் கூடிய சமய சமுதாயத் தொண்டு உணர்வு நிறைந்த நெஞ்சத்தையே குறிப்பதாம். அந்நெஞ்சங்கள் ஸ்ரீராமானுஜனின் அடிப்பூ கொண்டதாக அமைதல் சிறப்பாம். சமுதாயம் மறுமலர்ச்சி கொண்டு தழைக்க இந்நெஞ்சங்கள் இறைவனின் நாமங்களையும், ஆழ்வார்களின் அருளிச் செய்த தமிழ் மறையையும் அவற்றின் பொருளையும் உணர்தலும் அவ்வழியைப் பற்றி செயல்படுதலும் நன்றாம்.

ஆழ்வார்களிலே மாறனாகிற நம்மாழ்வாருக்குத்தான் ஸ்ரீமணவாள மாமுனியால் திருவாய்மொழி நூற்றந்தாதி இயற்றப்பட்டாற்போல் ஆச்சாரியர்களில் ஸ்ரீராமானுஜருக்கே திருவரங்கத்தமுதனாரால் இராமானுஜ நூற்றந்தாதி இயற்றப்பட்டது என்பது எண்ணி மகிழ்தற்குரியது.

ஆர்த்திப்பிரபந்தத்தில் ஸ்ரீ மணவாள மாமுனிகள் கூவிக் கொள்ளும் "காலம் குறுகாதோ" என்றபடி இன்னும் 24 ஆண்டுகளே உள்ளன ஸ்ரீராமானுஜரின் ஆயிரம் ஆண்டு விழாவிற்கு. ஆகையால் "அப்போதைக்கு இப்போதே சொல்லி வைத்தேன் பெரும்புதூர் முனிவ" ' என்று அமுதசுரபியின் ஆசிரியர் மூலமாக ஸ்ரீராமானுஜரின் ஆணைக்கு அடிபணிந்து இக்கட்டுரை மூலம் நிறைவு பெறுகிறோம்.

விக்கிரமன் என்ற ஆசிரியரின் பெயருக்கேற்ப அமுதசுரபி மேலும் பல நல்ல ஆச்சாரியர்களின் வாழ்க்கை நலன்களை பல மகான்கள் மூலம் சுரப்பித்து பத்திரிகையும் அவரின் குடும்ப பரிவார துணையாசிரியர்கள் மற்றுமுள்ள ஊழியர்களும், வாசகர்களும், அன்பர்களும் செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலின் அருளையும், கொண்டை கொண்ட கோதை சூடிக் கொடுத்த சுடர்க் கொடியின் தொல்லருளால் வாழ்கின்ற வள்ளல் இராமானுஜரின் இன்னருளையும் பெற்று எல்லா நலமும் வளமும் பெற்று உயர்ந்து பல்லாயிரம் ஆண்டு வாழ மங்களாஸாசனம் அளித்து இக்கட்டுரையைத் தலைக் கட்டுகிறோம்.

## ஒருமையின் பெருமை

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி
முத்துக்குமார சுவாமித் தம்பிரான்
திருப்பனந்தாள்
ஸ்ரீ காசி மடம்

அருட்பெருங் கவிஞராகிய ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள், மனிதகுலம் நன்னெறிப்பட்டு நலம் பெற பல இலக்கியங்களைப் படைத்தளித்தார்கள். அவற்றில் தற்போது பதினான்கு இலக்கியங்கள் நின்று நிலவுகின்றன. அவை இலக்கிய இன்பங்களை வாரி வழங்குகின்றன. கல்வியாளர்களை உருவாக்குகின்றன; மனித மனங்களைப் பண்பாட்டில் மையப்படுத்துகின்றன. இறை நெறிக்கு ஆட்படுத்துகின்றன.

ஐந்தாண்டுவரை ஊமையாக இருந்து திருச்செந்தூர்க் கந்தன் அருளால் ஊமை நீங்கப்பெற்று அவர் முதலில் பாடிய கந்தர்கலிவெண்பாவைப் பாராயணம் செய்தால் அகால மரணம் ஏற்படாது. இடையூறுகள் எல்லாம் விலகி முன்னேற்றங்கள் ஏற்படும்; முருகப் பெருமான் உல்லாசமாக உளத்திருந்து எவ்வரமும் தந்து இனிதே வாழவைப்பான்.



ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் அருளிய பாடல்கள் முன்னோரின் தத்துவங்களுக்கெல்லாம் புதுப்பொலிவூட்டின. 'பிரமனின் படைப்பு அழிகிறது; கவிஞனின் படைப்பு அழிவதில்லை. எனவே கவிஞனுக்குப் பிரம்மன் ஒப்பில்லை' என்றார். 'சேர்த்த பணத்தைத் தூக்கி எறிந்து விட்டு மேலும் சம்பாதிக்கச் செல்லும் அறியாமை போன்றதுதான் படித்தவற்றைப் பின்பற்றாது மேலும் மேலும் படிப்பது' என்றார். 'செல்வத்தில் கீழே உள்ளவர்களைப் பார்; கல்வியில் மேலே உள்ளவர்களைப் பார்' என்று வழி காட்டினார். 'உலகிலேயே பெரிய வியப்பு பெரிய சிறப்புகள் தன்னிடம் அமைந்திருக்கவும் அவற்றை வெளியில் கூறிக் கொள்ளாமல் இருப்பது தான்' என்றார். 'புகழ்பெற ஒரே வழி மற்றவர் குற்றங்களை மறைத்துக் குணங்களையே கூறித் தாழ்ச்சியுடன் இருத்தல்' என்றார். இவ்வாறாக நூற்றுக்கணக்கான புதுமைப் பொலிவுடைய செய்திகள் அவர்தம் இலக்கியங்களில் பொங்கி மிளிர்கின்றன. அதனால்தான் ஆத்திக மறுப்பாளராகிய பாரதிதாசனையும் அவர் பாடல்கள் கவர்ந்தன; மகாத்மா காந்தியடிகளும் அவர் பாடலைக் கைப்பட எழுதினார்.

சமயத்தின் பெயரால் விரோதங்களை ஏற்படுத்திக் கொள்வதை அவர் வெறுத்தார். சமயத்தின் பெயரால் பிணக்குகள் ஏற்படுவதை அவர் முற்றிலுமாக உடன்படவில்லை. உலகில் பல்வேறு சமயங்கள் உள்ளன. ஆனால் பரம்பொருள் ஒன்றே. சமயங்கள் பலவாமைக்குப் பலர் பல காரணங் களைக் கூறலாம். ருசி பேதம் போன்றனவே அவையெல்லாம்.

இசுலாமிய மார்க்கிகள் அரசோச்சிய காலத்தில் வாழ்ந்தவர் ஸ்ரீகுமர குருபர சுவாமிகள்.

பின்னம் படைத்த சமய விரோதப் பிணக்கு அறுத்த ஒரு சின்னம் படைத்த முனி என்று தம் குருநாதரின் பெருமையைச் சொல்கிறார்கள் என்றால், சமய விரோதத்தை அவர்கள் எந்த அளவுக்கு வெறுத்தார்கள் என்பது புலனாகும். 'அறுத்த' என்ற கடுமையான சொல்லாட்சி அவர்களின் மனதைத் தெளிவாகப் படம்பிடித்துக் காட்டுகிறது.

தெய்வம் உண்டென்பதாம் சித்தமுண்டாகி உலகவர்கள் அறிவு நெறியைக் கொண்டாடி, அன்பு நெறியைப் பின்பற்றிப் பேதமற்று வாழ்ந்தால்தான் இறைநலங்கள் சித்திக்கும். அவ்வகையை நமக்கு உபதேசித்த குமரகுருபரரின் அருளார் அமுத மொழிகளை நாளும் கற்று ஞானம் செழிப்பதாகுக.

சிவ சிவ.



# மனத்துயர் நீங்க மாணிக்கவாசகர் கூறும் வழி

சீலத்திரு ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்.
ஸ்ரீதொண்டைமண்டல ஆதீனம்.



இவ்வுலகில் மிகச்சாதாரணமான மனிதனிலிருந்து மிகப் பெரிய மனிதர் வரை எவராயிருந்தாலும் அவர் முழு இன்பத்தோடு வாழ்கின்றார் எனச் சொல்ல இயலாது. அவரை அணுகிக் கூர்ந்து நோக்கினால் அவர் ஏதேனும் ஒரு துன்பத்தால் மன அமைதி இழந்து இருப்பதைக் காணலாம்.

மனம் எப்போதும் ஏதேனும் ஒன்றை நினைத்துக் கொண்டேயிருப்பது. அடுத்த கணத்தில் நமது மனம் எதைப் பற்றி நினைக்கப்போகிறது என்பதை எவராலும் முன்கூட்டிக் கூற இயலாது. இவ்வாறான மனத்தை அடக்கி அமைதியுறச் செய்வது எப்படி?

"உரைமாண்ட வுள்ளொளி உத்தமன்
வந்துளம்புகலும்
கரைமாண்ட காமப் பெருங்கடலைக்
கடத்தலுமே
இரைமாண்ட இந்திரியப் பறவை
இரிந்தோடத்
துரைமாண்டவா பாடித்
தோணோக்கம் ஆடாமோ".

"வாக்கு மனாதீதமான ஞானமே வடிவான இறைவன் என் உள்ளத்தில் புகுந்து கலந்து வீற்றிருந்ததனால், கரையற்ற பேராசைப் பெருங்கடலை யாம் கடந்தோம். கடந்தவுடன், ஆசையாகிய கடலில் சென்று இரை உண்பதையே (ஆசைப்பட்ட பொருளை அநுபவிப்பதையே) சிறந்த பண்பாகக் கொண்ட ஐம்பொறிகளாகிய பறவைகள் ஓட்டுவாரின்றி தாமே ஓடிவிட, அதனால் அம்மனத்தில் யான் யான் என்று எழுகின்ற தன்முனைப்புக் கெட்டு அருள்மயமான தன்மையைப் பாடி தோணோக்கம் ஆடுவோமாக".

ஆக மனத்துன்பம் நீங்க நாம் செய்யவேண்டியதெல்லாம் இது ஒன்றே ஒன்றுதான். அதாவது நாம் வழிபடும் ஏதேனும் ஒரு கடவுளை, இடையறாது மனத்தில் நினைத்துக் கொண்டே இருக்க வேண்டும் என்பதேயாகும். தோணோக்கம் என்பது ஒருவகை மகளிர் விளையாட்டு. தலைவனுடைய புகழைப் பாடி மகளிர் கைகொட்டி ஆடுதல் என்பது இதன் பொருள். இதற்குத் தம் தோளை நோக்கி ஆடுதல் என்றும், தம் தோளைத் தட்டி ஆடுதல் என்றும், தம் தோளைத் தொட்டு கைகொட்டி ஆடுதல் எனவும் பல வகையாக பொருள் கூறப்பெறும். இங்கு மணிவாசகப் பெருந்தகையார் இறைவனைப் பற்றிய செய்திகளையே இப்பதிகத்தில் பேசியிருப்பதால் தலைவனுடைய புகழைப்பாடி கைகொட்டி ஆடுதல் என்ற பொருளே இதற்குப் பொருந்தும்.

மணிவாசகப் பெருந்தகையார் தில்லையில் தங்கியிருந்த காலத்தில் பெரும்பயனைத் தாராத மக்கள் புகழைப் பாடி மகளிர் இவ்விளையாட்டினை மேற்கொண்டிருப்பது கண்டு, அப்பெண்கள்மேல் வைத்த கருணையினால் இறைவன் திருமேனி தாங்கி எழுந்தருளும் தன்மையும், இதனால் அடியவர்களை உய்யக் கொண்ட திறமும் ஆகிய இவைகளையே பொருளாகக் கொண்டு இப்பதிகத்தை அருளிச் செய்து, அம்மகளிரை தோணோக்கம் ஆடப் பணித்தருளினார் ஆவர். இதுகாறும் கூறியவற்றால், உலகின் உயிரினங்கள் சிறப்பாக மக்கள், இன்பத்தையே நாடுகின்றனர் என்பதும், ஆனால் இன்பமும் துன்பமும் தொடர்ந்தே வருகின்றவையே என்பதும், தூய மனமே கடவுள் தங்குவதற்குரிய இடம் என்பதும், "உரைமாண்ட" எனும் மணிவாசகப் பெருமான் வாக்கு தெளிவூட்டும் திருவாக்காக அமைகிறது.

# மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்

ஸ்ரீலஸ்ரீ அருணகிரிநாத ஸ்ரீஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்.
மதுரை ஆதீனம்.

உலகத்தில் நாம் நமக்கு வேண்டிய உடலை நாமே எடுத்துக் கொள்ள முடிவதில்லை. அப்படி முடியுமானால், ஒவ்வொருவரும் அழகு சுந்தரர்களாகவும், அழகு சுந்தரிகளாகவும் உதித்திருப்போம்.

ஓர் உரோமத்தைக்கூட நம்மால் உண்டாக்க முடிவதில்லை. தலையில் கறுப்பாக இருக்கிற உரோமத்தை நாற்பது வயதிற்கு மேலும் கறுப்பாகவே வைத்துக்கொள்ள முடிவதில்லை. பிறந்து சில மாதங்கள் கழித்து முளைக்கிற பற்களை குறிப்பிட்ட சில வயதிற்கு



மேலும் நிரந்தரமாக வைத்திருக்க முடிவதில்லை.

நாம் நம்முடைய விருப்பத்தின்படி நம்முடைய பெற்றோர்களுக்குப் பிள்ளைகளாகப் பிறக்கவில்லை. நம்முடைய விருப்பம்போல் பிறக்க முடியுமானால் நாம் எல்லோரும் அரசர்கள் வீட்டிலேயே பிறக்க முயற்சித்திருப்போம்.

பெற்றோர்களுக்கு தங்களது விருப்பம்போல் ஆணாகவோ, பெண்

ளாகவோ, அழகாகவோ பிள்ளைகளைப் பெற்றெடுக்க முடிவதில்லை. ஆண்பிள்ளை இல்லையே என்றும், பெண்பிள்ளை இல்லையே என்றும், ஒருபிள்ளையும் இல்லையே என்றும் ஏங்கும் பெற்றோரிடம் இதைக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்.

நம்முடைய பெற்றோர் நமக்கு அவயவங்களைக் கொடுக்க சக்தியற்றவர்களாக இருக்கிறார்கள். சக்தி உடையவர்களாக இருந்தால், கூன், குருடு, செவிடு, ஊமை, நொண்டி, நெட்டை, குட்டை, நிற வேற்றுமை முதலியன ஏற்படவே முடியாது.

மேலும் பிறப்பு நம்முடைய விருப்பத்திலும் பெற்றோர்களுடைய விருப்பத்திலும் இல்லாது போனாலும், இவ்வுலகத்தில் நாம் வாழ்ந்திருப்பது, நம்முடைய விருப்பத்தில் இருக்கிறதா என்று பார்த்தால் அதுவும் இல்லை. இறப்பு எந்த நிமிஷம், எப்படி, எங்கு ஏற்படும் என்று நமக்கும் தெரியவில்லை, பெற்றோர்களுக்கும் தெரியவில்லை. டாக்டர்களுக்கும் தெரியவில்லை. நம்முடைய வாழ்நாளும், சாநாளும் கடவுளது தீர்ப்பிற்குள் இருக்கின்றன. நமது படிப்பு, அறிவு, ஆற்றல், அநுபவம், அழகு, பக்குவம், செல்வம், ஞானம், தொழில், பதவி, மனைவி, மக்கள் எல்லாவற்றையும் இறைவனே தருகின்றான்.

திருஞான சம்பந்தர் அருளிய தேவாரப் பாடல் ஒன்றுக்கு விளக்கம் அளிக்கிறோம்.

"மண்ணில் நல்ல வண்ணம் வாழ
லாம் - வைகலும்
எண்ணில் நல்ல கதிக்கு யாதுமோர் -
குறைவிலைக்
கண்ணில் நல்லார்தூறும் கழுமல
வளநகர்ப்
பெண்ணில் நல்லாளொடும்
பெருந்தகை இருந்ததே"

இவ்வுலகத்தில் எல்லாம் வல்ல சிவபெருமானுடைய பெருங் கருணையாலும், அவரது பாரபட்சமற்ற தீர்ப்பினாலுமே நாம் வாழ்ந்து கொண்டு இருக்கிறோம் என்பதை இரவுபகல் எப்பொழுதும் நினைத்துக் கொண்டே பண்பாட்டுடன் வாழ்ந்தால் எந்த ஒரு குறைவுமின்றி நல்ல முறையில் வாழலாம்.

எம் கண்ணில் எப்போதும் நிரந்தரமாகக் காட்சி தருகின்ற சீர்காழி மாநகரில் பார்வதி தேவியாரோடு எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமான் அல்லவா, எமது தலைவன்? எனப் போற்றுகிறார் ஞானசம்பந்தப் பெருமான்.

இத் தேவாரப் பாடலைத்தான் திருமண அழைப்பிதழ்களில் பிரசுரிப்பது பாரம்பரியமாக நடந்து வருகின்ற ஒன்று.

எல்லோருக்கும் ஆசீர்வாதம்!

# இந்நாடே திருநாடாகும்!

— ஸ்ரீமத் அஹோபிலமடம் 45ஆவது பட்டம் ஸ்ரீமத் அழகிய சிங்கர் சுவாமிகள். ஸ்ரீரங்கம்.

அறிவுடையார் பலர் இந்நிலஉலக வாழ்க்கையை வெறுத்து வேண்டாமென்று ஒதுக்கித் தள்ளுகின்றனர்.



'எண்ணாராத்துயர் விளைக்கும் இவையென்ன உலகியற்கை" என்ன ஒண்ணாதபடி மிகப்பலவான துன்பங்களை விளைவிக்கும் இவ்வுலக இயல்பும் ஒன்றா? எம்பெருமான் இதை ஏன் ஸ்ருஷ்டிக்க வேண்டும்? என்றும், 'இருள் தருமாஞாலத்துள் இனிப் பிறவியான் வேண்டேன்' அஞ்ஞானத்தைத் தரும் இந்த மாஞாலத்தில் இனிப்பிறவி எனக்கு வேண்டாம்' என்றும் ஸ்வாமி நம்மாழ்வார் அருளிச் செய்கிறார்.

இவ்வாறே மற்றைய ஆழ்வார்களும் பெரியோர்களும் அருளியுள்ளனர்.

ஆனாலும் இப்படி அருளிய ஆழ்வார்களே 'இந்நில உலக வாழ்வே சாலச்சிறக்கும் இதுவே போதும். இதில் எவ்வித தோஷமும் கிடையாது. மோக்ஷமும் வேண்டற்பாலதன்று' என்றும் அருளுகிறார்கள்.

இப்படி முரண்படப் பேசலாமா? என்று நினைக்க வேண்டாம். இந்த நிலத்தில் தன்மை-தண்மை முன்காட்டியபடி இவ்வுலக வாழ்க்கையை வேண்டாம் என்று பேசவைக்கிறது. ஆயினும் பகவானுடைய அருளும் அநுபவமும் இங்கே கிடைத்துவிடில் இதுவே மோக்ஷமாகும். அந்த மோக்ஷம் வேண்டாம் என்று இவ்வுலக வாழ்வை வெறுத்தவர்களையே பேசவைக்கிறது பகவதநுபவம். ஆக எவ்வித முரண்பாடுமில்லை.

பிரளய காலத்தில் அழிந்து விடாதபடி உலகம் அனைத்தையும் தன் வயிற்றினுள் வைத்துக் காப்பாற்றி, ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில் உமிழ்ந்து அதாவது வெளிப்படுத்திக் காப்பாற்றியவன் நம் ஸ்வாமியான எம்பெருமான். மிக அழகிய சிவந்த திருஅதரங்களை உடையவனிவன். செந்தாமரை போன்ற திருக்கரங்களையும் உடையவன் இவன். இப்படிப்பட்ட எம்பெருமான் மேன்மேலும் பொங்கிப் பரவும் திருக்கல்யாண குணங்கள் பலவற்றையும் உடையவனாயிருக்கிறான்.

இந்தத் திருக்கல்யாண குணங்கள் எப்பொழுதும் நம்முடைய வாயில் - நாவில் இருக்க வேண்டும். அதாவது எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களையே நாம் வாயினால் எப்பொழுதும் சொல்லிக் கொண்டிருக்க வேண்டும்.

நம்முடைய ஸர்வேந்தரியங்களையும் ஆகர்ஷிக்கும் (ஈர்க்கும்) திருவடிவு எப்பொழுதும் நம்முடைய மனத்திலே நிலைத்திருக்க வேண்டும். அதாவது நாம் நம்முடைய மனத்தினால் எம்பெருமானுடைய திவ்யதிருமேனியையே த்யானித்து வரவேண்டும். இது மட்டும் போதாது.

இந்த அழகிய திவ்யதிருமேனியை அர்ச்சிப்பதற்கென்றே உண்டாயிருக்கும் அழகிய புஷ்பங்கள் நம் கையில் எப்பொழுதும் இருக்க வேண்டும்.

அதாவது அழகிய புஷ்பங்களைக் கொண்டு எம்பெருமானை எப்பொழுதும் அர்ச்சிக்க வேண்டும் என்றார்.

இப்படி எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களை பலவற்றையும் நாம் வாயினால் சொல்லிக் கீர்த்தனம் செய்ய வேண்டும். அவனுடைய அற்புதமான திவ்யமங்கள விக்ரஹத்தை மனத்தினால் த்யானிக்க வேண்டும். இவனை அர்ச்சிப்பதற்காக உண்டான அழகிய புஷ்பங்களை கைகளால் கொண்டு எப்பொழுதும் எம்பெருமானை அர்ச்சிக்க வேண்டும்.

ஆக இவ்வண்ணம் மனோவாக் காயங்களால் (மனம்-மொழி- மெய்களால்) நாள்தோறும் வழிபட்டுவரும்படி. எம்பெருமான் அருள் செய்தால் இங்கேயே நாம் திரிந்து (ஸஞ்சரித்துக்) கொண்டிருக்கலாமே இதில் என்ன தோஷம் வரும்? இதைவிட்டு எதற்காக நாம் ஸ்ரீவைகுண்டம் செல்ல வேண்டும்? இந்நாடே திருநாடாகுமே!

இவ்வாறு ஸ்வாமி நம்மாழ்வாரே வினவுகிறார். இந்த வினாவுடன் தொடங்கும் பாசுரத்தை நாமும் அநுஸந்திப்போமே! தடப்போமே!

"இங்கே திரிந்தேற்கு இழுக்குற்றென்?
இருமாநிலம்முன் னுண்டுமிழ்ந்த
செங்கோலத்தபவளவாய்ச் செந்
தாமரைக் கண்ணெம்மான்
பொங்கேழ் புகழ்கள் வாயவாய்ப்
புலன் கொள்வடிவு என்மனத்ததாய்
அங்கேய் மலர்கள் கையவாய் வழிபட்
டோட அருளியே!

(திருவாய்மொழி 8.30.4)

## திருக்குறள் போலும் திருவடி

ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள்
மயிலம் பொம்மபுர ஆதீனம்

மனிதன் வாழ்வாங்கு வாழ வழி காட்ட வல்லது வான்மறை வள்ளுவமாகும். சாதி, சமயம், மொழி, இனம், நாடு என்னும் வேறுபாடுகளைக் கடந்து கடவுளைப் போலத் திகழ்வது.



அதனால்தான் திருக்குறளை 'உலகப் பொதுமறை' என்றும், வள்ளுவர் பெருமானைத் 'தெய்வப் புலமைத் திருவள்ளுவர்' என்றும் உலகம் உயர்வாகப் போற்றுகிறது. திருவள்ளுவமாலை என்னும் பாராட்டுப் பாக்களின் தொகுப்பு நூலினால், திருக்குறள் தோன்றிய காலத்திலேயே சிறப்புப் பெற்று விளங்கியதை அறியலாம்.

திருவள்ளுவரையும், திருக்குறளையும் போற்றாத புலவர் எவரும் இலர் எனலாம். போற்றாதவர்கள் புலவர்களே அல்லர் என்றும் சொல்லி விடலாம். அந்த அளவிற்குக் காலங்கள் தோறும் அறவியல், அருளியல், சமுதாய இயல் சான்றோர்களால் போற்றப்பெற்று வருதல் கண்கூடு.

அவ்வகையில் சிவாநுபூதிச் செல்வராகிய சிவப்பிரகாசர், தாம் படைத்த நூல்களில் ஏற்ற இடங்களில் திருவள்ளுவரையும், திருக்குறளையும் அடைமொழிகள் பல கொடுத்துப் போற்றியுள்ளார். மேலும் திருக்குறட் பாக்களை முழுமையாகவும், தொடர்களாகவும் எடுத்தாண்டுள்ளார்கள். திருக்குறட் பொருளைச் சுட்டியும், பரிமேலழகர் உரையை ஏற்றுப் போற்றியும். சிற்சில இடங்களில் உரையை மறுத்தும் பற்பல கோணங்களில் திருக்குறளை மையமாகக் கொண்டு நம் சிந்தனை வளங்களைச் செல்வையாகத் தந்துள்ளார்கள். இவ்வாறு வள்ளுவரையும், திருக்குறளையும் மிகச் சிறப்பாகப் போற்றியுள்ளமையைக் காட்டப் பாடல்கள் பல இருப்பினும், சிந்தனைக்கு விருந்தாகத் 'திருவெங்கைக் கலம்பக'ப் பாடல் ஒன்றினை நோக்குவோம்.

திருவெங்கைக் கலம்பகத்தில் சிந்தனைக்கு விருந்தாக அமையும் திருப்பாடல் வருமாறு :

என்னடிகள் வெண்குறள்நேர் அடியி
ரண்டும்
என்தலையில் இருத்தும்கிறை
வெங்கை நாட்டில்
முன்னடிகள் இரண்டுநெடி லடிகள்
பின்னர்
முயங்கடிகள் இரண்டுநே ரடிக
ளாகப்
பன்னடிகள் ஒருநான்கு கொடுந
டக்கும்
பழுதகல்வெண் இறைபோலப்
படர்த லாலே
பின்னடிகள் எங்கள்திரு வடிகள்
முன்னர்ப்
பெயர்ந்தவடி எழில்இளஞ்சேய்
அடிக ளாமே (42)

இத்திருப்பாட்டில், பாட்டுடைத் தலைவனாகத் திருவெங்கை இறைவன் போற்றப்படுகின்றான். கிளவித் தலைமக்களாகத் தலைவனும், தலைவியும் சுட்டப்படுகின்றனர்.

முதலாவதாக, பிறர்க்குப் புலனாகாத வகையில், சக்தியொடு கூடிய சிவ பரம்பொருளாகிய உமையொருபாகன், தம் தலையில் திருவடி வைத்து ஆட்கொண்டதைச் சிவப்பிரகாசர் எண்ணுகின்றார்; மகிழ்கின்றார்; உலகோர்க்கு அவ்வருட்செயலைப் புலப்படுத்தவிழைகின்றார்.

அவ்வகையில் சிவபெருமானின் திருவடியை விளக்குவதற்கு, உலகறிந்ததும், உயர்ந்ததும் ஆகிய திருக்குறளை, உவமையாக்க கையாளுகின்றார். திருக்குறளின் முதலடி நாற்சீர் கொண்டும், இரண்டாம் அடி முச்சீர் கொண்டும் விளங்குவது முறையே உமையொரு பாகனின் வலப்பக்கத் திருவடியும், இடப்பக்கச் சீறடியும் இணைந்த தோற்றத்தை உணர்த்துவதால், திருக்குறள் ஒவ்வொன்றையும் காணுந்தோறும் உமையொருபாகனின் திருவடியாகவே எண்ணி அவற்றைப் போற்றுகின்றார். இதுவரை இலக்கிய உலகில் இறைவனைப் போற்றிய அருளாளர்களுக்கும், திருக்குறளைப் போற்றிய அறிஞர்மார்களுக்கும் தோன்றப்பெறாத அற்புதச் சிந்தனைஇதுவாகும்.

அருளியற் புலவராகிய சிவப்பிரகாசர், தாம்பெற்ற திருவடி தீக்கையை எண்ணுந்தோறும், கழி

மகிழ்வு கொண்ட காரணத்தினால், அத்திருவடிகளுக்கு உவமையாகும் பெற்றிமை வாய்ந்த திருக்குறளைப் படைத்த அறநூற் புலவராகிய திருவள்ளுவரை, ஞானாசிரியராகவே கண்டு, மனமுருகிய நிலையில், 'தன் ஆசான்' என்னும் பொருளில் 'என்னடிகள்' என்று போற்றிப் புகழ்கின்றார்கள்.

இத்திருப்பாடலில், திருவள்ளுவர் பெருமானை, 'என்னடிகள்' என்றும், உமையொருபாகனின் திருவடிக்கு உவமையாகத் திருக்குறட்பாக்கள் உள்ளன என்றும், உடன்போக்கு நிகழ்த்திய தலைவன் தலைவியரின் அடிச்சுவடுகள் வெண்டுறைப் பாடலை ஒத்து விளங்குகின்றன என்றும் இலக்கிய, இலக்கண, அருளியற்செறிவு அமையப் பாடியிருத்தல் நவில்தொறும் நலம்பயப்பனவாகும்.

இவ்வொரு திருப்பாடலைச் சிந்திப்போரும் கூடச், 'சைவமும் தமிழும் தழைத்தினிது ஓங்கும்' மாட்சியினைக் காட்சியாக்கிக் காட்டும் சிவப்பிரகாசரின் அருள்ஞானத் திறத்தைப் போற்றி வணங்குவர் என்பது உண்மையாகும்.

## சுபாநுபவ திருவாக்கியங்கள்

### ஸ்ரீலஸ்ரீ கோவிலூர் ஞானதேசிக சுவாமிகள்
### கோவிலூர் ஆண்டவர் திருமடம்

'ஆண்டவர்' என அன்பர்களால் போற்றித் தொழப்பெற்ற ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஞானதேசிக சுவாமிகள் அருளிய சுபாநுபவ திருவாக்கியங்கள் மிகுந்த பயனளிப்பவை. அவைகளைச் சிந்தித்துச் சீர்பெற மகிழ்ந்து வாழ்த்துகிறோம்.

1. சர்வம் பஞ்ச பூதமயம்

நாம் இந்த உலகத்தில் காண்கின்ற அனைத்துப் பொருள்களும் பஞ்ச பூதமாகிய ஆகாயம், வாயு, அக்னி, அப்பு, பூமி ஆகியவைகளால் உருவாக்கப்பட்டவை இந்த பஞ்சபூதங்களை நாமரூபங்களால் பிரித்து, அவைகளில் பாசம் வைப்பதனால் இறைவனை அடையாமல் போகின்றோம்.



2. சர்வம்மித்தை

மித்தை என்றால் இல்லாதது என்று பொருள் அல்ல. எப்போதும் மாறிக் கொண்டிருப்பது என்றே பொருள்.

நாமரூபங்கள் எப்போதும் மாறிக் கொண்டே இருக்கின்றன. ஆனால் அடிப்படையான உண்மை எப்போதும் எந்தவிதமான மாற்றமும் இல்லை.

3. சர்வஞ்சின்மயம்

உலகத்தில் இருக்கின்ற அனைத்துப் பொருள்களும் பரப்பிரம்ம ஸ்ருபமே. பரப்பிரம்ம சுபரூபமானது சுத்தமான ஞானவடிவம். அதனால் சர்வமும் சின்மயம்.

4. நாமரூப நாடாமல் பகிர் முகமின்றி இருத்தல்

ஆதாரமின்றி இந்த உலகத்தில் எதுவும் இல்லை. நகைகளுக்கு ஆதாரமாயிருப்பது தங்கம். வளை, பதக்கம், சங்கிலி இவைகள் எல்லாம் நாமரூபங்கள்தான். அடிப்படையான தங்கம் மட்டுமே உண்மை. இதைப் போல் உலகத்தில் பந்த பாசங்களினால் நாம் தாய், தந்தை, கணவன், மனைவி, பிள்ளைகளென்று அனைவரிடமும் பற்று வைத்துக் கொண்டு உண்மையான சத்தியத்தை மறந்து பகிர் முகமாக இருக்கின்றோம். பரம்பொருளை உணர்ந்தால் பகிர்முகமின்றி இருக்க முடியும்.

5. பரிபூரணமாகிய நமக்கு வேண்டப்படுவது எதுவும் இல்லை.

உலகத்தில் ஆசை வருவது தன்னிடம் ஏதோ குறை இருக்கிறது என்ற எண்ணத்தினால்தான். பரிபூரண பரம சுபரூபமான நமக்கு எதுவும் தேவையில்லை.

6. எல்லாம் சிவன் செயல் தான்

நமக்கும் மேலான ஒரு சக்தி இருக்கின்றது என்ற நம்பிக்கை வரும் போதுதான் எல்லாம் அவன் செயல் என்ற நம்பிக்கை வருகின்றது. இந்த நம்பிக்கைதான் 'எல்லாம் சிவன் செயல்' என்ற ஞானத்திற்கு அடிப்படையாய் இருக்கின்றது.

அனைவருக்கும் எமது வாழ்த்துகள்.

## சாந்தலிங்கர் காட்டும் உள்ளொளி

### தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார்
### பேரூர் ஆதீனம்

தவத்திரு சாந்தலிங்க அடிகளார் இளமையிலேயே சமய வாழ்வில் ஈடுபட்டார். துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளுடன் தொடர்பு கொண்டார். மயிலம் பொம்மபுரம் ஆதீனம் சிவஞானபாலய சுவாமிகளின் அருள் நோக்குடன் பல தலங்களையும் வழிபட்டார். சிவப்பிரகாசரது தங்கையான ஞானாம்பிகையை மணந்து இல்லற நெறியில் வாழ்ந்து பின் துறவியானார்.

"எந்த விதத்தாலோ இல்லறச் சீர் முற்றலுற்று
சொந்தவுணர்வால் துறவறத் தில் தோய்ந்தவர்"

என்று கூறுகின்றது புராணம்.

சாந்தலிங்கர் மேலைச் சிதம்பரமாம் மிக்க புகழ்ப் பேரூரில் சீலத்தவர் போற்றத் திருமடம் செய்து பல அடியவர்களுக்கு மெய்ப்பொருளை ஓதி அவரவர் தகுதிக்கேற்ப தேறு



நிமித்தம் திருத்தொண்டு செய்பவ ராய்க் கூறும் அடியார் கூட்டத்துடன் முழுஞான வீரராய் விளங்கினார்.

உள்ளொளி பெருக இறைவனை நினைக்க வேண்டும். இறைவனை நினைப்பதற்குரிய நேரம் காலை நேரம். காலை நேரத்துக் குளிர்ந்த நறும் புனலில் நீராடிச் சமயச் சின்னங்கள் அணிந்து இறைவனுடைய திருப் பெயரைக் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதுதல் வேண்டும். அவ்வாறு ஓதினால் காணலாமென் பதை "ஓங்காரத்துள்ளொளிக்குள்ளே முருகன் உருவம் கண்டு தூங்கார் தொழுப்பு செய்யார் என் செய்வார் யமதூ துவர்க்கே" என்னும் பாடலில் அருணகிரிநாதர் உணர்த்துகிறார்.

இக்கருத்துகளை உள்ளடக்கித் தமிழகத்தின் தவஞானச் செல்வராய் விளங்கி வழிகாட்டிய அருள்மிகு சாந்தலிங்க அடிகளார் தமது வைராக் கிய சதகத்தில்

"போற்றி நீறணிந் துருத்திர சாதனம்
பூண்டிடைந் தெழுந்துள்ளே
சாற்று நீகுரு வாதிமூ வுருவையும்
தாழ்ந்திறைஞ் சிவைசெய்தால்
மாற்றலாம் பிறப்பிறப்பினை
நெஞ்சமே
மன்றுளாடிய தாளும்
தோற்றும் உள்ளொளிக்குள்ளொளி
யாயதைத்
தொழுதுவாழ் தலுமாமே".

என அருளியுள்ளார். சிவநெறியில் திருநீறும், சாதனமும் போற்றுதற் குரியன. குருவையும், திருவுருவத்தை யும், அடியவர்களையும் வழிபடுவதே உயர்நெறி. இந்நெறியில் வாழ்ந்தால் பிறப்பு இறப்புத் துன்பங்கள் அகலும். அனைத்தெறும்பு உள்நெக ஆனந்தத் தேன் சொரியும் குனிப்புடைய அம்பலவாணனது தூக்கிய திருவடிக் காட்சி கிடைக்கும். உள்ளொளி தோன்றும். உள்ளொளிக்கு உள்ளொளி யும் காணலாம். நனைந்தனைய திருவடியைத் தொழுது வாழ்தலே நாம்பெறும்பேறாகும்.

# முருகப்பெருமான் பவனி

— தவத்திரு சுந்தர சுவாமிகள், கோவை, கௌமார மடாலயம்.

தவப்பெருந்திரு, வண்ணச் சரபம். தண்டபாணி சுவாமிகள் சென்ற நூற் றாண்டில் வாழ்ந்த தமிழ்ப்பெரும் புலவரும், அருளாளரும் ஆவர். சமயக் காழ்ப்பு இன்றி ஆறு சமய மூர்த்தி கட்கும் எண்ணிறந்த துதிநூல்கள் இயற்றியுள்ளார். முருகப் பெருமானைத் தன் வழிபடு கடவுளாகக் கொண் டிருந்தார்.



ஒருக்கால் சுவாமிகள் புதுவை நகருக்குச் சென்று புதுவைத் திருப்புகழ் என்ற பெயரில் 30 பாடல்களை இயற்றி னர். அப்பாடல்களைக் கேட்ட முருகன், சுவாமிகளது மனவெளியில் தோன்றி "இந்நூலால் என் ஒருமுகம் மட்டுமே மகிழ்ந்தது மற்றைய முகங்களையும் நீ மகிழச் செய்யாவிட்டால் உன்னை விடமாட்டேன்" என்று உறுத்துக் கூறி ஆணையிட்டனர். உடனே சுவாமிகள் மேலும் 1. பிள்ளைத்தமிழ் 2. கலம்பகம் 3. அலங்கார பஞ்சகம். பாதாதிகேசம் 5. பதிற்றுப் பத்தந்தாதி 6. நொண்டி என்பனவற்றை இயற்றி அரங்கேற்றமும் செய்தார்.

அந்த நூல்கள் எழுதப்பட்டிருந்த ஏடு எப்படியோ நீரில் அழிந்து போய்விட்டன என்று "குருபர தத்துவம்" என்ற இவரது சுயசரிதையால் உணர்கிறோம்.

அவற்றுள் பிள்ளைத் தமிழின் ஒரு பாடல் மட்டும் சுவாமிகளிடம் பாடம் கேட்ட யாரோ ஒருவரால் இன்று நாம் படித்துமகிழும்படிக்கிடைத்துள்ளது.

திருப்பாற்கடலிலே அறிதுயில் கொண்டு படுத்திருந்த திருமால் திடீர் என்று மிகவும் பதற்றம் அடைந்து, விழி விழி என்று விழிக்கிறார். நெஞ்சம் திடுக்கிட்டு அலறுகிறார். சங்கு சக்க ரம் ஆகியன அவரது கையைவிட்டு நழுவுகின்றன. தளர்ந்து மயங்கி நிற்கிறார்.

திருமாலின் மார்பிலே வீற்றிருந்த திருமகள் தனது கணவனின் இந்த அவல நிலையைக் கண்டு கண்ணீர் பெருக்குகிறாள்.

திருமாலின் உந்திக் கமலத்தில் வீற்றிருக்கும் பிரமனோ நன்றுதீது அறியாத பாலப் பருவத்தினன். தன் தாயின் கண்களிலிருந்து நீர் வடி வதைக் கண்டு கதறுகிறான்.

இத்தகைய குழப்பத்திற்கு என்ன காரணம்? வைகுண்டத்தில் பூகம்பமா?

முருகப் பெருமான் தனது மயிலின் மீது ஆரோகணித்துப்பவனிவரும்போது பாம்பாகிய ஆதிசேடனைக் கண்டு தனது அலகால் கொத்தி உதறியது. அதனால் இந்தக் குழப்பம்ஏற்பட்டது.

"நீலக்கிரிபோல் படுத்துறங்கும்
நெடுமால் பதறி விழித்தலறி,
நெஞ்சம் திடுக்கிட்டு ஆழிசங்கும்
நெகிழ்வுற்று அவமேஹ உரம்தோய்
சீலக் கமலத் திருமாதும்
செழும் கோங் கரும்பாம் முலை
நடுவில்
செவ்வேல் விழிநீர் விடுத்திரங்க,
தீதும் நலமும் தெரியாத
பாலப் பருவம் கொளும்உந்திப்
பங்கே ருகத்தான் அனைமுகத்தைப்
பார்த்துப் பார்த்துக் கதற, அலைப்
பாலா ழு... பாம் பெடுத்துதறும்
கோலச்சிகியில் பவனிவரும்
குகனே! தாலோ தாலேலோ
கொடியா டணிமாடப் புதுவைக்
குமரா! தாலோ தாலேலோ.

மேலே காணும் பாடல்தான் அன்பர் பாடம் செய்திருக்கிறார். திருவருள் கொழிக்கும் இத் திருப்பாடலைத் திரும்பத் திரும்ப நெகிழ்ந்து பாடினால் முருகப் பெருமான் பவனியை நெஞ்சுள் கண்டு மகிழலாம்! குருவே துணை.

## வாழ்க! வாழ்க!

— ஸ்ரீலஸ்ரீ நிரம்ப அழகிய தேசிக ஞானப்பிரகாச பரமாசாரிய சுவாமிகள். துலாவூர் மடாலயம்.

"ஞானநெறி காட்டும் நிரம்ப வழகன்" என்று போற்றப்பெற்றவர் ஸ்ரீலஸ்ரீ சத்தியஞான நிரம்ப வழகிய தேசிகர். இப்பெருமான் நம் துலாவூர் ஆதீனத்தின் 17ஆவது பட்டமாக எழுந் தருளியிருந்த அருளாளர்; தென்தமிழும் வடமொழியும் கற்றுச்சிறந்த பெரும் புலமையாளர்; திருவிளையாடற்புராணம் இயற்றியருளிய பரஞ்சோதி முனிவ ரோடு உடன் பயின்றவர். திருவருட் பயன் சிவஞான சித்தியார் முதலிய சைவசித்தாந்த நூல்களுக்கு உரை யெழுதி உலகுக்கு உபகரித்தவர். மேலும் திருப்பரங்கிரிப் புராணம். திருவையாற்றுப்புராணம், சேதுபுராணம் ஆகிய தலபுராணங்களைச் சொல் நயமும், பொருள் நயமும், கற்பனை வளமும் கொழிக்கப் பாடியருளிய கவிஞர் பிரான். இவரியற்றியருளிய சேதுபுராணம், இராமநாதபுரம் அருங் கலை விநோதர் பொன்னுச்சாமித் தேவரவர்களின் வேண்டுகோளுக்கு இணங்க, யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலரால் பதிக்கப்பெறும் பெருமை பெற்றதெனின் அந்தப்புரா ணத்தின் சிறப்பினைக் கூறவும் வேண்டுமோ?

இந்த அரிய புராண நூலை நிறைவு செய்யும் வாழ்த்துப் பாடல் சிந்தனைக் குரியது. அப்பாடல் "மாது மலைவளர் காதல் வல்லி வாழ்க!" என்று தொடங்கு கிறது. அண்டபுவன மெல்லாம் ஈன்று புரந்தருளும் அன்னை பிறப்பு இறப் பில்லாப் பிராட்டி! அவள் மலைவளர் அன்புக் கொடி! முக்காலும் ஒரே படித்தாக நின்றருளும் ஆத்தாள். "வளர் காதல் வல்லி" என முக்காலப் பெய ரெச்சமாக அவள் குறிக்கப்படப் பெறுவது எண்ணி எண்ணி உணரத் தக்கது. அடுத்து "மாற்கருள்கூர் சிவராமநாதன் வாழ்க!" என்கிறார். சிவபெருமான் திருமாலுக்குச் சக்கரப் படை தந்தருளியவன். எனவே அம்மையை வாழ்த்திய வாயோடு



அப்பனை வாழ்த்துகின்றார். இலங்கைப் போர் முடித்துத் திரும்பிய திருமாலின் அவதாரமாகிய இராமபிரான் சேதுக் கரைத் திடலில் கோயில் செய்து சிவபெருமானை வழிபட்ட இடம் இராமேச்சரம். இதனை அப்பரடிகள்

"கடலிடை மலைகள் தம்மால்
அடைத்து, மால் கருமம் முற்றித்
திடலிடைச் செய்த கோயில்திரு
இராமேச்சரம்"

என்று குறிப்பிடுவார். மலைகளைக் கொண்டு இராமபிரான் அடைத்த அணை, சேது அணை. அந்த இடத்துத் தீர்த்தம் சேது தீர்த்தம் எனப் போற்றப் பெறுகிறது; கங்கையும் சேதுவும் தீர்த்தங்களில் சிறப்புடையவை என்பது வழிவழி நம்பிக்கை. ஆதலால் கங்கைக் கரைக் காசி – சேதுக்கரை இராமேச்சர யாத்திரை புனித யாத்திரையாயிற்று! எனவே "சேதுவுடன் தனுக்கோடி தீர்த்தம் வாழ்க!" எனத் தீர்த்தத்தை வாழ்த்துகிறார். அடுத்து எல்லாத் தலங்களுக்கும் வாழ்த்துக் கூறி, "மாதவர்கள் மிக வாழ்க" என்கிறார். "மிக வாழ்க!" என்பது நீடு வாழ்க! எனப் பொருள்படும்". பொய்தீர் ஒழுக்க நெறி நின்றாரே மாதவர்கள்.

"பொறிவாயில் ஐந்தவித்தான்
பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ்வார்"

என்னும் வள்ளுவர் வாய்மொழி" மாத வர்கள் மிக வாழ்க" என்ற சொற்றொட ருக்குள் பொதிந்து மிளிரும் அருமையை உணர்க!

நிறைவாக "இராமநாத மாமுனிவன் நீடூழி வாழ்க!" என்றார். இராமநாத மாமுனிவன் யார்? பாடலின் முதலடியில் வாழ்த்துப் பெற்ற அன்னையாகிய மலைவளர் அன்புக் கொடி படரும் தவமலை; ஞானமலை; இராமனுக்கு நாயகனாகிய மாமுனிவன். அவன் நீடூழி வாழ்க என்றார்.

மலர்ந்த மலர் மணக்கும்; மலர்ந்த மனத்தில் அன்பு மணக்கும். மலர்ந்த மலரின் இதழ்கள் தேன் சொரியும். மலர்ந்த மனத்தினரின் வாயிதழ்கள் வாழ்த்தைச் சொரியும். வாழ்த்தும் மனமும் வாயும் வாய்க்கப் பெற்றால் வையமெலாம் வாழும். நிரம்ப அழகிய தேசிகரின் வாழ்த்து நிரம்ப அழகியது. அவர் வழியில் நாமும் 'அமுதசுரபி' வாயிலாக வாழ்த்துவோமாக!

மாதுமலை வளர்காதல் வல்லி வாழ்க!
மாற்கருள்கூர் சிவராமநாதன் வாழ்க!
சேதுவுடன் தனுக்கோடி தீர்த்தம்
வாழ்க!
திகழ்தீர்த்தம் அறுநான்கும் சிறந்து
வாழ்க!
நாதன்இரா மேச்சுரனை அருச்சிப்
போரும்
நல்தானம் தலம்அனைத்தும் நயந்து
வாழ்க!
மாதவர்கள் மிக வாழ்க! இராம நாத
மாமுனிவன் நீடூழி வாழ்க, மாதோ!

## திருவாளன் திருநீறு

— தவத்திரு சாயிமாதா சிவ பிருந்தாதேவி அன்னையார். புதுக்கோட்டை திலகவதியார் திருவருள் ஆதீனம்.

திருநாவுக்கரசு நாயனாருக்குப் பெற்றோரிட்ட பெயர் மருள்நீக்கியார். சைவத்தை விட்டு சமண சமயத்தில் சார்ந்து தருமசேனராகித் தீராத வயிற்று நோய்பெற்றார்.

தம்பியார் உளராக வேண்டும் என வைத்த தயவால் நூல் தாங்காமல் கற் பிளைத் தாங்கி நின்றவர் திலகவதி யார்!

திருவாளன் திருநீறு திலகவதியார்
உவந்தளிப்ப
பெருவாழ்வு வந்ததென்று தம்பியார்
பெற்றுத்
தீராத வயிற்று நோயைத் தீர்த்துக்
கொண்டவர் ஆவர்.

தம்பியார் மருள்நீக்கியாராகவா?
அல்ல;

தருமசேனராகவா? அல்ல; அல்ல;

தம்பியார் தேவாரம் பாடும் 4,5,6 திருமுறைகள் பாடும் திருநாவுக்கரசு நாயனாராக உயரவேண்டும் என்பதற்காகத் தம்மை மணப்பதாக நிச்சயிக்கப்பட்ட கலிப்பகையார் போர்க்களத்தில் உயிர் துறந்ததும், தாயும் தந்தையும் அற்ற மருள் நீக்கியார், தமக்காகத் தமக்கையார் உயிர்வாழப் பிரார்த்தித்ததும் தன் தம்பியார் திருநாவுக்கரசு நாயனாராகத் திகழ வேண்டும் என்பதற்காக அந்த மாதரசி, நூல் தாங்காமல் கற்பினைத் தாங்கி உயிர் வாழ்ந்தார்.

தீராத வயிற்று வலியினால் துடிதுடித்த தருமசேனருக்கு, சமணர்கள் மந்திரமும், மருந்தும் குணந்தராது போகவே, திருவதிகை வீரட்டானத்தில் கோயில் திருத்தொண்டுகள் செய்து கொண்டு, இறைவனது திருக்கோயிலுக்கெதிரே திருமடம் அமைத்துச் சமயப் பணிகள் ஆற்றிக் கொண்டிருந்த திலகவதியாருக்குத் தம்பியார் ஆளனுப்பிச் செய்தி தெரிவிக்க, பொல்லாத சமணர்களின் இருப்பிடத்திற்குத் தாம் வரஇயலாதென்றும், தம்பியார் தம் இருப்பிடமான திருவதிகை வீரட்டானத்திற்கு வரும்படியும் பணித்தார். அவ்வண்ணமே அக்காளை நினைந்து அவர் தம் இருப்பிடம் வந்தார் தருமசேனர். திருவதிகை வீரட்டானேஸ்வரர் திருமுன்பு,



தம்பியார் உளராக
தேவாரம் பாடும் திருநாவுக்கரசராக
திருவருள் பெற வேண்டுமென
திருவாளன் திருநீரைத் திலக
வதியார் உவந்தளிப்பப்
பெருவாழ்வு வந்ததெனப் பெற்று
அத் திருநீறைப் பூச, வயிற்றுவலி
வந்த இடம் தெரியாது நீங்கியது.

விளக்கென்று ஒன்றிருந்தால் அதற்குத் தூண்டுகோல் இருந்தால்தான் அது சுடர்விடும்.

"தூண்டுதவ விளக்கனையார்" எனத் திலகவதியாருக்கு மணிமகுடம் சூட்டுகிறார் தெய்வச் சேக்கிழார் - தம் பெரிய புராணத்தில்.

திருவாளன் திருநீறு திலகவதியார்
உவந்தளிப்பப்
பெருவாழ்வு வந்ததென்று அதனைத்
திருநாவுக்கரசர் பெற்றுக் கொண்டார்.

அத்தகைய நம்பிக்கையுடன் திருநீறு அணிவோமானால் பெருவாழ்வும் பெருநலமும் பெறலாம். பெறுவோமாக!

# முதுகிழமை

அனுராதா ரமணன்

"நீங்க கட்டாயம் வரணும் தாத்தா... நான் ஸ்டேஜ்லே இருந்து, ஸ்கிரீன் இடுக்கு வழியாப் பார்த்துட்டே இருப்பேன். நீங்க வரல்லையின்னா, நான் மேக்கப் எல்லாத்தையும் கலைச்சிடுவேன்..."

சிறுவன் கௌசிக், தாத்தாவின் முகத்தோடு முகம் பதித்து, அவரது முள் படர்ந்த கன்னத்தில் மூக்கைத் தேய்த்துக் கொண்டே கூறுகிறான்.

"வர்றேண்டா... தாத்தா சொன்னா - கண்டிப்பா வருவேன்..."

சுப்பையா,பேரனைத் தன்னிடமிருந்து மிகச் சிரமப்பட்டு பிரிக்கப் பார்க்கிறார்.

அவருக்குத் தெரியும்... பள்ளிக்கூட விழாவுக்குத் தன்னால் போகமுடியாது என்பது -குழந்தைக்குத் தெரியுமா...அது பாட்டுக்குக் கள்ளமில்லாமல் கூப்பிடுகிறது.

குழந்தைகள் கடவுளின் அம்சம் என்று அடிக்கடி அவர் மனைவி ராஜம் சொல்வாள்.

அவர்கள் மகன் கீர்த்தி வாசனும் சிறு வயதில் இப்படித்தான்... பாசத்தாலேயே இழைத்து வைத்த பொம்மை போல இருந்தான்.

அப்புறம் வளர வளர - தெய்வம்தான் கொஞ்சம் விலகிப் போனதோ - இல்லை - கடவுள் விலகியதாலேயே அவன் இப்படி ஆனானோ தெரியவில்லை.

ரொம்பவும் மாறிவிட்டான்.

அதுவும் நித்யா அந்த வீட்டு மருமகளாக வந்தபின் - கொஞ்ச நஞ்ச மரியாதையும் காற்றில் பறந்து போய் விட்டாற்போல உணர்ந்தார் சுப்பையா.

ராஜம்தான், பிள்ளை மருமகளின் அலட்சியப் போக்கையும் கணவரின் கண் முன் விரிவாகக் காட்டாமல், அவரது உள்ளக் குமுறலையும் மகன் காது வரையில் போக விடாமல் - ஏதோ கயிற்றில் நடக்கும் கழைக்கூத்தாடிப் பெண்போல வித்தை காட்டிக் கொண்டிருந்தாள். இப்போது அவளும் இல்லை. போய் நாலு வருஷங்களுக்கு மேலாகிறது...

சுப்பையா மனசுக்குள் விம்முவார்.

"புருஷனை இழந்த பொம்பிளைங்களை 'ஐயோ பாவம்'னு சொல்றதுக்காவது நாலு பேர் இருக்காங்க. ஆனா - பெண்டாட்டி செத்ததுக்கு அப்புறம் - அதுவும் அறுபது, எழுபது வயசுக்கு அப்புறம் - ஒரு புருஷன் படற பாட்டை ஏன் யாருமே நினைச்சுப் பார்க்கறதே இல்லே...'

நிஜம்தான். ராஜம் எப்படியோ மூன்று பிள்ளைகளின் வீட்டிலும் சரி சமமாய் புகுந்து வளைய வருவாள். தான் போகும் இடத்துக்கெல்லாம், சுப்பையாவையும் இழுத்துக் கொண்டே போவாள்.

"அவர் என்னத்துக்கு... நீங்க போயிட்டு வாங்களேன்".

- இப்படி எந்த மருமகள் சொன்னாலும், மலர்ந்த முகத்தைச் சுருக்காமல், சிரித்தபடி சொல்லுவாள்.

"இருக்கட்டும். இங்கே இருந்தா - குழம்புல உப்பு இல்லே, ரசத்துல கொத்துமல்லி போடல்லையின்னு ஆயிரம் நொட்டு சொல்லுவார். அதெல்லாம் நான்தான் இவருக்கு லாயக்கு..."

ஒரே போடாய் போட்டு விட்டுக் கிளம்பி விடுவாள். பஸ் நிறுத்தத்தில் வந்து நின்றபின்தான், கணவரின் முகத்தை சாடையாய் பார்த்துச் சொல்லுவாள் :

"என்ன, முகம் ஒரேயடியா எண்ணெய்ச் சொம்பு மாதிரி இருக்கு. உங்களாலே ஒரு சிரமமும் இல்லைதான். ஆனாலும் அங்கே நான் விட்டுட்டு வந்தா, உங்க நாட்டுப் பொண், உங்களை வீட்டுக்குக் காவல் வச்சிட்டு வெளியிலே கிளம்பிடுவா... வேளா வேளைக்குக் காபி, சாப்பாடு கிடைக்காது. உங்களாலே இதை வாய் திறந்து சொல்லவும் முடியாது. கடைசியிலே நான் வந்ததும், என் மேலே எரிஞ்சு விழுவீங்க... உங்களைத் தனியா விட்டுட்டுப் போனா - அப்புறம் என் நினைப்பு முழுக்க இங்கேயேதான் சுத்தும். அதுக்காகத்தான் - 'கிளம்புங்க'ன்னு சொன்னேன்".

இந்த வார்த்தையைக் கேட்டதும்தான் சுப்பையா சிரிப்பார்.

"ஆமா போ... எனக்குத் தெரியாதாக்கும்... நானும் ஹைஸ்கூல்லே வாத்தியாரா இருந்து முப்பத்தஞ்சு வருஷம் குப்பை கொட்டியிருக்கேனாக்கும்... அப்ப ஒரு தடவை இப்படித்தான்... நைன்டீன் ஸிக்ஸ்டி செவன்லே..."

ராஜம் முகம் சுளிக்காமல் அவர் சொல்வதைக் கேட்டுக் கொள்வாள். கணவர் ஆசிரியராக இருந்ததும், அவரிடம் பாடம் பயின்ற மாணவர்களை அவர் எப்படியெல்லாம் படிக்க வைத்தார் என்பதையும் - அவர் எத்தனை தடவை சொன்னாலும் அவளுக்கு அலுக்காது, சலிக்காது...

ஆனால் பெற்ற பிள்ளை, மருமகள்கள் காதைப் பொத்திக் கொண்டு ஓடுவார்கள்.

பெரியவன் முரளி அம்மாவைக் கூப்பிட்டுச் சொல்வான்...

"அம்மா, அவர் வாத்தியார் பெருமையைக் கொஞ்ச நேரம் மூட்டை கட்டி வைக்கச் சொல்லேன். என் மாமனாருக்கு நேரம் கிடைக்கறதே அபூர்வம்... இப்பத்தான் பொண்ணைப் பார்த்து, நாலு வார்த்தை பேசிட்டுப் போகலாம்னு வந்திருக்கார். அவரைப் பிடிச்சு வச்சிட்டு அறுக்கறார் பார்..."

ராஜத்துக்கு அவமானத்தில் முகம் சிவக்கும். ஆனாலும் காட்டிக் கொள்ளாமல், பக்குவமாய்ப் பேசி கணவரை அந்த இடத்திலிருந்து நகர்த்தி...

'அந்த ராஜம் இப்பொழுது எங்கே போனாள்?

'அட, போகத்தான் போனாளே... முதல்லே என்னை அனுப்பி வச்சிட்டுப் போயிருக்கக் கூடாதோ... அவ எப்படியோ சமாளிச்சுடுவா... எனக்குத்தான் அந்த சாமர்த்தியம் போதல்லே...'

நிஜமாகவே சுப்பையாவுக்குக் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டாற் போலத்தான் இருந்தது.

சொந்தப் பிள்ளை - மருமகனானாலும் - எந்த வார்த்தையை நெஞ்சாரச் சொல்கிறார்கள், எதை உபசாரமாய் சொல்கிறார்கள் என்று புரியவில்லை.

முன்பெல்லாம், குழந்தை இதுபோலக் கூப்பிட்டால், அவர் பாட்டுக்கு ஜரிகை உதிர்ந்த எட்டு முழ வேட்டியைக் கட்டிக் கொண்டு, இருப்பதில் நல்லதாக ஒரு சட்டையை எடுத்து மாட்டிக் கொண்டு கிளம்பி விடுவார்.

"நானும் கௌசிக்கும் முன்னாலே போறோம்... அப்புறம் யார் யார் வர்றீங்களோ - நிதானமாப் புறப்பட்டு வாங்கோ..."

கீர்த்தியை உள்ளே அழைத்துப் போய் நித்யா தாளிப்பாள்.

"கிழம் கிளம்பியாச்சோ இல்லையோ... காரியம் உருப்பட்டாப்பலதான். அங்கே போய் - தான் வாத்தியாரா இருந்து, டி.இ.ஒ. வந்தப்ப - எப்படியெல்லாம் தன்னைப் பாராட்டினார்னு பேசிப் பேசி - கான்வென்ட்டையே நாற அடிக்கப் போறார். எல்லாம் என் தலையெழுத்து..."

கீர்த்தி உடனே அம்மாவிடம் போய் கடுப்படிப்பான்.

"அந்த மனுஷனைக் கொஞ்சம் அடக்கி வையேன்... எங்க மானம் போறது..."

ராஜம் மௌனமாய் எழுந்து போவாள்.

கணவனிடம் அன்றைய சாயங்காலம் கவனிக்க வேண்டிய மிக முக்கியமான வேலை இருப்பதாகச் சொல்லுவாள்.

"என்னங்க, ஸ்கூல் ஃபங்ஷனுக்கா கிளம்பறீங்க?"

"ஆமா... ஏன் - நீயும் வர்றியா... உன் பேரன் சத்ரபதி சிவாஜியா வந்து அமர்களப்படுத்தப் போறான். நீ பார்த்தா சந்தோஷப்படுவே..."

"அதுக்கில்லே... சின்னவன் வீட்டுக்கு இன்னிக்கு வர்றேன்னு சொல்லியிருக்கீங்களே... மறந்து போச்சா?"

"இன்னிக்கா... நாளைக்கில்லே வர்றதாச் சொல்லி இருக்கோம்... ராஜம் இன்னிக்கு வெள்ளிக்கிழமை. சனிக்கிழமைதான் அவங்க எங்கேயோ சினிமாவுக்குப் போறதாச் சொன்னாங்க.. குழந்தைங்களைப் பார்த்துக்க நம்மளை வரச் சொல்லியிருக்காங்க..."

"பரவாயில்லே. நாம இன்னிக்கே போவோம்..."

"அப்படி சொல்லாமக் கொள்ளாமப் போனா - உன் சின்னப் பையன் திட்டுவான்..."

"ஐயோ - உங்களுக்கு நான் எத்தனை சொன்னாலும் தெரியாது. இதப் பாருங்க, எனக்கு நெஞ்சை வலிக்கிறது... டாக்டர்கிட்டப் போயிட்டு வரலாம்னு இருக்கேன்... நீங்களும் துணைக்கு வாங்க..."

இது போதும் சுப்பையாவை அடக்க...

அரண்டு போய் விடுவார். அப்புறம் இரவு எட்டு மணி வரையில் 'இதோ இதோ' என்று போக்குக் காட்டிக் கொண்டே இருந்து விட்டு - கடைசியில் 'எனக்கு இப்ப தேவலை - எதுக்கும் ரொம்ப வலிச்சுதுன்னா நாளைக்குப் பார்த்துக்கலாமே' - என்பாள் ராஜம்.

அதெல்லாம் ஒரு காலம். ராஜம் போன பின்புதான் சுப்பையாவுக்கு இதெல்லாம் புரிந்தது.

"நான் வாத்தியாரா இருக்கறப்ப..."

இப்படி அவர் ஆரம்பித்தாலே - பிள்ளைகள் முகத்தில் அறைந்தாற்போல இப்படிச் சொல்லுவார்கள்.

"போதும்பா... கொஞ்ச நேரம் தொந்தரவு பண்ணாம இருங்க..."

"உங்க பிரதாபத்தை எல்லாம் அப்புறம் அளக்கலாம். சீக்கிரம் சாப்பிட்டு எழுந்திருங்க... உங்களைப் பார்த்துப் பார்த்துக் குழந்தைகளும் சாப்பிட உட்கார்ந்தா ஒரு மணி நேரம் இழுத்தடிக்கறாங்க..."

குழந்தைகள் அவசரப்பட்டுச் சோற்றை வாயில் அடைத்துக் கொள்ளக் கூடாதென்றும், நன்றாக மென்று விழுங்க வேண்டும் என்றும் பள்ளிக் கூடத்தில் மாணவர்களுக்கு அன்புடன் போதித்த சுப்பையா, தலைகுனிந்து எழுந்திருக்க வேண்டிய நிலை...

இதெல்லாம் சுப்பையாவை ஒரு விதமாய் பதப்படுத்தி விட்டது. பிள்ளைகள் முகம் சுளித்து - அரை குறையாய் முணுமுணுத்தாலே - புரிந்து கொண்டு நகர்ந்து விடத் தயாராக இருந்தார் அவர்.

ஆனால் பேரப்பிள்ளைகளுக்குத் தெரிகிறதா... ராப்பகலாய் தன்னோடு சேர்ந்து வசனம் தயாரித்து, வேஷப் பொருத்தம் பார்த்து, வீட்டுக்குத் தெரியாமல் பேரனின் பள்ளிக்குப் பகல் இடைவேளையின் போது போய், ஆசிரியைகளைப் பார்த்து - பேரனை நல்லபடியாய் தயார் செய்த தாத்தா - தனது மேடை பிரவேசத்தைப் பார்க்க வராமல் போய் விடுவாரோ என்கிற பயம் இருக்காதா...

நியாயமான பயம்தானே...

"நீங்க இப்படித்தான் சொல்லுவீங்க. கடைசியிலே வரவே மாட்டீங்க... நான் நம்ப மாட்டேன்... ஒ... ஒ..."

கௌசிக் கீழே விழுந்து புரண்டு அழ, கீர்த்தி அப்பாவை ஒரு அதட்டல் போடுகிறான்.

"அவன் அப்படித்தான் கடைசி நிமிஷத்துல எதையாவது சாக்கு வச்சுட்டு ஸ்டிரைக் பண்ணுவான். நீங்க பாட்டுக்குக் கிளம்புங்க. முரளி பொண்ணை இன்னிக்கு காலேஜ் அட்மிஷனுக்காக யார்கிட்டயோ சிபாரிசுக்கு அழைச்சிட்டுப் போறானாம். சின்னதுக்கு மிட் டெர்ம் எக்ஸாம்... கொஞ்சம் கவனிக்கலையின்னா மட்டையத் தூக்கிட்டு வெளியில கிளம்பிடும்... நீங்க போய் அதுக்குச் சொல்லிக் கொடுங்க... டிராமா என்ன... பெரிய டிராமா..."

குழந்தையின் கண்களில் குளம் கட்டியிருந்த கண்ணீரைக் கண்டு நெஞ்சே விண்டு போய் விடும்போல வலித்தது சுப்பையாவுக்கு.

அப்பொழுதுதான் சொன்னார் :

"வர்றேண்டா... தாத்தா சொன்னா கண்டிப்பா வருவேன்..."

சிறுவன் நம்பிக்கையில்லாமல் பார்த்துக் கொண்டிருந்தான்.

மியூசிக் அகடமி ஹால் நிரம்பி வழிகிறது. சுப்பையா நிலை நீச்சு தெரியாமல் முண்டியடித்துக் கொண்டு முன்னேறினார்.

இன்னும் கொஞ்சம் முன்னால் வந்திருக்கலாம். எங்கே, பெரியவன் வீடு அண்ணா நகரில். கையில் சில்லறைத் தட்டுப்பாடு இல்லாமல் இருந்திருந்தால் - ஓர் ஆட்டோ பிடித்தாவது வந்திருக்கலாம்...

உள்ளே போகப் போக - யார் யாரோ முதுகுக்குப் பின்னே தள்ளுவது போல...

பின் இருக்கைகள் எல்லாம் நிரம்பி வழிந்தது... அதோ... ஆறாவது வரிசையில் கீர்த்தியும் நித்யாவும்... பார்த்துவிடப் போகிறார்களே என்கிற பயத்தில் 'சட்'டென இரண்டாவது வரிசையில் முதல் நாற்காலியில் கோழி குஞ்சு மாதிரி உட்காருகிறார்.

வியர்வையில் சட்டை தொப்பலாய் நனைய - நெஞ்சு படபடக்கிறது.



என்றோ ஒரு காலத்தில் தலைமையாசிரியரும், ஊர் பெரியவர்களுமாய் மாலை போட்டு, தங்களுடைய அன்புக்குரிய வாத்தியாரய்யாவைச் சரிசமமாய் அமர்த்திப் பிள்ளைகளின் ஆட்டத்தைப் பார்க்க வைத்தது இப்பொழுது நினைவில் நிழலாடுகிறது.

"உட்காருங்க அய்யா... நீங்க பொறுப்பெடுத்துட்டு தயார் செஞ்சிருக்கீங்க... எங்களைவிட, பிள்ளைங்களுக்கு உங்களோட அபிப்பிராயம்தான் வேணும்னு சொல்லுவாங்க..."

சுப்பையா தோள்பட்டையைக் குறுக்கியபடி உட்கார - யாரோ வந்து அவரது முதுகில் தட்டுகிறார்கள்.

"சார்... இது வி.ஐ.பி. வரிசை. நீங்க தயவு செஞ்சு..."

சுப்பையா நிமிர்ந்து பார்க்கிறார். முன் வரிசைக்கு அப்பொழுதுதான் தலைமை தாங்கும் கனவான், தன் பட்டாளத்துடன் வந்து கொண்டிருக்கிறார்.

பிரபல வங்கி சேர்மன் கல்யாண சுந்தரம் புன்னகை தவழும் முகத்துடன்...

அவரை நோக்கி வீடியோ வெளிச்சம் பளீரிட... பள்ளி விழாக் குழுவின் பணியாளர்கள் அவரை முதல் வரிசையில் அமர்த்தி - அவருடன் வந்தவர்களுக்காக இரண்டாவது வரிசையில் இடத்தை காலி செய்யச் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

சுப்பையா, சுருக்கம் விழுந்த சட்டையை நீவிக் கொண்டு எழுந்திருக்கிறார்... சேர்மனிலிருந்து வீடியோ படமெடுப்பவர் வரையில் அத்தனைப் பேருடைய பார்வையிலும் தான் ஒரு கண நேரத்துக்குப் பட்டுத் தெறிப்பதை உணர்ந்து குன்றிப் போகிறார்.

கீர்த்தி வாசனின் கரத்தை நித்யா சுரண்டுகிறாள்.

"அதோ பாருங்க, உங்க அப்பா..."

"இவர் எங்கே வந்தார் இங்கே..."

எட்ட இருந்தாலும் அவனது உதட்டசைவிலிருந்து வசவுகளைப் புரிந்து கொள்ள முடிகிறது சுப்பையாவினால்...

'இன்னிக்கு ராத்திரி பெரிய பூகம்பமே இருக்கு... ஐயோ கடவுளே...'

அவர் தனது மூக்குக் கண்ணாடியைத் துடைத்து மாட்டியபடி மெல்ல நகர, -

"சீக்கிரம் நகருங்க சார்... பெரிய மனுஷங்க எத்தனை நேரம் நிற்பாங்க..."

"இதோ... இதோ..."

சுப்பையா அவசரமாய் நகர, கால் செருப்பு எங்கேயோ சிக்கி 'பட்'டென சமயம் தெரியாமல் அறுந்து தொலைக்க -

அதையும் கையில் தூக்கிக் கொண்டு அவர் வேகமாய் நகர்ந்தார்.

## நம்மிடம்தான் அரும்பும்

என்.வி. கலைமணி

ஆண் :
சந்தனப் பொய்கையில் தாமரைப் பூத்தால்
உன்போல் தானிருக்கும்
சிந்தையைக் கிளரும் சோலையில் தென்றல்
உன்போல் தான் நடக்கும்

பெண் :
இளமையின் நடிப்பும் ஆண்மையின் துடிப்பும்
உன்போல் தானிருக்கும்
கிளர்ந்தெழும் காதல் விடியா இரவினில்
உன்னால் தான் இனிக்கும்

ஆண் :
ஆடலும் பாடலும் வாழ்கலை உயிரே
உன்னிடம் தானிருக்கும்
தேடரும் வாழ்க்கைத் தேவைக ளனைத்தும்
உன்னிடம் தானிருக்கும்

பெண் :
பெண்மையின் இரகசியப் பேழையின் சாவி
உன்னிடம் தானிருக்கும்
விண்ணையும் மீறி விரிந்திடும் அன்பு
உன்னிடம் தானிருக்கும்

ஆண் :
கரும்பை வில்லாய் ஏந்திய காமன்
கணைதான் நமையிணைக்கும்
விரும்பும் தீப ஒளிபோல் குழந்தை
நம்மிடம் தான் அரும்பும்!

"ஒரு நிமிஷம்... அவரைக் கூப்பிடுங்க..."

சேர்மன் கல்யாணசுந்தரத்தின் குரலில், சுற்றி இருந்தவர்களிடையே சலசலப்பு.

"யாரை... யாரை...?"

இதற்குள் குறிப்பறிந்து, ஹாலின் சுவரோரமாய் கும்பலோடுக் கலந்த சுப்பையாவைத் தேடிப் பிடிக்கிறார் சேர்மனின் உதவியாளர்.

"சார்... உங்களைச் சேர்மன் கூப்பிடறார்..."

"என்னையா...?"

"ஆமா... வாங்க..."

மறுபடி, கீர்த்தி, நித்யாவின் கண்களில் பட்டு, முன் வரிசைக்கு தயங்கியபடி நகர்ந்தவரை - எழுந்து நின்று, கைகளைப் பிடித்துக் கண்களில் ஒற்றிக் கொள்கிறார் கல்யாணசுந்தரம்.

"சார்... சுப்பையா சார்தானே நீங்க?"

"ஆ... ஆமா..."

"என்னைத் தெரியலையா... சுந்தா சார்... உங்க சுந்தா..."

"சுந்தா... யாரு... பிரணதார்த்தி பிள்ளை..."

"அவனேதான்... வாங்கோ..."

இதற்குள் மேடைக்கு அழைத்துப் போகப் பள்ளி தலைமையாசிரியர் வர... கல்யாணசுந்தரம், சுப்பையாவின் கைகளை விடாமல் பிடித்தபடி, அவரையும் மேடைக்கு அழைத்துப்போய் உட்கார்த்தி வைக்கிறார்.

அது மட்டுமின்றி தனக்குப் போர்த்த வந்த பொன்னாடையையும், பெரிய ரோஜாப்பூ மாலையையும் வாங்கி சுப்பையாவுக்குப் போட்டு, தான் மேடையில் இருப்பதையும் மறந்து, சுப்பையாவின் காலைத் தொட்டு வணங்கி, உணர்ச்சி வசப்பட்டுக் கண் கலங்குகிறார்.

சுப்பையாவுக்குக் கண்களை இருட்டிக் கொண்டு வருகிறது.

சுந்தா - அவருடைய மாணவன். பிரணதார்த்திக்கு வருமானம் பற்றாது. போதாக்குறைக்கு இளையாள் வேறு... அவள் மூலமாய் வரிசையாய் குழந்தைகள். சுந்தாவை சரியாய் கவனிக்கவே முடியாத நிலைமை...

பத்தாம் வகுப்பு வரையில் சுப்பையாதான் அந்தப் பிள்ளைக்குச் சகலமும்.

ஒலிப்பெருக்கியில் கல்யாண சுந்தரத்தின் கரகரத்த குரல்...

"குரு என்பதற்குத் தக்க உதாரணம் எங்க சுப்பையா வாத்தியார். படிப்பை விடவும் ஒரு மனிதனுக்கு பண்புதான் ரொம்பவும் முக்கியம் என்று அவர் அடிக்கடி சொல்வார். நல்ல பழக்க வழக்கங்கள்தான் மனிதனுக்கு நிஜமான சிநேகிதன் என்று சொல்வார்... ஏதோ மாணவர்களுக்கு வகுப்பு நேரத்தில் பாடம் சொல்லித் தருவது மாத்திரம்தான் நம் வேலை என்று அவர் இருந்திருந்தால் - இன்று பாங்க் சேர்மன் கல்யாணசுந்தரத்தை நீங்கள் பார்த்தே இருக்க முடியாது. புத்தகத்தை ஓரம் மடங்காமல் எப்படி வைத்துக் கொண்டு படிப்பது என்கிற அடிப்படை விஷயத்திலிருந்து - பகல் வேளைச் சாப்பாட்டை எல்லாரும் வீணாக்காமல் சாப்பிடுகிறார்களா என்பது வரையில் - சகலத்தையும் கவனிப்பவர் அவர்.

"அப்படி அவர் கவனித்ததினால்தான் - நான் பகல் சாப்பாட்டுக்குக் காலி டிபன் டப்பாவைக் கொண்டு வருவதை அவரால் கண்டுபிடிக்க முடிந்தது. எப்பொழுதையும் மெய்யுமாகப் பிடிபட்டேனோ - அந்த நிமிஷமே அவர் தனக்காக வீட்டிலிருந்து வந்த உணவை என் கையில் கொடுத்துச் சாப்பிட வைத்தார். ஒரு நாள், இரண்டு நாளில்லை, ஐந்து வருடம் போல - இவர் கைச் சாப்பாடுதான். இவர் கற்பித்த பாடம்தான். பள்ளியிலேயே முதலாவதாக வந்ததும், ஸ்காலர்ஷிப்பில் படித்ததும் அவரால்தான். ஆனால் படிப்புக்காக வெளிநாடு போன நான் பல கடிதங்கள் போட்டும் - விலாசத்தார் இல்லை என்று சுவரில் அடித்த பந்தாய் ஒவ்வொரு கடிதமும் திரும்பிவர நான் சோர்ந்து போனேன். மறுபடி சென்னை திரும்பியதும் சொந்த ஊருக்குப் போய் விசாரித்தேன். சுப்பையா சார், தன் பிள்ளைகளுடன் பம்பாய் போய்விட்டதாகத் தகவல் வந்தது... சிலர் சென்னையில்தான் இருக்கிறார் என்றார்கள்... இன்றளவும் என் குழந்தைகளிடம் தினமும் நூறு முறையாவது இவர் பெயரைச் சொல்லிக் கொண்டே இருக்கிறேன்".

விழாவிற்கு வந்திருந்த அத்தனைப் பேரும் பலமாய், மகிழ்ச்சியாய் கைதட்ட - வீடியோ காமிரா சமுத்திர அலை போலக் கைதட்டும் மக்களின் பக்கம் திரும்ப -

அதோ, கீர்த்தியும் நித்யாவும்கூடப் பெருமிதமாய் கைதட்டுகிறார்கள்.

கீர்த்தி யாரிடமோ, 'என் அப்பாதான்' என்று சொல்லிக் கொண்டிருக்கிறாள்.

திரையின் இடுக்கிலிருந்து முகத்தை மட்டும் வெளியே நீட்டிய கௌசிக் - தன் அருமைத் தாத்தாவை மாலையும் கழுத்துமாய் பார்த்து - வலது கை கட்டைவிரலை உயர்த்திக் காட்டுகிறான்.

என்ன காரணத்தினாலோ கிழவருக்குத் துக்கம் தொண்டையை அடைக்கிறது.

'சட்'டென்று ராஜத்தின் மடியில் தலை வைத்து இதமாய் படுத்து அழவேண்டும் போல...

ஃ



● டி.ஆர். ஜெயராமன்



● டி.ஆர். சுப்புராஜ்



● டி.ஆர். வரதராஜன



● டி.ஆர். கண்ணன்

# ஆலைகளில் ஓர் ஆலயம்



● டி.ஆர். தினகரன

"கணவனுக்கும் மனைவிக்கும் இடையே தோன்றும் உறவின் இறுக்கம் போல, முதலாளிக்கும் தொழிலாளிக்கும் இடையே உறவு, நெருக்கம் பெற்றால், தொழில் பெருக்கம் தானே பொங்கிப் பூரிக்கும்" எனக் காந்தியடிகள் ஒருமுறை கருத்துத் தெரிவித்தார்.

கணவனாய் முதலாளியும், மனைவியாய் தொழிலாளியும் இணைந்து செயலாற்ற இயலுமா? நேச உணர்வை நெடு நாட்கள் கொள்ள முடியுமா? முதலீடு செய்பவர், தம்மை வளப்படுத்திக் கொள்ளும் தனி முயற்சி என்னாவது? வர்க்க உணர்வற்ற தொழிலாளியின் வாழ்க்கை என்னாவது?

இத்தகைய வினாக்கள் தோன்றுவதில் வியப்பொன்றும் இல்லைதான்!

'இணைத்தால்' இயலும்! நெஞ்சார்ந்து நினைத்தால் முடியும்!' என

– குன்றக்குடி பெரியபெருமாள் –





● சாத்ராமசாமி நாயக்கர்



● தொடக்க நிறுவனம் ஜெயவிலாஸ் பஸ் அலுவலகம்

நடைமுறையில் நிரூபித்துக் காட்டியுள்ளது ஒரு நிறுவனம்!

காந்தியடிகளின் கருத்தை ஆதாரமாகக் கொண்ட முயற்சி, தொழில் முனைப்பில் ஒரு சிறிதும் சேதாரமில்லாத வளர்ச்சியை வரலாற்றுச் சாதனையாக நிலைநாட்டி உள்ளது.

சாதனை படைக்கும் களம் எது? சரித்திரம் உருவாக்கும் நிறுவனம் எது?

பெருந்தலைவரின் திருப்பெயரால் உருவான மாவட்டம் ஒன்று உண்டே?

ஆம், காமராசர் மாவட்டம்! அந்த மாவட்டத்தில் கைத்தறியாளர்கள் நிறைந்த ஒரு கோட்டை - அருப்புக் கோட்டை! அந் நகரின் வெளிப்புறத்தே, திருச்சுழி சாலையில், ஒரு சோலைக்குள் அமைந்திருக்கும் ஓர் ஆலை - காந்தியச் சிந்தனையின் பயிற்சிக்கு ஓர் இடமாகவும், முயற்சிக்கு ஒரு களமாகவும் திகழ்கிறது! அந்தப் பஞ்சாலை "ஸ்ரீ ராமலிங்கா மில்ஸ்" என அழைக்கப் பெறுகின்றது.

நட்புறவை உருவாக்க நடைமுறையில், திட்டமிட்ட சில நிகழ்ச்சிகள் இடையறாது பேணப்பட்டு வரும் பாண்மை, மேன்மைக்கு மூலமாய், மேலோங்கும் சீலமாய் அமைந்திருப்பது எண்ணிப் பார்க்கத்தக்கது.

ஆலையில் வேலை பார்க்கும் நான்கு தொழிலாளிகள் வாரந்தோறும் தேர்வு செய்யப் பெறுகின்றனர். அந்தத் தொழிலாளிகளின் குடும்பங்கள் - குழந்தைகள் பெரியவர்கள் குடும்பத்திலுள்ள அனைவரும் - ஒவ்வொரு வெள்ளிக்கிழமையிலும் முன்னிரவு நேரத்தில் ஆலைக்கு அழைக்கப்படுகின்றனர்! ஆலைக்குச் சொந்தமான கார், அவரவர் வீட்டுக்குச் சென்று, தேர்வு செய்யப் பெற்ற தொழிலாளியின் குடும்பங்களை அழைத்து வருகிறது! குடும்பங்களிலுள்ள மொத்த உறுப்பினர்களை அறிந்து, எல்லோரும் இருக்கைகளில் அமருதற்கு ஏற்ப, ஆலைக்குள் ஆசனங்கள் அமைக்கப்பெறுகின்றன.

ஆலையின் 'பி.ஆர்.ஓ' வருகை தரும் தொழிலாளிகளை, அன்போடு வர...



● ராமலிங்கா ஆலையைத் தலைவர் காமராஜ் அவர்கள் தொடங்கி வைக்கிறார்.



மீனாட்சி சொக்கநாதர் கோயில் திருக்குளத் திருப்பணி

வேற்று, அமரச் செய்கிறார். நான்கு குடும்பங்களும் வந்து அமர்ந்திருப்பதை அறிந்து கொண்ட ஆலை அதிபர், ஆம் முதலாளி, வீட்டுக்கு ஃபோன் பண்ணித் தமது வாழ்க்கைத் துணைவியாரை வரச் செய்கிறார். அதிபரும், அவரது மனைவியாரும் அமர்ந்திருக்கும் தொழிலாளர் குடும்பங்களுக்கு இடையே வந்து, கண்களில் பரிவும், உதடுகளில் புன்னகையும் தோன்ற, முகத்தில் அன்பொளிர அமர்ந்தபோது, எல்லோரும் எழுந்து நிற்கின்றனர். எழுந்தவர்களை அன்போடு வேண்டி அமரச் செய்கிறார் ஆலை அதிபர். முதலாளிக்கு முன்னே, சரி சமமாக அமருதற்குச் சங்கடப்படும் தொழிலாளிகள், சற்றே இருக்கையில் சரியாக உட்காராது, நெளிந்து கொண்டிருக்கும் நிலையைக் கண்ணுறும் அதிபர், "ஏம்பா! நல்லா உட்காருப்பா! நானும் உன்னைப் போல ஒரு தொழிலாளிதாம்பா! நான் முன்னே வந்த 'முதல்' தொழிலாளி! நீ பின்னே வந்து சேர்ந்து கொண்டவன்! அவ்வளவுதாம்பா வித்தியாசம்! உட்காரு! நல்லா உட்காரு!" என வாஞ்சையோடு கூறிச் சூழலைச் சுகப்படுத்தி, நட்புறவை விதைக்கத்தக்க 'நல்ல நஞ்சை'யாக்கி மகிழ்கிறார்.

பின்னர், ஒவ்வொரு தொழிலாளியின் வீட்டுப் பிரச்னைகளைக் கேட்டு அறிகின்றனர் அதிபரும், அவரது மனைவியாரும்! கேட்பதோடு நின்று விடுவதில்லை! ஏற்பட்டிருக்கும் சிக்கல்களை மாற்றவும், நீக்கவும் உதவியும் உரிய ஆலோசனையும் அளிக்கப்பெறுகின்றன. அப்போது தொழிலாளியின் அகத்துள் முகிழ்க்கும் ஊக்கமும் உரிய நன்றியும் ஒன்றி, முகத்துள் நின்று ஒளிருவதை நம்மால் கண்டு மகிழ முடிகிறது!

சோலைக்குள்ளே இருக்கும் ஸ்ரீராமலிங்கா ஆலைக்குள்ளே, ஓர் ஆன்மிகக் கூடம் பிரார்த்தனை செய்வதற்கென்றே பிரத்யேகமாகக் கட்டப்பட்டுள்ளது. தொழிலாளர்களும் அவர்களது குடும்பத்தினரும் ஆலை அதிபருடனும் அவரது மனைவியாருடனும் அந்த ஆன்மிகக் கூடத்திற்கு அழைத்துச் செல்லப் பெறுகின்றனர். சீரார் திருவேங்கட மாமலை ஆரா அமுதப் பெருமானின் திருவுருவப் படம் நடுநாயகமாக விளங்க, சைவ வைணவக் கடவுளர்களின் படங்கள் வரிசையாகத் திகழும் வழிபாட்டுக் கூடத்தில் ஆராதனை செய்யப்பெற்றதும், வண்ண நாடாக்களில் இணைக்கப்பெற்றுள்ள, ஸ்ரீராமலிங்கா ஆலையின் முத்திரையுடன் விளங்கும் வெள்ளி மெடல்களை ஒவ்வொரு தொழிலாளிக்கும் உவகையுடன் சூட்டுகிறார் அதிபர். ரவிக்கைத் துண்டுடன் கூடிய மஞ்சள் முதலான மங்கலப் பொருள்களைத் தொழிலாளர்களின் மனைவிமார்களுக்கு அன்போடு அளித்து அகமகிழ்கிறார் அதிபரின் மனைவி.

வழிபாட்டுக் கூடத்திலிருந்து வெளியே வந்த முதலாளியும், தொழிலாளிகளும் வரிசையாக அமர்ந்து, முன் மண்டபத்தில் ஃபோட்டோ எடுத்துக் கொள்கின்றனர். குடும்பத்துடன்தான்!

நேராக விருந்தினர் மாளிகைக்கு அழைத்து வரப்பெற்று, வகை வகையாகச் சிற்றுண்டி பரிமாறப்பெற்ற இலைகளுக்கு முன்னே அமர்ந்து, அதிபரின் குடும்பமும் தொழிலாளர் குடும்பங்களும் கலகலப்பாக உரையாடிக் கொண்டே உண்டு மகிழ்கின்றனர்.

தயாராக நிற்கும் கார்களில் தொழிலாளர் குடும்பங்களை அவரவர் வீட்டுக்கு அனுப்பி வைக்க, ஆலையின் 'பி.ஆர்.ஓ.' மட்டுமல்ல, அதிபரும் அவர்தம் மனைவியாரும் கார்களுக்கு அருகே நின்று கைகூப்பி விடை கொடுக்கும் காட்சி, உண்மையாகவே நம் உள்ளத்தை நெகிழ்ச்சியுடன் சிலிர்க்க வைத்து விடுகிறது! இத்தகைய நிகழ்ச்சி அருப்புக்கோட்டை ஸ்ரீராமலிங்கா மில்ஸில் எப்போதோ அல்ல! வாரா வாரம் வருகிற வெள்ளிக்கிழமைகள் தோறும் சீராகவும் சிரத்தையாகவும் நடைமுறைப்படுத்தி வருகிற நெகிழ்ச்சியூட்டும் நிகழ்ச்சி! முதலாளி - தொழிலாளி நட்புறவை மகிழ்ச்சியோடு தழைக்கச் செய்யும் மனமார்ந்த முயற்சி! கணவன் மனைவிக்கிடையே கனிந்துருவாகும் உறவை, முதலாளி, தொழிலாளிக்கிடையே முகிழ்க்கச் செய்யும் காந்திய உணர்ச்சி!

உணர்ச்சியும், முயற்சியும் உள்ளபடியே மலர்ச்சி பெற்று, உறவின் நன் மணம் கமழ்ந்து கொண்டிருக்கும் காரணத்தால்தான், அருப்புக்

கோட்டை ஸ்ரீ ராமலிங்கா ஆலை, 'பணி முடக்கம்', 'பணி நிறுத்தம்' ஆகியவற்றைப் பார்த்தறியாப் 'பதம்' பெற்றுத் திகழ்கிறது!

இத்தகைய அபூர்வ அணுகுமுறையை, அதிசய அனுசரணையை ஆளுமைப்படுத்தி வரும் அற்புத மனிதரை, ஆலையின் அதிபரை அறிந்து கொள்ள வேண்டாமா?

அருப்புக்கோட்டை சாது ராமசாமி நாயக்கருக்குப் 'பஞ்ச பாண்டவர்கள்' போல் ஐந்து புதல்வர்கள்! இவரில் அர்ச்சுனன் போல் விளங்குபவர் தினகரன்! அவரே ஆலையின் அதிபர்.

ஐம்பது வயதைக் கடந்த அதிபர் டி.ஆர். தினகரன், கதராடை பூண்ட காந்தீய நெறியாளர்; பொறியியல் அறிவாளர்! கோவை ஸ்ரீராம கிருஷ்ணா மிஷன் வித்யா சாலையில் இளமையில் எஸ்.எஸ்.எல்.ஸி. வரை பயின்று கோவை பி.எஸ்.ஜி. பொறியியல் கல்லூரியில் பொறியியல் பட்டம் பெற்ற காரணத்தால், பகவான் ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோரிடம் மிகுந்த பற்றுக் கொண்டவர்! தமிழின் ஆன்மிக பக்தி இலக்கியங்களில் ஆழ்ந்த ஈடுபாடு உடையவர்! அருப்புக்கோட்டைக் கம்பன் கழகத் தலைவர்; அரிமா சங்க நிறுவனர்; தொழிலாளர் கல்வி மத்திய வாரியம் மதுரை மண்டல ஆலோசனைக் குழுத் தலைவர்; காந்தி ஆசிரம உருவாக்க நாயகர்; திருச்சுழி ரமண மகரிஷி வித்யாபீட ஸ்தாபகர்; எல்லாவற்றிற்கும் மேலாகப் பக்குவப்பட்ட உள்ளத்தைப் பெற்ற பண்பாளர்!

தொழிலாளர்களின் வாழ்வில் எதிர்ப்படும் துயரங்களைக் கண்டறிந்து, அவைகளை நீக்கி விடுகின்ற நிலையில்தான், ஆலையில் பணியாற்றுகிறபோது கவலையால் சோர்ந்து விடாது, உற்சாகத்தோடும் ஊக்கத்தோடும் வேலை செய்ய முடியும். ஈடுபடுத்தும் பணிகளில் ஈடுபாட்டுடன் அனைத்துத் தொழிலாளர்களும் பங்காற்றுகிற நிலையில், திட்டமிட்ட உற்பத்தி கட்டாயம் பெருக்கெடுக்கும். அத்துடன் உறவு பலப்படுகிறபோது 'நமது ஆலை', 'நமது தொழில் நிறுவனம்' என்கிற உரிமையுணர்வுடன் வேலையில் உற்சாகமாகக் கவனத்துடன் பணி செய்ய இயலும். இத்தகைய நோக்கங்களை அடிப்படையாகக் கொண்டே வெள்ளிக்கிழமை நிகழ்ச்சிகளைத் தொழிலதிபர் டி.ஆர். தினகரன் தொடங்கினார். பணியாற்றும் அனைத்துத் தொழிலாளர்களின் உள்ளார்ந்த அன்பிற்கு உரியவரான அதிபர், அனைத்துத் தொழிலாளிகளின் வாழ்வியல் நிலைகளைத் தெளிவாக அறிந்திருக்கிறார். "அறிந்து கொண்ட நோக்கமே, தேவைப்படுகிற போது, வேண்டியவற்றைக்கொடுக்கத் தானே?" எனக் கூறும் அதிபர், அவ்வப்போது தொழிலாளர்களுக்கு உதவுவதை வழக்கமாகக் கொண்டுள்ளார்!

ஆண்டுதோறும் 'காந்தி ஜயந்தி'யை முப்பெரும் விழாவாகக் கொண்டாடிவரும் ஸ்ரீராமலிங்கா ஆலை, ஆரவாரமின்றி ஆத்மார்த்தமாக நன்றி உணர்வுக்கும் நட்புறவுக்கும், மரியாதையும், மனமார்ந்த ஆராதனையும் செய்யும் ஒரு வித்தியாசமான விழாவாக விளங்கச் செய்து வரும் அருமை, அருப்புக்கோட்டை ஸ்ரீராமலிங்கா ஆலைக்கே உரிய தனிப்பெருமை!

'காந்தி ஜயந்தி', 'நிறுவனர் நினைவு நாள்', 'நட்புறவு நாள்' எனப் பல லாண்டுகளாக, அருப்புக்கோடடைப் பகுதியிலுள்ளோர் அனைவரும் அறியுமாறு எடுக்கப்பெறும் முப்பெரும் விழா நாளான அக்டோபர் இரண்டு, உதயமாகும் வேளையிலேயே, ஆலையின் இதயமான பிரார்த்தனை மண்டபத்தில், காந்திஜிக்குப் பிரியமான ராமநாமப் பஜனை தொடங்கி விடுகிறது! பஜிப்பவர்கள் யார் என்கிறீர்கள்? ஆலையில் பணியாற்றும் ஆண், பெண் அனைத்துத் தொழிலாளர்கள்தான் கூடியமர்ந்து பக்க வாத்தியங்களுடன், பக்தியுணர்வுடன் பாடுகின்றனர்.

விழாவிற்கென வெளியிலிருந்து அழைக்கப்பெறும் பிரமுகர், திரளாகக் கூடிநிற்கும் தொழிலாளர்களுக்கு முன்னே, ஆலைக்குள் தேசியக்



● காந்தி ஜெயந்தி பிரார்த்தனை



● 'ராமலிங்கா' மில்லின் உள் முகத்தோற்றம் (ஸ்பின்னிங்)

கொடியைக் காலையில் ஏற்றுவிக்கிறார். கொடி வணக்கம் பாடுவது வழக்கமும் மரபும் ஆகும். ஆனால் கொடி வணக்கத்திற்குப் பின், 'இமயம் தொட்டு குமரி மட்டும் இங்கிருக்கும் யாவரும், இந்தியாவின் மக்கள் என்ற சொந்தம் காணச் செய்குவோம்' எனத் தொடங்கும் 'நாட்டு வணக்கம்' பாடப் பெறுவது, - அதுவும் கூடிநிற்கும் அனைவரது குரல்களாகவும் ஒங்கி ஒலிப்பதைச் செவிமடுக்கும் எவருக்கும் - தேசப் பற்றை ஊட்டுவிக்கும். கொடி ஏற்றியவுடன் ஸ்ரீராமலிங்கா குரூப் நிறுவனங்களுக்குப் பேருந்தில் அழைத்துச் செல்லப்பெறும் பிரமுகரும், மற்றவர்களும் நூற்றுக் கணக்கான மரக் கன்றுகளை நடுகின்றனர்.

காந்திஜி திருவுருவப் படமும், நிறுவனர் சாது ராமசாமி நாயக்கர் படமும், நிறுவன வளர்ச்சிக்கு உழைத்த அமரர் சுப்பராஜ் படமும் வரிசையாகப் பிரார்த்தனை மண்டபத்தின் மேடையில் அலங்கரிக்கப் பெற்று வைக்கப்பெற்றுள்ளன. வரிசை வரிசையாகத் தொழிலாளர்கள் ஓர் ஒழுங்கில் நிற்கின்றனர். தொழில் அதிபரும், விழாப் பிரமுகரும், மேடையில் வீற்றிருக்கும் திருவுருவப் படங்களுக்கு மாலைகளை அணிவித்தபின், தொழிலாளர்கள் ஒவ்வொருவராக மேடைக்கு வந்து, மலர்க் கூடைகளிலிருந்து இரு கரங்களாலும் மலர்களை அள்ளிப் படங்களுக்கு அர்ச்சிக்கின்றனர். விழாப் பிரமுகர் காந்தியடிகளின் வரலாற்றில் சில உருக்கமான நிகழ்ச்சிகளை, எடுத்துக் கூறிய பின், தொழிலாளர்களில் சிலர் தங்கள் வேண்டுதல்களைக் கூறுகின்றனர். வேண்டுதல்களைக் கவனத்தில் கொண்டு, அவைகளுக்குக் கனிவாகப் பதிலுரைத்து, தொழிலாளர்களுக்கு ஓர் ஊதிய உயர்வை அறிவித்து மகிழ்விக்கிறார் அதிபர். இந்த அறிவிப்பு வழக்கமாக ஒவ்வோர் ஆண்டும் காந்தி ஜயந்தியன்றே அமையுமாம்.

காந்தி ஜயந்தியன்று, காலை, பகல், இரவு ஆகிய மூன்று வேளையும் தொழிலாளர்களுக்கு விருந்துணவு அளிக்கப் பெறுகிறது. தொழிலாளர்கள் தங்கள் வீட்டு நிகழ்ச்சிபோல, உரிமையுணர்வுடன் உற்சாகமாகக் காணப்படுகின்றனர்! சக தொழிலாளி போல், அதிபர் தினகரன் சகஜமாக ஆனால் சத்தியமாக தொழிலாளர்களுடன் பழகும் பாங்கு, நம்மைப் பெரிதும் கவர்கிறது!

அமைதியும் ஆனந்தமும் அளிக்கும் ஆலயம்போல் திகழ்கிறது அருப்புக்கோட்டை ஸ்ரீராமலிங்கா ஆலை! பாரதி பாணியில் கூறுவோமானால் - இது உண்மை; வெறும் புகழ்ச்சியில்லை.




● முப்பெரும் விழா

அருப்புக்கோட்டையில் தாத்தைய நாயக்கரின் மகனாகப் பிறந்த ராமசாமி நாயக்கர் உழுதுண்டு வாழ்ந்தவர். அதிகாலை நான்கு மணிக்கே எழுந்து, மாட்டுக்கொட்டிலைச் சுத்தம் செய்து, உதயமாவதற்கு முன்னமேயே ஏர் கொண்டு நிலத்தை நோக்கி நடந்தவர். உழைத்து மகிழ்ந்த உத்தம விவசாயி. தெலுங்கைத் தாய் மொழியாகக் கொண்ட தேசாபிமானி. அப்பெருந்தகை ஒரு லாரிக்குச் சொந்தக்காரராக ஆகும் வாய்ப்பு, 1927 ஆம் ஆண்டில் ஏற்பட்டது. விருதுநகர் - மதுரை வழித்தடத்தில் ஓடிக்கொண்டிருந்த ஒரு பேருந்துக்கு உரிமையாளராகும் சந்தர்ப்பம் அப்பெருமகனாரை 1930 இல் தேடி வந்தது.

'சாதுவார்லு' எனும் நாயக்கர் குலப் பிரிவைச் சார்ந்தவராகையால், பெரும்பான்மையும் அவரைச் 'சாது இராமசாமி நாயக்கர்' என்றே அழைப்பார்கள். சாது ராமசாமி நாயக்கர் விவசாயத்தை மேலோட்டமாக பார்த்துக் கொண்டு, பஸ் தொழிலில்

அதிக நாட்டம் கொள்ளத் தொடங்கி னார். 1935 ஆம் ஆண்டு, தமது முதல் மகனும் மூத்த புதல்வனுமாகிய ஜெய ராமை மனதில் கொண்டு, தமது பஸ் கம்பெனிக்கு 'ஜெய விலாஸ்' எனப் பெயர் சூட்டினார். 1948 ஆம் ஆண்டு ஏறத்தாழ நாற்பது பஸ்கள் ராஜ பாளையம் - மதுரை, அருப்புக் கோட்டை - மதுரை, மதுரை - தொண்டி ஆகிய வழித்தடங்களில் ஓடத் தொடங்கின! சாது ராமசாமி நாயக்கர், பஸ் உரிமையாளர்களுள் ஒரு முக்கியப் புள்ளி ஆனார்!

'ஜெய விலாஸ்' நிறுவனத்தின் 'வளர் முகம்' நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது! இன்றைய நிலை என்ன தெரியுமா? நாள்தோறும் இருபத்து ஐயாயிரம் மக்கள் பயணம் செய்யும் எண்பது பேருந்துகளையும், 'டாங்கர்' உட்பட ஏறத்தாழ இருநூறு லாரிகளையும் ஜெய விலாஸ் நிறுவனம் பெற்றுப் பெருமை அடைந்துள்ளது!

'பேருந்து உரிமையாளர்', 'பஸ் முதலாளி' எனப் பெயர் பெற்றிருந்த சாது ராமசாமி நாயக்கரை 'ஆலை அதிபர்' என அழைக்குமாறு 1960 ஆம் ஆண்டு ஒரு வாய்ப்பு நாடி வந்தது! இராஜபாளையத்தில் நொடித்து நோய்வாய்ப்பட்டிருந்த "ஜெய ஜோதி சண்முகர் மில்"லுக்கு உரிமையாளரா னார் சாது. சாது நாயக்கரின் வரம் பெற்ற ராசிக்கரங்கள், சண்முகர் மில்லை நாளும் மேலோங்கச் செய் தன! மேனிலை பெற்ற ஜெய ஜோதி சண்முகர் மில்லில் இன்று 1300 தொழி லாளிகள் பணியாற்றி வருகின்றனர்.

அருப்புக்கோட்டை ஸ்ரீராமலிங்கா ஆலையும்கூட, இராஜபாளையம் சண் முகர் மில்லைப் போலவே சாது நாயக்கரிடம் சரண் அடைந்தது! பெருந்தலைவர் காமராசரிடம் பேரன் பும், பெருமதிப்பும் கொண்டிருந்த சாது ராமசாமி நாயக்கர், அவரையே அழைத்து வந்து தலைமை ஏற்கச் செய்து அப்போது தொழில் அமைச்ச ராக இருந்த ஆர். வெங்கட்ராமனைக் கொண்டு ஆலையைத் தொடங்கி வைக்கச் செய்தார். மூவாயிரம் கதிர்களுடன், நூற்று இருபது தொழி லாளிகளைக் கொண்டு, 1965 ஆம் ஆண்டு ஆலையைத் தொடங்கி வைத்த போது, ஆர்.வி. வாழ்த்தாக ஒன்றைக் குறிப்பிட்டார்: "இந்த ஆலை ஆண்டு தோறும் வளர்முகம் கண்டு, லட்சம் கதிர்களைப் பெறவேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்!" இன்று 1600 தொழிலாளர்கள் பணி ஆற்றும் ஸ்ரீராமலிங்கா ஆலை, லட்சம் கதிர் களைத் தாண்டி விட்டதென்பது குறிப்பிடத்தக்கது.

சாது ராமசாமி நாயக்கர், ஜெய ராம், சுப்பராஜ், தினகரன், வரதராஜ், கண்ணன் ஆகிய ஐவரைப் புதல்வர் களாகப் பெற்றார். சில பெண் குழந்தைகளும் அவருக்கு உண்டு. ஆலைத் தொழிலில் தினகரனைப் பயிற்றுவித்த சாது, மற்ற புதல்வர் களை பேருந்துத் தொழிலில் கவனம் செலுத்தச் செய்தார். சுப்பராஜ் அண்மையில் அமரரானார். சாது நாயக்கர் 'ஈஸ்ட் இந்தியா காட்டன் கம்பெனி' என்றும், 'ஸ்ரீ ஜெய விலாஸ் இண்டஸ்ட்ரீஸ் அண்ட் ஆயில் மில்ஸ்' என்றும் நிறுவனங்களைத் தொடங்கி, தொழிலில் செழுமையும், வாழ்வில் செல்வாக்கும் பெற்று வாழ்ந்தார். அப் பெருந்தகையின் மறைவுக்குப் பின்னும், அவர் தொடங்கி வைத்த தொழில்கள் மேலோங்கியதுடன், புதிய புதிய பல தொழில் நிறுவனங் களைப் புதல்வர்கள் உருவாக்கி உள்ளனர். இவரில் 'அர்ச்சுனன்' எனக் குறிப்பிட்டோமே தினகரனை! ஆம், உருவாக்கம் தொழிலில் திருவாக்கம் பெற முன்னின்று உழைத்து வரு கின்றார் தினகரன்.

கோயில்பட்டி ஸ்டீல் ரோலிங் இண்டஸ்ட்ரீஸ் (1978) விருதுநகர் ஸ்டீல் ரோலிங் மில்ஸ் (1982) மேலகண்ட மங்கலம் ஜெயவிலாஸ் ஸ்பின்னிங் மில்ஸ் (1981), ராமலிங்கா ரோலர் பிளவர் மில்ஸ், அருப்புக்கோட்டை (1984), சென்னை ஜெயசக்தி பாலிமர்ஸ் (1935), அருப்புக்கோட்டை பட்டாபி டெக்ஸ்டைல்ஸ் (1983), சங்கரன்கோயில் தமிழ்நாடு ஜெய்பாரத் மில்ஸ் பப்ளிக் லிமிடெட் (1993) அருப்புக்கோட்டையில் உள்ள நான்கு நிதி நிறுவனங்கள் என ஆயிரத்திற்கு மேற்பட்ட பெண் கள் பணியாற்றும் பத்தாயிரம் தொழி லாளர்களைக் கொண்ட 'ஸ்ரீராம லிங்கா குரூப் நிறுவனங்கள்' வளர்ந் தோங்கி உள்ளன.

நம்முடன், நிறுவனங்களைச் சுற்றிப் பார்க்கும்போது உடனிருந்து உதவிய அருப்புக்கோட்டை வட்டாரத் தைச் சேர்ந்த கவிஞர் ரா. பொன் ராசன் "நிறுவனங்களின் வளர்ச்சி பற்றி எழுதுகிறபோது, சாது ராமசாமி நாயக்கர் அறக்கட்டளை சார்பில் ஆற்றியுள்ள கல்விப்பணி, கோயில் திருப்பணி, சமுதாயப்பணி பற்றியும் குறிப்பிட்டு எழுதுங்கள். இந்தப் பகுதி தொழிலால் வளம் பெற்றிருப்ப தோடு, அவர்களின் பணிகளால் நலம் பெற்றுள்ளது" என்றார்.

'சாது ராமசாமி நாயக்கர் தர்ம ஸ்தாபனம்' என்றோர் 'அற மன்றம்' 1955 ஆம் ஆண்டில் சாது நாயக்க ராலேயே உருவாக்கம் பெற்றது. ஆன்மிகப் பணிகளுக்கும், கல்வி, மருத்துவச் சமுதாயப் பணிகளுக்கும் அள்ளிக்கொடுத்து அரிய புகழ் பெற் றுள்ளது இந்தத் தர்ம ஸ்தாபனம்.

ஆவுடையம்மாள் தாய் சேய் நல விடுதியை 1957 ஆம் ஆண்டிலேயே அருப்புக்கோட்டையில் இரண்டு லட்சம் செலவில் அமைத்துக் கொடுத்த சாது ராமசாமி நாயக்கர் தர்மஸ்தாபனம், அருப்புக்கோட்டை மீனாட்சி சொக்கநாதர் கோயில் திருக்குளத்தைச் செப்பம் செய்து, ஓடாது கிடந்த தேரை ஓட வைத்து, கோயிலுக்குச் சொந்தமான சொத்து களையெல்லாம் மீட்டுக் கொடுத்தது! அருப்புக்கோட்டை பட்டாபிராமர் கோயிலில் கல்யாண மண்டபம் கட்டிக் கொடுத்தது! சொக்கநாதர் திருக்கோயில் திருமண மண்டபத்தை பத்து லட்சம் செலவிட்டு அமைத்து வழங்கியது! அரசினர் மருத்துவ மனையில் அவசரத் தேவைக்கான விபத்து நீக்கப் பகுதியை அமைத்துக் கொடுக்க எட்டு லட்சம் செலவிட்டது! அருப்புக்கோட்டை ராமசாமி நகரில் சிவானந்த வித்யாலய மெட்ரிகுலேஷன் பள்ளியையும், காந்தி வித்தியாலயப் பள்ளியையும் 25 லட்ச ரூபாய் செலவிட்டு நிர்மாணித்துள்ள தர்ம ஸ்தாபனம், சாத்தூரில் எஸ். ராமசாமி நாயுடு நினைவுக் கல்லூரியை உருவாக்கி அளித்துள்ளது. அறப் பணிகளுக்காகக் கோடிக்கும் மேல் உவந்தளித்துள்ள தர்ம ஸ்தாபனம், அதிபர் தினகரனின் தனியார்வத்தில் உருவாக்கம் பெற்ற காந்தி ஆசிரமம், திருச்சுழி ரமண மகரிஷி வித்யா பீடம் ஆகிய புண்ணிய அமைப்புகளுக்கும் உதவி உள்ளது.

சங்கரன்கோயிலில், 'ஸ்ரீராம லிங்கா' தமிழ்நாடு ஜெய்பாரத் மில்ஸ் பப்ளிக் லிமிடெட் என்ற இருபதி னாயிரம் கதிர்கள் கொண்ட ஓர் ஆலையை, பொதுத் துறையாக நிர் மாணிக்க அண்மயில் பொதுமக்கள் பங்குத் தொகையாக 6 கோடியே நிர்ணயித்து விளம்பரப்படுத்தியது. வந்து சேர்ந்த பங்குத் தொகை எவ்வளவு தெரியுமா? இரண்டு மடங்கா? மூன்று மடங்கா? முப்பத் தாறு மடங்கு' - 216 கோடி! இந்த நிறுவனத்தின் நாணயமும் நம்பிக்கை யும் எத்தகையதென்பதைக் குன்றி லிட்ட தீபமாய் ஒளிரச் செய்தது இந் நிகழ்ச்சி!

"பக்திக்கும் மரியாதைக்கும் உரியது ஆலயம் மட்டுமல்ல; நாம் பணிபுரியும் ஆலையும்தான்!" என அர்ச்சித்த அறிவுரை, ஸ்ரீராமலிங்கா மில்லில் திரும்பிய பக்கமெல்லாம் நம் கண் களில் தெரிகிறது. அறிவுரையை தொழிலாளிகளின் அகவுரையாக்கி, ஆலையை ஆலயமாகக் கருதச் செய்த பெருமை அதிபர் டி.ஆர். தினகர னுக்கே உரியது! எனவேதான் நாமும் பாராட்டும் நோக்கில், "ஆலைகளில் ஓர் ஆலயம்" என அழைத்து மகிழ் கிறோம். சரிதானே?

சி




அமுதசுரபி தீபாவளி மலர் '93 - யோகி ராம்சுரத்குமார் (திருவண்ணாமலை)



# அவதார புருஷர் யோகிராம் சுரத்குமார்

புனித கங்கை பொங்கி ஓடும் காசி மாநகரம் அருகாமையில் 1918 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 1 ஆம் தேதி யோகிராம் சுரத்குமார் அவர்கள் அவதாரம் செய்தார்கள்.

இன்று தமிழகத்தில் திருவண்ணா மலைத் திருநகரத்தில் நிரந்தரமான அருட்சக்தியின் புனிதப் பொலிவுடன் தாய் போலவும், தந்தை போலவும் ஞானகுரு போலவும் காட்சி தந்து, கருணை காட்டும் தெய்வமாக விளங்கு கின்ற இந்த அவதார புருஷர் இளம் பிராயத்தில் முனிபுங்கவர்களிடத் திலும் சாதுக்களிடத்திலும் தம்மைச் சங்கமம் செய்து கொண்டு கங்கைக் கரையில் பவனி வந்து கொண்டிருந் தார்கள்.

பள்ளியில் படித்து, அறிவியல் ஞானம் கைவரப் பெற்றதுடன் சாதுக் களின் உபதேசங்களால் சமு தாயத்தை இரட்சிக்கும் மாபெரும் யோகியாக வளர்ந்தார்.

16 வயதில் இல்லம் துறந்து வெளி யேறிய யோகியார் காசி விஸ்வநாதர் சன்னிதியிலும், கங்கை நதிப் பிர வாகத்தின் இயற்கை எழிலிலும் தம்மை ஈடுபடுத்திக் கொண்டார்.

1937 வரையிலும் கல்வி பயின்ற யோகியார் அவர்கள் ஆங்கிலம் கற்றுத் தேர்ந்தார். உலக வரலாறுகளை யெல்லாம் படித்தறிந்தார். இதிகாச, புராணங்களைப் படித்து, அவற்றின் தத்துவங்களை உணர்ந்தார்.

நாளுக்கு நாள் ஞானவேட்கையும் இறைவனை அறியும் தாகமும் அதிக மாயின. குரு அருள் மூலம் திரு வருளைப் பெற வேண்டுமென விரும்பினார்.

நமது பாரததேசத்தின் தென்பகுதி யில் உள்ள தமிழகம் யோகியாரைப் பெரிதும் கவர்ந்தது.

பாண்டிச்சேரி வந்து ஸ்ரீ அரவிந் தரை அணுகி, அந்த மகானுடைய தெளிவுரைகளை எல்லாம் கிரகித்துக் கொண்டார் யோகியார்.

பிறகு திருவண்ணாமலைக்குச் சென்றார். ஸ்ரீ ரமண பகவானின் திருவருளின் மூலம் தவ நெறியின் பயனை உணரலானார்.

ஒருமுறைக்கு மூன்று முறைகள் காஞ்சன்காடு சென்று ஸ்ரீராமதாசர் அவர்களிடம் மூன்றாவது முறை உபதேசம் பெறலானார்.

1952 இல் 'ஸ்ரீராமா ஜயராமா ஜய ஜய ராமா' என்ற மந்த்ர உப தேசத்தை ஸ்ரீராமதாசரிடமிருந்து பெற்ற யோகியார் அதுமுதல் அருட் சித்தராக விளங்கும் தனிப்பெருஞ் சிறப்பைப் பெற்றார் எனச் சொல்ல வேண்டும்.

மரத்தடியிலும், தேரடியிலும், தெரு ஓரத்திலும் தங்கியிருந்து, ஞானத் தவத்தில் தம்மை ஆழ்த்திக் கொண்ட யோகியார், 1959இல் இருந்து திருவண்ணாமலையிலேயே நிரந்தர மாகத் தங்கலானார்.

நாளுக்கு நாள் சுவாமிகளுடைய அவதார மகிமை பக்தர்களுக்குப் புலனாயிற்று.

இதன் விளைவாக ஆயிரக்கணக் கான பக்தர்கள் அண்ணாமலை நக ருக்கு வந்து சுவாமிகளைத் தரிசிக்கத் தொடங்கினார்கள்.

எல்லோருக்கும் யோகியார் அன் போடும் அரவணைப்போடும் ஆசி புரிவது வழக்கம்.

"என்னுடைய தந்தை காப்பாற்று கிறார்" என்கிற வார்த்தைகள் யோகி யாரின் திருநாவிலிருந்து வெளிவரும்.

வழிபாடு செய்ய வரும் அன்பர் கள், அந்த வார்த்தைப் பெற்றுத் தங்கள் குறை அகன்று திரும்பு வார்கள். அவர்கள் மனத்தில் புனித மான அமைதி ஏற்படுவதும், வாழ்க் கையில் புதிய திருப்பம் ஏற்படுவதும் இயற்கையாகிவிடும்.

1976 இல் பக்தர்கள் வற்புறுத்தி யதன் பேரில் யோகியார் அவர்கள் ஒரு சிறு வீட்டில் தங்கலானார்கள். இங்கேதான் தினமும் நூற்றுக்கணக் கான அன்பர்கள் யோகியாரைத் தரிசித்துச் செல்லுகிறார்கள். கையில் உள்ள பனை ஓலை விசிறி மூலம் தம்மைத் தரிசிக்க வருவோரின் பாப வினைகளை நீக்கிவிடுகிறார் யோகி யார்.

பக்தி பரவசத்துடன் சில நேரங் களில் பாடுவார் யோகியார்.

ஆனந்த நர்த்தனமும் ஆடத் தொடங்குவார்.

அப்போது உலகம் முழுவதுமே ஆடுவது போலத் தோன்றும்.

பச்சை நிறத் துணி அணிந்து, பச்சை மயில் வாகனனாய் இருக்கும் முருகனைப் போலத் தோற்றம் தருகிற அந்தக் காட்சியை வருணிக்க வார்த்தைகள் போதா!

"யோகிராம் சுரத்குமாரா, யோகி ராம் சுரத்குமாரா, யோகிராம் சுரத் குமாரா ஜயகுருராயா" என்று நாம் சொல்லச் சொல்ல, பாடப் பாட நம்முடைய சங்கடங்கள் விலகுவது உறுதி.

ஏராளமான மெய்யன்பர்கள் யோகி யாரின் திருநாமத்தைச் சொல்லிப் பேரருள் பெற்ற வரலாறுகள் ஏராளம்

புனிதமான உள்ளத்தாலும், ஆன் மிக உணர்வாலும், அன்புப் பெருக் காலுமே யோகியாரது அருளைப் பெறமுடியும். பணம், பதவிகள் எல் லாம் அவருக்குச் சாதாரணம்.

இன்று எண்ணற்ற பல பெரி யோர்கள், தொழிலதிபர்கள், நீதிபதி கள், அரசாங்க அதிகாரிகள் மற்றும் பொதுமக்கள் பலரும் யோகியாரை வழிபட்டுப் பயன் பெறுகின்ற ஒரு புனித நிலை உருவாகியிருக்கிறது.

ஜாதி, மதங்களுக்கு அப்பாற்பட்ட யோகியார் எல்லா மதங்களைச் சேர்ந்தவர்களுக்கும் அருள்புரிகிறார்.

வெளிநாட்டிலிருந்தும் பலர் வந்து அருள்பெறுகிறார்கள்.

"பாரததேசம் புண்ணிய பூமி என்பார்" யோகியார். "உலக ஞானி களின் விளையாட்டு மைதானம்தான் பாரதம்" என்றும் சொல்வார்கள்.

பிணிகளைப் போக்குவார். நன் னெறிகளைக் காட்டுவார். செல்வம் குவிக்க வைப்பார். சாந்தம் நிலைக்க வைப்பார்.

நம்முடைய தலைமுறையில் நாம் கண்ணாரக் காண்கின்ற நடமாடும்

**வித்வான். வே. லட்சுமணன்**

தெய்வம்தான் யோகிராம் என்கிற உண்மை ஆயிரக்கணக்கான மெய்யன்பர்கள் உள்ளத்தில் பதிந்திருக்கிறது.

நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்பு 'அகிலத்திரட்டு' என்கிற தெய்வ ஏட்டை உருவாக்கிய முத்துக்குட்டி சுவாமிகள் என்பவர் அந்த நூலில் யோகிராம் சுரத்குமார் அவர்கள் அவதாரம் செய்யப் போவதைப் பற்றி முன்னதாகவே குறிப்பிட்டதைப் பலரும் அறிவார்கள்.

சக்தி படைத்த யோகியார் அவர்களுடையச் சிரிப்பில் காந்த சக்தி நிறைந்திருக்கிறது. கண்களில் கருணை ஒளி படர்ந்திருக்கிறது. நாவிலிருந்து வரும் சொற்களில் சத்தியம் பிரதிபலிக்கிறது. இந்த அருமை பெருமைகளை எல்லாம் அறிந்த திரு. கி.வா. ஜகந்நாதன் அவர்கள், புலவர் பெரியசாமித்தூரன் அவர்கள் இன்னும் பலர் யோகியாரின் அருட்சக்தியைப் பற்றிப் பல பாசுரங்களை இயற்றியுள்ளார்கள். இசைக்கலைஞர்கள் அப் பாசுரங்களைப் பாடியும் உள்ளார்கள்.

1972 இல் வெளிநாட்டிலிருந்து வந்து யோகியாரைத் தரிசித்த ட்ருமென் கேய்லர் வாடிலிங்டன் என்பவர், "இறைவனின் திருமகன் யோகிராம் சுரத்குமார்" என்கிறார். "யோகிராம் சுரத்குமார் - தெய்வக் குழந்தை" என்கிற ஒரு நூலையே அவர் எழுதியுள்ளார்.

அமெரிக்காவைச் சேர்ந்த ஃபில்லிஸ் என்கிற பெண்மணி, "யோகியார் அவர்கள் கலகலவென்று சிரிக்கும் போது உடனிருப்பவர்களும் ஆனந்த கண்ணீர் விட்டுச் சிரிப்பார்கள். அந்நேரத்தில் உலகம் முழுவதுமே யோகிராம் சுரத்குமார் மயமாகத் தோன்றுகிறது" என்கிறார்.

வில்லியம் என்ற பெயருடைய ஓர் அமெரிக்கர் யோகியார் தம் கரத்தை உயரத் தூக்கியபோது அவரது உள்ளங்கையைப் பார்த்தாராம். அப்போது அவர் தாம் பெற்ற அனுபவத்தைச் சொல்லுகிறார். "சுற்றியுள்ளவைகளையெல்லாம் நான் மறந்தேன். என் உள்ளத்தில் ஒளிமயமான ஒரு பரப்புதான் தெரிந்தது. மிகவும் பிரகாசமான ஒளி என்னைச் சுற்றி வட்டமாக வந்தது. அந்த வட்டத்தைப் பூரணமாக்கி யோகியார் அவர்கள் அதை என்னுடன் சேர்க்கலானார்" என்கிறார்.

ஜோன் என்கிற பெண்மணி யோகியாரைத் தரிசித்தபோது, "நான் பிறவி எடுத்ததன் பயனைப் பெற்றேன்" என்கிறார்.

மற்றொருவர், "யோகியாரின் பேச்சைவிட மௌனம் அதிகம் என்றும், சில நேரங்களில் மௌனத்தை விடச் சிரிப்பு அதிகம் என்றும், வேகமாக நடந்தால் நடந்து கொண்டேயிருப்பார் என்றும், நின்றால் அப்படியே நின்றுவிடுவார் என்றும், உட்கார்ந்தால் மணிக்கணக்கில் உட்கார்ந்து கொண்டேயிருப்பார் என்றும், அவருடன் இருக்கும்போது இறைவனின் பாதத்தில் இருக்கின்ற உணர்வு ஏற்படுகிறது என்றும் சொல்கிறார்.

அண்ணாமலை ஆலயத்தில் ஆண்டுக்கொருமுறை தீபம் ஏற்றுவார்கள். யோகிராம் சுரத்குமார் என்கிற ஞானதீபமோ அங்கே நிரந்தரமாக ஒளிவீசிக் கொண்டிருக்கிற அற்புத தீபமாகும்.

அந்த மகத்தான ஒளியின் சாந்நித்தியத்தைக் கண்ணாரக் கண்டவர்கள், காண்கின்றவர்கள் ஆகியோர் எல்லாம் பெறுகின்ற ஆனந்தத்திற்கு அளவே கிடையாது.

கன்னியா குமரிக்கு அருகாமையில் உள்ள காணிமடத்தில் ஆறடி உயரத்தில் யோகியார் அவர்களுடைய சிலை ஸ்தாபிக்கப் பெற்று, ஒரு பெரிய மந்த்ராலயமே உருவாகியிருக்கிறது. வழக்கறிஞர் திரு. பொன் காமராஜ் அவர்களுடைய முயற்சியால் உருவாக்கப்பட்ட பணி இது.

மேலும் மெய்யன்பர்கள் பலரும் கூடித் திருவண்ணாமலையில் மிக விரைவில் ஓர் ஆசிரமத்தைக் கட்டி, அங்கே யோகியார் அவர்கள் வந்து அமர்ந்து பக்தர்களுக்குக் காட்சி தரவேண்டும் என்று ஒரு பெரிய திட்டத்தைத் தீட்டி அதைச் செயலாக்கி வருகிறார்கள்.

திருவண்ணாமலையில் இந்த ஆசிரமம் உருவாக்கும் பணி ஆரம்பமாகிவிட்டது.

காக்கும் கடவுளுக்கு ஆலயம் அமைத்துப் பெருமை கண்டவர்கள் நம்நாட்டு மன்னர்கள். அவ்வாறே கண்கண்ட தெய்வமாய்த் தோன்றி நடமாடும் அருட் சித்தராய் விளங்கும் யோகிராம் சுரத்குமார் அவர்களுக்கு அருட்செல்வர்கள் பலரும் ஒன்று கூடி, நன்கொடை வழங்கி, யோகியாரின் அருளை பெறுவதற்கு அருள் நிலையம் என்று சொல்லத்தக்க வகையில் ஆசிரமத்தை நிறுவுகின்ற பணியில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

இதற்காக ஒரு 'டிரஸ்ட்'டும் அமைக்கப்பட்டிருக்கிறது.

நம்மை வாழ்விக்கின்ற யோகியாரை நாம் எல்லோரும் வசதியுடன் தரிசிக்கவும், அவரது அருளாசிகளைப் பெறவும் இந்த ஆசிரமம் மிகமிகத் தேவையாகப் பல்லாண்டுகளாகக் கருதப்பட்டு வந்தது. சமீபத்தில்தான் யோகியார் அவர்கள் இந்த ஆசிரமத்தை நிறுவ அனுமதி அளித்தார்கள்.

மெய்யன்பர்கள் எல்லோரும் இந்த நற்பணிக்குத் தங்கள் காணிக்கையைக் கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பி, யோகியாரின் பேரருளுக்குப் பாத்திரமாக வேண்டுமென வேண்டிக் கொள்கிறோம்.

யோகிராம் சுரத்குமார் டிரஸ்ட்,
அக்ரஹாரக் கொல்லை,
1833/1, செங்கம் சாலை,
திருவண்ணாமலை – 606 603

*யோகிராம் சுரத்குமார்*
*திருவடி சரணம்.*

ஃ

## உண்மையின் ஒளி

டாக்டர் ஆலந்தூர் கோ. மோகனரங்கன்

எத்தனை மலைகள்! எத்தனை புயல்கள்!
இதயம் எதிர்த்துப் பழகுதடா!
எத்தனை புலிகள்! எத்தனை நரிகள்!
எண்ணம் துணிந்தே நடக்குதடா!
எத்தனை மலைகள்! எத்தனை புயல்கள்!

ஆயிரம் தடைகள் அடக்கிட வந்தன
ஆர்வம் சிறிதும் குறையவில்லை!
ஆயிரம் சுழல்கள் அழித்திட எழுந்தன
அச்சம் அணுவும் பிறக்கவில்லை!
எத்தனை மலைகள்! எத்தனை புயல்கள்!

இருள்வரும் போதும் இடிவிழும் போதும்
இளைப்பும் களைப்பும் தோன்றவில்லை!
பெருமைகள் சேர்க்கும் பெருவழி காணப்
பின்னிய முயற்சி தேயவில்லை!
எத்தனை மலைகள்! எத்தனை புயல்கள்!



# விடியாத விடியல்

கூழுக் கழுதிடும்
ஏழை இதயமோ
வாழும் வகையிலையோ - அது
வடிக்கும் கண்ணீரினால்
வாவி நிறைந்திட
வளருமோ தாமரையே?

மூட்டை சுமந்து தன்
முதுகே ஒடிந்துமே
வாட்டம் நிறைந்ததுவோ - துயர
வாழ்வினை நினைந்துமே
வலியினை மறந்துமே
வாழத் துடிக்குதையோ!

நொச்சிச் சருகென
நொடிந்த விரல்களில்
அச்சச்சோ காயங்களே - அவை
அன்றாடம் கூலிக்காய்
அல்லல் படுவதால்
அடைந்த பல் மாயங்களே!

கொட்டும் மழையினில்
நனைந்த குயில் விழி
பட்ட துயரினைப்போல் - அவன்
விட்ட கண்ணீரினால்
சிவந்த கருவிழி
விளக்கும் பெருங்கதையே!
பேசும் விழிகளில்
பிறக்கும் துயர்களோ
வீசும் கண்ணீர் மழையே - அவை
விடிந்தும் விடியாத
விடியலை விளக்கிட
விரிந்த பெருங்கதையே!

- கவிதைச்செல்வர் கல்லாடன்

# சூரியக்குஞ்சே எழு! சபதமெடு!



கசப்பு நினைப்பெனும் கம்ஸனை அழித்துக்
களிப்புத் தேரேற இளைஞனே வா!
பசப்பு மொழியினி அரசியல் வானில்
பட்டுச் சிதறிடும் எழுந்துநீ வா!

காற்றின் வருடலை முகில்கள் இழுத்துக்
கண்ணை மறைக்கவும் ஓர் சதியா?
ஊற்று நீரினை வெற்றுக் களிமண்
உறங்க வைக்க உன் அனுமதியா?

மழைபெய்தாலே புதுப்புது முட்செடி
மண்டுதல் இயற்கை! நீ அஞ்சுவதா?
குழைவதுன் இயல்பா? துடிப்பிலா இளமையா?
கூரைகட்டெல்லாம் உன் கும்பிடலா?

இன்று உன் நெஞ்சில் ஏமாற்றம் இருக்கும்;
இருப்பினும் வெளிச்சம் மறைப்பது யார்?
என்றும்உன் எதிர்மறை எண்ணமே தடையாய்
இருப்பதை அறிந்தால் முடங்குவையா?

தீபஒளி நாளில் விளக்கணைப்போரை
திரண்டே அழித்து முன்னேறிவிடு!
சாபமே உனக்கிலை! சூரியக் குஞ்சு நீ!
சன்னதி முன்ஒரு சபதம் எடு!

- கவிஞர் வேதம்

# குறிஞ்சித்தேன்



எல்லாமே அறிந்தவர் போல் நடிக்கும் எண்ணம்
இறுமாப்பை அலட்சியத்தைத் தோன்றச் செய்யும்
சொல்லாலே செயலாலே பிறர்க்குத் தீமை
சூதுமதி வஞ்சகத்தில் திளைக்கச் செய்யும்!
வெல்லமாய் இனித்திருக்க விளம்பும் பேச்சில்
வேண்டாத சதித்திட்டம் கிளம்பும் மூச்சில்
செல்லாத காசாகச் செய்யும் அந்தச்
சீர்குலைக்கும் அகங்காரம் என்றும் வேண்டாம்!
பிறர்மனை பார்க்காத கண்கள் வேண்டும்;
பிறர்க்கின்னா சேர்க்காத எண்ணம் வேண்டும்;
பிறர்க்கினிமை பயக்கின்ற செயலும் வேண்டும்;
பிறர்க்கீந்து உவக்கின்ற மனமும் வேண்டும்;
அறத்தாலே, அன்பாலே அமைதி எங்கும்
அரும்பிடவே செய்திடலாம் இன்பம் எங்கும்
புறத்தாற்றுப் புகழெல்லாம் புகழே அல்ல!
புகட்டுகின்ற குறளமுதக் கருத்தே இஃதாம்!

- பாவலர் மோத்திதாசன்

# உறவுகள் வேண்டுமடி பாப்பா!

மலருக்கு வண்டின்மேல் உறவாம், என்றும்
மலருகின்ற எழிலுக்கோ இயற்கை யோடாம்!
நிலவுக்கோ வான்மீதே உறவாம், நாளும்
நீந்துகின்ற மீனிற்கோ கடலே தானாம்!
புலருகின்ற பொழுதிற்குப் புவிமேல் என்றால்
புல்லிற்கோ பனித்துளியே உறவாய்த் தோன்றும்
பலருக்கும் உறவென்றால் உற்றார், பெற்றார்
பண்பாளர் அறிவிற்கோ உறவாம் கல்வி!

பொழிகின்ற மாமழைக்கோ உறவு மேகம்!
புரிகின்ற விந்தைக்கெலாம் உறவு ஆற்றல்!
செழிக்கின்ற பயிர்க்கெல்லாம் உறவு தண்ணீர்!
செய்கின்ற தொழிலுக்கோ உறவு ஊக்கம்!
கொழிக்கின்ற வளத்துக்கோ உறவு ஆக்கம்!
குவிக்கின்ற புகழுக்கும் உறவு வெற்றி!
விழிக்கின்ற உணர்விற்கே உறவு உள்ளம்!
விளைகின்ற மகிழ்ச்சியெலாம் உறவால் அன்றோ?
அசைக்கின்ற பொருட்கெல்லாம் உறவு, காற்றாம்
ஆளுகின்ற அரசுக்கோ உறவு, மக்கள்
இசைக்கின்ற இசைக்கோ உறவு தாளம்!
இயங்குகின்ற உலகுக்கோ உறவு நாமே!
திசைக்கெல்லாம் உறவாகும் உயிர்ந ரம்பு!
தழைக்கின்ற வாழ்க்கைக்கோ உறவு அன்பாம்!
திசையெல்லாம் வாழ்கின்ற மக்கள் எல்லாம்
திகழ்கின்ற அன்பினாலே உறவுக் கொள்வர்!

- பூங்கோவன்





# இதயத்தை திறந்து வைப்போம்!

பூமிக்கும் புயலின் வேகம் வரும்
புறப்பட்டால் சிறுநதியும் ஆறாய் மாறும்
மானிடத்தில் மகத்துவம் அறியா நாளும்
மயக்கத்தில் பலரிங்கே கிடப்ப தாலே...

பொல்லாங்கும் தீவினையும் பொசுங்கிப் போகும்
பொய்மையின் வேடங்கள் கலைந்து போகும்
உழைக்கின்ற எண்ணங்கள் நமக்குள் வந்தால்
ஊழ்வினைக்கு இடமில்லை உயர்வே தோன்றும்

மனிதர்களை எடை போட்டு ஆய்வு செய்தால்
மனிதநேயம் பிறந்திட வழியே இல்லை
முடிந்தவரை அன்பினையே காட்டி வந்தால்
முரண்பட்ட மனிதர்களும் திருந்தி வாழ்வர்.

தரணியிலே பிரிவினையின் பேதமெல்லாம்
தடுமாறும் சுயநலத்தால் விளைவதுதானே!
இனியேனும் இதயத்தை திறந்து வைப்போம்
இந்தியா நமதென்று குரல் கொடுப்போம்...

இதயகீதம். அ. இராமானுஜம்

# தீபா(ய்)வளி

கவிஞர் பால. இரமணி



மண்ணில் வந்தது தீபாவளி!
மனதுக்குள் வந்ததே கோபாவளி!
மராட்டிய மைந்தர்களே –
நீங்கள் மட்டும்
மண்ணுக்குள் அல்லவா
தீபாவளி கொண்டாடுகிறீர்கள்!

ஓ... இது
உங்களுக்குத்
தலை தீபாவளி!
இந்தத் தலைமுறை காணா
தீ பாய் வளி!

மண் அசைந்ததால்
மண்ணுக்குள் வாழுகின்ற
உங்களை நினைக்க
மனசு பிசைகிறது...!
எத்துணைக் கனவுகளுக்கு
நீங்களே
கல்லறை கட்டிக் கொண்டீர்கள்?

மறைந்திருந்த உங்கள்
மனங்களுக்குக் கணக்கில்லை!
மறைந்துவிட்ட உங்கள்
பிணங்களுக்கும் கணக்கில்லை!
பரவாயில்லை –
சொர்க்கம் இடம் மாறியிருக்கிறதாம்...!

பூமிக்கு மேலே
இதுவரை இருந்த
சொர்க்கம்
பூமிக்கடியில்
போய்விட்டதாய்ப்
புதுத் தகவல்...!
ஏனெனில் –
அங்கேதானே நீங்கள்
போய்விட்டீர்கள்...!



# தென்றலே வருக!

பல்லவி

அற்புதக் காட்சி கண்டேன் – தென்றல்
ஆடிவரக் கண்டேன்!

(அற்புதக்)

அநுபல்லவி

முல்லை மலர் சரிய, மூன்றுதமிழ் கமழ
மெல்லென வீசிவந்தாள் – என்றன்
மேனியெல்லாம் கமழ்ந்தாள்!

(அற்புத)

சரணம் – 1

முத்துநகை தவழ, எத்திசையும் புகழ,
சித்திரம் போல வந்தாள் – என்றன்
சிந்தையெல்லாம் நிறைந்தாள்!

(அற்புத)

சரணம் 2

குத்துவிளக்கெரிய, குங்கும மாலையிலே
ஒத்திகை பார்க்க வந்தாள் – உலகின்
உயிர்களைக் காக்க வந்தாள்!

(அற்புத)

– நடந்தூர் புதுவை அமலன்

## யார் குற்றம்?

பெரி சிவனடியான்

இந்த உலகினில் மனிதனைப் படைத்தது
இறைவனின் குற்றமில்லை
என்றும் அழியாப் பசியினைத் தந்ததே
இறைவனின் குற்றமடா .

பகுத்தறிவோடு மக்களைப் படைத்தது
பரமனின் குற்றமில்லை
பகுத்தறிவின் பொருள் அறியச் செய்யாததே
இறைவனின் குற்றமடா

பகலையும் இரவையும் இரண்டெனப் பிரித்தது
இறைவனின் குற்றமில்லை.
பகலிலும் இருளே படர்வதைப் பரமன்
பார்ப்பதே குற்றமடா.

ஆணையும் பெண்ணையும் அன்புடன் படைத்தது
இறைவனின் குற்றமில்லை
அவரவர் போக்கில் அலைந்திட விட்டதே
ஆண்டவன் குற்றமடா

கருவுயிர்த்(து) அவர்கள் களித்திடச் செய்தது
கடவுளின் குற்றமில்லை
கருவறை சாத்தக் கற்றுக்கொடுக் காததே
கர்த்தரின் குற்றமடா.

## பூவாத பூவிதுவே!

கோவூர் இசைதாசன்

கொடியினிலே பூவாத ஒரு பூ; பெண்கள்
கூந்தலிலே சூடாத சிறு பூ; மண்ணின்
மடிமீது வீழ்ந்திட்டே உலரா தப்பூ
மாலையிலும் காலையிலும் வாடா தப்பூ
படியாதார் முடியாதார் அனைவ ருக்கும்
பயன்தந்தே மகிழ்வூட்டும் இப்பூ; எந்தச்
செடியினிலும் பூவாமல் சிக்க னத்தால்
சீருடனே பெற்றிட்ட 'சிறுசே மிப்பு'

குருவிக்குச் சேமிப்பைப் பற்றிக் கற்றுக்
கொடுத்தவர்கள் யாரிங்கே? உலக வாழ்வில்
பருவநிலை உணர்ந்திட்டே மழைக்கா லத்தில்
பயன்படுத்தும் எண்ணத்தில் கோடை தன்னில்
உருவத்தில் மிகச் சிறிய எறும்பு கூட
உணவுதனைச் சேமித்தே வைக்கும்போது
வருமானம் யாவையுமே செலவு செய்தே
வாழ்பவரின் எதிர்காலம் என்ன வாகும்?

நல்லதொரு திட்டமதாம் சிறுசே மிப்பை
நாட்டிநுளோர் கடைப்பிடித்தே சேர்த்து வைத்து
அல்லதுறும் வேளையிலே மகிழும் வண்ணம்
அரசாங்கம் அதற்கிங்கோர் துறையைக் கண்டு
பலவிதமாய் நமக்குதவி புரிவ தோடுப்
பரிசுகளும் தருகிறது; இதையு ணர்ந்தே
எல்லோரும் சிக்கனத்தைக் கடைப்பி டித்தே
எறும்பைப்போல் சேமிப்போம்; உயர்வோம்; வெல்வோம்!

## விளக்கேற்று

மதி ஒளி

சுற்றி வளைத்துப் பேசுகிறாய் - உன்
சொல்லில் இளைத்தே கூசுகிறாய் - நீ
கற்ற படிப்பும் பேரிழப்பு - உன்
கல்வி கொடுத்தது ஏன்பழிப்பு?

எழுத்துப் படிப்பும் அறிவினுக்கே - தொழில்
இணைந்த படிப்பே திறன்மணக்கும் - நீ
உழைத்துப் பெறுவதே உண்மையின்பம் - அதில்
ஊன்றிப் பயில்வதே நன்மையென்போம்!

ஆழப் படிப்பில் அர்த்தமுண்டு - பிறர்
அறியக் கொடுத்தால் சக்தியுண்டு - நீ
வாழத் துடித்தால் போதாது - வாழும்
வகையைத் தொடுத்தால் வாதேது?

போட்டி வளர்ச்சியை வெளிப்படுத்தும் - உன்
போலித் தளர்ச்சியைக் குணப்படுத்தும் - என்றும்
கூட்டு முயற்சியே கொள்கையாய்க் கொள் - அந்தக்
குறிப்பின் பயிற்சியே வெல்கெனச் சொல்!

கணக்கைப் புரட்டிப் பார்த்திருந்தால் - நம்
கண்கள் இருட்டிச் சோர்வடையும் - பெரும்
பணக்கை நிலமை வலிவேதான் - ஏந்தும்
பசிக்கை வளமை துளியேதான்!

விதியின் வலிமை வெறும் பேச்சு - மன
வேகத்தில் தோன்றும் உயிர்மூச்சு - ஓடும்
நதியின் கரைபோல் அருளிருக்க - என்றும்
நம்வழி நேரெனில் பொருளுண்டு.

காலம் நொடிக்குள் சென்றுவிடும் - நம்
கையின் பிடிக்குள் நின்றிடுமோ? - வரும்
மாலைப் பொழுதும் மாறிவிடும் - அந்த
மையிரு ளின்முன் விளக்கேற்று!




க. பஞ்சாபகேசன்

**தூ**ரத்துக் கொடைக்கானல் மலைகளுக்குக் கீழே, அந்த நீலப்புடைவை போர்த்தினாற்போல் உள்ள மலை ராணியின் கீழே -

ரமணீயமான ஊர் -

வத்தலக்குண்டு.

ஊருக்கு எல்லையில் இந்த அழகை அதிகப்படுத்தியதைப்போல் இருந்தது ஓணான்கரடு. ஓணான் உருவத்தில் சிறியதாய் அடக்கமாய்ப் படுத்திருந்த சிறிய குன்று.

"ஓணான் கரட்டுக்குப் போயிருக்கும் இந்த ஆம்பிள்ள இன்னம் திரும்பக் காணோம், தாயி. பொழுதுக்கே புறப்பட்டுப் போச்சு. பள்ளிக்கூடத்திலே படிக்கிற பையனும் திரும்பிட்டான், மேச்சலுக்கு மாடுங்களை ஓட்டிக்கிட்டுப் போன என் மத்த ரெண்டு பசங்களும்கூடத் திரும்பிட்டானுவ... இந்த ஆம்பிளைதான் இன்னும்..."

சலசலத்து ஓடும் மஞ்சள்ஆற்று நீரில் புடைவை முந்தானையை அலசிக்கொண்டே, நிமிர்ந்து ஓணான்கரடு இருந்த திசையையும் பார்த்துக் கொண்டு சொன்னாள் பூவாயி.

சற்றுத் தூரத்தில் ஆற்றின் குறுக்கே இருந்த யானைக் கல் பக்கத்தில் இடுப்பளவு நீரில் நின்று மஞ்சளைப் பூசிக் கொண்டிருந்த தேவகியம்மா சொன்னாள் :

"பூவாயி! நான் திரும்பத் திரும்பச் சொன்னாலும் உனக்குப் புரிவதில்லை. புருசன்காரன் கோவமெல்லாம் சூரியனுக்கு முன்னாலே பனியைப்போல. வீட்டு நாயகன் கோவிச்சுக்கிட்டாத்தான் அழகு. புள்ளைங்கள்ளாம் வேடிக்கை பாக்குற அளவுக்கு சண்டை புடிக்கிறதே ஒங்க ரெண்டு பேருக்கும் சோலியாப் போச்சு... கவலைப் படாதே. ஒன் புருசன் இருட்டுறதுக்குள்ளார திரும்பிருவான்".

தேவகியம்மா, இன்று நேற்று மட்டும்தானா - இப்படி எத்தனையோ நாள் ஆறுதலாகச் சொல்லியிருக்கிறாள். நல்ல வசதியோடு பங்களாவிலே வசிக்கிறாள் தேவகி. எதிர்சாரி மைதானத்தில் குடிசை போட்டுக் குடியிருக்கப் பூவாயியை அனுமதித்திருக்கிறாள் தேவகி. அந்த இடம் தேவகிக்குச் சொந்தம்.

குழந்தைக் குட்டிகள் அதிகம். கஷ்டப்பட்டு உழைத்துச் சாப்பிடும் குடும்பம். இத்தனையிலும் தேவகியிடம் வந்து 'அது வேண்டும், இது வேண்டும்' என்று பூவாயி கேட்டதே இல்லை. ஆனால் பங்களா வாசலில் போட்டிருந்த, ஊஞ்சலில் தேவகி வந்து உட்காரும் போதெல்லாம், பூவாயி வாசற்படிக்கட்டில் உட்கார்ந்து தேவகியுடன் உரையாடுவாள். இயல்பான உரையாடலாக இருக்கும். சமநிலை இருக்கும்.

தேவகியின் புருஷன் கருணாகரன் ஒரு பிரபல காண்ட்ராக்டர். கொடைக்கானல், பெரியகுளம், மதுரை என்றெல்லாம் பெரிய இடங்களில் பெரிய பெரிய காலனிகளை நிர்மாணித்துக் கைநிறையச் சம்பாதித்துக் கொண்டிருப்பவர்.

தமது காரில் எங்கே போனாலும், இரவு எந்நேரமானாலும் கருணாகரன் வீட்டுக்குத் திரும்பாமல் இருக்க மாட்டார். வெளியூருக்குப் போவதானால் தேவகியையும் கூடவே கூட்டிக் கொண்டு போவார். அப்படி ஓர் அன்னியோன்னியம். பிள்ளைகுட்டி இல்லாததுதான் குறை. அதுவும் ஊர்க் கண்ணுக்கு. இந்தக் குறை இவர்கள் சமநிலையைப் பாதித்ததில்லை.

வத்தலக்குண்டை அணைத்துச் செல்லும் மஞ்சள்ஆற்றை விட்டு, இவர்கள் புறப்பட்டபோது, போர்த்திக் கொண்டு வந்த அந்தியை மின் விளக்குகள் அலங்கரிக்க ஆரம்பித்தன. தேவகியும் பூவாயியும் சற்று வேக நடை போட்டார்கள்.

**அ**ன்று காலையில் எதிர்க் குடிசையில் இருந்து வந்த சத்தத்தைப் பங்களா மாடியிலிருந்து தேவகி கேட்டாள்.

பழக்கமான சத்தங்கள்தான். ஆனால் இன்று கேட்ட சத்தம் வேறு விதமாக அல்லவா இருந்தது!

"ராத்திரிச் சோத்துக்குப் பசங்களுக்கு ஒண்ணுமில்லே, சுள்ளி கட்டி வார கரடுங்களுக்குப் போய் வாறேன்னு சொல்லிட்டு, மூணு நாளா வண்டியைப் பூட்டிப் பொறப்படாம, வூட்டிலேயே குந்திக்கிட்டிருக்கியே?" - இது பூவாயி.

"வலது காலில் ஒரே வலி. நான் என்ன செய்யட்டும்?" - இது அவள் புருசன்காரன் கந்தப்பன்.

"வலியையும் அதையும் பார்த்தா புள்ளைங்களைப் பெத்தே? வரிசையா வலியெடுத்து நானில்லே பெத்தேன்? புள்ளைங்க பசி பெத்த எனக்கில்லே தெரியும்" விவாதத்துக்குச் சூடு ஏறி, அதன் செல்கதி எப்படியெல்லாமோ மாறிப்போய்...

கடைசியில் கந்தப்பன் ஒற்றை மாட்டுத் திறந்த வண்டியைப் பூட்டிக் கொண்டு புறப்பட்டுப் போய்விட்டான்.

மெயின்ரோடு அது. கொடைக்கானலுக்கும் பெரிய குளத்துக்கும் விரைந்து செல்லும் பஸ்களும் கார்களும் 'விர் விர்' என்று ஐந்து நிமிடத்துக்கு ஒருமுறை முழக்கமிடும் 'பிசி'யான மெயின்ரோட்டிலிருந்து, சற்றுத் தூரத்தில் கிளைப் பாதையில் திரும்பிக் கரடுகளை நோக்கிக் கந்தப்பன் வண்டியைத் திருப்பிச் சென்றதை மாடியிலிருந்தே பார்த்துக் கொண்டிருந்தாள் தேவகி.

ஓணான்கரடு, அப்பாலிருந்த மாங்கரடு, சாமியார் கரடு ஆகிய சிறு குன்றுகளில் விறகு வெட்டிச் சேர்த்து வரப் போயிருந்த கந்தப்பன் - காலையில் வண்டி பூட்டிப் போனவன் - இன்னும் திரும்பியிருக்கவில்லை.

இரவு மணி ஏழு. எதிர்க்குடிசை வாயிலில் குழந்தைகள் வரிசை வைத்து உட்கார்ந்திருந்தார்கள், பரபரத்திருந்த மெயின் ரோட்டில் வாகனங்கள் பறந்து கொண்டிருந்ததைப் பார்த்துக் கொண்டு.

இப்போது இங்கே ஒரு சமநிலை உருவாகிக் கொண்டிருந்தது.

தேவகியும் ஒரு புதுக் கவலைக்கு ஆளாகியிருந்தாள். அவள் கணவன் கருணாகரனும் இன்னும் வீட்டுக்குத் திரும்பியிருக்கவில்லை. காலையில் நடந்த சம்பவம் தேவகியின் நினைவில் -

கருணாகரன் ஒன்பது மணிக்கே முழுச் சாப்பாடாகச் சாப்பிடுவார்.

"தேவகி! இன்னைக்குப் பெரிய குளத்திலே வேலை, மாலை சீக்கிரமே திரும்பிடுதேன், சினிமாவுக்குப் போலாம் -நாளாச்சில்லே?"

"ஆமாங்க. ஒங்களாலெ சொல்லத்தான் முடியுது. ஆனா..."

"இல்ல தேவகி. இன்னைக்குக் கட்டாயம் வெரசா வந்திடுதேன். ரெடியா இரு. அத்தோடு இன்னொண்ணு. அந்தப் பெரியகுளக்காரரு - அவர்தான் முன்னாள் ராவ் பகதூர் பட்டாபி ராமப் பிள்ளை - நம்ம ஒணான்கரட்டை ஒட்டிப் புதுசா ஒரு காலனி கட்டப்போறதா இருக்குறாரு. அந்தக் 'காண்ட்ராக்டும்' நமக்குச் சிக்க ஏற்பாடு பண்ணியிருக்கேன். கரட்டுப் பக்கத்தில் அந்த இடத்தையும் பார்த்துப்புட்டு வந்திடுதேன்".

"பாத்தீங்களா, ஆயிரம் சோலியை வெச்சிருக்கீங்களே".

இப்போது இரவு ஏழு மணி ஆகிக் கொண்டிருக்கிறது. கருணாகரன் திரும்பியிருக்கவில்லை. இவர் விவகாரம் தெரிஞ்சுதான் தேவகியே மஞ்சளாற்றுக்குப் போயிருந்தாள்.

ஆனால் -

இன்று ஏதோ புதுவிதமாக நடந்து கொண்டு இருப்பதைப்போல் தேவகிக்குப் பிரமிப்பு உண்டாகியது.

அங்கே கந்தப்பன் இன்னும் வரவில்லை.

இங்கே இவரும் இன்னமும் திரும்பியிருக்கவில்லை. பெரிய வீட்டம்மா, குடிசை வீட்டம்மா. வேடிக்கையான சமநிலை.

தேவகி பங்களா முன் போர்ட்டிகோ விளக்கைப் போட்டு, ஊஞ்சலில் உட்கார்ந்தபடி, எதிர்க் குடிசையை எறிட்டுக் கொண்டிருக்க -

'ஒரு டெலிபோன்கூட வைத்துக் கொள்ளாத பிரபல காண்ட்ராக்டராம்; தானே காரையும் ஓட்டிச் செல்வாராம்' என்று அலுப்பு நினைவுகள் தேவகியின் நெஞ்சைச் சூழ -

பூவாயியும் வந்து படிக்கட்டில் உட்கார்ந்தாள், கவலையே வடிவாக.

"என்ன பூவாயி, புள்ளைங்க சாப்பிட்டுச்சா? நான் ஏதாவது தரட்டுமா?"

"வேண்டாம் பெரிய வீட்டம்மா. வீட்டிலே மணி அரிசிகூட இல்லாதபடி வைச்சிருக்கிறவ ஒரு குடும்பப் பொம்பிளையா இருக்க முடியுமா, தாயி? புருசனுக்கு ஒரு பொறுப்பு உண்டாக்கத்தான் அப்படிச் சொல்லி அனுப்பிச்சேன்... ஆனா நேரமாச்சே. இன்னம் வரல்லியே? கரடுங்கள்ளே அருவித் தண்ணிகூட இல்லாத நேரமாச்சே... மாட்டுக்குத் தண்ணி காட்டியிருக்க முடியாதே? எங்கிட்டு என்ன செய்யுறாரோ? கால் வலின்னு சொல்லிக்கிட்டுப் போனாரே?"

"கவலைப்படாதே பூவாயி" - தேவகி இப்படிச் சொன்னாலும் அவள் மனத்திலும் இப்போது கவலை.

என்றைக்குமே சொல்லாத வார்த்தையை அன்றைக்குக் கருணாகரன் சொல்லிவிட்டுப் போனாரே? ஏன் அப்படிச் சொன்னார், தாம் சீக்கிரமே திரும்பி வருவதாக.

எதிர்க் குடிசையில் குழந்தைகள் முடங்கி விட்டார்கள். மணி பத்துக்கு மேலாகிக் கொண்டிருந்தது.

இருவரின் புருஷர்களும் இன்னும் வீடு திரும்பியிருக்கவில்லை.

பெரியது, சிறியது என்ற பேதம் அங்கு மனத்தளவில் இல்லை. தாலி கட்டியவர்கள் வரவில்லை. தராசில் ஒரே நிலைதான்.

கொடைக்கானலுக்கும் பெரிய குளத்துக்கும் பறக்கும் வாகனங்களின் சந்தடிகூட மெயின் ரோட்டில் அடங்கி வர -

வத்தலக்குண்டு இரவின் அமைதியைப் போர்த்திக் கொள்ளத் துவங்கியபோது -

ஒற்றை மாட்டு வண்டியின் சத்தம் கேட்டதும் தேவகியும் பூவாயியும் பங்களா வாசலுக்கு வந்தார்கள்.

வண்டியைப் பாதி நிறைத்திருந்தன கரட்டுச் சுள்ளிகள், களைத்திருந்த மாடு. வண்டியை ஓட்டி வந்திருந்தது -

பூவாயியின் கணவன் கந்தப்பனில்லை.

அடுத்த தெருவில் குடியிருக்கும் பாண்டி.

"ஒணான் கரட்டோரம் வண்டியும் மாடும் இருந்திச்சு. அந்தப் பக்கமா வந்த நான், கந்தப்பனுக்குச் சொந்தமான வண்டியாச்சே, மாட்டோட தனியாயிருக்குதேன்னு ஓட்டியாந்தேன். வண்டியிலேகூடப் பாதிச் சுள்ளிங்கதான் நெறஞ்சிருக்கு" என்றான் பாண்டி.

அதே சமயம் வெளியே சைக்கிள் சத்தம். மதுரைக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த வேலு, லீவுக்கு ஊருக்கு வந்திருந்தான். அவனிடம் ஒரே படபடப்பு.

"பெரிய வீட்டம்மா! கரட்டோரம் நம்ம வீட்டு ஐயாவோட காரு நின்னுக்கிட்டிருக்கு. கார் 'லாக்' ஆகியிருக்கு. ரொம்ப நேரமா அப்படி அங்கே இருக்குது. பக்கத்தில் யாரையும் காணோம்".

இப்போது -

கந்தப்பனின் அந்தப் பழைய வண்டியும் -

கருணாகரனின் அம்பாசிடர் காரும் -

அதது, இரு இல்லத்தரசிகளின் உள்ளத்தில் ஏற்படுத்திய கவலையில் சமநிலைகளில் இருந்தன.

வேலு இன்னொரு சேதியும் சேர்த்துச் சொன்னான். "சாமியார் கரட்டில் ஒரு சிறுத்தைப் புலி கொஞ்ச நாளாய்த் திரிஞ்சிக்கிட்டிருக்காம். கொடை மலைக் காட்டிலிருந்து புலி எப்படியோ நம்ம கரடுங்களுக்கு வந்திருக்குதாம். சாமியார் கரட்டைத் தாண்டி இந்தண்டை வந்தா நம்ம ஒணான் கரடும் மாங்கரடும்தானே இருக்குது?"

இப்போது இரு மனைவிமாரின் மனங்களிலும் புலியின் கிலி பிடித்ததும் சமநிலைதான்.

மெதுவாக ஊர்க் கூட்டம் ஆரம்பிக்க -

வத்தலக்குண்டின் இரவு அமைதி அங்கே மாறி பரபரப்பில் மூழ்க ஆரம்பிக்க -

பெரிய காண்ட்ராக்டர் கருணாகரன் இரவு நிசிப் பொழுதைத் தாண்டியும்கூட வீடு திரும்பாமல், அவர் கார் மட்டும் கரட்டு ஓரம் தனித்து இருந்தச் செய்தி அதிக சுவாரசியமானது.

'வவுத்துக்குச் சோறில்லேன்னு சம்சாரியை இப்படி கரட்டுக்குத் துரத்தி அடிச்ச இவளும் ஒரு பொம்புள்ளையா' என்று பூவாயியை 'வாழ்த்த' அந்தச் சேதியும்

ஒன்றாய்ச் சேர்ந்து, தலைப்புச் செய்தியை உருவாக்கிக் கொண்டிருந்தது.

வத்தலக்குண்டு போலீஸ் ஸ்டேஷனில் பரபரப்பு.

தேவகி அதிர்ந்து உட்கார்ந்திருந்த நிலையில், கணவனின் அன்பான வார்த்தைகள் - "நமக்குக் குழந்தை இல்லாவிட்டால் என்ன? உனக்கு நான், எனக்கு நீ குழந்தைங்கதானே".

பூவாயி அதிர்ந்து உட்கார்ந்திருந்த நிலையில், "எத்தினிப் புள்ளைங்க நமக்கு இருந்தா என்ன? மரம் வச்சவன் நீர் ஊத்திட்டுப் போறான். நான் இருக்கேன் இவனுங்களுக்கு".

அப்போது -

பட்டிவீரன்பட்டியின் அந்தக் காலத்து ஜமீன் பரம்பரையைச் சேர்ந்த பெரிய மோட்டார்கார் 'படபட' சத்தத்துடன் வந்தது. ஊரைக் குலுக்கி, எடுத்துக்கொண்டு, நேரே கார் தேவகியம்மாவின் பங்களாவுக்கு எதிரே நின்றது.

பின் சீட்டிலிருந்து கருணாகரன் இறங்கினார். இன்னொரு பக்கத்திலிருந்து கந்தப்பனும் இறங்கினான்.

கருணாகரனின் கைகளில் ஒரு வெளுத்த டர்க்கி டவலுக்குள் -

அழகியச் சிறு குழந்தை!

குழந்தை லேசாக விசிக்கவே - "தேவகி! பால் இருக்குதா? குழந்தைக்குக் கொடுக்கத் தயார்ப்படுத்து", என்றார் கருணாகரன்.

அழகான குழந்தை. சாமியார் கரட்டில் கண்டெடுத்தார்களாம்.

ஒணான் கரட்டுக்கு வந்த கருணாகரனும் கந்தப்பனும், அந்த வழியாக வந்த ஒரு கிழவி, சாமியார் கரட்டில் யாரோ ஒரு குழந்தையை அநாதையாக விட்டுப் போயிருப்பதைச் சொல்லக் கேட்டு -

தாங்கள் வந்த சோலிகளை மறந்து விட்டு அங்கே ஓடினார்கள்.

குழந்தையைத் தேடி எடுத்தபோது இருட்டாகிவிட்டது. முதலில் குழந்தையைக் கண்டது கந்தப்பன்தான். அழாமல் அது சிரித்துப் படுத்திருந்தது.

பார்த்ததும் கந்தப்பனுக்குப் பூவாயியின் நினைப்பு. 'வூட்டில் இன்னொன்னு சேர அவ தயங்கமாட்டா'.

பார்த்ததும் கருணாகரனுக்குத் தேவகியின் நினைப்பு. 'உனக்கு நீ எனக்கு நான் மட்டும்தானா? நமக்குன்னு ஒண்ணு'.

இருட்டாகிவிட்டதால் சாமியார் கரட்டிலிருந்து இறங்கி, இருவரும் பட்டிவீரன்பட்டியைச் சேரும்போது இரவு எட்டரைக்கு மேலாகிவிட்டது. அங்கிருந்து ஜமீன் பிளஷரைக் கேட்டு வாங்கிக் குழந்தையுடன் வத்தலக்குண்டுவுக்கு வருவதற்குள் இங்கு இப்படி அமர்க்களம்...

தேவகி, "கரட்டுத் தெய்வம் நம்ம பிள்ளையில்லாக் குறையைத் தீர்க்க இப்படிப் பெரிய பிச்சை போட்டிருக்குதே" என்று குழந்தையைக் கொஞ்சியபோது -

பூவாயி, "நீங்க பெரிய வீட்டம்மாதான், தேவகியம்மா. ஆனா அவரு எம்புருசன்தான் - கரட்டு இறக்கத்துலே மொதல்லே புள்ளையே பார்த்தாராம். இதெ நாங்களே வளர்த்து..." என்றாள்.

மனத்தராசின் சமநிலை இப்படி மாறி மாறி வந்து கொண்டிருந்தபோது -

ஒரு போலீஸ்காரரும் அவரைத் தொடர்ந்து ஒரு பெண்ணும் அங்கே வந்தார்கள்.

அந்தப் பெண் தேவகியின் கையில் இருந்த குழந்தையை அப்படியே வாரி அணைத்துக் கொண்டு, "இதுதாங்க... எம்புள்ளை இதுதாங்க" என்று அழுது அழுது குழந்தையின் கன்னம் சிவக்க முத்தங்களை அழுத்தினாள்.

கான்ஸ்டபிள் சொன்னார்: "காண்ட்ராக்டர் சார். புள்ளையெ இந்தப் பொம்பளை சாமியார் கரட்டிலே 'போட்டுவிட்டுப்' போனாளாம். ஆனா அடிவாரத்திலே யாரோ சொல்லியிருக்காங்க, 'கரட்டிலே சிறுத்தைப் புலி நடமாட்டம் இருக்குது'ன்னு மனசு பொறுக்காம மறுபடி ஓடிப்போய்ப் போட்ட எடத்துலே பார்த்திருக்கா பாவிமவ, காணோம்... அப்புறம் விசாரிச்சு, அலைஞ்சு..."

மீதி விவரம் பட்டிவீரன்பட்டி, வத்தலக்குண்டு காவல் நிலையங்களுக்குத் தெரிவிக்கப்பட்டு –

தாய் இப்போது தன் குழந்தையை உரிமையோடு மார்பில் அணைத்துக் கொள்கிறாள். கொஞ்சுகிறாள். அழுகிறாள். இதற்குள் சப்-இன்ஸ்பெக்டரும் வந்து விட்டார்.

"ஏய், நீ பொம்பிள்ளைதானா? வேணாம்னு புள்ளைய விட்டுப் போட்டியில்லே? அதெ சிறுத்தை அடிச்சா என்ன? இல்லே..." சப்-இன்ஸ்பெக்டரின் சீறல் முடியு முன்பு –

"சும்மா நிறுத்தய்யா. வறுமைக் கொடுமை. தப்பு செஞ்சேன். அதுக்கு அழுகும் இருந்திச்சு. பொறந்த இதுவும் அழுகுதான். பசிக்கில்லாம இதுவாவது பொழைச்சுப் போகட்டும். ஒரு மகராசன் எடுத்துப் போவாருன்னு கரட்டிலே போட்டேன் – இதுப் பசி தீரும்னு தான் செஞ்சேன்... ஆனா காட்டுச் சிறுத்தைப் புலியோட பசிக்கு இல்லே..." குழந்தையுடன் அவள் புறப்பட இருந்தபோது –

"அதான் ஒண்ணுக்கு ரெண்டு தர்மவானா இதை வளர்த்துப்புடறோம்னு போட்டிலே இருக்காக. விட்டுப் புடேன். ஒம் பசிக்காக இதெப் பெத்தே. மறுபடி உனக்குப் பசி எடுத்தா இன்னொன்னை..." கான்ஸ்டபிள் சொல்லி முடிக்கவில்லை –

அவள் சீறினாள்.

"இப்பச் சொல்றேன்யா... ஒணான் கரட்டிலே காண்ட்ராக்ட் கட்டடம் கட்ட வரேன்னு அங்கிட்டு அடிக்கடி வந்து என்னை ஏமாத்தித் 'தின்னுப்புட்ட' ஒரு மனுசப் புலிக்குப் பொறந்ததையா இது. இன்னும் சொல்றேன்... ஒரு பாவமும் அறியாத இதெ சிறுத்தைப் புலிகிட்டேயே கொடுப்பேனே தவிர, 'அது'கிட்ட கொடுக்கமாட்டேன். நான் மானத்தி. நடங்கய்யா போலீஸ் ஸ்டேசனுக்கு".

தேவகியின் கண்கள் தன் கணவரைத் தொடர –

சப்இன்ஸ்பெக்டர், கான்ஸ்டபிளின் பின்னால் குழந்தையுடன் போய்க் கொண்டிருந்தவளைக் கருணாகரனின் கண்கள் தொடர –

சமநிலை மாறி தராசில் உயர்ந்துவிட்ட குடிசைத் தம்பதியரின் கண்கள் ஒருவரை ஒருவர் தொடர –

"வாங்க உள்ளே போவோம். விடிஞ்ச பிறகு 'உங்க பிள்ளைக்கு' ஒரு வழி செய்யலாம்" என்றவாறு உள்ளே திரும்பினாள் தேவகி. "இல்லை... நம்ம பிள்ளைக்கு" என்று உடனே திருத்தியும் கொண்டாள். இப்போது நிச்சயம் 'பெரிய வீட்டம்மா'வாகி விட்டாள் அவள்.

அழகான வத்தலக்குண்டு இப்போது விடியற் காலத்தை எதிர் பார்த்தபடித் தனியே உட்கார்ந்து கொண்டிருந்தது.

ஃ

## சினம்

பிரபாகர பாபு

இயலாமை குமுறிய எரிமலை
உடன்படாமையின் விரிவாக்கம்
இரத்த அழுத்தத்தின் வித்து
அறியாமை அடர்த்தியில் நரம்புத்தீ
விகார முகத்துக்கு பூச்சு இல்லா அரிதாரம்
அழிவு அமிலத்தை கொதிநிலையில் கொட்டும் அக்னிச்சுரபி
இழப்பு எய்திய விஷ அம்பு
அவமானப் புதரில் பார்த்தீனியக் கொடி
அமைதி திருடவரும் முக மூடா கள்வன்
செல்லுபடியாகிறபோது எதிர்தரப்பு 'ஹிரோஷிமா' ஆகலாம்.
இல்லையெனில் தன் பிறப்பிடமே!

## நல்ல சிந்தனைகள்

சிந்தனைகள் நல்லதாயின் சேரும் நற்பயன்கள்
சீரான வாழ்வுக்கு அவைதான் உரங்கள்
வந்தடையும் நலம் யாவும் நல்லுழைப்பின் ஆக்கம்
வழிமட்டும் ஒழுங்கானால் இறையருளைச் சேர்க்கும்
இமைப்பது முதலிங்கே நடப்பது யாவும்
அமைப்பின் படியே அனைத்தும் இறைவா!
விதைப்பது எல்லாம் என் பொறுப்பானால்
விளைவது மட்டும் உன் சிறப்பாகும்!

சீனி வீரப்பன்

## "உன்னை எழுது!"

பச்சைமால்

"இந்தநூற் றாண்டுக்குள் இரண்டா யிரத்துக்குள்
இணையற்ற சாதனைகள் இலக்கியத்தில் செய்திடுவோம்!"
எந்தன் குறிக்கோள் எனதுயிரின் தீர்மானம்...
எடுத்தேன் தாள்பேனா இருந்தேன் கவியெழுத...

உந்துசக்தி தோன்றவில்லை ஒன்றிரண்டு அடிஎழுதி
ஒடிந்து கிடந்தேன் உறங்கவில்லை... உருவெளியில்
செந்தமிழே தோன்றினாள்! செவ்விதழினால் நகைத்து
"'சித்தம் உறுதி கொள்' சித்திக்கும்!" வாழ்த்தினாள்.

"என்னத்தை எழுதுகிறாய்?" எனக் கேட்டாள் காட்டினேன்
சின்னபின்ன மாகக் கிழித்தெறிந்தாள் சீற்றமுடன்
"எனக்காக எழுத்துகளை ஏன் எழுதி மாய்கின்றாய்?
உனக்குள் இருக்கும் விளக்கில் ஒளி யேற்று"...

"நீதான் பிரம்மம் நித்தியத்தின் சாரம்
அழியாத பிரபஞ்ச வெளியின் அணுக்கூறு
நீதான் சத்தியம் சம்சார சாகரம்
நினைவுநீர்த் தேக்கம் நிகழ்கின்ற காலம்!"

"உன்னை எழுது! உன் உயிரின் தீக்கனலால்
என்னை எழுது! இரத்தத்தைத் தொட்டெழுது
உன்ஆசை பாசம் காதல் கண்ணின் நீர்
உன் அவலம் ஞானம் உயிர்மூச்சு உணர்வலைகள்
அத்தனையும் எழுது! அதுதான் எழுத்தாகும்!!
அணுவும் அண்டம்தான் கணப்பொழுதும் காலம்தான்!
சித்தன் நீ செய்! செய்!! சிந்தை வசமாகும்!"

கட்டளைகள் ஏற்றேன் கல்மலையும் சிறுஉளியால்
கலைக்கோயில் ஆகும்எனக் கண்டவன் நான்!
கால விளிம்புக்குக் கால்பாவி நடக்கின்றேன்...

## யார்? யார்?

மலையைச் செய்து
வைத்த தார் - இது
மனிதன் செய்து
வைத்ததா!

நிலைத்தி ருக்கும்
வானம் பூமி
நீயும் நானும்
செய்ததா!

கடலில் நெளியும்
அலையின் அழகைக்
கண்டு களிக்கச்
செய்த தார்!

மடல் விரிந்த
மலர்க ளெல்லாம்
மணக்கும் வண்ணம்
செய்த தார்?

சாரதிதாசன்

## சரிதம்

இளசை அருணா

காதலில் பிறப்பது கவிதை - இங்கே
கண்களில் பிறப்பதே கருணை
மோதலில் பிறப்பது விளைகள் - அந்த
முழுமையில் மிதப்பதே வெறிகள்

ஆசையின் விளைவுகள் பெண்மை - அவள்
ஆண்மனம் பற்றுதல் உண்மை
ஓசையின் எதிர்பதம் மோனம் - இங்கே
உயர்ந்தவன் பண்புதான் ஞானம்

ஆசையின் மிச்சமே மழலை - அதில்
ஆண்மகன் பெண்மையின் நிழலாய்
வேர்விடும் காதலே மனிதன் - இந்த
விளைவுகள் தானிங்கு சரிதம்!

# ஆந்தையும் சூரியனும்

சூரியனைப் பதவி நீக்கம்
செய்தே தீருவேன் என
சூள் உரைத்தது ஆந்தை!

ஏன் என்று கேட்டேன்:
வெளிச்சம் பட்டுப்பட்டு என்
சிறகுகள் தீய்ந்தன
இதற்கு ஒரு
விசாரணைக் கமிஷன் தேவை என்று
அலறிற்று ஆந்தை!
ஓர் அமாவாசை இருட்டில்
ஆந்தைகள் கூட்டிய
இரகசியக் கூட்டத்திற்கு
விசேஷ அழைப்பின் கீழ் சில
குருட்டுப் பூனைகளும்
கூட்டணி சேர்ந்தன!

கடல்நீரை மேகமாக்கி
மழை பெய்வித்தான் சூரியன்
என்றாலும்
சூடு தணியவில்லையே எனக்
குறை கூறிற்று ஆந்தை!

சூரியன் அந்தத்
திருதிராஷ்டிர ஆந்தை மீது
வானவில் வளைத்து
வருணாஸ்திரத்தை எய்தான்!
முத்துக்களாய்ச் சிதறின
மழைத் துளிகள்!

நதிகள் நடந்தன
நந்தவனங்களை முத்தமிட்டன
வாழை, பலா, மா, கமுகு, தென்னை
மஞ்சள் இஞ்சியுடன்
கரும்புக் காடுகள் -
கழனிகள் நிறைந்தன!

வறண்ட நிலங்களில்
மரிக்கொழுந்துப் பாத்திகள்!
மாந்தோப்பில் ஒரு குயிலின்
தேவகானம்!

ஆந்தைக் கூட்டம் எல்லாம்
அயல்நாடு சென்றுவிட்டதாகக்கூறி
ஊர்க்குருவி ஒன்று
உயரப் பறந்தது!

சக்தி கனல்

# மாறிடும் மானுடம்

பால சாண்டில்யன்

அன்பெனும் அகல்விளக்கு அணையலாமா
பண்பெனும் பெருவுடைமை குறையலாமா
நண்பரை பகைமையிலே தள்ளலாமா
நல்லதோர் இதயத்தை கிள்ளலாமா
(அன்பெனும்)

இயந்திர குணம்நீ கொள்ளலாமா
இடர்படும் வாழ்வைநீ அள்ளலாமா
புகழுடன் உலகிலே வாழ நீயும்
பழகிடு மானுடம் போற்றிநாளும்
(அன்பெனும்)

கடமையைச் சுமையாய்க் கருதலாமா
கயமையில் புதைந்தே போகலாமா
மமதையில் தீய்ந்து கருகிடாமல்
மற்றவர் பயனுற வாழ்தல் நலமே!
(அன்பெனும்)

# வீட்டுக் கச்சேரி

இளையவன்



வீட்டுக்குள்ளே பாட்டுத் தோட்டம்;
விளையாட்டான விளையாட்டு!

ஆட்டம் வேறு சேர்ந்து கொண்டது
ஆளுக்கொரு வித வாய்ப்பாட்டு!

அமர்க்களமான கச்சேரிக்கு
ஆறைந்து வாண்டுகள் சபையாக;

விமர்சனம் சொல்லக் குப்புடு தாத்தா
வெற்றிலைப் பெட்டி துணையாக!

நாற்காலியினைத் திருப்பிப் போட்டு
நட்டு நிகழ்த்திய மிருதங்கம்;

பாற் சொம்பின் மேல் தாளம் வராமல்
பாபுவின் மனதில் ஆதங்கம்!

கொப்பரை மூடியில் வலையப்பட்டி....
கோணல் இலையில் நாமகிரி...

தப்புத் தாளம் என்றே முறைத்தார்
தாத்தா அடிக்கடி எழுந்தபடி!

மிகப் பலவான பாத்திர ஓசை
மேல்நாட்டிசையின் கலவைகள்!

அகப்பைக் கூட்டில் கரண்டிகள் இல்லை
அம்மா முகத்தில் கவலைகள்!

கோபக் கார மங்களம் மாமி
குதித்துக் குதித்து வசைமாரி

ஆபத்துக்குப் பாதகம் இல்லை
அத்துடன் முடிந்தது கச்சேரி!

# மூன்று குரல்

**மரு பரமகுரு**

கடவுளைக் காணக் கயிலைக்குப் போனேன்
கடவுளைக் காணவில்லை!

முடிமலை மீதோர் குரலெழக் கேட்டேன்
மொழிந்தது கூறுகிறேன்!

"கயிலைபோல் நெஞ்சை உயர்வுசெய் அங்கே
கடவுளைக் கண்டிடலாம்

அயலினில் தேடித் துயரடை யாதே
அறிக, நீ" என்றதுவே!

பரமனைக் காணப் பாற்கடல் தேடிப்
பயணம் புறப்பட்டேன்!

பெருநிலம் எங்கும் பாற்கடல் காணேன்!
பேசிய தோர் குரலே!

"பாலினை போலே மனத்தினைத் தூய்மைப்
படுத்துக படுத்திருப்பான்

மாலவன் அங்கே! ஏனலை கின்றாய்?
மயங்கிடேல்" என்றதுவே!

இறைவனைக் காணச் சிறகுபெற் றேவான்
ஏகிப் பறந்தேனே!

ஒருவனைக் காணேன்; தரையினில் வீழ்ந்தேன்;
ஒருகுரல் பேசியது!

"அறிவை விரிவு செய்! அகண்ட மாக்குக!
அவ்வுளம் தோன்றிடுவான்

இறைவன்" என்றது! குரல்மொழி மூன்றையும்
இதயத்தில் பதியமிட்டேன்!

# ஆத்மாவின் ராகம்

குழப்பம் தனது தாயகமாய்,
குமுறல் தனது தாய்மொழியாய்,
முழக்கம் தன்னுடை நெட்டுயிர்ப்பாய்,
முனகல் தன்னுடைய இன்னிசையாய்,
பழக்கம் பாவச் செய்கையதாய்,
பண்பு கெட்டிப் பாரினிலே
சழக்கர் கூட்டத் தலைமையினைத்
தாங்கிக் கொண்டு வாழ்வதுவோ?

விதைகள் போட்டது பூமலர,
விளைவு? நிறைந்தது முட்செடிகள்
கதைகள் போலே வாழ்வாமோ?
கனவுகள் பலித்துப் பயன்வருமோ?
எதையோ எண்ணி ஏங்குவதும்,
எதற்கோ பதறித் துடிப்பதுவும்,
சிதையுள் எரியும் நாள்வரையும்
சிறிதும் மாற மாட்டாவோ?

**அபிதா**

# குமரித்தாய்

**முருகசரணன்**

நீலக்கடல் ஓரத்திலே காலமெல்லாம்
நீ தனியாய் நிற்கின்றாய் – தேவி
சாலவே அன்புடன் வரும் பாலனிவனைச்
சற்றணைத்துக் கொள்ளாயோ!

அமுதஒளி வீசும் குமுதக் காதலன்
அருள்பெறவே நிற்கின்றான் – நீயோ
கமகம என வரும் தமிழ்க்காற்றில்
களித்து டலம் சிலிர்க்கின்றாய்!

தவத்திரு மேனி நவமான ஒளியில்
தரணி எலாம் மகிழ்ந்திடுமே – அம்மா
கவலை, சிறு அச்சம் கழன்றிடுமே – நெஞ்சம்
கனிந்துன்னைப் புகழ்ந்திடுமே!



# கடத்தல்காரக் கள்ளியே!

**தங்க. சிவராசன்**

கடத்தல்காரக் கள்ளியே!
உனைக் கைது செய்ய வழியில்லையே?
ஊருக்கு உன்னால் தொல்லையே!
நீயும் உணர வில்லையே!
ஆம்!

கூந்தலில் மேகத்தைக் கடத்தினாய்!
குடிநீர்ப் பஞ்சமாச்சு!
பார்வையில் மின்சாரம் கடத்தினாய்!
'மின்வெட்டுத்' தொல்லையாச்சு!

இதழில் மதுவைக் கடத்தினாய்!
எங்கும் கள்ளச் சாராயமாச்சு!
சிரிப்பில் வைரம் கடத்தினாய்!
'செயற்கை'க்குப் பட்டை தீட்டலாச்சு!

மேனியில் தங்கம் கடத்தினாய்!
'தாலித் திருட்டு' பெருகிப் போச்சு!
சாயலில் அன்னம் கடத்தினாய்!
பாவம்! பரம்பரை அற்றுப்போச்சு!

அன்னல் காந்தியின் அற்புதத் தத்துவம்
மண்ணில் மறையலாமா – நம்
கண்ணே மறைக்கலாமா –

இன்னல் பட்டுவா ங்கிய சுதந்திரம்
ஏங்கித் துடிக்கலாமா – நாம்
தூங்கி வழியலாமா.

தன்னல மின்றி இருந்த தலைவர்கள்
சுயநலம் கொள்ளலாமா – பணத்தை
சுவீகாரம் செய்யலாமா

உன்னத பண்பை உயிராய்க் கொண்ட
உத்தமரை மறக்கலாமா – காந்தி
சத்தியத்தை வெறுக்கலாமா!

செய்தித் தாளைப்புரட்டும்போது
நடுக்கம் வருகிறது – கண்ணில்
மயக்கம் வருகிறது.

பெய்யும் மழையும் சென்னையை கண்டால்
பின்னால் ஓடுகிறது – மனம்
புண்ணாய்த் தவிக்கிறது

அன்பே உருவான காந்திய நாட்டில்
அச்சம் பிறக்கிறது – கொடுமை
உச்சம் தெரிகிறது.

பள்ளிக்குச் சென்ற பிள்ளை மீண்டும்
வீட்டுக்கு வருவானா – இல்லை
காட்டுக்குச் செல்வானா

கொள்ளை அடிக்கும் கும்பல் கையால்
உயிரை விடுவானா – இல்லை
உயிரோடு வருவானா,

என்றதொரு பயத்தில் வாழ்கின்ற மக்களை
இங்கே பார்க்கின்றோம் – மனதில்
ஏங்கி நிற்கின்றோம்

# இனி நாமும் பொறுக்க வேண்டாம்

## த. கி. இராமசாமி

இந்திய பண்பாடு இப்படியே செல்ல
இனியும் விடலாமா – ஒழுக்கம்
அணைய விடலாமா

இந்திய தாயின் இதயத்தில் புண்ணை
மேலும் வளர்க்கவேண்டாம் – இனி
நாமும் பொறுக்கவேண்டாம்

சத்திய சோதனைக்குச் சோதனை கொடுக்க
யாரும் முயலவேண்டாம் – ரத்தம்
நாளும் சிந்தவேண்டாம்.

# புறப்படு பரந்தாமா!

## எஸ். குமாரகிருஷ்ணன்

ஆதிசேடனை அடக்கியவனே!
அன்றொரு நாள் நீ
நரகாசுரனை நசுக்கியதால்
தரணியெங்கும்
தலை தீபாவளி தோன்றியது!
ஆண்டுக்கொரு நாள்
பட்டாசு வெடித்துப்
பூரிப்பு அடைந்தோம்...
ஆனால், இன்றோ! விடியல்தோறும்
வெடிகுண்டு விளையாட்டால்
வேதனைப்படுகிறோம்!
தலைதீபாவளிக்கு வந்தவரின்
தலை சிதறிப்போகிறது!
ஊர்தோறும் நரகாசுரன்கள்
உல்லாசமாய் உலவுகிறார்கள்!
போதும் உன் புன்சிரிப்பு
புல்லாங்குழலைப் போட்டுவிட்டு புதிய புராணம்
படைத்திட புறப்பட்டுவா பரந்தாமா!

# நீர்! நீர்! நீர்

## சி. இராமசாமி

தாகத்தைத் தீர்ப்பதற்கு வேண்டும் தண்ணீர்
தன்வீட்டில் இடுக்கண்வரின் சொரிவார் கண்ணீர்
மேகத்தால் புவியதற்குக் கிடைக்கும் நன்னீர்
மேனிதனில் தெளிப்பர் சிலர் அத்தர், பன்னீர்!
பாகத்தால் போரெழுந்தே ஓடும் செந்நீர்
பலமாந்தர் எப்பொழுதும் விழைவார் வெந்நீர்
மோகத்தால் மதித்திட்டே அழைத்தால் உண்ணீர்
மேதினியில் ஆசைகளை வெறுக்க எண்ணீர்!

# யாருக்காக?

## கொ. மா. கோதண்டம்

பூமொட் டிதழினை மெல்லவி ரித்தே
புத்தம் புதுமணம் பரப்பி டுதலே
தேமது மெல்லிசை பாடிப் பறந்திடும்
தேங்குழல் தும்பியின் வரவுக் கன்றோ?

பூவாய் பஞ்சாய் நுரைய முகாக
பொங்கித் ததும்பி மேலெழும் அலைகள்
தாவியே கீழ்வானில் தகதக வெனவரும்
சந்திர னுக்காகத் தானே யன்றோ?

நட்சத் திரத்தோகை மெல்லவி ரித்தே
நாட்டியம் ஆடிடும் அழகு மயிலும்
பட்டொளிர் இளவேனில் எழிலாம் முகிலின்
பைய வருமந்த வரவுக் கன்றோ?

எண்ண இனித்திடும் கனியின் சாறோ
இதயத் தனிலுறை பூவின் தேனே
உன்னுடைப் புன்னகை யாருக்காக?
ஊறும் அமுதமும் யாருக்காக?

# மதுராந்தக மாதவன்

**கவியரசர் இளந்தேவன்**



மதுராந் தகமே விய மாதவனே
மதுராபுரி ஆள்கிற மன்னவனே!
கதிரேந் தியமா மகுடம் புனையும்
கமலாசன நாயகி காதலனே!

ஒளிமின்ன லெனும் புரிநூல் திகழும்
உயர்மார்பின னாகிய ஸ்ரீதரனே!
எளிவந்த பிரான் எனவே எளியோர்
இதயம்புகு மங்கல நாயகனே!

கோதண்ட மெனக் குறுவாய் உமிழும்
கோபால எழிற்சிறு கேசவனே!
கோதண்ட மெடுத் துலவித் திரியும்
குறையாத வருட் கடலானவனே!

மாமா எனவே மகமாயி மகன்
மயிலேறிய வானவன் கூப்பிடலால்
ராமா! குகனின் மாமா! எனவே
ரகுராம உனைத்தினம் போற்றிடுவோம்!

உண்ணும் உணவும் பருகும் புனலும்
உணர்வும் மகனெனும் தயரதனார்
மண்ணும் உருகக் கதறச் செயும்நீ
மதுராந்தக ஏரியின் காவலனோ!

உள்ளத் தவிசில் உறையுந் திருவை
ஒரு நாளினிலே வெளிவிட்டதனால்
கள்ளச் சிறையிற் சீதைக் கனலாய்க்
கனகத் திரு மாதுவசித் தனளே!

நெஞ்சக் குடிலில் நேசத் துணையை
நிமிடப் பொழுதும் மறவா திருந்தால்
அஞ்சத் தகுமோர் அவலம் இலையே
அரிதார முணர்த்திய நீதியிது!

நெடுமால் நெடுமால் என நின்றவனே!
நிலை மாறிட ஓர் குறளானது மேன்?
பெறுவோன் உருவங் குறுகும் பிறர்முன்
பெருநீ தீயிதைப் புவி காண்பதற்கோ?

குடலும் மலமும் செறியும் உடலில்
குடிவாடகையாய் வருமென் கருமம்
அடரும் இருளாய் எனைச் சூழ்கையிலே
அபயம் தரவந் தருள் மாதவனே!

இரவும் பகலும் அகமும் புறமும்
எனை வென்றிட யாருள ரென்றவனை
பகலும் இரவும் புணரும் தருணம்
படிமேற் குடர்சிந்திட வைத்தவனே!

அலையின் மடியில் துயிலும் பொருளே
அரியாகினை மானுட னாகினையே!
கொலையின் தடயம் விரலின் நுனியிற்
குறியாக விளங்குதல் யாமறிவோம்!

மலையும் கடலும் முகிலும் இலகும்
மது சூதனனே உன்னழகு நகம்
பவளம் திகழும் படிவம் பெறுமே
படுபாதகனின் குருதி யினால்!

கருராம பிரான் எனவந்த பின்னும்
கனகன் தரு செங்குருதிப் புனலைத்
திருராம பிரான் நகமேந்து வதால்
திரு மாலி வனென்பதை ஓதுகிறான்!

மதுராந் தகமே விய மாதவனே
மதுராபுரி ஆள்கிற மன்னவனே!
கதிரேந் தியமா மகுடம் புனையும்
கமலாசன நாயகி காதலனே!

நெகுமோர் இதயம் தகுமோர் இடமாய்
நிறை நீல நிறச் சுடரோங்குகவே!
ரகுராம ஜயம்! ரகுவீர ஜயம்!
ரகுராம மயம் புவியாகுகவே!

ஏரிக்கரையில் இளையா னொடுநீ
எதுநாள் வரை இங்ஙனமே ஙரிவாய்
சேரிக் குடிலும் ஸ்ரீரங்கமெனும்
ஸ்ரீவைஷ்ணவரின் உயிரான வனே!!


எதிரே: ஏரிகாத்தராமர் (மதுராந்தகம்) - போட்டோ: டி. ஆர். சீனிவாசன்

# நூற்றாண்டை நோக்கி மாணிக்க வேலனார்

ஒரு புதன்கிழமை (20.1.1988) மாலை சுமார் ஆறு மணி இருக்கும். தியாகராய நகர் நம்பர் ஒன் கிரஸெண்ட் பார்க் சாலையிலுள்ள முன்னாள் அமைச்சர் திரு. எம்.ஏ. மாணிக்கவேலு, பி.ஏ.பி.எல். அவர்கள் வீடு. அமைதி யான, ஆரவாரமற்ற சூழ்நிலை.

ஐயாவின் மகன் திரு. சங்கரன் என்னை வரவேற்று, "ஐயா கீழே வந்து உலாவிவிட்டு இப்போதுதான் மாடிக்குப் போயுள்ளார். வாருங்கள் பார்க்கலாம்" என்று அழைத்துப் போனார்.

மாடியிலுள்ள தனியறையில் தனிமையில் அமர்ந் திருந்த ஐயாவைப் பார்த்தவுடன் மிகுந்த மரியாதை மேலிட அவரது பாதங்களைத் தொட்டுக் கும்பிட்டு விட்டு வணக்கம் செலுத்துகிறேன்.

திரு. எம்.ஏ.எம். ஐயா அவர்கள் என்னை அமரச் சொல்கிறார். அமர்கிறேன்.

ஐயா அவர்கள் இந்தத் தொண்ணூற்று நான்காவது வயதிலும் அதே புன்னகையுடன் உள்ளார். கண் பார்வை தெரிகிறது. நன்றாகப் பேசுகிறார். நன்றாகக் காது கேட்கிறது. ஆனால் பெரியதோர் மீசை வைத்துக் கொண் டிருக்கிறார்.

அதே 'மெண்டல் அவர்ட்நெஸ்' - 'ரேஸர்லைக் பிரெயின்' - எனக்கு ஒரே ஆச்சரியம்! ஒரே புரியாத ஒரு மர்மமான தூய வாழ்வு. காவி அணியாத முனிவரைச் சந்திப்பது போன்ற மனநிலை என்னை ஆக்கிரமித்துக் கொள்கிறது!

"ஐயா, நான் தங்கள் தொண்ணூற்று நான்காவது ஆண்டு நிறைவு விழாவிற்கு வர இயலவில்லை. அன்றைய தினம் அகில இந்திய எழுத்தாளர் சங்கத் தலைவர் விக்கிர மனும் மற்றும் எழுத்தாளர்களும், நானும் காஞ்சிபுரம் சென்று பக்திக்குரிய திரு. சங்கராச்சார்ய சுவாமிகளைக் கண்டு ஆசீர்வாதம் பெற்று வந்தோம். மற்றும் தங்கள் பத்திரிகை ஆறு நாள் கடந்துதான் கிடைத்தது, விழாவிற்குப் பிறகு! திரு. விக்கிரமன் அவர்கள் தங்களைப் பேட்டி கண்டு ஒரு கட்டுரை எழுதி அனுப்பச் சொன்னார்கள். ஆகவே, தங்களைப் பேட்டி காண வந்துள்ளேன் என்றேன், சற்று உரத்த குரலில்".

"அப்படியா... சந்தோஷம். கேளுங்கோ" என்றார், மகிழ்ச்சியாக!

அவரது எதிரில் பழனி விபூதி உள்ளது. 'கமகம'வென மணம் வீசுகிறது. அதனை எடுத்து என் நெற்றியில் இட்டுக் கொள்கிறேன். அதை ஆமோதிப்பதுபோல் தலையசைக்கி றார்!

என்னுடன் ஐயாவின் மகனார் திரு. சங்கரன் உடனிருக்கி றார்.

தாங்கள் தொண்ணூற்று நான்கு வயதினைக் கடந்து, நூறாவது வயதினை நோக்கி நடை பயில்கிறீர்களே; அப்படி இருந்தும், தெளிவாகவும், ஆரோக்கியமாகவும் இருக்கிறீர்களே - அதன் ரகசியம் என்ன?

"அதுவா... 3 டாக்டர்கள் (சிரிக்கிறார்). Dr. Diet, Dr.Quiet and Dr. Merry Man என்ற மூன்று டாக்டர்கள் எனக்குண்டு. பசியெடுத்தால்தான் சாப்பிடுவது. அநேகமாக வெஜிடேரியன்தான், முட்டை தவிர. இரவில் கஞ்சிதான். காலை ஒரே ஓர் இட்லி. இரவில் முட்டை, காபியோ, டீயோ கிடையாது. தண்ணீர்தான். மதியம் ஒரு கீரை, வெஜிடபிள் 'லிட்டில்' ரைஸ். சாயந்திரம் காம்பௌண்டுக்குள்ளே 'வாக்கிங்'. அமைதியான சூழ்நிலையில் இருப்பது. மனதைப் போட்டு அலட்டிக் கொள்வது கிடையாது.

தாங்கள் அமைச்சராகப் பல்லாண்டு பணியாற்றி யிருக்கிறீர்கள். அதுபற்றி...

"ஆம் ரெவின்யூ அமைச்சராகவும், பின்னர் ரெவின்யூ பிளஸ் ஹெல்த் மினிஸ்டராகவும் இருந்தேன். நிலச்சீர் திருத்தச் சட்டம் கொண்டு வந்தேன். மிகவும் பய னுள்ளதாக இருந்தது".

"1956 முதல் 1962 வரை சுகாதார மந்திரியாகவும் இருந்தேன். அப்போது சென்னை ஜி.எச், வேலூர் மற்றும் திருச்சி கவர்மெண்ட் ஆஸ்பத்திரிகள் விரிவடையவும், புதிய கட்டடங்கள் கட்டவும் ஆவன செய்தேன். இவைதான் என் நினைவில் உள்ளன. இந்திய மருத்துவ முறை சிறப்படைய என்னால் ஆன உதவி செய்தேன். ஓய்வு பெற்ற ஜட்ஜ் திரு. பல்ராமய்யா போன்றவர்களும் அதற்குப் பூரண ஒத்துழைப்புத் தந்தார்கள்.

"சரி ஐயா... தாங்கள் மூதறிஞர் திரு. ராஜாஜி, பெருந் தலைவர் திரு. காமராஜர் அமைச்சரவையில் அமைச்ச ராகவும், பேரறிஞர் திரு. அண்ணாதுரை, கலைஞர் திரு. கருணாநிதி அமைச்சரவையில் மேலவைத் தலைவராகவும் சிறப்பாகப் பணியாற்றி இருந்திருக்கிறீர்கள். அதனைப் பற்றி சிறிது சொல்லுங்களேன்" என்றேன்.

"மூதறிஞர் ராஜாஜி என்னை மந்திரியாக்கியது ஒரு கதை. அப்போது திரு. பிரகாசாதான் கவர்னர். நான் நடத்தி வந்த "காமன் வீல்" (Common Wheel) கட்சியைப் பற்றி நல்லதோர் அபிப்பிராயம் கொண்டிருந்தார் ஆளுநர் அவர்கள். "ஹீ வாஸ் இம்ப்ரெஸ்ட் வித் பார்ட்டி மேனி பெஸ்டோ" என்னைத் திரு. ராஜாஜியைப் போய் பார்க்கச் சொன்னார். அவரே என்னைக் கூப்பிட்டு அனுப்பினால் தான், நான் போய்ப் பார்ப்பேன் என்றேன். திரு. ராஜாஜி தன் மகன் திருவாளர் நரசிம்மன் அவர்களை என்னிடம் அனுப்பி வைத்தார். நானும் சென்று மூதறிஞரைக் கண்டேன். உடனே என்னை அமைச்சராகும்படி சொன் னார். எனது கட்சித் தொண்டர்களையும், பிரமுகர்களையும் கலந்தாலோசித்த பின்னரே என் முடிவினைச் சொல்லு வேன் என்று சொல்லிவிட்டு வந்தேன். வேலூர் சென்று என் சகாக்களைக் கலந்து அவர்களது ஒப்புதலைப் பெற்ற பின்னரே மந்திரி ஆகச் சம்மதித்தேன். "The doors will be open till you return" என்று நான் வேலூர் செல்லுமுன், திரு. ராஜாஜி அவர்கள் சொன்னது இன்னும் என் காதுகளில் ரீங்காரம் செய்து கொண்டிருக்கிறது. அவர் என்னை 'ரெவின்யூ மந்திரி' ஆக்கினார்".

திரு. காமராஜர் எப்படி?

"பெருந்தலைவர் காமராசர் காலத்திலும், நான் ரெவின்யூ மந்திரிதான். ஒரு சம்பவம் என் நினைவில் பசுமையாக உள்ளது. அப்போது சேர்மன் எலக்ஷன் வந்தது. எனது வாக்கினை அவர் சொன்ன நபருக்குப் போடச் சொன்னார். நான் சொன்னேன். சேர்மனாக இருந்த நான் ஓட்டுப்போட முடியாது. Dr. செரியன்கூட சேர்மனாக இருந்தபோது ஓட்டுப் போடவில்லை. வேண்டு மானால், நான் என் பதவியை ராஜினாமா செய்துவிட்டு ஓட்டுப் போடுகிறேன்.

என்றேன். ஆனால், அவரோ 'வேண்டாம்... வேண்டாம்; அப்படியென்றால் வேண்டாம்' என்று சொல்லிவிட்டார்.

பேரறிஞர் திரு. அண்ணாவைப் பற்றிய "என் ஸ்வீட் ரிமெம்பெரென்ஸ்;"

"அண்ணாவுக்கு என் மீது பெரிய மரியாதை. சட்ட சபையில் என் பேச்சு நகைச்சுவையாகவும், சுருக்கமாகவும் ("Witty") விட்டியாகவும் இருக்கும். இதை அண்ணா வெகுவாகப் பாராட்டுவார். அவர் சொல்வார் :

"He can Stop the flow of Ministers like C.S..., but not me because, I made a Joke".

"கலைஞர் டாக்டர் திரு. கருணாநிதி காலத்தில் நீங்கள்...?

"ஆம்... ஆம். அவர் காலத்திலும் நான் மேலவைத் தலைவராக இருந்தேன். 1970 என்று நினைக்கிறேன். அவர் என்னுடன் மிகுந்த பாசமும் மரியாதையும் கொண்டிருந்தார். என்பதவி முடிந்தபோது பெரியதொரு "பாராட்டு விழா" நடத்தினார். கலைஞர் டாக்டர் கருணாநிதி அவர்கள் ஒரு 'சில்வர் கேஸ்கட்'டும் பரிசளித்தார். இதை நான் என்றைக்கும் மறக்க முடியாது".

மறைந்த முதல் டாக்டர் திரு. எம்.ஜி.ஆர். அவர்களோடு உங்களுக்குப் பழக்கம் உண்டா?

"இல்லாமல்? 1967 என்று நினைக்கிறேன். அப்போது அவர் ஒரு நடிகர்தான். என்னை ராமாவரம் தோட்டத்திற்கு அழைத்து மாலையிட்டார். தேனீர் விருந்து அளித்தார்".

"1926 முதல் 1937 வரை நான் மெம்பராக இருந்தேன். 1928 முதல் 1930 வரை பார்லிமெண்டரி செக்ரடரியாக, ஜஸ்டிஸ் பார்ட்டி அதிபர் திரு. முத்தையா முதலியாரிடம் இருந்தேன்.

"அப்பா... மாம்பழம் பற்றிச் சொல்வீர்களே" - இது சங்கரின் குறுக்கீடு.

"'மேங்கோ'... எஸ்.எஸ்... அது இன்ட்ரெஸ்டிங் ஸ்டோரி... என் தோட்டத்தில் விளைந்த மாம்பழம். 'காதர் பசந்த்' என்று பெயர். ஒரு கூடை பழம் பம்பாய் கவர்னராக மாற்றலாகிச் சென்ற திருவாளர் பிரகாசாவுக்கு அனுப்பி வைத்தேன். அப்போது 'பிரைம் மினிஸ்டர்' நேரு பம்பாய் வந்திருந்தாராம். விருந்துக்கு மாம்பழம் பரிமாறப் பட்டதாம். 'ஏது இந்தப் பழம்? மிகவும் ருசியாக உள்ளதே. யு.பி.யிலிருந்து தருவித்தீர்களா?' என்றாராம் நேரு. கவர்னர் சொன்னாராம், 'இல்லை... இல்லை... இது என் பழைய அமைச்சர் சென்னையிலிருந்து அனுப்பியது' என்றாராம். நேரு சொன்னாராம் : 'Your Seem to have a Very good Minister; The fruit is very Sweet' - என்று".

"ஐயா, எத்தனையோ ஆண்டுகளுக்கு முன் நடந்ததெல்லாம் நேற்று நடந்ததுபோல் நினைவு வைத்திருக்கிறீர்களே, இது எப்படி சாத்தியம்?"

"அதுவா...? (சிரிக்கிறார்)"

"சரி ஐயா, தாங்கள் ஒரு கட்சியை நிர்மாணித்து, அதன் தலைவராகவும் இருந்துள்ளீர்கள் - அதைப்பற்றிக் கொஞ்சம் சொல்லுங்களேன்."

"'Common Wheel Party' என்று ஆரம்பித்தேன். அது Communal Party அல்ல. மக்களின் நலம்தான் முக்கியமாக கொள்ளப்பட்டது. மிக முக்கியமாக, பின் தங்கிய மக்களின் நலன் பற்றியே கருத்தில் கொண்டோம். வட ஆற்காடு மாவட்டத்தில் 3 வேட்பாளர்களை எம்.பி.க்கு நிறுத்தினேன். மூவருமே வென்று விட்டனர். அதே போன்று 6 எம்.எல்.ஏ. வேட்பாளரும் ஜெயித்து விட்டனர். இது எனக்கு மிகவும் பெருமை அளித்ததாகும். நான் அமைச்சரான பின்னும் என் கட்சியைக் கலைக்கவில்லை. அது காங்கிரஸ் கட்சியோடு இணைந்து செயல்பட்டது. 1957 இல்தான் நான் என்

கட்சியை கலைத்து காங்கிரசோடு இணைத்தேன். நானும் காங்கிரஸ் வேட்பாளராக 1957 இல் போட்டியிட்டேன். முதலில் வென்றது வடஆற்காடு மாவட்டம் போளூரில். பின்னர் திருவண்ணாமலை பக்கமுள்ள துரிஞ்சாபுரத்தில்".

*உங்கள் வாழ்வில் மகிழ்ச்சிகரமான நிகழ்ச்சி ஏதேனும் உண்டா?*

"My Wedding... என் மாமனார் பெரும் பணக்காரர். மேல் பாக்கம் ஜமீன்தாரர். திரு. பரத்வாஜ முதலியார் என்று பெயர். அப்போதெல்லாம் முதலியார் பட்டம்தான் அங்கு இருந்தது. அரக்கோணம் பக்கம். என் சகோதரர் மற்றும் என் உறவினர் இந்த சம்பந்தத்துக்கு ஒத்துக்கவில்லை. நான் மட்டும் விடாப்பிடியாக இருந்தேன். நான் மணந்த குப்பம்மாள்மீது எனக்கு ஒரு பாசம்... ஒரு பரிவு... ஏனென்றால், அவள் ஒரு தாயில்லாப்பெண்; மாற்றாந்தாய்தான் உண்டு. வீட்டு வேலை அனைத்தும் இந்தப் பெண் குப்பம்மாள்தான் செய்யும். அதனைப் பார்த்து ஒரு... Pity... என் திருமணம் நான் படிக்கும்போதே நடந்துவிட்டது. அப்போது நான் ஹாஸ்டலில் தங்கியிருந்தேன். என்னை அழைத்துப் போகக் கார் வந்தது. என்னை ஊர்வலமாக அழைத்துப் போக விரும்பினர். நான் கார் வேண்டாம் என்று சொல்லி விட்டேன்".

*உங்கள் குடும்பம் பற்றி ஏதாவது சொல்கிறீர்களா?*

"சென்னையிலும், வேலூரிலும் வக்கீல் தொழில் செய்தேன். வாழ்க்கை மிகவும் சந்தோஷமாகத்தான் இருந்தது. ஒரு விஷயம்... நான் குடும்பக்கட்டுப்பாடு செய்ய உத்தேசித்தேன். ஐந்தாண்டுகள் ஒரு issue என்று Plan பண்ணினேன். ஆனால் மூன்றாண்டுக்கு ஒரு குழந்தை பெற்றெடுத்தோம்".

'I failed in that'.

*தங்களுக்குக் கடவுள் நம்பிக்கை உண்டா?*

'God is there'. நான் ஜைன துறவி ஆச்சாரிய துளசியின் சிஷ்யன். சிலை வழிபாடு நான் பண்ணினாலும், "Meditation is most important" "ஓம் நமோ நாராயணா ஓம் மஹா சங்கர மகாதேவ்..."

*உங்கள் வாழ்வில் ஏதாவது சோக சம்பவம்?*

"My last son's death... அப்போது அடையாறு பங்களாவில் அமைச்சராக வாசம். எங்களுக்கென்று ஒரு போட் உண்டு. நான் அன்று வெளியூர் கேம்ப். என் கடைசி மகனும், அவனது இரு நண்பர்களும் போட்டில் ஏறி அடையாற்றில் சென்றனர். படகு கவிழ்ந்தது. என் மகனும், மற்றொருவனும் மாண்டனர். இது எனக்கு மிகவும் வேதனையைத் தந்த துயரச் சம்பவம். 1956 இல் இது நடந்தது".

**"ஐயா, பின்தங்கிய மக்களுக்கு மிகவும் உழைத்துள்ளீர்கள். ஆர்ப்பாட்டமாக அல்ல; அமைதியுடன். அவர்களுக்கு ஏதாவது அறிவுரை சொல்லுங்களேன்."**

"They must get united"... அவர்கள் ஒற்றுமையாக இருக்கவேண்டும். தங்கள் மேம்பாட்டுக்குப் பாடுபட வேண்டும். ஆனால் "Not by force, but Quietly. Road மறியல்,,, No! I do not want force... சாத்வீக முறைதான் நல்லது".

நான் நண்பர் சங்கரனைப் பார்க்கிறேன். அவரும் பேட்டி போதும் என்பதுபோல் சைகை காண்பிக்கிறார். நானும் இதோ எழுந்துவிட்டேன்...

அந்தப் படிக்கட்டுகளைவிட்டு இறங்கும்போது எனக்குள் ஒரு குதூகலம்! மிக உயர்ந்த மனிதர் ஒருவரை – மாமனிதரை சந்தித்ததில் ஒரு பெருமிதம் – உற்சாகம்!

20-8-88

—டி. எஸ். இராஜதேவன்